(௧) (அ-கை.) மாயையானதுஸ்வானுபவமில்லாதவர்களை வருத்துமென்றறிவித்தல் (கவி.) இவ்வகையேயிம்மாயையற நெடிதாய் வெலற்கரிதாயேறித்தாழ்ந்து,வெவ்வியமாமோகங்கள் விளைவித்துப் பரமத்தின்மேவி நிற்குமவ்வகையாலுரைக்கின்றேனநவரதஞ்சொரூபத்தையுடையாதாரைப், பவ்வமெனவருந்துயரின்மூழ்கிவிக்குமிம்மாயைப்பண்புதானே (இ-ள்) இவ்வகையே- இந்தப்ப்ரகாரமே— இம்மாயை- இந்தமாயையானது— அறநெடிதாய்- மிகவும்விஸ்தாரமாய்— வெலற்கரிதாய்- சயித்தற்கரியதாய்— ஏறித்தாழ்ந்து- உயர்ந்துதாழ்ந்து— வெவ்வியமாமோகங்கள்- கொடியமகாமயக்கங்களை— விளைவித்து- உண்டாக்கி— பரமத்தின்மேவி நிற்கும்- பிரமத்திற்பொருந்தியிருக்கும்— அவ்வகையால்- அந்தப்ப்ரகாரத்தினால்— உரைக்கின்றேன்- சொல்லுகின்றேன்—அநவரதம்- சதாகாலமும்— சொரூபத்தையடையாதாரை- (பிரம) ஸ்வரூபத்தையடையாதவர்களை— பவ்வமென- சமுத்திரத்தைப்போல— வருந்துயரில்- வருகின்றதுன்பத்தில்— இம்மாயைப்பண்புதான்- இந்தமாயையின்குணமானது— மூழ்கிவிக்கும்- அழுத்திவிடும்—(எ-று) - - - - - - - - - - - - - *

(௨) (அ-கை) மாயாநாசவுபாயமானது மனோநாசத்தைத்தவிரவேறின்றெனல். (கவி) சித்தசயமாத்திரமாந்தெய்வமருந்தாலன்றிச்சென்மவெந்நோய், சத்தியமேபிறமுயற்சியாலவையினுந்தீராதுதகைமைமிக்கோய், வைத்தநிகழ்காலத்துக்கணத்தில்வருமியல்புறவாகியத்தாற்பற்றி, யொத்துவருமெதிர்காலமிறந்தகாலங்கருதாருளமிலாதார். (இ-ள்) சித்தசயமாத்திரமாம்- மனோசயமாத்திரமான— தெய்வமருந்தாலன்றி- தேவாவிடதத்தினாலல்லாமல்— சென்மவெந்நோய்- சநநமென்னுங்கொடியவியாதியானது—சத்தியமே- ப்ரமாணமே— பிறமுயற்சியாலவையினும்- மற்றெந்தமுயற்சியினாலும்— தீராது- நீங்காது— தகைமைமிக்கோய்- சற்குணத்தின்மிகுந்தஸ்ரீராமா— வைத்த- (கிரமமாக) வைத்த— நிகழ்காலத்து- வர்த்தமானகாலத்தில்— கணத்தில்- க்ஷணத்தில்— இயல்புற- (வன்னாச்சிரம) கிரமமாக—வரும்- வருகின்ற (தொழிலை)— வாகியத்தாற்பற்றி- புறம்பிற்பிடித்து — ஒத்துவரும்- பொருந்திவராநின்ற— எதிர்காலம்- வருங்காலத்தையும்— இறந்தகாலம்- சென்றகாலத்தையும்— உளமிலாதார்- மனதில்லாதவர்கள்— கருதார்- (உள்ளே) நினைக்கமாட்டார்கள்—(எ-று) - - - - *

(௩) (அ-கை) மனோநாசவுபாயம்ப்ரத்யாகாத்மஸ்வரூபதெரிசனத்தைத்தவிர வேறின்றெனல். (கவி.) சங்கற்பவேட்கையனுசந்தானங்கணந்தோறுந்தவிர்த்தியென்னின், மங்குற்றமனோலயந்தானதுவாகுமனோலயத்தைமருவுபோதம், பங்கற்றபிரத்தியச்சேதனமாகுமதற்குமனோபாவமென்ப, தங்குத்தானிலாவியல்பாமாதலினான்மனோவிகற்பமின்றிப்போமே. (இ-ள்) சங்கற்பம்- சங்கற்பத்தையும்— வேட்கை- ஆசையையும்— அனுசந்தானம்- போனதைநினைப்பதையும்— கணந்தோறும்- க்ஷணந்தோறும்—தவிர்த்தியென்னில்-ஒழிப்பாயானால்— மங்குற்ற- கேடுற்ற— மனோலயந்தான்- மனோலயமானது— அதுவாகும்- அதுவேயாகும்— மனோலயத்தை- மனோநாசத்தை— மருவுபோதம்- பொருந்துகின்றஞானமானது— பங்கற்ற- பிரிவில்லாத— பிரத்தியச்சேதனமாகும்- ப்ரத்யகாத்மஞானமாம்— அதற்கு- அந்தஞானத்துக்கு— மனோபாவமென்பது- மனோபாவமென்று சொல்லுவது— அங்குத்தானிலா- அவ்விடத்திலில்லாமல்— இயல்பாமாதலினால்- இயல்பையுடையதாமாதலினால்— மனோவிகற்பம்- மனோவிகற்பமானது— இன்றிப்போம்- இல்லாமற்கெடும்— (எ-று) (ப-ம்) சங்கற்பமென்பது, இந்தப்ரகாரஞ்செய்யப்போகிறேனென்கின்ற மனதின்கிரியை, வேட்கையென்பது, ஈதெனக்குண்டாகவேண்டுமென்றுப்ப்ரார்த்தித்தல் அனுசந்தானமென்பது, போனதைநினைத்தல். *

(௪) (அ-கை) ஆத்மதரிசனத்துக்குபாயஞ்சுருதிகுருவாக்கியத்தின்மனதைச்செலுத்துதல் (கவி.) அற்றமறுசத்தியமுமுயர்சிவமுந்தற்பரமவவத்தைதானு, முற்றறிவுநிறைசுகமுமலமறலுமனப்பந்தமுழுதுந்தீர்த,லுற்றவவிவேகத்தையொழித்துறுதியூகத்தாலுறுதியாகக்,குற்றமறுசற்புருடர்கோதறுநூல்களின்மனத்தைக்கூட்டியென்றும் (இ-ள்) மனப்பந்தம்- மனோபந்தமானது— முழுதுந்தீர்தல்- முழுதுநீங்குதலே— அற்றமறு- மறைவில்லாத— சத்தியமும்- உண்மையும்— உயர்சிவமும்- மேலானசிவமும்— தற்பரமவவத்தைதானும்- பிரமாவத்தையும்— முற்றறிவும்- சர்வக்கியத்துவமும்— நிறைசுகமும்- பூரணாநந்தமும்—மலமறலும்-களங்கமில்லாததுமாம்— உற்றவவிவேகத்தையொழித்து-பொருந்தியவஞ்ஞானத்தைக்கெடுத்து —உறுதியூகத்தாலுறுதியாக- திடவுச்சாகத்தினால் நிச்சயமாக— குற்றமறுசற்புருடர்கோதறுநூல்களின்- குற்றமற்றசற்புருடர்களிடத்திலும் குற்றமற்றவாத்மஞானசாஸ்திரங்களிலும்—என்றும்-எப்பொழுதும்—மனத்தைக்கூட்டி-மனதைச்சேர்த்து— (எ-று.) - *

(௫) (அ-கை) அதனான்விடயவிச்சையைக்கெடுத்தாநந்தபோநமாவாயெனல் (கவி.) அனவரதமுரைத்தல்விடல்பற்றலிமைப்புறல்விழித்தலனைத்துஞ்செய்து, மன்னமறுசுகவானாய்ச்சற்சின்மாத்திரபரனாய்வாழ்திமைந்தா, கனமலமாங்காண்பவைதீர்ந்துள்ளத்தின்மலமறுத்துக்காதற்பாச, மெனவுயர்கோளையையறுத்துநின்னறிவிற்றற்பரனாயிருத்தியன்றே. (இ-ள்) அனவரதம்-சதாகாலமும்—உரைத்தல்- சொல்லுதலும்— விடல்- விடுதலும்— பற்றல்- பற்றுதலும்— இமைப்புறல்- கண்மூடுதலும்— விழித்தல்- கண்டிறத்தலுமாகிய— அனைத்துஞ்செய்தும்- சகலதொழில்களையுஞ்செய்தும்— மன்னமறு- சிந்தனையில்லாத— சுகவானாய்- ஆநந்தத்தையுடையவனாய்— சற்சின்மாத்திரபரனாய்- சற்சின்மாத்திரபரனாக— மைந்தா- குழந்தாய்— வாழ்தி- வாழக்கடவாய்— கனமலமாம்-மிகுந்தகளங்கமாகிய— காண்பவைதீர்ந்து- திரிஸ்யத்தைநீங்கி— உள்ளத்தின்மலமறுத்து- மனதின்களங்கத்தைக்கெடுத்து— காதற்பாசமென- ஆசாபாசமென்னும்—உயர்கோளையையறுத்து- வளராநின்றகோளையையறுத்து— நின்னறிவில்- உனதாத்மஞானத்தில்— தற்பரனாயிருத்தி- பிரமஸ்வரூபனாயிருப்பாய்—(எ-று.) - *

(௬) (அ-கை) அபேததிருஷ்டியினாற்சமாதிகூடிச்சின்மாத்திரமாவாயெனல். (கவி) நலனழிவாஞ்சங்கேதத்தாசையெனும்விடூசிகையைநண்ணாயாகிச், சலனமுறுவிருப்புவெறுப்பறவுணர்வின்சார்பர

மந்தானுய்வாழ்வா, யலகறநானிவனவனீததுவெனதாம்வாதனைகளறுத்தொன்றென்றே, நிலவியநிட்டை
யிலாநிச்சற்சின்மாத்திரபரனாய் நின்றுவாழ்வாய். (இ-ள்.) நலனிழிவாம்- சுபாசுபமாகிய—சங்கேதத்து-
சங்கேதமான (பொருள்களில்)— ஆசையெனும்- இச்சையென்கின்ற— விடுசிகையை- விடுசிகாவி
யாதியை— நன்னாயாகி- பொருந்தாதவனாய்— சலனமுறு- சலனம்பொருந்திய— விருப்புவெறுப்
பற- இராகத்துவேடமில்லாமல்— உணர்வின்சார்- ஞானரசமான—பரமந்தானாய்வாழ்வாய்- பிரமமே
தானாக வாழ்வாய்— அலகற- கணக்கின்றி— தானிவனவன்- நான்இவன்அவன்— ஈததுவெனதாம்-
இதுவதுவெனதென்றுசொல்லுவதாகிய— வாதனைகளறுத்து- வாதனைகளைக்கெடுத்து—ஒன்றென்று- (பி
ரம)மொன்றேயென்று— நிலவியநிட்டையிலாநி- ப்ரகாசிக்கின்றநிட்டையில் விஸ்ராந்தியடைந்து—
சற்சினமாத்திரபரனாய்- சற்சினமாத்திரபரனாக— நின்றுவாழ்வாய்- ஸ்ரீராமா நீநிலையாகவாழ்வாய் (எ-று)

(எ) (அ-கை.) சின்மாத்திரதரிசனமானபோதேபயத்தைக்கொடுக்கும்பேதநீங்குமெனல் (கவி) என
துபிறரதுவென்னுமெண்ணமறச்சகநிலையிலிரண்டற்றொன்றாய்க்,கனவயிரத்தம்பமெனுமுணர்வுருவை
ப்பற்றிநிலைகண்டுநிற்பா, யனசமுடனமலமாயகண்டமாந்தன்னறிவிலமைவென்றுண்டாஞ், சனனம
யக்கத்துக்குக்காரணமாம்பிரிவன்றுதவிர்ந்துபோமே (இ-ள்) எனது- என்னதும்—பிறரதுவென்னு
ம்- அன்னியருதென்றுசொல்லப்பட்ட—எண்ணமற- நினைப்பறும்படி— சகநிலையில்- உலகத்தின்
கண்— இரண்டற்றொன்றாய்- துவிதமிறந்தத்துவிதமாய்— கனவயிரத்தம்பமென- கனமுள்ளவயிரஸ்
தம்பத்தைப்போல— உணர்வுருவைப்பற்றி- ஆத்மஞானஸ்வரூபத்தைப்பிடித்து— நிலைகண்டுநிற்பா
ய்- அந்நிலையைத்தரிசித்திருப்பாய்— அனசமுடன்- பாவமின்மையுடன்— அமலமதாய்- மாசின்மை
யாய்— அகண்டமாம்- பூரணமாகிய— தன்னறிவில்- தனதுஞானத்தில்— அமைவென்றுண்டாம்-
பொருந்துதலெப்போதுண்டாகுமோ— அன்று- அப்பொழுதே—சனனமயக்கத்துக்குக்காரண மாம்
பிரிவு- பிறவிமயக்கத்துக்குமூலமாகின்றபேதமானது—தவிர்ந்துபோம்- நீங்கிப்போம்— (எ-று) ※

(அ) (அ-கை.) பேதரூபமானமனந்தடிக்காவிடிற்பேராநந்தமுதிக்குமெனல் (கவி) பேராநந்
தத்தின்பநிலையினியல்பினைநோக்காய்பின்னைநிற்கும், வாராதநல்லமுதம்வந்தாலு முயிர்தொலைக்கவரு
நஞ்சொக்குஞ், சோராமெய்யுணர்வுடைமைதூரிதாமனந்தடித்துத்துன்றுமாகிற், காரானமுகில்சூழம
றைத்தாலுண்டோமதியங்கண்ணின்காக்ஷி (இ-ள்.) பேராநந்தத்தின்பம்- பேராநந்தவிரசத்தின்— நி
லையினியல்பினை- நிலைபினுடையசுபாவத்தை— நோக்காய்- பார்ப்பாய்— பின்னைநிற்கும்- பின்புநிற்
கின்ற— வாராத- வருதற்கரிய— நல்லமுதம்- நல்ல(தே)வாமிர்தமானது— வந்தாலும்- வந்துபொரு
ந்தினாலும்— உயிர்தொலைக்கவருநஞ் சொக்கும்- உயிரைப்பிரிக்கவராநின்றவிடத்துக்குச் சமானமா
ம்— சோரா- சோர்வில்லாத—மெய்யுணர்வுடைமை- உண்மைஞானமுடைமையானது—மனந்தடித்
து- மனமானதுபருத்து— துன்றுமாகில்- நெருங்குமானால்— தூரிதாம்- தூரமாகும்—காரானமுகி
ல்- கறுத்தமேகமானது— சூழமறைத்தால்- சூழும்படிமறைக்கில்— மதியம்- பூரணச்சந்திரனது—
கண்ணின்காட்சி- கண்ணுக்குக்காட்சியானது— உண்டோ- உண்டாகுமோ— (எ-று) [இ-அ-க-ம்]
மாயைக்குமூலமானமனதைக்கெடுக்கிலப்பொழுதேசச்சிதாநந்தமாய்விளங்குவாயென்பதாம். - ※

(கூ) (அ-கை) மனந்தடிப்புற்றதறிவித்தல் (கவி) சரீரமாத்திரத்தாசைபுந்தியாற்றானல்லாதனதா
னென்றே,பரிவுறலான்மக்கண்மனைகுடும்பமெனும்பாவனையாற்பருக்குமுள்ளம், விரியுமகங்காரவிகார
த்தினன்மமதைமலவிநோதந்தன்னூ, லுரியவெனதிதுவென்னும்பாவனையான்மிகப்பருக்குமுள்ளந்தா
னே (இ-ள்) சரீரமாத்திரத்தாசை- தேகமட்டுமிச்சையையுடைய— புந்தியால்- புத்தியினால்— தான
ல்லாதன- தானல்லாத(வனாத்மாவை)— தானென்று- ஆத்மாவென்று— பரிவுறலால்- அன்புபொருந்
துவதால்— மக்கள்- புத்திரர்களும்— மனை- இல்லாளுமாகிய— குடும்பமெனும்- சம்சாரமென்கின்
ற— பாவனையால்- நினைப்பினால்— உள்ளம்- மனமானது— பருக்கும்- வளரும்—விரியும்- விஸ்தா
ரமாகின்ற— அகங்காரவிகாரத்தினால்- அகங்காரவேற்றுமையினால்—மமதை- மமதையான—மலவிநோ
தந்தன்னால்- களங்கவிளையாட்டினாலும்— உரிய- உரித்தான்— எனதிதுவென்னும்பாவனையால்- இதெ
னதென்கின்றபாவனையினாலும்— உள்ளந்தான்மிகப்பருக்கும்- மனமானதுமிகவும்வளரும்—(எ-று) ※

(ய) (அ-கை) இ-து (கவி) ஆதிவியாதியின்விரிவாலவைமாறித்தேறுதலாலகற்றல்பற்ற, லூதிய
மாமுயற்சியினாற்பிறவிதொறுமிகப்பருக்குமுள்ளமைந்தா, மாதர்மணிதனமுதலாநேயத்தாலாபத்தா
ல்வருலோபத்தாற், போதுபொழுதிவைநன்றுநலத்தினாற்பருத்துள்ளம்பூரிப்பாமே (இ-ள்) ஆதிவி
யாதியின்விரிவால்- ஆதிவியாதியினதுவிஸ்தாரத்தினாலும்— அவைமாறித்தேறுதலால்- அவைகண்மாறி
(சம்சார)த்தில்விசுவாசித்துத்தங்குதலினாலும்—அகற்றல்- நீக்குதலுக்கும்— பற்றல்- பிடித்தலுக்கும்—
ஊதியமாமுயற்சியினால்- இலாபமானவெத்தனத்தினாலும்— பிறவிதொறும்- சநநங்கடோறும் —மை
ந்தா- குழந்தையானஸ்ரீராகவா—உள்ளம்- மனமானது—மிகப்பருக்கும்- மிகவும்வளரும—மாதர்- ஸ்தி
ரீகள்—மணி- இரத்தினங்கள்—தனம்- திரவியங்கள்—முதலாம்- முதலானவைகளி(லுண்டான)— நேய
த்தால்- ஆசையினாலும்— இலாபத்தால்- இலாபத்தினாலும்— வருலோபத்தால்- வராநின்றவுலோபத்தி
னாலும்— போதுபொழுது- வருகின்றகாலத்தில்— இவைநன்றும்- இவைகணல்லனவாம்— நலத்தி
னால்- இந்தன்மையினால்— உள்ளம்- மனமானது— பருத்து- பெருத்து—பூரிப்பாம்- பூரிக்கும்—
(எ-று.) [இ-உ-க-ம்.] தேகோகமுதலியவகம்பாவத்தினாலுண்டானவாதிவியாதிமுதலிய சங்கற்பத்
தான் மனமவிரித்தியடையுமென்பதாம் - - - - - - - - - - - - - ※

(யக) (அ-கை) பஞ்சவிடயங்களாற்பருக்கின்றமனமஃதுமெலிவுஷினீதுங்கெடுமென்பதற்குத்திரு
ஷ்டாந்தமறிவிக்கத்தொடங்கல். (கவி) துராசையெனும்பால்பருகித்தோன்போகமெனுங்காற்றுற்றொரு
டற்மொய்ம்புண்டா, யிராசமுறுவழியுலவிமனப்பாமபுமிகப்பருக்குமிராமகேளாய், புராதனவுத்தால

கன்போலைம்பூதத்தையும்பொடியாய்ப்போகப்பண்ணி, நிராகுலமாம்புந்தியினுவிதயத்தே நினைத்தி யென நிகழ்த்தலோடும். (இ-ள்) துராசையெனும்பால்பருகி- துராசையென்கின்ற பாலைப்புசித்து— தொல்போசமெனும்- பழமையானபோகமென்கின்ற— காற்றால்- வாயுவினால்— தொடர்மொய்ம்புண்டாய்- தொடர்பானபலமுண்டாய்— இராகமுறுவழியுலவி- இச்சிக்கப்பட்டமார்க்கத்திற்சஞ்சரித்து— மனப்பாம்பு- மனமென்னுஞ்சர்ப்பமானது— மிகப்பருக்கும்- மிகவும்பெருக்கும்— இராமகேளாய்- ஸ்ரீராமா நீகேட்பாய்— புராதனவுத்தாலகன்போல்- பழையவுத்தாலகமுனியைப்போல— ஐம்பூதத்தையும்- பஞ்சபூதங்களையும்— பொடியாய்ப்போகப்பண்ணி- தூளியாய்ப்போகச்செய்து— நிராகுலமாம்புந்தியினால்- வருத்தமற்றபுத்தியினால்— இதயத்து- மனதில்— நினைத்தியென- விசாரிப்பாயென்று— நிகழ்த்தலோடும்- வசிட்டமுனிசொன்னமாத்திரத்தில்— (எ-று) (ப-ம்.) பஞ்சவிடயங்களைக் கெடுக்கவேண்டுமென்பார், ஐம்பூதத்தையும் பொடியாய்ப்போகப்பண்ணி யென்றார். [இ-ம்] உத்தாலகமுனியைப்போலிம்மனதைக் கெடுக்கவேண்டுமென்பதாம். - - - - - ※

(௰௨) (அ-கை) இராமன்வினவுதல் (கவி) அருளியவுத்தாலகனொந்நெறியாலைம்பூத மறுத்துத் தன்னுட் கருதியதென்னென்றிராகவன்கேட்ப வசிட்டமுனிகருணைவள்ளால், பெருகியவைம்பூதத்தை விசாரத்தாற்பேதித்துப்பிரமமெய்தி, யொருமைபெறு நிலையுடையவுத்தாலகன்கதையாமுனாப்பக்கேட்பாய். (இ-ள்) அருளியவுத்தாலகனார்- நீரருளிச்செய்த வுத்தாலகமுனியானவர்— எந்நெறியால்- எந்தமார்க்கத்தினால்— ஐம்பூதமறுத்து- பஞ்சபூதத்தையுங்கெடுத்து— தன்னுட்கருதியதென்னென்று- தனக்குட்சிந்தித்ததென்னவென்று— இராகவன்கேட்ப- ஸ்ரீராமன்கேட்க— வசிட்டமுனி- வசிட்டமுனியானவர்— கருணைவள்ளால்- கிருபையுள்ளஸ்ரீராமா— பெருகியவைம்பூதத்தை- விரிந்தபஞ்சபூதத்தை— விசாரத்தால்- (ஆத்ம) விசாரணையினால்— பேதித்து- கெடுத்து— பிரமமெய்தி- பிரமத்தையடைந்து— ஒருமைபெறுநிலையுடைய- அத்துவிதநிலையையுடைய— உத்தாலகன்கதை- உத்தாலகமுனியினதுகதையை— யாமுரைப்பக்கேட்பாய்- நாஞ்சொல்லக்கேட்பாய்— (எ-று) [இ-ம்] உத்தாலகமுனி ஞானமடைந்தமார்க்கமிதுவென்றறிவிக்சத்தொடங்கினதாம். - - - - - - - - ※

(௰௩) (அ-கை) முனியின்மூழுதூப்பருவமுணர்தல் (கவி) கந்தமாதனமென்னுங்கனவரையிற்கர்ப்பூரங்கமழாநின்ற, கொந்தலர்சோலைச்சாரலுறைபவனுத்தாலகப்பேர்கோதிலாதோ, னந்தமுனிவரன்முன்னேசிற்றறிவன்விசாரத்தோனகண்டவாழ்விற்,சிந்தையிடர்தீரவிளைப்பாருதோன்புந்திநலந்திருந்தப்பெற்றோன். (இ-ள்) கந்தமாதனமென்னும்- கந்தமாதனமென்கின்ற— கனவரையில்- மேன்மைபொருந்தியமலையில்— கர்ப்பூரங்கமழாநின்ற- கருப்பூரம்பரிமளிக்கின்ற— கொந்தலர்சோலைச்சாரல்- பூங்கொத்துகளையுடையவனங்கள்சூழ்ந்த (மலைச்) சாரலில்— உறைபவன்- வசிப்பவன்— உத்தாலகப்பேர்- உத்தாலகனென்னுநாமத்தையுடையவன்— கோதிலாதோன்- குற்றமற்றவன்— அந்தமுனிவரன்- அழகியமுனிசிரேஷ்டன்— முன்சிற்றறிவன்- முன்புகொஞ்சவறிவையுடையவன்— விசாரத்தோன்- விசாரணையையுடையவன்— அகண்டவாழ்வில்- பரிபூரணவாழ்வில்— சிந்தையிடர்தீர- மனதின்றுன்பங்கெட— இளைப்பாருதோன்- விஸ்ராந்தியடையாதவன்— புந்திநலந்திருந்தப்பெற்றோன்- புத்தியினதுநன்மையைத்திருத்தமாகப்பெற்றவன்— (எ-று) [இ-ம்] சித்தசுத்திவந்துவிஸ்ராந்திவரயில்லையென்பதாம் ※

(௰௪) (அ-கை) விஸ்ராந்தியுள்ளபரமபதமியாதெனவிசாரித்தல். (கவி) பூதநெறியாற்றவத்தானூற்பொருளால்யமநியமம்பொருந்துநீராற், றீதறுநல்விவேகந்தான்சேர்தலுமேயவனினையசிந்தைசெய்தான், சேதமறவிளைப்பாறும்பதமேதுமறுபிறவிக்கேடிலாத, மேதகையபதமேதிங்கிதுவன்றோமுதல்வினைவின்மேவற்பாற்றே. (இ-ள்) பூதநெறியால்- பரிசுத்தமார்க்கத்தினாலும்— தவத்தால்- (நிட்காம)த்தவத்தினாலும்— நூற்பொருளால்- (ஞான) சாஸ்திரார்த்தங்களினாலும்— யமம்- இயமமும்— நியமம்- நியமமும்— பொருந்துநீரால்- பொருந்துந்தன்மையினாலும்— தீதறுநல்விவேகந்தான்- குற்றமற்றநல்லவிவேகமானது— சேர்தலும்- வரவும்— அவன்- அந்தவுத்தாலகன்— இனையசிந்தைசெய்தான்- இத்தன்மையாகச்சிந்தித்தான்— சேதமற- துன்பமற— இளைப்பாறும்பதமேது- விஸ்ராந்தியடைகின்றவிடமியாது— மறுபிறவி- மறுசநநமென்னும்— கேடிலாத- கெடுதலில்லாத— மேதகையபதமேது- மேன்மையானபதமியாது— இங்கிதுவன்றோ- இவ்விடத்திலிதுவல்லவா— முதல்வினைவில்- முன்புசீக்கிரத்தில்— மேவற்பாற்று- பொருந்தத்தக்கது— (எ-று) - - - - - - - - ※

(௰௫) (அ-கை.) போகவிச்சையெப்போதென துள்ளத்தினின்றுநீங்குமெனல். (கவி) உளநினைவிலாவிமலபரபதத்தே நெடுங்காலமொன்றியொன்றாய்க், கிளர்கனகவரைச்சிகரத் துறைமுகில்போ லிளைப்பாறக்கிடைப்பதென்னாட், டளர்வறவிதியற்றினமேலவையியற்றத்தக்கதெனச்சலித்துச்செல்லு, மளவறுபோகச்செல்வமெனதுளநின்றெக்காலமவிழ்ந்துபோமே (இ-ள்) உளநினைவிலா- மனோசங்கற்பமில்லாத— விமலபரபதத்து- நிருமலமானபிரமபதத்தில்— நெடுங்காலம்- அளவில்காலம்— ஒன்றியொன்றாய்- கலந்தேகமாய்— கிளர்கனகவரைச்சிகரத்து- விளங்காநின்றமகாமேருவின்முடியில்— உறைமுகில்போல்- பொருந்தியமேகத்தைப்போல— இளைப்பாற- (யான்) விஸ்ராந்தியடைய— எந்நாள்— எப்போது— கிடைப்பது- கிடைக்கும்— தளர்வற- தளர்வில்லாமல்— விதியற்றி- இதைச்செய்து— மேலவையியற்றத்தக்கதென- இனியெதைமுயற்சிக்கத் தக்கதென்று— சலித்துச்செல்லும்- சலனமாகிச்செல்கின்ற— அளவறுபோகச்செல்வம் அளவற்றபோகசம்பத்துகள்— எனதுளநின்று- எனதுமனதின்கண்ணின்றும்— எக்காலமவிழ்ந்துபோம்- எந்தக்காலத்தில்விடுபட்டுப்போகும் (எ-று)

(௰௬) (அ-கை) ஆத்மசுகமெப்போதுவருமெனல். (கவி) மனனமெனுந்திமிரமோதிமதத்தெழுந்தபேராசைவாரிதன்னாற், புனிதமுறும்புந்தியினலமூழ்ந்தாமற்கரையேறிப்போவதெந்நா, ளனவரதந்தொழிறொழிலிலாமைகள்போய்ப்பற்றுவிட்டின்றியுள்ளே, தனதொளியாம்பதமேவியெக்காலமகிழ்

வுறுவேன்றளராநின்றேன் (இ-ள்)மனனமெனுந்திரைமோதி- மனனமென்கின்றவலையைபடித்து—
மதத்தெழுந்த- மதந்தோடும்வளர்ந்த— பேராசைவாரிதன்னில்- மிகுந்தவிச்சையென்னுஞ்சமுத்தி
ரத்தில்---புனிதமுறும்புந்தியினுல்- பரிசுத்தம்பொருந்தியவறிவென்கின்ற(வங்கத்)தினுல்— அழுந்தா
மல்- முழுகாமல்— எந்நாள்- எக்காலத்தில்— கரையேறிப்போவது- கரையேறுவது— அனவாதம்-
சதாகாலமும்— தொழிறொழிலிலாமை- கிரியாக்கிரியைகளில்லாமைகளும்— போய்- நீங்கி—பற்
றுவிடின்றி- பற்றுதல்விடுதலில்லாமல்— உள்ளேதனதொளியாம்பதமேவி- அகத்திற்சுப்ரகாசமான
பதத்தைப்பொருந்தி— எக்காலம்- எப்போது— தளராநின்று- (மனந்) தளராமனின்று— மகிழ்வு
றுவேன்- மகிழ்ச்சியையடைவேன்—(எ-று) - - - - - - - - - *

(௰எ) (அ-கை.) சமாதியெப்போதுகூடுமெனல் (கவி) கருதுநினைவொழித்தொடுங்கிக்கார்வரை
யின்முழையிடத்திற்கருங்கற்போல, நிருவிகற்பசமாதியினுலெக்கால மசைவற்றநிலையினிற்ப, ஒருரு
மைபெறுதியானத்தாலிளைப்பாறு மென்னுடையவுச்சிமீதே, குருவியினங்கூடமைத்துக் குடியிருப்ப
தெக்காலங்குஞ்சியாலே (இ-ள்) கருதுநினைவொழித்து- நினைக்கின்றசங்கற்பத்தைக்கெடுத்து— ஒடு
ங்கி- (ஆத்மாவி) லடங்கி—கார்வரையின்முழையிடத்தில்- மேகஞ்சூழ்ந்தமலைக்குகையில்—கருங்கற்
போல- கருங்கல்லைப்போல— நிருவிகற்பசமாதியினுல்- நிருவிகற்பசமாதியினுல்— எக்காலம்- எப்
போது— அசைவற்றநிலையினிற்பன்- சலனமற்றநிலையிலிருப்பன்—ஒருமைபெறுதியானத்தால்- ஏக
நிஷ்டமானதியானத்தினுல்— இளைப்பாறும்- விஶ்ராந்தியடைகின்ற— என்னுடையவுச்சிமீது- என
துசிரசின்மேலுள்ள-- குஞ்சியால்-மயிரினுல்-- குருவியினம்- பறவைக்கூட்டங்களானவை—கூடமை
த்து- கூண்டுகட்டி—எக்காலம்- எக்காலத்தில்—குடியிருப்பது- குடியிருக்கும்— (எ-று) - - *

(௰அ) (அ-கை) சமாதிகூடவில்லையேயெனல். வே (கவி) ஊகத்திவ்வாறுன்னிமிகவுத்தாலகனுட்
பரவசனு, யேகத்தியானஞ்சாதிப்பா னிருந்தவிருந்தவிடந்தோறும், வேகத்துசளுமனக்குரங்குவிடய
க்கொம்புகளிற்பாயச், சோகத்திறந்தீர்மகிழ்ச்சிபெறுஞ்சொரூபசமாதிபெற்றிலனுல் (இ-ள்)ஊகத்திவ்
வாறுன்னி- மனதிலிந்தப்ரகாரஞ்சிந்தித்து— மிகவுத்தாலகன்- மிகவுமுத்தாலகமுனியானவர்— உட்
பரவசனுய்- உள்ளேபரவசத்தையுடையவனுய்— ஏகத்தியானஞ்சாதிப்பான்- ஒன்ருனபிரமத்தியானத்
தைச்சாதிக்கும்பொருட்டு— இருந்தவிருந்தவிடந்தோறும்- இருந்தவிருந்தவிடங்கடோறும்— வே
கத்துசளும்- வேகத்துடன்பாய்கின்ற— மனக்குரங்கு- மனமென்னுமற்கடமானது— விடயக்கொம்
புகளிற்பாய- விடயமென்னும்பணைகளிற்ருவுதலால்— சோகத்திறந்தீர்- துன்பத்தின்றன்மைகளில்
லாத— மகிழ்ச்சிபெறும்-மகிழ்ச்சியையடைகின்ற— சொரூபசமாதிபெற்றிலன்- ஸ்வரூபசமாதியைய
டைந்திலன்— (எ-று) [இ-ரு-க-ம்] விடயசுகந்துன்பமென்றுவருந்திப் பரமசுகங்கூடாமற்பரதவி
த்துக்கொண்டிருக்கின்றதீவரதர முண்டாயினதென்பதாம். - - - - - - - - *

(௰கூ) (அ-கை) ஒன்றிலுந்தரிசொள்ளாமற்சுழலுதல் (கவி) நிறனுர்கானிவிவ்வகையே நிலைபற்
றலைவோன்பின்னெருகாற், புறனுர்காட்சியொழிந்திடலாற்பொல்லாமனமாம்வன்குரங்கு, திறனுரிரு
ண்மூடியதென்னத்தியானங்களிலேயுள்ளழியா, வறனுர்கிரியிலுலைந்துழல்வுற்றறவேவாடி யலமந்தா
ன் (இ-ள்) நிறனுர்கானிவிவ்வகை- விளங்காநின்றகானகத்திலிந்தப்ரகாரம்— நிலையற்றலைவோன்- நி
லையில்லாமலலைகின்றவுத்தாலகன்— பின்னெருசால்- பின்பொருநாளில்— புறனுர்காட்சி- புறம்பிலு
ள்ளவிடயதிருஷ்டி— ஒழிந்திடலால்- தவிர்ந்தபடியால்— பொல்லாமனமாம்- பொல்லாதமனமா
கிய— வன்குரங்கு- பலம்பொருந்தியமற்கடமானது— திறனுரிருண்மூடியதென்ன- திடமானவந்
தகாரமூடினதுபோல— தியானங்களில்- சமாதிகளில்— உள்ளழியா- அகம்வருத்தமுற்று— அறனுர்கி
ரியில்- தருமமிகுந்தமலையில்— உலைந்துழல்வுற்று- வருத்தத்தோடுஞ்சுழன்று— அறவேவாடி- மிகவு
ஞ்சோர்ந்து— அலமந்தான்- சுழன்முன்— (எ-று) [இ-ம்.] மனமானதொருகாற்பாகியவடிவத்தை
விடுதலுமனோரதபரிகற்பிதமான வாநந்தவிடயத்தை யடைதலுமொருகாலஃதைவிட்டிஃதைகிரகித்த
லுமொருகாற்பயமடைந்தபக்ஷியைப்போலத்துள்ளியோடுதலுமொருகாலிராசத குணப்ரகாசத்தையு
ஞ்சத்துவகுணம்பரத்தையுந்தமோகுணவந்தகாரத்தையும்பார்த்ததென்பதாம். - - - - - *

(உ௰) (அ.கை) நிருவிகற்பசமாதியினிமித்தமாசனங்கட்டியிருத்தல்- (கவி) யாருமின்றியாராலு
மெய்தற்கரிதாகியமுழைதான், சாருமுத்திப்பதமெனலாந்தன்னிலொருகாற்றனிமேவி, யாருமலைக்கு
ன்றியின்றழைமேலருணச்சருமம்விரித்ததன்மே, லொருமனத்தின்செயல்குறுக்கியுணர்வான் புத்தன்
போலாகி (இ-ள்)யாருமின்றி-ஒருவருமில்லாததாகியும்—ஆராலுமெய்தற்கரிதாகிய - யாவராலுமடைய
க்கூடாததாகியுமிருக்கின்ற— முழைதான்- குகையானது— சாருமுத்திப்பதமெனலாம்- சேராநின்
றமோக்ஷவிடமென்றுசொல்லப்படும்— அதனில்- அக்குகையில்— ஒருகாற்றனிமேவி- ஒருபொழு
துதனித்துச்சென்று—ஆருமலைக்குன்றியின்றழைமேல்- பொருந்தியமலைக்குன்றுமணித்தழையின்மே
ல்— அருணச்சருமம்விரித்து-மான்றோலைவிரித்து—அதன்மேல்- அதின்மேல்—ஒருமனத்தின்-ஆரா
யாநின்றமனதினது— செயல்குறுக்கி- தொழிலைச்சுருக்கி— புத்தன்போலாகி- புத்தனைப்போல—உ
ணர்வான்- தியானிப்பான்—(எ-று) - - - - - - - - - - - - *

(உக) (அ-கை) இ-து (கவி) புண்டரீகவாதனத்திற்புத்தன்போலுத்தரமுகனு, யண்டமிரண்டுமி
ருகுதிமேலாக்கிப்பிரமாஞ்சலிபண்ணி, மண்டுகின்றவாதனையின் மருளுமனத்தைமீள்வித்துத், தண்டவி
ல்லா நிருவிகற்பசமாதிப்பொருட்டிவ்வகைநினைந்தான். (இ-ள்) புண்டரீகவாதனத்தில்- பத்மாதனத்
தில்— புத்தன்போல்- பௌத்தனைப்போல— உத்தரமுகனுய்- வடக்குமுகமானவனுய்— அண்டமிர
ண்டும்- இரண்டுபீசத்தையும்— இருகுதிமேலாக்கி- இரண்டுகுதிகான்மேல்வைத்து— பிரமாஞ்சலிப
ண்ணி- பிரமாஞ்சலிசெய்து—மண்டுகின்றவாதனையில்- நெருங்காநின்றவாசனையினுல்— மருளுமன

த்தை- மயங்குகின்றமனத்தை— மீள்வித்து- திருப்பி— தண்டலில்லா- தடையில்லாத— நிருவிகற்ப
சமாதிப்பொருட்டு- நிருவிகற்பசமாதியினிமித்தம்—இவ்வகைநினைந்தான்- இந்தப்ரகாரம்விசாரித்தா
ன்—(எ-று)பத்மாதனமாவன, இடதுகாற்குதிவலதுபீசத்தைநெருக்கிக்கொண்டுவலதுதுடையின்மே
லும்,அவ்வலதுகாற்குதியிடதுபீசத்தைநெருக்கிக்கொண்டிடதுதுடையின்மேலும்வைத்தல், பிரமாஞ்
சலியாவன, இரண்டுகரங்களையுஞ்சேர்த்தபிமுகமாகவுமுத்தானமாகவுமேந்தல், பிரமத்தைவணங்குதலு
மாம், புத்தன்போலென்றது, சீரமசைவறவிருத்தலெனக்கொள்க [இ-உ-க-ம்]சமாதியினிலக்கணங்
களையறிவித்ததாம். இவற்றிற்குதாரணம். அகத்தியசங்கிதை, இரண்டுபாதங்களையுமடித்தொடையின்
மேற்சமமாகச்செய்வதேசகலகன்மங்களிலும்ப்ரசித்தியுள்ளபத்மாசனமென்றுசத்துக்களாற்சொல்லப்
படும், விவேகமார்த்தாண்டம்.இடதுகாற்குதியைவலதுதுடையிலும், வலதுகாற்குதியையிடதுதுடையி
லுஞ்சேர்த்துப்பிரமாஞ்சலியுடனிருந்தசைவற்றதிருஷ்டிகளினாசிநுனியைப்பார்ப்பதே, பத்மாசன
மென்றுசத்துக்கள்சொல்லுகிறார்கள். - - - - - - - - - - *

(உஉ) (அ-ஙக.) சமாதியிலசைவறவிருக்குமிடத்துதித்தவாவிக்கொண்டு விடயத்திற்சுழலாநின்ற
மனதைக்கண்டதைவெளியிற்செலுத்தாமற்றடுத்துத்தன்வயப்படுத்தும்பொருட்டுவிசாரமுசத்தாலதன்
குற்றங்களைக்களையத்தொடங்கிப்போகங்களைக்களைதல் (கவி)வாராய்மூடமனமேநின்மாயவாட்கைகளி
ற்பயனென், நீராவிடாமுடிவில்வருஞ்செயலிற்பெரியோர்சேருவரோ, வாராவமுதாஞ்சாந்தியைவி
ட்டழியும்போகமாதரிப்பா,யேரார்மலர்க்கற்பகக்கான்விட்டெரிகூர்விடவெங்கானுறுவார் (இ-ள்)மூ
டமனமே- மூடத்தன்மையுடையமனதே—வாராய்- வருவாய்— நின்மாயைவாழ்க்கைகளில்- உனது
பொய்வாழ்வுகளில்— பயனென்- ப்ரயோசனமென்ன— நீராவிடாமுடிவில்வரும்- நீங்காததுன்ப
மேமுடிவிலுண்டாகின்ற— செயலில்- தொழிலில்— பெரியோர்சேருவரோ- சத்துக்களடைவார்க
ளோ— ஆராவமுதாம்- தெவிட்டாதவமுதமாகிய—சாந்தியைவிட்டு- உபசாந்தியைநீக்கி— அழியும்
போகமாதரிப்போர்- கெடாநின்றபோகத்தையிச்சிப்பவர்கள்—ஏரார்மலர்- அழகுபொருந்தியபுஷ்
பங்களையுடைய—கற்பகக்கான்விட்டு- கற்பகவனத்தைவிட்டு— எரிகூர்- கொடுமைமிகுந்த— விடவெ
ங்கானுறுவார்-விடம்போன்றவெப்பம்பொருந்திய(பாலவனத்திற்)பொருந்துவார்கள்—(எ-று) *

(உரு) (அ-கை.) சாந்தியேசுகமாமென்றுசரிதைகிரியைக்களைதல் (கவி) அயனுடற்றாய்பாதலத்தி
லணுகினுமாகிலுஞ்சாந்தி, வியனாரமுதையொழித்தந்தமிக்கநிருவாணம்பயிலாய்,பயனுபதுபோல்விசித்
திரமாய்ப்பாவாபாவமயவடிவா, யியல்பாமிந்தச்செயல்கள்பெரிதிடாமென்றுமினிதாகா (இ-ள்) அ
யனுடற்றாய்-பிரமலோகத்திலடைந்தா(யானாலும்)—பாதலத்திலணுகினுமாகிலும்- பாதாளலோகத்தில
டைந்தாயானாலும்— சாந்திவியனாரமுதையொழிந்து- சாந்தமென்னும்பெருமைநிறைந்தவமுதத்தை
நீங்கி— அந்தமிக்கநிருவாணம்பயிலாய்-அம்மேலானநிருவாணசுகத்தைக்கூடமாட்டாய்—பயனுபது
போல்- ப்ரயோசனமானதுபோல— விசித்திரமாய்- நாநாவிதமாய்— பாவாபாவமயவடிவாய்- உள்
ளதில்லதின்மயரூபமே— இயல்பாம்- சுபாவமாயிருக்கின்ற— இந்தச்செயல்கள்- இத்தொழில்கள்—
பெரிதிடராம்- மகாதுன்பமாம்— என்றுமினிதாகா- எப்போதுமின்பமாகமாட்டாது—(எ-று) *

(உச) (அ-கை.) பஞ்சவிடயத்தின்றொழிலைக்களைதல் (கவி)சத்தாதிகளாமித்தொழில்கடன்னான்ம
ண்டுகம்போலப்,பித்தாய்மூர்க்கமனமேயேன்பிரமிக்கின்றாய்விடாதவமே,யெத்தாற்சிறிதுதனையடை
ந்தாயெதிலேயின்பமுறுகின்றாய், நித்தாரமுதாய்ச்சமமாகுமதினீநிலைசேராநெறியென். (இ-ள்.) சத்
தாதிகளாம்- சத்தமுதலிய (விடயங்களிற்செல்லும்)— இத்தொழில்கடன்னால்- இச்செயல்களினால்—
மண்டுகம்போல- தவளையைப்போல—பித்தாய்-பயித்தியமுடையதாயிருக்கின்ற—மூர்க்கமனமே-
மூடமனதே— விடாதவமே- விடாமல்வீணாக— ஏன்பிரமிக்கின்றாய்- ஏனுழலுகின்றாய்— எத்தாற்சி
றிதுதனையடைந்தாய்- யாதினாற்கிஞ்சித்தின்பமடைந்தாய்— எதிலேயின்பமுறுகின்றாய்- யாதிற்ப
ரமசுகமடைகின்றாய்— நித்தாரமுதாய்- சதாகாலமுநிறைந்தவமுதமாயும்—சமமாகுமதின்-சமமாயு
மிருக்கின்றவந்தச்சாந்தத்தில்—நீநிலைசேராநெறியென்- நீநிலைபெறாதவிதமென்ன—(எ-று)(ப-ம்)
சிறுமையென்பதுகற்பனுவடிவங்குறைந்திதார்த்தவடிவம்வியாபித்தலெனக்கொள்க. - - - *

(உரு) (அ-கை) சத்தபரிசவிடயங்களைக்களைதல். (கவி)வே, படர்மூர்க்கமாமனமேவிணாய்த்தோ
ன்றிப்பருக்கின்றசெவித்தொழில்கள்பயின்றுசத்தந், தொடர்கின்றபுந்தியினலசுணமாபோற்றுஞ்சு
றவேண்டாதோலின்றொழிலைமேவி, படர்பரிசமூகமாமதனாற்றுன்ப மடியாகப்பிடிக்கன்பாமியானை
போல, மடமைமிகுமூர்க்கமாமனமேயென்றுமாறாதவாபத்தைமருவவேண்டா. (இ-ள்.) படர்மூர்க்க
மாமனமே- விரிகின்றமூடத்தையுடையமனதே— வீணாய்த்தோன்றி- விருதாவாகவுண்டாய்— பருக்
கின்ற- பருக்காநின்ற— செவித்தொழில்கள்பயின்று- காதின்றொழில்களைக்கூடி— சத்தந்தொடர்கி
ன்றபுந்தியினால்- சத்தவிடயத்தைத் தொடராநின்றபுத்தியினால்— அசுணமாபோல்- அசுணப்பக்ஷி
யைப்போல— துஞ்சுறவேண்டா- மரணமடையவேண்டாம்— தோலின்றொழிலைமேவி- தொக்கின்
வியாபாரத்தைப்பொருந்தி— அடர்- நெருங்கிய— பரிசமூகமாமதனால்- பரிசவிடயமானமூடத்த
மையினால்— துன்பமடியாக- துயரமேதுவாக—பிடிக்கன்பாமியானைபோல- பெண்யானைக்காசையா
னவானையைப்போல—மடமைமிகு- அறியாமைமிகுந்த—மூர்க்கமாமனமே-மூடமானமனமே—
என்றுமாறாத- எப்போதுந்தவிராத—ஆபத்தைமருவவேண்டா- ஆபத்தையடையவேண்டாம (எ-று)

(உசா) (அ-கை) ரூபரசகந்தவிடயங்களைக்களைதல். (கவி) ஒளியுருவத்திரளைச்சுவழிபின்செய்
கையுற்றுநீவெவ்விளக்கையுணராதாகி, விள்தலுறும்விட்டில்போல்வேகவேண்டாமவய்பமனமேநாவி
ன்விருத்திமேவி, யெளிதருந்திபுணவுகளின்மணத்தினுலேயினாத்தூண்டிற்கவர்மீன்போலிறக்கவே
ண்டா, நள்ளிவிதயத்துளுயிர்நெறபோய்க்கந்தநாட்டத்தாற்கட்டுண்ணைவண்டேபோல்.(இ-ள்)

ஒளியுருவத்திரள்- ஒளிபொருந்தியரூபவிடையசமுகத்தை— நோக்கும்- பார்க்கின்ற— விழியின்செய்கையுற்று- கண்ணினுடையதொழிலைப்பொருந்தி— நீ- (மனமே)நீ— வெவ்விளக்கையுணராதாகி- வெப்பம்பொருந்தியதீபமென்றறியாமல்— விளிதலுறும்- மரணமடைகின்ற— விட்டில்போல்- விட்டிற்பூச்சியைப்போல— வேசவேண்டா- வெந்துபோகவேண்டாம்— வெய்யமனமே- கொடியமனதே—நாவின்விருத்திமேவி- நாக்கினுடையதொழிலைப்பொருந்தி—எளிதருந்தி- அற்பம்புசித்து— உணவுகளின்- புசிப்புகளினது—மணத்தினால்- இரசவிடயவாசனையினால்—இரை- இரையையுடைய— தூண்டிற்கவர்மீன்போல்- தூண்டிலைக்கிரகிக்கின்றமச்சத்தைப்போல—இறக்கவேண்டா- நாசமடையாதே— நனைவண்டேபோல்- தேனுக்காசித்தஞிமிறைப்போல— நளினவிதயத்துள்- தாமரைமலர்போன்றவிருதயத்துள்— உயிர்நெறிபோய்- சுவாசமார்க்கத்திற்சென்று— கந்தநாட்டத்தால்- வாசனைவிடயத்தைத்தேடுதலினால்— கட்டுண்ணேல்- (மனமேநீ) கட்டுப்படாதே—(எ-று) - - - ※

(உஎ) அ-சை) ஐந்துவிடயங்களையுங்கூட்டிக்களைதல் (கவி) உரைத்தவசுணங்களிறுவிட்டின்மீன்றேனோசையூறொளியிரதநாற்றமென்ன, நிரைத்தவிவற்றொன்றொன்றொன்மாய்ந்துபோகுநிலையழிக்குமவையைந்துநேரோகூடிக், கரைத்தலுறுபவர்க்கின்பமெங்கேயுன்றன்கட்டுக்குவாதனையேகயிற்றுச்சாலம் புரைத்தெழுநெஞ்சேயதுவேபோகுமாகிற்பொருவில்சயமஃதுனக்குப்புகலுங்காலே, (இ-ள்) உரைத்தவசுணம்- சொல்லியவசுணப்பக்ஷியும்— களிறு- யானையும்— விட்டில்- பதங்கப்பட்சியும்— மீன்- மச்சமும்—தேன்- வண்டும்—ஓசை- சத்தமும்—ஊறு- பரிசமும்—ஒளி- உருவமும்—இரதம்- சுவையும்—நாற்றம்- கந்தமும்— என்ன- என்று— நிரைத்தவிவற்று- நேர்நிரையாகவைக்கப்பட்டவிவற்றுள்— ஒன்றொன்றொன்மாய்ந்துபோகும்- ஒன்றினொலொன்றுமரணத்தையடையும்— நிலையழிக்கும்- நிலையைக்கெடுக்கின்ற— அவையைந்தும்- அப்பஞ்சவிடயமும்— நேரோகூடி- ஒன்றாகச்சேர்ந்து— கரைத்தலுறுபவர்க்கு- மெலிவுசெய்யப்பட்டவர்களுக்கு— இன்பமெங்கே- அகமகிழ்ச்சியெங்கே (யுண்டாகும்)— உன்றன்கட்டுக்கு- உன்னைக்கட்டுதலுக்கு— வாதனையே- (இந்த) வாசனையென்பதே—கயிற்றுச்சாலம்- கயிற்றாற்பின்னினவலையாம்— புரைத்தெழுநெஞ்சே- குற்றத்தோடுமெழாநின்றமனமே— அதுவேபோகுமாகில்- அவ்விடயவாசனையேநீங்குமானால்— புகலுங்கால்- சொல்லுமிடத்தில்— அஃதுனக்கு- அதுவேயுனக்கு— பொருவில்சயம்- சமானமில்லாதவெற்றியாம்(எ-று) [இ-சூ-க-ம்] மனதைப்பிரமாநந்தத்திற்செலுத்தும்பொருட்டுப் பஞ்சவிடயமுதலியபோகங்களிற்செலுத்தாமற்றடுத்ததென்பதாம். - - - - - - - - - ※

(உஅ) (அ-சை) அற்பமானமனதிலகண்டமானசித்தெப்படியிருக்குமெனல் வே (கவி) எதுபயனாகநிற்கிங்கித்தண்டமியான்செய்கின்றேன், முதுவிசாரத்தின்மிக்கமுதன்மை யோர்க்குளமொன்றில்லை, யதிகமாமுடிவில்சித்துக்கற்பமா நிலையென்னெஞ்சில், விதியதாயுளதோயானை வில்வக்காய்புகுதலுண்டோ. (இ-ள்) எதுபயனாக- யாதுப்ரயோசனமாக— நிற்கு- உனக்கு— இங்கு- இவ்விடத்தில்— இத்தண்டம்- இந்தவாக்கினை— யான்செய்கின்றேன்- நான்செய்கிறேன்—முதுவிசாரத்தில்- முதிர்ந்த (வாத்மஞான)விசாரணையில்—மிக்கமுதன்மையோர்க்கு- மிகுந்தமுதன்மையானசத்துக்களுக்கு—உளமொன்றில்லை- ஒருமனமுமில்லை—அதிகமாம்- வியாபகமாகிய—முடிவில்சித்துக்கு- முடிவில்லாதஞானத்துக்கு— அற்பமாநிலை- சூட்சுமமானஸ்திதி—என்னெஞ்சில்விதியதாயுளதோ- என்மனதில்நியமமாயுண்டோ—யானைவில்வக்காய்புகுதலுண்டோ- களிறுவில்வப்பழத்தினுள்நுழையுமோ—(எ-று) - ※

(உகூ) (அ-சை) தேகமுதலியபவைகளைக்களைந்ததற்குவிலக்ஷணமான வாத்மஸ்வரூபத்தைத்தரிசித்தல். (கவி) தசைபயில்பாதத்தொட்டுத்தலைமட்டும்வெவ்வேறாய்ந்து,விசைவுறயானங்கில்லையானெனுநிலையெங்குண்டோ, திசையெலாம்விழுங்கி மேலாஞ்சித்ததாய்க்காண்பதின்றி, யசைவறவெங்குந்தானுமென்றுலகனைத்துங்காண்கேன்.(இ-ள்)தசைபயில்- மாமிசம்பொருந்தியசரீரத்தில்—பாதந்தொட்டு- பாதமுதலாக— தலைமட்டும்- சிரசுபரியந்தம்— வெவ்வேறாய்ந்தும்- வேறுவேறாகவாராய்ந்தும்—இசைவுறயான்- பொருந்தநானென்பது— அங்கில்லை- அச்சரீரத்திலில்லை— யானெனுநிலை- நானென்னுந்தன்மையானது— எங்குண்டு- எவ்விடத்திலிருக்கின்றது— திசையெலாம்விழுங்கி- திக்குகளனைத்திலும்வியாபித்து— மேலாஞ்சித்ததாய்- மேலானஞானஸ்வரூபமாகி— காண்பதின்றி- காணப்படாததாகி— அசைவற- சலனமில்லாமல்— எங்குந்தானுமென்று- எவ்விடத்துந்தானாக (விளங்கின) தென்று— உலகனைத்துங்காண்கேன்- சகங்களனைத்தையும்பார்ப்பேன்—(எ-று) - - - - - ※

(௩௰) (அ-சை) ஆத்மதரிசனமாயதிலுதிக்கின்றமனதைக்கண்டிக்கத்தொடங்கல்- (கவி) உயர்வுறுமதற்குநாமங்கற்பனை யொருமைபன்மை, வியன்மகத்தணுவென்றோதும் விதமுறுகுறிகள்காணேன், னியலறிவாதலாலேயான்காணுமென்பானீயே,துயர்தருமேதுவாகத்தோன்றினைபேதநெஞ்சே (இ-ள்) உயர்வுறுமதற்கு- மேன்மைபொருந்தியவந்தஞானத்துக்கு—நாமங்கற்பனை- பெயரின்கற்பனையும்— ஒருமை- ஏகத்துவமும்—பன்மை- அநேகத்துவமும்— வியன்மகத்து- பெருமைமிகுந்தமகத்துவமும்— அணுவு- அணுத்துவமும்—என்றோதும்- என்றுசொல்லுகின்ற— விதமுறு- நாநாவிதமாகிய— குறிகள்காணேன்- அடையாளங்களைக்கண்டிலன்— இயலறிவாதலால்- சுபாவமானஞானமானதினால்— யான்காணும்- சுசம்வேத்தியமான—என்பால்- என்னிடத்தில்—பேதநெஞ்சே- வேற்றுமையுள்ளமனதே—நீயேதுயர்தருமேதுவாகத்தோன்றினை- நீயேதுன்பங்கொடுக்குங்காரணமாகவுண்டானாய்(எ-று)

(௩க) (அ-சை) மனதிற்குருவமின்றெனக்கண்டித்தல்.(கவி) முதுவிவேகத்தாற்போதமொய்ம்பினுவிந்தவுன்னைக்,கதுமென்கொல்லாநின்றேன்காணுதிகவலைநெஞ்சே, யிதுதசையிதுபுண்ணீரெனவிலையுளவுயிர்ப்பாய், பொதுளியவாதமிங்கேயசமெனல்பொருந்திற்றெங்கே (இ-ள்) முதுவிவேகத்தால்- முதிர்ந்தவிவேகத்தினாலுண்டான— போதமொய்ம்பினால்- ஞானார்த்தவலியினால்— இந்தவுன்

னை - இப்படிப்பட்டவுன்னை— சதுமெனக்கொல்லாநின்றேன் - சீக்கிரமாகக்கெடுக்கின்றேன்— சவலை நெஞ்சே - துன்பத்தையுடையமனதே— காணுதி - நீகாணக்கடவாய்—இதுதசை - இதுமாமிசம்—இதுபுன்னீர் - இதுவிரத்தம் - இதென்பு - இதுவஸ்தி— இவை - இவைகள்— உளவுயிர்ப்பாய் - உள்ளபிராணனாய்— பொதுளியவாதம் - நிறைந்தகாற்று—இங்கு - இவ்விடத்தி(லிவைகளில்)— அகமெனல் - நானென்பது— பொருந்திற்றெங்கே - பொருந்ினதெங்கே—(எ-று.) - - - - - - ✻

(௫௨) (அ-கை) இ-து. (கவி) தசைகள்வேறுதிரம்வேறுதடியென்புவேறுமெய்யிலசைவுவேறறிவுவேறுவகமெனல்பொருந்திற்றெங்கே, விசைவிழியிதுதோலீதுவியன்செவியிதுமூக்கீது, பசைவுறுநாவிதிங்கேயகமெனல்பயின்றதெங்கே. (இ-ள்) தசைகள்வேறு - மாமிசங்கள்வேறு— உதிரம்வேறு - இரத்தம்வேறு—தடியென்புவேறு - தடித்தவஸ்திவேறு—மெய்யில் - சரீரத்தில்—அசைவுவேறு - சுன் (மேந்திரியங்கள்) வேறு—அறிவுவேறு - ஞா (னேந்திரியங்கள்) வேறு— அகமெனல் - நானென்பது— எங்கேபொருந்திற்று - எவ்விடத்திற்பொருந்தியிருக்கும்—விசைவிழியிது - விசையாகியகண்ணிது— தோலிது - தொக்கிது— வியன்செவியிது - பருத்தகாதிது—மூக்கீது - நாசியிது— பசைவுறு நாவிது - பசைபொருந்தியநாக்கிது— இங்கேயகமெனல் - இவ்விடத்திலென்று— பயின்றதெங்கே - சொன்னதெங்கே— (எ-று) - - - - - - - - - - - - - - - - ✻

(௫௩) (அ-கை.) சித்தைச்சடமயக்குமோவெனல். (கவி) அகமெனலெங்குமாகுமற்பமிங்ககமன்றுகு, நிகழுமிந்நல்லநோக்கேநோக்கயனெறிவேறில்லை, புகரில்சின்மயனுமென்னைப்போதமிற்றூர்த்தநெஞ்சே, மிகவருத்தினையான்கன்றைவனச்செந்நாய் வெருட்டுமாப்போல். (இ-ள்) அகமெனலெங்குமாகும் - நானென்பதெங்குமாயிருக்கும்— அற்பமிங்ககமன்றாகும் - அற்பமுமிவைகளினானென்பதல்லாததாம்— நிகழும் - இப்படிவிளங்காநின்ற— இந்நல்லநோக்கே - இவ்வனுபவதிருஷ்டியே— நோக்கு - திருஷ்டியாம— அயனெறிவேறில்லை - வேறுமார்க்கமில்லை—புகரில் - குற்றமற்ற— சின்மயனுமென்னை - ஞானவடிவமாகியவென்னை—போதமில் - அறிவில்லாத—தூர்த்தநெஞ்சே - வஞ்சகமுள்ளமனதே— ஆன்கன்றை - பசுவின்கன்றை—வனச்செந்நாய் - வனத்திலுள்ளசெந்நாயானது— வெருட்டுமாப்போல் - மருட்டுவதுபோல—மிகவருத்தினை - மிகவும்வருத்தப்படுத்தினாய்— (எ-று) - ✻

(௫௪) (அ-கை.) இனிமனதின்வசத்திற்செல்லேனெனல் (கவி) தெய்வயோகத்தாலின்றுதேறினன்சொரூபச்செம்பொன், கைவழிசவாஞ்ஞானக்கள்வன்மீண்டிவனைச்சேரோ, னைவகைப்பொறிகளொன்றுவாதனையற்றிருந்துந், தைவருபுறனிற்றத்தம்புலன்களிற்றாவாநின்ற (இ-ள்) தெய்வயோகத்தால் - தேவாதீனமாய்—சொரூபச்செம்பொன் - ஆத்மவஸ்துவை—கைவழிசவர் - கைவசமாயபகரிக்கின்ற— அஞ்ஞானக்கள்வன் - அஞ்ஞானமென்னுந்திருடனை— இன்றுதேறினன் - இப்போதுதெளிந்துகொண்டேன்— மீண்டிவனைச்சேரோன் - திரும்பவிவனைச்சாரோன்—ஐவகைப்பொறிகள் - பஞ்சேந்திரியங்கள்— ஒன்றுவாதனையற்றிருந்தும் - ஒன்றியவாசனையைவிட்டிருந்தும்— தைவரு - ஸ்பரிசிக்கின்ற— புறனில் - புறம்பில்—தத்தம்புலன்களில் - தங்கடங்களவிடயங்களில்— தாவாநின்ற - தாவுகின்றன— (எ-று) [இ-எ-க-ம்] ஆத்மஸ்வரூபத்தைத்தவிர மனதிற்கோருருவமின்றெனத்தரிசித்ததாம் - ✻

(௫௫) (அ-கை) பொறிகளைமனோவாசனையிற்செல்லாமனிச்குதல். (கவி) வாதனைபொறிகட்கெல்லாமன்னுகாரணமன்றாகு,மாதலான்மூர்க்கமானவைம்பொறிநீவிர்நெஞ்சி, னேதவாதனைகண்மாற்றிக் கருமங்களெல்லாஞ்செய்வீர், வேதனைத்துன்பமொன்றுங் கிஞ்சிலுமேவாதென்றும் (இ-ள்) வாதனை - வாசனையானது— பொறிகட்கெல்லாம் - இந்திரியங்களனைத்துக்கும்— மன்னுகாரணமன்றாகும் - நெருங்கியகாரணமல்லாததாம்— ஆதலால் - ஆதலினால்— மூர்க்கமானவைம்பொறி - மூடமாகியபஞ்சேந்திரியங்களே—நீவிர் - நீங்கள்— நெஞ்சின் - உள்ளத்தினது— ஏதவாதனைகண்மாற்றி - குற்றமுள்ளவாதனைகளைக்கெடுத்து — கருமங்களெல்லாஞ்செய்வீர் - தொழில்களனைத்தையுஞ்செய்வீர்களானால்—வேதனைத்துன்பம் - வருத்தஞ்செய்கின்றதுன்பங்கள்— ஒன்றும் - ஒன்றாலும்— கிஞ்சிலும் - அற்பமும்— என்றும் - எப்போதும்— மேவாது - பொருந்தாது— (எ-று) - - - - - - - - ✻

(௫௬) (அ-கை) மனதைப்பொறிவசத்திற்செல்லாமற்றடுத்துப்பொறிவசத்திற்செலுத்துதல். வே, (கவி) கூடுசெயுந்தன்வாயினூலாற்பொன்றுங்கோசகாரக்கிருமிக்கூட்டம்போல, வோடுபொறியெனுஞ்சிசுக்காள்மயலால்விணேயுலர்ந்திடுவீர்பொறிச்செல்லாமுறையுளான நீடுமனனேயொடுங்கிப்பொறிகளோடுநீவேறற்றாத்துமதத்துவத்தைநேரோ, நாடுதிபற்றற்றொன்றாய்முத்தியான ஞானவடிவினைநிலையாய்நண்ணுவாயே(இ-ள்)கூடுசெயுந்தன்வாயினூலால் - கூண்டுசெய்கின்றதனதுவாயினூலினால்— பொன்றும் - மரணமடைகின்ற— கோசகாரக்கிருமிக்கூட்டம்போல - கோசகாரப்புழுவினதுகூட்டத்தைப்போல—ஓடுபொறியெனுஞ்சிசுக்காள் - திரிஸ்பத்திற்றாவுகின்றவிந்திரியங்களெனுங்குழந்தைகளே— மயலால் - மயக்கத்தினால்— விணேயுலர்ந்திடுவீர் - வீணாகக்கெடுவீர்கள்— பொறிச்செல்லாம் - இந்திரியங்களனைத்திற்கும்—உறையுளான நீடுமனனே - வசிக்குமிடமாகிய நீண்டமனதே— ஒடுங்கி - அடங்கி— பொறிகளோடு - இந்திரியங்களுடன்— நீவேறற்று - நீவெறுபடாமல்— ஆத்துமதத்துவத்தை - ஆத்மஞானத்தை— நேரோநாடுதி - நேரேபார்ப்பாய்— பற்றற்று - பற்றில்லாமல்— ஒன்றாய் - ஏகமாய்— முத்தியான - நிருவாணசுகமாயிருக்கின்ற— ஞானவடிவினை - ஞானஸ்வரூபத்தை— நிலையாய்நண்ணுவாய் - நிலையாகப்பொருந்துவாய்— (எ-று) - - - - - - - - - - ✻

(௫௭) (அ-கை) மனோசங்கற்பத்தைக்கெடுத் தாத்மசுகத்திற்சுகிப்பேனெனல் (கவி) ஆசகலாவிடயவிடவிடுசியாகியநந்தமா நானெனும்வாதனையைத்திர, மாசறவிட்டிச்சைமிடலாமொழிப்பதென்னுமந்திரயுத்தியினு,லேமறுசென்மமபோய்த், தேசமுறுபகவானுயச்சமெல்லாந்தீர்விடமாவாய்மனமேதிர்ள்சங்கற்பம,வீசுதருமயல்கொடியாய்நீயாங்காட்டைவெட்டிநெடும்பூமியமலவிநோதஞ்செய்வே

ன். (இ-ள்) அசுகலாவிடயம்- குற்றநீங்காதவிடயமென்னும்— விடவிடேயாகி-விடமுள்ளவிடேயாகி யும்— அநந்தமாம்- அளவில்லாததாகியுமிருக்கின்ற— நானெனும்வாதனையை- யானென்கின்றவாச னையானது— தீர- நீங்கும்படி— மாசறவிட்டு- களங்கமில்லாமல்விட்டு— இச்சையெலாம்- ஆசைகளை னத்தையும்— ஒழிப்பதென்னும்- கெடுப்பதென்கின்ற— மந்திரயுத்தியினல்- மந்திரவுபாயத்தினு ல்— மறுசென்மம்போய்- மறுபிறப்புநீங்கி— தேசுமுறுபகவானுய்- ப்ரகாசம்பொருந்தியபகவல்ஸ்வ ரூபமாய்—மனமே-மனதே—அச்சமெல்லாந்தீர்விடமாவாய்- பயங்களனைத்துந்தீர்ந்தவிடமாவாய்— திரள்சங்கற்பம்- மிகுந்தசங்கற்பமே— விசுதரு- விசப்பட்ட (விருக்ஷமாகவும்) —மயல்கொடியாய்- ஆசையேகொடிகளாகவுமிருக்கின்ற—நீயாங்காட்டை- நீயென்னும்வனத்தை— வெட்டி- தறித்து— நெடும்பூமியில்- நீண்ட(ஞான)பூமியில்— விநோதஞ்செய்வேன்- விளையாடுவேன்— (எ-று) - ※

(௫௮) (அ-கை) மங்கலகரமானபிரமஸ்வரூபமாயதினபின சத்தியினியல்பைத்தரிசித்தல். (கவி) வேண்டியவாவிளையாடித்தற்பதத்தைமேவினன் கேவலமானேன் வெற்றியுற்றே, னீண்டுவுயர்நிருவா ணமானேன்செய்வதிலதானேன்பிறிவற்றேனிடம்வேறற்றே, னீண்டதெளிவுடைமையொளிவுடை மையுண்மைநிகழுடைமையறிவுடைமைநீங்காமெய்ம்மை, மாண்டசுகமுடைமையுபசாந்தநீர்மைமகி ழுடைமைநிறையுடைமைமகிமைபான்மை (இ-ள்) வேண்டியவா- வேண்டினப்ரகாரம்— விளையா டி- விளையாடல்செய்து— தற்பதத்தைமேவினன்-பிரமபதத்தைப்பொருந்தினேன்— கேவலமானே ன்- தனிமையானேன்— வெற்றியுற்றேன்- சயமடைந்தேன் — ஈண்டு- இவ்விடத்தில்— உயர்நிருவா ணமானேன்- உயர்ந்தமோக்ஷஸ்வரூபியானேன்—செய்வதிலதானேன்- தொழிலில்லாதவனுனேன்— பிறிவற்றேன்- பகுப்பற்றேன்— இடம்வேறற்றேன்- வேறிடமில்லாதவனுனேன்— நீண்டதெளிவு டைமை- மிகுந்ததெளிவுடைமையும்— ஒளிவுடைமை- விளக்கமுடைமையும்— உண்மைநிகழுடை மை- தத்துவப்ரகாசமுடைமையும்— அறிவுடைமை- ஞானமுடைமையும்— நீங்காமெய்ம்மை- நீங் காதவுண்மையும்—மாண்டசுகமுடைமை-சிறந்தசுகமுடைமையும்— உபசாந்தநீர்மை- உபசாந்தமுள் ளகுணமுடைமையும்—மகிழ்வுடைமை-(சற்கருமத்தின்)மகிழ்ச்சியுடைமையும்— நிறைவுடைமை-பூ ரணவுடைமையும்—மகிமை-பெருமையுடைமையும்—பான்மை-நற்குணமுடைமையும்—(எ-று.) ※

(௫௯)(அ-கை)இ-து(கவி)ஆவரணமில்லாமையுதாரத்தன்மையழியாததேசுடைமையகண்டநீர்மை,யா வதுந்தானுமுறைமையச்சமின்மை யேகமாந்தன்மைமனமெழுந்தோடாமை, யோவவிலாதுடனுறை யிக்குணங்களென்னு முத்தமிகள்சுமங்கலிகளொப்பிலாதார், பாவனையொன்றுஞ்சொருபமடைந்தே ற்சென்றும்பன்னியராயுளங்கவரும்பாவைமாரே (இ-ள்) ஆவரணமில்லாமை- மறைப்பில்லாமையும்— உதாரத்தன்மை- உதாரமானகுணமும்—அழியாததேசுடைமை- கெடாதப்ரகாசத்தையுடைமையும்— அகண்டநீர்மை- பூரணத்தன்மையும்— யாவதுந்தானுமுறைமை- சகலமுந்தன்மயமானகுணமும்— அச்சமின்மை- பயமில்லாமையும்— ஏகமாந்தன்மை- ஒன்றாகியதன்மையும்— மனமெழுந்தோடா மை- சித்தசாஞ்சல்லியமில்லாமையுமாகிய— ஓவவிலாது- ஒழிவில்லாமல்— உடனுறை- (என) துட ன்பொருந்தியிருக்கின்ற— இக்குணங்களென்னும்- இந்தக்குணங்களென்கிற—உத்தமிகள்- உத்தமி களாகிய— சுமங்கலிகள்- சுமங்கலிஸ்திரீகள்— ஒப்பிலாதார்- சமானமில்லாதவர்கள்— பாவனையொ ன்றும்- ஏகபாவனையான— சொருபமடைந்தேற்கு- (ஆத்ம)ஸ்வரூபத்தையடைந்தவெனக்கு— என் றும்பன்னியராய்- எப்போதுமனைவியர்களாக— உளங்கவரும்- மனதைக்கிரிக்கின்ற— பாவைமார்- ஸ்திரீகளாம்(எ-று)[இ-கு-க-ம்]சடிந்தியங்களையுங்கண்டித்தாத்மஸ்வரூபத்தைத்தரிசித்ததன்சுபாவசக்தி களோடும்விளையாடிப்பரமசுகியாயிருந்தானென்பதாம். - - - - - - - - - - - ※

(௬௰) (அ-கை.) ஞானம்பெற்றுமநிச்சர்பிராரத்தகன்மசேடநீங்கும்பொருட்டு யோகம்வந்தடு த்ததையறிவிக்கத்தொடங்கிப்பிரணவவுச்சாரணமறிவித்தல். (கவி) தேங்காதுதன்வசமாய்விரிந்தபுந்தி ச்செயலாலேயிவ்வாறுதிறத்திலெண்ணி, பூங்காவிசிறிதலர்ந்தாற் போலபாதிப் புரைவிழியோன்பு ண்டரிகாதனத்திற்புல்கி, யோங்காரமேனோக்குந்தோணியதானவுத்தமநீண்முழக்காலே யுச்சரித்தான், பாங்காகநாவறையுமணியினூடுபயின்றுதடையற்றோசைபடர்வதேபோல். (இ-ள்) தேங்காது- அலை யாமல்— தன்வசமாய்விரிந்த- தன்வசப்பட்டுவியாபித்த—புந்தி- புத்தியினது— செயலால்- தொழி லினல்— இவ்வாறு- இத்தப்ரகாரம்— திறத்திலெண்ணி- வலிமையாகச்சிந்தித்து—பூங்காவி- கருங்கு வளைப்புட்பமானது— சிறிதலர்ந்தாற்போல- கொஞ்சம்விகசிதமானதுபோல— பாதிப்புரைவிழி யோன்- பாதிதிறந்தவிழியையுடையவனுய்— புண்டரிகாதனத்திற்புல்கி- பத்மாசனத்திலிருந்து— ஓ ங்காரம்- பிரணவத்தை—மேனோக்கும்- மேனோக்கிய— தோணியதான- ஒலியதான—உத்தமன்-உத் தமனுனவுத்தாலகன்— நீண்டமுழக்கால்- உயர்நதசத்தத்தினல்—பாங்காக- உரிமையாக— நாவறையு மணியினூடு- நாவானதடிக்கப்பட்டமணிக்குள்—பயின்று- கூடி—தடையற்று- தடையில்லாமல்— ஓசைபடர்வதேபோல்- சத்தமெழும்பினதுபோல— உச்சரித்தான்- உச்சரித்தான்—(எ-று) - ※

(௬௧) (அ-கை.) பிரணவத்தின்முதற்கூறுனவகரத்தையுச்சரித்தல். (கவி) சான்றபிரணவமோது மவன்றன்சித்துதற்பதத்தைநோக்குதலுந்தன, யோங்கார, மூன்றறவெவ்வளவுமேலுற்றுநின்றதுயர்ந்த கன்றுவிமலமாமுணர்வின்கண்ணே,மூன்றனமாத்திரையுடையபிரணவத்தின்முற்கூறுவெனயாகமுழ ங்கியெங்குமான்றபிராணங்கடொனிகளப்புமெய்யிலழகிதாய்க்கிளர்ந்தோங்கியதிருமெல்ல. (இ-ள்.) சான்றபிரணவம்- ஞான(ஸ்வரூபமாகிய) பிரணவத்தை— ஓதுமவன்றன்சித்து- உச்சரியாநின்றவுத்தா லகமுனியின்ஞானமானது—தற்பதத்தைநோக்குதலும்- பிரணவஸ்வரூபமானபிரமத்தைப்பார்க்கவும்— தன,யோங்காரம்- தனிமையானபிரணவமானது—ஊன்றற-சார்பில்லாமல்— எவ்வளவும- எந்தமட்டு ட—மேலுற்றுநின்றது- உயர்ந்துநின்றதோ (வந்தமட்டும்) —உயர்ந்து- உயர்வாகவும— அகன்று-

வியாபகமாகவும்— விமலமாமுணர்வின்கண்- நிருமலமாகவுமிருக்கின்றஞானத்தினிடத்தில்— மூன்றமாத்திரையுடைய- மூன்றமாத்திரையையுடையதாகிய— பிரணவத்தின்முற்கூறு- பிரணவஸ்வரூபத்தின் (அகராத்மகமான) முதற்பங்கு— வெளியாகமுழங்கி- வெளிப்படவொலித்து— எங்கும்- எவ்விடத்தும்— ஆண்டபிராணங்கள்- மாக்ஷிமைப்பட்டபிராணவாயுக்கள்— தொனிகிளப்பும்- சத்தத்தையெழுப்புகின்ற— மெய்யில்- சரீரத்தில்— அழகிதாய்- அழகாக— கிளர்ந்தோங்கி- மிகவும்ப்ரகாசித்து — அதிருமெல்லை- வொலிக்கின்றகாலத்தில்— (எ-று) - - - - - - - - ✻

(சஉ) (அ-கை.) (இ-து.) (கவி) இன்னுயிரைப்புறத்தகற்றவல்லதானவிரேசகப்பேர்கிரமந்தானியாக்கைமுற்றுங், கொன்றுபாழாக்கினதானிறைந்துயர்ந்தகும்பமுனிகுரைகடலைக்குறைத்ததேபோற், பின்னமில்சிற்சுவைநிறைந்த வாகாசத்திற்பிராணனிறைந்துளவிதயப் பெருந்தீமண்டி, அன்னவுடன்முழுதுமெரித்துளதோங்காரத்தாதியாங்கிரமத்திலவத்தையீதே (இ-ள்.)இன்னுயிரை- இந்தப்பிராணவாயுவை— புறத்தகற்றவல்லதான- புறம்பினீக்கவல்லமையாகிய— இரேசகப்பேர்- இரேசகமென்னுநாமமுடைய— கிரமந்தான்- கிரமமானது— இயாக்கைமுற்றும்- சரீரமெல்லாவற்றிலும்— நிறைந்துயர்ந்த- நிறைந்துயர்ந்திருக்கின்றது— கும்பமுனி- அகத்தியமுனியானவர்— குரைகடலை- சத்திக்காநின்றசமுத்திரத்தை— குறைத்ததுபோல்- (ஆசமனஞ்செய்து)பாழாக்கினதுபோல— கொன்றுபாழாக்கினது- கொன்றுபாழாக்கினது— பின்னமில்- பிரிவில்லாத— சிற்சுவைநிறைந்த- ஞானவிரசநிறைந்திருக்கின்ற— ஆகாசத்தில்- (பிர) மாகாயத்தில்— பிராணனிறைந்துள- பிராணவாயுவுநிறைந்திருந்தன— இதயம்- இருதயமென்னும்— பெருந்தீமண்டி- பெரியவக்கினிநிறைந்து—அன்னவுடன்முழுதுமெரித்துளது- அந்தச்சரீரமியாவையுமெரித்திருக்கின்றது— ஓங்காரத்து- பிரணவத்துக்கு— ஈதே- இதுவே— ஆதியாங்கிரமத்திலவத்தை- முந்தினகிரமத்தினவத்தையாம்— (எ-று.) [இ-ரு-க-ம்] ஞானதிருஷ்டியிலிருந்துச்சரித்த வகரநாதமானதுவெளிப்பட்டுப்பிராணநாதஞ்சரீரமுழுதுநிறைந்து சத்திக்குஞ்சமயத்தி விரேசகக்கிரமத்திற்சிதாகாயத்திற் பிராணநிறைந் திதயத்தி லுண்டானஞானக்கினியாற் சரீரமுழுதுமெரித்ததென்பதாம். - - - - - - - - - - - ✻

(சங) (அ-கை) பிரணவத்தினிரண்டாங்கூறானஉகாமுச்சரித்தல் (கவி) அவ்வவத்தைவேண்டளவு நிகழ்ந்ததன்றேவடையோகத்தாலல்லவடையோகந்தான், வெவ்விடர்நல்குவதன்றேவதற்குப்பின்புவியனோங்காரத்தினதுவேற்றுக்கூறு, தவ்வலறச்சமநிலையாமவதரத்திற்சலன மிலாக்கும்பகப்பேர்தரிக்கப்பட்ட,வெவ்வமுறுமகிரமமுளதானதன்றேயியம்பியவிப்பிராணன்களெல்லாற்றிற்கும்,(இ-ள்) அவ்வவத்தை- அந்தரேசகாவத்தையானது— வேண்டளவும்- வேண்டியமட்டும்— நிகழ்ந்தது- ப்ரகாசித்ததேயன்றி— அடையோகத்தாலல்ல- அடையோகத்தினாலல்லவாம்— அடையோகந்தான்- அடையோகமானது— வெவ்விடர்நல்குவதன்றே- கொடியதுன்பத்தைக்கொடுக்கின்றதல்லவா— அதற்குப்பின்பு- அதன்பின்பு— வியனோங்காரத்தினது- பெருமைபொருந்தியபிரணவத்தினுடைய— வேற்றுக்கூறு- இரண்டாவதாகியவுகரத்மகமானபங்கு—தவ்வலற- தடையில்லாமலிருக்கின்ற—சமநிலையாமவதரத்தில்- சமநிலையானவவசரத்தில்—சலனமிலா- அசைவில்லாத—கும்பகப்பேர்- கும்பகமென்னும்பெயரை— தரிக்கப்பட்ட- இடப்பட்ட—எவ்வமுறுகிரமம்- தனித்தகிரமமானது— இயம்பியவிப்பிராணன்களெல்லாற்றிற்குமுளதானது- கூறுமிந்த பிராணவாயுவானசகலத்திற்குமுண்டானது(எ.-று)

(சச) (அ-கை) இ-து. (கவி) புறத்தகத்துங்கீழ்மேறிக்காகாசத்திற்புரிந்தசையாப் பிராணன்கள் புரணமாகித், துறத்துருத்தியிடைதடைப்பட்டனபோனின்றுதோன்றிமுதலேயுடலைச்சுட்டவங்கி, நிறத்தவிடிபோற்கணத்திலவிந்ததன்றேநீகாரவெளிறெனவெண்ணீறாயங்க, முறத்தெரிந்ததாலதற்கேவுடலென்பெல்லாமொழுங்காகத்தோன்றிநரம்புடனேநின்ற (இ-ள்) புறத்து- புறம்பிலும்— அகத்து-ம் உள்ளிலும்—கீழ்- கீழிலும்—மேல்-மேலிலும்—திக்கு- திசைகளிலும்— ஆகாசத்தில்- ஆகாயத்திலும்— புரிந்தசையா- முயற்சித்தசையாத— பிராணன்கள்- பிராணவாய்வுக்குளானவை— புரணமாகி- பூரணமாகி—துறத்துருத்தியிடை- குவிந்திருக்கின்றதுருத்தியினிடத்தில்— தடைப்பட்டனபோல்- தடைபட்டவைபோல— நின்று- நிலையாயிருந்து— தோன்றி- உண்டாகி— முதல்- முதன்மையாக— உடலைச்சுட்டவங்கி- சரீரத்தையெரித்தவக்கினியானது— நிறத்தவிடிபோல்- ப்ரகாசத்தினையுடையவிடியைப்போல— கணத்திலவிந்தது- க்ஷணநேரத்திலணைந்தது— நீகாரவெளிறென- பனியினதுவெண்மையைப்போல—அங்கம்வெண்ணீறாய்- சரீரமானதுவெண்ணீறாகி—உறத்தெரிந்ததால்- நன்றாகத்தெரிந்தபடியினால்—அதற்கு- அச்சரீரத்துக்கு—உடலென்பெல்லாம்- சரீரமுமஸ்திகளனைத்தும்— ஒழுங்காகத்தோன்றிநரம்புடனேநின்ற- வரிசையாகத்தோற்றிநரம்புகளுடனிருந்தது(எ-று)

(சரு) (அ-கை.) இ-து. (கவி) சுகமாயகருப்பூரப் பாயறன்னிற் றுயில்வதுபோ லெலும்புநிரைதோன்றிற்றன்றே, மிகமோதுபவனத்தாலந்தநீறுவிசைந்தெழுந்துகணப்போதில்விசும்பைச் சுற்றித், திகழ்வானசரற்காலந்தன்னின்மேகஞ்செறிபனிப்போலோரிடத்திற் சென்றுசேர்ந்து, விகலாதவிவ்வவத்தைவேண்டுமட்டுமியலோங்காரத்திரண்டாங்கிரமத்தெய்த (இ-ள்)சுகமாய- சுகமாயிருக்கின்ற— கருப்பூரப்பாயறன்னில்- கருப்பூரசயனத்தில்— துயில்வதுபோல்- நித்திரைசெய்வதுபோல— எலும்புநிரைதோன்றிற்று- அஸ்தியின்வரிசைதோற்றினது— மிகமோதுபவனத்தால்- மிகவுமடிக்கின்றகாற்றினால்— அந்தநீறு- அந்நீறானது—விசைந்தெழுந்து- வேகமாகக்கிளம்பி—கணப்போதில்- க்ஷணநேரத்தில்— விசும்பைச்சுற்றிற்று- அகாயத்தைச்சுற்றிக்கொண்டது— திகழ்வானசரற்காலந்தன்னில்- ப்ரகாசமாகியசரற்காலத்தில்— செறிமேகப்பனிப்போல்- செறிந்தபனிமேகத்தைப் போல— ஓரிடத்திற்சென்றுசேர்ந்த- ஓரிடத்திற்போய்ச்சேர்ந்தன— இகலாதவிவ்வவத்தை- எதிரில்லாதவிந்தவவத்தையை— வேண்டுமட்டும்- வேண்டுகின்றபரியந்தம்— இயலோங்காரத்து- இயல்பையுடையபிர

ணவத்தின்— இரண்டாங்கிரமத்தெய்த- இரண்டாவதானகிரமத்திலடைய— (எ-று.) [இ-கு-க-ம்] இரண்டாவதான வுகரநாசமான துசமமாய்நிறைந்து பிராணன்கும்பகமாய்ச் சரீரமுழுதுநிறைந்தக்கினியையவித்துவெண்ணீறுவடிவமாயஸ்திரம்புசாடை தோன்றச்செய்தந்நீற்றையெழுப்பிச் சிதாகாயத்திற்சேர்த்ததென்பதாம். - - - - - - - - - - - - - - - - - *

(சகூ) (அ-கை) பிரணவத்தின்மூன்றாங்கூறான மகரமுச்சரித்தல் (கவி) அவத்தையிதுநிகழ்ந்ததடையோகத்தன்றாலடையோகம்பேரிடரையளிப்பதன்றே, வவற்றினிற்பின்பிரணவத்தின்மூன்றாங்கூறாயமையுமுபசாந்திதருமவதரத்தி, லுவப்புறுபூரணத்தாலேபூரகப்பேருளகிரமம்பிராணன்கட்குண்டாயிற்றன்றே, யுவத்திரமிலாவந்தவவதரத்திலுயிரெல்லாமுணர்வினமுதத்துட்புக்க (இ-ள்) இதுவவத்தைநிகழ்ந்தது- இந்தவவத்தைப்ரகாசித்தது— அடையோகத்தன்று- அடையோகத்தினலல்ல— அடையோகம்- அடையோகமானது— பேரிடரையளிப்பதன்றே- மகாதுன்பத்தைக்கொடுக்கின்றதல்லவா— அவற்றினிற்பின்- அதற்குப்பின்பு—பிரணவத்தின்- பிரணவத்தினது—மூன்றாங்கூறாய்- (மகராத்மகமான) மூன்றாங்கூறாகி— அமையுமுபசாந்திதரும்- அமைவானவுபசாந்தத்தைக் கொடாநின்ற— அவதரத்தில்- அவசரத்தில்— உவப்புறுபூரணத்தால்- பொலிவுள்ளபூரணத்தினால்— பூரகப்பேருளகிரமம்- பூரகமென்னுநாமமுள்ளகிரமமானது— பிராணன்கட்குண்டாயிற்று- பிராணவாய்வுகளுக்குண்டானது— உவத்திரமிலா- வருத்தமில்லாத— அந்தவவதரத்தில்- அந்தச்சமயத்தில்— உயிரெல்லாம்- பிராணன்களனைத்தும்—உணர்வினமுதத்துட்புக்க- அறிவினமுதத்துட்போயின (எ-று)

(சஎ) (அ-கை) இ-து. (கவி) உகுபனிதோயந் தாலொப்பவதிசீதத்தையுற்றபிராணன்களெலாமொழுங்கினலே, ககனமுறுபுகைதண்காராகுமாப்போற்ககன நடுவுறமதியாய்க்கலையின்கூட்ட, மிகவுநிறைந்தந்தமதிமண்டலத்தில்வியன்சுதைதாரையை யுயிர்கண்மேவப்பெற்ற, நிகழ்விசும்பினின்றிழிந்தவமுதாரைசேடமாமுடனீற்றிற் சென்றுவீழ்ந்த, (இ-ள்) உகுபனிதோய்ந்தாலொப்ப- சொரிகின்றபனியிற்குளித்ததற்குச்சமானமாக— அதிசீதத்தை.. அதிசுசீதளத்தை— உற்றபிராணன்களெலாம்- பொருந்தியபிராணவாய்வுகளனைத்தும்—ஒழுங்கினல்- முறைமையினல்— ககனமுறுபுகை- ஆகாயத்திற்பொருந்திய தூமமானது—தண்காராகுமாப்போல்- குளிர்ந்தமேகமானதுபோல—ககன நடுவுற- ஆகாயமத்தியிற்பொருந்த—மதியாய்-சந்திரமண்டலமாய்— கலையின்கூட்டமிகவுநிறைந்து-கலையின்கூட்டமானதுமிகவுநிறைந்திருக்கின்ற— அந்தமதிமண்டலத்தில்- அச்சந்திரமண்டலத்தில்—வியன்சுதைதாரையை- பெருமைபொருந்தியவமுததாரையை— உயிர்கண்மேவப்பெற்ற- பிராணன்கள்பொருந்தப்பெற்ற—திகழ்விசும்பினின்று- ப்ரகாசிக்கின்றவாகாயத்திலிருந்து—இழிந்தவமுததாரை- இறங்கியவமுததாரையானது— சேடமாமுடனீற்றின்- மிஞ்சினசரீரச்சாம்பிலில்—சென்றுவீழ்ந்த- போய்விழுந்தது— (எ-று) - - - - - - - - - - - *

(சஅ) (அ-கை.) இ-து (கவி) அரன்சிரநின்றிழியமுதகங்கைபோன்றவமுததாரையினலேயமலமாகிக்,கரங்களொருநான்குடன்வெண்மதித்தேசாகிக்கருணைமால்வடிவென்னக்காணலாகி,யுரங்கிளருத்தாலகன்மெய்தோன்றிற்றன்றேவுயரமுதமயமானவுயிர்களெல்லாங், குரம்பையதுதனைநிறைத்துச்சூழ்ந்துள்ளானகுண்டலிமற்றனைப்பூசைகுயிற்றிநின்ற (இ-ள்) அரன்சிரநின்றிழி- சிவனதுசிரசிலிருந்திறங்காநின்ற— அமுதகங்கைபோன்ற- தேவகங்கையையொத்த— அமுததாரையினல்- அமுதவருடத்தினல்— அமலமாகி- களங்கமில்லாததாய்— கரங்களொருநான்குடன்- ஒப்பற்றசதுர்ப்புயங்களோடும்— வெண்மதித்தேசாகி- வாலிதானசந்திரப்ரகாசமாய்— கருணைமால்வடிவென்ன- கிருபையையுடையதிருமால்வடிவத்தைப்போல— காணலாகி- காணத்தக்கதாய்— உரங்கிளருத்தாலகன்- பலமாகப்ரகாசிக்கின்றவுத்தாலகமுனியின்— மெய்தோன்றிற்று- சரீரந்தோன்றினது— உயரமுதமயமான- மேலானவமுத மயமாகிய— உயிர்களெல்லாம்- பிராணன்களனைத்தும்— குரம்பையதுதனை- அந்தச்சரீரத்தை— நிறைத்து- நிறைவித்து— சூழ்ந்து- வியாபித்து—உள்ளானகுண்டலிமற்றினை- உள்ளேயிருக்கின்றகுண்டலிசத்தியை— பூசைகுயிற்றி- ஆராதனைசெய்து— நின்ற- (சுற்றிநின்றன)— (எ-று) [இ-கு-க-ம்.] உபசாந்திமயமானமகரநாதமானதுநிறைந்துபிராணன்பூரகத்தினல்வாய்வுகளறிவின்முகத்திற்செல்லக்குளிர்ச்சியடைந்த பிராணவாய்வுகள்சிதாகாயத்திற்கலைகணிறைந்தஞானசந்திரனுயதிலுண்டானவமுதமிறங்கித்தேசத்தைநனைக்கச்சுவேதவடிவமா யதிலமுதமயமானபிராணனிறைந்துகுண்டலிசத்தியைப்பூசைசெய்ததென்பதாம் - - - - - - - - - - - - - - - - *

(சகூ) (அ-கை) பஞ்சபூதகாரியமானவுடலைப்பிரணவத்தாற்கெடுத்து ஞானவடிவமாக்கிப்பாகியவிடயங்களையுமதிற்செல்லுமனத்தையுமப்படியேகெடுக்கத்தொடங்கல் (கவி) இத்திறத்திற்பங்கயவாதனத்திருந்தோனியாக்கைநிலையழியாமலியற்றிப்பின்னர், மத்தமுறுபிரமரம்போற்சுழலுநெஞ்சைவன்பிணற்றகைவுற்றான்மௌனியாகி,மெத்துபிராணபானவேகநோக்கிமெல்லெனவுண்டாக்கினன்வல்விடயநின்று, தத்துபொறிகளைவருந்திவேறுசெய்தான்சற்றுமறப்புறப்பரிசந்தள்ளினனே. (இ-ள்) இத்திறத்தில்- இப்ரகாரத்தால்— பங்கயவாதனத்திருந்தோன்- பத்மாசனத்திலிருந்தவுத்தாலகமுனியானவர்— ஆக்கைநிலையழியாமல்- தேகஸ்திதிகெடாமல்— இயற்றி- செய்து— பின்னர்- பின்பு— மத்தமுறுபிரமரம்போல்- மதமுள்ளவண்டைப்போல— சுழலுநெஞ்சை- சுழலாநின்றமனதை— வன்பிணற்றகையுற்றான்- பலத்தினற்றடுத்தான்—மௌனியாகி- மௌனத்தையுடையவனாய்— மெத்துபிராணபானவேகநோக்கி- மிருதுவானபிராணபானன்களுடையவேகத்தை(முகத்திற்) பார்த்து—மெல்லெனவுண்டாக்கினன்- சவுமியமாகச்செய்தான்— வல்விடயநின்றுதத்துபொறிகளை- வலியவிடயத்தினின்று— தாவுமிந்திரியங்களை— வருந்திவேறுசெய்தான்- வருத்தப்பட்டுவேறுபடுத்தினன்— சற்றுமற- எவ்வளவேனுமில்லாமல்— புறப்பரிசந்தள்ளினன்- புறம்பிலுள்ளவிடயத்தைநீக்கினன்— (எ-று) *

(௫௰) (அ-கை) மூலவாசன்முதனவத்துவாரபந்தனஞ்செய்துஅந்தாவிடயங்களைத்தள்ளிமனதையிதயாம்பரத்திலடக்கல் (கவி) பற்றறுதிண்ணியமதியோனுள்ளேதோன்றும்பரிசமெலாந்தள்ளுகின்றபார்வையாலே, யற்றனவாக்கினன்மூலவாயல்செம்மியங்கத்தொன்பதுவாயலனிலமெல்லாங், குற்றமறமுசமடைத்தாற்புறத்துவாரங் கும்பத்துக் கடைபடல்போற் குறித்தடைத்தா, னுற்றலயமெனுங்குணத்தைச்சேர்ந்தநெஞ்சையுயரிதயவாகாயத்தொடுக்கினனே. (இ-ள்) பற்றறு- பற்றற்ற— திண்ணியமதியோன்- திடமுள்ளவறிவையுடையவுத்தாலகன்— உள்ளேதோன்றும்- உள்ளத்திற்றோற்றுகின்ற— பரிசமெலாம்- விடயங்களனைத்தையும்— தள்ளுகின்றபார்வையால்- நீக்குகின்றதிருஷ்டியினுல்— அற்றனவாக்கினன்- இல்லாததாகச்செய்தான்— மூலவாயல்செம்மி- மூலவாசலையடைத்து— அங்கத்தொன்பதுவாயல்- சரீரத்தினவத்துவாரங்களிலுள்ள— அனிலமெல்லாம்- வாய்வுகளனைத்தையும்— குற்றமறமுசமடைத்தால்- குற்றமின்றிமுகவாசலையடைத்தால்—புறத்துவாரங்கும்பத்துக்கடைபடல்போல்- புறத்துள்ளதுவாரங்கள்கடத்துக்கடைபடுகின்றதுபோல— குறித்தடைத்தான்- மதித்தடைத்தான்—உற்றலயமெனுங்குணத்தை- பொருந்தியவிறந்ததென்னுந்தன்மையை— சேர்ந்தநெஞ்சை- சார்ந்தமனதை— உயரிதயவாகாசத்தொடுக்கினுன்- மேலானவிதயாகாயத்திலடக்கினுன்— (எ-று) *

(௫௧) (அ-கை) இதயாம்பரத்தினின்றுமனேசங்கற்பமியாவையுங்கெடுத்தல் (கவி) உரத்தமதகரியையுபாயத்தால்விந்தத்துட்குழியிற்சேர்ப்பதுபோலொடுக்கிநெஞ்சை, சரற்ககனம்போனிமலதெளிவைச்சேர்ந்துதள்ளினுன்பற்றிபாய்தன்மையாலே, வரத்துடையவிகற்பமெலா மீளமீளவருவனவேண்டினபடியேவந்துதோன்ற, பரப்புறுதோற்றங்களை வன்னெஞ்சான்மாய்த்தான் பகைவளைவாளாற்சூரன்படுப்பதேபோல். (இ-ள்) உரத்தமதகரியை- பலத்தையுடையமதயானையை— உபாயத்தால்- தந்திரத்தினுல்— விந்தத்துட்குழியில்- மலையிலுள்ளபடுகுழியில்— சேர்ப்பதுபோல்- சேர்ப்பதுபோல— நெஞ்சையொடுக்கி- மனதையடக்கி— சரற்ககனம்போல்- சரற்ககாலத்தாகாயம்போல— நிமலதெளிவைச்சேர்ந்து- நிருமலமானதெளிவையடைந்து—பற்றிபாய்தன்மையால்- ப்ரதிபலிக்கின்றகுணத்தினுல்— வரத்துடையவிகற்பமெலாம்- உதித்துக்கொண்டிருக்கின்றவிகற்பங்களியாவையும்— தள்ளினுன்- நீக்கினுன்— மீளமீள- திரும்பத்திரும்ப— வருவன- வரத்தக்கன— வேண்டினபடியே- வேண்டியப்ரகாரமே— வந்துதோன்ற- வந்துண்டாக—பகைவளை- சத்துருக்களை—வாளால்- கத்தியினுல்— சூரன்படுப்பதேபோல்- வீரன்கொல்லுவதுபோல—வன்னெஞ்சால்- கொடியமனதினுல்— பரப்புறுதோற்றங்களை- விரிந்தவிடயங்களை— மாய்த்தான்- கெடுத்தான்— (எ-று) - - *

(௫௨) (அ-கை) சமாதிக்கண்டோற்றினவைந்தவத்தையையுங்கெடுத்தல் (கவி) விகற்பமெலாமிறத்தலுமேயிதயவிண்ணில்விவேகபானுவைமறைத்துவிரிந்தகங்குல், சகத்தினினுளஞ்சனத்தின்பார்த்தப்போதேதன்னுள்விவேகத்தாலேதவிர்த்தானத்தை, யகத்திருணன்றுய்க்கெடலுஞ்சுடர்வந்தெய்தவம்முனிவனதனையுங்கண்டகற்றிமாய்த்தான், நிகழ்ச்சியொளி யகலுதலுஞ்சுழன்றுநெஞ்ச நிசியினடுப்போலுறக்கநேர்ந்ததன்றே. (இ-ள்) விகற்பமெலாமிறத்தலும்- விகற்பங்களனைத்துமிறந்தவுடன்— இதயவிண்ணில்- இதயாம்பரத்தில்— விவேகபானுவை- விவேகசூரியனை— சகத்தினினுளஞ்சனத்தின்- உலகத்திலுள்ளமையைப்போல— மறைத்துவிரிந்தகங்குல்- மூடிப்பரந்தவந்தகாரத்தை— பார்த்தப்போது- பார்த்தவப்பொழுதே— தன்னுள்விவேகத்தால்- தனக்குள்விளங்கியவிவேகத்தினுல்— அத்தைத்தவிர்த்தான்- அவ்விருளைக்கெடுத்தான்— அகத்திருள்- உள்ளத்தின்கண்ணுள்ளவிருளானது— நன்றுய்க்கெடலும்- நன்றுய்நசித்தமாத்திரத்தில்— சுடர்வந்தெய்த- ப்ரகாசம்வந்தடைய— அம்முனிவன்- அந்தமுனிவன்— அதனையுங்கண்டு- அவ்வொளியையும்பார்த்து— அகற்றிமாய்த்தான்- நீக்கிக்கெடுத்தான்— நிகழ்ச்சியொளியகலுதலும்- ப்ரகாசமுள்ளவொளிநீங்குதலும்— நெஞ்சஞ்சுழன்று- மனஞ்சுழல்வுற்று— நிசியினடுப்போலுறக்கநேர்ந்தது- அர்த்தசாமம்போனித்திரையடைந்தது— (எ-று) *

(௫௩) (அ-கை) இ-து (கவி) போகாததுயிலினையுமறுத்தான் றூக்கம்போக்குதலுமாகாசபோதம்வந்த, தாகாசபோதமழிந்திடலும்வல்லைபவன்மன மோகஞ்சேர்ந்தவந்தமோக, நோகாமன்மனத்தினைவிட்டேகுமாறுநாக்கினுன்பேரிதயநோக்குமிக்கோ, னேகாதவிரவுதரு மந்தகாரமிவ்வுலகினின்றகற்றுமிரவிபோல. (இ-ள்) போகாததுயிலினையும்- நீங்காதநித்திரையையும்— அறுத்தான்- கெடுத்தான்— தூக்கம்போகுதலும்- நித்திரைநீங்கவும்— ஆகாசபோதம்வந்தது- சூனியவாகாசஞானம்வந்தது— ஆகாசபோதமழிந்திடலும்-(அவ்)வாகாயஞானமழிந்தமாத்திரத்தில்— அவன்மனம்- அவன்மனது— வல்லை- சீக்கிரமாக— மோகஞ்சேர்ந்தது- மோகத்தையடைந்தது— அந்தமோகம்- அம்மோகமானது— நோகாமல்- வருந்தாமல்—மனத்தினைவிட்டேகுமாறு- மனதைவிட்டுநீங்கும்படி— பேரிதயநோக்குமிக்கோன்- மேலானவாநந்ததிருஷ்டிமிகுந்தவுத்தாலகமுனியானவர்— ஏகாத- நீங்காத— இரவுதருமந்தகாரம்- இராவைக்கொடுக்கின்றவிருளை— இவ்வுலகினின்று- இந்தவுலகத்தின்கணின்று— அகற்றுமிரவிபோல- நீக்குகின்றசூரியனைப்போல— நூக்கினுன்- தள்ளினுன்— (எ-று) [இ-உ-க-ம்] சமாதியின்மனேவிகறப நீங்கினபின்னந்தகாரந்தோன்றவதனை ஞானதிஷ்டியாற்கெடுத்தபின்ப்ரகாசந்தோன்றவதனைச்சுயம்ப்ரகாசத்தாற்கெடுத்தபின்சுழுத்திதோன்றவதனைநனவிற்சுழுத்தியாற்கெடுத்தபின்சூனியாகாயபோதந்தோன்றவதைச்சிதாகாயத்தாற்கெடுத்தபின் மூலாங்காரமானமோகந்தோன்றவதைப்பரிபூரணதிஷ்டியாற்கெடுத்ததென்பதாம். - - - - - - - - - - - - - - *

(௫௪) (அ-கை) மனஞ்சைதன்யத்தையடைதல். (கவி) அன்னகாலையிலிருள் சுடர் துயில்மயக்கனைத்தையுமறுத்தோட்டி, மன்னுமோரவத்தையையடைந்தொருகணம்வருத்தமாறியதுள்ள, மின்னதீர்த்துடனேயனைத்துருவமாமறிவையெய்தியதன்றே, நன்னெடுங்கனைதடுக்க நின்றெதித்துமுற்றலநிறைந்திடுநீர்போல். (இ-ள்) அன்னகாலையில்- அத்தன்மையானகாலத்தில்— இருள்- இருட்டும்— சுடர்-

ப்ரகாசமும்— துயில்- நித்திரையும்— மயக்கம்- மோகமுமுதலான— அனைத்தையுமறுத்தோட்டி-சகலத்தையுமறுத்துத்துரத்தி-- மன்னும்- நிலைபெற்ற— ஒரவத்தையையடைந்து- ஒப்பற்ற (நிருவிகற்ப) சமாதியையடைந்து— ஒருகணம்- ஒருக்ஷணநேரம்— உள்ளம்- மனமானது— வருத்தமாறியது- விஸ்ராந்தியடைந்தது— இன்னநீர்ந்துடன்- துன்பம்விட்டவுடன்— அனைத்துருவமாம நிவை- சகலவடிவங்களாய்ப்ரகாசிக்கின்றஸ்வரூபஞானத்தை— நன்னெடுங்கனாதடுக்க- நன்மைபொருந்தியநீண்டவணைதடுக்க— நின்றெதிர்த்து- நின்றெதிர்வுற்று— முற்றலநிறைந்திடுநீர்போல்-முன்னுள்ளவிடத்தினிறைகின்றசலத்தைப்போல— எய்தியது- அடைந்தது— (எ-று) முதலியவென்றதனுல் முன்னடுக்கிலுள்ள ஆகாயபோதமுங்கூட்டுக. - - - - - - - - - ※

(௫௫) (அ-கை) மனஞ்சின்மாத்திரமாதல். (கவி) விஞ்சுநீள்பகற்பரிசயத்தாலுந்தன்மெய்யறிவுணர்வாலும், நெஞ்சுசின்மயமடைந்ததாலிரணியநிகழ்சிலம்பாமாபோல், வஞ்சவன்மனத்தன்மைபோய்ச்சின்மயமனந்தீர, செஞ்செவ்வேவல்லைவேற்றுமையானதாற்சேற்றினுட்குடமென்ன. (இ-ள்,) விஞ்சுநீள்பகற்பரிசயத்தாலும்- மிகுந்தவெகுகாலப்பழக்கத்தினுலும்— தன்மெய்யறிவுணர்வாலும்- தனதுண்மைஞானத்தினனுபவத்தினுலும்— இரணியம்- தங்கமானது— நிகழ்சிலம்பாமாபோல்- ப்ரகாசிக்கின்றநூபுரமானதுபோல—நெஞ்சுசின்மயமடைந்தது-மனதுஞானகாரமடைந்தது— வஞ்சவன்மனம்-வஞ்சகமும்வலிமையுமுள்ளமனதின்—தன்மைபோய்-குணநீங்கி—சின்மயமருவியமனம்—சின்மயத்தையடைந்தமனமானது—தீரச்செஞ்செவ்வே-மிகவுஞ்செவ்விதாக—சேற்றினுட்குடமென்ன-பங்கத்தினுள்ளிருந்தகடத்தைப்போல—வல்லைவேற்றுமையானது-சீக்கிரமாகச்சித்தானது(எ-று)

(௫௬) (அ-கை.) முனிபூரணஞானத்தையடைதல் (கவி) தங்குகாட்சிவிட்டமலமாய்ஞானத்தின்சமமடைந்ததுபோதம், பொங்குவாரிதிதிரைமுதற்பகிர்ச்சிபோய்ப்புனல்சமமடைந்தன்ன, வெங்குமோர்மதியாயறிவுற்றவனீறில்போகத்தெண்ண, மங்கியாண்டண்டம்பரித்துயர்ந்தமலசின்மயவிசும்புருவானுன். (இ-ள்) தங்குகாட்சிவிட்டு- தங்காநின்ற (விடயக்) காக்ஷியைவிட்டு— அமலமாய்- நிருமலமாய்—ஞானத்தின்சமம்-சிற்சாமானியத்தை—பொங்கும்வாரிதி- பொங்காநின்றசமுத்திரசலமானது—திரைமுதற்பகிர்ச்சிபோய்-அலைமுதலானபகுப்புகணீங்கி—புனல்சமமடைந்தன்ன- சலமானதுசாமானியமடைந்ததுபோல—போதம்-ஞானமானது—அடைந்தது-சேர்ந்தது—எங்குமோர்மதியாய்-எவ்விடத்திலுமொப்பற்றஞானமாய்— அறிவுற்றவன்- ஞானத்தையடைந்தவுத்தாலகமுனியானவன்— ஈறில்போகத்தெண்ணமங்கி- அளவற்றபோகசிந்தனைவிட்டு— ஆண்டு- அவ்விடத்தில்— அண்டம்பரித்து- அண்டங்களைத்தாங்கி— உயர்ந்து- மேலானவியாபகமாய்— அமலம்- நிருமலமான— சின்மயவிசும்புருவானுன்- ஞானகாயவடிவமானுன்— (எ-று) - - - - - - ※

(௫௭) (அ-கை) முனியாநந்தசாகரமாய்ச்சத்தாசாமானியமாதல் (கவி) அவ்விடத்தினிற்காண்பதுகாட்சியற்றநந்தமாநல்லின்பஞ், செவ்வியாநந்தமுற்றனனமுதமார்தெண்கடற்குளித்தன்ன, மெய்விடக்கழன்றதீதனுயொருதலமேவினன்சதாநந்தப், பௌவமாயினனெங்கணுமொற்றசற்பாவமேவடிவானுன் (இ-ள்) அவ்விடத்தினில்- அந்தச்(சிதாகாரமான)விடத்தில்— காண்பது- திரிஸ்யமும்—காட்சி-தரிசனமும்— அற்று- இல்லாமல்—அநந்தமாம்- அளவில்லாததாகிய— நல்லின்பம்- பரமசுகத்தையுடைய—செவ்வியாநந்தம்-செவ்வையான(வனுப)வாநந்தத்தை—அமுதமார்தெண்கடல்-அமுதநிறைந்ததெள்ளியசமுத்திரத்தில்— குளித்தன்ன- முழுகினதுபோல—உற்றனன்- பொருந்தினன்—மெய்விடக்கழன்றதீதனுய்- உண்மைதவிர(மற்றவை) நீங்கியதீதத்தன்மையையுடையவனுய்—ஒருதலமேவினன்-ஒப்பற்றஞானபதஞ்சேர்ந்தான்—சதாநந்தப்பௌவமாயினன்-சதாநந்தசாகரமானுன்—எங்கணுமொத்த—எங்குநிறைந்த-சற்பாவமேவடிவானுன்-சத்தாசாமானியமேவடிவமானுன்— (எ-று)

(௫௮) (அ-கை) முனிசிதாநந்தவயிக்கியமாய்விளங்குதல் (கவி) அந்தணன்றனதறிவெனுமன்னமாநந்தமாநிலையோடை, வந்தமர்ந்தது சாற்ககனத்திலேவயங்குமாமதியென்ன, வுந்துகாற்றிலாவிளக்கெனவோவியத்துருவெனத்திரையில்லாச் சிந்துவென்னநீர்சுருக்கொண்டுபொழியலாச்சேண்முகிலெனநின்றுன் (இ-ள்) அந்தணன்றனது- உத்தாலகனென்னும்பிராமணனுடைய— அறிவெனும்- அறிவென்கின்ற— அன்னம்- அமிசமானது— ஆநந்தமாநிலையோடை- ஆநந்தமாகியநிலையானதடாகத்தில்— வந்தமர்ந்தது- வந்துபொருந்தினது— சாற்ககனத்தில்- சாற்காலத்தாகாயத்தில்—வயங்கும்- ப்ரகாசிக்கின்ற— மாமதியென்ன- பூர்ணசந்திரனைப்போலவும்— உந்து- அடிக்கின்ற—காற்றிலாவிளக்கென- காற்றில்லாததீபத்தைப்போலவும்— ஓவியத்து- சித்திரத்தினது— உருவென-வடிவத்தைப்போலவும்— திரையில்லா- அலையில்லாத— சிந்துவென்ன- சமுத்திரத்தைப்போலவும்—நீர்சுருக்கொண்டு- சலத்தைச்சூலாகக்கொண்டு—பொழியலா- வருஷியாத—சேண்முகிலென- ஆகாயத்திலுள்ளமேகத்தைப்போலவும்—நின்றுன்- (ஆத்மாவிற்றிரமா)யிருந்தான்—(எ-று.) [இ-ரு-க-ம] ஸ்வானுபவமடைந்தகிரமங்களை விபரமாயறிவித்ததாம். - - - - - - ※

(௫௯) (அ-கை) தேவர்கண்முனியைப்பரிசோதித்தல் (கவி) இந்தமிக்கபேருலகினிற்றற்பதத்திருக்குமம்முனியைக்கண், டந்தரஞ்செறிசித்தர்விண்ணவர்குழுவற்புதப்பலபேரும், வந்துசுற்றினரரம்பையர் நிரம்பினர் வாசவன றனிமுதார், தந்தளிப்பவனங்கவையனைத்தையுந்தள்ளினன்விருப்பின்றி. (இ-ள்.) இந்தமிக்கபேருலகினில்- இந்தமிகுந்தபெரிதானவுலகத்தில்— தற்பதத்திருக்கும்- பிரமபதத்திலிருக்கின்ற— அம்முனியைக்கண்டு- அந்தவுத்தாலகமுனியைப்பார்த்து— அந்தரஞ்செறி- ஆகாயத்தினெருங்கிய—சித்தர்- சித்தர்(குழூவும்)—விண்ணவர்குழு- தேவர்குழுவும்—அற்புதப்பலபேரும்- (இன்ன)அதிசயமுள்ளவநேகர்களும்—வந்துசுற்றினர்- வந்துசூழ்ந்தார்கள்— அரம்பையர்நிரம்பினர்- தேவஸ்திரீகணிறைந்தார்கள்—வாசவன்-தேவேந்திரன்—தனிமுதார்- ஒப்பற்றதெய்வலோகத்

தை—தந்தளிப்ப-தயவோடுங்கொடுக்க—அவன்-அவ்வுத்தாலகமுனியானவர்—அங்கவையனைத்தையும்-அவ்விடத்திலுள்ளவச்சகலத்தையும்—விருப்பின்றித்தள்ளினன்-விருப்பமில்லாமனீக்கினன் (எ-று)

(சுய) (அ-கை) முனியானவராநந்தபோதமாய்விளங்குதல் (கவி) அலங்கன்மாதரிங்கிதங்களைச்சைசவத்தறிகிலானெனச்சற்றுங், கலங்கலாதகெம்பீரமாமதியினன்கடவுள்வான்பேற்றெண்ணம், விலங்கியன்னதன்னுநந்தவீட்டிலேமேவினன்மதியாறு, துலங்கியோங்கியவுத்தராயனத்திலேசுடர்விடுகதிரென்ன. (இ-ள்) அலங்கன்மாதர்-மாலையையணிந்தஸ்திரீகள்— இங்கிதங்களை- இங்கிதரசங்களை— சைசவத்து- குழந்தைப்பருவத்தில்— அறிகிலானென- அறியாதவனைப்போல—சற்றும்- எவ்வளவேனும்— கலங்கலாத- கலக்கமில்லாத—கெம்பீரமாமதியினன்- ஆழ்ந்தகருத்தையுடையவுத்தாலகன்— கடவுள்வான்பேற்றெண்ணம்- தேவர்களதுமேலானபோகக்கருத்தை— விலங்கி- நீங்கி— அன்னதன்னுநந்தவீட்டில்- அத்தன்மையானதனதாநந்தவீட்டில்— ஆறுமதி- ஆறுமாதம்— உத்தராயனத்தில்- உத்தாரயனகாலத்தில்— துலங்கியோங்கிய- ஓங்கிவிளங்கிய— சுடர்விடுகதிரென்ன- ப்ரகாசிக்கின்றசூரியனைப்போல— மேவினன்- பொருந்தினன்— (எ-று.) - - - - - ※

(சுக) (அ-கை) முனியானவராநந்த போதமாய்விளங்கல். (கவி) மூவராகியமுதல்வரு மமரருமொய்த்தசித்தரும்வாழுஞ், சீவன்முத்தியாம்பதமடைந்தருந்தவன்செறியுமாநந்தத்தி, னோவவின்றியநிறைவினலாநந்தமுதிர்ச்சியாம்பதமுற்று, னுவதானபோராநந்தமதுவிலவ்வறிவினற் றிகழ்வுற்றான். (இ-ள்) மூவராகியமுதல்வரும்-முதன்மையானமும்மூர்த்திகளும்—அமரரும்-தேவர்களும்— மொய்த்தசித்தரும்- நெருங்கியிருக்கின்றசித்தர்களும்— வாழும்- வாழாநின்ற— சீவன்முத்தியாம் பதம்- சீவன்முத்தியானபதத்தை— அடைந்த- பெற்ற— அருந்தவன்- அரியதவத்தையுடைய வுத்தாலகமுனி— செறியுமாநந்தத்தின்- நிறைந்திருக்கின்றவாநந்தத்தில்— ஓவவின்றிய நிறைவினல்- ஒழிதலில்லாதபூரணத்தினல்— ஆநந்தமுதிர்ச்சியாம்பதமுற்றான்- ஆநந்தமுதிர்ந்தவதீதபதத்தை யடைந்தான்— ஆவதான- ஆவதாகிய—போராநந்தமதுவில்-போராநந்தமுமதுவில்லாததுமாகிய—அவ்வறிவினல்- அந்தஞானத்தினல்— திகழ்வுற்றான்- ப்ரகாசித்தான்— (எ-று) - - - - - - - ※

(சுஉ) (அ-கை) முனியானவராறுமாதம்ஸ்வரூபசமாதியிலிருத்தல். (கவி) ஒருகணஞ்செறிவருடநூறென்னினுமுயர்ந்தவப்பதமுற்றோர், வருபவந்தருமேதுவாய்க்காண்பனமருவுமிவ்விழிமேவார், பெருமையானவிப்பதத்திலுத்தாலகன்பிறைகளோராறாலே, யருகுறுவகைசித்திபூமியைக்கடிந்தமைந்திருந்துணர்வுற்றான். (இ-ள்) ஒருகணம்- ஒருக்ஷணநேரமானலும்—செறிவருடநூறென்னினும்- நெருங்கியநூறுவருடமானலும்— உயர்ந்தவப்பதமுற்றோர்- மேலானவப்பிரமபதத்தைப் பொருந்தினசத்துக்கள்— வருபவந்தரும்- வாராநின்றசநநத்தைக்கொடுப்பதற்கு— ஏதுவாய்- காரணமாயிருக்கின்ற— காண்பனமருவும்- விடயங்களையடையப்பட்ட— இவ்விழிமேவார்- இத்திருஷ்டியைவிரும்பார்கள்— பெருமையானவிப்பதத்தில்- மாட்சிமையானவிச்சீவன்முத்தியில்— உத்தாலகன்-உத்தாலகமுனியானவர்— பிறைகளோராறால்- ஆறுமாதங்களினல்— அருகுறுவகை- சமீபத்திற்பொருந்தாதபடி— சித்திபூமியைக்கடிந்து- சுவர்க்காதிபதப்பிராப்தியைநீக்கி—அமைந்திருந்து- (சமாதியிற்)பொருந்தியிருந்து—உணர்வுற்றான்- விழித்துக்கொண்டான்— (எ-று.) - - - - - - - ※

(சுங) (அ-கை) முனியானவர்சித்தர்கள்சோதனைக்குட்படாமை (கவி) விழித்துநோக்கினன்சித்தனையவர்களுமிக்குயரிவன்றன்னைப், பழிச்சியன்பொடுபகவவெம்பணிதல்பொன்னுலகத்தி, லிழிச்சுமிவ்விமானத்துவந்தேறுதியிந்திரபதத்தின்பங், கழித்தபூமிகளனைத்தினுமில்லதோர்கற்பமப்பயன்றுய்ப்பாய் (இ-ள்) விழித்து- கண்விழித்து—சித்தனை-சித்தர்கணங்களை—நோக்கினன்- பார்த்தனன்—அவர்களும்- அச்சித்தர்களும்— மிக்குயரிவன்றன்னை- மேலானவிவ்வுத்தாலகமுனியை—அன்பொடும்பழிச்சி- அன்புடன்றோத்திரஞ்செய்து— பகவ- பகவானே— எம்பணிதல்- எமதுவணக்கத்தை— நீகாண்டி- நீர்பாரும்—பொன்னுலகத்தில்- தெய்வலோகத்தில்— இழிச்சும்- கொண்டுபோய்விடும்—இவ்விமானத்து- இத்தெய்வவிமானத்தில்— உவந்தேறுதி- சந்தோஷித்தேறுவாய்— இந்திரபதத்தின்பம்- தேவேந்திரபதத்தின்சுகமானது— கழித்தபூமிகளனைத்தினும்- (அது) நீங்கியவுலகங்களிலெல்லாம்— இல்லது- இல்லாதது— ஓர்கற்பம்- ஒருகற்பபரியந்தம்— அப்பயன்றுய்ப்பாய்-அந்தப்ரயோசனத்தை யனுபவிப்பாய்— (எ-று) - - - - - - - - - - - - ※

(சுச) (அ-கை) இ-து. (கவி) பகவசெய்தனதவமெலாமிந்திரபதமுறற்பொருட்டேயென், றகமலர்ந்துரைபன்னியசித்தரையதிதியரெனநோக்கி, முகமலர்ந்துபூசித்தனன்மயங்கலன்முந்துறுபெருஞ்செல்வ, மிகவிரும்பலன்வெறுக்கலன்றிண்ணியோன்விபுதரோகுதிரென்றான். (இ-ள்) பகவ- பகவானே— செய்தனதவமெலாம்- செய்ததவங்களியாவும்— இந்திரபதமுறற்பொருட்டேயென்று-சுவர்க்கத்தையடையுநிமித்தமேயென்று— அகமலர்ந்து- மனமலர்ச்சியாய்— உரைபன்னியசித்தரை- சொல்லியசித்தர்களை— அதிதியரெனநோக்கி- மகான்களென்றுபார்த்து—முகமலர்ந்துபூசித்தனன்- முகமலர்ச்சியோடுபூசித்தனன்—ஆராதனைசெய்தான்— மயங்கலன்- மயங்காதவன்— முந்துறுபெருஞ்செல்வம்- முதன்மையானதேவபோகத்தை— மிகவிரும்பலன்- மிகவும்விரும்பாதவன்— வெறுக்கலன்- வெறுக்காதவன்—திண்ணியோன்- திடமுள்ளவன்— விபுதரோகுதிரென்றான்- தேவர்களேயோங்குவீரென்று சொன்னன்— (எ-று) [இ-சு-க-ம்] அமரர்போகம்விடமாமெனக்கண்டாத்மசுகத்திலமர்ந்திருந்ததாம். - - ※

(சுரு) (அ-கை) சாதுக்களோடுஞ்சஞ்சரித்தல். (கவி) மொய்த்தகூட்டத்தைவிடுத்தனன்றன்செயன்முயன்றிருந்தனன்போக, பெத்தநீங்கியவிவனையச்சித்தரும்பின்புசென்றுட்பேணிசித்தம்விட்டனர்தாங்களேயகன்றனர்சீவன்முத்தனுங்கானின், மெய்த்தமாதவரிடங்களிற்சுகத்திலேவேண்டளவுலாவுற்றான். (இ-ள்) மொய்த்தகூட்டத்தை-மிகுந்த(தேவர்)கூட்டத்தை—விடுத்தனன்- விட்டவனாய்— தன்

செயல்-தனதுகிரியையில்—முயன்றிருந்தனன்-முயற்சித்திருந்தவனைப்—போகபெத்தநீங்கிய-போகபந்தநீங்கியிருக்கின்ற—இவனை-இவ்வுத்தாலகனை—அச்சித்தரும்-அந்தச்சித்தர்களும்—பின்புசின்னாட்பேணி-பின்சிறிதுகாலமனுசரித்து—சித்தம்விட்டனர்-(வருவாரான்கின்ற)மனதைவிடுத்தார்கள்—தாங்களேயகன்றனர்-தாங்களேநீங்கினார்கள்—சீவன்முத்தனும்-சீவன்முத்தனாகியவுத்தாலகமுனியும்—கானில்-காட்டிலும்—மெய்யத்த-உண்மையான—மாதவரிடங்களில்-மாதவர்களிடத்திலுமிருந்து—சுகத்தில்வேண்டளவுலாவுற்றான்-(நிருவாண)சுகத்தில்வேண்டியமட்டுஞ்சஞ்சரித்தான்(எ-று) *

(சுசு)(அ-கை)சமாதியிலுஞ்சகசத்திலுமாயிருத்தல் (கவி)ஒருதினத்தெல்லையொருமதியெல்லைமற்றோர்வருடத்தெல்லை, பெருகுமாண்டெல்லையெல்லையோரோர்காற்பேதமிற்றியானத்தின்மருவி, யொன்றிடும்விழிக்குமந்நாண்முதல்வருந்தொழில்களிற்சேர்ந்து, நிருவிகற்பமேயாயினனொருமையாய்நின்றனன்சித்தோடும் (இ-ள்) ஒருதினத்தெல்லை-ஒருநாளளவும்—ஒருமதியெல்லை-ஒருமாதமளவும்—ஓர்வருடத்தெல்லை-ஒருவருடமளவும்—பெருகுமாண்டெல்லை-அநேகவருடமளவும்—எல்லையோரோர்கால்-அளவாகியவொவ்வொருகாலத்தில்—பேதமிற்றியானத்தில்-அபேதசமாதியில்—மருவியொன்றிடும்-கூடிக்கலக்கும்—விழிக்கும்-விழித்துக்கொள்ளும்—அந்நாண்முதல்-அந்தநாள்முதற்கொண்டு—வருந்தொழில்கள்-வராநின்றகிரியைகளில்—சேர்ந்தும்-பொருந்தியும்—நிருவிகற்பமேயாயினன்-நிருவிகற்பசமாதியாகவேயிருந்தான்—ஒருமையாய்-ஒன்றாகி—அவனெஞ்சம்-அவன்மனது—நின்றது-(ஏகத்துவத்தையடைந்து)நின்றது—(எ-று) - - - - - - - - *

(சுஎ (அ-கை) சத்தாசாமானியமாயிருத்தல் (கவி) பரந்தவுள்ளத்தினொருமையின்செறிவினைப்பழகலாற்பெருஞ்சித்து, நிரந்தரித்தெங்குஞ்சமமதாயினன்புவிநிறைவுறும்வெயிலென்னத், திரந்தருஞ்சித்தினொருமையைநெடும்பகற்செறிபரிசயஞ்செய்ய, வரந்தைதீர்ந்தசற்பாவசாமானியமடைந்தனனதனாலே (இ-ள்) பரந்தவுள்ளத்தின்-விரிந்தமனதினது—ஒருமையின்செறிவினை-(வஸ்து)வயிக்கியமானகலத்தலை—பழகலால்-பழகுதலினால்—பெருஞ்சித்துநிரந்தரித்து-பூரணஞானநிரந்தரமாகப்பெற்று—புவிநிறைவுறும்-உலகத்தினிறைந்திருக்கின்ற—வெயிலென்ன-சூரியகிரணத்தைப்போல—எங்குஞ்சமமதாயினன்-எவ்விடத்திலுஞ்சமமாயிருந்தான்—திரந்தருஞ்சித்தின்-திறத்தைக்கொடுக்கின்றசிற்சாமானியத்தின்—ஒருமையை-அயிக்கியத்தை—நெடும்பகல்-அநேககாலம்—செறிபரிசயஞ்செய்ய-மிகுந்தபழக்கஞ்செய்ய—அரந்தைதீர்ந்த-துன்பநீங்கிய—அதனால்-அதினால்—சற்பாவசாமானியமடைந்தனன்-சத்தாசமானியத்தையடைந்தான்—(எ-று) - - - - - - *

(சுஅ) (அ-கை) சுயஞ்சித்தாய்விளங்குதல் (கவி) தெரிவதாமிவற்றுதயமத்தமமுறான்சித்திரவிபோலப், பெரியதாய்ச்சமவின்பமாம்பதவியின்பேற்றினாலுபசாந்தி, புரியுநெஞ்சினன்பிறவியுமையமும்போய்ச்சரகற்ககனம்போல்,விரியுநின்மலசாந்தமெய்யொளிநிறைவேதனவடிவானான் (இ-ள்) சித்திரரவிபோல-சித்திராதித்தனைப்போல—தெரிவதாமிவற்று-சாண்கின்ற(விந்தச்சகங்)களில்—உதயமத்தமமுறான்-தோன்றிமறையாதவுத்தாலகன்—பெரியதாய்ச்சமவின்பமாம்-மகத்தாயிருக்கின்றபூரணாநந்தமான—பதவியின்பேற்றினால்-சீவன்முத்திபதத்தினதுப்ரயோசனத்தினால்—உபசாந்திபுரியுநெஞ்சினன்-உபசாந்தத்தையடைந்தமனதையுடையவனாய்—பிறவியும்-சநநமும்—ஐயமும்போய்-சந்தேகமுநீங்கி—சரகற்ககனம்போல்-சரற்காலத்தாகாயம்போல—விரியுநின்மலசாந்தம்-வியாபகமாயிருக்கின்றமாசற்றவுபசாந்தமான—மெய்யொளிநிறை-உண்மையானஸ்வயம்ப்ரகாசநிறைந்த—வேதனவடிவானான்-ஞானஸ்வரூபமானான்—(எ-று) [இ-சு-க-ம்] சமாதியின்கண்ணினுஞ்சகசத்திற்சத்தாசாமானியமடைந்தகிரமத்தையறிவித்ததாம். - - - - - - *

(சுகூ) (அ-கை) உத்தாலகமுனிபெற்றவனுபவஞ்சத்தாசாமானியமென்றுரைத்தஃதினிலக்கணஞ்சொல்லத்தொடங்கல் (கவி) வே என்றவசிட்டன்றனைவள்ளலெதுசத்தாசாமானியமென், றன்றுவினவவவனுரைப்பானகன்சிற்சாமானியவடிவா, யொன்றுவொன்றாயில்லாமையுறுபாவனையினுரைப்பாலே, தன்றனுள்ளங்கரைந்தேகிற்சத்தாசாமானியமதுவே, (இ-ள்) என்றவசிட்டன்றனை-(இப்படி)யென்றுசொன்னவசிட்டமுனியை—வள்ளல்-உதாரமுள்ளஸ்ரீராமரானவர்—சத்தாசாமானியம்-சத்தாசாமானியமானது—எதுவென்று-யாதென்று—அன்றுவினவ-அப்போதுகேட்க—அவனுரைப்பான்-அந்தவசிட்டமுனிசொல்லுவார்—தன்றனுள்ளம்-தன்மனது—ஒன்றுவொன்றாயில்லாமை-விபரீதபாவனையின்றி—அகன்சிற்சாமானியவடிவாய்-வியாபகமானசிற்சாமானியஸ்வரூபமாய்—உறுபாவனையின்-பொருந்தியபாவனையினது—உரைப்பாற்கரைந்தேகில்-திடத்தாற்கரைந்துபோகுமானால்—அதுவே-அச்சிற்சாமானியமே—சத்தாசமானியம்-சத்தாசாமானியமாம்(எ-று) - - - *

(எ0) (அ-கை) (இ-து) (கவி) தேற்றமாங்காண்பனநீங்கிச்சித்தினிடையேசித்திறக்கிற், சாற்றுமுயற்கொம்பெனநொய்தாஞ்சத்தாசாமானியமதுவே, தோற்றும்புறனுள்ளாய்ப்பலவாய்த்துவக்குமாகுமிவையனைத்து, மாற்றியகன்றுமனநிற்கிலதுசத்தாசாமானியமே (இ-ள்) சாற்றுமுயற்கொம்பென-சொல்லுகின்றசசவிஷாணத்தைப்போல—தேற்றமாம்-நிச்சயமாக—காண்பனநீங்கி-திரிஸ்யம்விட்டு—சித்தினிடை-ஆத்மசைதன்யத்தில்—சித்திறக்கில்-விருத்திஞானம்லயமானால்—நொய்தாம்-சொச்சமாகிய—அதுவே-அச்சிற்சாமானியமே—சத்தாசாமானியம்-சத்தாசாமானியமாகும்—தோற்றும்புறன்-தோற்றாநின்றபுறப்பொருளும்—உள்ளாய்-உட்பொருளுமாகி—பலவாய்-நாநாவிதப்பொருளுமாகியும—துவக்குமாகும்-உடல்களுமாகியுமிருக்கின்ற—இவையனைத்துமாற்றி-இச்சகலமுங்கெடுத்து—அகன்று-நீங்கி—மனநிற்கில்-மனது(சித்தாய்) நிற்குமானால்—அது-அச்சிற்சாமானியமே—சத்தாசாமானியம்-சத்தாசாமானியமாகும்—(எ-று) - - - - - - *

(எக) (அ-கை) இ-து (கவி) உன்னுவெதிர்காண்பனவொன்றுமொழியாதியாமையுறுப்பென்

ண. தன்னூற்றன்பாலிறக்குமெனிற்சத்தாசாமானியமதுவே, முன்னுமுடல்சேர்முத்தருடலிலதாமுத்தரிருவர்க்கு, மென்னுளினுஞ்சேர்பெருங்கண்ணீதிதன்பேர்துரியாதீதபதம் (இ-ள்) எதிர்காண்பன-நேரோகாணப்பட்ட விடயங்கள்— உன்னு- நினைக்கப்படாமலும்— ஒன்றுமொ.றியாது-ஒன்றுந்தவிராமலும்—ஆமையுறுப்பென்ன- கூர்மத்தினவயவத்தைப்போல— தன்னால்- தாமே— தன்பாலிறக்குமெனில்-ஆத்மாவிலிறக்குமேயானால்— அதுவே-அவ்வாத்மாவே— சத்தாசாமானியம்- சத்தாசாமானியமாகும்— முன்னும்- முதன்மையான— உடல்சேர்முத்தர்- சீவன்முத்தர்களும்— உடலிலதாமுத்தர்- விதேகமுத்தர்களுமான— இருவர்க்கும்- இவ்விரண்டுபேர்களுக்கும்— என்னுளினும்- எப்போதும்— சேர்பெருங்கண்- சேர்ந்திருக்கின்றபரமதிருஷ்டி— ஈது- இச்சத்தாசாமானியமாம்— இதன்பேர்- இதனுமம்— துரியாதீதபதம்- துரியாதீதபதமாகும்— (எ-று) [இ-ரு-க-ம்] சுயஞ்சித்தின்மனங்களைதலுஞ்சித்துக்களைதலும் வேறுதிஷ்டிநீங்குதலும் யாவுஞ்சின்மயமாய் விளங்குதலுமாகிய சிற்சாமானியஞ்சதாநந்தமாய்க்களைந்தசத்தாசாமானியமேதுரியாதீதமென்பதாம். - - - - ✻

(எஉ) (அ-கை) ஞானதிருஷ்டியினருமையையுரைத்தல். (கவி) அறிந்துசமாதியடைந்தோர்க்குமனுபூதியினின்றெழுந்தோர்க்குஞ், செறிந்துதோன்றுமூடர்க்குத்தெரியாதாமிப்பெருங்கண்ணுமுறிந்துபிறவியறுஞ்சீவன்முத்தானசித்தரொலாம், பிறிந்திடார்விண்பயில்காற் றுபெரிதாமண்ணிவிரதமும்போல்.(இ-ள்)அறிந்துசமாதியடைந்தோர்க்கும்-(ஆராய்ந்)தறிந்துசமாதியைப்பெற்றவவர்களுக்கும்— அனுபூதியினின்றெழுந்தோர்க்கும்-அனுபூதியிலிருந்ததுவாய்வெளிப்பட்டவர்களுக்கும்—செறிந்துதோன்றும்- நிறைந்துதோற்றுவதாகியும்— மூடர்க்கு- மூடர்களுக்கு—தெரியாதாமிப்பெருங்கண்ணுதெரியாததாகியுமிருக்கின்றவிப்பரமதிருட்டியானது— முறிந்து-முறிவுபட்டு—பிறவியறும்- சநநங்கெடாநின்ற—சீவன்முத்தரான-சீவன்முத்தர்களாகிய—சித்தரொலாம்· ஞானவான்களனைவரும்—விண்பயில்காற்று-அந்தரத்தில்வீசுகின்றவாயுவும்— பெரிதாமண்ணில்- பெரிதாகியபூமியில்—இரதமும்போல்-(அறு)சுவையும்போல—பிறிந்திடார்-பிரியமாட்டார்கள்— (எ-று) [இ-ம] விசாரமுகத்தாலறிந்தவறிவுசமாதியினுலாநந்தமானவருக்குமவ்வாநந்தஞ்சகசத்திலாநந்தாதீதமாய்விளங்கினவர்களுக்குமிவ்வனுபவம்விளங்குமேயன்றிமற்றவர்களுக்குவிளங்காதென்பதாம் - - - - - - ✻

(எக) (அ-கை) மும்மூர்த்திமுதலியோருக்குள்ளவிச்சுவானுபவத்திலுத்தாலகமுனியிருந்தானெனல். (கவி) மூவர்முதல்வானவரென்னைமுதனாரதனைமுதன்முனிவர், மேவலுற்றதிப்பெருங்கண்வேற்றுப்பதமெல்லாநசிப்பித், தோவவில்லாவிப்பதத்திலுத்தாலகனுற்றிருந்தனனு லாவநீர்வதெவ்வளவவ்வளவுஞ்சகமாமகத்திடையே. (இ-ள்) மூவர்முதல்வானவர்- மும்மூர்த்திமுதலானதேவர்களும்— என்னைமுதல்- என்னைமுதலாகவும— நாரதனைமுதல்- நாரதரைமுதலாகவுமுள்ள— முனிவர்- இரிஷிகளும்—மேவலுற்றது-அடைந்தது—இப்பெருங்கண்- இப்பரமதிருஷ்டியேயாம்—வேற்றுப்பதமெல்லாநசிப்பித்து- பேதமுள்ளபதங்களனைத்தையுங்கெடுத்து— ஓவவில்லாவிப்பதத்தில்- ஒழிவில்லாதவிச்சத்தாசாமானியத்தில்—ஆவல்தீர்வதெவ்வளவும்- ஆசைதீர்வதெந்தமட்டுமோ—அவ்வளவும்-அந்தமட்டும்—சகமாமகத்திடையுத்தாலகனுற்றிருந்தனன்- சகமானவீட்டிலுத்தாலகன்வசித்திருந்தான்(எ-று)

(எச) (அ-கை) உத்தாலகமுனிஞானமடைந்தபின்பு யோகத்தினுற் காயசித்திபெற்று மஃதற்பமென்றகற்றிவிதேகமுத்தியையடைதற்கானசமாதிசெய்யத்தொடங்கல் (கவி) காலமநேகஞ்சென்றதற்பின்கந்தமாதனக்கிரியிற், சோலமுழையிலம்முனிவன்குரம்பைவிட்டுக்குரம்பையிலாச், சீலமுத்தனுயிருப்பேன்றீர்வென்றெனநேசிந்தித்துச்,சாலநல்லதளிர்த்தவிசிற்றளைத்தபதுமாசனத்திருந்தான். (இ-ள்) காலமநேகஞ்சென்றதற்பின்- அநேககாலங்கழிந்தபின்பு— கந்தமாதனக்கிரியில்- கந்தமாதனபருவதத்திலுள்ள— சோலமுழையில்- அழகியகுகையில்— அம்முனிவன்- அந்தவுத்தாலகமுனியானவர்— குரம்பைவிட்டு- சரீரத்தைவிட்டு— குரம்பையிலாச்சீலமுத்தனாய்- விதேகமுத்தித் தன்மையனாய்— இருப்பேன்-இருக்கக்கடவேன்—தீர்வென்றெனநேசிந்தித்து-(இது)தீர்ப்பென்றுசிந்தனைசெய்து—சாலநல்லதளிர்த்தவிசில்- மிகவுநன்மையுள்ளபல்லவாசனத்தில்— தளைத்த- கட்டிய— பதுமாசனத்திருந்தான்- பத்மாசனத்திலிருந்தான்— (எ-று) - - - - - - ✻

(எரு) (அ-கை) சமாதியினிலக்கணங்கூறல். (கவி) அரைநோக்காகநோக்கியிருந்தபானவாயவடைத்ததனுற்,புரையொன்பதுவாயடைத்துளத்தாற்பொறியும்புலனுமொன்றாக்கி,திரையில்கடல்போற்றன்சித்தின்செறிவைப்பாவித்தாருயிரின், விரைவைநிறுத்திவணங்காமன் மேனோக்கியகந் தரத்தினனாய். (இ-ள்) அரைநோக்காக- பாதிதிருஷ்டியாக— நோக்கியிருந்து- பார்த்திருந்து—அபானவாயவடைத்ததனால்- மூலவாசலையடைத்ததினால்— புரையொன்பதுவாயடைத்து- உட்டுளையாகியநவத்துவாரமுமடைத்து— உளத்தால்- மனதினால்— பொறியும்- இந்திரியங்களையும்— புலனும்- விடயங்களையும்— ஒன்றாக்கி- பிரத்தியாகாரப்படுத்தி— திரையில்கடல்போல்· அலையில்லாதசமுத்திரத்தைப்போல—தன்சித்தின்செறிவைப்பாவித்து-தனதுபூரணஞானத்தைத்தியானித்து—ஆருயிரின்- நிறைந்திருக்கின்றபிராணவாயுவின்—விரைவைநிறுத்தி- வேகத்தைத்தடுத்து—வணங்காமல்-(சரீரம்)வளையாமல்— மேனோக்கிய- நெறிப்பாகிய— கந்தரத்தினனாய்- கழுத்தையுடையவனாய்— (எ-று) - - ✻

(எசு) (அ-கை)இ-து (கவி)நாவினடிச்சென்றுறச்செறியுண்ணாவினடியையுடையோனு, யோவின்முகக்காந்தியனாகியுள்ளிற்புறனின்மேற்கீழில், வாவும்விடயத்தினிற் பாழின்மனமுங் கண்ணுமுறுனாகி, வீவதானவெயிற்றினிரையெயிற்றின்நிரையைமேவானாய். (இ-ள்) நாவினடிச்சென்று- நாக்கினடியிற்சென்று— உறச்செறி- மிகவுநெருங்கிய— உண்ணாவினடியை யுடையோனாய்- உண்ணாக்கினடியையுடையவனாய்— ஓவில்- நீங்காத— முகக்காந்தியனாகி- முகவிளக்கத்தையுடைய வனாய்— உள்ளில்- உள்ளிலும்— புறனில்- புறம்பிலும்— மேல்- மேலிலும்—கீழில்- கீழிலும்— வாவும்விடயத்தி

னில்- பாயாநின்றவிடயங்களிலும்— பாழில்- சூனியாகாயத்திலும்— மனமுங்கண்ணும்- மனதுங்கண்ணும்— உருணகி- பொருந்தாதவனாய்— ஷிவதானவெயிற்றினிளை- செடுவதாகியதந்தபந்திகள்— எயிற்றினிளையை- தந்தபந்திகளை— மேவானாய்- பொருந்தப்பெறாதவனாய்—(எ-று) - - ※

(எஎ) (அ-கை.) கைவல்யசுகமாதல் (கவி) அங்கத்துயிரின்மிகுதிதகைந்ததனானெய்தாயவிர்முகத்தோ,னங்கத்துருவுள்ளுணர்வுருவேயாகியெழலாற்புளகிற்போ,னங்கத்துருவுள்ளுணர்வுருவேயாகிப்பழகியறிவொன்றா,யங்கப்பொழுதப்பழக்கத்தாலகத்துத்தமமாஞ்சுகமடைந்தான் (இ-ள்.) அங்கத்துயிரின்-சரீரத்திலுள்ளபிராணவாயுவின்—மிகுதிதகைந்து-மிகுதி(யாகச்செல்லுகின்றவேகத்தைத்)தடுத்து—அதனானெய்தாய்- அதனாற்சொச்சமாயும்—அவிர்முகத்தோன்- ப்ரகாசிக்கின்றமுகத்தையுடையவனாய்— அங்கத்துருவு-சரீரத்தினுருவமானது—உள்ளுணர்வுருவேயாகி- உள்ளஞானஸ்வரூபமாயும்—எழலால்- உண்டாகுதலால்— புளகிற்போன்-புளகாங்கிதமானவன்—அங்கத்துருவு- சரீரஸ்வரூபம்— உள்ளுணர்வுருவேயாகி- உள்ள்ஞானஸ்வரூபமாகி—பழக- பழக்கமுற்று—அறிவொன்றாய்- சிற்சாமானியமாகி— அங்கு- அவ்விடத்தில்— அப்பொழுது- அப்போது—அப்பழக்கத்தால்- அச்சிற்சாமானியவற்பியாசத்தினால்—அகத்துத்தமமாஞ்சுகமடைந்தான்-மனதிற்பரமாநந்தத்தையடைந்தான் (எ-று)

(எஅ) (அ-கை) அனுபவமரபையறிவித்தல். (கவி) ஆனந்தத்தின்பெருக்கைநுகர்ந்ததனாற்சிற்சாமானியம்போய்த்,தானந்தமறவெலாம்பரிக்குஞ்சத்தாசாமானியமடைந்தான், றீனந்தவிர்சமனாயிருந்தான்சிந்தாகுலமெல்லாந்தீர்ந்தான், மானந்தருமாநந்தமிலாமகாநந்தத்தான்முகமலர்ந்தான். (இ-ள்) ஆனந்தத்தின்பெருக்கை-பரமாநந்தவெள்ளத்தை— நுகர்ந்ததனால். புசித்ததனால்—சிற்சாமானியம்போய்- சிற்சாமானியநீங்கி— தானந்தமற- தானேமுடிவில்லாமல்— எல்லாம்பரிக்கும்- சகலத்தையுந்தரிக்கின்ற—சத்தாசாமானியமடைந்தான்-சத்தாசாமானிய(பதத்தை)யடைந்தான்—தீனந்தவிர்- குறைவின்றிய—சமனாயிருந்தான்-சாந்தியுள்ளவனாயிருந்தான்— சிந்தாகுலமெல்லாந்தீர்ந்தான்- சித்தத்திலுள்ளவருத்தங்களனைத்தையும்விட்டான்— மானந்தரும்- அளவைக்கொடுக்கின்ற— ஆநந்தமிலா- ஆநந்தமில்லாத— மகாநந்தத்தால்- பேராநந்தத்தினால்—முகமலர்ந்தான்- முகவிகசிதமானான்—(எ-று)

(எகூ) (அ-கை) விதேகமுத்தனாதல் (கவி) அனகபதமுற்றுடல் புளகமாறிநெடுநாளிற்கனைந்து, மனமும்பிறப்பின்மயக்கமும்போய்மகாசத்துவமாயோவியம்போற்,கனமில்ககனத்துவாமதிபோற்கதியிற்சின்னாளினிற்சுவறி, யினனதொளியான்மரப்பசைகளிறப்புபோலாயிறப்புற்றான். (இ-ள்) அனகபதமுற்று- மாசில்லாதபதத்தையடைந்து— உடல்புளகமாறி- சரீரபுளகாங்கிதத்தை விட்டு—நெடுநாளில்- வெகுதினத்தில்— மனமுங்கனைந்து— மனதுங்கனைந்து— பிறப்பின்மயக்கமும்போய்-சநநப்பிரமையுநீங்கி— மகாசத்துவமாய்- மகாசத்துவமுள்ளவனாய்—ஓவியம்போல்- சித்திரத்தைப்போலவும்— கனமில்ககனத்து- மேகமில்லாதவாகாசத்தில்— உவாமதிபோல்- பூர்ணச்சந்திரனைப்போலவும்— கதியில்- ஸ்வரூபபதத்தில்— சின்னாளினிற்சுவறி- சிலதுநாளிற்சேர்ந்து—இனனதொளியால்- சூரியப்ரகாசத்தினால்— மரப்பசைகள்- மரத்தின்பசுமைகளானவை— இறப்புபோலாய்- சோஷிக்கப்பட்டதுபோல— இறப்புற்றான-உத்தாலகமுனி(பிரமப்ரகாசத்தி)லயிக்கியமானான்—(எ-று)

[இ-எ-க-ம்] சீவன்முத்திதன்மையினின்றுநீங்கித்தானேவிதேகமுத்தியையடைந்தானென்பதாம். ※

உத்தாலகன்கதைமுற்றுற்று. ஆ கதை உச௫ கவிதை (சுகூச)



# சுரகுகதை.



(அ-கை.) முன்கதையிற்சமாதியினிடமாயுண்டானவாநந்தத்தினன்மனோரூபமானசகம்விஸ்ராந்தியடைந்ததைச்சொல்லிஇவ்வனுபவமாத்மவிசாரணையிலுமுதிக்குமவ்விஸ்ராந்தியேசீவன்முத்திசாமியமென்பதையறிவிக்கு நிமித்தஞ்சுரகுகதையைச்சொல்லுகிறார். - - - - - - - - ※

(க) (அ-கை) சுருதிகுருவனுபவத்தினால்விசாரிக்கவேண்டுமெனல் (கவி) இந்தவொழுங்காலுணர்வையுணர்வினாலுணர்ந்துலகிலியங்காநின்றே,யந்தமறும்பெரும்பதத்தேயாறுதியாற்காண்கின்றவனைத்துமாளச், சந்ததஞ்சாதித்ததனைப்பெறுமளவுநூல்குரவன்றனிநெஞ்சாலே பந்தமறுதத்துவத்தைவிசாரித்தேபெறவேண்டும்பதுமக்கண்ணாய் (இ-ள்) இந்தவொழுங்கால்- இம்மார்க்கத்தினால்—உணர்வை- அறிவை—உணர்வினாலுணர்ந்து- அறிவினாலறிந்து— உலகிலியங்காநின்று- சகத்திற்சஞ்சரித்து—அந்தமறும்பெரும்பதத்து-முடிவில்லாதபரிபூரணப்பதத்தில்— ஆறுதி- விஸ்ராந்தியடையக்கடவாய்—காண்கின்றவனைத்துமாள- பார்க்கப்பட்டவிடயங்களியாவுநசிக்கும்படி— சந்ததஞ்சாதித்து- சதாகாலமுஞ்சாதனைசெய்து— அதனைப்பெறுமளவும்- அப்பதத்தையடைகின்றவரையந்தம்—நூல்- (ஞான) சாஸ்திரத்தினாலும்— குரவன்- சற்குருவினாலும்— தனிநெஞ்சால்- தனிமையானமனதினாலும்—பந்தமறுதத்துவத்தை- பந்தமில்லாததத்துவஞானத்தை— பதுமக்கண்ணாய்- தாமரைக்கண்ணையுடையஸ்ரீராமா— விசாரித்தேபெறவேண்டும்-விசாரணைசெய்தேயடையவேண்டும்— (எ-று) - ※

(உ) (அ-கை) இ-க. (கவி) மயலின்மைசாதனைநூற்பொருட்போதங்குருபமமாமவழிகளாலேயுயர்பதவிபெறலாகுமன்றியுணர்வொன்றினாலுறுதற்காமா, வியலுபதேசமபெற்றுக்கூரியதாய்க்களங்கமிலாதிருக்குமாகில், வியனுறுசாதனமுழுதுமிலதேனும்புந்தியினால்விடுகூடும் (இ-ள்)மயலின்மைவயிராக்கியத்தினாலும்— சாதனை- (திரிஸ்யநீங்கும்படியான) சாதனத்தினாலும— நூற்பொருள்-

(ஞான) சாத்திரார்த்தங்களினாலும்—போதம்- அறிவினாலும்— குரு- ஆசாரியருபதேசத்தினாலும்—யமம்- இயமநியமங்களாலும்— ஆம்வழிகளால் ஆகாநின்ற (விம்) மார்க்கங்களினால்— உயர்பதவி பெறலாகும்- மேலானஸ்வரூபபதமடையப்படும்—அன்றி- அல்லாமலும்—உணர்வொன்றினால்-அறிவொன்றினால்—உறுதற்காம்- பொருந்துதற்காகும்— இயலுபதேசம்பெற்று-சுபாவமான(சற்குரு) வுபதேசத்தைப்பெற்று— கூரியதாய்- அதிகநுட்பமாய்— களங்கமிலாதிருக்குமாகில்- நிருமலமாயிருக்குமானால்— வியனுறுசாதனம்- பெருமைபொருந்தியசாதனம்— முழுதுமிலதேனும்- முற்றுமில்லாததாயிருந்தாலும்—புந்தியினால்- அவ்வறிவினால்—வீடுகூடும்- மோக்ஷமடையலாம்— (எ-று) [இ-உ-க.ம்] பக்குவன்சமாதிமுதலியவற்றை வேண்டானாயினுமாசாரியருபதேசவிசாரஞ்செய்யுமறிவொன்றையாவதுவிரும்பவேண்டுமென்பதாம். - - - - - - - - - - - - - - ※

(ரு) (அ-கை.)ஞானவான்களதுதாரதன்மியத்தைவினவுதல் (கவி)என்றனைமுகநோக்கியிகத்தொழிலோடிருந்தேயுஞ்சமாதியெய்தி, யொன்றனவுணர்வுற்றான்போலிடர்தீர்ந்தானொருவனொருவன்செய்கை, யின்றனாய்த்தனியிடத்திற் சமாதியடைந்தானிவரின் மிக்கோனேவ, னன்றாகவருளுகெனவிராகவன்கேட்டலும்வசிட்டனவில்வதானான். (இ-ள்.) என்றனை-(இப்படி)யென்றுசொன்னவசிட்டமுனியை— முகநோக்கி- வதனத்தைப்பார்த்து— இகத்தொழிலோடிருந்தேயும்- இகத்திலுள்ளவியகாரத்திலிருந்தும்— சமாதியெய்தி- சமாதியடைந்து— ஒன்றனவுணர்வுற்றான்போல்- ஏகமாகியஞானமடைந்தவனைப்போல— ஒருவனிடர்தீர்ந்தான்- ஒருவன்துன்பத்தைநீங்கினான்— ஒருவன்- மற்றொருவன்— செய்கையின்றனாய்- தொழிலில்லாதவனாய்— தனியிடத்தில்- ஏகாந்தஸ்தானத்தில்—சமாதியடைந்தான்- சமாதியையடைந்தான்— இவரில்- இவ்விருவர்களில்— மிக்கோனேவன்- மேலானவன்யாவன்— நன்றாகவருளுகென-செவ்வையாகச்சொல்லுவாயென—இராகவன்கேட்டலும்-ஸ்ரீராமர்கேட்டமாத்திரத்தில்—வசிட்டனவில்வதானான்-வசிட்டர்சொல்லத்தொடங்கினார்(எ-று)[இ-ம்] வியகாரத்திலுமேகாந்தத்திலுஞ்சமாதியினான்ஞானமடைந்தவர்களில்யாவர்மேலாவரென்பதாம் - ※

(ச) (அ-கை.) சமாதியினிலக்கணமறிவித்தல் (கவி) ஆற்றுமதத்துவமன்றான்முக்குணத்தால்வருஞ்சகமென்றறிந்தோர்க்குள்ளே, தோற்றுகின்றசீதளமேததுதனையேசமாதியெனச்சொல்லுமன்றே, யூற்றமறக்காண்பவற்றோ டுறவுநமக்கிலதென்றே யூத்துத்தண்ணெனன், றேற்றசமாதியிலிருப்பனொருவனொருவன்றொழிலோடிருப்பனன்றே (இ-ள்) முக்குணத்தால்- மூன்றுகுணத்தினால்— வருஞ்சகம்- உண்டானவுலகம்— ஆற்றுமதத்துவமன்று- அநாத்மாவென்று— அறிந்தோர்க்கு- உணர்ந்த(சத்து)க்களுக்கு— உள்ளேதோற்றுகின்ற- உள்ளத்தின்கட்டோற்றாநின்ற— சீதளமேது- குளிர்ச்சியெதுவோ— அதுதனை- அதையே— சமாதியெனச்சொல்லும்- சமாதியென்றுசொல்லப்படும்— ஊற்றமற- பற்றில்லாமல்— காண்பவற்றோடு- சகத்தோடு— உறவுநமக்கிலதென்று- சம்பந்தநமக்கில்லையென்று— ஊத்து- திடமாக— தண்ணென்று- குளிர்ச்சியாக— ஏற்றசமாதியில்- மேலாயிருக்கின்றஸ்வரூபசமாதியில்— ஒருவனிருப்பவன்- ஒருவனிருப்பான்— ஒருவன்றொழிலோடிருப்பன்- ஒருவன்வியகாரத்தோடுமிருப்பான்— (எ-று) - - - - - - - - ※

(ரு) (அ-கை) (இ-து (கவி) இவ்விருவரிதயமுந்தண்ணென்றிருக்கில்வேற்றுமையோரிறையுமில்லை, யவ்விதயசீதளமேயநந்ததவப்பயனுமவ்வனுபூதிக்கே, கவ்வியிருப்போனுள்ளங் காரியத்தாலலையுமெனிற்கவலைவாரா, செவ்வியவச்சமாதானமுன்மத்தநடனம்போற்சிறப்புண்டாகும் (இ-ள்) இவ்விருவரிதயமும்- இந்தவிரண்டுபேர்களுடையமனதும்— தண்ணென்றிருக்கில்- குளிர்ச்சியாகவிருந்தால்- வேற்றுமை- வேறுபாடு— ஓரிறையுமில்லை- எவ்வளவுமில்லை— அவ்விதயசீதளமே- அம்மனதின்குளிர்ச்சியே— அநந்ததவப்பயனும்- அளவில்லாததவப்பிரயோசனமாம்— இவ்வனுபூதிக்கு- இந்தவனுபூதியில்— கவ்வியிருப்போன்- பற்றியிருக்கின்றவனது— உள்ளம்- மனமானது— காரியத்தாலலையுமெனில்- தொழிலிற்சஞ்சரிக்குமானாலும்— கவலைவாரா- துன்பம்வரமாட்டாது—செவ்விய- செம்மையாகிய— அச்சமாதானம்- அதற்குச்சமாதானம்— உன்மத்தநடனம்போல்- உன்மத்தநடையைப்போல— சிறப்புண்டாகும்- மேன்மையுண்டாயிருக்கும்— (எ-று) [இ-உ-க-ம்] மனமானதானந்தத்தினாற்குளிர்தலேசமாதியாதலினிவர்கட்குவேற்றுமையின்றென்பதாம். - - - - - ※

(சா) (அ-கை) வாசனாக்ஷயத்திலிருவருஞ்சரியெனல் (கவி) வருத்தமிலாவுன்மத்தநடத்தினன்வாதனைமாய்ந்தமனத்தோனாகிற், றிருத்தமுறவவன்கூத்துதெளிவுற்றோன் சமாதிக்குத்தீரநேராம், பெருத்ததொழிற்சேரறிஞர்பெரியவனஞ் சேரறிஞர்பேதநாடி, லொருத்தரொருத்தரைவிஞ்சாரிருவருமொத்தையமில்வீடுற்றாரன்றே (இ-ள்.) வருத்தமிலா- துன்பமில்லாத— உன்மத்தநடத்தினன்- உன்மத்தனடையையுடையவன்— வாதனைமாய்ந்த- வாதனையிறந்த— மனத்தோனாகில்- மனதுடையவனானால்— திருத்தமுற- திருத்தமாக— அவன்கூத்து- அவனடையானது— தெளிவுற்றோன்சமாதிக்கு- தெளிந்தவன்சமாதிக்கு— தீரநேராம்- தீர்ப்பாகச்சமானமாம்— பெருத்ததொழில்சேரறிஞர்- மிகுந்தவியகாரமுடையஞானிகள்— பெரியவனஞ்சேரறிஞர்- மகாரணியத்தையடைந்த ஞானிகள்— பேதநாடில்- வேற்றுமையைத்தேடுமிடத்தில்— ஒருத்தரொருத்தரை- ஒருவரொருவருக்கு—விஞ்சார்- அதிகமாகார்கள்— இருவருமொத்து- இரண்டுபேருஞ்சமானமாய்— ஐயமில்வீடுற்றார்- சந்தேகமில்லாதமோக்ஷத்தையடைந்தனர்— (எ-று) [இ-ம்.] வாசனாக்ஷயம்வந்தவன்வியகாரியானாலுமேகாந்தியானாலுமேற்றற்குறைச்சலின்றியொருதன்மையராவரெனபதாம். - - - - - - - ※

(எ) (அ-கை) வாசனாக்ஷயம்வரவேண்டுமெனல் (கவி)சாலவும்வாதனைபோகிலிம்மனஞ் செய்தொழில்புரிந்துந்தான்செய்யாதாஞ், சீலமனநெடிதகலி லுறங்கிருந்தார்செப்புமொழி தெரியாதாப்போற்றாலமனந்தொழில்விடினுஞ்செய்ததாம்வாதனைபோதுன்னுமாகிற், சோலவுடலசைவறினுங்கனவிலேவ

ணை நின்றுங்குழிவிழ்வார்போல். (இ-ள்) சாலவும்வாதனைபோகில்-மிகவும்வாசனைகெடுமானால்—இம்மனம்- இந்தமனமானது— செய்தொழில்புரிந்தும்- செய்கின்றதொழிலைச்செய்தும் —சீலமனம்-நல்லொழுக்கமுடையமனது— நெடிதகலில்- வெகுதூரநீங்கில்— அருகிருந்தார்- பக்கத்திலிருந்தவர்கள்— செப்புமொழி- சொல்லுகின்றவசனம்— தெரியாதாப்போல்- உணராததுபோல—தான்செய்யாதாம்- தான்செய்யாததாம்— ஆலமனந்தொழில்விடினும்- பருத்தமனதுசெயலைவிட்டாலும்— வாதனையேதுன்னுமாகில்- வாதனைநிறைந்திருக்குமானால்— கோலவுடலசைவறினும்- அழகையுடையசரீரமசைவற்றாலும்—கனவில்-சொற்பனத்தில்—வரைநின்று-மலையிலேநின்று—குழிவிழ்வார்போல்-பள்ளத்தில்விழுபவர்களைப்போல—செய்ததாம்-தொழிலைச்செய்ததாகும்(எ-று)[இ-ம்] வாசனாக்ஷயம்வரின்றொழில்செய்துஞ்செய்யாதவன்;அஃதிருந்தாற்றொழிலைவிட்டும்விடாதவனென்பதாம். - *

(அ) (அ-கை) மனோசஞ்சலநீக்குதலேசமாதியாமெனல். (கவி) தொலைவிற்றொழிற்செய்யுமனத்தொழினீங்கிலதுதானேசுகசமாதி, யலைவறுகைவல்லியமும்பரமாநந்தமுமென்றேயறிவாய்நெஞ்சி, னுலைவுதிரமெனுமிரண்டுமத்தியானத்தியானமெனுமுபயத்துக்கு, நிலையுறுகாரணங்களாமாதலிவிம்மனமுளைக்குநீர்மைதீர்ப்பாய் (இ-ள்) தொலைவிற்றொழில்- நீங்காதவிபசாரங்களை— செய்யுமனம்-செய்கின்றமனமானது— தொழினீங்கில்- விபகாரத்தைவிட்டுநீங்குமானால்— அதுதானே- அதுவே— சுகசமாதி- சுகசமாதியும்— அலைவறுகைவல்லியமும்- சலனமற்றநிருவாணமும்— பரமாநந்தமும்-மேலானவாநந்தமும்—என்றேயறிவாய்- என்றேயறிந்துகொள்வாய்— நெஞ்சின்-மனதினது—உலைவு- சலனமும்— திரம்- நிலையும்—எனுமிரண்டும்- என்கின்றவிரண்டும்— அத்தியானம்- தியானாபாவமும்—தியானம்- தியானமும்— எனுமுபயத்துக்கும்- என்கின்றவிரண்டு (திருஷ்டிக்)கும்—நிலையுறுகாரணங்களாம்- நிலையுள்ளகாரணங்களாகும்— ஆதலில்- ஆதலால்—இம்மனமுளைக்கும்- இந்தமனதுண்டாகின்ற— நீர்மைதீர்ப்பாய்- குணத்தைக்கெடுப்பாய்— (எ-று) - - - - - - *

(௯) (அ-கை) இ-து (கவி) சிந்தனைவாதனையின்றித்திரமானமனத்தினையேதியானமென்ப, ரந்தவுபசாந்தமுமக்கேவலத்தன்மையுமென்றுமதுவேயாகுமிந்தவுயர்பதப்பொருட்டுவாதனைசாலவுநேரமையெய்தவேண்டுஞ், சந்ததம்வாதனையில்லாமனந்தொழிலில்லாப்பதத்தைச்சாருமத்தால் (இ-ள்) சிந்தனைவாதனையின்றி- சிந்தனாரூபமாகியவாசனையில்லாமலிருக்கின்ற— திரமானமனத்தினையே- திடமாகியமனதையே— தியானமென்பர்- தியானமென்றுசொல்லுவார்கள்— அந்தவுபசாந்தமும்- அவ்வுபசாந்தியும்— அக்கேவலத்தன்மையும்- அக்கைவல்லியமும்— என்றுமதுவேயாகும்- எப்போதுமந்தமனமேயாகும்— இந்தவுயர்பதப்பொருட்டு- இம்மேலானநிருவாணபதநிமித்தம்—வாதனை- வாதனையானது— சாலவும்- மிகவும்— நேர்மையெய்தவேண்டும்- அற்பமாகக்கரையவேண்டும்— சந்ததம்- சதாகாலமும்— வாதனையில்லாமனம்- வாதனையில்லாதமனமானது—தொழிலில்லாப்பதத்தை- செயலிறந்தநிருவாணபதத்தை— அத்தாற்சாரும்- அவ்வாசனாக்ஷயத்தினாலடையும்—(எ-று) - *

(௰) (அ-கை) தத்துவஞானத்தினால்வாசனாக்ஷயஞ்செய்யின்வீட்டிலாவதுகாட்டிலாவதிருக்கலாமெனல் (கவி) நெருக்கமுறுவாசனையேநெஞ்சினதுதொழிற்றிரமா நீங்காத்துன்பம், பெருக்கவிடுமாதலினால்வாதனையைமிகநேர்மைபிறக்கச்செய்வாய், வருச்சமுறுபலபொருளினானெனும்பாவனைமனத்தான்மாற்றியெங்ஙனிருக்குதியங்ஙனமிருப்பாய்வரையிலேமனையிலேயெங்கேயேனும் (இ-ள்) நெருக்கமுறுவாசனையே-நெருங்கியவாசனையானது—நெஞ்சினது-மனதினுடைய—தொழில்-விபகாரமான— திரமா நீங்காத்துன்பம்- திடமாகநீங்காததுன்பத்தை— பெருக்கவிடும்- பருக்கச்செய்யும்— ஆதலினால்- ஆகையினால்— வாதனையை- வாசனையை— மிகநேர்மைபிறக்கச்செய்வாய்- மிகவுந்தேயும்படிசெய்வாய்—வருச்சமுறுபலபொருளில்- கூட்டமாகியவநேகவஸ்துக்களில்— நானெனும்பாவனை-யானென்கின்றபாவனையை— மனத்தான்மாற்றி- மனதினாற்கெடுத்து— எங்ஙனிருக்குதி- எவ்விடத்திருக்கவேண்டுமோ— அங்ஙனம்- அவ்விடத்தில்— வரையில்- மலைகளிலாவது—மனையில்- வீட்டிலாவது—யெங்கேயேனும்- மற்றெவ்விடத்திலேயானாலும்— இருப்பாய்- நீவசிப்பாய்—(எ-று) - *

(௰௧) (அ-கை) அகம்பாவநீங்கினவர்களிருக்கும்வீடும், ஞானநிறைந்தவர்களிருக்குநாடுங்காடேயெனல். (கவி) இல்லுறைவோர்சமாதான விதயத்தோரகங்கரமா மேதந்தீர்ந்தோர், புல்லுமனையேகாந்தவனமாகுங்கடைவீதிபுக்கிக்காண்போர், செல்லவரவுலாவியும்பற்றுமையினாற்கடைவழிச்செல்லாதார்போல்வார், நல்லறிவுநிறைந்தோர்க்குமப்படியேகாடொக்குநாடுதானே (இ-ள்) இல்லுறைவோர்- இல்லறத்திலிருப்பவர்களும்— சமாதானவிதயத்தோர்- சமாதானமனதையுடையவர்களும்— அகங்கரமாம்- அகங்காரமாகிய— ஏதந்தீர்ந்தோர்- குற்றமற்றவர்களுமாகியவிவர்கள்— புல்லுமனை- பொருந்தாநின்றவீடானது— ஏகாந்தவனமாகும்- ஏகாந்தவனமாகிய(கானகமே)யாம்—கடைவீதிபுக்கிக்காண்போர்- கடைவீதியிற்போயறிகின்றவர்கள்— செல்லவரவு- போக்குவரத்தாக— உலாவியும்- சஞ்சரித்தும்—பற்றுமையினால்- பற்றாததினால்— (வழிநடப்பவர்க்கு) கடைவழி- கடைவீதில்—செல்லாதார்போல்வார்- போகாதவர்களுக்கொப்பாவார்கள்— நல்லறிவுநிறைந்தோர்க்கும்- சுகபோதம்பூரணமானவர்களுக்கும்— அப்படியே- அந்தப்ரகாரமே— நாடுதானே- நகரமும்—காடொக்கும்- வனத்தையொத்திருக்கும்—(எ-று) [இ-சு-க-ம்.] வாசனாரூபமானமனோசங்கற்பமிறத்தலேசுகாகாரமானவேகாந்தஸ்தானமென்பதாம். - - - - - - - - - - - - - க - *

(௰௨) (அ-கை) அகத்திலுள்ளதுபுறத்திலுமுள்ளதெனல் (கவி) துயில்விழிப்புசொலல்செலவுதொடர்ந்தாலுமகமுசமாந்தொடர்பாலென்றும், பயின்மனையூர்நாடெல்லாம்பழுவம்போற்காண்பவரோபரமசீர்,செயிரிலாவகமுகத்தாலெல்லாமாகாசமாய்த்திருஞ்சித்தமுயிரனையசீதளம்வந்துண்ணிறையிற்சீதளமாமுலகமெல்லாம். (இ-ள்) துயில்- நித்திரையும்—விழிப்பு-விழித்தலும்—சொலல்- படித்

தலும்— செலவு- போகுதலுமாகியவிவைகள்— தொடர்ந்தாலும்- தொடர்ந்துவந்தாலும்— அசமுக
மாந்தொடர்பால்- அந்தர்முகமாகியதொடர்ச்சியினுல்— என்றும்- எப்போதும்—பயில்- வசிக்கின்ற—
மனை- வீடும்— ஊர்- நகரமும்— நாடு- தேசமுமாகிய— எல்லாம்- அனைத்தும்— பழுவம்போல்-
காட்டைப்போல— காண்பவரோ- பார்ப்பவர்களே—பரமசிவர்- மேலானவறிவையுடையவர்கள்—செ
யிரிலா- குற்றமற்ற— அசமுகத்தால்- அந்தர்முகத்தினுல்—எல்லாமாகாசமாய்த்தீரும்- சகலமு(ஞான)
காயமாய்விடும்— உயிரனையாய்- பிராணனுக்குச்சமானமானவனே — சித்தம்- மனதில்—சீதளம்-கு
ளிர்ச்சியானது— வந்துண்ணிறையில்- வந்தகநிறைபுமானுல்— உலகமெல்லாம்- சசங்களனைத்தும்—
சீதளமாம்- குளிர்ச்சியாம் (எ-று) - - - - - - - - - - - - - - ✻

(யகூ) (அ-கை) இ-து (கவி) இதையமயலாலெரியிலுலகெலாங்காட்டெரிபோலெரிந்துதோன்
று, முதையமுறுமுயிர்க்கெல்லாமுள்ளிருப்பதேபுறத்துமுண்டாய்நிற்குஞ், சுதைபயிலூர்புவிகால்வி
ண்டொகுவனாநீணதிதிக்குசூழ்ந்தவெல்லாம், புதைதலுறுமுட்கரணதத்துவத்தின்பங்குகளாய்ப்புறத்
தினிற்ப (இ-ள்) இதையம்- மனமானது— மயலாலெரியில்- மயக்கத்தினுல்வேகுமானுல்—உலகெலா
ம்- சகங்களனைத்தும்— காட்டெரிபோல்- காட்டாக்கினியைப்போல— எரிந்துதோன்றும்- வெந்து
தோற்றும்— உதையமுறுமுயிர்க்கெல்லாம்- உண்டாகின்றவாத்மாக்களனைத்திற்கும்— உள்ளிருப்ப
தே- அகத்திலிருப்பதே—புறத்துமுண்டாய்நிற்கும்- புறம்பிலுமுண்டாயிருக்கும்—சுதைபயிலூர்-
அமிர்தமிருக்கின்றசுவர்க்கலோகமும்— புவி- பூமியும்— கால்- வாயுவும்—விண்- ஆசாயமும்—தொ
குவனா- தொகுப்பாகியமலைகளும்— நீணதி- நீண்டவாறுகளும்— திக்கு- திசைகளும்—சூழ்ந்தவெ
ல்லாம்- சூழ்ந்திருக்கின்றசகலமும்— புதைதலுறும்- அழுத்தமாகிய—உட்காணதத்துவத்தின்- அந்
தக்கரணதத்துவத்தினுடைய— பங்குகளாய்- பிரிவுகளாக— புறத்தினிற்ப- புறம்பினிற்பனவாம்—
(எ-று) [இ- உ-க-ம்] மனதெப்படியோவப்படியேயாவும்விளங்குமென்பதாம. - - - - ✻

(யச) (அ-கை.) சமாதியடைந்தவனிலக்கணமறிவித்தல் (கவி) உள்ளுணர்விவின்புறுவோன்பொ
றிகளாற்கருமங்களுய்ப்போனுயுந், தள்ளுசுகதுக்கவசஞ்சாராதோனநவரதஞ்சமாதியுற்ருே, னுள்ளு
கின்றதனைப்போலெவ் வுயிருமெனப்புறப்பொருள்களோடேயென்ன, வெள்ளுபயத்தாலன்றியிய
ல்பாலேகண்டானேயெல்லாங்கண்டோன். (இ-ள்) உள்ளுணர்வில்- ஆத்மஞானத்தில்—இன்புறுவோ
ன்- சுகத்தைபடைகின்றவனும்—பொறிகளால்- இந்திரியங்களால்— கருமங்கள்- கிரியைகளை—உய்ப்
போனும்- செலுத்துபவனும்—தள்ளு- நீக்காநின்ற— சுகதுக்கவசம்- சுகதுக்கவசத்தில்—சாராதோ
ன்- அடையாதவனுமிருக்கின்றவன்— அநவரதம்- சதாகாலமும்— சமாதியுற்ருேன்- சமாதியை
ப்பொருந்தினவன்— எவ்வுயிரும்- சகலவுயிர்களும்— உள்ளுகின்றதனைப்போலென- நினைக்கின்ற
தனதுயிரைப்போலவென்று—புறப்பொருள்கள்- பிறர்திரவியங்களை—ஓடேயென்ன- ஓடுபோல—
எள்ளுபயத்தாலன்றி- இகழுகின்றவுலகவச்சத்தினுலல்லாமல்— இயல்பால்- சுபாவத்தினுல்— கண்டா
னே- பார்த்தவனே— எல்லாங்கண்டோன்- சகலத்தையும்பார்த்தவன் (எ-று.) - - - - ✻

(யரு) (அ-கை.) ஞானவானிலக்கணமறிவித்தல். (கவி) இன்றிறவுவந்தாலுங்கற்பாந்தத்தெய்துகி
னுமிலங்குஞானி, கன்றியசேற்றுறுபொன்போற்களங்கமுருனெல்லாமாய்க்கண்ணுயாறி, பொன்றலடி
முடிவின்றியொன்ருயின்பத்தளவாய்ப்பொலிதேசாகித், துன்றியகாட்சிகளில்லாக்குறியுடைத்தாமெ
னச்சுருதிசொல்லுமன்றே. (இ-ள்.) இறவு- மரணமானது— இன்றுவந்தாலும்- இப்போதுவந்தாலு
ம்— கற்பாந்தத்தெய்துகினும்- கற்பமுடிவில்வந்தாலும்—இலங்குஞானி- ப்ரகாசிக்கின்றஞானவான்
கள்—கன்றியசேற்றுறுபொன்போல்- பதனழிவானவளற்றிலழுந்தியதங்கத்தைப்போல—களங்கமுரு
ன்- களங்கத்தையடையான்— எல்லாமாய்- சகலமுமாயும்—கண்ணுய்- (ஞான) திருஷ்டியாயும்—ஆறி-
விஸ்ராந்தியடைந்து— பொன்றல்- கெடுதலும்— அடிமுடிவின்றி- ஆதியந்தமில்லாமல்—ஒன்ருய்-
ஏகமாகியும்— இன்பத்தளவாய்- ஆநந்தமாத்திரமாகியும்—பொலிதேசாகி- விளங்காநின்றப்ரகாசமாகி
யும்—துன்றியகாட்சிகள்- நெருங்கியசகங்கள்— இல்லா- இல்லாததாகியுமிருக்கின்ற— குறியுடைத்தா
மென- அடையாளத்தையுடையதாமென்று— சுருதிசொல்லும்- வேதங்கள்சொல்லும்— (எ-று,)
[இ-உ-க-ம்] உள்ளும்புறம்புஞ்சிதாநந்தானுபவமாய்விளங்குகின்றவர்கடொழிலைச்செய்துஞ் செய்
யாவிடினுமபேதமேயென்றறியென்பதாம். - - - - - - - - - - - - - - ✻

(யசூ) (அ-கை.) ஞானம்பெற்றவரிலில்லறஞானிக்கிழிவுந்துறவறஞானிக்குயர்வுமின்றென்றறிவித்
திதற்குத்திருஷ்டாந்தமறிவிக்கத்தொடங்கல்(கவி)எல்லாமென்றுரைத்ததெலாமறிவித்தற்பொருட்டே
யாமிசையச்சொன்ன, சொல்லாலென்வீணன்றேயாதவினுலோமென்றுதுணிகவித்தை, நல்லாயிங்கித
ற்குமுதனுளாதோரிதிகாசநவிலக்கேட்பாய், புல்லாளன்வேடர்குலச்சுரகுவப் பேரோன்சரிதைபு
துமைத்தன்றே. (இ-ள்.) எல்லாமென்றுரைத்ததெலாம்- எல்லாமென்றதுமுதலாகச்சொல்லியசகல
மும்— அறிவித்தற்பொருட்டேயாம்- (ஞான)மறிவிக்குநிமித்தமேயாம்— இசையச்சொன்ன- பொ
ருந்தவுரைத்த— சொல்லாலென்- சொற்களினுலென்ன(ப்ரயோசனம்)— வீணன்றே- வீணல்லவா—
ஆதலினுல்- ஆகையால்— இத்தை- இந்(நாமங்களனை)த்தையும்—ஓமென்றுதுணிக- (பிரமவாசகமான)
பிரணவமென்றேதெளிவாய்— நல்லாய்- நன்மையையுடையஸ்ரீராமா— இங்கிதற்கு- இவ்விடத்திந்
தவனுபவத்துக்கு— முதனுள்- முற்காலத்தில்— உளதோரிதிகாசம்- உண்டாகியவோர்கதையை— ந
விலக்கேட்பாய்- யான்சொல்லக்கேட்பாய்— புல்லாளன்- (மலைச்சாரிபில்வசிக்கும்)புன்மையர்களெ
ன்கின்ற—வேடர்குலம்- கிராதர்குலத்தில்— சுரகுவப்பேரோன்- சுரகுவென்னுநாமமுடையவன்—
சரிதை- சரித்திரமானது— புதுமைத்து- அதிசயமுள்ளது.— (எ-று) - - - - ✻

(யஎ) (அ-கை). சுரகுவேந்தர்கருவிசாரமுதித்தல். (கவி) இமகிரியின்கோடாண்கைலைவாயினி

லேமசடர்களென்னு, மமர்வரிவில்வேடருளரவர்க்கரசன்சுரகுவெனுமசையாவீரன், சமநிலையாற்கோ
முறையாலருண்முனிவாலுலகநெறிசமைக்குநாளி, னமதுவலியாலுலகைநலிகுதுமேலவர்சோகநமக்
கேயன்றோ (இ-ள்) இமகிரியின்கோடான- இமயமலையின்முடியாகிய— கைலைவரையினில்- கை
லாசபருவதத்தில்— ஏமசடர்களென்னும்- ஏமசடர்களென்கின்ற— அமர்- யுத்தஞ்செய்கின்ற—வரி
வில்வேடருளர்- நீண்டவிற்களைத்தரித்தவேடர்களுண்டு— அவர்க்கரசன்- அவர்க்கிராசாவானவன்—சு
ரகுவெனுமசையாவீரன்- சுரகுவென்கின்றநாமமுடையசலனமற்றசுத்தவீரன்— சமநிலையால்- நடு
நிலையினாலும்— கோமுறையால்- அரசநீதியினாலும்— அருள்- (சிஷ்ட) பரிபாலத்தினாலும்— மு
னிவால்- (துஷ்ட) நிக்கிரகத்தினாலும்— உலகநெறி- சகமார்க்கத்தை—சமைக்குநாளில்- செய்கின்ற
காலத்தில்— நமதுவலியால்- நமதுவல்லமையினால்— உலகைநலிகுதுமேல்- சகத்தைவருத்துவோமா
னால்— அவர்சோகநமக்கேயன்றோ- அவர்கடுன்பநமக்கல்லவா—(எ-று) - - - - - *

(யஅ) (அ-கை.) சற்குருதரிசினமாய்த்துதித்தல் (கவி) அல்லாதுதண்டமுறையியற்றோமேலுயி
ர்காப்பற்றவத்தின்மாயும், பொல்லாதிவ்வரசென்றேயூசலாடுளத்தினனாய்ப்புந்திநைந்தான், மல்லாரு
ம்புயத்தவன்பான்மாண்டவியமுனிவரலும்வணங்கிப்போற்றி, நல்லாயுன்வரவினான்மிகவாழ்ந்தேனல்
லோரினாட்டப்பட்டேன் (இ-ள்) அல்லாது-(அப்படி)யல்லாமல்— தண்டமுறை- (தருமசாஸ்திர
ப்ரகாரமான) தண்டத்தின்முறைமையை— இயற்றோமேல்- செய்யாமற்போவமேயானால்—உயிர்-
பிராணிகள்— காப்பற்று- காப்பவனில்லாமல்— அவத்தின்மாயும்- வீணாகக்கெடும்— இவ்வரசு- இந்த
வரசாங்கம்— பொல்லாதென்று- கொடியதென்று— ஊசலாடுளத்தினனாய்- உஞ்சலாடுகின்றமன
தையுடையவனாய்— புந்திநைந்தான்- மனதுவருத்தமடைந்தான்— மல்லாரும்புயத்தவன்பால்- பல
மிகுந்தபுசத்தையுடையசுரகுவினிடத்தில்— மாண்டவியமுனிவரலும்- மாண்டவியமுனியானவர்வரவு
ம்—வணங்கிப்போற்றி-(சுரகுவானவர்)வணங்கித்தோத்திரஞ்செய்து—நல்லாய்-நன்மையையுடைய
முனியே— உன்வரவினால்- உமதுவரவினால்— நான்மிகவாழ்ந்தேன்- யான்மிகவுஞ்சுகத்தையடைந்
தேன்— நல்லோரினாட்டப்பட்டேன்-சத்துக்களினத்தினிலக்கப்பெற்றேன்—(உ-று) - - - *

(யகூ) (அ-கை) தனதையநீங்கும்படிவினவுதல் (கவி) தருமமுழுதையுமுணர்ந்தபகவநீநெ
டுங்காலந்தளர்வுதீர்ந்தா, யருவினையேனையப்பாடறுத்தியாலையம்போலரந்தையுண்டோ,விருநிலத்தெ
ன்கோற்கீழோரென்கருணைமுனிவுகளாலின்பதுன்ப, மருவுகின்றகவலையைக்கண்டரியேற்றின்முன்கரி
போன்மறுகுகின்றேன் (இ-ள்) தருமமுழுதையுமுணர்ந்த- தருமங்களனைத்தையுமறிந்திருக்கின்
ற— பகவ- பகவானே— நீநெடுங்காலம்- நீர்வெகுகாலமாய்— தளர்வுதீர்ந்தாய்— தளர்ச்சிதீர்ந்திரு
க்கின்றீர்— அருவினையேன்- அரியகருமமுடையேனது— ஐயப்பாடறுத்தி- சந்தேகத்தைத்தீர்ப்பா
ய்—ஐயம்போல்- சந்தேகத்தைப்போல— அரந்தையுண்டோ- துன்பமுண்டோ—இருநிலத்து-பெ
ரிதானபூமியில்— என்கோற்கீழோர்- எனதுசெங்கோலின்கீழுள்ளவர்கள்— என்கருணைமுனிவுகளா
ல்- எனதனுக்கிரகத்தினாலுநிக்கிரகத்தினாலும— இன்பதுன்பம்- சுகதுக்கங்களை— மருவுகின்றகவலையை
க்கண்டு- பொருந்தாநின்றதுன்பங்களைப்பார்த்து—அரியேற்றின்முன்- ஆண்சிங்கத்தின்முன்பு—கரி
போல்- யானையைப்போல— மறுகுகின்றேன்- சுழலுகின்றனன்—(எ-று) - - - - - - *

(உய) (அ-கை) இ-து. (கவி) அருணன்வெயில்போலெங்குநிறைசமமென்மதியிலேயணுகுமா
று, கருணையினாலுணர்த்தியெனுங்காவலற்குமாண்டவியன்கழறுகிற்பான், பொருவறுதன்விசாரத்தா
லிமைப்போதின்மனவழுக்குப்போகாநிற்கும், வருசரற்காலந்தோன்று மாத்திரத்துமூடுபனிமாய்வ
தேபோல் (இ-ள்) அருணன்வெயில்போல்- சூரியனதுப்ரகாசத்தைப்போல—எங்குநிறைசமம்- எவ்
விடத்துநிறைந்திருக்கின்றசமமானது— என்மதியில்- எனதறிவில்— அணுகுமாறு- பொருந்தும்ப
டி— கருணையினால்- கிருபையினால்—உணர்த்தியெனுங்காவலற்கு- அறிவிப்பாயென்றவரசனுக்கு—
மாண்டவியன்- மாண்டவியமுனியானவர்— கழறுகிற்பான்- சொல்லுவார்—பொருவறு-ஒப்பற்ற—
தன்விசாரத்தால்- ஆத்மவிசாரணையினால்— இமைப்போதில்- க்ஷணநேரத்தில்— வருசரற்காலம்-
வாராநின்றசரற்காலமானது— தோன்றுமாத்திரத்து- உண்டானமாத்திரத்தில்— மூடுபனிமாய்வதே
போல்- மூடுபனிகெடுவதுபோல— மனவழுக்குப்போகாநிற்கும்-மனதின்களங்கமானதுபோகும்—
(எ-று) [இ-ரு-க-ம்] சுரகுவேந்தனுக்கிராசநீதிப்படிசெய்யுமனுக்கிரநிக்கிரகத்தினாலுயிர்கள்வருந்து
வதைமுன்னிட்டாத்மவிசாரமுண்டானதென்பதாம் - - - - - - - - - - - - *

(உக) (அ-கை) ஞானமுபதேசித்தல் (கவி) யானாரிச்சகமெங்ஙன்பிறப்பிறப்பெங்ஙனமென்
றேயிதயத்துள்ளே, யானுமலிப்படியேயாராயின்மகத்துவமேயடைதிசாலத், தானானசுபாவனாயிருந்
துளநின்விசாரத்தாற்றானேநெஞ்சு, நீநாடும்படிதோன்றித்தன்னுருவிட்டினைப்பாறித்துன்பநீங்கும்,
(இ-ள்) யானார்- நானார்— இச்சகமெங்ஙன்- இவ்வுலகமெப்படிவந்தது—பிறப்பு- சநநமும்— இற
ப்பு- மரணமும்— எங்ஙனமென்று- எப்படிவந்ததென்று— இதயத்துள்- உள்ளத்தின்கண்—ஆனு
மலிப்படி- நீங்காமலிந்தப்ரகாரம்— ஆராயின்- விசாரித்துப்பார்க்கில்—மகத்துவமேயடைதி-மகத்தா
னபதத்தையடையக்கடவாய்—சாலத்தானானசுபாவனாய்- மிகவுந்தானாகியசுபாவத்தையுடையவனாய்—
இருந்துள- இராநின்ற— நின்விசாரத்தால்- உனதாத்மவிசாரணையினால்—தானேநெஞ்சம்- தனக்குத்
தானேமனமானது— நீநாடும்படிதோன்றி- நீதேடுகின்றப்ரகாரமுண்டாகி—தன்னுருவிட்டினைப்பா
றி- தனதுவடிவத்தைவிட்டுவிஸ்ராந்தியடைந்து— துன்பநீங்கும்- துன்பத்தைநீங்கும்—(எ-று.) *

(உஉ) (அ-கை) பவத்தைநீக்குதற்குச்சாந்திவேண்டுமெனல் (கவி) வெமையுதல்போய்த்தண்ணெ
ன்றுவுன்மனதுக்கிவ்வுலகின் வியாபாரங்கள், செம்புகர்வேழத்தினுக்கான் குளப்படிபோற் றோன்
றமாறினநெஞ்சுக், சம்புவியிற்றேழில்சிறந்தே யாகினுநீநதிடவரிதாமாவினபாதப், பைம்புனலுங்

கிழக்கொதுகுக்கெல்லைகாணாதபரவையன்றே. (இ-ள்.) வெம்புதல்போய்- வாடுதனீங்கி— தண்
ணென்றவுன்மனதுக்கு- குளிர்ந்தவுன்னுடையமனதுக்கு— இவ்வுலகின்வியாபாரங்கள்- இந்தவுலகத்
திலுள்ளகாரியங்கள்— செம்புசர்வேழத்தினுக்கு- சிவந்தபுள்ளிகளையுடையயானைக்கு— ஆன்குளப்ப
டிபோல்- பசுவின துகுளப்படியைப்போல— தோன்றும்- தோற்றும்— தீனநெஞ்சுக்கு- இழிவுள்
ளமனதுக்கு— அம்புவியில்- அழகியபூமியிலுள்ள— தொழில்- கிரிகைகள்— சிறிதேயாகினும்- அற்
பமேயானாலும்— நீந்திடவரிதாம்- கடத்தற்கரியதாகும்— ஆவின்பாதம்- கோவின்குளப்படியிலுள்
ள— பைம்புனலும்- அழகியசலமும்— கிழக்கொதுகுக்கு- வார்த்திகமுள்ளமசகத்துக்கு— எல்லைகா
ணாத- அளவுங்கரையுங்காணக்கூடாத— பரவையன்றே- சமுத்திரமல்லவா— (எ-று) - - *

(உங) (அ-கை) ஆத்மதர்சனமுண்டாகுமார்க்கமறிவித்தல் (கவி) எத்தனையெத்தனை நீத்தாயகில
த்தைப்பரஞ்சுடராயெறிக்குஞ்சோதி, யத்தனையத்தனைதோன்றுமெந்நாண்மட்டனைத்தும்விடாயன்று
ன்மட்டுந், தத்துவமாம்பொருளெய்தாச்சகலமும்போனாற் சேடந்தானுஞ்சித்தந், தொத்தறவேற்று
மையெல்லாம்போகாதேற்சமமானசோதிதோன்றா (இ-ள்) அகிலத்தை- சகத்தை— எத்தனையெத்த
னை- எவ்வளவெவ்வளவு— நீத்தாய்- நீக்கினாயோ— பரஞ்சுடராயெறிக்குஞ்சோதி- பரமப்ரகாசமா
யொளிவீசாநின்ற (பரமாத்மா) வானது— அத்தனையத்தனைதோன்றும்- அவ்வளவவ்வளவுண்டாகும்—
எந்நாண்மட்டனைத்தும்விடாய்- எந்தநாள்மட்டுஞ்சகலமும்விடவில்லையோ— அந்நாண்மட்டும்- அக்
காலமளவும்— தத்துவமாம்பொருளெய்தா- உண்மையாகியவஸ்துவந்தடையாது— சகலமும்போனா
ல்- சகலதிரிப்யங்களும்விடுபட்டால்— சேடந்தானும்- மிஞ்சின(திருக்குவே)தானாகும்— சித்தந்தொ
த்தற- மனத்தொந்தமில்லாமல்— வேற்றுமையெல்லாம்- பேதங்களனைத்தும்— போகாதேல்- நீங்காவி
டின்— சமமானசோதிதோன்றா- பூரணமாகிய(பரமாத்மஸ்வரூப)ப்ரகாசந்தோற்றமாட்டாது(எ-று)

(உச) (அ-கை.) சகலகற்பனையுநீங்கினவிடத்துஞானமுதிக்குமெனல் (கவி) பேதமறுபொருளொ
ருமைதோன்றாதேற்றன்னைத்தான்பெறுவதெங்கே,யாதலினாற்றனைப்பெறுதற்பொருட்டாகவனைத்தி
னையுமகற்றல்வேண்டு, மேதமறவனைத்தையும்விட்டாயென்னிற் சேடித்ததிறவாவிடா, மேதகையப
தமதுவாஞ்சுரகுவெனும்பெயர்கீர்த்திவேடர்வேந்தே. (இ-ள்.) பேதமறுபொருள்- சாமானியமாயி
ருக்கின்றகணசமுதலியவஸ்துக்கள்— ஒருமைதோன்றாதேல்- ஒற்றுமைதோற்றாதானால்— தன்னை- ஆ
த்மஸ்வரூபத்தை— பெறுவதெங்கே- அடைவதெப்படி— ஆதலினால்- ஆகையினால்— தனைப்பெறுத
ற்பொருட்டாக- ஆத்மாவையடையுநிமித்தமாக— அனைத்தினையுமகற்றல்வேண்டும்- சகலவிடயங்களை
யுநீக்கவேண்டும்— ஏதமற- துன்பநீங்க— அனைத்தையும்விட்டாயென்னில்- யாவையும்விட்டாயானா
ல்— சேடித்ததிறவாவிடாம்- மிஞ்சினதேநாசமில்லாதமோக்ஷமாம்— மேதகையபதமதுவாம்- மே
ன்மையானபரமபதமதுவாகும்— சுரகுவெனும்பெயர்- சுரகுவென்னுநாமத்தையும்— கீர்த்தி- கீர்த்தி
யையுமுடைய— வேடர்வேந்தே- வேடராசாவே— (எ-று) - - - - - *

(உரு) (அ-கை) வாசனாநிவிர்த்தியேஞானமாமெனல். (கவி) சகலகாரணகாரியபரம்பனாத்
தன்மையாஞ்சகமேவி, மிகவளர்ந்தவத்துவின்மலவாதனைமனத்தினைமி நீக்கி, திகழுமங்கமாம்மதையுமே
ல்விடுதியேற்றீதறுநலனுண்டாம், புகழ்நராதிபவென்று தன்னிடமுறப்போயினன் றவப்பாலன்.
(இ-ள்) சகலகாரணகாரியம்- சகலமானகாரணகாரியங்களுடைய— பரமபனாத்தன்மையாம்- பாரம்பரி
யமானகுணத்தையுடையதாகிய— சகமேவி- உலகத்திற்பொருந்திய— வஸ்துவின்- விடயங்களின்— ம
லவாதனை- அஞ்ஞானவாசனையினன்— மிகவளர்ந்த- மிகவுமோங்கிய— மனத்தினை- மனதை— மிகநீ
க்கி- மிகவுங்கெடுத்து— திகழுமங்கமாமதையும்- ப்ரகாசிக்கின்றசரீர(வாசனை)யையும்— மேல்விடுதியே
ல்- மேல்விடுவையாயின்— தீதறுநலனுண்டாம்- குற்றமற்றநன்மையான(வஸ்து)வுண்டாகும்— புக
ழ்நராதிபவென்று- கீர்த்தியையுடையவரசனேயென்று(சொல்லி)— தன்னிடமுற- தனதிடத்திற்பொ
ருந்த— தவப்பாலன்- தவசிரேஷ்டனானமாண்டவிய முனியானவர்— போயினன்- போனார்— எ-று)
[இ-ரு-க-ம்] இராசகாரியங்களைச்செய்துமதனால்வருஞ்சுகதுக்கங்சடாக்காததற்குநித்தியானந்தசுதா
மானவாத்மானுபவத்தையடையும்விசாரத்தையனுக்கிரகித்தாரென்பதாம். - - - - - - - *

(உசு) (அ-கை) அரசனாத்மதரிசனஞ்செய்யும்பொருட்டநாத்மாவானதேகத்தைநியதிசெய்தல்.
(கவி) முனியகன்றபின்னெயினர்கோன்றனியிடமுந்தினன்மதியாலே, யனிசநானென்பதாரெனநாடி
னனடிமுதன்முடியிருந், தனியுடம்பைநானென்பதுபுதுமையாஞ் சடவுடல்காண்சேனன் றுனிசெ
யிவ்வுடல சேதனந்தசைமுதற்றுன்னுமாதலினன்றே. (இ-ள்) முனியகன்றபின்- மாண்டவியமுனி
யானவர்நீங்கினபின்பு— எயினர்கோன்- வேடர்க்கரசனானவன்— தனியிடமுந்தி- ஏகாந்தஸ்தானம
டைந்து— நன்மதியால்- நல்லறிவினால்— அனிசம்- எப்பொழுதும்— நானென்பதாரென- யானெ
ன்பதாரென்று— நாடினன்- விசாரித்தான்— அடிமுதன்முடியிரும்- பாதாதிசிரசுபரியந்தமாகிய—
தனியுடம்பை- தனிமையானசரீரத்தை— நானென்பது- யானென்றுசொல்லுவது— புதுமையாம்-
அதிசயமாகும்— நான்சடவுடல்காண்கேன்- யான்சடமாகியசரீரத்தைவிசாரிப்பேன்— துனிசெயிவ்
வுடல்- துன்பத்தைச்செய்கின்றவிச்சரீரமானது— தசைமுதற்றுன்னும்- மாமிசமென்புமுதலானவ
கணிறைந்திருக்கும்— அசேதனம்- சடமாம்— ஆதலினன்று- ஆதவி(னா)ல்ல— (எ-று) - - *

(உஎ) (அ-கை) அநாத்மாவானவிந்திரியங்களையுஞ்சீவனையுநியதிசெய்தல் (கவி) கரணமீரைந்தும
ன்னியஞ்சடமெனுங்கணக்கினுளன்றித், திரளெனக்கிலவுடன்முதனலன்சடமேதெனநோக்கி
ல், விரவுசீவனேசடமாமினைதும்வேறொன்றாற்றெறிகின்ற, துரவிதானவேறொன்றிலுற்றறியுமீது
யர்ந்ததத்துவமாகா (இ-ள்) கரணமீரைந்தும- பத்திந்திரியங்களும— அன்னியம்- (எனக்)கன்னியமா
கலாலும— சடமெனுங்கணக்கினால்- சடமென்கிறபடியினாலும— நானன்று- யானல்ல— உடன்முதல்-

சீரமுதலிய—இத்திரளெனக்கில- இக்கூட்டமெனக்கில்லனவாதலால்—நானலன்- யானல்ல—சேடமே தெனநோக்கில்- மிஞ்சினதெதுவென்றுபார்க்கில்—விரவுசீவனேசேடமாம்- கலந்திருக்கின்றசீவனே மிஞ்சினதாம்— இன்னதும்- இச்சீவனும்— வேறென்றாற்றெரிகின்றது- ப்ரத்யேகாத்மாவாலறியப் பட்டது— உரவிதானவேறென்றினல்- திரமாகியப்ரத்யேகாத்ம(சைதன்யத்)தினல்— தெரியுமீது- தெரிகின்றவிச் (சீவனும்)— உயர்ந்ததத்துவமாகா- மேலானவாத்மதத்துவமாகமாட்டாது— (எ-று)

(உ௮) (அ-கை.) ஆத்மதரிசனஞ்செயதல் (கவி) தெரிவதாகியவிதனையுமசற்றுவன்றெரிபொருணுமோ, பெரிதுசேடமாய்விகற்பமற்றமலமாம்பேரறிவியானுகு, மரியயன்சிவனிந்திரனந்தகனுதியாமிடந்தோறுஞ், சொரிகொண்முத்தினுண்ணூலென நிற்குமாற்றென்றுமிவ்வுயர்போதம் (இ-ள்) தெரிவதாகியவிதனையும்- காணப்படுவதாகியவிச்சீவனையும்— அசறறுவன்- நீக்குவன்— தெரிபொருணுமோ- தெரிகின்றபொருணுவனே— பெரிதுசேடமாய்- மீசவுமிஞ்சினதாய்— விகற்பமற்று- விகற்பமில்லாமல்— அமலமாம்- நின்மலமாகிய— பேரறிவியானுகும்- பூரணஞானமேயெனதுல்வருபமாம்— அரி- திருமாலும்— அயன்- பிரமாவும்— சிவன்- உருத்திரனும்— இந்திரன்- தேவேந்திரனும்— அந்தகன்- நமனும்— ஆதியாமிடந்தோறும்- இவர்கண்முதலியவிடங்கடோறும்—சொரிகொண்முத்தினுள்- உருட்சியையுடையமுத்துகளுக்குள்— நூலென- சூத்திரத்தைப்போல— தோன்றுமிவ்வுயர்போதநிற்கும்- தோற்றுநின்றவிந்தமேலானஞானமானதிருக்கும்—(எ-று) [இ-௩-௧-ம்.] தேசமுதலியசடவஸ்துக்களை நியதிகளை ந்துமிஞ்சினசித்துருபத்தைத்தரிசித்தானென்பதாம் - ※

(உ௯) (அ-கை) ஆத்மவியாபகத்தைத்தரிசித்தல் (கவி) பகவனுகுமிவ்வாத்துமதத்துவம்பரமமாஞ்சிற்சத்தி, சகநிகழ்ச்சியாநோயின்றிவெருவுறுந்தனிவடிவுடைத்தாகி, சகுபமுற்றையும்விழுங்கியெப்பொருளினுங்கலந்துநுண்ணியதாகி, மிகுமபாவபாவங்களற்றயனுறைவீடளவுளதாகி (இ-ள்) பகவனுகும்- பகவானுகிய— இவ்வாத்துமதத்துவம்- இந்தவாத்மதத்துவமென்னும்— பரமமாம்- மேலான— சிற்சத்தி- ஞானசத்தியானது— சகநிகழ்ச்சியாநோயின்றி- உலகநடையென்னும் வியாதியில்லாமல்— வெருவுறும்- பயப்படுகின்ற— தனிவடிவுடைத்தாகி- ஒப்பற்றவுருவத்தை யுடையதாகியும்— சகுபமுற்றையும்விழுங்கி- திசைகளெல்லாம்வியாபித்தும்— எப்பொருளினுங்கலந்தும்- எந்தவஸ்துக்களிலும்பூரணமாயும்— நுண்ணியதாகி- சூட்சுமமாகியும்— மிகுமபாவபாவங்களற்று- மிகுந்த பாவாபாவங்களுமில்லாமல்— அயனுறை- பிரமதேவன்வாசஞ்செய்கின்ற— வீடளவுளதாகி- சத்தியலோகபரியந்தமுண்டானதாகியும்— (எ-று) - - - - - - - - - - - - - - - - ※

(௩௰) (அ-கை) ஆத்மசத்தியேசகலமாகவும்விளங்குகின்றதென்றறிதல். (கவி) சத்தியாவுக்குமுறைவிடமாமிதுதனித்தனிச்சத்தாகி, பத்தியாகியிச்சகத்தினிற்காண்பன யாவையும்பலவாகச்,சித்தசைந்துளவிசாலமாமல்லதுசிறிதும்வேறிலதாகுந், தொத்துபற்றின்றிக்காணபதற்றெழுபவந்தொடர்மயக்கமுமற்றே. (இ-ள்.) சத்தியாவுக்கும்- சத்திகளனைத்தினுக்கும்—இது- இச்சிற்சத்தியானது— உறைவிடமாம்- வசிக்கப்பட்டஸ்தானமாம்— தனித்தனிச்சத்தாகி- வேறுவேறுள்ளதாகி— பத்தியாய்- பந்திபந்தியாகி— இச்சகத்தினில்- இவ்வுலகத்தில்— காண்பன யாவையும்- காணப்பட்டசகலமும்— பலவாக- நாநாவிதமாக— சித்தசைந்துள- ஞானமசைகின்ற—விசாலமாமல்லது- விஸ்தாரமேயல்லாமல்— சிறிதும்வேறிலதாகும்- அற்பமும்வேறில்லையாம்— தொத்துபற்றின்றி- தொந்தமானவாசனையில்லாமல்— காண்பதற்று- விடயங்களைவிட்டு— எழுபவந்தொடர்- எழுபிறப்பிலுந்தொடராநின்ற— மயக்கமுமற்று- மயக்கமுநீங்கி— (எ-று.) - - - - - - - - - - ※

(௩௧) (அ-கை) ஆத்மஸ்வருபமாதல். (கவி) சுழுத்தியிற்றிரமுற்றவன்றொழிலெனத்துகளறுசமனுகி, யழுத்தமாகியவாத்துமதத்துவத் தமர்ந்தனனெனத்தீர்ந்து, விழுத்தகும்பதமெய்தினன்விவேகத்தின்மெய்மைநிச்சயத்தாலே, வழுத்தருந்தவக்கவுசிகன்விப்பிரமரபினையடைந்தென்ன (இ-ள்) சுழுத்தியிற்றிரமுற்றவன்- சுழுத்தியவத்தையினிலைபெற்றவனது— தொழிலென- செயலைப்போல— துகளறுசமனுகி- குற்றமற்றசமத்தையுடையவனுய்— அழுத்தமாகிய- திடமாகிய— ஆத்துமதத்துவத்து- ஆத்மதத்துவத்தில்— அமர்ந்தனனென- வசிததேனென்று— தீர்ந்து- (சகலமும்)விட்டு—விவேகத்தின்- விவேகத்ினது— மெய்மைநிச்சயத்தால்- உண்மைநிச்சயத்தினல்— வழுத்தருந்தவக்கவுசிகன்- துதிக்கத்தக்க வரியதபசையுடையவிசுவாமித்திரமுனியானவர்— விப்பிரமரபினையடைந்தென்ன- பிராமணமுறைமையைப்பெற்றதுபோல—விழுத்தகும்பதம்- மேன்மையுள்ளபிரமபதத்தை— எய்தினன்- (சுரகுவானவ)னடைந்தான்— (எ-று) - - - - - - - - - - - - ※

(௩௨) (அ-கை) சகலமுமாத்மஸ்வருபமென்றறிந்தரசாக்ஷிசெய்தல் (கவி) வரகுணங்களாமனைத்துமிற்றுயில்பவன்மனத்தொழினிகராகி, சுரகுவென்பவனசைவறுசிகையினற்றுலங்குறுசுடரொத்தான், விரவுநல்லருளருளின்மைவிருப்பொடுவெறுப்புமச்சரந்தொந்தம், பரவுநன்மதிமூடமென்றினையவும்பயில்வறநிகழ்வுற்றான். (இ-ள்) வரகுணங்களாமனைத்துமில்- மேன்மையானகுணங்களொன்றுமில்லாது— துயில்பவன்- சுழுத்தியடைந்தவனது— மனத்தொழினிகராகி- மனோவிருத்திக்குச்சமானமாய— சுரகுவென்பவன்- சுரகுவென்னுநாமத்தையுடையவரசன்— அசைவறுசிகையினல்- அலைவற்றகொழுந்தினல்—துலங்குறுசுடரொத்தான்- ப்ரகாசிக்கின்ற(சித்திர)தீபத்துக்கொப்பானுன்— விரவுநல்லருள்- மிகுந்தநல்லவனுக்கிரகமும்— அருளின்மை- நிக்கிரகமும்— விருப்பொடு- விருப்புடன்— வெறுப்பு- வெறுப்பும்— மச்சரம்- மச்சரமும்— தொந்தம்- தொந்தமும்—பரவுநன்மதிமூடம்- துதிக்கின்றநல்லறிவுமறியாமையும்—என்றினையவும்- என்கின்றயாவையும்—பயில்வற- பழசாமல்— நிகழ்வுற்றான்- ப்ரகாசித்தான்— (எ-று.) [இ-௪-௧-ம்.] விசாரமுகத்தாலாத்மநிஷ்டனுய்ச்சர்வம்பிரமமென்னுமனுபவத்தினற்சுகதுக்கந்தாக்காமற்சுகவடிவாயிருந்தரசாக்ஷிசெய்தானென்பதாம் - ※

(௫௩) (அ-கை.) இல்லறத்திலிருந்துஞானம்பெற்றசுரகுவேந்தற்குந்துறவறத்திலிருந்துஞானம்பெற்றபார்த்திபமுனிக்கு மெவ்வளவுமுயர்வுதாழ்வின்றி விளங்கியவனுபவசம்பாஷிணையைச்சொல்லத்தொடங்கல் (கவி) வே ஒன்றியுணர்ந்தசுரகுப்பெயருத்தமற்கும் பன்னுதனெனும்பெயர்பார்த்திபமாமுனிக்கு, நன்றானவன்பால்வருநன்மைநயந்துகேட்பாய், குன்றார்புயத்தாயெனமாதவன்கூறலுற்றான் (இ-ள்) ஒன்றியுணர்ந்த-அத்துவிதபோதமுற்ற—சுரகுப்பெயருத்தமற்கும்-சுரகுவென்னுநாமத்தையுடையவுத்தமனுக்கும்—பன்னுதனெனும்பெயர்-பன்னுதனென்னுநாமத்தையுடைய—பார்த்திபமாமுனிக்கும-இராசரிஷிக்கும்—நன்றானவன்பால்-நல்லவன்பினல்—வருநன்மை-வராநின்றநன்மையை—நயந்துகேட்டாய்-இன்பமாகக்கேட்பாய்—குன்றார்புயத்தாயென-மலைபோலுண்டாகியபுயத்தையுடையஸ்ரீராமாவென்று—மாதவன்கூறலுற்றான்-வசிட்டமுனிசொல்லத்தொடங்கினர் (எ-று)

(௫௪) (அ-கை.) பார்த்திபற்குவிரத்தியுண்டானவேதுவையுரைத்தல் (கவி) பாரக்கர்குலப்பரிகப்பெயர்பாரின்வேந்தாம்,வீரக்கழலோன்சுரகுப்பெயர்வேந்தனண்ப,னீரைக்கனமாரிமறுத்தலிலியாருந்துஞ்சக், கோரக்கனன்மண்டுதல்கண்டுகுலைந்துநொந்தான் (இ-ள்) பாரக்கர்குலம்- பாரகீசர்குலத்தில்— பரிகப்பெயர்- பரிகனென்னுநாமத்தையுடைய— பாரின்வேந்தாம்-பூமிக்கரசனுகிய—வீரக்கழலோன்- வீரகண்டாமணியையுடையவன்— சுரகுப்பெயர்- சுரகுவென்னுநாமத்தையுடைய— வேந்தனண்பன்- அரசனுக்கிஷ்டமானவன்—ஈரைக்கனமாரிமறுத்தலில்-பத்துவருடமேகவருடமில்லாமையால்— இயாருந்துஞ்ச- இயாவருமரணமடைய— கோரக்கனன்மண்டுதல்கண்டு- கொடியவுதராக்கினிமிகுதலைப்பார்த்து— குலைந்துநொந்தான்- நடுக்கமுற்றுவாடினன்— (எ-று.) - - - - ※

(௫௫) (அ-கை) பார்த்திபற்குஞானமுண்டாதல் (கவி) இன்னுதனநாடுவிட்டேகிவனத்திலெய்தி, யன்னுதரம்போய்த்தவஞ்செய்தவிழ்பன்னமூணைப், பன்னுதனும்படைத்துத்தவப்பான்மையாலே, நன்னுதலும்பெற்றனனற்றவமொப்பதுண்டோ. (இ-ள்) இன்னுதனநாடுவிட்டேகி- துன்பமாகின்றதனதுநாடுவிட்டுப்போய்— வனத்திலெய்தி- ஆரணியத்திற்சென்று— அன்னுதரம்போய்- அன்னம்(புசிப்பதி)லாசைவிட்டு—தவஞ்செய்து-தவத்தைச்செய்து— அவிழ்பன்னமூணைப்- உதிர்ந்தசருகுபுசிப்பாக— பன்னுதநாமம்படைத்து- பன்னுதனென்கின்றநமத்தைப்பெற்று— தவப்பான்மையால்- தவத்தினதுகுணத்தினல்—நன்னுதலும்பெற்றனன்- நலமான(வாத்மஞானத்தைப்)பெற்றான்—நற்றவமொப்பதுண்டோ- (அவனது) நல்லதவத்துக்குச்சமானமானதுண்டோ— (எ-று) - - ※

(௫௬) (அ-கை) அரசனுமுனியுமனுபவத்தையுசாவத்தொடங்கல் (கவி) ஒருமூவுலகென்னுமடத்தொருமித்திருந்தான், பொருண்மேவுகின்றச்சுரகுப்பெயர்பூபன்றன்பால், வருவானெதிர்தோன்றலுமற்றவனன்போடெய்தி, யிருவோருமன்புற்றிருந்தின்னனபேசலுற்றார். (இ-ள்) ஒருமூவுலகென்னுமடத்து- ஒப்பற்றமூன்றுலகமென்கின்றமடத்தில்— ஒருமித்திருந்தான்- ஒன்றுபட்டிருந்த(பன்னுதமுனியான)வர்— பொருண்மேவுகின்ற-வாய்மையைப்பொருந்தியிருக்கின்ற— சுரகுப்பெயர்- சுரகுவென்னுநாமத்தையுடைய— பூபன்றன்பால்- அரசனிடத்தில்— வருவான்- வருபவனுய்—எதிர்தோன்றலும்- எதிரோதோற்றவும்— மற்றவன்- அச்சுரகுவானவன்— அன்போடெய்தி- அன்போடடைந்து— இருவோரும்- இரண்டுபேர்களும்— அன்புற்றிருந்து- அன்பைப்பொருந்தியிருந்து— இன்னனபேசலுற்றார்-இத்தன்மையவாகியவனுபுவங்களைப்பேசத்தொடங்கினர்கள் (எ-று) ※

(௫௭) (அ-கை) முனிவரனுபவம்பெற்றதறிவித்தல் (கவி) நினையிப்பொழுதெய் தலினீங்கருமின்பமுற்று, வினையற்றதென்றச்சுரகுப் பெயர்வேந்தைநோக்கி, யுனையுற்றுமாண்டவ்வியனேதியஞானமொப்ப, தனையுய்க்குமெய்மமைப்பதஞ்சார்ந்தனன்யானுமென்ன (இ-ள்) நினை- உம்மை— இப்பொழுது- இத்தினத்தில்— எய்தலின்- (யா)னடைதலினல்—நீங்கருமின்பமுற்று- நீங்கற்கரியசுகம்பெற்று- வினையற்றதென்ற- வினைநீங்கினதென்றுசொல்லிய — சுரகுப்பெயர்வேந்தை- சுரகுவென்னுநாமத்தையுடையவிராசாவை— நோக்கி- (பன்னுதமுனியானவ)பார்த்து—உனையுற்று- உன்னிடத்தில்வந்து—மாண்டவ்வியன்-மாண்டவியமுனியானவர்— ஓதியஞானமொப்ப- போதித்தஞானத்துக்குச்சமானமாக— தனையுய்க்கும்-தன்னைவாழ்விக்கும்—மெய்மமைப்பதம்-உண்மையான(ஞான)பதத்தை— யானும்- நானும்— சார்ந்தனனென்ன- அடைந்தேனென்றுசொல்ல— (எ-று) - ※

(௫௮) (அ-கை.) அரசனைமுனிவினவுதல் (கவி) வே. மிசத்தெளிந்துகெம்பீரமாய்ச்சமமதாம்விழியா, லிகத்துறுந்தொழின்மன்னவவியற்றுதிகொல்லோ, பகுத்தசாலத்தையறிவுறுநினது யாவனைதான், றொகுத்தவாதியும்வியாதியுந்தொடர்கிலகொல்லோ (இ-ள்) மிசத்தெளிந்து- மிகவுந்தெளிவுற்று— கெம்பீரமாய்- கெம்பீரமாக— சமமதாம்விழியால்- சமதிருஷ்டியினல்— இகத்துறுந்தொழில்- இவ்வுலகத்திலுள்ளவரசகாரியங்களை— மன்னவ- அரசனே— இயற்றுதிகொல்லோ- செய்கின்றாயோ— பகுத்தகாலத்தை- பிரிவுற்றகாலத்தை— அறிவுறும்- அறியாநின்ற— நினதுதேகந்தான்- உனதுசரீரமானது— தொகுத்தவாதியும்- கூட்டமாகியமனேவியாதியும்— வியாதியும்- வியாதியும்— தொடர்கிலகொல்லோ- தொடரவில்லையோ— (எ-று) - - - - - - - - - - ※

(௫௯) (அ-கை) இ-து (கவி) அடையும்போதினிதாகியபோகத்திலழுந்தா, திடைநிலாய்கொலோசங்கற்பமற்றிளைப்பாறித், தடையில்சாந்தமாய்முத்தியாய்ச்சலனமொனறில்லா நடையயின்றுயர்சமாதியைநண்ணினைகொல்லோ (இ-ள்) அடையும்போது- அடைகின்றகாலத்தில்—இனிதாகிய- இன்பமாகிய— போகத்திலழுந்தாது- செல்வத்திலழுந்தாமல் — இடைநிலாய்கொலோ- நடுவாகநிற்கின்றாயோ— சங்கற்பமற்று- சங்கற்பம்விட்டு— இளைப்பாறி- விஸ்ராந்தியடைந்து— தடையில்சாந்தமாய்- தடையில்லாதவுபசாந்தமாகியும்— முத்தியாய்- கைவல்யமாகியும்— சலனமொனறில்லா- சஞ்சலமொன்றுமில்லாத— நடையயின்று- நடையைப்பழகி— உயர்-மேலானதாகியுமிருக்கின்ற—

சமாதிநன்னினைகொல்லோ- சமாதியைப்பொருந்தினையோ— (எ-று) [இ-எ-க-ம்] பார்த்திபமுனிதனதிஷ்டரானசுரகுசகசசமாதியினின்றும், அரசாக்ஷிசெய்கின்றவனுபவத்தை,நான்குவிதமாகப்பிரித்துக்கேட்டனனென்பதாம். - - - - - - - - - - - - - *

(சுஙு) (அ-கை.) சமதிருஷ்டியாலரசுசெய்கின்றாயாவென்றமுதல்வினாவுக்குத்தரம். (கவி) வெறிதிருக்கினுந்தொழிலினைமேவினும்விடாமல, லறிஞனென்றுதான்சமாதிவிட்டகன்றவனுகுஞ்,செறியுஞ்ஞானஞ்சேர்மனத்தினர்சகத்தொழில்செயினும், பிறிவிறத்துவநிட்டராய்ச் சமாதியிற்பெயரார் (இ-ள்) வெறிதிருக்கினும்- சும்மாயிருந்தாலும்— விடாமல்- இடைவிடாமல்— தொழிலினைமேவினும்- தொழிலைப்பொருந்தினுலும்— அறிஞன்- ஆத்மஞானி— என்றுதான்- எப்போதுதான்—சமாதிவிட்டகன்றவனுகும்- சமாதியைவிட்டுநீங்கினவனுவன்— செறியும்- நிறைந்த— ஞானஞ்சேர்மனத்தினர்- ஞானமுண்டானமனதையுடையவர்கள்— சகத்தொழில்செயினும்- உலகவிபசாரங்களைச்செய்தாலும்— பிறிவில்- பிரிவில்லாத— தத்துவநிட்டராய்- உண்மைநிஷ்டையையுடையவராய்—சமாதியிற்பெயரார்- சமாதியைவிட்டுநீங்கமாட்டார்கள்— (எ-று) [இ-ம்] சகலமுந்தனதுல்லாசமாய்விளங்குஞ்சமாதிநீங்காதவறிஞர்சந்நிதியிற்சகலமுஞ்சேட்டிக்குமென்பதாம் - - - - *

(சுசு) (அ-கை) பாவிக்கும்போதப்பாவனைசுகதுக்கத்தைத்தொடரவில்லையோவென்றவிரண்டாம்வினாவுக்குத்தரம். (கவி) பிரமவஞ்சலியுடன்பதுமாதனம்பெறினும், விரவசாந்தர்கள்சமாதியின்மேவலராசைத், திரணபாவகனுகியசிற்றுணர்வொன்றே, வரசமாதியாம்வெறிதிருக்குமஃதன்றுவள்ளால். (இ-ள்.) வள்ளால்- உதாரமுள்ளவனே— விரவசாந்தர்கள்- பூரணமானசாந்தியில்லாதவர்கள்— பிரமவஞ்சலியுடன்-பிரமாஞ்சலியுடனே— பதுமாதனம்பெறினும்- பத்மாசனத்தைப்பெற்றாலும்—சமாதியின்மேவலர்-சமாதியிற்பொருந்தார்கள்— ஆசைத்திரணம்-இச்சையென்னுந்துரும்புக்கு—பாவகனுகிய- அக்கினியாயிருக்கின்ற— சிற்றுணர்வொன்றே- ஆத்மஞானமொன்றே— வரசமாதியாம்- மேன்மையானசமாதியாகும்— வெறிதிருக்கும்- (சாந்தியில்லாமற்)சும்மாயிருக்கும்—அஃதன்று- அதுசமாதியல்ல— (எ-று) [இ-ம்] பாவனையென்னுமிச்சாத்துரும்பை. பாவனுதீதமென்னும், ஞானுக்கினியெரித்தலினதுதுன்பவின்பங்களையெங்ஙனந்தொடருமென்பதாம். - - - - *

(சுஎ) (அ-கை) போகங்களிற்சென்றுமதிலழுந்தாதிருக்கின்றாயோவென்றமூன்றாம்வினாவுக்குத்தரம். (கவி) ஒருமையாயென்றுமனமிறந்துண்மையைபுணரில், வரசமாதியாஞ்சொல்லினர்மனத்தினினிறைந்தோர், மருளின்மெய்ம்மையோர்மதிதம்மை மறக்கிலாசிறிதுந், தருந்தொழிற்றிறமறக்கிலாக்காலமேசமமாம் (இ-ள்.) என்றும்- எப்போதும்— ஒருமையாய்- ஒருவழிப்பட்டதாய்—மனமிறந்து- மனோநாசமான(திருத்தியாய்)— உண்மையைபுணரில்- தத்துவஞானத்தையறியில்— வரசமாதியாம்- (அத்தஞானமே)மேலானசமாதியாக— மனத்தினினிறைந்தோர்- மனதிற்பூரணமானவர்கள்— சொல்லினர்- சொன்னார்கள்— மருளின்மெய்ம்மையோர்மதி- மயக்கமில்லாதசத்துக்களறிவு— சிறிதும்- அற்பமும்— தருந்தொழிற்றிறம்- தாரநின்றதொழிலின்றிறத்தை— மறக்கிலா- மறவாத—காலமேசமமாம்-காலத்துக்கொப்பாக—தம்மை- தனதாத்மஸ்வரூபத்தை—சிறிதுமறக்கிலா- நிமிடமுமறக்கமாட்டாது—(எ-று) [இ-ம்] உண்மைஞானமான்தன்னைப்பிரியாமலாத்மாநந்தத்தையனுபவிக்குமாபோகிகளெங்ஙனம்விடயபோகத்திலழுந்துவாரென்பதாம் - - - - *

(சுஅ) (அ-கை) நிருவிகற்பசமாதியையடைந்தாயோவென்ற நான்காம்வினாவுக்குத்தரம் (கவி) நெறிகொள்காற்றுதன்கதியினைமறப்பிலாநெறிபோ, லறிஞர்புத்திவேறறிவதில்லறிவையேயயரார், பிறிவில்புத்தியிலொருமையோர்சமத்துவப்பெரியோர், செறிதொழிற்பிறிவகற்றினேர்தற்பதம்பெற்றோர் (இ-ள்) நெறிகொள்காற்று- செவ்வையாகச்செல்லுகின்றவாயுவானது— தன்கதியினை- தனதுநடையினை— மறப்பிலாநெறிபோல்- மறவாதநீதியைப்போல— அறிஞர்புத்தி- ஞானிகளறிவானது—வேறறிவதில்லறிவையே-பேதமற்றவாத்மஞானத்தையே— அயரார்- மறவார்கள்— பிறிவில்புத்தியில்- பிரிவில்லாதவறிவில்—ஒருமையோர்- ஒற்றுமையையுடையவர்கள்— சமத்துவப்பெரியோர்- சமத்துவத்தையுடையசத்துக்கள்—செறிதொழிற்பிறிவகற்றினேர்- நெருங்கியவிபகாரவேற்றுமையைநீக்கினவர்கள்— தற்பதம்பெற்றோர்- பிரமபதத்தையடைந்தவர்கள்— (எ-று) [இ-ம்] பிரித்தறியும்போதும்பிரிவற்றஞானவடிவமாய்விளங்குதலின்ஸ்வரூபசமாதியைப்பெற்றவரென்பதாம். - - - *

(சுக) (அ-கை) பார்த்திபமுனிசந்தோஷித்துரைத்தல் (கவி) ஆதலாற்பன்மையொருமையாமுடற்றொழிலனைத்திற், போதுசெய்கிலாவுத்தமவாக்கினுற்பொலிந்த, சேதனத்தவரெங்குளர்சித்திரமாகப், பேதமற்றறவறிந்தனைதற்பதம்பெற்றாய். (இ-ள்) ஆதலால்- ஆதலினால்— பன்மை- பலவாகவும்— ஒருமையாம்- ஒன்றாகவுமிருக்கின்ற— உடற்றொழிலனைத்தில்- சரீரவிபகாரங்களனைத்திலும்— போதுசெய்கிலா- காலம்போக்காத— உத்தமவாக்கினுற்பொலிந்த- மேலானவாக்கியத்தினுற்ப்ரகாசித்த— சேதனத்தவர்- அறிவையுடையவர்கள்— எங்குளர்- எவ்விடத்திலிருக்கின்றார்கள்—சித்திரமாக- அதிசயமாக— பேதமற்று- பேதமில்லாமல்— அறிவறிந்தனை- அறிவையறிந்தாய்— தற்பதம்பெற்றாய்- பிரமபதத்தையடைந்தாய்— (எ-று) - - - - - - - - - - - - - - - - *

(எ0) (அ-கை) இ-து. (கவி) உள்ளுறக்குளிர்ந்தனையுவாமதியெனவுள்ளத், துள்ளகங்கரத்துயரறத்துரிசறநிறைந்தாய், தள்ளலாநலைபெற்றெங்கும்விளங்குதிதானே, தெள்ளியோயென்றபார்கத்துச்சுரகுமேற்செப்பும். (இ-ள்) உவாமதியென- பூர்ணசந்திரனைப்போல— உள்ளுறக்குளிர்ந்தனை- உள்ளேகுளிர்ச்சியடைந்தாய்— உள்ளத்துள்- மனதின்கண்— அகங்கரத்துயரற- அகம்பாவமென்னுந்துக்கங்கெடவும்— துரிசற- களங்கமறவும்— நிறைந்தாய்- பூரணமானாய்— தள்ளலாநலை- நீக்கப்படாதவாத்மநிச்சயத்தை— பெற்று- அடைந்து— தானே- தானேசுயமாக—எங்கும்விளங்குதி- எவ்விட

த்தும்ப்ரகாசிக்கின்றாய்— தெள்ளியோயென்ற- தெளிவையுடையசுரகுவே யென்றுகேட்ட— பரிக நீத்- பரிகனென்பவர்க்கு— சுரகுமேற்செப்பும்- சுரகுராசனானவர் மேற்சொல்லுவார்— (எ-று) [இ-உ-க-ம்.] சுரகுவேந்தன்சொல்லியவனுபவத்தைக்கேட்டகம்பாவநீங்கியாநந்தசீதளமானஸ்வரூப சமாதியைப்பெற்றாயெனமுனிசொன்னானென்பதாம் - - - - - - - - - - - ✻

(சுசு) (அ-கை.) பின்னுமரசன்றனதனுபவத்தைச்சுருக்கிச்சொல்லுதல் (கவி) பரந்தசொற்களா ற்பயனென்சொல்பயனெலாம்பாறி, நிரந்தரஞ்சமமாய்மனந்தன்னுளே நிகழ்ந்து, சுரந்தவின்பமாய் நிகரிலாவொருவிழிதோன்றி, திரந்தனிற்றெரிகின்றதாலென்றனன்றெளிந்தோன் (இ-ள்) பரந்த சொற்களால்- விரிந்தவசனங்களினால்— பயனென்கொல்- இலாபமென்ன— பயனெலாம்பாறி- ப்ர யோசனங்களனைத்தும்விட்டு— நிரந்தரம்- எப்போதும்— சமமாய்- சமமாக— மனம்- மனமான து— தன்னுளே நிகழ்ந்து- தனக்குட்ப்ரகாசித்து— சுரந்தவின்பமாய்- உண்டானபிரமாநந்தமாய்— நிகரிலாவொருவிழிதோன்றி- ஒப்பற்றவோர்ஞானதிருஷ்டியுண்டாய்— திரந்தனிற்றெரிகின்றது- திரமாக(வாத்மஞானம்)ப்ரகாசிக்கின்றது—தெளிந்தோன்- தெளிந்தசுரகுவானவன்— என்றனன்- எ ன்றுசொன்னான்—(எ-று)[இ-ம்]சித்றின்பநீங்கிப்பேராநந்ததிஷ்ருடியாற்சஞ்சரிக்கின்றேனென்ன வப்போதவ்விருவருமாத்மசுகத்திற்கலந்திருந்தனரென்பதாம். - - - - - - - - - ✻

சுரகுகதைமுற்றிற்று. ஆகதை உருஇ கவிதை. (சூாஙஎ)



# பாசவிபாசன்கதை.



(அ-கை.) முற்சதையினிரதிசயாநந்தமானகுளிர்ச்சியே சமாதியாதலாலஃதுள்ளவர்களாராயினு மவர்களே சகத்விஸ்ராந்தியடைந்த சீவன்முத்தர்களென்றுசொல்லி யவ்வனுபவமில்லாவிடில்வெகுவித மானவருத்தமுண்டாமென்பதையறிவிக்குநிமித்தம் பாசவிபாசன் சம்வாதஞ்சொல்லுகிறார் - - ✻

(க) (அ-கை) சுகபோதமுள்ளவர்க்குத்துன்பமொருபோதுமின்றெனல். (கவி) இத்திறஞ்சுரகுப ரிகனென்றிசைத்தவிருவருஞ்சகத்தொழுங்கெண்ணி, பத்திசெய்தொருவர்க்கொருவர்பூசித்துப்பரிந்து தம்பணிதலினின்றா,ரத்தியாத்துமமேநத்தமும்வடிவாயகமுகமாய்மகிழ்வெய்தி, சித்தினைவிடாமலனு பவிப்பவர்க்குச்சிறிதுமோராகுலஞ்சேரா. (இ-ள்) இத்திறம்- இந்தப்ரகாரம்— சுரகுபரிகனென்றி சைத்த- சுரகுபரிகனென்றுசொல்லப்பட்ட— இருவருஞ்சகத்தொழுங்கெண்ணி- இவ்விருவர்களுமு லகத்தினதுமுறைமையைவிசாரித்து— பத்திசெய்து- அன்புசெய்து—ஒருவர்க்கொருவர்பூசித்து-ஒரு வருக்கொருவராராதனைசெய்து— பரிந்து- விரும்பி— தம்பணிதலினின்றார்- தங்கள்செய்கையிலிரு ந்தார்கள்— நித்தமும்- எப்பொழுதும்— அத்தியாத்துமமே- அத்தியாத்மஞானமே— வடிவாய்- ஸ்வரூபமாகியும்—அகமுகமாய்-அந்தர்முகமாகியும்— மகிழ்வெய்தி- மகிழ்ச்சியடைந்து— சித்தினை விடாமல்- ஆத்மஞானத்தைவிடாமல்— அனுபவிப்பவர்க்கு- அனுபவிப்பவர்களுக்கு— சிறிதுமோ ராகுலஞ்சேரா- எவ்வளவுமொருவருத்தமவராது— (எ-று) - - - - - - - - - ✻

(உ) (அ-கை) சீவனையெருதாகவுருவகப்படுத்தியவன்படுந்துன்பத்தையறிவித்தல் (கவி) ஆசைவ ன்பாசத்திரளினாற்சட்டுண்டரும்பிணியீக்கடிக்கணுங்கி, யேசுறுபோகக் கதைகளானொத்துண் டிச் சைமுட்கோலினாலுலைந்து,காசுறுகருமச்சேற்றிலேயழுந்திக்கடுஞ்சகக்காட்டிலேசுழன்று,விசுமாமோ கத்தளிர்நிழற்றுயிலும்வீரனேசீவனாமெருது. (இ-ள்) ஆசை- இச்சையென்னும்— வன்பாசத்திரளி னால்- வலியகயிற்றினினங்களினால்— சட்டுண்டு- பந்தமுற்று— அரும்பிணி- அரியவியாதியென்னு ம்— ஈக்கடிக்கணுங்கி- ஈக்கடிக்குத்திடுக்குற்று— ஏசுறுபோகம்- குற்றம்பொருந்திய போகமென் னும்— கதைகளான்மொத்துண்டு- தடிகளாலடிபட்டு— இச்சை- அஞ்ஞானமென்னும்— முட்கோ லினாலுலைந்து- தார்க்கோலினாலலைந்து—காசுறுகருமம்- துற்கருமமென்னும்— சேற்றிலேயழுந்தி- கும்பியிலமிழ்ந்திருந்து— கடுஞ்சகம்- கொடியசம்சாரமென்னும்— காட்டிலேசுழன்று- கானகத் திற்சுற்றி—விசுமாமோகம்-விசாலமான்றமகாமோகமென்னும்—தளிர்நிழல்- தழைநிழலில்—வீரனே- வெற்றியையுடையஸ்ரீராமா—சீவனாமெருதுதுயிலும்-சீவனானவிடபநித்திரைசெய்யும்— (எ-று) ✻

(ங) (அ-கை) சீவனைக்கரையேற்றவேண்டுமெனல் (கவி) மேவுறுதுன்பப்பெருஞ்சுமைசுமந்து மீட்சிபோக்கிலவையுடற்புண்ணை, யீவறுபிறவிக்குழியில்வீழ்சிவவெருத்தினையிக்குழிநின்று, மோவலின் முயல்வாலெடுப்பதேவலியாமுயர்ந்தஞானிகளுறவுளதே, னாவிகர்நாவாய்தருவபோலூகநல்குவர்பவக் கடல்கடக்க. (இ-ள்.) மேவுறுதுன்பம்- அடையப்பட்டதுக்கமென்னும்— பெருஞ்சுமைசுமந்து- க னத்தசுமையைச்சுமந்து— மீட்சிபோக்கு- வருதல்போகுதலென்னும்— இவை- இவ்விரண்டும்— உ டற்புண்ணை- சரீரத்துக்குரணமாய்— ஈவறுபிறவி- அளவற்றசநநமென்னும்—குழியில்வீழ்- பள் ளத்தில்விழுகின்ற— சீவவெருத்தினை- சீவனாகியவிடபத்தை—இக்குழிநின்றும்- இந்தக்குட்டையிலி ருந்தும்—ஓவலின்முயல்வால்- ஒழிவற்றமுயற்சியினால்— எடுப்பதேவலியாம்- எடுத்தலேவல்லமை யாம்— உயர்ந்தஞானிகள்- மேலானஞானவான்களது— உறவுளதேல்- நட்புண்டானால்— நாவிகர்- கப்பலையுடையவர்கள்— நாவாய்தருவபோல்- வங்கத்தைக்கொடுப்பதுபோல—பவக்கடல்கடக்க- சந நசாகரத்தைத்தாண்ட— ஊகநல்குவர்- யுத்தியைக்கொடுப்பார்கள்— (எ-று) [இ-ங-ச-ம்.] சீவனது சிதாபாசத்தன்மையைநீக்கிச்சிவமாக்கும்பொருட்டுஞானவான்களதுசகாயம்வேண்டுமென்பதாம். ✻

(ச)(அ-கை.) சீவன்சிவமாதற்குமகான்கள்சகாயமன்றியுமனதின்சகாயமுக்கியமாய்வேண்டுமெனல். (கவி) எவ்விடத்தில்லைநல்லஞானிகளாமீங்கனிமலர்குளிர்சோலை, யவ்விடங்கானன்மேடதாமாங்கேயமர்பவரறிவிலாரன்றோ, சவ்வியசெல்வநட்பு நூல்சுற்றங்கருமமாதிகளெலாமுதவாச், செவ்வியமனமேயுதவுநல்வேண்டுஞ்சிவனைச்செல்கதியேற்ற, (இ-ள்) நல்லஞானிகளாம்- ஆத்மஞானிகளாகிய— ஈங்கனிமலர்- இரசமுள்ளகனிகளும் புஷ்பங்களுநிறைந்த— குளிர்சோலை- குளிர்ந்த தோப்பானது— எவ்விடத்தில்லை- எந்தவிடத்திலில்லையோ— அவ்விடம்- அந்தவிடம்— கானன்மேடதாம்- பேய்த்தேரையுடையபாலைவனமாம்— ஆங்கு- அவ்விடத்தில்— அமர்பவர்- வாசஞ்செய்பவர்கள்— அறிவிலாரன்றோ- அஞ்ஞானிகளல்லவா— சவ்வியசெல்வம்- பொருந்தியசெல்வமும்— நட்பு- சினேகமும்— நூல்- சாஸ்திரமும்— சுற்றம்- உறவும்— கருமம்- கிரியைகளும்— ஆதிகளெலாமுதவா- முதலியயாவுஞ்சகாயமாகாது— செவ்வியமனமே- ஒழுங்குள்ளமனமே— சீவனை- ஆத்மாவை— செல்கதியேற்ற- அடையத்தக்கபரகதியிலேற்றுதற்கு— உதவுநல்வேண்டும்- சகாயஞ்செய்யவேண்டும்— (எ-று) - - ✻

(ரு) (அ-கை) மனமானதுதேகத்தைச்சடமென்றறியிற்சித்தைத்தரிசிக்குமெனல் (கவி) நெறியுறவிடாமலுடனுறைநட்பாநெஞ்சமாத்திரத்தினைக்கூடிச், சிறிதுநாடுதலுஞ்சீவனுய்வுறுமாற் சிங்கியாமிந்தவுடலை, முறிதருகாட்டமோட்டினேராகமுற்றுறுகருத்தினனோக்கி, யறியிலிவ்வளவாலறிந்துசேர்த்திடலாமண்டருமிறைஞ்சுபேரறிவை. (இ-ள்) நெறியுற- செவ்வையாய்— விடாமல்- நீங்காமல்— உடனுறைநட்பாம்- உடன்பொருந்துகின்றசினேகமாகிய— நெஞ்சமாத்திரத்தினைக்கூடி- மனதுமாத்திரத்தைச்சேர்ந்து— சிறிதுநாடுதலும்- கொஞ்சம்விசாரிக்குமளவில்— சீவனுய்வுறும்- சீவன்வாழ்வையடையும்— சிங்கியாமிந்தவுடலை- நஞ்சாகியவிம்மாமிசசரீரத்தை— முறிதருகாட்டம்- முறியாநின்றவிறகுக்கும்— ஓட்டினேராக- ஒட்டுக்குஞ்சமானமாக— முற்றுறுகருத்தினால்- முதிர்ந்தமனதினால்— நோக்கியறியில்- பார்த்தறிந்தால்— இவ்வளவால்- இந்தவளவினால்— அண்டருமிறைஞ்சுபேரறிவை- தேவர்களும்வணங்காநின்றபூரணஞானத்தை— அறிந்துசேர்த்திடலாம்- உணர்ந்தடையலாம்(எ-று) ✻

(சா) (அ-கை.) சித்துதரிசனத்தாற்றுரியதிருஷ்டிவெளிப்படுமெனல் (கவி) நிறைபெருங்கடலொத்துரையெலாங்கடந்துநிகரறப்பற்றறவெறிதாய்க், குறைவில்சிற்சுடரின்கொழுந்துடன்கூடிக்கோதறவசைவறக்குலாவு, மறைவறுதுரியவிழிவெளிப்படுமேன்மற்றதனுடனதுநிகரா, முறைமையிற்றுயில்வோர்சன்னிதாவுவமைமொழியலாய்த்தோன்றிடுமன்றே (இ-ள்) நிறைபெருங்கடலொத்து- நிறைந்தமகாசமுத்திரத்துக் கொப்பாகியும்— உரையெலாங்கடந்து- வாக்கியங்களனைத்திற்கு மதீதமாகியும்— நிகரற- சமானமில்லாததாகியும்— பற்றற- பற்றற்றதாகியும்— வெறிதாய்- கேவலமாகியுமிருக்கின்ற —குறைவில்சிற்சுடரின்- நிறைந்தஞானப்ரகாசத்தினது— கொழுந்துடன்கூடி- சுவாலையோடுஞ்சேர்ந்து— கோதற- குற்றமறும்படியாகவும்— அசைவற- அசைவறும்படியாகவும்— குலாவும்- விளங்காநின்ற— மறைவறு- மறைப்பில்லாத— துரியவிழிவெளிப்படுமேல்- துரியதிருஷ்டியானதுவெளிப்படுமாயின்— அதனுடன்- அதனோடும்— அது- அதுதானே— நிகராமுறைமையில்- சமானமானமுறைமையினால்— துயில்வோர்க்கு- சுழுத்தியடைந்தவனுக்கு— சன்னிதா- சமீபமாக— உவமைமொழியலாய்- உவமிக்கத்தக்கதாய்— தோன்றிடும்- தோற்றும்— (எ-று) - - - - - - ✻

(எ) (அ-கை) அகம்பாவநீங்கினவத்துரியமேபிரமாநந்தமாகவிளங்குமெனல் (கவி) ஆனவவ்வவத்தைவடிவெலாம்பார்க்குமம்பரம்போலகன்றுளதா, மீனநெஞ்சுடன்சேரகங்கரமிறந்தாலெப்பொருளிடத்தினுமிருக்குந், தீனமில்பரமாநந்தமாய்த்தோன்றுந்திகழ்பரமாத்துமவடிவாந், தானனிமுயலிற்கிடைத்திடுந்துயில்வோர்தன்மைபோற்றம்மிலுறுவதாம் (இ-ள்) ஆனவவ்வவத்தை- ஆகியவந்தத்துரியவவத்தையானது— வடிவெலாம்பார்க்கும்- உருவங்களனைத்தையுந்தரித்திருக்கும்— அம்பரம்போல்- ஆகாயத்தைப்போல— அகன்றுளதாம்- வியாபகமுள்ளதாம்— ஈனநெஞ்சுடன்சேர்- இழிவுள்ளமனதுடன்சேர்ந்த— அகங்கரமிறந்தால்- அகம்பாவமரித்தால்— எப்பொருளிடத்தினுமிருக்கும்- எவ்வஸ்துக்களிடத்திலுநிறைந்திருக்கின்ற— தீனமில்- குறைவில்லாத— பரமாநந்தமாய்த்தோன்றும்- பிரமாநந்தமாகப்ரகாசிக்கும்— திகழ்பரமாத்துமவடிவாம்- ப்ரகாசிக்கின்றபரமாத்மஸ்வரூபமாகும்— தானனிமுயலிற்கிடைத்திடும்- தான்மிகவுமுயற்சிசெய்யிலபிக்கும்— துயில்வோர்தன்மைபோல்- சுழுத்தியையுடையவர்கள்குணத்தைப்போல— தம்மிலுறுவதாம்- தம்மிடத்திற்றேடத்தக்கதாம்— (எ-று)

(அ) (அ-கை) பிரமாநந்தவடிவமானதுரியமேயாவுமாய்விளங்குமெனல் (கவி) உரைகளுங்கெட்டாதுளத்தனுபவிக்கிலுறுவதாமுரைத்தவத்துரியங், கரையறுமிவைகண்முழுதுமப்பொருளாங்கனபரிணமியாமுள்ளம், வரைவறவொடுங்கிலுட்புறமெங்குமன்னியசராசரவடிவாம், புரையறுதேவதேவனும்பரமப்பொருளனுபவப்படுந்தானே (இ-ள்) உரைத்தவத்துரியம்- சொல்லியவத்துரியமானது— உரைகளுக்கெட்டாது- வசனங்களுக்ககப்படாது— உளத்தனுபவிக்கில்- அகத்திலனுபவித்தால்— உறுவதாம்- பொருந்துவதாகும்— கரையறும்- வரம்பற்ற— இவைகண்முழுதும்- இவையெல்லாம்— அப்பொருளாம்- அவ்வாத்மஸ்வரூபமாகும்— கனபரிணமியாமுள்ளம்- மிகுந்தவேறுபாடுடையமனமானது— வரைவறவொடுங்கில்- பிரிவில்லாமலடங்கினால்— உட்புறமெங்கும்- உள்ளும்புறம்புமாகியவெவ்விடத்தும்— மன்னியசராசரவடிவாம்- நெருங்கியசராசரவடிவமாகிய— புரையறு- குற்றமற்ற— தேவதேவனும்- தேவதேவனான— பரமப்பொருள்- பிரமவஸ்து— தானேயனுபவப்படும்- சுயமாகவேயனுபவப்படும்— (எ-று.) - - - - - - - - - - - - - ✻

(கூ) (அ-கை) சாக்ஷாத்காரவனுபவமுண்டாகுங்கிரமமறிவித்தல். (கவி) அதற்பின்விடயவாதனைகளறுவதாகுமதற்பின்னர், விதப்பிலாதபொருளினுடைவிளக்கமாகுமதற்பின்னர், சுதப்பண்பில்லாச்சமத்துவத்தாற்சொரூபந்தன்னிற்பரிணமமிதத்திலுளதாமுயர்ந்தோர்கரு மெண்ணவொண்ணு வடிவி

துவே. (இ-ள்.) அதற்பின் - (இவ்வனுபவம்வந்)ததன்பின்பு—விடயவாதனைகள் - விடயவாசனைகள்—
அறுவதாகும் - கெடுவதாம்— அதற்பின்னர் - அதன்பின்பு— விதப்பிலாத - மிசவும் (பேத) மில்லா
த— பொருளினுடைவிளக்கமாகும் - வஸ்துவினுடையப்ரகாசமுண்டாகும்—அதற்பின்னர் - அதன்பி
ன்பு— சுதப்பண்பில்லா - கெடுந்தன்மையில்லாத— சமத்துவத்தால் - சமபாவனையினால்— சொரூபந்
தன்னில் - (ஆத்ம) ஸ்வரூபத்தில்— பரிணமம் - வேறுபா (டழிதல்)—இதத்திலுளதாம் - உரித்தாகவுண்
டாகும்— உயர்ந்தோர்க்கும் - மகான்களுக்கும்— இதுவே - இவ்வனுபவமே— எண்ணவொண்ணவடி
வு - மதிக்கப்படாதஸ்வரூபமாம்—. (எ-று) [இ-சூ-க-ம்.] சீவனுனவன்சிதாபாசத்தன்மையை நீக்கிச்சி
வாகாரமாய்விளங்குமரபையறிவித்ததாம். - - - - - - - - - - - - - *

(௰) (அ-கை.) மனமானதுவெளிமுகத்தைக்கெடுத்தசமுகப்படிலாநந்தமுண்டாமஃதின்றேவில்
லையென்பதற்குத்திருஷ்டாந்தமறிவித்தல் (கவி) மனத்தைமனத்தான்மாய்வித்துமாசில்பொருளேக்கா
ரோலோர், தினத்துமுலகின்றுயர்மாயாச்சித்தமிறக்கிற்செறிசுகத்தாற், கனத்தவுணர்வின்மதிநிகழுங்க
ழறுமிதற்கோரிதிகாச, மினத்திலினியாய்கேட்டியென விசைத்தான்வசிட்ட னிராமனுக்கே (இ-ள்.)
மனத்தை - (விடயசம்மந்தமான) மனதை—மனத்தான்மாய்வித்து - (விவேகமுள்ள) மனதினுற்கெடு
ப்பித்து— மாசில் - குற்றமற்ற— பொருளேக்காரோல் - ஆத்மவஸ்துவைத்தரிசிக்கார்களாயின்— ஓர்தி
னத்தும் - ஒருநாளும்—உலகின்றுயர்மாயா - சம்சாரதுக்கநசிக்காது— சித்தமிறக்கில் - மனதிறந்தால்—
செறிசுகத்தால் - நிறைந்தவாநந்தத்தினால்— கனத்தவுணர்வின்மதிநிகழும் - வியாபகமுள்ளவாத்மாவி
னதுஞானம்ப்ரகாசிக்கும்— கழறுமிதற்கு - சொல்லாநின்றவிவ்வனுபவத்துக்கு— ஓரிதிகாசம் - ஒருக
தையை— இனத்திலினியாய் - குலத்திலினிமையுள்ளவனே— கேட்டியென - கேட்பாயென்று—இரா
மனுக்கு - ஸ்ரீராமனுக்கு—வசிட்டன் - வசிட்டமுனியானவர்—இசைத்தான் - சொன்னார்— (எ-று) *

(௰௧) (அ-கை) முனிவரிருவருண்டெனல் (கவி) சையமென்னுநெடுங்கிரிமேற்றவவத்திரிமாமு
னியுறையு, ளுய்யவதன்பாலிருமுனிவர்சூழலொன்றினுறைகிற்போர், மெய்யராகுமவ்விருவர்க்கிருவ
ர்பிறந்தார்வியன்புதல்வர், செய்யவிபாசன்பாசனெனச்செப்பும்பெயரோர்செறிநண்போர் (இ-ள்)
சையமென்னுநெடுங்கிரிமேல் - சையமென்கின்றபெரியமலையின்மேல்— தவவத்திரிமாமுனி - தவத்
தையுடையவத்திரிமுனியானவர்— உறையுளதன்பால் - வசிக்குமாச்சிரமத்தில்—உய்ய - வாழும்படியா
க— இருமுனிவர் - இரண்டுமுனிவர்கள்— சூழலொன்றினுறைகிற்போர் - ஓரிடத்தில் வாசஞ்செய்பவ
ர்கள்— மெய்யராகுமவ்விருவர்க்கு - உண்மையாகியவந்தவிரண்டுபேர்களுக்கும்—வியன்புதல்வர் - பெ
ருமைபொருந்தியபுத்திரர்கள்— இருவர்பிறந்தார் - இரண்டுபேரவதரித்தார்கள்— செய்ய - செம்மை
யான— விபாசன்பாசனென - விபாசனென்றும்பாசனென்றும்— செப்பும்பெயரோர் - சொல்லுநா
மத்தையுடையவர்கள்— செறிநண்போர் - நெருங்கியசிநேகிதத்தையுடையவர்கள்—(எ-று) - *

(௰௨) (அ-கை.) முனிவரிருவரும்பிரிதல். (கவி) ஒழுங்கால்விருத்திபெற்றிருந்தோரொன்றேயி
ரண்டாயினவென்ன, வழுங்காவுளத்தோரவர்தந்தையன்னையென்போருயிரிறப்ப,விழுங்காநின்றபொ
ருமலொடுமேற்செய்பிதாக்கள்விதிகண்முடித், தெழுங்காதலினுனொந்திரங்கியிருபாலகன்று ரிருவரு
மே. (இ-ள்) ஒழுங்கால் - கிரமமாக—விருத்திபெற்றிருந்தோர் - வளர்ச்சியடைந்திருந்தார்கள்—ஒன்
றேயிரண்டாயினவென்ன - ஒன்றேயிரண்டாயினதுபோல— அழுங்காவுளத்தோர் - சலனமற்றமன
முடையவர்கள்— அவர்தந்தை - அவர்கள்பிதா— அன்னையென்போர் - தாயென்றுசொல்லப்பட்டவர்
கள்— உயிரிறப்ப - மரணமடைய— விழுங்காநின்றபொருமலொடும் - கொள்கின்றவழுதலோடும்—
மேற்செய் - இனிசெய்யவேண்டிய— பிதாக்கள் - மாதாபிதாக்களுக்குள்ள— விதிகண்முடித்து - கிரி
யைகளைமுடித்து— எழுங்காதலினால் - உண்டாகும்பாசத்தினால்—நொந்திரங்கி - வருத்தத்துடனழுது
க்கொண்டு—இருவரும்ருபாலகன்றார் - இரண்டுபேர்களுமிரண்டிடத்திற்பிரிந்துபோனார்கள் (எ-று) *

(௰௩) (அ-கை) முனிவரிருவருங்கூடிமுகமனுரைத்தல் (கவி) அளவில்காலம்வனத்துறைந்தாரரி
யதவத்தாலுடல்வாட்டி, கிளருமாசைவிட்டகன்றார்கிட்டப்பெற்றார்கேண்மையினு, ளுளமுங்கண்ணு
ங்களிப்பெய்தியுயர்ந்தவிபாசனுரைசெய்வான், வளருமுலகினல்லுறவேமன்னுமுயிர்போல் வந்தனை
யால் (இ-ள்) அளவில்காலம் - அளவற்றகாலம்— வனத்துறைந்தார் - கானகத்தில்வாசஞ்செய்து— அ
ரியதவத்தால் - அருமையானதபத்தினால்— உடல்வாட்டி - சரீரத்தைவாட்டி— கிளரும் - நிறைந்த— ஆ
சைவிட்டகன்றார் - இச்சையைவிட்டுநீங்கினார்கள்—கிட்டப்பெற்றார் - (இருவருஞ்)சேரப் பெற்றார்க
ள்— கேண்மையினால் - நட்பினால்—உளமும் - மனதும்—கண்ணும் - நேத்திரமும்— களிப்பெய்தி -
மகிழ்ச்சியடைந்து—உயர்ந்தவிபாசனுரைசெய்வான் - மேலானவிபாசமுனிசொல்லுவான்— வளருமு
லகில் - வளராநின்றசகத்தில்— நல்லுறவே - (எனக்கு) நல்லுறவானவனே—மன்னுமுயிர்போல் - நெ
ருங்கிய (வெனது) பிராணனைப்போல— வந்தனை - வந்தாய்— (எ-று) - - - - - - - *

(௰௪) (அ-கை) பாசனைப்பார்த்தாத்மானுபவத்தைவிபாசன்வினவுதல். (கவி) இதுநீள்காலமெங்
குறைந்தாயிதயவிடர் தீர்ந்தனைசொல்லோ, பொதுவாயுனைநீயறிந்தனையோபோதவிஞ்சைபலித்தன
வோ, சதுராநலனுண்டாயினையோசாற்றுமென்றமொழிகேட்டு, முதுவாய்மையினற்பாசனிவைமொ
ழிந்தான்விபாசன்முகநோக்கி. (இ-ள்) இதுநீள்காலம் - இதுபரியந்தம்வெகுகாலமாய்— எங்குறைந்
தாய் - எவ்விடத்தில்வசித்தாய்— இதயவிடர்தீர்ந்தனைசொல்லோ - மனதுக்கந்தீர்ந்தாயோ—பொது
வாய் - சமத்துவமாக— உனைநீயறிந்தனையோ - உன்தாத்மஸ்வரூபத்தை நீயுணர்ந்தாயோ— போதவிஞ்
சைபலித்தனவோ - பூரணஞானம்லபித்ததோ— சதுரா - சதுரையுடையபாசனே— நலனுண்டாயி
னையோ - சுகத்தைப்பெற்றாயோ— சாற்றுமென்ற - சொல்லுமென்றுகேட்ட— மொழிகேட்டு - வச
னத்தைக்கேட்டு— முதுவாய்மையினால் - முதிர்ந்தவுண்மையினால்— விபாசன்முகநோக்கி - விபாசன்

முகத்தைப்பார்த்து—பாசனிவைமொழிந்தான்- பாசனிவைகளைச்சொன்னான்—(எ-று) - - - ✻

(௰௫)(அ-கை)நீங்கவேண்டியதைநீங்கியடையவேண்டியதையடையாவிடினெங்ஙனம்பரமசுகமுண்டாகுமெனப்பாசனுரைத்தல். (கவி) உயிர்போலுறவேவிதிவயத்தா லுன்னைக்கண்டேனுளங்குளிர்ந்தேன், செயிர்சேர்பிறப்பிலுழல்வேற்குச்சிறந்தநலனாந்திறனெங்கே, பயில்வதறிவதறிவரவும்பாயுமுள்ளங்கெடாதளவும், வெயில்வெம்பவநீங்காதளவுமிக்கநன்மைத்திறமெங்கே. (இ-ள்) உயிர்போலுறவே- பிராணனைப்போலிருக்கின்ற(வென) துறவானவரோ— விதிவயத்தால்-(எனது)விதிவசத்தினால்— உன்னைக்கண்டேன்- உம்மைத்தரிசித்தேன்— உளங்குளிர்ந்தேன்- மனதிற்குளிர்ச்சியையடைந்தேன்— செயிர்சேர்-குற்றமுள்ள— பிறப்பிலுழல்வேற்கு- சநநத்திற்சுழலுகின்றவெனக்கு—சிறந்தநலனாந்திறனெங்கே- சிறப்புள்ளசுகமுண்டாகும்விதமெப்படி—பயில்வதறிவதறிவரவும்-சொல்லப்பட்டவறியத்தக்கவையறிகின்றமட்டும்— பாயுமுள்ளங்கெடாதளவும்- தாவாநின்றமனது கெடாதமட்டும்— வெயில்வெம்பவம்- கொடியசநநமானது— நீங்காதளவும்- நீங்காதமட்டும்—மிக்கநன்மைத்திறமெங்கே- மிகுந்தநன்மையுண்டாகும்விதமேது— (எ-று.) - - - - - - - - - ✻

(௰௬)(அ-கை.) இச்சைநீங்கிஞானமுண்டாகும்பரியந்தமெப்படிசநநமரணநீங்குமெனல் (கவி) மனத்தின்முளைக்குமாசையெலாம் வடித்தகுடாரத்தான்மரம்போற், கனத்தவேரோடறுமளவுங்கண்ணுஞானம்பெறுமளவு, மனத்தபேதம்போய்ச்சமமாமளவும்போதமுறுமளவுஞ், செனித்துமரிக்குந்துயரல்லாற்சிறந்தநன்மைத்திறமெங்கே (இ-ள்) மனத்தின்முளைக்கும்- மனதிலங்குரியாநின்ற— ஆசையெலாம்- இச்சைகளனைத்தும்— வடித்தகுடாரத்தால்- தீட்டியகோடாலியினால் (வெட்டப்படும்)—மரம்போல்-தருவைப்போல— கனத்தவேரோடறுமளவும்-பருத்தமூலத்தோடுகெடுகின்றமட்டும்— கண்ணுஞானம்பெறுமளவும்- ப்ரத்யக்ஷஞானத்தையடையுமட்டும் — அனத்தபேதம்போய்- அனர்த்தமானவேறுபாடுநீங்கி— சமமாமளவும்- சமமுண்டாகுமட்டும்— போதமுறுமளவும்- பிரமஞானம்வருமட்டும்— செனித்துமரிக்கும்- பிறந்திறக்கின்ற— துயரல்லால்- துன்பமேயன்றி— சிறந்தநன்மைத்திறமெங்கே- சிறந்தசுகமுண்டாகும்விதமேது— (எ-று) - - - - - - - ✻

(௰௭) (அ-கை) ஆத்மஞானத்தையடையாதவர்கள்பிறப்பிறப்பிற்சுழல்வார்களெனல். (கவி) மடமைநோய்க்குமாமருந்தாய்வருமாத்துமதத்துவப்பேற்றை, விடநின்றவர்க்குவன்பிறப்பாம்விடுசிமேன்மேல்வந்திடுமா, விடரின்பத்தினிடைப்பட்டுமிறப்புப்பிறப்பில்வீழ்ந்தலைந்துந், தடமாருலகிலுழலுயிர்கள்சருகினுலர்வொன்றிசைத்தான், (இ-ள்.) மடமைநோய்க்கு- அஞ்ஞானமென்னும்வியாதிக்கு— மாமருந்தாய்வரும்- மகாவவிடதமாய்வாராநின்ற— ஆத்துமதத்துவப்பேற்றை- ஆத்மதத்துவமென்னும்பயனை— விடநின்றவர்க்கு- விடும்படியிருந்தவர்களுக்கு— வன்பிறப்பாம்- கொடியசநநமென்னும்— விடுசி- விடூசிசாவியாதியானது— மேன்மேல்வந்திடும்- மேலுமேலும்வரும்— இடரின்பத்தின்-சுகதுக்கத்தினது—இடைப்பட்டும்-நடுவிலகப்பட்டும்—இறப்புப்பிறப்பில்வீழ்ந்து-சநநமரணத்தில்வீழ்ந்து— அலைந்தும்- சலனப்பட்டும்— தடமாருலகில்- விசாலம்பொருந்தியசகத்தில்— உழலுயிர்கள்- சுழலாநின்றசீவகோடிகள்— சருகின்- சருகைப்போல— உலர்வொன்றிசைத்தான்- பயனடையார்களென்றுசொன்னான்— (எ-று) [இ-அ-க-ம்] அடையவேண்டியகிரமப்படியாத்மசுகத்தையடையாவிடிற்சநநமரணமெங்ஙனநீங்குமென்பதாம். - - - - - - - - ✻

பாசவிபாசன்கதை முற்றிற்று. ஆகதை ௨௩௰இகவிதை (௩௱௫௰௪)



# வீதகவ்வியன்கதை.



(அ-கை.) முற்கதையிற்சிற்சுகங்கூடாவிடிற்சித்தவிஸ்ராந்திகூடாதென்பதையறிவித்து, இஃதுண்டாதற்கேதுவான சித்தநிரோதனத்துக்குச்சங்கத்தியாகமும்பிராணநிரோதனமுங் கொஞ்சஞ்சகாயமாமென்பதையறிவிக்குநிமித்தம்வீதகவ்வியன்கதையைநிரூபிக்கிறார். - - - - - - - ✻

(௧) (அ-கை.) ஞானத்தாற்பவத்தைக்கெடுக்கவேண்டுமெனப்போதித்தல் (கவி) வே. இன்னணமேநன்மைவினாத்தம்மிற்றா மியம்பியுறையிருவருக்கு, முன்னியநற்காலத்தான் முத்திதருமெய்ஞ்ஞானமுந்திற்றன்றே, யன்னதினாலுரைக்கின்றேன்வெம்பவத்தைஞானத்தாலன்றிமாய்க்கப், பின்னையொருநெறியில்லைப்பாசத்தாற்பிணிப்புண்டபிணிநெஞ்சுக்கே (இ-ள்) இன்னணமே-இந்தப்ரகாரமே— நன்மைவினா- நல்ல(வனுபவமாகிய)வினாவுகளை—தம்மிற்றாமியம்பி- தங்களுக்குட்டாங்களே பேசிக்கொண்டு— உறையிருவருக்கும்-வசிக்குமிரண்டுபேர்களுக்கும்—முன்னியநற்காலத்தால்-சிந்திக்கப்பட்டநல்லகாலத்தினால்— முத்திதரும்- கைவல்யசுகத்தைகொடாநின்ற—மெய்ஞ்ஞானம்-உண்மைஞானமானது— முந்திற்று- ப்ரசன்னமாயிற்று—அன்னதினால்- அத்தன்மையினால்—உரைக்கின்றேன்- சொல்லுகிறேன்—வெம்பவத்தை- கொடியசநநத்தை— ஞானத்தாலன்றி-ஞானத்தினலல்லாமல்—மாய்க்க-கெடுக்க—பாசத்தால்- ஆசையென்னுங்கயிற்றினால்—பிணிப்புண்ட- கட்டுப்பட்ட—பிணிநெஞ்சுக்கு-துயரானமனதுக்கு—பின்னையொருநெறியில்லை-வேறொருமார்க்கமில்லை—(எ-று)

(௨) (அ-கை) அந்தஞானமியாதினாலுண்டாகுமெனில் (கவி) பற்றிலதாய்நின்மலமாமனம்விவகாரம்பயின்றும்பந்தமேவாப், பற்றுளநெஞ்சளவிறவம்படைத்தாலும்பந்தமேபயிலுமுள்ளிற், பற்றிலதாயினியதொழில்பயில்சீவன்புறத்தொழில்கள் பண்ணினாலும், பற்றறப்பண்ணுவிடினும் பண்ணு

வோன்புசிப்போனும்பான்மைமேவா. (இ-ள்) பற்றிலதாய்- பிடிப்பில்லாததாய்— நின்மலமாமனம்- மாசின்றியமனது— விவகாரம்பயின்றும்- தொழில்களைச்செய்தும்— பந்தமேவா- பந்தத்தையடையாது— பற்றுளநெஞ்சு- பிடிப்புள்ளமனது— அளவிறவம்படைத்தாலும்- அளவற்றதவத்தைப்பெற்றாலும்—பந்தமேபயிலும்-பந்தத்தையேயடையும்— உள்ளிற்பற்றிலதாய்- அகத்திலாசையில்லாமல்—இனியதொழில்பயில்சீவன்- நல்லசெயலைச்செய்கின்றசீவனானது— புறத்தொழில்கள்பண்ணினும்- புறச்செயல்களைச்செய்தாலும்— பற்றறப்பண்ணுவிடினும்- பற்றில்லாமற்செய்யாவிட்டாலும்— பண்ணுவோன்- செய்பவனும்— புசிப்போனும்- புசிப்பவனுமாகியவிருவர்களுடைய— பான்மைமேவா- குணத்தைப்பொருந்தாது— (எ-று) [இ-உ-க-ம்] மனோசீவன்களுக்குவிடயப்பற்றறுதியுண்டானான்ஞானமுதிக்குமென்பதாம். - - - - - - - - - - - - - - - *

(௩) (அ-கை.) பற்றறுதியுண்டாவதற்கப்பற்றைநான்காகப்பகுத்துவினவியவதிலிரண்டிற்குத்தரங்கூறல். (கவி) என்னனுமேபற்றுவதெத்தன்மையெப்பற்றாலெய்தும்பந்தந், துன்னருவீடெப்பற்றாலெய்தலாந்தொடர்பற்றைத்துடைக்குமாறென், பன்னுகெனுமிராமனுக்கு முனிபகர்வானுடலுயிரைப்பகுப்பதொன்று, முன்னுகிலாதுடலினைநம்புதல்பற்றாமதனாலேயுளதாம்பந்தம். (இ-ள்) என்னனும்- என்றுசொல்லவும்—பற்றுவதெத்தன்மை- பற்றென்பதெவ்விதமானகுணத்தையுடையது— எப்பற்றாற்பந்தமெய்தும்- எந்தப்பற்றினாற்பந்தமடையும்— துன்னரும்வீடு- அடைதற்கரியமோக்ஷத்தை—எப்பற்றாலெய்தலாம்-எந்தப்பற்றினாலடையலாம்— தொடர்பற்றை- தொடராநின்றபந்தத்தை— துடைக்குமாறென்- கெடுக்கின்றப்ரகாரமென்ன— பன்னுகெனும்- சொல்லவேண்டுமென்றுகேட்ட— இராமனுக்கு- ஸ்ரீராமனுக்கு— முனிபகர்வான்- வசிட்டமுனிசொல்லுவார்— உடல்- சரீரத்தையும்— உயிரை- சரீரியையும்—பகுப்பதொன்றும்- பிரித்தறிவதொன்றையும்— உன்னுகிலாது- சிந்தியாமல்— உடலினை- சரீரத்தை— நம்புதல்பற்றாம்- நம்புதலேபற்றாகும்— அதனாற்பந்தமுளதாம்- அப்பற்றாற்பந்தமுண்டாகும்— (எ-று) [இ-ம்] ஆத்மதரிசனமின்றித்தேகமயமாயிருத்தலேபற்றாகும் அஃதேபவத்தைக்கொடுக்கும்பற்றென்பதாம் - - - - - - - *

(௪) (அ-கை) மூன்றாவதற்குத்தரங்கூறல் (கவி) ஈதனைத்துஞ்சொரூபமேயானிங்கெத்தையிச்சிப்பேனெதையிகழ்வேனெனல்பற்றின்மை, மாதுயர்தீரிதுசீவன்முத்தர் மெய்யின்மன்னுமாலியானில்லைப்பிறருமில்லை, மேதகுமின்பங்களெலாமேவின்மேவமேவாதேன்மேவாதாயிடுகவென்றே, யோதியவாறுள்ளேபற்றின்மையுண்டேலுயர்வீட்டுக்கிதுநெறியென்றுணர்தியன்றே. (இ-ள்) ஈதனைத்துஞ்சொரூபமே- இதுவென்கின்றசகலமுமாத்மஸ்வரூபமே— யானிங்கு- நானிவ்விடத்தில்— எத்தையிச்சிப்பேன்- எதைவிரும்புவேன்— எதையிகழ்வேன்- எதைவெறுப்பேன்— எனல்பற்றின்மை-என்பதுபற்றில்லாததாம்— மாதுயர்தீரிது-மிகுந்ததுக்கந்தீர்ந்தவிப்பற்றின்மையானது— சீவன்முத்தர்மெய்யில்- சீவன்முத்தர்களுடையசரீரத்தில்—மன்னும்- பொருந்தும்— யானில்லை- நானில்லை— பிறருமில்லை- பிறருமில்லை—மேதகுமின்பங்களெல்லாம்- மேன்மைபொருந்தியசுகங்களனைத்தும்—மேவில்மேவ- பொருந்திற்பொருந்தக்கடவது— மேவாதேல்-பொருந்தாவிடின்—மேவாதாயிடுகவென்று- பொருந்தாததாய்ப்போகக்கடவதென்று— ஓதியவாறு- சொல்லியப்ரகாரம்—உள்பற்றின்மையுண்டேல்-மனதிற்பற்றின்மையுண்டானால்—உயர்வீட்டுக்கிதுநெறியென்றுணர்தி- மேலானமோக்ஷத்துக்கிதுமார்க்கமென்றறிவாய்— (எ-று) [இ-ம்]சர்வம்பிரமமயமாய்விளங்குதலின்விருப்புவெறுப்பின்றிச்சுயமானவணங்கற்பற்றான பற்றேவீட்டைக்கொடுக்கும்பற்றென்பதாம். - - - *

(௫) (அ-கை) நான்காவதற்குத்தரங்கூறல் (கவி) கருமமிலாமையைவிரும்பார் கருமம்பற்றார்கருதுபலன்விட்டிரண்டுங்கண்டாலொப்போர், மருவியபற்றிலாதவரொன்றுரைப்பர்மேலோர்வருகருமபலாதிகளைக்கருமத்தாலே, யொருவலறமனத்தாலேநிபுணமாக வொருவுதல்பற்றின்மையெனவுணர்தியித்தாற், பெருகவளர்தொழிலனைத்துங்குற்றந்தீர்ந்துபெறலரியமுத்தியையும்பேறுநல்கும். (இ-ள்) கருமமிலாமையைவிரும்பார்- தொழிலின்மையைவிரும்பமாட்டார்கள்— கருமம்பற்றார்- தொழிலையும்விரும்பார்கள்— கருதுபலன்விட்டு- நினைக்கின்றபயனைவிட்டு—இரண்டுங்கண்டால்- முன்சொன்னவிரண்டையுஞ்செய்தால்—ஒப்போர்-சமானமானவர்கள்—மருவியபற்றிலாதவரொன்று-பொருந்தியபற்றில்லாதவர்களென்று—மேலோர்-சத்துக்கள்—உரைப்பர்-சொல்லுவார்கள்—வருகருமபலாதிகளை- வாராநின்றகருமத்தின்பயன்முதலானவைகளை— கருமத்தாலேயொருவலற- கருமத்தினனீக்காமல்—மனத்தால்-மனதினால்— நிபுணமாகவொருவுதல்-சாமர்த்தியமாகத்தள்ளுதல்—பற்றின்மையென- பற்றில்லாததென்று—உணர்தி- அறிவாய்— இத்தால்-இதனால்—பெருகவளர்- மிகவும்வளருகின்ற— தொழிலனைத்தும்- செயல்களியாவிலும்— குற்றந்தீர்ந்து- குற்றநீங்கி— பெறலரியமுத்தியையும்-அடைதற்கரியமோக்ஷத்தையும்—பேறுநல்கும்-இலாபமாகக்கொடுக்கும்— (எ-று) [இ-ம்] கிரியாக்கிரியைகளிற்பயனைக்குறியாமற்றற்பயனாய்ச்செய்வதேபற்றறுத்தலென்பதாம். - - - - - *

(௬) (அ-கை) முன்சொல்லியவிரண்டுபற்றிருக்குமிடத்தைச்சொல்லுதல். (கவி) புழுமுதலாம்பல்பிறப்பிற்றோன்றிப்பல்காற்பூதமெலாங்கடற்றிரைபோற்பொன்றுந்தன்மை, பழுதுதரும்பற்றினதுபடர்ச்சியாகும்பற்றுதானிருவகையாமவற்றினொன்று, நழுவுபயனிவியொன்றுவணங்கற்பாற்றுநவின்றபயனிலிமூடர்நண்ணற்பாற்றும், வழுவறுதத்துவமுணர்ந்தோர்க்குடைமையாகவணங்கற்பாற்றும்பற்றுமருவுந்தானே. (இ-ள்) புழுமுதலாம்-கிருமிகீடமுதலாகிய—பல்பிறப்பில்- அநேகசநநங்களில்—பூதமெலாம்-உயிர்களியாவும்—பல்கால்- அநேககாலமும்—தோன்றி- உண்டாகி—கடற்றிரைபோல்- சமுத்திரத்தினலையைப்போல— பொன்றுந்தன்மை- கெடுகின்றகுணமானது— பழுதுதரும்பற்றினது- குற்றத்தைக்கொடுக்கின்றபற்றினுடைய— படர்ச்சியாகும- பரப்பாகும்— பற்றுதானிரு

வகையாம்-பற்றுன திரண்டுப்ரகாரமாகும்— அவற்றினென்று- அவைகளிலொன்று— நழுவுபயனிவி-
நழுவாநின்றவந்திப்பற்றென்றும்— ஒன்று- மற்றொன்று— வணங்கப்பாற்றும்- அவந்திப்பற்றெ
ன்றுஞ்சொல்லப்படும்— நவின்றபயனிவி- சொல்லியவந்திப்பற்றுனது— மூடர்நண்ணற்பாற்றும்-
மூடர்கள்பொருந்தத்தக்கதாம்— வழுவறுதத்துவம்- குறைவற்றவாத்மதத்துவத்தை— உணர்ந்தோர்
க்கு- அறிந்தவர்களுக்கு— உடைமையாக- ஆபரணங்களாக—-வணங்கற்பாற்றும்பற்று— அவந்திப்
பற்றுனது—மருவும்-பொருந்தும்—(எ-று)[இ-ம்] இவ்விரண்டுபற்றிற்பெத்தனுக்குரியதொன்றுமு
த்தனுக்குரியதென்றுமாமென்பதாம். - - - - - - - - - - - - - - *

(எ) (அ-கை) பற்றுகளினிலக்கணமுரைத்தல் (கவி) ஆற்றுமதத்துவவுணர்வால்விவேகந்தன்
னலடைவாகவுண்டாம்பின் பணுகாசசென்ம, மேற்றமுளதொழுதகையபற்றீதாகுமீதன்றிப்பயனிவி
யாம்பற்றேதென்னி, லூற்றமுறுமுணர்வின்றியுடலமுன்னமுறுபொருளினுலுண்டாமுலகந்தன்னி
ற், றோற்றமுறுபிறவிமீண்டுள்ளதாகுந் தோன்றலேயிவையிரண்டுந்துணிந்துகொள்ளே (இ-ள்)ஆற்
றுமதத்துவவுணர்வால்- ஆத்மதத்துவஞானத்தினுலும்—விவேகந்தன்னுல்- விவேகத்தினுலும்— அடை
வாகவுண்டாம்- கிரமமாகவுண்டானதாகியும்— பின்பு- திரும்பவும்— சென்மம்- பவமானது—அணு
கா- நெருங்காததாகியுமிருக்கின்ற—ஏற்றமுள- மேலாகிய— தொழுதகையபற்றீதாகும்- அவந்திப்
பற்றிதுவேயாகும்—ஈதன்றி- இதுவல்லாமல்—பயனிவியாம்பற்றேதென்னில்- வந்திப்பற்றெதுவெ
ன்னில்— ஊற்றமுறுமுணர்வின்றி- மேலாகியஞானமில்லாமல்— உடலமுன்னம்- சரீரமுதலாக—
உறுபொருளினுல்- பொருந்துகின்றவஸ்துக்களினுல்— உண்டாம்- உண்டாகிய— உலகந்தன்னில்-ச
கத்தினிடத்தில்—தோற்றமுறுபிறவி- உண்டாகப்பட்டபவங்களே—மீண்டுள்ளதாகும்- திரும்பவுடை
யதாகும்— தோன்றலே- குழந்தாய்— இவையிரண்டும்- இவ்விரண்டுபற்றுகளேயும்— துணிந்துகொ
ள்- (இப்படியென்று) தெளிந்துகொள்வாய்—(எ-று)[இ-ம்] ஞானத்தைப்பற்றியதனமாக்குதலொ
ன்றுந்தேகத்தைப்பற்றிய தனமாக்குதலொன்றுமாமெனபதாம் - - - - - - - - *

(அ) (அ-கை) வணங்கப்பாற்றுனபற்றின்பெருமையையுரைத்தல். (கவி) வளையாழிகைதரித்த
செங்கண்மேனிவணங்கப்பாற்றும்பற்றின்வசத்தினுலே, யிளையாமல்விவிதமாந்தொழிலினுலேயெவ்வு
லகுநன்றுகவி ரங்கிக்காக்கு. முளையாத விஞ்ஞானகதிசேர் சித்தருலகபாலகராகியுரைத்தவாறே, விளை
யாடிவணங்கப்பாற்றென்னும்பற்றுல்விரிந்தசகமூற்றத்தின்மேவிநின்றார். (இ-ள்) வளையாழிகைதரி
த்த- சங்குசக்கரத்தைக்கரத்திற்றரித்த—செங்கண்மேனி- சிவந்தகண்ணையுடையவிஷ்ட்ணுமூர்த்தியான
வர்— வணங்கப்பாற்றும்பற்றின்- அவந்திப்பற்றினது—வசத்தினுல்- வயத்தினுல்—இளையாமல்-மெ
லியாமல்— விவிதமாந்தொழிலினுல்- பலவிதமானசெயல்களினுல்—எவ்வுலகுநன்றுக- சகலசகங்களை
த்தையுநன்மையாக— இரங்கிக்காக்கும்- கிருபையுடனிரட்சிக்கும்— உளையாத- வருத்தமில்லாத—வி
ஞ்ஞானகதிசேர்- மெய்ஞ்ஞானபதத்தைச்சேர்ந்திருக்கின்ற—சித்தர்- சித்தர்களும்— உலகபாலகராகி-
சகரட்சகராய்— உரைத்தவாறே- முன்சொல்லியப்ரகாரமே— விளையாடி- விளையாடிக்கொண்டு —வ
ணங்கப்பாற்றென்னும் பற்றுல்- அவந்திப்பற்றினுல்— விரிந்த- பரந்திருக்கின்ற— சகமூற்றத்தின்-
உலகரூபத்தில்— மேவிநின்றார்- பொருந்தியிருந்தார்கள்—(எ-று) [இ-ம்.] ஈஸ்வராதிகளும்வணங்க
ப்பாற்றுன்பற்றினு லுலகங்களிற்சீவன்முத்தித்தன்மையோடும்விளங்குகின்றனரென்பதாம், - - *

(கூ) (அ-கை) பயனிவிப்பற்றினிழிவையுரைத்தல். (கவி) கேடானநல்லதெனு நினைவினுலே கிளர்
போகவசத்தாலேகிட்டிநெஞ்சம், விடாதபயனிவியாமபற்றினுலேவெறும்பிணத்துக்கழுகுபோல்வீழு
மன்றே, பாடானபயனிவியாம்பற்றுளோர்க்குப் பன்னரகங்களும்வீடாய்ப்பண்ணப்பட்ட, வீடான
பயனிவிப்பற்றுள்ளோரொன் னுமிளவிறகானசுகவெரி யெரியுமன்றே. (இ-ள்) கேடான- கேடாகிய—
நல்லதெனுநினைவினுல்- நன்றென்கின்றபாவனையினுலும்—கிளர்போகவசத்தால்-ஒளிசெய்கின்றபோ
கவசத்தினுலும்— நெஞ்சங்கிட்டி- மனமானது நெருங்கி— வீடாத- விடுதலில்லாத— பயனிவியாம்
பற்றினுல்- வந்திப்பற்றினுல்—வெறும்பிணத்துக்கழுகுபோல்- வெறும்பிரேதத்தை(மொய்க்குங்)கழு
கைப்போல—வீழும்- (போகத்தில்) விழும்— பாடானபயனிவியாம- கேடாகியவந்தியென்னும்—
பற்றுளோர்க்கு- பற்றையுடையவர்களுக்கு— பன்னரகங்களும்- பலநரகங்களும்— வீடாய்ப்பண்
ணப்பட்ட- வீடாகச்செய்யப்பட்டன— ஈடான- சமானமாகிய— பயனிவிப்பற்றுள்ளோரொன்னு
ம்- வந்திப்பற்றுள்ளவர்களென்கின்ற— இளவிறகால்- சுட்கவிந்தனத்தில்— நரகவெரியெரியும்- நர
காக்கினியெரிந்துகொண்டிருக்கும்— (எ-று) [இ-ம்] சிலர்பயனிவிப்பற்றினுலுலகங்களிற்பெத்தத்த
ன்மையோடு பவநரகத்திலழுந்துகின்றனரென்பதாம். - - - - - - - *

(ய)(அ-கை.) பற்றினதிலக்கணத்தைச்சொல்லிசீவன்முத்தன்மனதினிலக்கணத்தைச்சொல்லத்தொ
டங்கல். (கவி) விச்சையெனும்விழிநன்றாய்விளங்கப்பட்டுவெம்மாயவிடயத்தின்மீட்சியெய்தி, யிச்
சையுறுபற்றென்பதெங்குமில்லாவியன்மனத்தோடிருப்பவரோயிறவாமுத்தர், நிச்சயமாமெப்போது
மெவற்றின்பாலுநிற்பவனையனைத்துடனுநிற்போனுகி, யெச்செயலுஞ்செய்வோனுஞ்சீவன்முத்தனியற்
றியவிம்மனத்தின்றனியல்புகேளாய். (இ-ள்) விச்சையெனும்விழி- ஞானமென்கின்றநேத்திரமான
து— நன்றாய்விளங்கப்பட்டு-தெளிவாகவிளக்கமாய்—வெம்மாயம்-கொடியமாயா(காரியமான)—வி
டயத்தின்- விஷயத்தினின்றும்— மீட்சியெய்தி- திரும்பி—இச்சையுறுபற்றென்பது- விருப்பம்பொ
ருந்தியபற்றென்பது— எங்குமில்லா- எவ்விடத்திலுமில்லாத — வியன்- பெருமைபொருந்திய—ம
னத்தோடிருப்பவரோ-மனதுடனிருப்பவர்களே—இறவாமுத்தர்- சீவன்முத்தராம்— நிச்சயமாய்-நி
ச்சயமாக— எப்போதும்- எக்காலமும்— எவற்றின்பாலும்- எந்தவஸ்துக்களிலும்— நிற்பவனை-
இருப்பவனுகியும்— அனைத்துடனும்- சகலவுயிர்களோடும்— நிற்போனுகி- நிற்பவனுகியும்— எச்செ

யதுஞ்செய்வோனும்- எத்தொழிலையுஞ்செய்பவனுகியுமிருக்கின்ற— சீவன்முத்தனியற்றிய- சீவன்மு த்தனடத்திய—இம்மனத்தின்றனியல்புகேளாய்- இந்தமனதினுடையசுபாவத்தைக்கேட்பாய் (எ-று.)

(௯௧) (அ-கை) இ-து. (கவி) தொழிலினினைவிற்பொருளில்விண்ணின்மேல்கீழ்சூழ்திசையிற்பு றப்போகத்தொகுதிதம்மி, லிழிதருமைம்பொறிநடையிலுள்ளினிற்குமின்னுயிரிற்சென்னியிலாநந த்தினுவி, லழியும்விழிகளின்மூக்கிற்புருவந்தன்னிலகங்கரத்திற்சீவனினுள்ளாகாசத்தில், விழிநனவிற் சொற்பனத்திற்சுழுத்திதன்னில்வெள்ளைமுதனிறமைந்தின்வியன்வண்ணத்தில். (இ-ள்) தொழிலின்- செயல்களினும்— நினைவில்- நினைவுகளினும்— பொருளில்- பொருள்களினும்— விண்ணில்- ஆகாய த்தினும்— மேல்- மேலிலும்— கீழ்- கீழிலும்— சூழ்திசையில்- சூழ்ந்திருக்கின்றதிக்குகளிலும்— புறப்போகத்தொகுதிதம்மில்- புறம்பாகியபோகக்கூட்டங்களிலும்— இழிதரும்- ஈனத்தைக்கொடு க்கின்ற— ஐம்பொறிநடையில்- பஞ்சேந்திரியவழிகளிலும்— உள்ளினிற்கும்- உள்ளிலுமிருக்கின் ற— இன்னுயிரில்- இனிதானபிராணனிடத்திலும்—சென்னியில்- சிரசிலும்— ஆநநத்தில்- முகத்திலு ம்— நாவில்- நாக்கிலும்— அழியும்விழிகளின்- கெடுகின்றகண்களிலும்— மூக்கில்- நாசியிலும்— புருவந்தன்னில்- புருவத்திலும்—அகங்கரத்தில்- அகங்காரத்திலும்— சீவனின்- சீவனிலும்— உள்ளா காசத்தில்- இருதயாம்பரத்திலும்— விழிநனவில்- விழித்திருக்கின்றசாக்கிரத்திலும்— சொற்பனத் தில்- கனவிலும்— சுழுத்திதன்னில்- சுழுத்தியிலும்— வெள்ளைமுதல்- வெண்மைமுதலாகிய— நிற மைந்தின்- பஞ்சவன்னங்களிலும்— வியன்வண்ணத்தில்- நாநாவிதநிறங்களிலும்— (எ-று) - ❊

(௯௨) (அ-கை) இ-து. (கவி) சலனத்திற்றிரத்திலடிநடுவிலீற்றிற்சமீபத்திற்றூரத்திற்சரீராங்கத் திற், பலபண்டந்தன்னிற்சேதனத்திற்சத்தபரிசாதிகளின்மகிமைபயிலின்பத்தி, லுலவுவரத்திற்போக் கிற்காலப்பண்பிலொருசிறிதும் பற்றுமலுணர்விலாறி, நிலவியகாண்பனசிறிது பயின்றுமெங்கு நிரா சையாய்ப்பரசுகத்தினிற்குநெஞ்சே. (இ-ள்)சலனத்தில்- சஞ்சலத்திலும்—திரத்தில்- திடத்திலும்— அடி- ஆதியிலும்— நடுவில்- மத்தியிலும்— ஈறில்- அந்தத்திலும்— சமீபத்தில்- சமீபத்திலும்— தூ ரத்தில்- தூரத்திலும்— சரீராங்கத்தில்- சரீரத்தினவயவங்களிலும்— பலபண்டந்தன்னில்- பலதிரவி யங்களிலும்—சேதனத்தில்- ஆத்மாவிலும்—சத்தபரிசாதிகளின்- சத்தபரிசமுதலிய (தன்மாத்திரை) களிலும்— மகிமைபயிலின்பத்தில்- பெருமையாகச்சொல்லுகின்றவாநந்தத்திலும்— உலவுவரத்திற் போக்கில்- உலவுகின்றவருதலிலும்போதலிலும்— காலப்பண்பில்- காலத்தினதுகுணங்களிலும்— ஒருசி றிதும்பற்றுமல்- ஓரற்பமும்பற்றுமல்— உணர்விலாறி- ஞானத்தில்விஸ்ராந்தியடைந்து— நிலவிய காண்பன- ப்ரகாசிக்கின்றதிரிஸ்யங்களில்— சிறிதுபயின்றும்- கொஞ்சம்பழகினுலும்— எங்கும்- எ வ்விடத்தும்— நிராசையாய்- விராகமடைந்து— நெஞ்சு- (சீவன்முத்தன்)மனது—பரசுகத்தினிற்கு ம்- பிரமாநந்தத்திலிருக்கும்— (எ-று) [இ-௩-க-ம்] சீவன்முத்தனதுமனமானது கிரியைமுதலிய வெவற்றிலும்பற்றின்றிஞானசுகமாகவேவிளங்குமென்பதாம். - - - - - - - - - - ❊

(௯௩) (அ-கை) சீவன்முத்தரதிலக்கணங்கூறல். (கவி) செப்பியவத்திறநின்றுபற்றென்றின்றிச் சிவத்தன்மையைச்சேராசீவன்முத்த, ரிப்புவியிற்றொழிலெல்லாஞ் செய்கதீரகவின்பவுணர் வன்செய் கையியற்றினுலுந், தப்பறவேவிட்டாலுந்தொழில்கடன்னைற் றருபயன்களொருசிறிதுந் தாக்கமாட் டா, மைப்புயல்கள்பலவிதமாயெழுந்தபோதும்வானகத்திற்பற்றுதவகையேபோல. (இ-ள்) செப் பியவத்திறநின்று- சொல்லியவச்சீவன்முத்தத்தன்மையிலிருந்து— பற்றென்றின்றி- பற்றென்று மில்லாமல்— சிவத்தன்மையைச்சேரா- சிதாபாசத்தன்மையைச்சேராத— சீவன்முத்தர்- சீவன்முத்த ரானவர்கள்—இப்புவியில்- இச்சகத்தில்—தொழிலெல்லாஞ்செய்க- தொழில்களனைத்தையுஞ்செய்யக் கடவன்— தீர்க- தீரக்கடவன்— இன்பவுணர்வன்- ஆநந்தபோதனுன (சீவன்முத்தன்)— செய்கையி யற்றினுலும்- தொழிலைச்செய்தாலும்— தப்பறவிட்டாலும்- குற்றமில்லாமல்விட்டுவிட்டாலும்— தொழில்கடன்னைல்- கிரியைகளினுல்— தருபயன்சள்- தரப்பட்டப்ரயோசனங்கள்— ஒருசிறிதும்- எ வ்வளவும்— மைப்புயல்கள்- கறுத்தமேகங்கள்— பலவிதமாயெழுந்தபோதும்- நாநாவிதமாசவுண் டானபொழுதும்— வானகத்தில்- ஆகாயத்தில்— பற்றுதவகையேபோல- சம்பந்தியாததன்மையை ப்போல— தாக்கமாட்டா- சேரமாட்டாது— (எ-று.) - - - - - - - - - - - - ❊

(௯௪) (அ-கை) சிதாநந்தமடைந்ததினிலக்கணங்கூறல். (கவி) அன்றியேயதுதனையுந்தீரநீக்கி யறி பொருளின்முடிவானவறிவாற்றுன்னி, யொன்றுமுபசாந்தனுய்ப்பளிங்குபோலுள்ளொளிமேவிசீவ னெருமித்துநிற்க, நன்றுணர்சிற்சுகராகிப்பெரியோராகிஞானபரராய்ப்பரமநன்றுய்ப்பெற்றோர், நி ன்றசைவார் புறத்தின்மயிற்பீலிபோல நிலைகலங்கார் மேருவைப்போனெஞ்சினுள்ளே. (இ-ள்) அன் றி- அல்லாமலும்— அதுதனையும்- அந்தவிடயாமிசத்தையும்— தீரநீக்கி- தீர்ப்பாகத்தள்ளி— அறி பொருளின்முடிவான- விடயத்தினந்தமாகிய— அறிவாற்றுன்னி- ஞானத்தினுனிறைந்து— ஒன்று முபசாந்தனுய்- பொருந்தாநின்றவுபசாந்தமுடையவனுய்—பளிங்குபோல்- ஸ்படிகமணியைப்போ ல— உள்ளொளிமேவி- உள்ளேப்ரகாசத்தைப்பொருந்தி— சீவன்- சீவனானவன்— ஒருமித்துநிற்க- (ஆத்மாவி)லொன்றுபட்டுநிற்கக்கடவன்—நன்றுணர்- நன்றுயறிந்திருக்கின்ற— சிற்சுகராகி- ஞானசு கத்தையுடையவராகியும்— பெரியோராகி- மகான்களாகியும்— ஞானபரராய்- அறிவுள்ளவராகியும்— பரமநன்றுய்ப்பெற்றோர்- மேன்மையைநன்றுகப்பெற்றவர்களாகியும்- புறத்தின்- இந்திரியவியா பாரங்களில்— மயிற்பீலிபோல- மயிலிறகைப்போல— நின்றசைவார்- நின்றுசஞ்சரிப்பார்கள்—மே ருவைப்போல்-மகாமேருவைப்போல— நெஞ்சினுணிலைகலங்கார்- மனதினிலைதளரார்— (எ-று) ❊

(௯௫) (அ-கை) ஆநந்தாதீதமுண்டாகுங்கிரமமுணர்த்தல். (கவி) அறிபொருளைவிட்டகன்றுலழி யுஞ்சித்தமந்தநிலைவியாபாரமனைத்துமில்லாச், செறிநனவிற்சுழுத்தியாமதனைநாளுந்திராதபரிசயமே

செய்யச்செய்யப், பிறிவின்முதுதுரியமாமென்பர்மேலோர்பிழையிலாவிதனிலேநிலைமைபெற்றுக்குறியறுமாநந்தமேகாந்தசீலக்கொள்கையாலனாநந்தங்கூடுமென்றே (இ-ள்) அறிபொருளைவிட்டகன்றால்- விடயங்களைவிட்டுநீங்கினால்— சித்தமழியும்- மனமானதுகெடும்— அந்தநிலை- அந்நிலையானது— வியாபாரமனைத்துமில்லா- தொழில்களனைத்துமில்லாத— செறிநனவிற்சுழுத்தியாம்- நிறைந்தநனவுச்சுழுத்தியாகும்— இதனைநாளும்- இதையெப்போதும்— தீராதபரிசயமே- ஒழியாதபரிச்சயமே— செய்யச்செய்ய- செய்யச்செய்ய— மேலோர்- சத்துக்கள்— பிறிவின்முதுதுரியமாமென்பர்- பிரிவற்றமுதிர்ந்ததுரியமாமென்றுரைப்பார்கள்— பிழையில்லாவிதனில்- குற்றமற்றவித்துரியானுபவத்தில்— நிலைமைபெற்று- நிலையையடைந்து— குறியறுமாநந்தம்- குறிப்பில்லாதவாநந்தத்தையடைய— ஏகாந்தசீலக்கொள்கையால்- தனித்தசுபாவக்கோட்பாட்டினால்— அனாநந்தங்கூடும்- ஆநந்தாதீதங்கூடும் (எ-று) *

(௱௬) (அ-கை) ஆநந்தாதீதமேதுரியாதீதமெனல் (கவி) அந்தவனாநந்தமாநந்தமென்னுமறிவினதீதந்தன்னையடைந்துளோனைத், தொந்தமிலாயோகியெனச் சொல்லலாகுந்துரியாதீதந் தனையுந்துன்னினோனும், பந்தமுறுபவம்போய்த்தாமதத்தால்வந்தபலவபிமானங்கள்போய்ப்பரமவின்ப, நந்தவிற்றன்மயமாஞ்சற்பாவந்தன்னினன்னீரிலுப்புப்போனன்றாயொன்றாம் (இ-ள்) அந்தவனாநந்தம்- அந்தவாநந்தாதீதமாகிய— மாநந்தமென்னும்- மகாநந்தமென்கின்ற— அறிவினதீதந்தன்னை- ஞானாதீதத்தை— அடைந்துளோனை- பெற்றிருப்பவனை— தொந்தமிலா- இரண்டில்லாத— யோகியெனச்சொல்லலாம்- யோகியென்றுசொல்லலாகும்— துரியாதீதந்தனையும்- துரியாதீதத்தையும்— துன்னினோனும்- அடைந்தவனாகும்— பந்தமுறுபவம்போய்- சட்டுப்படுகின்றசநநமானதுநீங்கி— தாமதத்தால்வந்த- தாமசகுணத்தினால்வந்த— பலவபிமானங்கள்போய்- நாநாவிதமானவபிமானங்களைநீங்கி— பரமவின்பம்- பரமசுகமானது— நந்தவிற்றன்மயமாம்- கெடுதலில்லாததனதுஸ்வரூபமாகிய— சற்பாவந்தன்னில்- சத்தினிடத்தில்— நன்னீரிலுப்புப்போல்- நல்லசலத்திலுப்பைக் கலந்ததுபோல— நன்றாயொன்றாம்- நன்றாகவொன்றுபடும் — (எ-று) - - - - - - - - *

(௱௭) (அ-கை) வேதங்கள்மத்தியகதநிலையேபிரமமெனச்சொல்லுதெனல் (கவி) சடமசடமெனாநோக்கமிரண்டினூடே தனியாகிநின்றபரதத்துவத்தை. யிடவியபோதாரண்யமுதலாம்வேதமிராமனேபலகாலுமியம்புமன்றே, படருறுகாண்பனகாட்சிமேவும்போதிற்பரம்பொருளின்பற்றாகிப்பயின்றவின்பந், திடவனுபூதியின்வடிவாமாதலாலேதிகழ்பிரமசாரமெனச்செப்புந்தானே (இ-ள்) சடமசடமெனும்- சடாசடமென்கின்ற— நோக்கமிரண்டினூடு- இரண்டுபார்வையின்மத்தியில்- தனியாகிநின்ற- தனிமையாயிருந்த— பரதத்துவத்தை- பரதத்துவமானஸ்வரூபத்தை— இடவியபோதாரண்யமுதலாம்- மார்க்கமாகியபிரகதாரண்யவுபநிடதமுதலாகிய— வேதம்- சுருதியானது— இராமனே- ஸ்ரீராமா— பலகாலுமியம்பும்- எப்போதுஞ்சொல்லும்— படருறுகாண்பன- படர்ந்திருக்கின்றவிடயங்களும்— காட்சி- ஞானமும்— மேவும்போதில்- பொருந்துங்காலத்தில்— பரம்பொருளின்பற்றாகி- பரமார்த்தத்திற்பற்றுதலாய்— பயின்றவின்பம்- சொல்லியபரமசுகமானது— திடவனுபூதியின்வடிவாம்- திடமாகியவனுபூதியினதுஸ்வரூபமாகும்— ஆதலால்- அதலினால்— திகழ்பிரமசாரமென- (அதுவே) ப்ரகாசிக்கின்றபிரமரசமென்று— செப்பும்- சொல்லும்— (எ-று.) - *

(௱௮) (அ-கை) நடுநிலையேநனவிற்சுழுத்தியாமெனல் (கவி) தெரிபொருளுந்தரிசனமுஞ்சேரும்போதிற்சேர்ந்தசுகவறிவுமிகச்சிறந்ததாகுந், தெரிபொருளால்வளைப்புண்டாற்பந்தமாகுந்தெரிபொருளைவிட்டகன்றாற்றிடங்கொள்வீடாந், தெரிபொருளுந்தரிசனமுஞ்சேரும்போதிற்சேர்ந்தவனுபூதியிடர்தீர்ந்ததாகுந், தெரிவுறவாங்கதுபற்றிநிற்பாய்நீநின்றிரநிலையாஞ்சுழுத்திதனைச்சேருவாயே (இ-ள்) தெரிபொருளும்- விடயங்களும்— தரிசனமும்- காக்ஷியும்— சேரும்போதில்- சேருகின்றகாலத்தில்— சேர்ந்தசுகவறிவு- சேர்ந்தவாநந்தபோதமானது— மிகச்சிறந்ததாகும்— மிகவுஞ்சிறப்பானதாம்— தெரிபொருளால்- விடயங்களால்— வளைப்புண்டால்- கட்டுப்பட்டால்— பந்தமாகும்- பந்தனமாம்— தெரிபொருளைவிட்டகன்றால்- விடயத்தைவிட்டுநீங்கினால்— திடங்கொள்வீடாம்- திடம்பொருந்தியமோக்ஷமாம்— தெரிபொருளும்- விடயமும்— தரிசனமும்- காக்ஷியும்— சேரும்போதில்- சேருகின்றகாலத்தில்— சேர்ந்தவனுபூதி- சேர்ந்தவனுபூதியானது- இடர்தீர்ந்ததாகும்— துன்பநீங்கினதாம்— தெரிவுறவாங்குநீயதுபற்றிநிற்பாய்- தெளிவாகவவ்விடத்தினியதைப்பிடித்திருப்பாய்— நின்றிரநிலையாஞ்சுழுத்திதனை- உனதுதிரநிலையாகிய(நனவிற்)சுழுத்தியை— சேருவாய்- அடைவாய்(எ-று) *

(௱௯) (அ-கை) நனவிற்சுழுத்தியேதுரியவியாபகமாய்விளங்குமெனல் (கவி) அதுதுரியநிலையடையுமடைந்தபோதிலான்மாத்தான்றூலமலவணுவுமல்ல, திதமுறுமுன்னிலையல்லப்படர்க்கையல்லச், சித்தசித்துண்டில்லையெனுந்திறங்களல்ல, வுதிதமுறுநானல்லப்பிறனுமல்லவொருவனலவநேகனலவுலகமென்றே, யிதுவெனக்காண்பனவாகிச்சித்தமாதியிருமூன்றிந்திரியத்துக்கிடமாய்நிற்கும் (இ-ள்) அதுதுரியநிலையடையும்- அச்சுழுத்தியே துரியஸ்தானத்தையடையும்— அடைந்தபோதில்- அடைந்தகாலத்தில்— ஆன்மாத்தான்- ஆத்மாவானது— தூலமல- மகத்துமன்று— அணுவுமல்ல- சூட்சுமமுமன்று— திதமுறுமுன்னிலையல்ல- திரமாகியப்ரத்யக்ஷமுமன்று— படர்க்கையல்ல- அப்ரத்யக்ஷமுமன்று— சித்து- சேதனமும்— அசித்து- அசேதனமும்— உண்டு- சத்தும்— இல்லை- அசத்தும்— எனுந்திறங்களல்ல- என்கின்றகுணங்களுமல்ல— உதிதமுறுநானல்ல- தோற்றுகின்றநானுமன்று— பிறனுமல்ல- இதரனுமன்று— ஒருவனல- ஏகனுமன்று— அநேகனல- அநேகனுமன்று— உலகமென்று- சகமென்று— இதுவெனக்காண்பனவாகி- இதுவெனநேத்திரகோசரப்பட்டவைகளாய்— சித்தமாதியருமூன்றிந்திரியத்துக்கு- மனமுதலியவாறிந்திரியங்களுக்கும்— இடமாய்நிற்கும்- ஸ்தானமாயிருக்கும்(எ-று) [இ-எ-க-ம] அனுபவத்தினிலக்கணத்தையுமதையடையுங்கிரமத்தையுமறிவித்ததாம் *

(உ௰) (அ-கை) மனதின்சங்கோசவிகாசபலனையுரைத்தல். (கவி) அத்துவேயதீதபதமாதலாலே
யதுகின்சிலன்றெங்குமதுவேயாகும், பாங்குறுவீடென்றும்பருலகிலில்லைப்பாதலத்திற்பூதலத்திற்பா
ர்க்கிலில்லை, வீங்கியவாசைகளெல்லாமிறந்தகாலைவிரிந்தமனமிறப்பதுவேவீடென்றேது, மோங்கிய
வீடெனக்குளதென்றுள்ளேயெண்ணமுண்டாகின்மீண்டுமனமுற்பவிக்கும். (இ-ள்) அத்துவேயதீதப
தமாதலால்- அத்துவேயதீதபதமாதலினால்— அதுகின்சிலன்று- அதுவற்பமன்று— எங்குமதுவேயா
கும்- எவ்விடத்துமதுவேயாகும்— பாங்குறுவீடென்று- உரிமையாகியமோக்ஷமென்று சொல்லப்
பட்டது— உம்பருலகிலில்லை- தேவலோகத்திலுமில்லை—பாதலத்தில்- பாதாளத்திலும்— பூதலத்தில்-
பூமியிலும்— பார்க்கிலில்லை- பார்க்குமிடத்தில்லை— வீங்கியவாசைகளெல்லாம்- பருத்தவிச்சைகளனை
த்தும்— இறந்தகாலை- மரித்தகாலத்தில்— விரிந்தமனமிறப்பதுவே- பரந்தமனநசிப்பதே— வீடெ
ன்றேதும்- மோக்ஷமென்றுசொல்லப்படும்— ஓங்கியவீடு- உயர்வாகியமோக்ஷமானது— எனக்குள
தென்று- எனக்குள்ளதென்று— உள்ளேயெண்ணமுண்டாயின்- உள்ளே நினைப்புதயமாயின்— மீ
ண்டுமனமுற்பவிக்கும்- திரும்பவுமனதுண்டாகும்— (எ-று) - - - - - - - - - - *

(உக) (அ-கை) மனதைக்கெடுப்பதற்குச்சாந்திவேண்டுமெனல் (கவி) நினைப்புமிகிலிவனுக்கு
ப்பிறப்பிறப்புநீங்காதுவன்பந்தநிலையதாகு, மனைத்தினுக்குமதீதமாயுருவமெல்லா மாகியகன்றாத்து
மதத்துவமேநிற்கில், வினைத்தொடராம்பந்தமெதுமுத்தியேதுவேரறச்சிந்தையைக் கெடுப்பாய்மேல
தாகத், தனைத்தெளிந்துநிறைந்தமலநெஞ்சாய் நல்லசாந்தியையுற்றோர் விரும்பார்சற்றுமொன்றும்.
(இ-ள்) நினைப்புமிகில்-(மனதின்)மனனமிகுந்தால்—இவனுக்கு-இ(ச்சிந்தனையுள்ள) வனுக்கு— பிறப்
பிறப்புநீங்காது-சநநமரணம்போகாது—வன்பந்தநிலையதாகும்-வலியபந்தநிலையாயிருக்கும் — அனை
த்தினுக்குமதீதமாய்- சகலத்துக்குமதீதமாகி—உருவமெல்லாமாகி- வடிவங்களியாவுமாகி—அகன்று-
வியாபகமாகி— ஆத்துமதத்துவமே நிற்கில்- ஆத்மதத்துவமாகநிற்குமானால்—வினைத்தொடராம்- தீவி
னைத்தொடர்பாகிய— பந்தமெது- பந்தமென்பதேது— முத்தியேது- (நல்வினைத்தொடர்பாகிய)
மோக்ஷமென்பதேது— வேரறச்சிந்தையைக்கெடுப்பாய்- மூலத்தோடேமனனத்தைக் கெடுப்பாய்—
மேலதாகத்தனைத்தெளிந்து- மேன்மையாகத் தன்னைத்தெரிந்து— நிறைந்து- பூரணமாய்—அமல
நெஞ்சாய்- நின்மலமனதாய்— நல்லசாந்தியையுற்றோர்- நன்மையானவுபசாந்தத்தைப் பொருந்தி
னவர்கள்— ஒன்றும்- ஒன்றையும்— சற்றும்விரும்பார்- அற்பமுமிச்சியார்கள்— (எ-று) - - *

(உஉ) (அ-கை) சாந்தியுண்டாவதற்குநிராசைவேண்டுமெனல் (கவி) வெந்தோடுமாபத்தாங்க
நவேற்காட்டைவெட்டுமழுப்பரமசுக மேவுந்தானஞ், சந்தோடஞ்சாந்தியெனு மரப்பூங்கொத்துச்
சாற்றுறுமிந்நிராசையுறிற்றளர்வுதீரு, மந்தோபார்குளப்படியாமுளையாமேரு வாசைகுருவிக்கூடா
மவண்மூன்றும், வந்தோர்புன்றுரும்பாகுநிராசைபூண்டமாறுதவலங்கார வடிவுளோர்க்கே. (இ-ள்)
வெந்தோடும்- எரிந்துபோகாநின்ற— ஆபத்தாங்கருவேற்காட்டை- ஆபத்தென்னுங்கருவேல்வனத்
தை— வெட்டுமழு- வெட்டுகின்றகோடாலியாகவும்— பரமசுகம்- பிரமசுகத்தை— மேவுந்தானம்-
பொருந்தாநின்றவிடமாகவும்— சந்தோடஞ்சாந்தியெனுமரம்- சந்தோடஞ்சாந்தியென்கின்றதரு
வுக்கு— பூங்கொத்து- புட்பக்கொத்தாகவுமிருக்கின்ற— சாற்றுறுமிந்நிராசையுறில்- சொல்லப்படு
கின்றவிந்நிராசைவரின்— தளர்வுதீரும்- தளர்ச்சிநீங்கும்— நிராசைபூண்ட- நிராசையை (யாபரண
மாகத்) தரித்த— மாறுதவலங்காரவடிவுளோர்க்கு- நீங்காதவலங்காரஸ்வரூபத்தையுடையவர்களுக்கு—
அந்தோ- அதிசயம்—பார்குளப்படியாம்- பூமியானது(பசுவின்)குளப்படியாகும்—மேருமுளையாம்-
மகாமேருவங்குரமாகும்— ஆசைகுருவிக்கூடாம்- திக்குகள்பறவைக்கூண்டாகும்—அவண்மூன்றும்-
மூன்றுலகமும்—வந்தோர்புன்றுரும்பாகும்-வந்தோரற்பமானதிரணமாம்— (எ-று) [இ-ங-க-ம்]
நிராசையாற்சாந்தியுண்டாயதனாலாத்மதரிசனமாயதின்மனங்களாயின்யாவுமற்பமாமென்பதாம். *

(உ௩) (அ-கை) ஞானவான்கள்பரஞானத்திலிருக்குமுறுதியைக்கூறல் (கவி) காயத்தில்வேறாகத்
தன்னைக்கண்டோன்காயமீரினுமறியான்கன்னற்கட்டி, தீயிற்காயினுமரிந்தபோதுமின்பந்திராதவா
றுபோற்றெளிந்தஞானி, மாயத்தின்மோகத்தாற்பேதமாகான்மணந்தபரபுருடன்மேன்மனஞ்சேர்
மங்கை, நேயத்தான்மனைத்தொழில்கள்செய்யுமாப்போனிகழ்தொழிற்செய்யினும்பரத்தினிலைமைநீ
ங்கான் (இ-ள்) காயத்தில்வேறாக- சரீரத்துக்குவிலட்சணமாக— தன்னைக்கண்டோன்- ஆத்மஸ்வரூப
த்தைத்தரிசித்தவன்— காயமீரினுமறியான்- சரீரத்தையரிந்தபோதுமறியமாட்டான்—கன்னற்கட்டி-
கரும்பின்கட்டியானது— தீயிற்காயினும்- அக்கினியிற்காய்ந்தகாலத்திலும்— அரிந்தபோதும்- அரி
ந்தகாலத்திலும்—இன்பந்தீராதவாறுபோல்- இரசங்கெடாதவிதத்தைப்போல—தெளிந்தஞானி-தெ
ளிவுற்றஞானவான்— மாயத்தின்மோகத்தால்- பொய்யாகியமயக்கத்தினால்— பேதமாகான்- வேற்று
மையாகான்— மணந்தபரபுருடன்மேல்- கூடியபரபுருடனிடத்தில்— மனஞ்சேர்மங்கை- மனதை
யுடையபெண்ணானவள்— நேயத்தால்- அன்பினால்—மனைத்தொழில்கள்-கிரகக்கிருத்தியங்களை— செ
ய்யுமாப்போல்-பண்ணுவதுபோல— நிகழ்தொழில்செய்யினும்- விளங்காநின்றசெயலைச்செய்தாலு
ம்— பரத்திலுநிலைமைநீங்கான்- பிரமத்தினதுநிலைமையைப்பிரியான்— (எ-று.) - - - - - *

(உ௪) (அ-கை) பற்றறுதியேவிதேகமுத்தித்தன்மையாமெனல் (கவி) பண்டத்திற்பற்றின்மையா
லேசித்தம்பயில்சாந்திமுத்திதரும்பகர்ந்தமுத்தி, பிண்டத்தோடிருந்தாலுமிராவிட்டாலும்பேறாகும்
பற்றறுத்தபெரியோர்கட்குகண்பா, மண்டுற்றநேயமறவாழ்வோரினபமவருஞ்சீவன்முத்தராம்வளர்தே
யததாற், றிரண்டுற்றவாடுமவர்பந்தமுற்றோர்சொன்னமூன்றுமவனேதாயமுத்தன். (இ-ள்) பண்
டத்தில்- விடயங்களில்— பற்றின்மையால்- இச்சையில்லாததினால்— சித்தம்- மனதில்— பயில்சாந்
தி- பொருந்தியசாந்தியே— முத்திதரும்- மோக்ஷத்தைத்கொடுக்கும்— பகர்ந்தமுத்தி- சொல்லிய

மோக்ஷமானது— பிண்டத்தோடிருந்தாலும்-சரீரத்துடன்(கூடி)யிருந்தாலும்— இராவிட்டாலும்-(சரீரத்தோ)டில்லாமற்போனாலும்—பற்றறுத்த- ஆசையைக்கெடுத்த—பெரியோர்க்கு- மகான்களுக்கு— பேறாகுமென்பர்- ப்ரயோசனப்படுமென்றுசொல்லுவார்கள்— மண்டுற்றநேயமற- விஸ்தாரமானவிடயவிச்சைநீங்க— வாழ்வோர்- சுகிப்பவர்கள்— இன்பம்வரும்- ஆநந்தமுண்டான— சீவன்முத்தராம்- சீவன்முத்தர்களாம்— வளர்நேயத்தால்-வளராநின்ற(விடய)விச்சைகளினால்—தொண்டுற்றுவாழுமவர்- அடிமைப்பட்டுசுகிப்பவர்கள்—பந்தமுற்றோர்-பந்தமடைந்தவர்களாம்—சொன்னமூன்றாமவனே-சொல்லிய(விருவர்க்குமேலான)மூன்றாவதானவனே— தூயமுத்தன்-விதேகமுத்தனாம் (எ-று) [இ-உ-ச-ம்] ஞானிகளடையும்விதேகமுத்தி பரியந்தங்கிரமமாகச்சொன்னதென்பதாம்.

(உரு) (அ-கை.) சீவன்முத்தரதுசகசநடையைத்தெரிவித்தல் (கவி) வருதொழிலின்விருப்புறான் வத்தமானவழிநிற்பன்சென்றவற்றைமனத்தினெண்ணான், கருமமுழுவதுமியற்றுந்தொடர்பந்தத்திற்கலந்தவர்பான்மனம்பற்றான்கவலைகூரான், மருவியவோர்பத்தர்பாற்பத்தனாகும்வஞ்சகர்பால்வஞ்சகனாம்வாலர்தம்பாற், பருவமுறாவாலனாம்விருத்தரானோர்பால்விருத்தனாந்தீரர்பாலுமாங்கே (இ-ள்.) வருதொழிலின்- வருங்(காலத்திலுள்ள)செய்கைகளில்— விருப்புறான்- இச்சியான்— வத்தமானவழிநிற்பன்- நிகழ்காலத்தில்(வருகின்றதொழிலின்)மார்க்கத்திலிருப்பான்— சென்றவற்றை- செல்(காலத்திலுள்ள)தொழில்களை—மனத்தினெண்ணான்-மனதினினையான்— கருமமுழுவதுமியற்றும்- தொழில்களனைத்தையுஞ்செய்வான்—தொடர்பந்தத்தில்-தொடராநின்றபந்தத்தில்— கலந்தவர்பால்-கலந்தவர்களிடத்தில்—மனம்பற்றான்- மனதுவையான்—கவலைகூரான்- துன்பத்தின்மிகான்—மருவியவோர்பத்தர்பால்- அடைந்தவொப்பற்றபத்திமான்களிடத்தில்—பத்தனாகும்-பத்திமானவன்—வஞ்சகர்பால்-வஞ்சகரிடத்தில்— வஞ்சகனாம்-வஞ்சகனவன்— வாலர்தம்பால்-குழந்தைகளிடத்தில்—பருவமுறாவாலனாம்- பருவமில்லாதகுழந்தையாவன்—விருத்தரானோர்பால்-விருத்தரானவர்களிடத்தில்—விருத்தனாம்-விருத்தனவன்— தீரர்பாலும்- தீரர்களிடத்திலும்—ஆங்கே- அப்படியேதீரனாகவிருப்பான்(எ-று)*

(உசு) (அ-கை.) இ-து. (கவி) விடலைபால்விடலையாந்துயருற்றோர்பால்வெந்துயரமுறுநிலைமைவிடாதபுந்தி, திடமுளதாமாநந்தநிறைந்துதோன்றுஞ்செவ்வியனும்புண்ணியதஞ் சிறப்பேசெய்யு, மடமையிலாவறிஞனுந்தெளிந்தோனுமதுரமுளனுந்தீனமனமில்லோனுஞ், சுடர்குளிரின் மதிகருகிலெரிகீழ்நோக்கிற்றுளங்கிவியவான்சீவன்முத்தன்றூயோன். (இ-ள்) விடலைபால்விடலையாம்- எவ்வனமுள்ளவரிடத்திலெவ்வனமுள்ளவனாகவும்— துயருற்றோர்பால்- துன்பமபொருந்தினவர்களிடத்தில்— வெந்துயரமுறும்- வெப்பம்பொருந்தியதுன்பமடைந்தவனாகவும்— நிலைமைவிடாதபுந்தி-மெய்யைவிடாத வறிவையுடைய— திடமுளதா மாநந்தம்- உண்மையுள்ள வாநந்த மானது— நிறைந்துதோன்றும்- பூரணமாகத்தோற்றுகின்ற— செவ்வியனும்- செம்மையுள்ளவனாகவும்— புண்ணியதஞ்சிறப்பேசெய்யும்- புண்ணியமானதனதுசிறப்பைச்செய்பவனாகவும்— மடமையிலா- அஞ்ஞானமில்லாத— அறிஞனும்- ஞானமுடையவனாகவும்— தெளிந்தோனும்- தெளிந்தவனாகவும்— மதுரமுளனும்- இரசமுடையவனாகவும்— தீனமனமில்லோனும்- இளைத்தமனமில்லாதவனாகவும்—தூயோன்- பரிசுத்தனாகவுமிருக்கின்ற— சீவன்முத்தன்- சீவன்முத்தனானவன்—சுடர்குளிரில்- சூரியன்குளிர்ந்தாலும்— மதிகருகில்- சந்திரன்கறுத்தாலும்— எரிகீழ்நோக்கில்- அக்கினியதோமுகமாகநோக்கினாலும்— துளங்கிவியவான்- அச்சமுற்றதிசயப்படான்—(எ-று) [இ-உ-க-ம்] யாதியாதெப்படியெப்படியோவதுவதப்படியப்படியாய்த்தானிருந்துநிரதிசயாநந்தமாய் விளங்குவனென்பதாம். *

(உஎ)(அ-கை) பிரமநிச்சயத்தைச்சொல்லியதன்சங்கற்பமானமனோசாஞ்சலியத்தைநீக்கும்பொருட்டசலனமேசகத்தாமெனத்தெரிவித்தல் (கவி) இதுவெனத்தோன்றியவெல்லாஞ்சிற்சொரூபமிவ்வண்ணம்பலசத்தியிலங்குமென்றே, புதுமைகளின்வியப்புறார்சீவன்முத்தர் புனலசைவால்வேற்றுமையேபோலத்தோன்று, முதுசுழிபோலவும்விண்ணின்மயிலின்றோகைமுன்புகடிதசைத்தலுமேமுத்தின்கூட்டங், கதுமெனமெய்போற்றோன்றல்போலவுந்தான் கனத்தசகமனத்தசைவாற்கடிதுதோன்றும். (இ-ள்.) இதுவெனத்தோன்றியவெல்லாம்- ஈதென்றுகாணப்பட்டசகலமும்— சிற்சொரூபம்- ஞானஸ்வரூபமாம்— இவ்வண்ணம்- இந்தப்ரகாரம்— பலசத்தியிலங்குமென்று- சகலசத்திகளும்ப்ரகாசிக்குமென்று— புதுமைகளின்- அற்புதங்களில்— சீவன்முத்தர்- சீவன்முத்தர்கள்— வியப்புறார்- அதிசயமடையார்கள்—புனலசைவால்- சலத்தினசைவினால்— வேற்றுமையேபோல- வேறானதுபோல— தோன்றும்- தோற்றாநின்ற— முதுசுழிபோலவும்- பழமையானசுழியைப்போலவும்—விண்ணில்- ஆகாயத்தில்—மயிலின்றோகை- மயிலினிறகை—முன்புகடிதசைத்தலும்- முன்புசீக்கிரமாகவசைத்தமாத்திரத்தில்—முத்தின்கூட்டம்-முத்தின்றிரளானது—கதுமென- சீக்கிரமாக—மெய்போற்றோன்றல்போலவுந்தான்- சத்தியம்போலத்தோற்றுதல்போலவும்— கனத்தசகம்- பாரமாயிருக்கின்றவுலகமானது— மனத்தசைவால்- மனோசஞ்சலத்தால்— கடிதுதோன்றும்- சீக்கிரமாகத்தோற்றும்— (எ-று.) [இ-ம்] மனோசாஞ்சலியத்தைநீக்குதற்குபாயஞ்சொல்லத்தொடங்கினதாம். - - - *

(உஅ) (அ-கை) சஞ்சலநீங்கிநிச்சலமானபிரமத்தையடைய மனதினசைவுமசையாமையுஞ்செவ்வையுமியாதெனிலதற்குமுந்தினவினாவுக்குத்தரங்கூறல் (கவி) வே. என்னவோதலுமியாதினலசைந்திடுமியாதினலசையாது, சொன்னநெஞ்சகந் திருத்தலாநெறியெது சொல்லெனுமிராமற்குப், பன்னுமாதவனுரைசெய்வானெள்ளிலேயெண்ணெயும்பனிதன்னின்,மன்னுவெண்மையும்போன்மனத்தசைவுதான்மருவியேமிகத்தோன்றும். (இ-ன்) என்னவோதலும்-(இப்படி)யென்றுசொல்லவும்— யாதினலசைந்திடும்- எதினாலசையும்— யாதினலசையாது- எதினாலசையமாட்டாது— சொன்னநெஞ்சகம்- சொல்லப்பட்டமனதை— திருத்தலாநெறியெது- திருத்தஞ்செய்கின்றமார்க்கமெது—சொல்லெ

னுமிராமற்கு- சொல்லென்றுகேட்டஸ்ரீராமனுக்கு— பன்னுமாதவனுரைசெய்வான்- சொல்லப்பட்டமாதவனானவசிட்டமுனிசொல்லுவார்— எள்ளிலேயெண்ணெயும்- எள்ளுக்குளெண்ணெய்போலவும்— பனிதன்னில்- பனியினிடத்தில்— மன்னுவெண்மையும்போல்- நிறைந்தவெண்மையைப்போலவும்— மனத்தசைவுதான்- மனத்தினசைவானது— மருவியேமிகத்தோன்றும்- கலந்துமிகவுந்தோற்றும்— (எ-று) [இ-ம்] சங்கற்பமேமனத்தினசைவாமென்பதாம். - - - - - - - - ※

(௨௯) (அ-கை) இரண்டாம்வினவுக்குத்தரங்கூறல் (கவி) சித்தநாசத்தினெறியிரண்டியோகமுந்தெளிந்தஞானமுமாகு, மொத்தயோகத்தான்மனத்துறுதொழிலினையொருவழிப்படமாற்றல், சுத்தஞானந்தானலம்பெறக்காண்பதாந்தொடர்மனமேதென்னின், மெத்துமாசமபூடனருரைத்ததுவிசையுயிரசைவாகும் (இ-ள்) சித்தநாசத்தின்- மனோநாசத்தினது—நெறியிரண்டு-மார்க்கமிரண்டு—யோகமும்- யோகமும்— தெளிந்தஞானமுமாகும்- தெளிந்திருக்கின்றஞானமுமாம்— ஒத்தயோகந்தான்- பொருந்தினயோகமானது— மனத்துறுதொழிலினை- மனதிற்பொருந்தியசெயல்களை—ஒருவழிப்படமாற்றல்- ஒருவழியிற்செல்லத்திருப்புதல்—சுத்தஞானந்தான்- பரிசுத்தஞானமானது—நலம்பெறக்காண்பதாம்- யாவுஞ்சுகமாகப்பார்ப்பதாம்— தொடர்மனமேதென்னில்- தொடர்கின்றமனமெதுவென்றால்— மெத்துமாசமபூடனர்- மேன்மையானவாகமத்தையாபரணமாகத்தரித்தவர்கள்— விசையுயிரசைவாகும்- வேகத்தையுடையபிராணவாயுவினசைவாகுமென்று— உரைத்தது- (முன்) சொல்லியது— (எ-று) [இ-ம்] மனத்தசைவைக்கெடுப்பதற்கதன்விருத்தியையொருவழிப்படுத்துகின்றயோகமும், அறிவிலாநந்தானுபவமுள்ளஞானமுமாமம்மனம்பிராணசலனமென்பதாம்

(௩௰) (அ-கை) பிராணபந்தனவுபாயமியாதெனல் (கவி) உரைசெய்யாருயிர்தடைப்படிலுள்ளமுமொழியுநெஞ்சசைவற்றுந், புரைசெய்சென்மம்போமாதித்தன் போய்விழிற்புவித்தொழில்போமாபோல், வரைசெய்மார்பனேயென்றலுமுடலெனுமனையின்விண்ணிடைநாளும், விரைவிலோய்வறவுழல்பிராணனியைவிலக்குமாறெதுவென்றான் (இ-ள்) உரைசெய்யாருயிர்- சொல்லப்பட்டபொருந்தியபிராணனானது—தடைப்படில்- தடைபட்டால்—உள்ளமுமொழியும்- மனதுங்கெடும்— நெஞ்சசைவற்றால்- மனோசஞ்சலங்கெட்டால்— ஆதித்தன்போய்விழில்- சூரியனத்தமனமானால்— புவித்தொழில்போமாபோல்- சகத்தின்றொழினீங்குதல்போல— புரைசெய்சென்மம்போம்- குற்றஞ்செய்கின்றசநநநீங்கும்—வரைசெய்மார்பனே- மலைபோன்றமார்பையுடையஸ்ரீராமா—என்றலும்- என்று (வசிட்டமுனி) சொல்லவும்— உடலெனுமனையின்- சரீரமென்கின்றவீட்டில்— விண்ணிடைநாளும்- இதயாம்பரத்திலெப்போதும்— விரைவிலோய்வற- வேகமாகவோய்வில்லாமல்—உழல்பிராணனியை- சுழலுகின்றபிராணன்முதலியவாய்வுக்க(ளசைவை)— விலக்குமாறெதுவென்றான்- மாற்றுகின்றவிதமெதுவென்றுஸ்ரீராமன்கேட்டான்— (எ-று) - - - - - - - - - - - - ※

(௩௧) (அ-கை) பிராணயாமவுபாயம்பத்துவிதமாகவறிவிக்கத்தொடங்கல் (கவி) முனிவனோதுவானூலொடுமறிஞரைமுன்னியேவிராகத்தை, நனிமுயன்றுகற்றிதனிற்குடும்பமாநடைவிலங்கதுவிட்டுத், தனிநிராசைதானிறைந்திடில்விரும்பியதற்பொருட்டியானத்தா, லனிசநீள்பகலொருமையேவிளங்கிடவடுத்தசாதனைதன்னால் (இ-ள்) முனிவனோதுவான்- வசிட்டமுனிசொல்லுவார்— நூலொடுமறிஞரைமுன்னி- (ஆத்மஞான) சாஸ்திரங்களுடன்ஞானிகளைச்சிந்தித்(தடைந்)து—விராகத்தை- வைராக்கியத்தை—நனிமுயன்று- மிகவுமுயற்சிசெய்து—கற்றிதனினால்- அற்பியாசித்தவிவைகளினால்— குடும்பமாம்- சம்சாரமாகிய—நடைவிலங்கதுவிட்டு- நடைவிலங்கைநீங்கி—தனிநிராசைதான்- ஒப்பற்றநிராசையானது—நிறைந்திடில்- நிறையுமானால்— விரும்பியதற்பொருட்டியானத்தால்- அன்புற்றபிரமநிஷ்டையினால்— அனிசநீள்பகல்- சதாகாலமும்— ஒருமையேவிளங்கிட- ஒன்றாகவேவிளங்கும்படி—அடுத்தசாதனைதன்னால்- (அதற்)கடுத்தசாதனத்தினால்—(எ-று.) - - - - - - - - - - - ※

(௩௨) (அ-கை) முதலாவதுமிரண்டாவதுமுரைத்தல் (கவி) ஏகதத்துவக்கனபரிசயத்தினுலிவ்வுயிர்தடையெய்துந், தேகபூரகாதியிலுயிரினைப்புரந்திடமுறுபழக்கத்தா, லூகமாகவேகாந்தமுற்றுள்ளுணர்யோகபாவனைதன்னுன், மேகமேனியாய்பிராணனிலசைவுதான்விலக்கிடப்படுமென்றே, (இ-ள்) ஏகதத்துவம்- ஒன்றாகியதத்துவத்தின்— கனபரிசயத்தினால்- திடாற்பியாசத்தினால்— இவ்வுயிர்தடையெய்தும்- இப்பிராணனானதுதடைபடும்—தேகபூரகாதியில்- உடலிலுண்டாகும்பூரகமுதலான— உயிரினைப்புரந்து- பிராணயாமஞ்செய்து— திடமுறுபழக்கத்தால்- திரமுள்ளவற்பியாசத்தினால்— ஊகமாக- உச்சாகமாக— ஏகாந்தமுற்று- தனித்தவிடத்திருந்து— உள்ளுணர்- அகத்திலறியாநின்ற— யோகபாவனைதன்னால்- ஞானபாவனையினால்— மேகமேனியாய்- மேகநிறத்தையுடையஸ்ரீராமா— பிராணனிலசைவுதான்- பிராணசலனமானது— விலக்கிடப்படும்- மாற்றப்படும்— (எ-று) [இ-௩-௧-ம்] ஒன்றானவாத்மஞானவற்பியாசத்தினாலும்யோகாற்பியாசத்தினாலும் பிராணனடங்குமென்பதாம். ※

(௩௩) (அ-கை) மூன்றாவதுநான்காவதுமுரைத்தல் (கவி) பிரணவத்தினுச்சாரணமுடிவினிற்பிறந்தசொல்லுறுமுண்மை, விரவுநாட்டத்தாற்றுயில்பவனுணர்வுதான்வெளிப்படிலுயிர்நிற்கும், பரவுதாலுமூலஞ்செறியிதழினைப்படருநாவாற்றள்ளி, யுரவினுலுயர்புரையிலேபிராணனையோட்டினுலுயிர்நிற்கும். (இ-ள்) பிரணவத்தின- ஓங்காரத்தினது— உச்சாரணமுடிவினில்- உச்சரிப்பினந்தத்தில்—பிறந்த- உண்டான— சொல்லுறுமுண்மை- நாததத்துவத்தினுண்மையை— விரவுநாட்டத்தால்- மிகுந்தவனுசந்தானத்தினால்— துயில்பவன்- சுழுத்தியடைபவனது—உணர்வுதான்- விருத்திஞானமானது— வெளிப்படில்- விடுபட்டால்— உயிர்நிற்கும்- பிராணனானதுதடைப்படும்— பரவு- பரவாநின்ற—தாலுமூலஞ்செறி- நாக்கினடியினெருங்கிய— இதழினை- இதழை— படருநாவாற்றள்ளி- படர்ந்தநாவினுனிக்க— உரவினால்- திடமுள்ள(முயற்சி)யினால்—உயர்புரையில்- ஊர்த்ததாந்தரத்தில்—

பிராணனையோட்டினல்- உயிளைச்செலுத்தினல்— உயிர்நிற்கும்- பிராணன்றடைப்படும்— (எ-று)
[இ-ம்] பிராணவாந்தத்திற்சுகித்தஞானத்தைத் தரிசிக்கும்யோகத்தினுலும் லம்பிகாயோகத்திற்கேசரி
முத்திரையினுலும் பிராணனடங்குமென்பதாம் - - - - - - - - - - - - - *

(ருச)(அ-கை)ஐந்துமாறுமேழுமெட்டுமுரைத்தல், (கவி) நாடுமெங்குலிபன்னிரண்டெல்லையினுசி
யினுனிதன்னினீடுவானத்திலறிவுகண்ணிறந்திடினிலைபெறவுயிர்நிற்குந்;தேடுசாதனையாலுயர்புரைவழிசி
ங்குவைமேல்விரலீரா, றாடுபோயுயிரெல்லையினின்றுணர்வொளிக்குமேலுயிர்நிற்கும் (இ-ள்)நாடும்-
பார்க்கின்ற— நாசியினுனிதன்னில்- நாசிகாந்தத்தில்— அங்குலிபன்னிரண்டெல்லையில்- பன்னிரண்ட
ங்குலமளவில்— நீடுவானத்தில்- நீண்டவாகாயத்தில்— அறிவுகணிறந்திடில்- விருத்திஞானங்களிறக்கு
மாகுல்— நிலைபெறவுயிர்நிற்கும்- நிலையாகப்பிராணன்றடைப்படும்— தேடுசாதனையால்- தேடாநி
ன்றசாதனத்தினுல்— உயர்புரைவழி-ஊர்த்தரந்தரமார்க்கத்தில்—சிங்குவைமேல்-நாக்கின்மேல்—விர
லீராறாடுபோய்-பன்னிரண்டங்குலப்ரமாணஞ்சென்று—உயிர்-பிராணனுனது—எல்லையினின்று-அந்
தவளவினின்று—உணர்வொளிக்குமேலுயிர்நிற்கும்-விருத்திஞானம்விடுமாகுற்பிராணன்றடைப்படும்
(எ-று) [இ-ம்] நாசியினன்றுவாதசாந்தத்தினிற்பதினுலுமதனந்தத்தினிற்குஞ்சாம்பவிமுத்திரையினு
லும்விசுத்தசக்கரத்தினிற்பதினுலும் அநாசதசக்கரத்தினிற்பதினுலும்பிராணனடங்குமென்பதாம். *

(ருரு) (அ-கை )ஒன்பதும்பத்துமுரைத்தல் (கவி) புருவநாப்பணேகண்மணிப்பார்வைதான்பொ
ருவில்சாந்தியின்மாய்ந்து, தெருளுங்கேதனவறிவங்குதெரிவறிற் றிரிவுறுதுயிர்நிற்குங், கருதுகின்றவி
ந்நெறிகளாலநேகசங்கற்பகற்பிதபேதத், தருள்செயும்பலதேசிகர்சொற்களாலசைவறவுயிர்நிற்கும்.
(இ-ள்) புருவநாப்பண்- புருவமத்தியில்— கண்மணிப்பார்வைதான்- கண்மணிப்பார்வையானது—
பொருவில்சாந்தியின்- ஒப்பற்றசாந்தத்தினுல்— மாய்ந்து- கெட்டு— தெருளுங்சேதனவறிவு- அறி
கின்றசவ்விகற்பஞானமானது— அங்குதெரிவறில்- அவ்விடத்திலிறக்குமாகுல்— திரிவுறுதுயிர்நிற்கு
ம்- ஓடாமற்பிராணன்றடைப்படும்— கருதுகின்ற- நினைக்காநின்ற— இந்நெறிகளால்- இந்தமார்க்
கங்களினுலும்— அநேகசங்கற்பம்- நாநாவிதசங்கற்பத்தினுலும்—கற்பிதபேதத்து- கற்பிதமானவே
ற்றுமையினுலும்— அருள்செயுந்தேசிகர்- அனுக்கிரகஞ்செய்கின்றவாசிரியர்—பலசொற்களால்- அந
ந்தவசனங்களினுலும்— அசைவறவுயிர்நிற்கும்- சலனமில்லாமற்பிராணன்றடைப்படும்— (எ-று)
[இ-ம்] புருவமத்தியான வியோமசக்கரத்தினிற்கின்ற வயிரவிமுத்திரையினுலுமின்னுமாசாரியர்வைக்
கின்றகுறிகளிலடங்கிநிற்குதலினுலும்பிராணனடங்குமென்பதாம் - - - - - - - - - *

(ருசு) (அ-கை) இரண்டாம்வினுவுக்குத்தரஞ்சொல்லிமூன்றாம்வினுவுக்குத்தரங்கூறுதல். (கவி) இ
ந்தயோகங்களறிவெலாமிளைப்பறவியற்றுசாதனையாலே, வந்துமேற்பிறவாதவர்க்குபாயமாய்வந்துற
ம்பழக்கத்தா,லுந்துமாருயிரசைவுதான்கெடுமெனிலுள்ளமுஞ்சமித்தாறுஞ் சிந்தைதான்சமித்தாறுமே
ற்செல்கதிசேடமாய்விடுந்தானே (இ-ள்) இந்தயோகங்களறிவெலாம்- இந்தயோகயுத்திகளனைத்து
ம்— இளைப்பற- வருத்தமில்லாமல்—இயற்றுசாதனையால்-செய்கின்றசாதனத்தினுல்—வந்து- (இப்ப
வத்தில்)வந்து— மேற்பிறவாதவர்க்கு- இனிச்சனியாதவர்களுக்கு— உபாயமாய்- தந்திரமாக—வந்து
றும்- வரும்—பழக்கத்தால்- அப்பியாசத்தினுல்—உந்துமாருயிர்- மேலுனபிராணனது— அசைவுதா
ன்கெடுமெனில்- சலனங்கெடுமாகுல்— உள்ளமுஞ்சமித்தாறும்- மனதும்விஸ்ராந்தியடையும்— சிந்
தைதான்சமித்தாறுமேல்- மனதுவிஸ்ராந்தியடையுமாகுல்— செல்கதிசேடமாய்விடும்- அடையத்த
க்கபரகதிமிச்சமாகும்— (எ-று) [இ-ம்] இவ்வனுசந்தானத்தினுற்பிராணபந்தனமாமதனுன்மனேசஞ்
சலநீங்கு மதனுன் மனத்திருத்தமுற் றுத்மானுபவமேமிஞ்சுமென்பதாம், (உதாரணம்) (விவேகமா
ர்த்தாண்டத்தில்) கபாலரந்திரத்தினுக்கு விபரீதமாகப்ரவேசிக்க, புருவமத்தியை திரிஷ்டியடைந்தா
ல், அதுவேகேசரிமுத்திரையென்றுசொல்லப்படும், ஊர்த்துவகமனத்துக்குப்ரதிபந்தகமாய், அதோ
பாகத்திலிருக்கின்றசருமத்தை, அறுக்கிறது, சேதனம், திரும்ப, ஈரவஸ்திரத்தால் சுத்தப்பட்டநாவை,
கைகளினுற்றிடமாகப்பிடித்துக்கொண்டு, சவ்வியாபசவ்வியமாய்சுழற்றுவது,சாலனம், கைகளினுற்கிரம
மாகமெள்ளமெள்ளவிழுப்பது,தோகனம், இம்மூன்றுமுயற்சியினுல்,லம்பிகாயோகம், அப்பியாசமெ
ன்பதினுல், சிதேந்திரியனுய், விவிததேசத்திலிருக்கின்றவனுய், மிதமாயுஞ்சுத்தமாயும்புசிக்கின்றவனு
ய்குருவினுலுபதேசிக்கப்பட்டமார்க்கத்தினுல்,தௌத,வஸ்தி பிரவஸ்தி,முதல்களாயும்,மேலும்கிழுஞ்சோ
தியாநின்ற, சாலசங்களினுலும், கோரணங்களினுலும், விசுத்தமானதேசமுடையவனுய், ஆசனபிரா
ணுயாமங்களினுற்சோதிக்கப்பட்டநாடிகளையுடையவனுயிருக்கின்றவனுக்கு, பிராணசஞ்சாரவேதுவா
ன் மகாமுத்திரையினப்பியாசஞ்சொல்லப்பட்டது, முத்திரைகளை மகாமுத்திரைமுதலிய பத்துவித
மாக,அடத்திபிகையிற்சொல்லப்பட்டன, அவையாவன, மகாமுத்திரை, மகாபந்தம், மகாவேதம், கேசரி,
உட்டியாணம், மூலபந்தம், சாலந்தாபந்தம், விபரீதகாணி, வச்சிரோசி, சத்திசாலனமென்பதாம். *

(ருஎ)(அ-கை)யோகத்தினுண்மையைச்சொல்லிஞானத்தினுண்மையைப்பிரிவாகச்சொல்லத்தொ
டங்கல் (கவி) விகற்பவாக்கெலாமெய்ப்பதநோக்கியேமீளுமப்பதந்தானே, விசற்பமற்றிடிற்சேடிக்
குமெனமுனிவிளம்பலும்விறல்வீர, னிகழ்த்தியோகத்தையுறுமனப்பொறிகளினெறிசெலாச்சமந்தன்
னை, நிகழ்த்திருபினியுண்மைஞானத்தையுநிகழ்த்தெனமுனைசொல்வான் (இ-ள்) விகற்பவாக்கெலா
ம்- விகற்பமானவாக்கியங்களனைத்தும்—மெய்ப்பதம்- தற்பதத்தை—நோக்கியேமீளும்- பார்த்தடை
யாமற்றிரும்புகின்றதோ— அப்பதந்தானே- அந்தத்தற்பதமே—விகற்பமற்றிடில்- வேறுபாடிறக்கி
ல்— சேடிக்குமென- மிஞ்சுமென்று— முனிவிளம்பலும்- வசிட்டர்சொல்லவும்— விறல்வீரன்-வெ
ற்றியையுடையஸ்ரீராமன்—யோகத்தை- யோகமார்க்கத்தை— நிகழ்த்தி- சொல்லி—உறுமனம்- பொ
ருந்தாநின்றமனமானது— பொறிகளினெறிசெலா- இந்திரியவழிகளிற்செல்லாத —சமந்தன்னை நிகழ்

த்திஞய்- சமச்துவச்தைச்சொன்ஞய்— இனியுண்மைஞானத்தையும்- இனிமேற்றத்துவஞானத்தையு ம்— நிகழ்த்தென-சொல்லுமெனறுகேட்க—முனிசொல்வான்-அதற்குமுனிசொல்லுவார்—(எ-று) ※

(௩அ) (அ-கை) மூதலுமிரண்டுமுரைத்தல். (கவி) ஆதியந்தமிருேற்றமேதன்வடிவாகியபரமி ங்குச், சோதியாய்நினறதென்னுமிவ்வுறுதியேதுகளறுமெய்ஞ்ஞானம், பேதியாநின்றசடபடவடிவ மாம்பெரும்பொருட்டலசத்தி, நீதிறற்பரம்வேறிலதென்றுணர் திண்மையே நற்காட்சி. (இ-ள்.) ஆதியந்தமில்- ஆதிமத்தியாந்தரகிதமான—தோற்றமே- தெரிவே— தன்வடிவாகியபரம்- தனதுஸ்வ ரூபமாயிருக்கின்றபிரமமானது— இங்கு- இவ்விடத்தில்— சோதியாய்நின்றதென்னும்- சுயம்ப்ரகா சமாயிருக்குதென்கின்ற— இவ்வுறுதியே- இந்தநிச்சயமே— துகளறுமெய்ஞ்ஞானம்- குற்றமற்றவு ண்மைஞானமாம்— பேதியாநின்ற- பேதித்திருக்கின்ற— சடபடவடிவமாம்- கடபடரூபமாகிய— பெரும்பொருட்பலசத்தி- மிகுந்தபதார்த்தங்களின்சகலசத்தியும்— நீதிறற்பரம்- குற்றமற்றவாத் மா (வேயல்லாமல்)—வேறிலதென்று-வேறில்லையென்று—உணர்திண்மையேநற்காட்சி- அறிகின்றதி டமேயாத்மதரிசனம—(எ-று)[இ-உ-க-ம்]சதோதயமானநமதாத்மஸ்வரூபமேயிங்ஙனம்ப்ரகாசிக் குமென்னுநிச்சயமுந்திரிஸ்யங்கள்யாவுந்திருக்குவடிவமேயென்னுநிச்சயமும்ஞானமென்பதாம் ※

(௩௯) (அ-கை) மூன்றுநான்குமுரைத்தல். (கவி) செகங்சண்மூன்றினுமுண்மையாம்பொருள றிதிறமெதுவெனச்செப்பில் செகங்களியாவையுந்தற்பொருள்வடிவெனத்திரமுறு நிறைவாகுஞ், செ கங்களியாவையுஞ்சொரூபமேயிதிற்றிகழபாவபாவனையெங்கே, செகங்களிற்செறிபெத்தமுத்திகளெ னத்தியங்குவேற்றுமையெங்கே (இ-ள்.) செகங்கண்மூன்றினும்- மூன்றுலகங்களிலும்— உண்மை யாம்பொருள்- மெய்யானவஸ்துவை— அறிதிறமெதுவென- அறிகின்றகாரணமெதுவென்று— செ ப்பில்- சொல்லுமிடத்தில்— செகங்களியாவையும்- உலகங்களனைத்தையும்— தற்பொருள்வடிவென- பிரமஸ்வரூபமென்று— திரமுறும்- ஸ்திரம்பொருந்துவதே— நிறைவாகும்- பூரணமாம்— செகங் களியாவையும்- உலகங்களனைத்தும்— சொரூபமே- ஆத்மஸ்வரூபமேயாம—இதில்- இவ்வாத்மஸ்வரூ பமாகியசகத்தில்— திகழ்- விளங்குகின்ற—அபாவபாவனையெங்கே-பாவாபாவங்களெவ்விடம்—செக ங்களிற்செறி- உலகங்களினெருங்கிய— பெத்தமுத்திகளென- பந்தமோக்ஷமென்று— தியங்குவேற்று மையெங்கே- மயங்குகின்றபேதமெவ்விடம்— (எ-று)[இ-ம்] மூவுலகுமாத்மாவென்கிறபரமார்த் ததிருஷ்டியும் ஆத்மாவையன்றிப்பாவாபாவங்களின்றென்கிறநிச்சயமும்ஞானமாமென்பதாம். ※

(௪௰) (அ-கை) ஐந்துமாறுமுரைத்தல் (கவி) பிறிதுகாண்பன வில்லைநெஞ்சில்லைமெய்ப்பிரம மேயவையாகிச், செறியுமாவிவையாவுமொன்றுகிய சிற்பரவிசும்பாகு, நெறிகொள்பந்தம்வீடெங்கு ளவிதுவென நிகழ்பெருவடிவாகிக்,குறியறும்பெரும் பிரமமேநின்றது குறைந்திறந் ததுநெஞ்சே. (இ-ள்) பிறிதுகாண்பனவில்லை- வேறுசத்திரிஸ்யமென்பனவுமில்லை— நெஞ்சில்லை- மனமெனபது மில்லை— மெய்ப்பிரமமே- உண்மையாகியபிரமமே— அவையாகிச்செறியும்- முன்சொன்னவைகளா கநிறையும்— இவையாவும்- இச்சகலமும்— ஒன்றுகிய- ஏகமாகிய— சிற்பரவிசும்பாகும- ஞானகா சமாகும்— நெறிகொள்பந்தம்- (வாசனு) மார்க்கங்கொண்டபந்தமும்—வீடு- மோக்ஷமும்— எங்கு ள- எவ்விடத்திருக்கின்றன— இதுவென- இதுவென்று— நிகழ்பெருவடிவாகி- ப்ரகாசிக்கின்றவாத்ம ஸ்வரூபமாய்— குறியறும்- அடையாளமின்றிய— பெரும்பிரமமே- மகத்தாகிய பிரமஸ்வரூபமே— நின்றது- (நிறைந்) திருக்கின்றது— நெஞ்சு- மனமானது— குறைந்திறந்தது- சீரணமாய்நசித்த து— (எ-று.) [இ-ம்] மனதுமுதலியயாவுஞ்சிதாகாயமென்னுநிச்சயமும்பிரமானுபவத்தின்மனமில் லையென்னுநிச்சயமுஞானமாமென்பதாம் - - - - - - - - - - - - - - ※

(௪௧) (அ-கை) ஏழுமெட்டுமுரைத்தல். (கவி) ஒருமையாகவேயுணர்வினுலுணர்தியாலுருவைநன் குறநோக்கிற், றருவுங்கற்களும்படங்களுமுதலியசற்றும்வேற்றுமையில்லை, மருவுசங்கற்பமெங்குள சீவனும்வையகப்பொருளியாவு மருகலின்றியசாந்தரூபம்பெறுமடிமுடிவுறநோக்கில். (இ-ள்) ஒரு மையாக- ஒற்றுமையாக— உணர்வினுலுணர்தி- அறிவினுலறியக்கடவாய்— உருவைநன்குறநோக்கி ல்- (ஆத்ம) ஸ்வரூபத்தைநன்றாகப்பார்க்குமிடத்தில்— தருவும்- விருட்சமும்— சற்கநும- மலைகளு ம்— படங்களுமுதலிய- வஸ்திரங்களுமுதலிய(வஸ்துக்களுக்கு)—சற்றும்வேற்றுமையில்லை- எவ்வள வும்பேதமில்லை— மருவுசங்கற்பமெங்குள- பொருந்தியசங்கற்பமெங்கேயிருக்கின்றது— சீவனும்- சிதாபாசனும்— வையகப்பொருளியாவும்- பூமியிலுள்ளவஸ்துக்களனைத்தும்— அடிமுடிவுறநோக்கி ல்- ஆதியந்தமாசப்பார்க்குமிடத்தில்— அருகலின்றியசாந்தரூபம்பெறும்-குறைவில்லாதவுபசாந்தரூ பமடையும்— (எ-று.)[இ-ம்] யாவையுமாத்மஸ்வரூபமாகப்பார்க்கிலொன்றும் வேற்றுமையின்றெ ன்பதும் சீவனுஞ்சகத்துமாநந்தமாயிடின் றன்சங்கற்பமில்லையென்பதும் ஞானமென்பதாம் - ※

(௪௨) (அ-கை.) அத்தொய்தஞானுனுஷ்டானத்தினுண்மையைச்சொல்லியதையடையும்பொரு ட்டனுபவஞ்சொல்லுதல். (கவி) அந்தரூபமெப்போதுநீயாகுவையண்ணலேயிரண்டொன்று, வுந்து பேதத்தாற்சராமரணங்களென்றுன்னுறுமயக்கத்தாற், நொந்தவுள்ளத்தாற்றான்றனிப்பிரமமேதோ ற்றுகின்றனதன்னுற், சிந்துகின்றநீடிரையினுற்பன்மையாற்றெரிதருஞ்சலமேபோல. (இ-ள்) அந்தரூ பம்- அவ்வுபசாந்தஸ்வரூபம்— எப்போதுநீயாகுவை- எக்காலமுநீயேயாவாய்—அண்ணலே- ஸ்ரீரா மா— இரண்டொன்று- இரண்டென்றுமொன்றென்றும்— உந்துபேதத்தால்- சொல்லாநின்றவேற் றுமையினுலும்— சராமரணங்களென்று- சராமரணங்களென்று— உன்னுறுமயக்கத்தால்- நினைக்கி ன்றமயக்கத்தினுலும்— நொந்தவுள்ளத்தால்- நொந்தித்திருக்கின்றமனதினுல்— தான்றனிப்பிரம மே- தானகியவொப்பற்றபிரமஸ்வரூபமே— நீடிரையினுல்- நீண்டவலையினுல்— தன்னுற்சிந்துகின் ற- தன்னுற்சிதறுநின்ற—பன்மையாம்- பலவான (திரைநுரைசுழுளிமுதலானதாய்)—தெரிதருஞ்ச

லம்போல - தெரிகின்றநீரைப்போல — தோற்றுகின்றன - (நாமரூபங்களாய்த்) தோற்றுகின்றன (எ - று)

(சஙு) (அ - கை) அநுபவியின்நிடத்தைச்சொல்லுதல் (கவி) சுத்தமானதற்பரத்தினைத் தழுவியே தொடர்ந்தவுண்மதியாலே, யொத்துநிற்பவர்தம்மையெப்போகம்வந்துறுபிணிசெயவற்று, மெத்து போகத்தைமுதலியபகையெலாம்விசாரமேமிகுந்தோர்தம், புத்தியைச்சிறிதசைத்திடாவசந்தனுற்பொருப்பசைவதுமுண்டோ. (இ - ள்) சுத்தமானதற்பரத்தினை - பரிசுத்தமாகியபிரமத்தை — தழுவியேதொடர்ந்த - தழுவித்தொடர்ந்த — உண்மதியால் - அந்தர்முகவுணர்வினுல் — ஒத்துநிற்பவர்தம்மை - பொருந்தியிருப்பவர்களை — எப்போகம் - எந்தப்போகமானது — வந்துறு - வந்துபொருந்தாநின்ற — பிணிசெயவற்றும் - பந்தனஞ்செய்யத்தக்கது — மெத்துபோகத்தைமுதலிய - மிருதுவானபோகங்கண் முதலாகிய — பகையெலாம் - சத்துருக்களனைத்தும் — விசாரமேமிகுந்தோர்தம் - விசாரணைமிகுந்தவர்களுடைய — புத்தியைச்சிறிதசைத்திடா - மனதையெவ்வளவுமசைக்கமாட்டாது — வசந்தனுல் - தென்றலினுல் — பொருப்பசைவதுமுண்டோ - மலையசைவதுமுண்டாமோ — (எ - று) - - - - ✻

(சச) (அ - கை) அநுபவநிச்சயங்கூறல் (கவி) உரைத்தபன்மைகணினைவிலேயுள்ளதாமுண்மையாயிலதுள்ளே, நிரைத்தபல்வகைவாவியிற்பிறிவிலாநிகழ்தருநீர்போலக், கரைத்தலன்றியிவ்வறுதிசேர்மதியுளோர்களங்கமில்வீடுற்றோர், புரைத்தலன்றியே நலனுறக்கண்டநற் பொருளுமிங்கிதுதானே. (இ - ள்) நிரைத்தபல்வகைவாவியில் - (அலையினுற்) சத்தித்தநாநாவிதமானதடாகத்தில் — பிறிவிலா - அலைமுதலான) வேற்றுமையில்லாமல் — நிகழ்தருநீர்போல - (ஒன்றாக) ப்ரகாசிக்கின்றசலத்தைப்போல — உரைத்தபன்மைகள் - சொல்லப்பட்டபலவிதமானநாமரூபங்கள் — நினைவிலுள்ளதாம் - சங்கற்பத்திலுள்ளனவாகும் — உள்ளே - அகத்தில் — உண்மையாயிலது - மெய்யாகவில்லாததாம் — கரைத்தலன்றி - கரைக்கக்கூடாதிருக்கின்ற — இவ்வறுதிசேர் - இந்தநிச்சயஞ்சேர்ந்த — மதியுளோர் - அறிவையுடையவர்கள் — களங்கமில்வீடுற்றோர் - குற்றமற்றமோக்ஷத்தையடைந்தவர்கள் — புரைத்தலன்றி - குற்றமற்றதாய் — நலனுறக்கண்ட - சுசம்வாத்தரிசித்த — நற்பொருளும் - அபரோக்ஷவஸ்துவும் — இங்கிதுதான் - இவ்விடத்திந்நிச்சயந்தான் — (எ - று) [இ - ங - க - ம்]. ஸ்வாநுபூதிவிலாசுத்லதைப்ரசன்னமாய்த்தரிசிக்கும்பொருட்டனுக்கிரகித்ததாம். - - - - - - - - - ✻

(சரு) (அ - கை) இச்சுவாநுபவம்பெறுதற்கிஃதன்றியின்னுமொருமார்க்கஞ்சொல்லத்தொடங்கியதற்குத்திருஷ்டாந்தமறிவித்தல் (கவி) ஈதுவேறொன்றுமுத்திசென்றுறுநெறியியம்புதுங்கேள்வீரா, வீதகவ்வியனென்றொருபெருந்தவன்விந்தவெற்பிடைவாழ்வோன், காதலானுயர்கன்மகாண்டத்திலேகாலமட்டறநின்று, கேதமாதியேவியாதிவன்பவந்தருகிரியையான்மிகநொந்தான் (இ - ள்) ஈதுவேறொன்று - இதுமற்றொரு — முத்திசென்றுறுநெறி - மோக்ஷத்தையடைகின்றமார்க்கம் — இயம்புதும் - சொல்லுவோம் — வீராகேள் - வீரத்தையுடையஸ்ரீராமாகேட்பாய் — வீதகவ்வியனென்று - வீதகவ்வியனென்னுநாமத்தையுடைய — ஒருபெருந்தவன் - ஒருமகாதவத்தன் — விந்தவெற்பிடைவாழ்வோன் - விந்தமலையில்வாழ்பவன் — காதலானுயர் - ஆசையினுலுயர்ந்த — கன்மகாண்டத்தில் - கன்மகாண்டத்தில் — காலமட்டறநின்று - வெகுகாலமிருந்து — கேதம் - துன்பமாகிய — ஆதி - அந்தக்கரணவியாதியையும் — வியாதி - (தேக) வியாதியையும் — வன்பவம் - கொடியசம்சாரத்தையும் — தருகிரியையால் - கொடுக்கின்றகிரியையினுல் — மிகநொந்தான் - மிகவும்வருந்தினுன் — (எ - று) [இ - ம்]. கிரியையிற்சுகமின்றிவருந்தினமொண்பதாம். - - - - - - - - - ✻

(சசா) (அ - கை) ஞானசமாதிக்காதனங்கட்டுதல் (கவி) நிருவிகற்பமாஞ்சமாதியின்பொருட்டுமுன்னிகழ்கிரியைகளெல்லா, மொருவிவிட்டனன்பன்னசாலையினிடையுற்றனன்கலைத்தோன்மேன் மருவுபெத்தபங்கேருகாசனத்தனன்வருகுதிமிசைவைத்த, விருகரத்திரள்விரலினனிவ்வகையிருந்தனனொருப்பட்டு. (இ - ள்) நிருவிகற்பமாஞ்சமாதியின்பொருட்டு - நிருவிகற்பசமாதியினிமித்தம் — முன்னிகழ் - முன்னடத்திய — கிரியைகளெல்லாம் - கிரியைகளனைத்தையும் — ஒருவிவிட்டனன் - நீக்கிவிட்டான் — பன்னசாலையினிடை - பன்னசாலையினுள் — உற்றனன் - பொருந்தினுன் — கலைத்தோன்மேன்மருவு - மான்றோலின்மேன்மருவுகின்ற — பெத்தபங்கேருகாசனத்தனன் - கட்டியபதுமாசனத்தையுடையவனுய் — வருகுதிமிசைவைத்த - வராநின்றகுதிகான்மேல்வைத்த — இருகரத்திரள்விரலினன் - இரண்டுகைகளிற்றிரண்டவிரலையுடையவன் — இவ்வகை - இந்தப்ரகாரம் — ஒருப்பட்டு - ஒருமைப்பட்டு — இருந்தனன் - (சமாதியி) லிருந்தான் — (எ - று.) - - - - - - - - - - - - - ✻

(சஎ) (அ - கை.) மனதைநிறுத்திவிசாரித்தல் (கவி) பரந்துதிக்குறுமனத்தினைப்பையப்பையப்பார்த்துமீட்டனனுள்ளே, நிரந்தரித்தனன்புறத்துளபரிசங்கணீற்றனனொழுங்காலே, துரந்தசித்தத்தின்றிரநிலைவிரும்பினன்றுகளறுமனத்தாலே, புரந்தநற்றவவீதகவ்வியமுனிபுலப்படநினைவுற்றான். (இ - ள்.) பரந்துதிக்குறுமனத்தினை - விரிந்துதிசைகளிற் செல்லுகின்றமனதை — பையப்பையப்பார்த்து - மெள்ள மெள்ளப்பார்த்து — மீட்டனன் - திருப்பி — உள்ளே நிரந்தரித்தனன் - அகத்திநிரந்தரமாகச்செய்தான் — புறத்துளபரிசங்கள் - புறம்பிலுள்ளவிடயசமபந்தங்களை — ஒழுங்கு நீற்றனன் - கிரமமாகநீக்கி — துரந்தசித்தத்தின் - செலுத்தியமனதின் — திரநிலைவிரும்பினன் - திடநிலையைவிரும்பி — துகளறுமனத்தால் - குற்றமற்றமனதினுல் — புரந்தநற்றவம் - நிலைத்தநல்லதவத்தையுடைய — வீதகவ்வியமுனி - வீதகவ்வியமுனிவானவர் — புலப்படநினைவுற்றான் - தெரியவிசாரணைசெய்தான் — (எ - று)

(சஅ) (அ - கை.) மனதின்றவிடத்துதித்ததனதாத்மஞானத்தினுலின்றமனது பிராணசலத்தினுற்சலிக்கின்றதெனக்காண்டல். (கவி) வியப்புடைத்திதுமீளுவித்திருக்கவும்விசையுபிரசைவுற்று, தியக்குநெஞ்சகந்திரநிலையன்றியேசிறகருசெனவோடும், பயக்குமினமயில்சடநின்றுடைமுறும்படநின்றுசட்டமெய்து மயக்கமேயுபல்போநர்களிற்போய்விழுமரங்களிற்குரங்கேபோல். (இ - ள்) இதுவியப்

புடைத்து- ஈதரிசபத்தைதயுடையது— மீளுவித்திருக்கவும்- திருப்பிவைத்திருக்கவும்— விசையுயி
ரசைவுற்று- வேகமாயுள்ளபிராணனசைவைப்பொருந்தி— தியக்குநெஞ்சகம்- அசையுமனமான
து— திரநிலையன்றி- திடமானநிலையில்லாமல்—சிறுசருகென- (காற்றிலகப்பட்ட)சிறுசருகைப்போ
ல— ஓடும்- அலையும்— பயக்குமின்பமில்- உண்டாகுஞ்சுகமில்லாத— கடநின்றுபடமுறும்- கடத்
தினின்றும்படத்தைப்பொருந்தும் — படநின்று- படத்திலிருந்து— கடமெய்தும்- கடத்தையடை
யும்— மயக்கமேவு- மயக்கம்பொருந்திய— பல்பொருள்களில்- பலவிடயங்களில்— மரங்களிற்குர
ங்கேபோல்- விருட்சங்களிற் (ருவு)மற்கடம்போல— போய்விழும்- தாவும்— (எ-று) - - ✻

(சகூ) (அ-கை) தனதறிவினாலிந்திரியங்களை நீக்குதல். (கவி) விழிமுதற்பொறியாய் மனத்துவார
மாய்மேதையிந்தியமென்றே, யொழிவிலாவபிமானஞ்செயைம்பொறியுணர்ந்துகாண் புறுநானே,
கழியுமிந்தியங்காளவமாகவேகலங்குசேனந்தோநீ, ரழிவில்சின்மயப்பகவனாய்ச்சகலசான்றாகிநின்றன
னே (இ-ள்) விழிமுதற்பொறியாய்- கண்முதலியவிந்திரியங்களாகியும்—மனத்துவாரமாய்-மனது
க்குவாசலாகியும்—மேதையிந்தியமென்று-ஞானேந்திரியமென்று—ஒழிவிலாவபிமானஞ்செய்- நீங்
காதவபிமானத்தைச்செய்கின்ற—ஐம்பொறி- பஞ்சேந்திரியங்களை—உணர்ந்து-அறிந்து—காண்புறு
நானே- பார்க்கின்றவனே நானும்— கழியுமிந்தியங்காள்- இறவாநின்றவிந்திரியங்களே— அவமாக-
வீணாக— அந்தோநீர்- அய்யோநீங்கள்— கலங்குகேள்- கலங்குவதேன்— அழிவில்சின்மயப்பகவனா
ய்- கெடாதசிற்ஸ்வரூபமாயிருக்கின்றபகவனாய்— யான்- நானே— சகலசான்றாகிநின்றனன்- சகல
த்துக்குஞ்சாட்சியாகியிருக்கின்றேன்— (எ-று) - - - - - - - - - - - - - ✻

(ருய) (அ-கை) இ-து (கவி) அன்னதன்மையுற்றறிவினான்மிக்கயானறிந்தகண்முதலனைத்தும், பி
ன்னமாகியேவானுயர்குன்றினைப்பிரிந்தபாதலம்போலாம் பன்னகங்களும்வழிச்செலுமவர்களும்பறை
யருமறையோரு, மென்னவச்சமுற்றுயர்ந்தசின்மாத்திரமித்தியந்தருகெய்தா. (இ-ள்) அன்னதன்
மையுற்று- அத்தன்மையானகுணத்தைப்பொருந்தி— அறிவினான்மிக்க- அறிவினான்மிகுந்த— யானறி
ந்த- நான்பார்க்கப்பட்ட— கண்முதலனைத்தும்- சக்ஷுமுதலியபஞ்சேந்திரியங்களும்— பின்னமாகி-
வேற்றுமையாகி— வானுலகத்தினை- சுவர்க்கலோகத்தை— பிரிந்தபாதலம்போலாம்- நீங்கினபாதாள
த்துக்கொப்பாகும்— பன்னகங்களும்- சர்ப்பங்களும்— வழிச்செலுமவர்களும்- மார்க்கத்திற்போகி
ன்றவர்களும்— பறையரும்- சண்டாளரும்— மறையோருமென்ன- அந்தணர்களும்போல— அச்ச
முற்று-பயமடைந்து—உயர்ந்தசின்மாத்திரம்- மேலாகியஞானமானது—இந்தியத்தருகெய்தா-பொ
றிகளின்சமீபத்திலும்வரமாட்டாது— (எ-று) [இ-உ-க-ம] சின்மாத்திரமாய்விளங்குகின்றயான்ம
னேவசமாய்ச்சஞ்சரிக்கின்றவிந்திரியங்களிற்சேரேனென்றவைகளைவேறுபடுத்தினதென்பதாம் - - ✻

(ருக) (அ-கை) மனதைநீக்குதல் (கவி) சாறுவாகனாய்ச் சாரணனாகிநாற் றடந்திசை பலியேர்க்கப்,
பாறுநெஞ்சமேவீணிலேவருந்துதல் பயனிலபடிமீதே, யாறியேவிளையாடு நீயுனையறிவென்னும்வாத
னைபொய்யாம், வேறுபாடுதான்மிகுந்துளமனத்தொடு மெய்புணர்வொன்றாகா (இ-ள்) சாறுவாகனாய்-
பரலோகபராமுகனாகியும்—சாரணனாகி- வேவுகாரனாகியும்—நாற்றடந்திசை- விசாலம்பொருந்தியநா
ன்குதிக்கிலும்—பலியேர்க்க-பிச்சைவாங்க—பாறுநெஞ்சமே- ஓடாநின்றமனமே—வீணிலேவருந்து
தல்- வீணாகப்பிரயாசைப்படுதலில்—பயனில- பிரயோசனமில்லை—படிமீது- பூமியின்கண்— நீ- நீயே-
ஆறியேவிளையாடு- விச்ராந்தியடைந்துவிளையாடுவாய்—உனையறிவென்னும்வாதனை- உன்னைஞானமெ
ன்றெண்ணுகின்றவாசனை— பொய்யாம்- அசத்தியமாம்— வேறுபாடுதான்- வேற்றுமையானது—
மிகுந்துளமனத்தொடு- மிகுந்திருக்கின்றமனத்துடன்—மெய்புணர்வு- உண்மைஞானமானது— ஒன்
றாகா- ஒருமைப்படாது— (எ-று) - - - - - - - - - ✻

(ருஉ) (அ-கை) இ-து (கவி) சுகமிருக்குனனானெனலகங்கரத்துன்மதியிதுதீதா, மகமதிப்பினாலிவண
வனாகுநானெனுமிவ்வாரம்ப, மிகவகற்றுவாயுன்வடிவெது வெனில்விசாரமின்மையதாகு, மிகவிசார
த்தாலழிந்திடும்பரிதியாலிருள்கழிவதுபோல (இ-ள்) நானெனலகங்கரத்துன்மதி- (விடயங்களை) நா
னென்னுமகங்காரமாகியதுற்புத்தியே—சுகமிருக்குனன்- சுகமாயிருக்கின்றேனென்கின்ற—இதுதீதா
ம்- இதுகுற்றமாம்— அகமதிப்பினால்- அகங்காரமதத்தினால்— இவனவனாகுநான்- இவனுமவனுநா
னாகும்— என்னும்- என்கின்ற— இவ்வாரம்பம்- இவ்வாரம்பத்தை— மிகவகற்றுவாய்- மிகவுநீக்குவா
ய்— உனவடிவெதுவெனில்- உனதுருவமெதுவென்றால்— விசாரமின்மையதாகும்- விசாரணையில்லா
ததாம்— பரிதியால்- சூரியனால்— இருள்கழிவதுபோல- அந்தகாரங்கெடுவதுபோல— இகவிசாரத்
தாலழிந்திடும்- இப்பொழுதுசெய்கின்றவிசாரணையினாலழிவாய்— (எ-று) - - - - - - ✻

(ருங) (அ-கை) இ-து (கவி) முன்னைத்தோற்றமற்றிப்பொழுதனக் கெனவுருவன் றிம்முறை
யாலே, பின்னுந்தோன்றலை யென்னுடைநெஞ்சமே பெரிதுநீபெறுநன்மை, யின்னநீர்தெய்வசகாய
த்தாலிடரிலாவின்பமுற்றியானென்றுந், துன்னுசாந்தனாய்த் துரியமாமென்சொரூபத்திலே சுகிக்கின்
றேன் (இ-ள்) முன்னைத்தோற்றமற்று- முன்னர்த்தோன்றாமல்— இப்பொழுதனக்கெனவுருவின்றி-
இப்போதுனக்கென்றொருருவுமில்லாத— இம்முறையால்- இவ்வொழுங்கினால்— பின்னுந்தோன்ற
லை- பின்புந்தோற்றமாட்டாய்— என்னுடைநெஞ்சமே- என்னுடையமனதே— நீபெறுநன்மை-
நீயடைகின்றநன்மையானது— பெரிது- பெரியதாம்— இன்னநீர்- துன்பநீங்கிய— தெய்வசகாயத்
தால்- தெய்வசகாயத்தினால்— இடரிலாவின்பமுற்று- துன்பமில்லாதவாநந்தத்தைப்பொருந்தி— இ
யான்- நான்—என்றும்- எப்போதும்—துன்னுசாந்தனாய்- நிறைந்தசாந்தத்தையுடையவனாய்—து
ரியமாம்- துரியமாகிய— என்சொருபத்தில்- எனதாத்மஸ்வரூபத்தில்— சுகிக்கின்றேன்- ஆநந்திக்கி
ன்றேன்—(எ-று) [இ-ரு-க-ம்] பேதமாகியுமபேதமாகியவாத்மாவுக்குச்சம்பந்தமின்றாகியும்விகாரிக்கி

வில்லாததாகிப் புயிருக்கின்ற மனதைச் சகரூபியாயிருக்கின்ற வாத்மாவினுடைய வசத்திலொடுக்கினனென்பதாம் ※

(ருச) (அ-கை) விசாரமுகத்தால் தத்துவங்களை நீக்கிச்சாம்பவிமுத்திரையைமுன்னிட்டு நிர்விகற்பசமாதியிலிருந்தல். (கவி) எனவொருப்பட்டுவாதனைதீர்முனி யிந்திரியமலைவின்றி, மனனைவன்பிறுனி றுத்தினன்பிறகனை மாய்த்ததீச்சிகையுள்ளே, தனியடங்கல்போலிவனுயிரொழுங்கிலேநன்கொடுங்கின மூக்கி, னுனிநுண் பார்வையாற்சிறிதலர்கமலமேனேக்கங்கணிகாமன (இ-ள்.) எனவொருப்பட்டு- இப்படியென்றொருமையாகி— வாதனைதீர்முனி- வாதனைபிறந்தவீதகவ்வியமுனியானவர்— இந்திரியமலைவின்றி- பொறிகளலைவில்லாமல்— மனனைவன்பினிறுத்தினன்- மனதையுரத்தினனிறுத்தினன்— விறகினைமாய்த்ததீச்சிகை- விறகையெரித்தவக்கினிச்சுவாலையானது— உள்ளேதனியடங்கல்போல்- தனக்குள்ளேமிகவுமடங்குதல்போல— இவனுயிர்- இவர்பிராணனானது— ஒழுங்கில்- கிரமத்தில்— நன்கொடுங்கின- நன்றாக(வுள்ளே)யடங்கின— மூக்கினுனி- நாசிகாந்தத்தில்— நுண்பார்வையால்- சூட்சுமதிருஷ்டியினால்— நோக்கங்கள்- கண்களானவை— சிறிதலர்கமலம்- கொஞ்சமலர்ந்திருக்கின்றதாமரைப்பூவுக்கு— நிகரான- சமானமாயின— (எ-று) - - - - - - - - - - - - ※

(ருரு) (அ-கை) (இ-து) (கவி.) சிரங்கழுத்துடனுனங்கள் சமமுறச்சிலையிலேவகுத்தென்ன, நிரந்தசித்திர மென்னமுன்னூறியாண்டிருந்தனனிமிடம்போற், பரந்தகாருநாள்வெள்ளத்தினெக்கரிற்படிந்ததிங்கிவன்மேனி, யுரங்கொண்மாமுனியுணர்ந்தனன்மண்ணினுளுடலைசந்திலதென்றே (இ-ள்) சிரம்- சிரசும்— கழுத்து- கண்டமும்— உடல்- சரீரமும்— தானங்கள்- அவயவங்களும்— சமமுற- சமமாக— சிலையிலேவகுத்தென்ன- கல்லிற்செய்ததுபோலவும்— நிரந்தசித்திரமென்ன- நெருங்கினவோவியத்தைப்போலவும்— முன்னூறியாண்டு- முன்னூறுவருடம்— நிமிடம்போல்- நிமிடமாக— இருந்தனன்- (சமாதி) யிருந்தான்— பரந்தகாருநாள்- மிகுந்தமழைகாலத்தின்— வெள்ளத்தினெக்கரில்- வெள்ளத்தினாலுண்டாகியமணற்குன்றில்— இவன்மேனி- இவனதுசரீரம்— படிந்தது- புதைந்தது— உரங்கொண்மாமுனி- திடத்தையுடையவீதகவ்வியமகாமுனியானவர்— மண்ணினுள்- பூமியினுள்— உடலைசந்திலதென்று- சரீரமசைவில்லையென்று— உணர்ந்தனன்- (சமாதியைவிட்) டறிந்தனன்— (எ-று) [இ-உ-க-ம்.] தேகமுதலியயாவுந்தோன்றுதசிற்சமாதியிலிருந்தனனென்பதாம்

(ருசா) (அ-கை) சமாதியினின்றுநீங்கினவறிவு மனோரூபமாயுண்டான சநநபரம்பரையைச்சொற்பனம்போலவறிதல். (கவி) தனைமறைத்தலாலறிவிலேதோன்றியசரீரத்திலுயிர்முற்றும், புளைகளியாவையுமடைதலாலசைந்திலபோதமுற்பவித்துள்ளே, விளையுந்தன் மனவடிவமா யிதயத்தில்விரிந்தறிந்தது யாவு, நினைகள்சொற்பனம்போலவனவ்வயினெஞ்சுறவினைகண்டான் (இ-ள்) தனைமறைத்தலால்- பூமிமறைத்தபடியால்— அறிவிற்றோன்றிய- அறிவிலுண்டாகிய— சரீரத்திலுயிர்முற்றும்- தேகத்திலுள்ளபிராணன்களனைத்தும்— புளைகளியாவையும்- இரந்தரங்களெல்லாம்— அடைதலால்- அடைப்பட்டபடியினால்— அசைந்தில- அசையவில்லை— உள்ளேபோதமுற்பவித்து- அகத்திலறிவுண்டாகி— விளையுந்தன்மனவடிவமாய்- வாசனையானதன்மனோரூபமாய்— இதயத்தில்விரிந்து- இருதயத்திற்பரவி— யாவும்- சகலத்தையும்— அறிந்தது- தெரிந்தது— நினைகள்சொற்பனம்போல்- ஒழுங்காகியகனவைப்போல— அவன்- அந்தவீதகவ்வியமுனி— அவ்வயின்- அவ்விடத்தில்— நெஞ்சுறவினைகண்டான்- மனதிற்பொருந்தவினைகளைப்பார்த்தான்— (எ-று - - - - - - - - ※

(ருஎ) (அ-கை) இ-து (கவி) ஈசன்வெற்பயன் முனிவனாய் நூறியாண்டிருந்ததுநூறாண்டு, காசிவின்பவிச் சாதரனானதுங் கடவுளர்தொழவிண்ணில், வாசவனுனவைந்துகமிருந்ததுமதிச்சடையிறைவற்கு, நேசமாங்கணமாயொருகற்பநாணின்றதுமவன்கண்டான் (இ-ள்) ஈசன்வெற்பயல்- கைலாசபருவதத்தின்சாரலில்— முனிவனாய்- தவசியாக— நூறியாண்டிருந்ததும்- நூறுவருடமிருந்ததும்— காசிவின்பவிச்சாதரன்- குற்றமற்றசுகமுள்ளவித்தியாதரனாக— நூறாண்டு- நூறுவருடம்— ஆனதும்- ஆகியதும்— கடவுளர்தொழ- தேவர்கள்வணங்கும்படி— விண்ணில்- தெய்வலோகத்தில்— வாசவனென- தேவேந்திரனாக— ஐந்துகமிருந்ததும்- ஐந்துயுகமிருந்ததுவும்— மதிச்சடையிறைவற்கு- சந்திரனைச்சடையிற்றரித்தபரமேசுவரனுக்கு— நேசமாங்கணமாய்- அன்பாகியகணேசனாய்— ஒருகற்பநாணின்றதுமவன்கண்டான்- ஒருகற்பகாலமிருந்ததுமவ்வீதகவ்வியமுனிபார்த்தான்— (எ-று) - - - ※

(ருஅ) (அ-கை) இ-து (கவி) விரவுதோற்றரவாலிவையனைத்தையும்வீதகவ்வியனேக்கிப், பரனுக்காட்செய்தபலத்தினாலிறந்தனவறிந்துதான்வலியுண்டாய்ப், புரணமாகமுற்பவங்களிற்பொன்றிமுன்போயதன்னுடன்முற்றுங், காவறக்கண்டுவீதகவ்வியப்பேர்காயமாய்வரக்கண்டான் (இ-ள்) விரவு- (மூன்றுகாலமுங்) கலந்தறிகின்ற— தோற்றரவால்- (ஞான)திருஷ்டியினால்— இவையனைத்தையும்- இப்பொழுதுசொல்லப்பட்டசகலத்தையும்— வீதகவ்வியனேக்கி- வீதகவ்வியமுனிபார்த்து— பரனுக்காட்செய்த- பரமேசுவரனுக்கடிமையாகப் பணிசெய்த— பலத்தினால்- பிரயோசனத்தினால்— இறந்தனவறிந்து- இறந்தகாலங்களைத்தெரிந்து— தான்வலியுண்டாய்- தனக்குவல்லமையுண்டாகி— புரணமாக- பூரணமாக— முற்பவங்களில்- முற்சநநங்களில்— முன்பொன்றிப்போய- முந்நசித்துப்போன— தன்னுடன்முற்றும்- தனதுசரீரமுழுதையும்— காவறக்கண்டு- மறப்பில்லாமற்பார்த்து— வீதகவ்வியப்பேர்- வீதகவ்வியனென்னுநாமத்தையுடைய— காயமாய்வரக்கண்டான்- சரீரமாகவரப்பார்த்தான்— (எ-று.) [இ-ரு-க-ம்.] பிரமத்தினின்றுநழுவினமுதலெடுத்தபவங்களையறிந்ததற்பிற்போது, வீதகவ்வியனெனத்தெரிந்ததென்பதாம். - - - - - - - - - - - - - ※

(ருகூ) (அ-கை.) மறைபட்டதேகத்தைவெளிப்படுத்துமுபாயஞ்சிந்தித்துச்சூரியனிடத்திற்செல்லுதல். (கவி) மறைபுழிவ்வுடலெடுத்துமெனமறெண்ணினனவான்கதிரவன்பாற்போய், முறைமெய்பிங்கலன்றனைக்கொணர்ந்தெழுப்பதுமுடிபுமென்றொருப்பட்டா, னறையுங்காற்றுருவாய்ப்புரியட்டகவ

ங்கமாய்க்கதிரோன்பாற், பொறைகொண்மாமுனிசேர்தலுமிதயத்திற்புகுந்தவாறினன்கண்டு. (இ-ள்) மறையுமிவ்வுடல்- பூமியின்மறைந்திருக்கின்றவிந்தசரீரத்தை— எடுத்துமென்றெண்ணி- எடுப்போமென்றுநினைத்து— நன்வான்கதிரவன்பாற்போய்- நல்லபெருமையையுடையசூரியனிடத்திற்சென்று— முறைசெய்- முறைமையைச்செய்கின்ற— பிங்கலன்றனைக்கொணர்ந்து- பிங்கலனையழைத்துவந்து— எடுப்பது- எடுப்பதற்கு— முடியுமென்று- நிறைவேறுமென்று—ஒருப்பட்டான்- ஒருசித்தமானவனாய்— அறையுங்காற்றுருவாய்- மோதாநின்றவாயுவுருபமாய்— புரியட்டகவங்கமாய்- புரியட்டகசரீரத்தோடும்—கதிரோன்பால்- சூரியனிடத்தில்—பொறைகொண்மாமுனி- சாந்தியையுடையவிதகவ்வியமகாமுனியானவர்— சேர்தலும்- (வந்து) சேர்ந்தமாத்திரத்தில்— இனன்- சூரியன்— இதயத்தில்- (தன) திருதயத்தினால்— புகுந்தவாறுகண்டு- வந்ததன்மையைப்பார்த்து— (எ-று) - ＊

(சூ௰) (அ-கை) பிங்கலன்வருதல் (கவி) முன்னநின்றபிங்கலன்றனைக்கதிரவன்முழுதுணர்ந்துடனேவ வன்னவிதகவ்வியப் பெயருள்ளமுமாதித்தனுண்ணின்று, தன்னதாக்கையில்விந்தவெற்பருகு போய்ச்சார்தரக்கதிரோனாற் சொன்னபிங்கலன்வந்துகைநகத்தினாற்றொன்னிலமுறக்கீறி (இ-ள்) கதிரவன்- சூரியனானவன்— முழுதுணர்ந்து- (முனியினபிப்பிராய) முழுதுந்தெரிந்து— அன்ன- அத்தன்மையான—விதகவவியப்பெயர்- விதகவ்வியனென்னுநாமத்தையுடையவனது— உள்ளமும்- சூட்சுமசரீரமும்— ஆதித்தனுண்ணின்றும்- தனதிடத்தினின்றும்— விந்தவெற்பருகு- விந்தமலைச்சார்பிலிருக்கின்ற— தன்னதாக்கையில்- அம்முனியின்சரீரத்தில்— போய்ச்சார்தர- போய்ச்சேரும்படி— கதிரோனால்- சூரியனால்— முன்னநின்றபிங்கலன்றனை- பக்கத்திலிருந்தபிங்கலனை— உடனேவ- விதகவ்வியமுனியோடனுப்ப—சொன்னபிங்கலன்- முன்சொல்லியபிங்கலனானவன்— வந்து- முனியோடுமவந்து— கைநகத்தினால்- கரத்திலுள்ளவுகிரினால்— தொன்னிலமுறக்கீறி- பழமையாகியபூமியைப்பொருந்தக்கிழித்து— (எ-று) - - - - - - - - - - - - - - ＊

(சூக) (அ-கை) மண்ணின்மறைந்ததேகத்தைவெளிப்படுத்தல். (கவி) மானிலத்தினையகழ்ந்துபிங்கலன்றரவருங்களேபரந்தன்னின், மோனமாம்புரியட்டகம் புகுந்ததுமொழிந்தபிங்கலன்போனானமாதவன்மூழ்கினன்செபித்தனனரிச்சித்தான்கதிரோனை, ஞானநெஞ்சினானிறையுடன்முன்புபோனலந்திகழ்ந்ததுமீண்டும். (இ-ள்) மானிலத்தினை- பெரியபூமியை— அகழ்ந்து- தோண்டி— பிங்கலன்றர- பிங்கலன்கொடுக்க— வருங்களேபரந்தன்னின்- வராநின்றசரீரத்தின்— மோனமாம்-மௌனமுனியினதாகிய—புரியட்டகம்-சூக்குமசரீரமானது—புகுந்தது-(தூலசரீரத்திற்)ப்ரவேசித்தது—மொழிந்த- முன்சொல்லப்பட்ட—பிங்கலன்போனான்-பிங்கலனானவனேகினான்—ஆனமாதவன்-(இப்படி)யானவிதகவ்வியமுனியானவன்— மூழ்கினன்- ஸ்நானஞ்செய்து—செபித்தனன்- செபம்பண்ணி— கதிரோனை- சூரியனை— அருச்சித்தான்- ஆராதனைசெய்தான்— ஞானநெஞ்சினால்-அறிவுடையமனதினால்— நிறையுடல்- நிறைந்தசரீரமானது— முன்புபோல்- முன்னையைப்போல— மீண்டும்- திரும்பவும்— நலந்திகழ்ந்தது-நன்மைப்ரகாசித்தது—(எ-று) [இ-ங-க-ம்] முன்புரியட்டகசரீரத்தோடும் வெளிப்பட்டுப்பின்றூலதேகத்தையெடுப்பித்ததிற்புகுந்தனனொன்பதாம் - - - - ＊

(சூஉ) (அ-கை) முனிசகசசமாதியையனுஷ்டிக்கச்சிந்தித்தல். (கவி) வேசமமயித்திரிசாந்திசீரறிவருண்முதிதையமர்குணங்களாயனைத்தினுநெஞ்சுபற்றின்றிக்,கமர்கொள்விந்தநீர்த்தடஞ்சனைநாள்பலகழித்து, நிமலநெஞ்சினாற்பராபரமுணர்முனிநினைப்பான். (இ-ள்) சமம்- சமமும்—மயித்திரி- மயித்திரியும்— சாந்தி- சாந்தமும்— சீர்- செல்வமும்— அறிவு- ப்ரஞ்ஞையும்— அருள்- கிருபையும்—முதிதை- சந்தோடமு(மாகியவிவைகள்)—அமர்குணங்களாய்- அமர்ந்திருக்கின்ற குணங்களையுடையவனாய்— அனைத்தினும்- சகலத்திலும்— நெஞ்சுபற்றின்றி- மனதுபற்றில்லாமல்— விந்தம்- விந்தமலை (ச்சார்பிலுள்ள)— கமர்கொள்- பூமியைப்பிளந்துசெல்கின்ற—தடம்- விசாலம்பொருந்திய—நீர்ச்சனை- நதிக்கரையில்— நாள்பலகழித்து- வெகுகாலஞ்சழித்து— நிமலநெஞ்சினால்- நின்மலமனதினால்—பராபரமுணர்முனி- பராபரத்தையுணர்ந்தமுனியானவர்— நினைப்பான்- சிந்திப்பான். (எ-று)

(சூ௩) (அ-கை) யாவிலுங்கூடியுங்கூடாமற்சொச்சமாய்விளங்குவேனெனல் (கவி) பொறிகளின்றிரண்முன்னமேநிறுத்தினம்புரிந்து, நெறிகொள்சேடத்தைக்கூட்டியேமலையெனநிற்போ, மறியத்தோன்றியுமறைந்தபோலாகுதுமறைந்து, செறியத்தோன்றினனொத்துநிற்குது நொய்ம்மைசேர்ந்து (இ-ள்) பொறிகளின்றிரள்- இந்திரியக்கூட்டங்களை— முன்னமேநிறுத்தினம்- முன்பேநிறுத்தல்செய்தோம்— புரிந்து- விரும்பி— நெறிகொள்சேடத்தை- செவ்வையாகமிஞ்சின(சின்மாத்திர)த்தை— கூட்டி- சேர்த்து— மலையெனநிற்போம்- மலையைப்போலஸ்திரமாகவிருப்போம்— மறியத்தோன்றியும்- திரும்பவுதயமாகியும்— மறைந்தபோலாகுதும்- மறைந்ததுபோலாவோம்— மறைந்தும்- மறைபட்டும்— செறியத்தோன்றினன்- நெருங்கவுதயமானவனாய்—நொய்ம்மை சேர்ந்து- சொச்சமடைந்து— ஒத்துநிற்குதும்- சமமாயிருப்போம்— (எ-று) - - - - - - - ＊

(சூச) (அ-கை.) இத்தேகத்தினின்றுந்துரியவடிவாய்ப்ரகாசிக்குந்தன்மையைச்சிந்தித்தல். (கவி) உணர்வுவிஞ்சியுமுறங்கினனொக்குதுஞ்சுழுத்தி, தணிவறப்பெற்றுமுணர்ந்தவனொக்குதுஞ்சமனாய்க், கனமுமவேறறத்துரியமேபற்றியக்காயத், தணவிநின்றமோரசைவறுசோதிநாமாவேம (இ-ள்) உணர்வுவிஞ்சியும்- விருத்திஞானமிகுந்தும்— உறங்கினனொக்குதும்- சுழுத்தியடைந்தவனுக்கொப்பாவோம்— தணிவற- தணிவல்லாமல்—சுழுத்திபெற்றும்- சுழுத்தியையடைந்தும்— உணர்ந்தவனொக்குதும்- விழித்தவனுக்கொப்பாவோம— சமனாய்- பொதுவாய்— கனமும்வேறற- அற்பமும்வேறில்லாமல்—துரியமேபற்றி- துரியஸ்வரூபத்தைப்பிடித்து—இக்காயத்து- இச்சரீரத்தில்—அணவினின்றும- சார்ந்திருந்தும்— ஓரசைவறு- ஒருசலனமுமில்லாத—சோதிநாமாவேம்- சுயம்ப்ரகாசமாகநா

மாவோம்—(எ-று)(ப-ம்)அறிவுஅநந்தமயமாயிருக்குமென்பார் உணர்வுவிஞ்சியுமுறங்கினனெனக்குதுமென்றும், அநந்தமறிவாய்விளங்குமென்பார், சுழுத்தியுணர்ந்தவனெனக்குதுமென்றுங்கூறினர் ※

(சுரு) (அ-கை) சுகசமாதிபெற்றச்சீவன்முத்தனயிருத்தல் (கவி) என்றுநாடிநற்றியானத்திலாறுநாளிருந்து, சென்றுணர்ந்தனன்கண்டுயில்சேர்பதிகனைப்போ, லொன்றுசித்தனைவீதகவ்வியப்பெயருயர்ந்தோன்,றுன்றுசீவன்முத்தியிலடைந்தநேகநாட்சுகித்தான் (இ-ள்)என்றுநாடி-(இப்படி)யென்றுசிந்தித்து— நற்றியானத்தில்-நல்லசமாதியில்— அறுநாளிருந்து- ஆறுதினமிருந்து— கண்டுயில்சேர்- நித்திரைசெய்கின்ற— பதிகனைப்போல்- வழிச்செல்பவனைப்போல— சென்றுணர்ந்தனன்- சென்றறிந்தான்— ஒன்றுசித்தனை- பொருந்தியசித்தியுள்ளவனை— வீதகவ்வியப்பெயர்- வீதகவ்வியனென்னுநாமமுள்ள— உயர்ந்தோன்- மேலானவன்— துன்று- நிறைந்திருக்கின்ற— சீவன்முத்தியில்- சீவன்முத்திபதத்தை— அடைந்து- பெற்று— அநேகநாள்- வெகுகாலம்— சுகித்தான்- சுகித்திருந்தான்—(எ-று) [இ-ச-க-ம்]சமாதியிலுஞ்சஞ்சரித்தலிலுமொருதன்மையவானசுவானுபவத்தோடுவிளங்கினனென்பதாம். - - - - - - - - - ※

(சுசு) (அ-கை) சீவன்முத்தியில்விதேகமுத்தியைவிரும்பல் (கவி) தீதுநன்மையின்விடுபற்றுஞ்சிதைந்தேக, வீதகவ்வியன்விருப்பொடுவெறுப்புநெஞ்சிலனாய்ப், போதன்மீடலும்பிறவியுங்கருமமும்போக்கி, யோதுதேகந்தீர்கேவலவீடுறவுணர்ந்தான் (இ-ள்) தீதுநன்மையின்- தீமைநன்மைகளின்— விடுபற்றும்- விடுதலும்பற்றுதலும்— சிதைந்தேக- கெட்டுப்போக— வீதகவ்வியன்- வீதகவ்வியமுனியானவர்— விருப்பொடுவெறுப்பு- இராகத்துவேடங்கள்—நெஞ்சிலனாய்- மனதிலில்லாதவனாய்— போதன்மீடலும்- போதலும்வருதலுமாகிய— பிறவியுங்கருமமும்- சநநகன்மத்தையும்— போக்கி- கெடுத்து— ஓதுதேகந்தீர்கேவலம்- சொல்லாநின்றவிதேககைவல்யமான— வீடுறவுணர்ந்தான்-மோக்ஷமடையச்சிந்தித்தான்—(எ-று) - - - - - - - - - - - ※

(சுஎ) (அ-கை) தத்துவங்களனைத்தையுத்தனதாத்மஸ்வருபத்திற்சாக்ஷிசிந்தித்திராகத்துவேடங்களைக்களைத்தல் (கவி) சித்தனாமுனியொருபகற்கிரிமுழைசேர்ந்து, பெத்தபங்கயாசனத்தினன்றானென்றன்னிற்பேசு, மெத்துமாசையேநிராசையைமேவுதிமுனிவே, யொத்துளாறுதிவினோதித்தேனெடும்பகலும்மால். (இ-ள்.) சித்தனாமுனி- சித்தனாகியவீதகவ்வியமுனியானவர்—ஒருபகல்- ஒருதினத்தில்— கிரிமுழைசேர்ந்து- மலைக்குகையையடைந்து— பெத்தபங்கயாசனத்தினன்-கட்டியபதுமாசனத்தையுடையவனாய்— தான்றன்னிற்பேசும்- தன்னிடத்திற்றானேபேசுவார்— மெத்துமாசையே- மிருதுவானவாசையே— நிராசையைமேவுதி- நிராசையைப்பொருந்தக்கடவாய்— முனிவே- கோபமே— ஒத்துளாறுதி- சமமாகவுள்ளேசாந்தியடையக்கடவாய்—உம்மால்- உங்களோடும்—நெடும்பகல்-வெகுகாலம்— வினோதித்தேன்- வினோதத்தையடைந்தேன்—(எ-று) - - - - - - - - ※

(சுஅ) (அ-கை) போகசுகதுக்கங்களைக்களைத்தல் வே,(கவி) போகங்காளுமைத்தொழுதேனெடுநாளும்மாற் புவியில்விளையாடியவாபோதும்போதுஞ், சோகந்தீரிவ்வீடுமறக்கச்செய்தசுகங்காளுங்களைத்தொழுதேன்றுயர்காளும்மா, லாகந்தான்வேகவினு லன்றேவன்பா லாத்துமதத்துவமுணர்ந்தேனாதலாலே, போகஞ்சேர்முத்தியெனக்குதவினீர் நீருபகரித்தவுமைத்தொழுத லுரிமையன்றே. (இ-ள்) போகங்காள்- போகங்களே— உமைத்தொழுதேன்- உம்மைவணங்கினேன்—உம்மால்-உங்களால்— நெடுநாள்- வெகுகாலம்— புவியில்- சகத்தில்— விளையாடியவா-விளையாடினவிதம்—போதும்போதும்- போதும்போதும்— சோகந்தீர்- துக்கமில்லாத—இவ்வீடு- இந்தமோக்ஷத்தை—மறக்கச்செய்த- மறந்துபோகச்செய்த— சுகங்காள்- (விடய) சுகங்களே— உங்களைத்தொழுதேன்-உங்களைவணங்கினேன்— துயர்காள்- துன்பங்களே— உம்மால்- உங்களால்—ஆகந்தான்- சரீரமானது—வேகவினுலன்றே- வேகுதவினாலல்லவா— அன்பால்- அன்பினால்— ஆத்துமதத்துவமுணர்ந்தேன்- ஆத்துமதத்துவத்தையறிந்தேன்— ஆதலால்- ஆதலினால்—போகஞ்சேர்முத்தி- ஐக்கியங்கூடியமோக்ஷத்தை— நீர்- நீங்கள்—எனக்குதவினீர்-எனக்குக்கொடுத்தீர்கள்—உபகரித்த- உபகாரஞ்செய்த— உமைத்தொழுதல்- உங்களைவணங்குதல்— உரிமையன்றே- உரியதல்லவா—(எ-று) - - - - ※

(சுகூ)(அ-கை)தேகமிச்சைநீதியானவிவைகளைக்களைத்தல் (கவி)நெடுநாளைநண்பனுமுடலேயுன்னைநீக்குகின்றேன்மெய்ஞ்ஞானநிரம்பச்சுற்று, கெடுங்கேடுன்றனக்குத்தேடிக்கொண்டாய் கிளராசையெனுந்தாயேசொளாயென்சொற், றடுமாறிநனிவாடித்தளரவேண்டாஞ்சாந்தனையானசன்றேன்றருமமேநீ, யடுங்கோரநரகந்தீர் துறக்கத்தேமுன்னைக்கினையால்வாழியுனைத்தொழுவேனன்பால் (இ-ள்.) நெடுநாளைநண்பனும்-வெகுகாலமிஷ்டனான—உடலே- சரீரமே—உன்னைநீக்குகின்றேன் -உன்னைத்தள்ளுகின்றேன்— மெய்ஞ்ஞானம்- உண்மைஞானமானது— நிரம்பக்கற்று- பூரணமாகவற்பியாசஞ்செய்து— கெடுங்கேடு- கெடுகின்றகேட்டை— உன்றனக்கு- உன்னுடேயுனக்கு— தேடிக்கொண்டாய்- சம்பாதித்துக்கொண்டாய்— கிளர்- ஒளிசெய்கின்ற— ஆசையெனுந்தாயே- இச்சையென்னுமாதாவே—யென்சொல்- யெனதுவசனத்தை— கேளாய்- கேட்பாய்— தடுமாறி- தடுமாறி—நனிவாடி- மிகவும்வாட்டமுற்று— தளரவேண்டாம்- தளர்வையடையவேண்டாம்— சாந்தனை- உபசாந்தனாகிய—யானசன்றேன் - நானுன்னைநீங்கினேன்—தருமமே-சுகிர்தமே— நீயடுங்கோரநரகந்தீர் துறக்கத்து- நீகொல்லுங்கோரமுள்ளநரகம்விட்டுமோக்ஷத்தில்—முன்னைக்கினையாலுனைத்தொழுவேனன்பால்- முன்னைச்செய்ததாலுன்னையன்பினால்வணங்குவேன்—வாழி-வாழக்கடவாய்—(எ-று) ※

(எய) (அ-கை) பிராணன்களையுமனதையுங்களைத்தல் (கவி) உடன்பிறந்தநண்பராமுயிர்காளும்மையொழுங்கிலேயொழிக்கின்றேனுயர்ந்துவாழ்தீர், நடந்தசல்கேளுமெனன்னவிவ்வாறுள்ளேநாடுமனமேடனேசனைசன்றுயாறி, யிடம்பெறநின்றேங் சாரமெல்லவோதி யிசப்பொருள்கள் புறத்துள்ளவித

யத்துள்ள, தடம்பெரிய நுண்ணிய மூவுலகிலுள்ள சங்கற்பத்தமைந்தவெலாந்தள்ளினனே. (இ-ள்) உடன்பிறந்தநண்பராம்- சகோதரமானவிஷ்டராகிய—உயிர்காள்-சீவர்களே—உம்மை- உங்களை—ஒழுங்கிலேயொழிக்கின்றேன்- வழியாகத்தவிர்க்கின்றேன்— உயர்ந்துவாழ்திர்- சுகமாய்வாழக்கடவீர்கள்— நான்- யான்— நடந்தகல்கேனென்ன- நடந்துபோவேனென்று— இவ்வாறு- இந்தப்ரகாரம்— உள்- அகத்தில்— நாடுமனம்- சிந்திக்கின்றமனதும்— எடணைகள்- ஈடணைத்திரயங்களும்— நன்றுயாறி- நன்றாகவிட்டு—இடம்பெறநின்று-(ஞானபூமி)யிடமாகநின்று— ஓங்காரமெல்லவோதி- பிரணவத்தைமிருதுவாகவுச்சரித்து— இகப்பொருள்கள்- இவ்விடத்திலுள்ளவஸ்துக்களும்— புறத்துள்ள- புறம்பிலுள்ளவஸ்துக்களும்— இதயத்துள்ள- இருதயத்திலுள்ளவஸ்துக்களும்— தடம்பெரிய- பருத்தஸ்தூலமும்— நுண்ணிய- சூட்சுமமாகிய— மூவுலகிலுள்ள- மூன்றுலகத்திலுமுள்ளதாகிய—சங்கற்பத்தமைந்த- சங்கற்பத்தினால்வந்த— எலாந்தள்ளினான்- சகலத்தையுநீக்கினான்— (எ-று.) [இ-ரு-க-ம்] ஆசையைநிராசையாகவு முனிவைச்சாந்தமாகவுந் போகங்களைமாபோகமாகவும்விடயசுகங்களைப் பிரமசுகமாகவுந் துன்பங்களை யின்பமாகவுந் தேகத்தை தேகிவடிவமாகவும் ஆசையைத்தற்பிரியமாகவும்பிராணனைப் பிராணியாகவும்மனதை யாத்மவிளக்கமாகவுங் கணத்தவைகளையும்பிரணவஸ்வரூபத்தாக்கத்தொடங்கினனென்பதாம். - - - - - - - - - - - - - - - ※

(எச)(அ-கை) சுத்தவாசனையையாத்மாவினிடத்தடக்கும்போதுண்டானவநுபவமரபைத்தெரிவிக்குநிமித்தமதன்கிரமத்தைச்சொல்லத்தொடங்கல். (கவி) ஓங்காரமுடிவாகத்தீர்க்கமானவோசையெனு நூலுடனேபொறிகளுற்ற, தேங்காதபுலனெல்லா மணத்தைக்காற்றுத்தீர்வதுபோற் றீர்ந்தனன்சேணிடையேசங்கு, னீங்காதுபோலிருண்மாத்திரமுன்றோன்றி நிகழ்தலுந்தள்ளினன் சோதிநேர்முன்றோன்றப்,பாங்காகக்கணமதனைப்பார்த்துத்தீர்த்தான்பயிலிருடேசிரண்டுமறப்பாறிப்போன (இ-ள்) ஓங்காரமுடிவாக- பிரணவாந்தமாக— தீர்க்கமான- நீண்டதாகிய— ஓசையெனும்- சத்தமென்கின்ற— நூலுடன்- நூலோடும்— பொறிகளுற்ற- இந்திரியங்கள்பொருந்தின— தேங்காதபுலனெல்லாம்- நிறையாதவிடயங்களனைத்தையும்— மணத்தை- கந்தத்தை— காற்றுத்தீர்வதுபோல்- வாயுநீக்குவதுபோல— தீர்த்தனன்- நீங்கினான்— சேணிடை- ஆகாயத்தினிடத்தில்— சங்குனீங்காதுபோல்- இருணீங்காததுபோல— இருண்மாத்திரமுன்றோன்றி- இருண்மாத்திரமுன்னேயுண்டாகி— நிகழ்தலும்- விளங்கவும்—தள்ளினன்- நீக்கினான்—சோதிநேர்முன்றோன்ற- ப்ரகாசமுன்னேயுண்டாக—பாங்காக- அழகாக— கணம்- க்ஷணநேரத்தில்—அதனைப்பார்த்து- அந்தப்ரகாசத்தைப்பார்த்து— தீர்த்தான்- நீக்கினான்—பயிலிருள்-சொல்லப்பட்டவந்தகாரமும்—தேசு-ப்ரகாசமுமாகிய— இரண்டுமற- இரண்டுமில்லாமல்— பாறிப்போன- ஓடிப்போயின— (எ-று.) - - - - - - - - ※

(எஉ) (அ-கை) இ-து (கவி) அவத்தையிதுதனைமனத்தாற்பற்றிமேலோனங்குதித்த மனந்திரணமென்னமுற்றுந், தவிர்த்தனனோரிமைப்பிலதற் பின்னப்போதே சனித்தசிசு வறிவொத்துச்சாலநொய்தாய், நிவக்குமொளிபெறுமறிவைப்பெற்றுப்பாதிநிமிடம்பாதியிலெண்ணநீக்கிநின்றான், றுவக்குறுகாற்றசைவுவிடல்போலச்சிற்றின்றொடர்காட்சிமாற்றினன்றுகளிலாதோன் (இ-ள்) இது- இந்த— அவத்தைதனை- அவத்தையை— மனத்தாற்பற்றி-மனதினாற்பிடித்துக்கொண்டு— மேலோன்- உயர்வான (வீதகவ்வியமுனியான)வன்— அங்குதித்தமனம்- அவ்விடத்திலுண்டாகியமனதை—திரணமென்ன- துரும்பைப்போல— முற்றும்- முழுதும்— ஓரிமைப்பில்- ஓரிமைநேரத்தில்— தவிர்த்தனன்- ஒழித்தான்— அதற்பின்- அதன்பின்பு— அப்போதுசனித்த- அப்பொழுதுபிறந்த— சிசுவறிவொத்து- குழந்தையறிவுக்கொப்பாகி— சாலநொய்தாய்- மிகவுஞ்சொச்சமாய்— நிவக்குமொளி- உயர்ந்தோளிருமப்ரகாசத்தை— பெறுமறிவைப்பெற்று- பெருநின்றஞானத்தைப்பெற்று— பாதிநிமிடம்- அரைநிமிடத்தில்— பாதியில்- கானிமிடத்தில்— எண்ணநீக்கிநின்றான்- நினைவத்தள்ளியிருந்தான்— துவக்குறுகாற்று- தொந்தத்தையுடையவாயுவானது— அசைவுவிடல்போல- சலனத்தைநீக்குவதுபோல—- சிற்றின்- ஞானத்தின்— துகளிலாதோன்- குற்றமற்றவன்— தொடர்காட்சி மாற்றினன்- தொடராநின்றவிடயத்தைநீக்கினான்— (எ-று) - - - - - - - - - - - ※

(எரு) (அ-கை) இ-து (கவி) வருசிற்சாமானியத்தையடைந்தான்சத்தாமாத்திரமேவடிவானான்சுழுத்திமேவி, யிருபொற்குன்றெனநின்றான்சுழுத்தியூற்றமெய்தியபின்றுரியவடிவெளிதினுற்றா, னருகுற்றநிராநந்த மாயமாயாவாநந்தமாயசத்தாகியுஞ்சத்தாகி, யொருவுற்றவசனங்கட்கெட்டாதானவொருபொருடானாய்நின்றானொப்பிலாதான். (இ-ள்.) வருசிற்சாமானியத்தையடைந்தான்- வராநின்றசிற்சாமான்யத்தைப்பெற்றான்—சத்தாமாத்திரமே- சத்தாமாத்திரமே—வடிவானான- ஸ்வரூபமானான்—சுழுத்திமேவி- நனவிற்சுழுத்தியையடைந்து—இருபொற்குன்றென- மகாமேருவைப்போல— நின்றான்- நின்றனன்—சுழுத்தியூற்றமெய்தியபின்- நனவிற்சுழுத்தியினுறுதியையடைந்தபின்பு— துரியவடிவெளிதினுற்றான்- துரியஸ்வரூபத்தையெளிதிலடைந்தான்— அருகுற்ற- சமீபமாயிருந்தது—நிராநந்தமாய- நிராநந்தமான—மாயாவாநந்தமாய்- நித்தியாநந்தத்தையுடையவனாய்— அசத்தாகி- அசத்தாகியும்— சத்தாகியும்-சத்தாகியும்— ஒருவுற்றவசனங்கட்கு- நீக்கமுற்றவாக்கியங்களுக்கு—எட்டாதான-எட்டாததாகிய—ஒருபொருள்-ஒப்பற்றவஸ்துவே— ஒப்பிலாதான்- சமானமற்றவீதகவ்வியமுனியானவர்—தானாய்நின்றான்-தானாகவிருந்தான்—(எ-று.) [இ-௯-க-ம்] இந்திரியமுதலியவனைத்தின்விடுதியேயந்தகாரமாகவெளிப்படவதனையதைக்கண்டசித்தினாற்றள்ளவச்சித்து ப்ரகாசமாய்வெளிப்படவதனையதன்மயமாயிருந்ததன்விருத்தியைத்தள்ள அஃதுசிற்சாமான்யமாய்வெளிப்பட வதுவுமதற்காதாரமானசத்தாசாமானியமாக வச்சத்துந்தன்விளக்கமானதுரியமாய்வெளிப்படவத்துரியமுந்தனதாநந்தமாய்வெளிப்பட்ட துவு மதீதமாய்வெளிப்பட்ட துவாகவிளங்கினவென்பதாம் ※

(௭௪) (அ-கை) துரியாதீதமாய்நின்றுவிளங்குந்தன்மையையுரைத்தல் (கவி) சூனியமென்பார்க்கதுவாய்ப்பிரமமென்றுசொல்லுவார்க்கதுவாய்விஞ்ஞானமென்று, தானியம்புவோர்க்கதுவாய்ப்புருடனாகிச்சாங்கியற்குமியோகியர்க்கீசனாகி, யீனமில்சைவாகமர்க்குச்சிவனாய்க்காலமென்பாருக்கதுவாய்மத்தியர்கட்கெல்லா, மான்முறுமத்தியமாய்ச்சமமாய்க்காணுமனத்தினர்க்கெல்லாமானபொருடானானன். (இ-ள்) சூனியமென்பார்க்கு - சூனியமென்பவர்களுக்கு— அதுவாய் - அச்சூனியமாகியும்— பிரமமென்றுசொல்லுவார்க்கு - பிரமமென்பவர்களுக்கு— அதுவாய் - அப்பிரமமாகியும்— விஞ்ஞானமென்றுதானியம்புவோர்க்கு - விஞ்ஞானமென்பவர்களுக்கு— அதுவாய் - அவ்விஞ்ஞானமாகியும்— சாங்கியற்குப்புருடனாகி - சாங்கியற்குப்புருடனாகியும்— யோகியர்க்கீசனாகி - யோகிகளுக்கீசனாகியும்— ஈனமில் - குறைவில்லாத— சைவாகமர்க்குச்சிவனாய் - சைவாகமத்தாருக்குசிவனாகியும்— காலமென்பாருக்கு - காலமென்பவர்களுக்கு— அதுவாய் - அக்காலமாகியும்— மத்தியர்கட்கெல்லாம்— மாத்தியர்கட்கெல்லாம்— மானமுறுமத்தியமாய் - பிரமாணமுள்ளமத்தியமாகியும்— சமமாய்க்காணும் - சமமாய்ப்பார்க்கின்ற— மனத்தினர்க்கு - மனதையுடையவர்களுக்கு— எல்லாமான - யாவுமாயிருக்கின்ற— பொருடானானன் - வஸ்துவேதானானன்— (எ-று) - - - - - - - *

(௭௫) (அ-கை) (இ-து) (கவி) நூலனைத்தின்சித்தாந்தமேதெல்லோர்க்கு நோக்கியதேதோர்ந்ததேதெல்லாமேது, ஞாலமெலாமுறைவதேதசைவொன்றில்லா நல்லதேதொளிக்குமொளிதருவதேது, பாலுறுதன்னனுபூதியொன்றாய்க்காணப்பட்டதேதொன்றாயும்பலவாமேது, சாலுகளங்கம்படைத்தும்படையாதேதுசகலமுமாயலாததேதததுதானானன். (இ-ள்) நூலனைத்தின் - சாஸ்திரங்களெல்லாவற்றின்— சித்தாந்தமேது - சித்தாந்தமியாது— எல்லோர்க்குநோக்கியதேது - எல்லாராலும்பார்க்கப்பட்டதியாது— ஓர்ந்ததேது - அறிந்ததியாது— எல்லாமேது - சகலமுமானதியாது— ஞாலமெலாமுறைவதேது - பூமிகளனைத்திலும்வசிப்பதியாது— அசைவொன்றில்லா நல்லதேது - ஓரசைவுமில்லாதநன்மையுள்ளதியாது— ஒளிக்குமொளிதருவதேது - ப்ரகாசங்களுக்குப்ரகாசங்கொடுக்கின்றதியாது— பாலுறுதன்னனுபூதி - உரிமையுள்ளதனதனுபூதியால்— ஒன்றாய்க்காணப்பட்டதேது - ஏகமாய்க்காணப்பட்டதியாது— ஒன்றாயும்பலவாமேது - ஏகமாகியுமநேகமாகியுமிருக்கின்றதியாது— சாலுகளங்கம் - மிகுந்தகளங்கத்தை— படைத்தும்படையாதேது - பெற்றும்பெறாமலிருக்கின்றதியாது— சகலமுமாயலாததேது - எல்லாமாயல்லாததானதெதுவோ— அதுதானானன் - அந்தவஸ்துவேதானானன் (எ-று)

(௭௬) (அ-கை) இ-து (கவி) அடர்பிறப்போடிறப்பின்றியாதியன்றியாதியாயொன்றாகி யநேகமாகித், தொடர்சகளநிட்களமாய்விண்ணினைய்தாய்த்தூய்தானநிலையீசனாகியொல்லைத், திடமுறநின்றிருபதினாயிரமாண்டெல்லைச்செருக்குறவேண்டியபடியேசகத்துலாவிப், படர்மனமீண்டெழாதவகைசமித்தொன்றானான்பகர்வீதகவ்வியனும்பரமயோகி, (இ-ள்) அடர் - நெருங்கிய— பிறப்போடிறப்பின்றி - சனனமரணமில்லாததாகியும்— ஆதியன்றி - அநாதியாகியும்— ஆதியாய் - ஆதியாகியும்— ஒன்றாகி - ஏகமாகியும்— அநேகமாகி - பலவாகியும்— தொடர் - தொடராநின்ற— சகளநிட்களமாய் - சகளநிட்களமாகியும்— விண்ணினைய்தாய் - ஆகாயத்திலுஞ்சொச்சமாகியும்— தூய்தான - பரிசுத்தமாகிய— நிலையீசனாகி - நிலையையுடையவீசனாகியும்— திடமுறநின்று - திடமாயிருந்து— இருபதினாயிரமாண்டெல்லை - இருபதினாயிரம்வருடமளவும்— செருக்குற - மகாமகிழ்ச்சியடைய— வேண்டியபடியே - விரும்பினப்ரகாரமே— சகத்துலாவி - உலகத்திற்சஞ்சரித்து— படர்மனம் - படருகின்றமனது— மீண்டெழாதவகைசமித்து - திரும்பவுண்டாகாதவண்ணங்கெடுத்து— பகர்வீதகவ்வியனும் - சொல்லியவீதகவ்வியனென்னும்— பரமயோகி - பரமஞானியானவர்— ஒல்லை - சீக்கிரமாக— ஒன்றானான் - அத்துவிதமானான்— (எ-று) [இ-ங-க-ம்] அதீதமேயாதுயாதெப்படியோவப்படியப்படியெல்லாமாய்விளங்குகின்றசாக்ஷாத்காரமானவிதோமுத்திதன்மையையடைந்தனனென்பதாம் - - - - - - *

வீதகவ்வியன் கதைமுற்றிற்று. ஆ கதை ௨௭௬ கவிதை (௲௨௱௯)



# உபசாந்திப்பிரகரணம்.



அ-கை. முற்சதையிற் சித்தவிஸ்ராந்தியின்பொருட்டு பற்றறுதிமுதலிய வற்பியாசங்களைச்சொல்லி அச்சித்தசாந்தியே செகத்சாந்தமென்பதை யுறுதிப்படுத்து நிமித்த மிவ்வொன்பதுகதைகளின்சாரங்களையெடுத் துபசாந்திப்பிரகரணமாக நிரூபிக்கிறார். - - - - - - *

(௪) (அ-கை) சீவன்முத்தனுக்காகாயகமனமுதலியசித்திகளேனின்றெனல் (கவி) வே என்னவுரைத்தமுனிதன்னையிராமனோக்கியுரைசெய்வா, னுன்னுசீவன்முத்தியினோருடல்கட்கெல்லாமாகாயந், தன்னடத்தன்முதலானசத்திகாணேனமென்னென்ன, வன்னவினாவுக்குத்தரங்களநியவுரைத்தானருள்வசிட்டன். (இ-ள்) என்னவுரைத்தமுனிதன்னை - (இப்படி) யென்றுசொல்லிய வசிஷ்டமுனியை— இராமனோக்கி - இராகவன்பார்த்து— உரைசெய்வான் - சொல்லுவார்— உன்னுசீவன்முத்தியினோர் - நினைக்கப்படுகின்றசீவன்முத்தியையுடையவர்களது— உடல்கட்கெல்லாம் - சரீரங்களுக்கெல்லாம்— ஆகாயந்தன்னடத்தன்முதலான - ஆகாயகமனஞ்செய்தன்முதலிய— சத்திகாணேனம் - சத்திகளைப்பார்க்கிலம்— என்னென்ன - என்னவென்றுகேட்க— அன்னவினாவுக்கு - அக்கேள்விக்கு— உத்தரங்கள் - உத்தரங்களை— அருள்வசிட்டன் - கிருபையுள்ளவசிஷ்டர்— அறியவுரைத்தான் - தெரியச்சொன்னார் (எ-று)

(உ) (அ-கை) அணிமாமுதலியசித்திகளுமாயாவிசித்திரமென்பதையறிவிக்குநிமித்தமவைகளைச்
சீவன்முத்தன்வேண்டானெனல். (கவி) பெரியவுணர்வில்பெத்தர்களும்பேணுமருந்தான்மந்திரத்தாற்,
கிரியைதன்னாற்காலத்தாற்கிளர்ந்தயூகத்தாலியற்றின், விரியும்விண்போக்காதிகளைமேவாநிற்பர்மெய்யு
ணர்வோர்க், குரியவல்லவிவையவர்களுண்மைநோக்கேவிடாதுறுவார் (இ-ள்) பெரியவுணர்வில்-பூரண
ஞானமில்லாத—பெத்தர்களும்- பந்தத்தையுடையவர்களும்—பேணுமருந்தால்- விரும்புகின்றவவிட
தங்களினாலும்— மந்திரத்தால்- மந்திரங்களினாலும்— கிரியைதன்னால்- தொழில்களினாலும்— காலத்
தால்- காலங்களினாலும்—கிளர்ந்தயூகத்தால்- சொல்லியயூகங்களினாலும்—இயற்றின்-முயற்சித்தால்—
விரியும்விணபோக்காதிகளை- பரவியவாகாசகமனாதிகளை— மேவாநிற்பர்- பொருந்தியிருப்பார்கள்—
மெய்யுணர்வோர்க்கு- உண்மைஞானமுடையவர்களுக்கு—இவையுரியவல்ல- இச்சித்திகளுரித்தாயின
வல்ல— அவர்கள்- அந்தஞானவான்கள்— உண்மைநோக்கு- தத்துவமான(வாத்தும)திருஷ்டியை—
விடாதுறுவார்- இடைவிடாமற்பொருந்துவார்கள்— (எ-று) - - - - - - *

(ஙா) (அ-கை) வேண்டினால்வருமோவெனின்முன்சொல்லியகிரமங்களால்வருமெனல் (கவி) அறிந்
தோரறிவாலறிவினிடத்தமைவதல்லாலாசையின்பின்,பிறிந்தோடார்கள்சகப்பொருளின்பேதமெல்லா
மாயைகளே, மறிந்தேமாயைகெடவென்றோர்மறித்துமதனின்மூழ்குவரோ, செறிந்தேயறிஞர்களும்
விரும்பிற்சித்தியுறுமுன்பகரொழுங்கால். (இ-ள்.)அறிந்தோர்-ஞானிகள் —அறிவாலறிவினிடத்து-ஞா
னத்தினால்ஞானத்தினிடத்தில்—அமைவதல்லால்-அமைவதேயன்றி— ஆசையின்பின்-(ஆகாயகமனாதி)
யிச்சையின்பின்— பிறிந்தோடார்கள்- பிரிந்துசெல்லார்கள்— சகப்பொருளின்-உலகத்திலுள்ளவஸ்
துக்களின்— பேதமெல்லாம்- வேற்றுமைகளனைத்தும்— மாயைகளே-மாயாமயங்களாம்—மாயை-
அம்மாயையானது— மறிந்துகெடவென்றோர்- மடங்கிக்கெடும்படிசெயித்தவர்கள்— மறித்துமதனி
ன்மூழ்குவரோ- திரும்பவுமம்மாயையிலழுந்துவார்களோ— செறிந்து- நெருங்கி— அறிஞர்களு
ம்விரும்பில்- ஞானவான்களுமிச்சிப்பார்களாயின்— முன்பகரொழுங்கால்- முன்சொல்லப்பட்டகிர
மத்தினால்— சித்தியுறும்- சித்தியுண்டாம்— (எ-று) - - - - - - *

(ச)(அ-கை) ஆயினும்வேண்டலாமேயெனின்முத்தியின்மையால்விரும்பார்களெனல் (கவி)கேட்ட
மருந்துமந்திரங்கள்கிரியைகாலமூகமெலா,நாட்டுஞ்சித்திகளைநல்குநல்லமுத்திதரமாட்டா,தேட்டமு
ளதேலொருத்தற்கொன்றதுதானியற்றிற்சித்திக்கும்,பூட்டுமாசைவந்தணுகாப்புரணபோதமுடையோ
ர்க்கே. (இ-ள்) கேட்டமருந்து- கேள்விப்பட்டவவிடதங்களும்— மந்திரங்கள்- மந்திரங்களும்—
கிரியை- தொழில்களும்— காலம்- காலங்களும்— ஊகமெலாம்- யுத்திகளுமாகிய விவைகளனைத்து
ம்—நாட்டுஞ்சித்திகளைநல்கும்-நாட்டாநின்றசித்திகளைகொடுக்கும்— நல்லமுத்திதரமாட்டா- நன்
மையுள்ளமோக்ஷத்தைக்கொடுக்கமாட்டாது— ஒருத்தற்கு- ஒருவருக்கு— ஒன்றுதேட்டமுளதேல்-
(சித்தி)யொன்றிற்றேட்டமுண்டானால்— அதுதானியற்றில்- அதைமுயற்சித்தால்— சித்திக்கும்- கி
டைக்கும்— பூட்டுமாசை- பந்தப்படுத்துகின்றகமனாதியிச்சையானது— புரணபோதமுடையோர்க்
கு- பூரணஞானத்தையுடையவர்களுக்கு— வந்தணுகா- வந்துபொருந்தாது— (எ-று) [இ-ச-க-ம்]
நிராசையுள்ளஞானிக்காசையுள்ளசித்திகள் கூடாவென்பதாம். - - - - - - - - - *

(ரு) (அ-கை) முத்திக்குச்சித்தியிழிவாமென்பதைக்காட்டி மேற்சிரஞ்சீவிகளின் யோகமுமப்படி
யேயாமென்பதையறிவிக்கத்தொடங்கல் (கவி) காதலெல்லாமிறந்தொழிந்தாற்கலங்காஞானோதயமு
ண்டா, மாதரஞ்செய்சித்திகளினமிழ்வோர்க்கப்பேறடையாதென், றோதுமுனியை யோகிகடாமூழி
காலமுயிர்வாழ்தற், கேதுமூலமெனக்கேட்டானிராமன்மீட்டுமுனிசொல்வான் (இ-ள்) காதலெல்லா
ம்- ஆசைகளனைத்தும்— இறந்தொழிந்தால்- மரித்துநீங்கினால்— கலங்கா- கலக்கமில்லாத—ஞானோ
தயமுண்டாம்- (ஆத்ம) ஞானமுதிக்கும்— ஆதரஞ்செய்- ஆசையைவிளைக்கின்ற— சித்திகளில்-(சமா
னாதி) சித்திகளிடத்தில்—அமிழ்வோர்க்கு-முழுகுகின்றவர்களுக்கு—அப்பேறடையாதென்று-அவ்வா
ன்மலாபமுண்டாகாதென்று— ஓதுமுனியை-சொல்லியவசிட்டமுனியை—யோகிகடாமூழிகாலமுயி
ர்வாழ்தற்கு- யோகியர்கற்பகாலஞ்சீவித்திருப்பதற்கு—ஏதுமூலமென-யாதுகாரணமென்று—இரா
மன்கேட்டான்-இராகவன்கேட்க—மீட்டுமுனிசொல்வான்-திரும்பவும்வசிட்டர்சொல்லுவார் (எ-று)

(சா) (அ-கை) சிரஞ்சீவிக்குப்பிராணபந்தனமேகாரணமாமெனல் (கவி) பிராணனசையிலசை
ந்திடுவர்பிராணனடங்கிற்கற்போல்வர், பிராணன்றன்னைத்தரித்தலினாற் பெருநாணசியார்யோகிகடா
ம், பிராணன்றன்னிநெஞ்சத்திற்பிறக்குமசைவுட்பிறனடங்கிற், பிராணனுசமூப்பிரண்டும் பெருந்
தூரத்திலேகிடுமால் (இ-ள்) பிராணனசையில்- பிராணவாயுவசைந்தால்— அசைந்திடுவர்- அசைவா
ர்கள்— பிராணனடங்கில்- பிராணவாயுவடங்கினால்— கற்போல்வர்- மலைக்கொப்பவர்கள்—பிராண
ன்றன்னைத்தரித்தலினால்- பிராணனைத்தரித்ததினால்— யோகிகடாம்- யோகிகள்— பெருநாணசியார்-
வெகுகாலமிறவார்கள்— பிராணன்றன்னில்- பிராணனிடத்திலும்— நெஞ்சத்தில்- மனதினி
டத்திலும்— பிறக்குமசைவு- உண்டாகின்றவசைவானது—உட்புறனடங்கில்- உள்ளிலும்புறம்பிலுமட
ங்குமானால்—பிராணனுசமூப்பிரண்டும்- மரணமும்வார்த்திகமுமாகியவிவ்விரண்டும்— பெருந்தூ
ரத்தில்- வெகுதூரத்தில்— ஏகிடும்- போய்விடும்— (எ-று) - - - - - - - - - *

(எ) (அ-கை) இத்தேகவாஞ்சையைநீக்கினவர்களேதத்துவத்தையறிந்வர்களாமெனல் (கவி) உள்
ளும்புறம்புமசைவின்றியுயிருமனனுமொடுங்குமெனிற், றள்ளுருமலொருக்காலுந் தாதுமெல்லாஞ்
சடத்துறையுந், தெள்ளயறிவதற்றாலசத்ர்ந்துபுந்திதெளிந்துதயங், கொள்ளும்பந்தமெலாமறுத்
தோரனேருவுண்மைக்குறித்தறிந்தோர் (இ-ள்) உள்ளும்புறம்பும்- உள்ளுமவெளியிலும்— அ
சைவின்றி- சலனமில்லாமல்— உயிருமனனும்- பிராணனுடனாடும— ஒடுங்குமெனில்- அடங்குமா

யின்— ஒருக்காலும்- ஒருகாலத்திலும்— தள்ளுறாமல்- தள்ளப்படாமல்— தாதுவெல்லாம்- தாதுக்களை
னைத்தும்- சடத்துறையும்- தேகத்தில்வாசஞ்செய்யும்— தெள்ளியறிவதறிந்து- தெளிவாகவறியவே
ண்டிய (வாத்மஞானத்தை) யறிந்து— ஆசைதீர்ந்து- இச்சைநீங்கி—புந்திதெளிந்து- புத்திதெளிவா
கி— இதயங்கொள்ளும்- மனதிற்கொள்ளுகின்ற— பந்தமெலாமறுத்தோரன்றோ- பந்தங்களனைத்
தையுங்கெடுத்தவர்களல்லவா— உண்மை- தத்துவத்தை— குறித்தறிந்தோர்- மதித்துணர்ந்தவர்கள்—.
(எ-று.) [இ-ங-க-ம்] சிரஞ்சீவத்துக்கானமனோபிராணயந்தனம்ஞானிக்குக்கூடாவென்பதாம். - ⁕

(அ) (அ-கை) ஞானியின்மனமிறந்துமிறவாமன்மயித்திரியாதிகுணங்களோடுவிளங்குவதையறி
விக்குநிமித்தமதனிறத்தலையிரண்டுவிதமாகச்சொல்லுதல் (கவி) என்றமுனியைவிவேகத்தினெழிச்சி
யாலேமனமிறக்கிற், றுன்றுகின்றமயித்திரியைமுதலாங்குணமெவ்விடத்தொன்றுங், குன்றமனையாயு
ரையென்றவிராகவற்குமுனிகூறு, மொன்றுமருவுமுருவுமெனவுளத்தினாசமோரிரண்டே. (இ-ள்) எ
ன்றமுனியை- (இப்படி)யென்றுசொல்லியவசிட்டமுனியை—விவேகத்தினெழுச்சியால்- விவேகவுத
யத்தினால்— மனமிறக்கில்- மனது (ஸ்வரூபத்தி)லயிக்குமாயின்— துன்றுகின்ற- நிறைகின்ற—மயி
த்திரியைமுதலாங்குணம்- மயித்திரிமுதலாகிய (நான்கு)குணங்களும்—எவ்விடத்தொன்றும்-எங்கே
பொருந்தும்—குன்றமனையாய்- மலைகொப்பானவரே—உரையென்ற- சொல்லுமென்றுகேட்ட—
இராகவற்கு-ஸ்ரீராமருக்கு—முனிகூறும்- வசிட்டமுனிசொல்லுவார்—ஒன்றுமருவுமுருவுமென-பொ
ருந்திய வருவமுமுருவமுமென்றும்—உளத்தினாசமோரிரண்டு- மனோநாசரண்டுப்ரகாரமாம்(எ-று.)

(கூ) (அ-கை) மனதினுருவத்தைநசிப்பிக்கவேண்டுமெனல். (கவி) சீவன்முத்திதனிலுருவநாச
ஞ்சித்தந்தனக்குளதாந், தாவிலுடறீர்முத்திதனிற்சாற்றுமருவநாசமுறு, மேவுசித்தமுண்டாகிலிடரா
மிறக்கின்மிகுமின்பம், பாவியுள்ளமெழாதபடிபண்ணியதைநாசம்பயில்வாய். (இ-ள்.) சீவன்முத்தித
னில்- சீவன்முத்தியில்— உருவநாசம்- உருவநாசமானது— சித்தந்தனக்குளதாம்- மனதுக்குண்டாகு
ம்— தாவிலுடறீர்முத்திதனில்- வருத்தமற்றவிதேகமுத்தியில்— சாற்றுமருவநாசமுறும்- சொல்லிய
வருவநாசமுண்டாம்— மேவுசித்தமுண்டாகில்- பொருந்தாநின்றமனதுண்டானால்—இடராம்- துன்
பமாகும்— இறக்கில்- மரிக்குமாயின்— இன்பமிகும்- ஆநந்தம்பெருகும்—பாவியுள்ளம்- பாவிக்கி
ன்றமனமானது— எழாதபடிபண்ணி- எழும்பாதப்ரகாரஞ்செய்து— அதைநாசம்பயில்வாய்- அம்ம
னதைக்கெடுப்பாய்— (எ-று) [இ-உ-க-ம] மனமானதுபெத்தர்களிடத்துருவமாகவும், முத்தர்களி
டத்தருவமாகவும், விதேகமுத்தர்களிடத்திவ்விரண்டுவிதமின்றாகவும்விளங்குமென்பதாம். - - - ⁕

(ய) (அ-கை) உருவநசியாமற்பெத்தரிடத்திருக்கின்ற மனமேமாயைக்குக்காரணமாமெனல்.
(கவி) பகுதிவழியின்குணபாரமெனதென்றபிமானம்பண்ணற், றகுதியுண்மையறியாதுதளர்நெஞ்
சாஞ்சீவனுமதுவே, தொகுதியானசுகாசுகத்தைத்தொடர்ந்துநிற்குஞ்சுகமுந்தின், மிகுதியசையாதிம
மனமேமிகுமாயைக்குவிளைமுளையே (இ-ள்.) பகுதிவழியின்- ப்ரகிருதிமார்க்கத்தின்— குணபாரம்-
குணத்தின்சுமையை— எனதென்றபிமானம்பண்ணல்- என்னதென்றபிமானஞ்செய்தல்— தகுதியு
ண்மையறியாது- தகுதியானதத்துவத்தைத்தெரிந்துகொள்ளாமல்— தளர்நெஞ்சாம்- வருந்துகின்ற
மனமாகும்— அதுவே- அம்மனமே— சீவனும்- சீவனுமாகும்— தொகுதியான- கூட்டமாகிய—சு
காசுகத்தை- சுகதுக்கங்களை— தொடர்ந்துநிற்கும்- தொடர்ந்திருப்பதாயும்— சுகமுந்தில்- சுகமுத
லானதுகளில்— மிகுதியசையாது- மிகவுநிலையாயிருக்கின்ற— இம்மனமே- இந்தமனதே— மிகுமா
யைக்குவிளைமுளையே- மிகுந்தமாயை(யுண்டாவ)தற்கங்குரமாம்— (எ-று) - - - - - ⁕

(யக) (அ-கை.) சமதிருஷ்டியிற்சலனமறுதலேமனத்தினுருவநாசமாமெனல். (கவி) மனத்தினு
ண்மையுரைத்தனமேன்மனத்தினாசஞ்சொலக்கேட்பாய், கனத்தகிரியையுயிர்ப்பசையாவகைபோற்சம
மாங்காட்சிதனி, லினத்தவின்பதுன்பங்களிறையுமசையாதிருப்பவர்க்கே, யனத்தமானவுள்ளந்தானழி
ந்ததென்பரறிந்தோரே (இ-ள்) மனத்தினுண்மை-மனதின்சத்தையை—உரைத்தனம்- சொன்னோ
ம்— மேன்மனத்தினாசஞ்சொலக்கேட்பாய்- மனோநாசஞ்சொல்லக்இனிகேட்கக்கடவாய்—கனத்தகிரி
யை- மகாமேருவை— உயிர்ப்பசையாவகைபோல்- மூச்சசைக்கமாட்டாததன்மையைப்போல— சம
மாங்காட்சிதனில்- சமத்துவமானதரிசனத்தில்— இனத்தவின்பதுன்பங்கள்- இனமாகியசுகதுக்கங்களி
னால்— இறையுமசையாது- எவ்வளவுமசைவுபடாமல்—இருப்பவர்க்கு- இருக்கும் (ஞானி) களுக்கு—
அனத்தமானவுள்ளந்தான்- பயனின்றியமனமானது— அறிந்தோர்- அறிஞர்கள்— அழிந்ததென்பர்-
நசித்ததென்று சொல்லுவார்கள்— (எ-று) - - - - - - - - - - - - ⁕

(யஉ) (அ-கை.) இ-து (கவி) மாவுச்சவமாபத்தாகமந்தங்காற்பண்ணியமதங்கண், மேவுற்றன
பேதியாதெவரையவர்க்கேயுள்ளம்வீய்ந்துளதாந், தாவுற்றெழுந்தபேதைமையேமனமாமதுவேதவிர்ந்
தொழியி, லோவற்றுள்ளநாசமெனுமுறுபேருண்மையுதித்திடுமால் (இ-ள்) மாவுச்சவமாபத்து- மகா
சம்பத்துமாபத்தும்—ஊசமந்தம்- யுத்தியுமந்தமும்—காற்பண்ணியமதங்கள்- தாரித்திரமுமதங்களு
ம்—மேவுற்றன-பொருந்தினவாய்—எவரைப்பேதியாது- யாவரைவேறுபடுத்தாதோ—அவர்க்கே-அ
வர்களுக்கே—உள்ளம்வீய்ந்துளதாம்- மனமிறந்ததாம்—தாவுற்றெழுந்த- தாவிகொண்டெழுந்த—
பேதைமையேமனமாம்- அறியாமையேமனமாகும்—அதுவே- அவ்வறியாமையே—தவிர்ந்தொழியி
ல்- நீங்கில்— ஓவற்று- வருத்தமில்லாமல்— உள்ளநாசமெனும்- மனோநாசமென்கின்ற— உறுபேரு
ண்மை- பொருந்தாநின்றமூதறிவு— உதித்திடும்- உண்டாகும்— (எ-று) [இ-ங-க-ம்] மனதினுரு
வநாசத்தைச்சொல்லியதாம. - - - - - - - - - - ⁕

(யங) (அ-கை.) உருவநாசமாய்ச்சீவன்முத்தரிடத்தருவமாயிருக்கின்ற மனதினிலக்ஷணங்கூறல்
(கவி) ஆயகுணமாமயித்திரியாதிகள்சேர்நல்வாதனையடைந்து, நீயமறுசென்மமுமிலதாஞ்சீவன்முத்த

ர்க்கந்தமன, மோயமனதுக்கிதுவாகுமுருவநாசமிதுதனிலே,மேயகுணங்கள்வசந்தத்தில்விரிபூங்கொத்
தாமெனவிளங்கும். (இ-ள்) ஆயகுணமாம்- உண்டானகுணமாகிய— மயித்திரியாதிகள்சேர்-மயித்தி
ரிமுதலியநான்குஞ்சேர்ந்திருக்கும்— நல்வாதனையடைந்து- சுத்தவாதனையைப்பெற்று— தீயமறு
சென்மமும்- தீமையானமறுசநநங்களும்—இலதாம்- இல்லாததாகுமோ— அந்தமனம்- அந்தமன
து— சீவன்முத்தர்க்கு- சீவன்முத்தர்களுக்(குண்டாயிருக்கும்)— ஓயமனதுக்கு- ஓய்ந்தமனதுக்கு—
உருவநாசம்-உருவநாசமானது—இதுவாகும்- இதுவேயாகும்— இதுதனில்- இத்தன்மையானமனதி
ல்—மேயகுணங்கள்- பொருந்திய(மயித்திரியாதியநான்கு) குணங்களும்—வசந்தத்தில்-வசந்தகாலத்
தில்—விரிபூங்கொத்தாமென-விரிந்தபுட்பக்கொத்துகளைப்போல—விளங்கும்-ப்ரகாசிக்கும்—(எ-று)

(யச) (அ-கை) அருவநாசமாய்விதேகமுத்தரிடத்துவிளங்கியவியல்பைக்கூறல். (கவி) வே. தத்
துற்றவுள்ளத்தினருவநாசஞ்சரீரமிலாமுத்தியனிட்களமாய்ச்சாரு, மெத்துற்றநற்குணங்கடரித்துமுண்
மைவீய்ந்துளதாய்மேனியிலாவிமலவீடாய்ச், சுத்தத்தாயுடநீர்ந்தமுத்தர்க்கெய்துந் தொடர்பாய்சு
த்துவநாசஞ்சொரூபமாகிச்,சித்தத்தினருவநாசப்பேயர்பெற்றதிகழ்பதத்திலொன்று மிலைச்செப்புதற்
கே (இ-ள்) தத்துற்றவுள்ளத்தின்- தாவாநின்றமனதினது— அருவநாசம்- அருவநாசமானது— சரீ
ரமிலாமுத்தியன்- விதேகமுத்தனிடத்தில்— நிட்களமாய்ச்சாரும்- களங்கமறப்பொருந்தும்—மெ
த்துற்றநற்குணங்கடரித்தும்- மிருதுவாயுள்ளமயித்திரியாதியசற்குணங்களைப்பெற்றும்— உண்மை-
மெய்யானசாத்துவிதமானது)—வீய்ந்துளதாய்-இறந்ததாய் —மேனியிலாவிமலவீடாய்- விதேககை
வல்யமாய்—சுத்தத்தாய்- பரிசுத்தமாய்—உடநீர்ந்த முத்தர்க்கெய்தும்- விதேகமுத்தர்க்கடையும்—
தொடர்பாய்-தொடர்ச்சியாக—சத்துவநாசம்-சாத்துவிதநாசமே— சொரூபமாகி-வடிவமாய் — சித்த
த்தின்-மனதில்—அருவநாசப்பேயர்பெற்ற- அருவநாசமென்னுநாமம்பெற்றிருக்கின்ற—திகழ்பதத்
தில்-ப்ரகாசிக்கின்றபதத்தில்—செப்புதற்கொன்றுமில்லை-சொல்லுதற்குவேறொன்றுமில்லை—(எ-று)

(யரு) (அ-கை) இ-து. (கவி) குணங்குணமிலாமைசீர்சீரிலாமைகுலவுதயமத்தமனமகிழ்வகுயை,
யிணங்கொளிவல்லிருளிரவுபகன்முச்சந்தியியலுண்மையில்லாமையிடையொன்றில்லைப்,புணர்ந்துளத
ற்பதமதுதான்மாயக்கூத்தும்புந்தியும்வென்றகன்றவர்க்குப்புகலேயாகு, மணங்கவருங்காற்றுமுதல
னைத்தினுக்குமருவிடமாய்நிற்கின்றவானம்போல. (இ-ள்) குணங்குணமிலாமை- குணுகுணங்களு
ம்— சீர்சீரிலாமை- செல்வாசெல்வமும்—குலவுதயமத்தமனம்- ப்ரகாசிக்கின்றவுதயால்தமானமும்—
மகிழ்வகுயை-சந்தோடமுமகுயையும்— இணங்கொளிவல்லிருள்- இணங்குகின்ற ப்ரகாசமும்வலிய
வந்தகாரமும்— இரவுபகல்- இராத்திரியும்பகலும— முச்சந்தி- மூன்றுசந்தியும்— இயலுண்மையில்
லாமை- பொருந்தியவுள்ளதுமில்லாததும்— இடையொன்றில்லை-(இவைகட்கு) மத்திகளொன்றுமில்
லாமையை—புணர்ந்துள-பொருந்தியிருக்கின்ற—தற்பதம்-பிரமபதமாம்—அதுதான்- அதுவே—
மாயக்கூத்தும்-சம்சாராடம்பரத்தையும்— புந்தியும்-புத்தியையும்—வென்றகன்றவர்க்கு-சயஞ்செய்
தவர்களுக்கு—மணங்கவரும்-கந்தத்தைக்கிரகிக்கின்ற—காற்றுமுதலனைத்தினுக்கும்- வாதமுதலியசக
லத்துக்கும்—மருவிடமாய்நிற்கின்ற-பொருந்துதற்குஸ்தானமாயிருக்கின்ற— வானம்போல- ஆகாய
ம்போல—புகலேயாகும்-தஞ்சமேயாம் (எ-று)[இ-உ-க-ம்]மனதினருவநாசத்தைச்சொல்லியதாம்.

(யசா) (அ-கை) மனமிறந்தசுகத்தைச்சொல்லவஃதிறக்கும் பொருட்டதன்காரியமானமாயையி
ன்மூலத்தைநான்குவிதமாகப் பிரித்துவினவுதல் (கவி) துன்பமெலாமிறந்தறி வேவடிவாயேகச்சுழுத்
தியாய்த்தாமதராசதந்தோன்றும, லின்பமிகுந்தழகாமப்பதத்தேவிண்ணுளி யாக்கையாய்ப்பெரியோ
ராயிலங்குமேலோர், வன்படர்நெஞ்சறவுறைவ பொன்றமேலாடும்வளர்கொடி முந்திரிகைநிகர்மாயைக்
கேது, முன்பயில்வித்ததற்கெதுவித்ததற்கென்வித்துமொழிந்ததற்கேதெதுவித்துமொழிவாய்நாலும்.
(இ-ள்) துன்பமெலாமிறந்து- துன்பங்களனைத்துநீங்கி—அறிவேவடிவாய்- ஞானமேஸ்வரூபமாய்—
ஏகசுழுத்தியாய்- ஒன்றாகியசுழுத்தியாய்— தாமதராசதந்தோன்றுமல்- தாமதராசதகுணந்தோற்றா
து—இன்பமிகுந்து- ஆநந்தமிகுந்திருக்கின்ற—அழகாமப்பதத்து- அழகானவந்தப்பிரமபதத்தில்—
விண்ணுளியாக்கையாய்- ஆகாசசரீரமாய்— பெரியோராய்- மகத்துக்களாய்— இலங்குமேலோர்-ப்ர
காசிக்கின்றபெரியோர்கள்— வன்படர்நெஞ்சற- வல்லமையாகப்பரவாநின்றமனதுகெட— உறைவ
பொன்றமேலாடும்- வசிப்பவொன்றுவசிட்டமுனி சொல்லவும்— வளர்கொடிமுந்திரிகைநிகர்- வளராநி
ன்றகொடிமுந்திரிகையையொத்த— மாயைக்கு- சம்சார (முண்டாகுதலு) க்கு— முன்பயில்வித்தெ
து- முன்னேசொல்லப்பட்டவிதையாது— அதற்கெதுவித்து- அவ்வித்துக்குவிதையாது— அதற்கெ
ன்வித்து- அதற்கெதுவிதை— மொழிந்ததற்கேதெதுவித்து- சொல்லப்பட்டவதற்கெதுவிதை—நா
லும்- இந்தநான்குவிதையும்—மொழிவாய்-சொல்லுவா (யென்றிராமன்கேட்டான்)— (எ-று.) - ✳

(யஎ) (அ-கை) முதல்வித்திரண்டாம்வித்தினிலக்கணங்கூறல். (கவி) என்றிராகவன் கேட்பவசி
டன்சொல்வானெழுந்துளவாரம்பசுபாசுபங்களென்னுந், துன்றுமுளைதந்தருளுமேனிவித்தாஞ்சொல்
னபெருமாயையெனுஞ்சூழ்கொடிக்கு, நின்றவுடலெனும்வித்துக்கெது வித்தென்னினீண்டபாவாபா
வநிறைந்துநாளுங், சன்றுதுயறொனுமணிக்குவைப்பாஞ்செப்பாங்காதலின்பின்னேடுகின்றகவலைநெ
ஞ்சே (இ-ள்) என்றிராகவன்கேட்ப- (இப்படி) யென்றுஸ்ரீராமன்கேட்க— வசிட்டன்சொல்வான்-
வசிட்டமுனிசொல்லுவார்— சொன்னபெருமாயையெனும்- சொல்லப்பட்டசம்சாரமென்கின்ற—
சூழ்கொடிக்கு- சூழ்ந்தகொடிக்கு— எழுந்துளவாரம்பம்- உள்ளெழாநின்றதுவக்கமாகிய— சுபாசுப
ங்களென்னும-சுபமசுபமென்கின்ற—துன்றுமுளைதந்தருளும்- நெருங்கியவங்குரத்தைக்கொடுக்கின்
ற—மேனிவித்தாம்- சரீரமேவிதையாகும்— நின்றவுடலெனும் வித்துக்கு- நின்றதானசரீரமென்னும்
விதைக்கு— எதுவித்தென்னில்-யாதுவிதையென்றால்—நீண்டபாவாபாவம-நெடியசநநமரணங்கள்—

நாளும்- எப்போதும்— நிறைந்து- மிகுந்து— கன்றுதுயரொனுமணிக்கு- நைவிக்கின்றதுன்பமென்
னுமிரத்தினத்துக்கு—வைப்பாஞ்செப்பாம்- வைக்கவிடமாகியசம்புடமென்னும்—காதலின்பின்னேடு
கின்ற- இச்சையின்பின்செல்லுகின்ற— கவலைநெஞ்சே- துன்பமாகியமனதேயாம்—(எ-று) [இ-உ-
க-ம்] மாயைச்குவித்துதேகமெனவுமதற்கு வித்துமனமெனவுங்கூறியதாம், மாயையிற்றனுவாதிகளு
ண்டாயினவென்றாசிரியர்யாவருங்கூற, வின்னூலாசிரியர்தனுவின்மா யையுண்டாயிற்றென்று கூறலா
மோவெனின ஃதுண்மையாகவிற்கூறலாமஃதெங்ஙனமெனின்றேகத்தினுண்மையறியாமையென்றுமா
யையினுண்மையறிவென்றும்வேதார்த்தப்படி நிச்சயித்து, ஆத்மாவைமறந்தவறியாமையினின்றுமறித
லுண்டானபடியாலவ்வறிதலுச்சவ்வறியாமைகாரணமாயிற்றெனக்கொள்க,இன்னும்விரிச்கின்விரியுமாக
லினனுபவத்திற்சுருக்கிக்காட்டிற்று,இஃதிற்சந்தேகம்வரிலாசிரியர்வாக்கினூற்சமாதியினின்றுதெளிக *

(௰அ) (அ-கை) மூன்றாம்வித்தினிலக்கணங்கூறல். (கவி) இல்லதுளதெனுமிந்தத் திரளெஞ்சா
லேயெல்லையறப்பிறக்குமாலிதனைத்தானே, புல்லுகின்றசனவிலனுபவிக்குமன்றே புவித்தொழிலாங்
கொடிகளேபொருந்திச்சுற்று, மல்லன்மனமெனுமரத்துக் கிரண்டுவித்தாமாவியசை வொன்றாம்வாத
னையழுத்தஞ்,சொல்லுமிரண்டாவதாமென்றுசொள்வாய்சூரியன்றொல்குலம் விளங்கத்தோன்றுந்தோ
ன்றால் (இ-ள்) இல்லதுளதெனும்- இல்லதுள்ளதென்கின்ற— இந்தத்திரள்- இச்சரீரக் கூட்டங்க
ள்—நெஞ்சால்-மனதினால்—எல்லையறப்பிறக்கும்- அளவில்லாமலுண்டாகும்—இதனைத்தானே- இச்ச
ரீரவிடையங்களையே—புல்லுகின்றகனவில்-புணருகின்றசொற்பனத்தில்— அனுபவிக்கும்-(மன)மனு
பவிக்கும்— புவித்தொழிலாங்கொடிகளே- சகத்தொழில்களென்னுங் கோடிகளே— பொருந்திச்சுற்
றும்- சேர்ந்துச்சுற்றிக்கொண்டிருக்கின்ற— அல்லன்மனமெனும்- துன்பத்தையுடைய மனமென
கின்ற— மரத்துக்கு- விருட்சத்துக்கு— இரண்டுவித்தாம்- இரண்டுவிதையாம்— ஆவியசைவு- பிரா
ணசைவு— ஒன்றாம்- ஒருவிதையாகும்—அழுத்தம்- அழுத்தமாயிருக்கின்ற— வாதனை- வாசனையா
னது— சொல்லுமிரண்டாவதாமென்று- சொல்லப்பட்டவிரண்டாம் விதையாகுமென்று— சூரியன்
றொல்குலம்விளங்க- சூரியனதுபழமையானவமிசம்விளங்கும்படியாக— தோன்றுந்தோன்றால்- உ
ண்டாகியவரசனே— சொள்வாய்- கொள்ளக்கடவாய்— (எ-று) [இ-ம்] பிராணசைவுந்திரிஷ்யவா
சனையுமேமனதிற்குவித்தாமென்பதாம் - - - - - - - - - - - - - - *

(௰௧) (அ-கை.) பிராணசைவானமுதல்வித்தினிலக்கணங்கூறல். (கவி) உண்டாகியெவ்விடத்து
முற்றபோதமுயிரசைவாலுணர்வுறுமப்போதந்தன்னை, மண்டாமற்றடுக்கைபெரு நன்மையாகும்வ
ளர்போதங்காண்பவற்றைமருவுமாலாற், றண்டாதகாண்பவையேமனத்துக்கென்றுந் தவிராததுயராம
த்தனிப்பொதந்தான், மிண்டாதசுழுத்தியிற்போதம்போனிற்கில்வீடதுபேறதுவிமலபதம் வேறில்லை.
(இ-ள்) உண்டாகி-உதயமாய்— எவ்விடத்துமுற்றபோதம்- எவ்விடத்திலும்பொருந்தியஞானமான
து— உயிரசைவாலுணர்வுறும்- பிராணசலனத்தினாற் (திரிஷ்யஞானத்தை) யடையும்— அப்போதந்
தன்னை- அந்தஞானத்தை— மண்டாமல்- (பெகுற்முகத்தின்)மிகாமல்—தடுக்கை- தடுத்தல்—பெரு
நன்மையாகும்- மிகுந்தசிரேயசாம்— வளர்போதம்- வளராநின்றவறிவானது—காண்பவற்றை- திரி
ஷ்யத்தை—மாலான்மருவும்- இச்சையினாற்பொருந்தும்— தண்டாத- தடையில்லாத— காண்பவை
யே- திரிஷ்யங்களே— மனத்துக்கு- மனதுக்கு— என்றுந்தவிராத துயராம்- எப்போதுமொழியா
ததுன்பமாம்— அத்தனிப்போதந்தான்- அந்தத்தனிமையாகியவறிவானது— மிண்டாத- திரும்பா
த— சுழுத்தியிற்போதம்போல்- சுழுத்தியறிவைப்போல— நிற்கில்- இருக்குமாயின்— அது- அது
வே— வடு- நிருவாணமும்— அது- அதுவே—பேறு- (ஆத்ம)லாபமும்—விமலபதம்- (அதுவே)
நிருமலமானபதமுமாம்— வேறில்லை- வேறொன்றுமில்லை— (எ-று) - - - - - - - - *

(உ௰) (அ-கை) இ-து (கவி) ஆதலாலுயிரசைவால்வாதனைப்பாலழுத்தத்தா லறிவைவிரிவாக்கா
யென்னி, லோதுபிறப்பறுமறிவின்விரிவே யுள்ளமுள்ளத்தா லிவ்வநந்தவுயிர்கள்வாழ்வாஞ், சேதன
யோகிகளெல்லாம்பிராணயாமத்தியானமருந் தூகத்தின்றிறங்களாலே, பேதமனமொடுங்குவதுபொ
ருட்டாயன்றேபிராணவாயுவைநிறுத்திப்பிடிக்கின்றாரோ (இ-ள்.) ஆதலால்- ஆதலினால்— உயிரசை
வால்- பிராணசலனத்தினாலும்— வாதனைப்பால்- வாசனையிடத்தில்—அழுத்தத்தால்- பிரியத்தினாலும்—
அறிவை- (விடய)ஞானத்தை— விரிவாக்காயென்னில்- பரவச்செய்யாமற்போனால்— ஓதுபிறப்பறு
ம்- சொல்லாநின்றசநநம்விடுபடும்— அறிவின்விரிவே- அறிவினது (பேத) மிகுதியே—உள்ளம்- ம
னமாகும்— உள்ளத்தால்- (அம்)மனதினால்— இவ்வநந்தவுயிர்கள்வாழ்வாம்- இச்சகலவுயிர்களும்வா
ழும்— சேதனயோகிகளெல்லாம்- அறிவையுடையயோகிகளனைவரும்— பிராணயாமம்- பிராணபந்
தனத்தினாலும்—தியானம்- தியானத்தினாலும்—மருந்து- அவுடதத்தினாலும்— ஊகத்தின்றிறங்களால்-
யுத்தியின்றிறங்களினாலும்— பேதமனமொடுங்குவதுபொருட்டாயன்றே- வேற்றுமையுள்ளமனமட
ங்குநிமித்தமல்லவா— பிராணவாயுவைநிறுத்திப்பிடிக்கின்றார்- பிராணயாமஞ்செய்கின்றார்கள்(எ-று)

(உ௧) (அ-கை) இ-து (கவி) உள்ளத்தையொடுங்குவிக்குஞ்சமத்துவத்துக்குயர்ந்தகாரணமாகு
ஞ்சுகமுண்டாக்கு, நள்ளுற்றவறிவையெழவொட்டாதாக்குநல்லுயிரின்றடையென்று நல்லோர்சொல்
வர், தெள்ளியபல்பொருளறவைவிளக்கிவித்துச்சேர்ந்தவாதனையாலேசெனப்பதாகி, விள்ளக்கண்டனு
பவிப்பதாநெஞ்சுக்குமேலிடண்டாமுற்பத்திவிளம்பக்கேட்பாய் (இ-ள்) நல்லுயிரின்றடை- நன்மை
பொருந்தியபிராணபந்தனமானது— உள்ளத்தை- மனதை— ஒடுங்குவிக்கும்- அடங்கச்செய்யும்—
சமதிருஷ்டிக்கு- சமத்துவத்துக்கு—உயர்ந்தகாரணமாகும்- மேன்மையானகாரணமாகும்— சுகமு
ண்டாக்கும்- இன்பத்தைவிளைக்கும்— நள்ளுற்ற- விடயசம்பந்தமான— அறிவையெழவொட்டாதா
க்குமென்று- அறிவையெழாமற்செய்புமென்று— நல்லோர்சொல்வர்- சத்துக்கள்சொல்லுவார்கள்—

தெள்ளிய- தெளிவாகிய— பல்பொருளறிவை-பலவஸ்துக்களை(யறிகின்ற)வறிவை—விளக்கிவித்து- வி
ளக்கஞ்செய்து— சேர்ந்தவாதனையால்- சேர்ந்திருக்கின்றவாசனையினால்— செனிப்பதாகி- உண்டாவ
தாய்— விள்ளக்கண்டனுபவிப்பதாம்- வெளிப்படையாகக்கண்டனுபவிப்பதாகிய— நெஞ்சுக்கு- ம
னதுக்கு—மேலிரண்டாமுற்பத்தி-இனியிரண்டாம்விதையினுற்பத்தியை—விளம்பக்கேட்பாய்-சொ
ல்லக்கேட்பாய்— (எ-று) தெள்ளியமெய்ஞ்ஞானங்களால்விளக்கிவித்துமென்கின்றகீர்வாண பாடமு
முண்டு [இ-ங-க-ம்] பிராணனியக்கத்தாற்பூரணபோதமசைந்தது விடயமாகவெதிரிட்டதனுற்சுகது
க்கமனுபவிக்குமனமுண்டாதலினஃதடங்கும்பொருட்டுபிராணாயாமஞ்செய்யவேண்டுமென்பதாம் *

(௨௨) (அ-கை) வாசனையானவிரண்டாம்வித்தினிலக்கணங்கூறல். (கவி) திடமானபாவனையான்
முன்பின்னெண்ணந்தீர்ந்துபதார்த்தந்தனைச்சேர்வுறைக்கைக்கொள்கை, மடமானவாதனையாங்கடுவேகத்
தால்வல்லையிற்றானேயொன்றைமதித்துநாடி, யுடனேயவ்வுருவாய்வேற்றெண்ணமெல்லா மொழித்தி
டுமிவ்வாதனையின்வசத்திலோடித், தொடர்பானபுருடனுமாங்கதன்மெய்யாகித்தோன்றுபொருணன்
றென்றேதுவண்டுமாலாம். (இ-ள்) திடமானபாவனையால்- திரமாகியபாவனையினால்— முன்பின்னெண்
ணந்தீர்ந்து- பூர்வாபரவிசாரணையைவிட்டு— பதார்த்தந்தனை- விடயங்களை— சேர்வுறக்கைக்கொள்
கை- சேரக்கைவசமாக்குதல்— மடமானவாதனையாம்- அறியாமையாகியவாசனையாகும்—கடுவேகத்தா
ல்- தீவரவேகத்தினால்—வல்லையில்- சீக்கிரத்தில்— ஒன்றைமதித்துநாடி- ஒன்றைக்குறித்துப் பார்த்
து— உடனேயவ்வுருவாய்- உடனேயந்தவடிவமாய்— வேற்றெண்ணமெல்லாம்- வேறான நினைவுக
ளியாவையும்— ஒழித்திடும்- ஒழிக்கின்ற— இவ்வாதனையின்வசத்திலோடி- இந்தவாசனாவசத்திற்செ
ன்று— தொடர்பானபுருடனும்- தொடர்பாகியவாத்மாவும்— ஆங்கதன்மெய்யாகி- அவ்விடத்திலது
வேசத்தியமாய்— தோன்றுபொருள்- தோற்றாநின்றவஸ்துக்களை— நன்றென்று- நல்லதென்று—
துவண்டுமாலாம்- சலித்துமயங்கும்— (எ-று) - - - - - - - - - - - - - - - *

(௨௩) (அ-கை) இ-து. (கவி) வாதனையின்வேகத்தின்விவசத்தாற்றன்வடிவினைவிட் டனைத்தினையு
மயக்கமாகத், தீதமைபுந்தியிற்காணுமதவசத்தாற்றியங்குதல்போலிம்மனத்தைத்தெரியக்கூறி, ஏத
முறுகாட்சியேததுதானல்லாதியானெனும்பாவனையேதுபொருளல்லாத, தேதுபொருளெனுங்கருத்
தேததுவேசித்தமுறுபிறவிசனாமரணமுண்டாமித்தால்!(இ-ள்) வாதனையின்வேகத்தின்- வாசனையி
னதுவேகத்தின்— விவசத்தால்- பரவசத்தினால்— தன்வடிவினைவிட்டு- தனதுஸ்வரூபத்தைவிட்டு—
அனைத்தினையும்- சகலத்தையும்— மயக்கமாக- மயக்கத்தோடும்— தீதமைபுந்தியில்- குற்றம்பொரு
ந்துகின்றபுத்தியில்— மதவசத்தால்- மதவசத்தினால்— தியங்குதல்போல்- மயங்குதலைப்போல— கா
ணும்- பார்க்கும்—இம்மனத்தை-இந்தமனதை—தெரியக்கூறில்-தெரியும்படியாகச்சொல்லில்—ஏத
முறுகாட்சியேது-குற்றம்பொருந்தியகாட்சியாது—தானல்லாத-நானல்லாததை— இயானெனும்பா
வனையேது- நானென்கின்றபாவனையாது—பொருளல்லாதது-வஸ்துவல்லாததை— ஏதுபொருளெனு
ங்கருத்தேது-சொல்லுகின்றவஸ்துவெனுங்கருத்தியாது—அதுவேசித்தம்-அதுவேமனமாகும்—இ
த்தாலுறுபிறவிசனாமரணமுண்டாம்- இம்மனதினாற்பொருந்தியசநநமரணமுப்புண்டாம்(எ-று.) *

(௨௪) (அ-கை) இ-து. (கவி)மெத்துறுவன்பரிசயத்தாற் பதார்த்தந்தன்னின்மேவுமொருபாவனை
யான்மிகச்சலிக்குஞ், சித்தமுளதாற்பிறப்பாதிகளுமுண்டாந்தீர்வது கொள்வதுவடிவாந் திரளிலொன்
று, மித்தனையும்பாவியாதனைத்துநீங்கி யெப்போதுநின்றதப்போதெழா துசித்த, மொத்துளவாதனை
யொழிவானினைவுதீரிலுயர்ந்தவுபசாந்திதருமுரைமாய்வுண்டாம் (இ-ள்) மெத்துறுவன்பா சயத்தால்-
மிருதுவானதிடப்பழக்கத்தினால்— பதார்த்தந்தன்னில்- பதார்த்தத்தில்— மேவுமொரு பாவனையால்-
பொருந்தாநின்றவோர்பாவனையினால் — மிகச்சலிக்கும்- மிகவுஞ்சஞ்சலத்தையடையும்—சித்தமுளதா
ல்- மனதுண்டாயின்—பிறப்பாதிகளுமுண்டாம்- சநநமரணமுதலியவைகளுமுண்டாகும்—தீர்வது
கொள்வதுவடிவம்- விடுதலும்பற்றுதலும்ரூபமாகிய— திரளிலொன்றும்- கூட்டங்களிற்பொரு
ந்துகின்ற— இத்தனையும்பாவியாது- இவ்வளவையும்பாவனைசெய்யாமல்— அனைத்துநீங்கி- சகலமும்
விட்டு—எப்போதுநின்றது-எப்போதிருந்ததோ— அப்போது-அப்பொழுதே—சித்தமெழாது-ம
னமுண்டாகாது—ஒத்துள-பொருந்தியிருக்கின்ற—வாதனையொழிவால்-வாசனாக்ஷயத்தினால்— நினை
வுதீரில்- கருத்தொழிந்தால்— உயர்ந்த- மேன்மையான— உபசாந்திதரும்-உபசாந்தம்வரும்—உரை
மாய்வுண்டாம்-மனோநாசமுண்டாகும்—(எ-று) [இ-ங-க-ம்] பிரமாநந்தப்ரதிபலனலேசமானவி
டயாநந்தத்தைச்சுகமென்றனுபவித்தபுருடன்றன்னைமறந்தவ்வாசனாவடிவமா யவ்விடயமுண்டாயிரு
க்கிற் சுகமுமஃதில்லாவிடிற் றுக்கமுமாய்க்கருதுங்கருத்தே மனமாதலினம்மனதிற்குவாசனைவித்தா
யிற் றப்பேதவாசனைநீங்கிமனமிறக்கில் விடயாநந்தநீங்கிப் பிரமாநந்தம்வெளிப்படுமென்பதாம் *

(௨௫) (அ-கை) விடயவாசனையேமனதுக்குருவமாமெனல். (கவி)சகப்பொருளிலோரிடத்தோ
ர்நினைவுமின்றேற் றனியிதயசூனியவிண் டன்னிலுள்ள, நிகழ்ச்சியுறத் தோன்றுவதெப் படியேவள்
ளாநெஞ்சுக்கம்மட்டுருவமென நினைப்பே, னுகப்புறுமின்பத்தாலும்பொருண்மெய்யாலு முள்ளு
றுபல்பொருணினைவேயுளத்தின்மேனி,மிகப்படர்காண்பவைதொழிற்சாகாதென்றெண்ணும் விண்ணி
னுநொய்யவர்க்கெங்ஙன்வினையுமுள்ளம் (இ-ள்) சகப்பொருளில்- உலகவஸ்துக்களில்— ஓரிடத்தோ
ர்நினைவுமின்றேல்- ஓரிடத்திலொருநினைவுமில்லையாயின்—தனி- ஒப்பற்ற— இதயசூனியவிண்டன்னி
ல்- மனமென்னுஞ்சூனியாகாயத்தில்— உள்ளம்-மனமானது— நிகழ்ச்சியுற- நிகழ்வாக— தோன்
றுவதெப்படி- உண்டாவதெவ்வண்ணம்— வள்ளால்- உதாரமுள்ளஸ்ரீராமா— நெஞ்சுக்கு- மனதுக்
கு— அம்மட்டுருவமென- அவ்வளவுதான்வடிவமென்று— நினைப்பேன்- கருதுவேன்— உகப்புறு
மின்பத்தாலும்- மேலானசுகத்தினாலும்— பொருண்மெய்யாலும்- பொருளையுண்மையென்பதினாலு

ம்—உள்ளூறு-அகத்திற்பொருந்திய—பல்பொருணினைவே-பலவஸ்துக்களின்னினைப்பே—ஊத்தின்மேனி-மனதின துருவமாம்— மிகப்படர்காண்பவை- மிகவும்படர்கின்றதிரிஸ்யம்— தொழிற்காகாதென்றெண்ணும்- கிரியைக்காகமாட்டாதென்று நினைக்கின்ற— விண்ணினுநொய்யவர்க்கு- ஆகாயத்திலுஞ்சொச்சமானவர்களுக்கு— எங்ஙனுள்ளம்விளையும்- எப்படிமனதுண்டாகும்—(எ-று) - *

(௨௬) (அ-கை) விடயவாசனைநீங்கிப் பிரமவாசனையுண்டாயின் மனதிற்குருவநாசமுண்டாமெனல், (கவி) அபாவமேபற்றலபாவம்பாவித்தலாய்ந் துண்மைப்பொருள்காண்டன மனமாய்வென்பர், சுபாவமாமனைத்தையுமுள்ளகற்றிச்சீதச்சுதைபோலுமிவ்விதயநடக்குமென்னிற், றவாதறொழிலுற்றூலுமந்தச்சித்தந்தன்வடிவிலாததெனச்சாற்றுங்கண்டாய், குவான்மறுசன்மந்தருவாதனைத்துன்னுதோர்குலாலவட்டம்போற்றிரிவர்குறைவின்முத்தர் (இ-ள்) அபாவமேபற்றல்-(சகத்) தில்லாததாப்பற்றுதலும்— அபாவம்பாவித்தல்- (அதை) யில்லாததாகப்பாவித்தலும்—ஆய்ந்து-விசாரணைசெய்து—உண்மைப்பொருள்காண்டல்- உண்மையாகியவஸ்துவைக்காணுதலும்— மனமாய்வென்பர்- மனோநாசமென்றுசொல்லுவார்கள்— சுபாவமாம்- சுபாவமாகும்படி— அனைத்தையுமுள்ளகற்றி- சகலத்தையுமுள்ளேதள்ளி—சீதச்சுதைபோலும்- குளிர்ச்சியானவமிர்தத்தைப்போலும்— இவ்விதயநடக்குமென்னில்- இந்தமனதுசஞ்சரிக்குமானால்— தவாததொழிலுற்றூலும்- குறையாதசெயலைப்பொருந்தினாலும்— அந்தச்சித்தம்- அம்மனமானது—தன்வடிவில்லாததென-தன்னுருவமில்லாததென்று—சாற்றுங்கண்டாய்-(சுத்துக்களாற்) சொல்லப்படும்— குவான்மறுசன்மம்- கூட்டமாகியமறுபிறப்பை— தருவாதனைதுன்னுதோர்- கொடாநின்றவாசனையைநெருங்காதவர்கள்— குலாலவட்டம்போல்- குயவன் (சுழற்றிவிட்ட) சக்கரத்தைப்போல— குறைவின்முத்தர்- குறைவில்லாத சீவன்முத்தர்கள்— திரிவர்-(பிராரத்தமுள்ளபரியந்தஞ்)சஞ்சரிப்பார்கள்— (எ-று) - - - - - - - *

(௨௭) (அ-கை) மனதினுருவநசித்தசீவன்முத்தர்களின்சிறப்பைக்கூறல். (கவி) வறுத்தவிதையொப்பாகியின்பமன்றிமறுசநநமற்றவாதனைசேர்ந்துள்ளோ,ரொறுத்தவிடர்தீர்சீவன்முத்தராகுமுண்மையுருவடைந்தமனமுடையோரன்னோர், நிறுத்துணர்ஞானக்கரையுற்றவருமன்னோர்நெஞ்சமிலதவரன்னோர்நிமலமாகப், பொறுத்தவுடனீங்கிலாகாசரூபம் பொருந்தினரன்னோரொன்று புகல்வரன்றே (இ-ள்) வறுத்தவிதையொப்பாகி- வறுத்தவித்துக்குச்சமானமாய்— இன்பமன்றி- சுகமல்லாமலிருக்கின்ற—மறுசநநமற்ற- மறுபிறப்பில்லாத— வாதனை- சுத்தவாதனையை— சேர்ந்துள்ளோர்- அடைந்திருப்பவர்கள்— ஒறுத்தவிடர்தீர்- அலைத்ததுன்பந்தீர்ந்த—சீவன்முத்தராகும்- சீவன்முத்தர்களாம்—உண்மையுருவடைந்த- தத்துவஸ்வரூபத்தைப்பெற்ற— மனமுடையோரன்னோர்-மனதையுடையவர்களவர்களே— நிறுத்துணர்- சமமாகவறிகின்ற— ஞானக்கரையுற்றவருமன்னோர்- ஞானதீரத்தையடைந்தவர்களுமவர்களே— நெஞ்சமிலாதவரன்னோர்- மனமில்லாதவர்களுமவர்களே— நிமலமாக- நின்மலமாக—பொறுத்தவுடனீங்கில்- சுமந்திருக்கின்றசரீரம்விடில்— ஆகாசரூபம்- (சிதாகாச) ஸ்வரூபத்தை—பொருந்தினரன்னோரொன்றுபுகல்வர்- அடைந்தவர்களச்சீவன்முத்தர்களேயென்று(பெரியோர்கள்) சொல்லுவார்கள்(எ-று)[இ-௩-௧-ம்] அசுத்தவாசனைநீங்கிச்சுத்தவாசனையுள்ளமனமேயாத்மசுகம்பெற்றதாம்*

(௨௮) )அ-கை) நான்காம்வித்தினிலக்கணங்கூறல். (கவி) உயிரினசைவொன்றுவாதனையொன்றூகவுபயமாமனத்தின்விதையிவற்றினொன்று,பயில்வுறமாய்ந்தாலிரண்டுமுடனேமாயுமபகருறுவாதனைவசத்தாற்பிராணனேட்ட, முயிரசைவால்வாதனையுமுண்டா மத்தாலுள்ளமெனும் விதைக்குவிதைமுளையொழுங்காம், பயில்வுறுவாதனையுயிரினசைவிரண்டும்பல விதங்காண்பவைவித்தாய்ப் படருமன்றே, (இ-ள்) உயிரினசைவொன்று- பிராணசலனமொன்றாகவும்—வாதனையொன்றூக- வாசனையொன்றாகவும்— மனத்தின்விதை- மனதின்வித்தானது— உபயமாம்- இரண்டாகும்— இவற்றினொன்று- இவ்விரண்டிலொன்று— பயில்வுறமாய்ந்தால்- பொருந்தும்படிநசித்தால்— இரண்டுமுடனேமாயும்- இரண்டுமுடனேநசிக்கும்— பகருறுவாதனைவசத்தால்- சொல்லாநின்றவாசனையின்வசத்தினால்— பிராணனேட்டம்-பிராணனசைவும்—உயிரசைவால்- பிராணனசைவினால்— வாதனையுமுண்டாம்- வாசனையுமுண்டாகும்— அத்தால்- அதனால்— உள்ளமெனும்விதைக்கு- மனமென்கின்றவித்துக்கு— விதைமுளையொழுங்காம்- பீசாங்குராயமுண்டாகும்— பயில்வுறுவாதனை- சொல்லாநின்றவாசனையும்—உயிரினசைவு- பிராணனசைவுமாகிய— இரண்டும்- இவ்விரண்டும்— பலவிதங்காண்பவை- நாநாவிதமானதிரிஸ்யங்கள்—வித்தாய்ப்படரும்-மூலமாகவிரியும்—(எ-று)[இ-ம்] விடயானுபவத்தால்வாசனையுமதையனுபவிக்கும்பொருட்டுச்சலனமுமுண்டாதலாலவ்விரண்டிற்கும்வித்துதிரிஸ்யமென்பதாம் *

(௨௯) (அ-கை) திரிஸ்யத்தினால் வாசனையுண்டாயவ்வாசனையான்மனதுண்டாயம்மனதினாற்றேசமுண்டாயதேகத்தினாற் செனித்துமரிக்கின்றசம்சாரமாயையுண்டானவுற்பத்திக்கிரமமானகற்பனைவிதையாகியநான்கையுஞ்சொல்லியிஃதையொடுக்கிச் சுகபோதமாக்குதற்பொருட் டிதார்த்தமானநான்குவித்தையுஞ்சொல்லத்தொடங்கித்திரிஸ்யத்துக்குவித்துசித்தென்றறிவித்தல் (கவி) ஆதலினாற்காண்பவற்றைவிடுதலாலேயாருயிரினசைவுவாதனையிரண்டும், பாதவம்வேறற்றூப்போல்வேறற்றேகும்படரறிவேகாண்பவற்றின்பயில்வித்தாகுஞ், சேதனந்தோன்றூதெனிற்காண்பனவுமில்லைச் செறிதயிலமில்லாமற்றிலமுண்டாமோ, பேதமுறவுட்புறங்காண்பனவொன்றில்லைப் பிறப்போர்சங்கற்பிக்கும் பிறக்கும்போதம (இ-ள்) ஆதலினால்- ஆகையினால்— காண்பவற்றை- திரிஸ்யத்தை— விடுதலால்- நீக்குதலினால்— ஆருயிரினசைவு- பொருந்தாநின்றபிராணனசைவும்— வாதனை-வாசனையுமாகிய— இரண்டும்- இவ்விரண்டும்— பாதவம்வேரற்றூப்போல்- விருட்சம்வேரற்றதுபோல— வேரற்றேகும்-அடியோடுங்கெடும்— படரறிவே- படராநின்றவிருத்திஞானமே— காண்பவற்றின்-திரிஸ்யத்துக்கு—பயில்வித்தாகும்- சொல்லப்பட்டவிதையாகும்— சேதனந்தோன்றூதெனில்- அறிவுதோற்றூதென்

றால்—காண்பனவுமில்லை - திரிஸ்யமுமில்லை—செறிதயிலமில்லாமல் - நிறைந்தவெண்ணெயில்லாமல்—திலமுண்டாமோ - எள்ளுண்டாயிருக்குமோ— பேதமுற - வேற்றுமையாக— உட்புறம் - உள்ளிலும்புறம்பிலும்—காண்பனவொன்றில்லை - திரிஸ்யமென்பதொன்றுமில்லை— பிறக்கும்போதம் - உதிக்கின்றஞானமானது—ஓர்பிறப்புசங்கற்பிக்கும் - ஒருவிதமானசிருஷ்டியைச்செய்யும்(எ-று) - - *

(௫௰) (அ-கை) சித்தேசகத்தாய்விளங்குகின்றதென்றறியிற்சகத்தாகியமாயாரூப நசிக்குமெனல். (கவி) சங்கற்பத்தறிபொருளையறிவுதன்பாற்றானேநோக்கிடுஞ்சனவிற்றனதுசாவு, மங்குத்தேசாந்தரமுந்தன்வசத்தாலடைவதுபோலறிபொருளையறிவுகாணும்,பங்கிட்டுமுன்னறிந்ததறியாதேனும்பகரறிவுக்கெதுபத்திபாய்ந்ததத்தை, துங்கத்தம்வருத்தத்தால்விசாரமுள்ளோர்துடைப்பதுவே வெம்மாயைதுடைத்ததாகும். (இ-ள்) சங்கற்பத்து - சங்கற்பத்தினால்— அறிபொருளை - திரிஸ்யத்தை— அறிவு - ஞானமானது— தன்பாற்றானேநோக்கிடும் - தன்னிடத்திற்றானேபார்த்திடும்— கனவில் - சொற்பனத்தில்— தனதுசாவும் - தனதிறத்தலும்— அங்கு - அச்சொற்பனத்தில்— தேசாந்தரமும் - சகலதேசங்களும்— தன்வசத்தால் - தன்சமத்காரத்தால்—. அடைவதுபோல் - பொருந்துவதுபோல— அறிபொருளை - திரிஸ்யத்தை— அறிவுகாணும் - விருத்திஞானமறியும்—பங்கிட்டு - பகுத்து—முன்னறிந்தது - முன்னறிந்ததானாலும்— அறியாதேனும் - அறியாததானாலும்— பகரறிவுக்கு - சொல்லப்பட்டவறிவுக்கு—எதுபத்திபாய்ந்தது - யாதுப்ரதிபலித்ததோ— அத்தை - அதை— துங்க - பரிசுத்தம்பொருந்திய— தம்வருத்தத்தால் - தமதுப்ரயாசத்தினால்— விசாரமுள்ளோர் - விசாரணையுள்ளவர்கள்— துடைப்பதுவேவெம்மாயைதுடைத்ததாகும் - கெடுப்பதுவேகொடியசம்சாரத்தைக்கெடுத்ததாகும்(எ-று)*

(௫௧) (அ-கை) திரிஸ்யமகன்றசித்திற்பிரமசுகமுதிக்குமெனல். (கவி) அதுதுடையாமாத்திரமேமாமோகத்தையடைந்ததாமதுதுடைத்தமாத்திரந்தான், முதுகதியென்றுரைப்பரறிகின்றதன்றே முடிவில்பிறப்பரந்தைதான்முளரிக்கண்ணா, சதுவுறுசாட்டியமில்லாவறிவிலாமைக் கடும்பவமில்லாதசுகங்காட்டுமன்றே, சதுரனாயசடனாயானந்தத்தைத் தவிர்ந்தொன்றுமறிவதறச் சலனந்தீர்வாய். (இ-ள்) அது - அர்தப்ரதிபலனமான திரிஸ்யத்தை— துடையாமாத்திரமே - கெடுக்காதிருப்பதுவே—மாமோகத்தையடைந்ததாம் - மகாசம்சாரத்தைச்சேர்ந்ததாகும்—அதுதுடைத்தமாத்திரந்தான் - அதைக்கெடுத்ததே—முதுகதியென்றுரைப்பர் - முதிர்ந்தபரகதியென்றுசத்துக்கள்சொல்லுவார்கள்— அறிகின்றதன்றே - திரிஸ்யமல்லவா— முடிவில்பிறப்பரந்தை - அளவற்றசநநதுன்பம்— முளரிக்கண்ணா - தாமரைக்கண்ணையுடையஸ்ரீராமா—கதுவுறுசாட்டியமில்லா - கலக்கமுற்றதிரிஸ்யமின்மையும்—அறிவில்லாமை - (விடய) வறிவின்மையும்— கடும்பவமில்லாத - கொடியசநநமில்லாத— சுகங்காட்டும் - (நிருவாண) சுகத்தைக்கொடுக்கும்— சதுரனாய் - சதுரையுடையவனாய்— அசடனாய் - சடமில்லாதவனாய்— ஆநந்தத்தைத்தவிர்ந்து - (விட)யாநந்தத்தைவிட்டு—ஒன்றுமறிவதற - ஒன்றையுமறியாமல்— சலனந்தீர்வாய் - சஞ்சலத்தைவிடுவாய்— (எ-று.) [இ-௯-௧-ம்] திரிஸ்யத்தின்காரணமான சித்தைத்தரிசித்தத்திருஷ்டியினாலத்திரிஸ்யத்தைக்களைக்கிற் சுகமுண்டாமென்பதாம். - - - - - - - - *

(௫௨) (அ-கை) சுயஞ்சித்தினிலக்கணங்கூறல். (கவி) அறிபொருளையறியாதவறிவேமெய்யாமவனீசத்தியமாமென்றறைதலோடுஞ், செறிசடமற்றறிவின்மையெங்ஙனுண்டாஞ் சிற்றின்மை சடமாவதெங்ஙன்றீரு, நெறியிலுரையென்றவிராமனுக்குமீட்டு நிறைதவன்சொல்வானெங்குநிகழ்பற்றின்றி, வெறிதோரிடத்தாறுதலொன்றறிதலில்லாவியன்சீவன்சடமில்லாவறிவிலாமை (இ-ள்.) அறிபொருளை - திரிஸ்யத்தை—அறியாத - பாராமலிருக்கின்ற— அறிவேமெய்யாம் - ஞானஸ்வரூபமாகிய— அவனீ - அப்(பரமாத்மாவே)நீயாம்—சத்தியமாமென்று - (ஈ) தன்மையாமென்று— அறைதலோடும் - வசிட்டமுனிசொல்லவும்— செறிசடமற்று - நெருங்கியதிரிஸ்யமில்லாமலிருக்கின்ற(விடத்தில்)—அறிவின்மையெங்ஙனுண்டாம் - அறிவில்லாததெப்படிவரும்—சிற்றின்மை - ஞானமில்லாத(விடத்தில்)— சடமாவதெங்ஙன்றீரும் - திரிஸ்யமெப்படிநீங்கும்— நெறியிலுரையென - செம்மையாகச்சொல்லவேண்டுமென்றுகேட்ட— இராமனுக்கு - ஸ்ரீராமருக்கு—மீட்டும் - திரும்பவும்— நிறைதவன்சொல்வான் - மிகுந்ததவமுடையவசிட்டமுனிசொல்வார்—எங்குநிகழ்பற்றின்றி - எவ்விடத்திலுநிகழுகின்றபற்றில்லாமல்—வெறிதோரிடத்து - அறிவின்மையானவொருவிடயத்தில்— ஆறுதல் - ஆறுதலும்—ஒன்றறிதல் - பொருந்தியறிதலும்— இல்லா - இல்லாத— வியன்சீவன் - பெருமைபொருந்தியவாத்மாவே— சடமில்லா - திரிஸ்யமில்லாததும்— அறிவில்லாமை - அறிவில்லாததுமாம்— (எ-று) [இ-ம்] ஸ்வரூபஞானத்தில்விருத்திஞானமுண்டாகி, யஃதேவிடயாகாரமாய்த்தடித்தலினவ் விடயத்தையும்அதைவிளக்கும்விடயஞானத்தையுமறியாதவாத்மஞானத்தைவிளங்குவித்ததாம் - - - - - - - - - - *

(௫௩) (அ-கை) முற்கூறியசித்திற்சுகமுதிக்குமெனல் (கவி) அறிபொருளைப்பற்றாதவறிவுபெற்றாலாயிரங்காரியஞ் செயினுஞ்சடமிலாத, தறிவின்மையதுவாகுமறிபவத்தையற்பமுமுள்ளாகாசமணுகாதென்னா, மறிஞனவனசடமாமறிவிலாமையவன்சீவன்முத்தனவனுக்குத்தன்பாலறிதருவாசனையொழிவாலொன்றுமுன்னாதருங்குழவியூமனறிவொத்துநிற்கும் (இ-ள்) அறிபொருளைப்பற்றாத - திரிஸ்யத்தையடையாத— அறிவுபெற்றால் - ஞானத்தைப்பெற்றால— ஆயிரங்காரியஞ்செயினும் - அளவற்றதொழில்களைச்செய்தாலும்— சடமிலாத - திரிஸ்யமில்லாததும்—அறிவின்மை - விருத்திஞானமில்லாததும்— அதுவாகும் - அவ்வாத்மாவாகும்— அறிபவத்தை - திரிஸ்யத்தை— அற்பமும் - எவ்வளவேனும—உள்ளாகாசம் - இதயாகாசம்— அணுகாதென்னில் - கிட்டாதாயின— அவன் - அவனே— அறிஞன் - ஞானவானும்— அசடமாம் - சடமாகாதவனும்— அறிவிலாமை - விடயவறிவில்லாதவனும—அவன்சீவன்முத்தன - அவனேசீவன்முத்தனும்— அவனுக்குத்தன்பால் - அவனிடத்தில்— அறிதருவாசனையொழிவால் - அறிகின்றவாசனாநாசத்தினால்— ஒன்றுமுன்னாது - ஒன்றையுநினையாமல்— அருங்குழவியூமனறி

வொத்துநிற்கும்- அரியகுழந்தையறிவுக்குமூமனறிவுக்குமொப்பாயிருக்கும்—(எ-று) - - ⁂

(௫௪) (அ-கை) இ-து (கவி) வே. அன்றுசடபாவனைநீங்கி யகண்டவறிவின்மையைப் பெறலா, மொன்றுமதனான்மீளவறிவொன்றிற்பற்றுதொருவகையாய், நின்றபலவாதனைநீங்கிநிருவிகற்பசமாதியினாற், றுன்றுவிண்ணிற்கருநிறம்போற்றொடராநந்தந்துன்னுறுமால். (இ-ள்.) அன்று- அப்பொழுது— சடபாவனைநீங்கி- திரிஸ்யபாவனையைவிட்டு— அகண்ட- பூரணமாயிருக்கின்ற— அறிவின்மையை- விருத்திஞானமில்லாத(வாத்ம)ஞானத்தை—பெறலாம்- அடையலாகும்— ஒன்றுமதனால்- பொருந்துகின்றவதனால்— மீள- திரும்பவும்— அறிவு- ஞானமானது— ஒன்றிற்பற்றுது- ஒன்றிலும்பற்றுமல்— ஒருவகையாய்நின்ற- ஒருப்ரகாரமாயிருந்த— பலவாதனைநீங்கி- சகலவாதனைகளும்விட்டு— நிருவிகற்பசமாதியினால்- நிருவிகற்பசமாதியினால்— துன்றுவிண்ணிற்கருநிறம்போல்- நிறைந்தவாகாயத்தினீலநிறம்போல— தொடராநந்தந்துன்னுறும்- தொடரும்பூரணாநந்தநிறையும் (எ-று)

(௫௫) (அ-கை) இ-து (கவி) நன்மையானவதிற்பற்றிநாடாவறிவாமியோகிக்குத், தன்மயந்தானாதலினாற்றனியாநந்தமதனுடன்போந், துன்னுநிலைபோக்கொலிபரிசந்தொடர்ந்துமவற்றிற்பற்றுதோன், வன்மைச்சடனன்றுநந்தமிலனொன்றறியான்மகாசுகத்தன். (இ-ள்) நன்மையான- நன்மையாகிய— அதிற்பற்றி- அச்சமாதியைப்பிடித்து— நாடா- (திரிஸ்யத்தை) நாடாத— அறிவாம்யோகிக்கு- ஞானஸ்வரூபமாகியஞானிக்கு— தன்மயந்தானாதலினால்- தன்ஸ்வரூபந்தானானபடியினால்— தனியாநந்தம்- தனித்தவாநந்தம்— அதனுடன்போம்- அந்தவான்மாவிலயிக்கும்— துன்னுநிலை- நெருங்கிநிற்பதும்— போக்கு- நடப்பதும்— ஒலி- சத்திப்பதும்— பரிசம்- பரிசிப்பதும்— தொடர்ந்தும்- இவைகடொடர்புற்றும்— அவற்றிற்பற்றுதோன்- அவைகளிற்பற்றுதலில்லாதவன்— வன்மைச்சடனன்று- வலிமையுள்ளதிரிஸ்யமல்லாதவனும்— ஆநந்தமிலன்- ஆநந்தமில்லாதவனும்—ஒன்றறியான்- ஒன்றையுமறியாதவனும்— மகாசுகத்தன்- பேராநந்தனுமாம்— (எ-று) [இ-ரு-க-ம்] இச்சித்தேயாநந்தமயமாய்விளங்குமென்பதாம் - - - - - - - - - - - - ⁂

(௫௬) (அ-கை.) இச்சித்துக்குவித்துசத்தாகுமெனல் (கவி) இந்தநோக்கந்தனைப்பற்றியீனத்தொழிலோடிசைந்தாலும், வெந்ததுயரின்கரையேறிவிஞ்சுகுணத்தின்கடலாவா, யந்தவுயர்சன்மாத்திரமிவ்வறிவின்வித்தாமவ்வறிவு, முந்துசன்மாத்திரநின்றுமுளைக்குந்தேசிலொளிபோல (இ-ள்) இந்தநோக்கந்தனைப்பற்றி- இந்தத்திருஷ்டியைப்பிடித்து— ஈனத்தொழிலோடு- இழிவானதொழில்களுடன்— இசைந்தாலும்- பொருந்தினும்— வெந்ததுயரின்கரையேறி- வெந்துநின்றதுக்கசாகரத்தினின்றுங்கரையிலேறி— விஞ்சுகுணத்தின்- ஞானச்சிறப்பினது— கடலாவாய்- சமுத்திரமாவாய்— அந்தவுயர்சன்மாத்திரம்- அந்தமேன்மைபொருந்தியசத்தாமாத்திரம்— இவ்வறிவின்வித்தாம- இந்தஞானத்தின்விதையாகும்—அவ்வறிவு- அந்தஞானம்— முந்துசன்மாத்திரநின்று- முதன்மையானசத்திலிருந்து— தேசிலொளிபோல- ப்ரகாசத்திலொளியைப்போல—முளைக்கும்-உண்டாம்கு(எ-று)

(௫௭) (அ-கை) அச்சத்துக்கிரண்டிலக்சணங்கூறல் (கவி) இடமார்சத்துக்கிருவடிவாமேகநாநாவிதவடிவாந், தடமாரேகமொருவடிவாஞ்சாற்றுமிவற்றைப்பிரித்திடக்கேள், கடமேபடமேயுள்ளதெனக்கதுவக்காணும்பாவனைகள், படருஞ்சத்தாம்ரூபத்தின்பிரிவாற் பலவாமதுவொன்றே (இ-ள்) இடமார்சத்துக்கு- வியாபகமாக நிறைந்தசத்துக்கு— இருவடிவாம்- இரண்டுஸ்வரூபமாகும்— ஏகம்- ஒன்று— நாநாவிதவடிவாம்- பலவிதரூபமாகும்— தடமாரேகம்- பெருமைநிறைந்த வொன்று— ஒருவடிவாம்-ஒன்றாகியஸ்வரூபமாகும்—சாற்றுமிவற்றை-சொல்லப்பட்டவிவைகளை—பிரித்திடக்கேள்- பிரித்துச்சொல்லக்கேட்பாய்— கடமேபடமே- கடமென்பதும்படமென்பதும—உள்ளதென- உள்ளதென்று— கதுவக்காணும்- நீங்காமற்பற்றிப்பார்க்கின்ற— பாவனைகள்- பாவனைகளானவை— படருஞ்சத்தாம்ரூபத்தின்- படர்ந்திருக்கின்றசத்தினதுஸ்வரூபத்தின்— பிரிவாற்பலவாம்- பிரிவினாலநேகவிதமாம்— அதுவொன்றே- அஃதொருவடிவம்—(எ-று) - - - - - - - - - ⁂

(௫௮)(அ-கை) மூன்றுசத்தையுநீக்கியேகரூபமானசத்தைக்கூறுதல்.(கவி) சற்றும்விசேடமறவிட்டுசன்மாத்திரமாய்ப்பற்றின்றி, யொற்றைவடிவாமாகாவடிவாமதுவேசத்தைக்குறும்பதமா, மற்றுங்காலசத்தைகலாசத்தைவத்துசத்தையென, வுற்றசத்தைமூன்றுமொழித்தொன்றுஞ் சன்மாத்திரத்துறுவாய். (இ-ள்) சற்றும்- எவ்வளவேனும்— விசேடமறவிட்டு- விசேடமில்லாமனீக்கி— சன்மாத்திரமாய்- சத்தாமாத்திரமாகியும்— பற்றின்றி- பிடிப்பில்லாமல்— ஒற்றைவடிவாம்- ஏகரூபமாகியும்— மகாவடிவாமதுவே-மகத்ஸ்வரூபமாகியுமிருக்கின்றவதுவே— சத்துக்குறும்பதமாம்- சத்தைக்குப்பொருந்துகின்றபதமாகும்— மற்றும்- இன்னும்— காலசத்தை- காலசத்தையென்றும்— கலாசத்தை- கலாசத்தையென்றும்—வத்துசத்தையென- வஸ்துசத்தையென்றும்— உற்றசத்தைமூன்றுமொழித்து- பொருந்தியமூன்றுசத்தையையும்நீக்கி— ஒன்றும்- ஏகமான— சன்மாத்திரத்துறுவாய்- சத்தாமாத்திரத்திற்பொருந்துவாய்—(எ-று.) - - - - - - - - - ⁂

(௫௯) (அ-கை) இ-து (கவி) காலசத்தைதன்சத்தைவேறுய்க்கருதுதொழில்விடினேர், சீலநன்றாகியசத்துருபியெனினும்பொருள்சேரா, கோலவிவிதப்பதநல்குங்கொள்கைபலபாவனையுண்டா, மூலங்கண்டதநேகத்துக்கதுநன்றுகுமுறையெங்கே (இ-ள்) காலசத்தைதன்சத்தை- காலசத்தை(க்கலாசத்தைவத்துசத்தை)யென்கின்றமூன்று)சத்தையும்— கருது- நினைக்கின்ற—வேறுய்- வெவ்வேறுயிருக்கின்ற— தொழில்விடின்- செயலையொழிமானால்— ஓர்சீலம்- ஒருதன்மையில்— நன்றாகிய- உத்தமமான— சத்துருபியெனினும்- சத்தாஸ்வரூபத்தையுடையதானாலும்— பொருள்சேரா- வாய்மையையுடையசத்தாகாவாம்— பலபாவனை- அநேகசருமங்களானவை—உண்டாம்- உள்ளதான(வச்சத்தைகளில்),—அநேகத்துக்கு- பலவுக்குமம— மூலங்கண்டது- காரணமாதலைநோக்கி— கோலவிவிதப்பதநல்கு

ங்கொள்கை. அழகாகவெவ்வேறானபதத்தைக்கொடுக்குந்தன்மையாதலால்— அது- அக்காலசத்தைமுதலானவை— எங்ஙன்- எப்படி— நன்றாகுமுறை- பரிசுத்தமானசத்தைபாழ்முறைமை— (எ-று) பலபாவனையென்பதுவிபாசகலனையெனவுங்கொள்க [இ-சு-க-ம்] ஏகரூபமானசுயஞ்சத்தை நிரூபித்ததாம் ※

(சம) (அ-கை) சுயஞ்சத்துக்கதன்முடிவான துரியமேவித்தாமெனல் (கவி) சத்தாசாமானியமொன்றுந்தனிப்பாவித்துப்பரிபூர்ணச், சுத்தாநந்தனாய்த்திசைகளெல்லாந்துன்னிநின்றிடுவாய், சத்தாசாமானியமட்டின்கோடியேதங்கதுதானே, சுத்தாகாரமிதன்வித்தாமதினின்றிதுதான்றோன்றிடுமே (இ-ள்) சத்தாசாமானியமொன்றும்- சத்தாசாமானியமானவொன்றையும்— தனிப்பாவித்து- தனிமையாகப் பாவனைசெய்து— பரிபூர்ணம்- பரிபூர்ணமாயிருக்கின்ற— சுத்தாநந்தனாய்- சுயாநந்தத்தையுடையவனாய்— திசைகளெல்லாம்- திக்குகளனைத்திலும்— துன்னிநின்றிடுவாய்- நிறைந்துநிற்பாய்— சத்தாசாமானியமட்டின்- சத்தாசாமானியமாத்திரத்தின்— கோடியேது- முடிவானதெதுவோ— அங்கதுதானேசுத்தாகாரமிதன்வித்தாம்.- அவ்விடத்ததுவேபரிசுத்தாகாரமானவிச்சத்துக்குவிதையாம்— அதினின்றிதுதான்றோன்றிடும்- அச்சத்தாசாமானியமுடிவினின்றிச்சித்துமுதலியசகமனைத்துமுண்டாம் (எ-று)

(சக) (அ-கை) அத்துரியத்துக்குவித்துஞானாநந்தவயிக்கியமானவத்துவிதமெனல் (கவி) மொழிசத்தாசாமானியத்தின்முடிவிலெண்ணமெல்லாம்போ, யொழிவதேதங்கதுதானல்லுணர்வின்பதமாமுதலதுவா, மறிவிலதற்குவித்தில்லையாங்கேயிருந்துவிகாரமறத், தழியவுணர்வுநிலைபெறுமப்பதஞ்சார்ந்தவர்மீண்டிடர்சாரார் (இ-ள்) மொழிசத்தாசாமானியத்தின்- சொல்லப்பட்டசத்தாசாமானியத்தினுடைய— முடிவில்- அந்தத்தில்— எண்ணமெல்லாம்போய்- சங்கற்பிக்குநினைவுகளனைத்துநீங்கி— ஒழிவதேது- ஒழிகின்றதெதுவோ— அங்கதுதான்- அவ்விடத்ததுவே— நல்லுணர்வின்பதமாம்- சுகபோதத்தினிடமாம்— முதலதுவாம்- முதன்மையாகிய(வித்)ததுவாகும்— அறிவிலதற்கு- குற்றமற்றவர்தஞானாநந்தபதத்துக்கு— வித்தில்லை- விதையில்லையாம்— ஆங்கேயிருந்து- அச்சுகபோதத்திலயித்து— விகாரமற- வேற்றுமையில்லாமல்— தழியவுணர்வு- தழுவாநின்றஞானமானது— நிலைபெறும்- நிலைபெற்றிருக்கும்— அப்பதஞ்சார்ந்தவர்- அந்தபதத்தைப்படைந்தவர்கள்— மீண்டு- திரும்பவும்— இடர்சாரார்- துன்பமடையார்கள்— (எ-று) [இ-உ-க-ம்] சத்தின்வித்தானதுரியத்தையுமதற்குவித்தானவத்துவிதத்தையுமறிவித்ததாம், சத்தாசாமானியக்கோடியென்றதனானும், நல்லுணர்வின்பதமென்றதனானும், இனிச்சாதனக்கிரமங்கூறுமிடத்து சத்தாசாமானியக்கோடிமுதலாயுரைப்பதனானும், அவ்விரண்டையும் விதையெனக்கூறப்பட்டன, கீர்வாணத்திற் சத்துபரியந்தம் வித்தெனக்கூறுவாருமுளர் ※

(சஉ) (அ-கை) இதார்த்தமானநான்குவித்தையுஞ்சொல்லி யதுவேயாவுமாய்விளங்குகின்றதெனல். (கவி) அதுவேயேதுவனைத்திற்குமேதுவதனுக்கேதுவிலை, யதுவேசாரமனைத்திற்குஞ்சாரமதனிற்சாரமிலை யதுவாம்பெரியதற்பணத்திலனைத்துப்பொருளின்பார்வைகளா, யதுவிதென்பதெலாந்தோன்றுமருகின்மரங்கள்வாவியிற்போல். (இ-ள்) அனைத்திற்கும்- சகலத்துக்கும்— அதுவேயேது- அதுவேகாரணம்— ஏதுவதனுக்கேதுவிலை- காரணமானவதற்குக்காரணமில்லை— அனைத்திற்கும்- சகலத்திற்கும்— அதுவேசாரம்- அதுவேசாரமாயிருக்கும்— சாரமதனிற்சாரமிலை- சாரமாகியவதற்குவேறேசாரமில்லை— அதுவாம்பெரியதற்பணத்தில்- அதுவாகியபெரியகண்ணாடியில்— அனைத்துப்பொருளின்- சகலபதார்த்தங்களின்— பார்வைகளாய்- பார்வைகளாயிருக்கின்ற— அதுவிதென்பதெலாம்- அதுவிதுவென்கின்றசகலமும்— அருகின்மரங்கள்- கரைகளிலிருக்கின்றவிருட்சங்கள்— வாவியிற்போல்- தடாகத்திற்றோற்றுவதுபோல— தோன்றும்- ப்ரதிபலிக்கும்— (எ-று) - - - - - - ※

(சங) (அ-கை) இவ்வனுபவத்தினான்மனதுசாந்தமாமெனல் (கவி) அதுவேயமலஞ்சுனயற்றதஃதாற்றுமதத்துவமதுவே, சதுராவதுவந்துறிலுள்ளஞ்சாற்றுமுபசாந்தியையடையுந், திதமாயறிந்தவ்வடிவாவாய்சென்மமற்றபதம்பெறுதி, முதல்வாவென்னவிராமனுமம் முனியைநோக்கிமொழிகின்றான். (இ-ள்) அதுவேயமலம்- அதுவேநின்மலமும்— அஃதுசுனையற்றது- அதுவேமூப்பற்றதும்— அதுவேயாத்துமதத்துவம்- அதுவேயாத்மதத்துவமுமாம்— சதுரா- சதுரையுடையஸ்ரீராமா— அதுவந்துறில்- அப்பதம்வந்துபொருந்துமாயின— உள்ளஞ்சாற்றுமுபசாந்தியையடையும்- மனதுசொல்லப்பட்டவுபசாந்தத்தைப்பெறும்— திதமாயறிந்து- திரமாயுணர்ந்து— அவ்வடிவாவாய்- அந்தவாத்மஸ்வரூபமாவாய்— சென்மமற்றபதம்- சநநமில்லாதநிருவாணபதத்தை— முதல்வா- தலைவனே— பெறுதியென- அடையக்கடவாயென்றுசொல்ல— இராமனும்- ஸ்ரீராமனும்— அம்முனியைநோக்கி- அந்தவசிட்டமுனியைப்பார்த்து— மொழிகின்றான்- சொல்லுகின்றார்— (எ-று) [இ-உ-க-ம்] இச்சுவானுபவத்தினான்மனமுதலியசகங்களியாவுஞ்சாந்தமாமென்பதாம் - - - - - - ※

(சச) (அ-கை) சுவாத்மானுபவமானபிரமஸ்வரூபத்தை நிச்சயித்தஃதடையும் வருத்தாவருத்தமுநிரூபிக்கத்தொடங்கல்- (கவி) அன்னவிதைகளின்னதெனவனைத்துமுரைத்தாயனந்தமெனச், சொன்னபதமெம்முயற்சியினாற்றுன்னலாகும்விரைவிலென, மன்னுமுனிசொல்வான்றுன்பவிதையாமிவற்றின்வகைமேன்மே, லென்னெனறுரைத்தெனவற்றவற்றின்முயல்வால்விரைவிற்பதமெய்தும் (இ-ள்) அன்னவிதைகள்- அத்தன்மையுள்ளவித்துக்கள்— இன்னதென- இப்படிப்பட்டதென்று— அனைத்துமுரைத்தாய்- யாவையுஞ்சொன்னாய்— அனந்தமென- முடிவில்லாததென்று— சொன்னபதம்- சொல்லிய(ஞானாநந்த)பதத்தை— எம்முயற்சியினால்- எந்தமுயற்சியினால்— விரைவில்- சீக்கிரத்தில்— துன்னலாகுமென- அடையலாகுமென்றுகேட்க— மன்னுமுனிசொல்வான்- நிலைபெற்றவசிட்டமுனிசொல்லுவார்— துன்பவிதையாமவற்றின்வகை- துன்பத்துக்குவித்தாகியவிவைகளின்விதங்களை— மேன்மேலென்னெனறுரைத்தேன்- மேலுமேலுமென்னவென்னசொன்னேனோ— அவற்றவற்றின்முயல்வால்- அதினதின்முயற்சியினால்— விரைவிற்பதமெய்தும்- சீக்கிரத்திலாநந்தப்பதமடையப்படும்— (எ-று)

(௪௫) (அ-கை.) க்ஷணஞ்சத்தினதீதமாயினடையேயத்துவிதானுபவஞ்சித்திக்குமெனல். (கவி)
சத்தாசாமானியக்கோடிபதத்தேசார்வுற்றொருக்காலே, கொத்தாகியவாதனைப்புருடவருத்தத்தாற்சோ
ளறவிட்டு, சொத்தாகியதத்துவமுணர்ந்துதொலையாவடிவாநிலையமிழ்ந்த, வுற்றாய்க்கணப்போதென்னி
னுமக்கணத்தேயுறுமப்பதமடைவாய். (இ-ள) சத்தாசாமானியக்கோடி- சத்தாசாமானியத்தின்முடி
வாகிய— பதத்தேசார்வுற்று- (அதீத) பதத்தைபடைந்து— ஒருக்கால்- ஒருகாலத்தில்— கொத்தா
கியவாதனை— திரளாகியவாசனைகளை— புருடவருத்தத்தால்- புருடவெத்தனத்தினால்— கோளறவிட்
டு- இடையூறில்லாமற்கெடுத்து— சொத்தாகிய- தனக்குரிமையான— தத்துவமுணர்ந்து- தத்துவ
ஞானத்தையறிந்து— தொலையாவடிவாம்- நாசமில்லாதஸ்வரூபமாகிய— நிலையமிழ்ந்த- நிலைபிலழு
ந்த—கணப்போதென்னினும்- க்ஷணப்போதாயினும்—உற்றாய்- பொருந்தினாய்— அக்கணத்து-
அந்தக்ஷணத்தில்— உறுமப்பதம்மடைவாய்- பொருந்தாநின்றவவ்வத்துவிதபதத்தையடைவாய்(எ-று)

(௪௬) (அ-கை) சத்தாயிற்கொஞ்சவருத்தத்தினாலுஞ்சித்தாயிலதிகவருத்தத்தினாலுமத்துவிதத்தை
யடையலாமெனல். (கவி) நிகழ்சத்தாசாமானியத்தினுருவாநிலையைநேர்தியெனிற், பகருமதனிற்சற்றதி
கவருத்தத்தாலப்பதம்பெறுதி, நிகழுஞ்சித்தத்துவத்திலுறுதியானஞ்செய்யிலதற்கதிக, மிகவும்வருத்த
முறுதலினாலந்தப்பதத்தைமேவுதியால். (இ-ள்) நிகழ்சத்தாசாமானியத்தின்- விளங்காநின்றசத்தாசா
மானியத்தினது— உருவாநிலையம்-ஸ்வரூபமாகியநிலையை—நேர்தியெனில்- அடைவாயானால்— பகரு
மதனில்- சொல்லாநின்றவதில்—சற்றதிகவருத்தத்தால்- கொஞ்சமதிகப்ரயாசத்தினால்— அப்பதம்பெ
றுதி- அந்தப்பதத்தையடைவாய்—நிகழுஞ்சித்தத்துவத்திலுறு- விளங்காநின்றசிற்சாமானியத்திற்பொ
ருந்துகின்ற— தியானஞ்செய்யிலதற்கதிகம்- தியானஞ்செய்தாலச்சத்தாசாமானியமுயற்சிக்கதிகமா
க—மிகவும்வருத்தமுறுதலினால்- மிகவும்ப்ரயாசைப்படுதலினால்—அந்தப்பதத்தைமேவுதி- அந்தஸ்வரூ
பமடைவாய்—(எ-று) [இ-ரு-க-ம்] பிரமத்தையடையுமார்க்கத்தின்சுளுவையும்பளுவையுமறிவித்ததாம்.

(௪௭) (அ-கை) முன்சித்தப்பரியந்தமற்பியாசஞ்சொல்லிப் பின்றிரிஸ்யவனுசந்தானத்தாலவ்வனு
பவமுதியாததையும்வாசனாநாசத்தான்மனமுதலியயாவுநசிப்பதையுங்கூறுதல் (கவி) முந்துவெறிதேய
றிபொருளிற்றியானந்தோன்றுமுகில்வண்ணா, விந்தவறிவின்சம்பவத்தாலென்றுமெங்குமெய்தாதாற்,
றொந்தமானவாதனையை வருந்தித்துடைத்தாயெனிலதனால், வெந்தவாதிவியாதியெலாம் விளைவிற்றுக
ளாயகன்றிடுமே (இ-ள்) முந்து- முந்தி— வெறிதேயறிபொருளின்றியானம்- கேவலமாகியதிரிஸ்ய
சிந்தனையால்—முகில்வண்ணா- மேகவண்ணத்தையுடையஸ்ரீராமா— தோன்று- அப்பதமுதியாது—
இந்தவறிவின்- இவ்விடயஞானத்தின்—சம்பவத்தால்-உதயத்தினால்—என்றும்- எப்போதும்—எங்கு
ம்- எவ்விடத்தும்— எய்தாது- (அனுபவ) முண்டாகாது—தொந்தமானவாதனையை- துவிதமாகியவா
சனையை— வருந்தித்துடைத்தாயெனில்- ப்ரயாசைப்பட்டுக்கெடுத்தாயானால்— அதனால்வெந்த- அத
னால்வெப்பமுற்ற— ஆதிவியாதியெலாம்- ஆதிவியாதியானசகலமும்— விளைவில்- சீக்கிரத்தில்— து
களாயகன்றிடும்- பொடியாகநீங்கும்—(எ-று) - - - - - - - - - - - - - - *

(௪௮) (அ-கை) வாசனையுமனமும்பீசாங்குரஞாயமாமெனல் (கவி) முன்னஞ்சொன்னவருத்த
ங்கண்முழுதுஞ்செயினும்வேரோடே, சொன்னமலையைப்பிடுங்கிடினுந் தொடர்வாதனையைவிடலரி
தா, லுன்னுமனமெம்மட்டொழியா துறுவாதனையம்மட்டழியா, தன்னபடிவாதனையெம்மட்டழியா
துளமம்மட்டொழியா (இ-ள்) முன்னஞ்சொன்ன- முன்சொல்லப்பட்ட—வருத்தங்கள்- ப்ரயாசை
கள்— முழுதுஞ்செயினும்- முற்றுஞ்செய்தாலும்— சொன்னமலையை- மகம்மேருவை— வேரோ
டுபிடுங்கிடினும்- மூலத்தோடுபிடுங்கினாலும்— தொடர்வாதனையைவிடலரிதாம்- தொடரும்வாசனை
யைவிடுதற்கரியதாம்— உன்னுமனம்- நினைக்கின்றமனது— எம்மட்டொழியாது- எந்தமட்டுங்கெ
டாதோ— உறுவாதனை- பொருந்தினவாசனையானது— அம்மட்டழியாது- அந்தமட்டுங்கெடாது—
அன்னபடி- அந்தப்ரகாரமே— வாதனை- வாசனையானது—எம்மட்டழியாது- எந்தமட்டுங்கெடவில்
லையோ— உளம்- மனம்— அம்மட்டொழியா- அந்தமட்டுங்கெடாது—(எ-று) - - - - *

(௪௯) (அ-கை) ஞானமுதிக்குமளவுமனதம்வாசனையுநசியாதிவைநசிக்குமளவுஞானமுதியாதெண
ல் (கவி) உண்மைஞானமெம்மட்டும்வாராதம்மட்டுளமழியா, திண்மையுளமெம்மட்டழியாதிகழ்த
த்துவமம்மட்டெய்தா, தன்மையுறுவாதனையெம்மட்டழியாதம்மட்டுணர்வணுகா, வன்மையுணர்வெ
ம்மட்டணுகாவருவாதனையம்மட்டழியா. (இ-ள்) உண்மைஞானம்- தத்துவஞானமானது— எம்மட்
டுவாராது- எந்தமட்டும்வரவில்லையோ— அம்மட்டுளமழியா- அந்தமட்டுமனங்கெடாது— திண்மை
யுளம்- வலிமை (பொருந்திய) மனது— எம்மட்டழியாது- எந்தமட்டுங்கெடவில்லையோ— திகழ்த
த்துவம்- ப்ரகாசியாநின்றதத்துவஞானம்— அம்மட்டெய்தா- அந்தமட்டுமடையமாட்டாது— தன்
மையுறுவாதனை- இழிவாகியவாசனையானது— எம்மட்டழியாது- எந்தமட்டுங்கெடவில்லையோ— அ
ம்மட்டுணர்வணுகா- அந்தமட்டுஞானங்கிட்டமாட்டாது—வன்மையுணர்வு- மெய்ஞ்ஞானம்— எம்
மட்டணுகா- எந்தமட்டுங்கிட்டாதோ— அம்மட்டு- அந்தமட்டும்— வருவாதனை- வருகின்றவாசனை
யானது— அழியா- கெடமாட்டாது—(எ-று) - - - - - - - - - - - - - *

(௫௰) (அ-கை.) திரிஸ்யவிச்சைநீங்கில்வாசனாக்ஷயமுமனோநாசமுந்தத்துவஞானமுமுண்டாமெ
னல். (கவி) செறிவாஞானமனமாய்வுதிரள்வாதனைமாய்வும்மூன்றும், பிறதாங்காரணங்கடமைப்பெறு
சாதித்தற்கரிதாகும், நெறியாமதனால்விவேகிகளாணிலைகூர்புருடவருத்தத்தாற், பொறியார்போகமயல்
துரப்போக்கிலவைதாமப்பொருந்துவதாம் (இ-ள்) செறிவாஞானம்- நிறைவாகிய(தத்துவ)ஞானமுதை
யமும்— மனமாய்வும்- மனோநாசமும்— திரள்வாதனைமாய்வும்- மிகுந்தவாசனாக்ஷயமுமாகிய— இ
வ்மூன்றும்- இந்தமூன்றும்— பிறதாங்காரணங்கடமை- வேறுகாரணங்களை— பெறு- பெற்று—

சாதித்தற்கரிதாகும்- சாதிப்பதற்கரியதாம்— நெறியாமதனால்- செவ்விதானவந்தமார்க்கத்தினால்— விவேகிகளால்- விவேகிகளினால்— நிலைகூர்- திடமாகிய— புருடவருத்தத்தால்— புருடப்ரயெத்தனத்தினால்— பொறியார்- ஐம்பொறிகளாலுண்டாகிய— போகமயல்- போகமயக்கங்களை— தூரப்போக்கில்- தூரத்தள்ளினால்— இசைவதாம்- இந்தமூன்றும்— பொருந்துவதாம்- வந்தடையும்—(எ-று) *

(ருக) (அ-கை) இம்மூன்றுங்காரணகாரியமாகாமற்சமமாயநுஷ்டிக்கிற் சிதாநந்தத்தையடையலாமெனல் (கவி) இனையமூன்றுஞ்சமமாகவியற்றாவெம்மட்டம்மட்டு, மனையபதமெய்தாவருடமாயிரங்கள்சென்றாலும், வினையில்காலஞ்சமமாகமிகுநாளியற்றின்மிகப்பலிக்கு, நினைவிலொன்றொன்றாவியற்றினிலைகூடாநிட்பலமாகும் (இ-ள்) இனையமூன்றும்- இத்தன்மையவானமனோநாசம்வாசனாட்சயம்தத்துவஞானமென்னுமூன்றும்— சமமாக- சமத்துவமாக— எம்மட்டும்- எந்தமட்டும்— இயற்றாமுயற்சிசெய்யவில்லையோ— அம்மட்டும்- அந்தமட்டும்— அனையபதம்- அப்படிப்பட்டஸ்வரூபபதமானது— வருடமாயிரங்கள்சென்றாலும்- அநேகவருடமாயினும்— எய்தா- அடையமாட்டாது— வினையில்காலம்-வினையில்லாத(வெப்)போதும்—சமமாக- (மூன்றுஞ்) சமத்துவமாக— மிகுநாளியற்றின்- வெகுகாலம்பழகில்— மிகப்பலிக்கும்- மிகவும்ப்ரயோசனமாகும்— நினைவில்- மனதில்— ஒன்றொன்றாவியற்றில்- ஒன்றொன்றாகமுயற்சிசெய்தால்— நிலைகூடாநிட்பலமாகும்- நிலைபொருந்தாமலப்ரயோசனமாகும்— (எ-று) [இ-உ-க-ம்] ஞானாப்பியாசத்தினுண்மையையறிவித்ததாம் *

(ருஉ) (அ-கை.) பிராணபந்தனத்தினாலும்வாசனைவிமுத்தியினாலுமனோபந்தநீங்குமெனல் (கவி) ஒக்கவியற்றிலிம்மூன்றுமுளத்தின்சட்டெல்லாமொழிக்குஞ், சிக்கலாதுதாமரைநூல்வளையஞ்சிதையிற்சிதையாதோ, தொக்கபிறவித்திரள்கடொறுந்தொடர்ந்துவந்தவாதனைதான், மிக்ககாலயோகத்தின்பழக்கத்தல்லால்விடாதெங்கும் (இ-ள்) ஒக்கவியற்றில்- சமமாகச்செய்தால்— இம்மூன்றும்- இந்தமூன்றும்— உளத்தின்சட்டெல்லாம்- மனதிலுள்ளபந்தங்களனைத்தையும்— ஒழிக்கும்- கெடுக்கும்— சிக்கலாது- சிக்கலாமலிருக்கின்ற— தாமரைநூல்- தாமரைநூலானது— வளையஞ்சிதையில்- தாமரைத்தண்டுகெடுமாயின்— சிதையாதோ- கெடாதோ— தொக்கபிறவித்திரள்கடொறும்- பொருந்தியசநநங்கடோறும்— தொடர்ந்துவந்தவாதனை- தொடர்பாகிவந்தவாசனையானது—மிக்ககாலயோகத்தின்பழக்கத்தலாலெங்கும்விடாது- வெகுகாலத்தியானத்தின்பழக்கத்தாலன்றியெவ்விடத்துநீங்காது—(எ-று) - *

(ருங) (அ-கை.) (இ-து) (கவி) பிறவாதனையை விடலொக்கும்பிராணவாயுத்தடையென்று, திறமாயறிஞரியம்புவராற்றிடமாயதுவுஞ்செயவேண்டு, முறுவாதனையேவிடிலுள்ளமுள்ளமல்லாமையையடையு, நிறையாருயிரைத் தடுக்கிலுமாநினக்கேதிச்சையதுசெய்வாய் (இ-ள்) பிறவாதனையை- புறம்பிலுள்ள வாசனையை— விடலொக்கும்- விடுதலுக்குச் சமானமாம்— பிராணவாயுத்தடையென்று- பிராணபந்தனமென்று— திறமாயறிஞரியம்புவர்- திரமானஞானவான்கள்சொல்லுவார்கள்— திடமாய்- திடமாக— அதுவுஞ்செயவேண்டும்- அந்தவெத்தனமுஞ்செய்யத்தக்கதாம்—உறுவாதனையைவிடில்- பொருந்தாநின்றவாசனையைவிட்டால்—உள்ளம்-மனமும— உள்ளமல்லாமையை யடையும்-மனமில்லாமையையடையும்— நிறையாருயிரைத்தடுக்கிலும்- பிராணபந்தனஞ்செய்தாலும்— ஆம்-மனோநாசமாம்— நினக்கேதிச்சை-உனக்கெதுவிச்சையோ— அதுசெய்வாய்- அதைச்செய்வாய்— (எ-று.)

(ருச) (அ-கை.) பிராணபந்தனத்துக்கும்வாசனாக்ஷயத்துக்குஞ்சாதனமுரைத்தல் (கவி) பிராணாயாமவன்பழக்கம் பேணுங்குருச்சொல்லுபாயங்கள், விராவாசனம்போசனமியோகம்விளம்புமிவற்றாலுயிரொடுங்கு மிராமாசங்கம்விவகாரமின்மைபவபாவனையின்மை, யொராகாரந்திரிடநோக்கலுரைத்தவிவற்றால்வாதனைபோம் (இ-ள்) பிராணாயாமம்- பிராணபந்தத்தின்— வன்பழக்கம்- வலியபழக்கமும்— பேணும்- விரும்பாநின்ற— குருச்சொல்- ஆசாரியருபதேசிக்கப்பட்ட— உபாயங்கள்- யுத்திகளும்— விராவாசனம்- சொல்லாநின்றவாசனமும்—போசனம்-புசிப்பும்— யோகம்- தியானமுமாகிய— விளம்புமிவற்றால்- சொல்லாநின்றவிவைகளினால்—உயிரொடுங்கும்-பிராணனடங்கும்— இராமா- ஸ்ரீராமா—சங்கம்- பற்றுள்ள—விவகாரமின்மை-விவகாரமில்லாமையும்—பவபாவனையின்மை-சம்சாரபாவனையில்லாமையும்— ஒராகாரந்திரிடநோக்கல்- ஒருருவமின்றி யருவமாய்ப்பார்ப்பதும்— உரைத்தவிவற்றால்- சொல்லியவிவைகளினால்—வாதனைபோம்-வாசனாக்ஷயமாகும்—(எ-று) - - *

(ருரு) (அ-கை.) மனத்தினசைவேபிராணனாதலாலதைத்தடுக்கின்மனதுநிற்குமெனல் (கவி) பகைவாதனைமாய்ந்திடிற் சித்தந்தோன்றாப் பவனமொடுங்கிவிடிற், றொகைதீர்துகளந் தரத்துண்டோ சொன்னபிராணனசைவேதுமிகையாருள்ளத்தசைவதுவேயதனாற்பிராணவிசைத்தடைதான், றகைசேர்மதிமான்களுக்கியல்பாய்த்தப்பாதியற்றத்தக்கதுவே. (இ-ள்) பகை- சத்துருவான— வாதனைமாய்ந்திடில்- வாசனாட்சயம்வந்தால்— சித்தந்தோன்றா- மனமுண்டாகாது— பவனமொடுங்கிவிடில்- காற்றி(னசை) வடங்கினால்— தொகைதீர்துகள்- அளவற்றபுழுதிகள்— அந்தரத்துண்டோ- ஆகாயத்திலுண்டாமோ—சொன்னபிராணன்-(முன்)சொல்லப்பட்டபிராணவாயுவின்— அசைவேது- சலனமெதுவோ—அதுவே-அதுதானே—மிகையாருள்ளத்தசைவு- துன்பநிறைந்தமனதினசைவாகும்— அதனாற்பிராணவிசை- அதனாற்பிராணவேகத்தை—தடைதான்- தடுப்பது— தகைசேர்மதிமான்களுக்கியல்பாய்த்தப்பாதியற்றத்தக்கது- நற்குணமுள்ளவறிஞர்க்கியற்கையாகத்தவறாமற்செய்யத்தக்கது(எ-று) *

(ருசு) (அ-கை) மனதையடக்குதற்கின்னுநான்குயுத்திசொல்லுதல் (கவி) வே. ஊகநன்மையாலல்லதுவெலப்படாதுள்ளம், வேகமத்தமாவங்குசத்தலால்வெலப்படுமோ, வேசபோதத்தையறிதனல்லவருடனெய்தல், சோகவாதனைவிடலுயிர்தோன்றாதொடுக்கல் (இ-ள்) ஊகநன்மையாலல்லது- யுத்தியினன்மையினாலல்லாமல்—உள்ளம்- மனமானது— வெலப்படாது- வெல்லப்படாது— வேகமத்தமா- கோபங்கொண்ட மதயானையானது— அங்குசத்தலால்- அங்குசத்தினாலன்றி— வெலப்படு

மோ- செயிக்கப்படுமோ— ஏகபோதத்தையறிதல்- ஒன்றாகிய ஞானத்தை யறிதலும்— நல்லவருடனெய்தல்- நன்மையுள்ளசத்துக்களுடன்சேருதலும்— சோகவாதனைவிடல்- துக்கவாசனையைவிடுதலும்— உயிர்தோன்றுறுதொடுக்கல்- பிராணசலனமில்லாமலடக்குதலும்— (எ-று) - - - - - *

(௫௭) (அ-கை) இந்நான்குயுத்தியையன்றிமனதையடக்கக்கூடாதெனல் (கவி) வேஉனாசெய்நால்வகையுநெஞ்சையொடுக்குமூகங்களாகும், புரையிலாவிவற்றுக்குள்ளமொடுங்குதல்புயன்மழைக்குத், தரையுறுதூளிபோலாஞ்சாற்றுமூகங்களன்றி, விரைவினெஞ்சடர்ப்பார்தீபம்விட்டிருளிருளாற்றீர்ப்பார். (இ-ள்) உனாசெய்- சொல்லப்பட்ட— நால்வகையும்- நான்குவகையும்— நெஞ்சையொடுக்கும்- மனதையடக்குகின்ற— ஊகங்களாகும்- யுத்திகளாகும்— புரையிலாவிவற்றுக்கு- குற்றமற்றவிந்தயுத்திகளுக்கு— உள்ளமொடுங்குதல்- மனமடங்குதல்— புயன்மழைக்கு- மேகவருடத்திற்கு— தரையுறுதூளிபோலாம்- பூமியிலடங்கியபுழுதிக்கொப்பாகும்— சாற்றுமூகங்களன்றி- சொல்லப்பட்டயுத்திகளையல்லாமல்— விரைவினெஞ்சடர்ப்பார்- வேகமாகமனதையடமாய்க்கெடுப்பவர்கள்— தீபம்விட்டிருளிருளாற்றீர்ப்பார்- விளக்கைவிடுத்திருளையிருளினாற்கெடுப்பவர்களுக்கிணையாம் (எ-று) *

(௫௮) (அ-கை) இவ்வூகங்களையன்றிமனதையடக்கின்வருந்துமெனல். (கவி) வலியினால்விரைந்தூகங்களன்றியேமனத்தைவெல்வார், ஒலிமதக்களிற்றைக்கஞ்சவளையநூலொன்றாற்சேர்ப்பார், மெலியுமம்மூர்க்கருள்ளம்வெருவிநொந்தறநொய்தாகி, நலியுமென்றென்றுநம்பாநகருற்றுவெருளுமான்போல், (இ-ள்) வலியினால்விரைந்து- பலத்தினால்வேகமாய்— ஊகங்களன்றி- முன்சொன்னயுத்திகளையல்லாமல்— மனத்தைவெல்வார்- மனதைச்செயிப்பவர்கள்— ஒலிமதக்களிற்றை- கெற்சிக்கின்றமதயானையை— கஞ்சவளையநூலொன்றால்- தாமரைத்தண்டினுள்ளிருக்கின்றவொருநூலினால்— சேர்ப்பார்- கட்டுவார்களவர்— மெலியும்- இளைக்கின்ற— அம்மூர்க்கருள்ளம்- அந்தமூடர்களுடையமனது— வெருவிநொந்து- பயத்தோடுந்துன்பத்தையடைந்து— அறநொய்தாகி- மிகவுஞ்சிறுமையாய்— நலியுமென்று- வருத்துமென்று— நகருற்று- பட்டணத்தில்வந்து— வெருளுமான்போல்- பயந்தமானைப்போல— ஒல்லுநம்பா- ஒன்றையுநம்பமாட்டாது— (எ-று) [இ-எ-க-ம்] இந்நான்குயுத்தியினொன்றினாலாவதுமனதையடக்கி னடங்குமிஃதில்லாவிடி னடங்காதென்பதாம். - - *

(௫௯) (அ-கை) சற்கருமத்தையுநீக்கிஞானதிருஷ்டியாலிச்சாத்தியாகஞ் செய்யவேண்டுமெனல். (கவி) தவமகந்தீர்த்தஞ்சேவையருச்சனைதானமாதி, யவமயக்கத்தானீணாள்விலங்கு போலவத்தர்வாழ்வர், பவமுறுமிவற்றைவிட்டு பரிசுத்தபரமபோதங், கவரறப்பற்றியெல்லாக் காதலுநீக்கிநிற்பாய். (இ-ள்) தவம்- தவசும்— மகம்- யாகமும்— தீர்த்தம்- தீர்த்தங்களும்— சேவை- தேவதரிசனங்களும்— அருச்சனை- ஆராதனைகளும்— தானமாதி- தானங்களும்முதலிய— அவமயக்கத்தால்- பயனில்லாதமயக்கத்தினால்— நீணாள்- வெகுகாலம்— விலங்குபோல்- மிருகங்களைப்போல— அவத்தர்வாழ்வர்- வீணர்கள்வாழ்வார்கள்— பவமுறும்- சநநத்தைக்கொடுக்கின்ற— இவற்றைவிட்டு- இவகளைவிடுத்து— பரிசுத்தபரமபோதம்- பரிசுத்தமானபிரமஞானத்தை— கவரறப்பற்றி-. இரண்டில்லாமற்பிடித்து— எல்லாக்காதலும்- சகலவிச்சைகளையும்— நீக்கிநிற்பாய்- கெடுத்திருப்பாய்— (எ-று) - - - - *

(௬௰) (அ-கை) திருக்குதிருஷ்டியில் மனதைநீக்கிச் சித்தையடையவேண்டுமெனல் (கவி) நோக்கும்பொருளற்றநன்றாய் முதலாய் நுனிக்குங்கருத்தற்று, தாக்குமறிவின்பதமானவொன்றைநாடிச்சான்றோனே, வீக்கும்விசாரமறவிதயத் துறைவாய்தொழிலைமேவுகினு, மாக்கஞ்செய்வானலாதபதமடைதிசமமாஞ்சீர்விளங்க (இ-ள்) நோக்கும்- பார்க்கின்ற— பொருளற்று- விடயமற்று— அறநன்றாய்- மிகவுநன்றாகி— முதலாய்- முதன்மையாக— நுனிக்குங்கருத்தற்று- சங்கற்பிக்குநினைவின்றி— தாக்குமறிவின்பதமான- தாங்காநின்றஞானபதமாகிய— ஒன்றைநாடி- ஒன்றைப்பார்த்து— சான்றோனே- அறிஞ்ஞனா ஸ்ரீராமா— வீக்கும்விசாரமற- பந்தத்தையுடையவெண்ணமில்லாமல்— இதயத்துறைவாய்- இதயத்திற்பொருந்துவாய்— தொழிலைமேவுகினும்- தொழிலைப்பொருந்தினாலும்— ஆக்கம்- இலாபம்(கருதி)— செய்வானலாதபதம்- அகர்த்தாவாகியபிரமபதத்தை— சமமாஞ்சீர்விளங்க- சமமாகியசெல்வம்பிரகாசிக்க— அடைதி- அடையக்கடவாய்— (எ-று) [இ-உ-க-ம்] இச்சையைநீக்கி யாத்மஞானத்தான் மனோரூபமாகிய திரிஸ்யத்தைக் கெடுக்கவேண்டு மென்பதாம் - - *

(௬௧) (அ-கை) மனதைவிசாரத்தினாலுமடக்கலாமெனல். (கவி) தனதுமனத்தையொருக்காலேவிசாரத்தாலேசமிப்பித்த, வனகன்பிறவிப்பயன்பெற்றானற்பமெனினுமிதயத்தே, வினவுவிசாரமெழிலதுதான்விடாதுபழகுமியோகத்தாற், கனமதாகிப்பல்விதமாங்கப்பாயிரமாய்ப்பலவாகும். (இ-ள்) தனதுமனத்தை- தன்னுடையமனதை— ஒருக்கால்- ஏககாலத்தில்— விசாரத்தால்- விசாரணையினால்— சமிப்பித்த- கெடுப்பித்த— அனகன்- களங்கமில்லாதவன்— பிறவிப்பயன்பெற்றான்- சநநத்தின்பலனையடைந்தவன்— அற்பமெனினும்- அற்பமானாலும்— இதயத்து- மனதில்— வினவுவிசாரம்- வினவாநின்றவிசாரணையின்— எழிலதுதான்விடாது- வலியைவிடாமல்— பழகுமியோகத்தால்- பழகாநின்றதியானத்தினால்— கனமதாகி- பருமனாய்— பல்விதமாம்- நாநாவிதமாகிய— கப்பாயிரமாய்- ஆயிரம்பணைகளோடும்— பலவாகும்- அநேகமாகும்— (எ-று) - - - - - - - - *

(௬௨) (அ-கை.) விசாரமுக்கியமாய்வேண்டுமெனல் (கவி) தக்கவிசாரமெனும்பூத்ததருப்பூவட்டத்தொருதாளாய்த், துக்கவிசாரச்சூறைக்காற்றசைத்தற்கரிதாய்த்துவட்சியிலா, மிக்கநிலையாநிலைபோக்குவிழித்தலுறங்கலுளோர்மனத்திற், புக்கவிசாரமில்லாரேற் பொன்றனோமெனப்புகல்வர். (இ-ள்) தக்கவிசாரமெனும்- தகுந்தவிசாரணையென்கின்ற— பூத்ததரு- புட்பித்தவிருட்சமானது— பூவட்டத்து- பூபீடத்தில்— ஒருதாளாய்- ஒருவேருள்ளதாய்— துக்கவிசாரச்சூறைக்காற்று- சிந்தையென்னுஞ்சுழற்காற்றானது— அசைத்தற்கரிதாய்- அசைப்பதற்கரியதாய்— துவட்சியிலா- துவளலில்லாத—

மிக்கநிலையாம்- மிகவுந்திரமுள்ளதாம்— நிலைபோக்கு- நிற்பதும்போவதும்— விழித்தலுறங்கல்- விழிப்பதுமுறங்குவதும்— உளோர்- (இவைகளை) யுள்ளவர்கள்—மனத்திற்புக்க- மனத்திற்பொருந்திய— விசாரமில்லாரேல்- விசாரணையில்லாதவர்களாயின்—பொன்றினோராமென.. நசித்தவர்களாவரென்று— புகல்வர்- சத்துக்கள்சொல்லுவார்கள்— (எ-று) - - - - - - - - - - - - *

(௬௩) (அ-கை) சாதுசங்கத்தோடும்விசாரஞ்செய்யவேண்டுமெனல் (கவி) கெடாதசிற்கண்ணனீதான்கிளர்மேலவர்களுடனேதான், விடாதிவ்வுலகேதியாமாரொன்றுறைக்கமெல்லவிசாரிப்பாய், தடாதுட்பொருடேர்வித்தைக்குவிசாரந்தானேதனிஞானங், கடாவியறியத்தக்கததிற்காணும்பாலின்மதுரம்போல் (இ-ள்) கெடாதசிற்கண்ணனால்- நசியாதஞானதிருஷ்டியினால்— நீதான்- நீயேயாவது— கிளர்மேலவர்களுடனேதான்- விளங்காநின்றமகான்களுடனேயாவது— விடாது- இடைவிடாமல்— இவ்வுலகேது- இச்சகமியாது—யாமாரொன்று- நாமாரொன்று—உறைக்க- திடமாக—மெல்லவிசாரிப்பாய்- மிருதுவாகவிசாரணைசெய்வாய்— தடாது- தடைப்படாமல்—உட்பொருடேர்- உண்மைப்பொருளைத்தேடாநின்ற— வித்தைக்கு- அத்தியாத்துமவித்தைக்கு— விசாரந்தானே- விசாரணையே— தனிஞானம்- தனிமையாகியஞானமாம்— கடாவியறியத்தக்கது- வினாவியறியத்தக்கவஸ்து—பாலின்மதுரம்போல்- பாலினிரசத்தைப்போல—அதிற்காணும்- அந்தவிசாரணையிற்காணப்படும்— (எ-று) [இ-௬௧-ம்] ஆத்மானாத்மவிசாரத்தாலனாத்மாவாகியமனதுநீங்கியாத்மஞானமுதிக்குமென்பதாம் - - *

(௬௪) (அ-கை) அனுபவியினிலக்கணங்கூறல் (கவி) நன்றாஞானச்சமநோக்காளுடும்பொருட்குச்சமந்தானே, யொன்றாத்தரித்தோன்றீனமுறானுள்ளமஞ்சான்விவசமுறான், னன்றாஞ்சுற்றமபத்தியநஞ்சடுத்ததேனுமனமருந்தி,வின்றாயிமைப்பிலிறுநொந்திறந்ததனங்கண்டதுபோலாம் (இ-ள்) நன்றாஞானச்சமநோக்கான்- சுகபோதசமத்துவதிருஷ்டியையுடையவன்— நாடும்பொருட்கு- தேடாநின்றவஸ்துவுக்கு— சமந்தான்- சமத்துவத்தை— ஒன்றாத்தரித்தோன்- முக்கியமாகத்தரித்தவன்—தீனமுறான்- ஈனமடையான்— உள்ளமஞ்சான்- மனதிற்பயப்படான்— விவசமுறான்- (ஒன்றுக்கும்) வசமாகான்— அன்றாஞ்சுத்தம்- உச்சிட்டமானாலும்— அபத்தியம்- அபத்தியமானாலும்— நஞ்சடுத்ததேனும்- விடஞ்சேர்ந்ததானாலும்— நொந்தது- நொந்ததானாலும்— இறந்தது- கெட்டுப்போனதானாலும்—அனம்- அன்னமானது— கண்டதுபோல்- கற்கண்டைப்போல—அருந்தில்- (அவன்) புசித்தால்—இன்றாய்- (மந்த)மில்லாததாய்—இமைப்பிலிறும்- கணத்திற்சீரணமடையும்—(எ-று)

(௬௫) (அ-கை) தேகாபிமானநீங்கினதைக்கூறல் (கவி) கரளகாளமொப்பனபாற் கருப்பஞ்சாறோதனநுகரில், விரவுபுந்திபற்றாமன்மெய்ம்மையுணர்ந்தோர்சமமாவார், சிரமங்கரிந்தோர்சிரந்தந்தோர்செறுநரொன்னாருறவென்னா,ருரவுஞானத்தொருநோக்காலொக்கக்காண்பருட்குளிர்ந்து (இ-ள்) கரளகாளம்-விடமானாலும்ப்ரதிவிடமானாலும்— ஒப்பன்பாற்கருப்பஞ்சாறு-சிறந்தபாலானாலுங்கரும்பினிரசமானாலும்—ஓதனம்- சாதமானாலும்— நுகரில்விரவுபுந்திபற்றாமல்- பொசிக்கில்விரவாநின்றமனமானதுபற்றாமல்— மெய்ம்மையுணர்ந்தோர்- உண்மையையுணர்ந்தவர்கள்— சமமாவார்- சமத்துவததையடைவார்கள்— சிரமங்கரிந்தோர்- சிரசையரிந்தவர்களையும்— சிரந்தந்தோர்- சிரசைக்காத்தவர்களையும்— செறுநரொன்னார்- பகைவரென்று—உறவென்னார்- நட்பென்னார்கள்— உரவுஞானத்தொருநோக்கால்- திடஞானமுள்ளவொப்பற்றபார்வையினால்— உட்குளிர்ந்து- அகமகிழ்ந்து— ஒக்கக்காண்பர்- சமமாய்ப்பார்ப்பார்கள்— (எ-று) - - - - - - - - - - - *

(௬௬)(அ-கை)இ-து (கவி)மூடவிந்தியங்கடமைமோகவிடயநிலைதன்னி,லோடவொட்டாதுரனரெவ்வமொழிந்தபுந்தியாற்றடுப்பர், கேடிலுண்மைபறிந்திளைப்பற்றுணர்வாந் தன்னைக்கிட்டாரை நீடிந்தியங்கள்கெடவருந்துநிலச்சிற்றளிரைமானினம்போல் (இ-ள்) மூடவிந்தியங்கடமை- சடமானபொறிகளை— மோகவிடயநிலைதன்னில்- மோகத்தையுடையவிஷயத்தில்— ஓடவொட்டாது- செல்லாமற்படிக்கு— உரனர்- சத்துக்கள்— எவ்வமொழிந்த- மனத்துன்பமில்லாத— புந்தியாற்றடுப்பர்- அறிவினாற்றடுப்பார்கள்— கேடிலுண்மையறிந்து- நாசமில்லாததத்துவத்தையறிந்து— இளைப்பற்று- மெலிவில்லாமல்— உணர்வாந்தன்னை- ஞானஸ்வரூபமாகியதன்னை— கிட்டாரை- அறியாதமூடர்களை— நீடிந்தியங்கள்- நீண்டபொறிகள்— நிலச்சிற்றளிரை- நிலத்திலுள்ளசிறியதுளிரை— மானினம்போல- மான்கூட்டத்தைப்போல—கெடவருந்தும்- நசிக்கும்படிதின்னும— (எ-று)[இ-௬௧-ம்] அனுபவிதேகவிந்திரியங்களையடக்குந்திரமுரைத்ததாம் - - - - - - - - - *

(௬௭) (அ-கை.)சம்சாரநீக்கமறிவிக்குநிமித்தஞ்சங்கத்தியாகங்கூறல் (கவி) சங்கமடியாப்பொருளுண்டாஞ்சங்கமடியாவாபத்தாஞ், சங்கமடியாவாசைவருஞ்சங்கமடியாப்பிறப்புண்டாஞ், சங்கமறுத்தல்வீடென்பர்சங்கமறுத்தல்பிறப்பறுத்தல், சங்கமறுத்துப்பொருள்களினீ தனிச்சீவனின்முத்தியைப்பெறுவாய். (இ-ள்.)சங்கமடியா- சங்கங்காரணமாக— பொருளுண்டாம்- விடயவஸ்துக்களுண்டாகும்— சங்கமடியா- சங்கங்காரணமாக— ஆபத்தாம்- ஆபத்துண்டாகும்— சங்கமடியா- சங்கங்காரணமாக— ஆசைவரும்- இச்சையுண்டாகும்— சங்கமடியா- .சங்கங்காரணமாக— பிறப்புண்டாம்- சம்சாரமுண்டாகும்— சங்கமறுத்தல்- சங்கத்தைக்கெடுத்தலே— வீடென்பர்- மோக்ஷமென்றுசொல்லுவார்கள்— சங்கமறுத்தல்- சங்கத்தைக்கெடுத்தலே—பிறப்பறுத்தல்- சநநத்தைக்கெடுத்தல்—பொருள்களின்- விடயங்களின்— சங்கமறுத்து- சங்கத்தைக்கெடுத்து—தனிச்சீவனின்முத்தியை- தனிமையானசீவன்முத்தியை— நீபெறுவாய்- ஸ்ரீராமா நீபெறக்கடவாய்— (எ-று) - - - - - *

(௬௮) (அ-கை) விடயசங்கத்தை நீக்குதற்பொருட்டதன்லக்கணமுரைத்தல். (கவி) என்றமுனிவையனைத்தையமென்னும்பனிக்குச்சரற்காலந, துன்றுகடுங்காற்றொப்பாயிச்சங்கமேதுசொல்லென்ற, வென்றியிராமற்கவனுரைப்பான்மிகுயல்பொருள்பாவாபாவத்,தொன்றுமகிழ்வுமொருமைகளையு

றுதன்மலினவாதனையே (இ-ள்) என்றமுலியை-(இப்படி)யென்றுசொல்லியவசிட்டமுனியை— அனைத்தையுமென்னும்பனிக்கு- சகலசந்தேகமென்கின்ற பனிக்கு— சரற்காலம்- சரற்காலத்தின்— துன்றுகடுங்காற்றேப்பாய்- நெருங்கியகடுங்காற்றுக்கிணையானவரே— இச்சங்கமேது- இந்தச்சங்கமென்பதியாது— சொல்லென்ற- சொல்லுமென்றுகேட்ட— வென்றியிராமற்கு- வெற்றியையுடையஸ்ரீராமருக்கு— அவனுரைப்பான்- அந்தமுனிசொல்லுவார்— மிகுபல்பொருள்- மிகுந்தபலவஸ்துக்களின்— பாவாபாவத்து- பாவத்திலுமபாவத்திலும்— ஒன்றும்- பொருந்தாநின்ற— மகிழ்வுபொருமைகளையுறுதல்- விருப்புவெறுப்பையடைதலாகிய—மலினவாதனை- அசுத்தவாதனையாம்—(எ-று) ※

(சுகூ) (அ-கை) மலினவாசனையேவிடயசங்கமெனல் (கவி) சாற்றுமலினவாதனையேசங்கமாஞ்சீவனின்முத்தி, தோற்றுமுடற்குமறுபிறவியின்றியின்பதுன்பங்கண், மாற்றிவிசுத்தவாதனைதான்மருவுஞ்சீவன்முத்தரலா, ஊற்றமடநெஞ்சினர்பிறவியுறுவாதனையின்பெயர்சங்கம் (இ-ள்) சாற்றுமலினவாதனையே- சொல்லுமசுத்தவாதனையே— சங்கமாம்- சங்கமென்பதாம்—சீவனின்முத்திதோற்றும்- சீவன்முத்தியுண்டாகின்ற— உடற்குமறுபிறவியின்றி- சரீரிக்குமறுசநநமில்லாமல்— இன்பதுன்பங்கண்மாற்றி- சுகதுக்கங்களைக்கெடுத்த—விசுத்தவாதனைதான்மருவும்- சுத்தவாசனையானது பொருந்தும்— சீவன்முத்தரலால்- சீவன்முத்தரல்லாது— ஊற்றமடநெஞ்சினர்- திரமானவஞ்ஞான மனமுடையவர்கள்— பிறவியுறுவாதனையின்பெயர்சங்கம்- அசுத்தவாசனையினதுநாமமேசங்கமாம்— (எ-று) - ※

(எ0) (அ-கை) அச்சங்கநீங்குமுபாய முரைத்தல். (கவி) பிரியகூயையிடராதிபீடியா மனிற்றியெனில், விரியுமாசைபயங்கோபமிலனாய்ச்சங்கம்விட்டவனீ சரியதுயராலிளையாதுகலந்தசுகத்தான்மகிழாது, புரியுமாசைவசம்போகாதிருக்கிற்சங்கம்போக்கினை நீ. (இ-ள்) பிரியம்- சந்தோடமும்— அருமை- பொறுமையும்— இடர்- துன்பமும்— ஆதி- முதலாகியவிவைகள்— பீடியாமல்- வருத்தாமல்— நிற்றியெனில்- நிற்பாயாயின்—விரியுமாசை- விரிந்திருக்கின்றவிச்சையும்— பயம்- அச்சமும்— கோபமிலனாய்- குரோதமுமில்லாதவனாய்— நீசங்கம்விட்டவன்- நீயேசங்கத்தைவிட்டவனும்—சரியதுயராலிளையாது- விடமாகியதுக்கத்தினுன்மெலியாமல்—கலந்தசுகத்தான்மகிழாது- கூடினவின்பத்தாற்களிக்காமல்— புரியும்- பந்தப்படுத்துகின்ற— ஆசைவசம்போகாது- இச்சைவசத்திற்செல்லாமல்— இருக்கில்- இருப்பாயாயின்— நீசங்கம்போக்கினை- நீயேசங்கத்தைப்போக்கினவன்— (எ-று) - - ※

(எக)(அ-கை)இ-து (கவி) சம்பத்தாபத்திரண்டினுநீசமமாய்வர்ததனு சரிக்கி,னம்பற்சங்கமகன்றவனீநாளுந்திரள்வத்துவிற்சமமாய், விம்பத்திதயச்சத்துவனாய்மேவும்பகுதித்திறமியற்றி, யிம்பர்ச்சங்கமறுத்தின்பமிசைவாயிராமவெனச்சொன்னான் (இ-ள்) சம்பத்தாபத்திரண்டினும்- சுகதுக்கங்களாகியவிரண்டிலும்— நீசமமாய்- நீசமத்துவனாகி—வந்ததனுசரிக்கின்- வந்ததையனுசரித்தால்— நீநம்பற்சங்கம்- நீயாசையின்பெருக்கமாகியசங்கத்தை— அகன்றவன்- விட்டவன்— நாளும்- எப்பொழுதும்— திரள்வத்துவில்- திரண்டவஸ்த்துக்களில்— சமமாய்- சமத்துவமாக— விம்பத்திதயம்- பிரிதிவிம்பமானவிருதயத்தில— சத்துவனாய- சாத்துவிதகுணத்தையுடையவனாய்— மேவும்பகுதித்திறமியற்றி- வாராநின்றகாரியங்களைச்செய்து— இம்பர்ச்சங்கமறுத்து- இவ்விடத்திலுள்ள திரிஸ்யசங்கத்தியாகஞ்செய்து— இராம- இரகுநாதா— இன்பமிசைவாயென- பிரமாநந்தத்தையடைவாயென்று— சொன்னான்- வசிட்டமுனிசொன்னார்— (எ-று) [இ-ரு-க-ம்] திரிஸ்யமுதற்சம்சாரபரியந்தமானவிடயசங்கத்தைநீக்கிச்சமதிருஷ்டியாற்பிரமாநந்தத்தையடையவேண்டுமென்பதாம் - - - - - - ※

உபசாந்திப்பிரகரணம்முற்றிற்று. ஆ கதை உ அஇ கவிதை (தகூளக)



# புசுண்டன்கதை.



(அ-கை) முற்பிரகரணத்திற்சம்சாரமுதற்சத்தாசாமானியமுடிவின்மேலான துரியாதீதபரியந்தந்தெரிசிப்பித்திதிற்கற்பனையாகத்தோற்றினமனோசகத்தினுபசாந்தத்தைச்சொல்லி, யித்துரியாதீதமேசாக்ஷாத்காரமாகவிளங்குவதையபரோக்ஷமாயறிவிக்குநிமித்தம்பதினைந்துகதைகளினானிறைந்தநிருவாணப்பிரகரணஞ்சொல்லத்தொடங்கிக்காலாதீதமானஞானத்தையும், அஃதுகாரணமாகச்செய்யும்யோகத்தின்விசித்திரத்தையுந்தெரிவிக்கப்புசுண்டன்கதையைநிரூபிக்கிறார் - - - - - - - - ※

(க)(அ-கை)யாதினாற்றிருக்குதிருஷ்டியுண்டாய்த்திரிஸ்யநீங்குமெனின். (கவி) மீட்டுமுரைப்பான்றிசைகாலமறலான்மறைதலறவிளங்கி, யோட்டமிறத்தலடிமுடிவற்றொன்றாயற்வுமாத்திரமா, நாட்டுபிரமமுளவேறொன்றில்லையென்றுள்ளேநாடிக், காட்டுநானென்பதுவிட்டு காயமில்லாப்பெரியோனாய். (இ-ள்) மீட்டுமுரைப்பான்- திரும்பவும்வசிட்டமுனிசொல்லுவார்— திசைகாலமறலால்- திக்குகளுங்காலங்களுமில்லாததால்— மறைதலறவிளங்கி- மறைப்பில்லாமற்பிரகாசித்து— ஓட்டமிறத்தல்- சலனமுமழிவும்— அடிமுடிவற்று- ஆதியந்தமின்றி— ஒன்றாய்- ஏகமாகியும்—அற்வுமாத்திரமாய்- சின்மாத்திரமாகியுமிருக்கின்ற— நாட்டுபிரமமுள- நிலையானபிரமமேயுள்ளது— வேறொன்றில்லையென்று- மற்றொருவஸ்துவுமில்லையென்று—உள்ளேநாடி- அகத்திற்சிந்தித்து—காட்டும்- காணாநின்ற(விடயங்களை)— நானென்பதுவிட்டு- நானென்னு(மசம்பாவத்தை)நீக்கி— காயமில்லா- தேகப்(பிரி)வில்லாத— பெரியோனாய்- சீவன்முத்தனாய்— (எ-று)- - - - - - - - - - - - - ※

(உ) (அ-கை) (இ-து) (கவி) ஏகவுருவாயுபசாந்தமோனமெய்தி நின்னுணர்விற், சோகமற்றசுகி
யாவாய்தொடரஞ்ஞான நினைவெம்மட், டாகும்பிரமபாவனைமேவாதம்மட்டும்புவிவலையிற், போகமய
லெம்மட்டம்மட்டுளமாதியின்கற்பனைபொருந்தும் (இ-ள்) ஏகவுருவாய்- அத்துவிதஸ்வரூபமாய்—
உபசாந்தமோனமெய்தி- உபசாந்தமாகியமௌனத்தையடைந்து— நின்னுணர்வில்- உனதாத்மஞா
னத்தில்— சோகமற்ற- துன்பமிறந்த—சுகியாவாய்- ஆநந்தத்தையடையக்கடவாய்— தொடரஞ்ஞான
நினைவு- தொடரா நின்றவஞ்ஞான நினைப்பு— எம்மட்டுமாகும்- எதுவளவுமாகியிருக்கின்றதோ— அ
ம்மட்டும்- அதுபரியந்தம்— பிரமபாவனைமேவாது- பிரமபாவனையைப்பொருந்தாது— புவிவலையி
ல்- சகச்சாலத்தில்—போகமயலெம்மட்டு- போகப்பிரமையெந்தமட்டுமிருக்கின்றதோ— அம்மட்டும்-
அவ்வளவும்—உளமாதியின்- மனமுதலியவற்றின்—கற்பனைபொருந்தும்- கற்பனைகள்சேரும் (எ-று)

(ரு) (அ-கை) இ-து (கவி) சித்தமாயைமனஞ்சீவனென்றுமில்லைத்திகழ்பிரம, மொத்தவொன்று
ய்ப்பெருங்கடல்போலுகண்டுவளருமுத்தமனே, பொத்தவுடலைநானெனலெம்மட்டுக்காணுமிப்பொ
ருளில், வத்துவெனும்பாவனையெம்மட்டம்மட்டுளமாதியின்மயக்கம் (இ-ள்) சித்தமாயைமனஞ்சீவ
ன்- சித்தமுமாயையுமனமுஞ்சீவனுமாகியவிவைகள்— ஒன்றுமில்லை- ஒன்றாயினுமில்லை— திகழ்பிர
மம்- ப்ரகாசிக்கின்றபிரமமானது— ஒத்தவொன்றாய்- சமத்துவமானவேகமாய்— பெருங்கடல்போ
ல்- மகோததியைப்போல—உத்தமனே- உத்தமனான ஸ்ரீராமா—உகண்டுவளரும்- பொங்கிவளர்ந்துகொ
ண்டிருக்கும்—எம்மட்டும்- எதுபரியந்தம்—பொத்தவுடலை- நவத்துவாரமுள்ளசரீரத்தை—நானென
ல்- நானென்பது—எம்மட்டும்- எதுவரையும்—காணும- காண்கின்ற— இப்பொருளில்- இந்தத்திரிப்ப
யங்களில்—வத்துவெனும்பாவனை- பொருளென்கின்றபாவனையிருக்கின்றதோ— அம்மட்டு- அதுவரை
யும்— உளமாதியின்மயக்கம்- சித்தமுதலானவைகளின் மயக்கமுள்ளதாம்— (எ-று.) - - - ⁕

(சு) (அ-கை) இ-து (கவி) எனதென்னுமாலெம்மட்டம்மட்டுளமாதியின்மயக்க, மனகவுள்
ளேமுகமாகியதனுன்மும்மையுலகென்னுங், கனமிருரும்பைபறிவனலிலோமஞ்செய்யிற்கார்வண்ண ம
னனைமுதலாமயக்கங்களவனுளென்றும்வாராதே (இ-ள்) ஈதெனதென்னும்- இதுவெனதென்கின்ற—
மாலெம்மட்டு- ஆசையெவ்வளவோ— அம்மட்டு- அந்தமட்டும்— உளமாதியின்மயக்கம்- சித்தமுத
லானமயக்கமாம்— அனகவுள்ளேமுகமாகியதனுல்- மாசற்றவகமுகமாயவதனுல்— மும்மையுலகென்னு
ம்- மூன்றுலகமென்கின்ற—கனமிருரும்பை- பளுவில்லாததிரணத்தை— அறிவனலில்- ஞானாக்கினியி
ல்—ஓமஞ்செய்யில்- ஆகுதிசெய்தால்—கார்வண்ண- மேகவண்ணனே— மனனைமுதலாமயக்கங்கள்- சித்
தமுதலானபிரமைகள்— அவனுளென்றும்வாராது- அவனிடத்தெப்போதும்வரமாட்டாது— (எ-று)
[இ-சு-க-ம்] ஒன்றினுலுமறைவுபடாமற்சுயமாய்ப்ரகாசிக்கின்றஞானமேபிரமமென்னுஞ்சுபாவதிரு
ஷ்டியினுற்சுகிக்கிற்பிரமம்ப்ரத்யக்ஷமாயஞ்ஞானமுதலியகற்பனைகள்யாவுங்கெடுமென்பதாம். - ⁕

(ரு) (அ-கை) அவ்வனுபவிக்கடையாளம்யாதெனின் (கவி) படர்சித்துருவாய்ப்பிறிவிலனுய்ப்
பாராபாரம்பற்றிலனுய்த், திடமுற்றுனதுகனவடிவைநினைசங்கற்பஞ்சேராதே, கடனுவுயிர்கொல்லுறு
பகைவன்கருத்தில்வஞ்சமிலாநட்பிற், றொடர்பானவனேயெனக்காணுமவனேகண்டோன் றூய்தாக.
(இ-ள்) படர்சித்துருவாய்- வளராநின்றஞானஸ்வரூபமாய்— பிறிவிலனுய்- அகண்டனுய்— பாரம்- அ
ந்தவரம்பும்—அபாரம்- இந்தவரம்பும்—பற்றிலனுய்- பற்றாதவனுய்— திடமுற்று- திடத்தைப்பொ
ருந்தி—உனதுகனவடிவைநினை- உனதுவியாபகஸ்வரூபத்தைச்சிந்தி— சங்கற்பஞ்சேராது- சங்கற்பத்
தையடையாது—கடனுவுயிர்கொல்லுறு- கடனுகவுயிரைக்கொலைசெய்கின்ற—பகைவன்- சத்துருவை—
கருத்தில்வஞ்சமிலாநட்பில்- மனதில்வஞ்சகமில்லாதசிநேகத்தில்—தொடர்பானவனேயென- உறவான
வனேயென்று—காணுமவனே- பார்ப்பவனே—தூய்தாக- பரிசுத்தமாக—கண்டோன்- (ஆத்மாவைத்)
தரிசித்தவன்— (எ-று.) [இ-ம்] பகையையுறவாகக்காண்பதேகுறியென்பதாம் - - - - - ⁕

(சு) (அ-கை) ஆயினுறவுகூடுமோவெனில் (கவி) வேரினேடுகரையின்மரம்வீழ்க்குநதியைப்போ
னண்புஞ், சீரிலாதமச்சரமுஞ்சிதைத்தோர்மகிழ்வுபொறுமைகளாற், சாருமேதமறுத்தவராந்த னித்தத்
துவநூலுடன்பாவித்,தோருவார்காதலைக்கடிதலுதித்தகதிர்கங்குலையொழித்தல் (இ-ள்) கரையின்மரம்-
கரையிலிருக்கின்றவிருட்சத்தை— வேரினேடு- வேரோடும்— வீழ்க்குநதியைப்போல்- தள்ளுகின்ற
வாற்றைப்போல—நண்பும்- (விடய)விச்சையும்—சீரிலாதமச்சரமும்- நன்மையில்லாதமாச்சரியத்தை
யும்— சிதைத்தோர்- கெடுத்தவர்கள்— மகிழ்வு- மகிழ்ச்சியினுலும்— பொறுமைகளால்- அழுக்காறு
களினுலும்—சாருமேதம்- பொருந்தாநின்றகுற்றத்தை— அறுத்தவராம்- கெடுத்தவராகும்— தனித்
தத்துவநூலுடன்பாவித்து- ஒப்பற்றதத்துவஞானசாஸ்திரங்களையுள்ளேபாவனைசெய்து— ஓருவார்-
(ஆராய்ந்)தறிபவர்கள்— காதலைக்கடிதல்- ஆசையைகெடுத்தல்— உதித்தகதிர்- உதயமானசூரியன்—
கங்குலையொழித்தல்- இருளைக்கெடுத்தலுக்கொப்பாம்— (எ-று) [இ-ம்] பகையையுமுறவையுங்
கெடுக்கிலிச்சாத்யாகம்வருமென்பதாம் - - - - - - - - - - - - - ⁕

(எ) (அ-கை) இச்சாசஞ்சலநீங்குவதெங்ஙனமெனில். (கவி) பற்றத்தகுவாக்கியப்பொருளைப்பயி
றன்னெஞ்சாற்பாவித்தோர்க், குற்றுப்புகல்சொற்றிரளுள்ளேயொடுங்கும்வெந்த நிலநீர்போற், கற்று
ப்பரமப்பொருளைநோக்கார்கண்ணுமறிவைக்கண்டறியார், வற்றத்திரணம்போல் வாளாத்திரிவர்மனச்செ
ய்கையிலெவரும் (இ-ள்) பற்றத்தகு- பிடிக்கத்தகுந்த —வாக்கியப்பொருளை- (ஆப்த்த) வாக்கியார்த்த
த்தை— பயிறன்னெஞ்சால்- சொல்லப்பட்டதன்மனதினுல்— பாவித்தோர்க்கு- பாவனைசெய்தவர்
களுக்கு—உற்றுப்புகல்- பொருந்திச்சொல்லுகின்ற— சொற்றிரள்- வாக்கியசமுகங்கள்—வெந்தநில
நீர்போல்- வெந்தபூமியின்சலத்தைப்போல— உள்ளொடுங்கும்- மனதிலடங்கும்— கற்று- அப்பியா
சித்து— பரமப்பொருள்- பிரமவஸ்துவை— நோக்கார்- தரிசியாதவர்கள் —கண்ணுமறிவை- கண்ணாகிய

ஞானத்தை—கண்டறியார்- தரிசியாதவர்கள்— எவருமனச்செய்கையில்-யாவருமனோவிருத்தியில்— வற்
றத்திரணம்போல்வாளா திரிவர்- உலர்ந்ததுரும்புபோலவீணாகச்சுழலுவார்கள்— (எ-று)[இ-ம்] மகாவா
க்கியார்த்தங்களைக்குருமுகமாய்விசாரிக்கின்ஞானமுதித்துமனோசஞ்சலநீங்குமென்பதாம். - - ✻

(அ) (அ-கை) யாவருமேன்விசாரணைசெய்யவில்லையெனில் (கவி) இனையயாருமிந்தவறிவிறவா
திருக்கவீதறிய, வினையமின்றிமிகச்சோர்ந்தார்வீணர் செருக்குமிகுமுரப்பு, முனையில்வின்னுணோசை
யைப்போன்மூடர்கேட்ப திறப்பதற்கே, யனையர்வீணாட்கழிப்பதலாலறியாவறிவையறியாரே (இ-ள்)
இனையயாரும்- இப்படிப்பட்டசகலரும்— இந்தவறிவு- இந்தஞானம்— இறவாதிருக்க- கெடாமலி
ருக்க— ஈதறியவினையமின்றி- இதையறியக்கருத்தில்லாமல்—.மிகச்சோர்ந்தார்-மிகவும்வாடினார்கள்—
வீணர்செருக்கும்- வீணர்களுடையமமதையும்— மிகுமுரப்பும்-மிகுந்தவதட்டுதலும்—முனையில்-
யுத்தகளத்தில்— வின்னுணோசையைப்போல்- விற்கயிற்றின்ஞெணியைப்போல— மூடர்- மூடர்களி
டத்தில்— இறப்பதற்குக்கேட்பது-கெடுதற்குக்கேட்கின்றது—அனையர்வீணாட்கழிப்பதலால்-அம்மூ
டர்கள்வீணாக(வாழுங்)காலத்தைக்கழிப்பதேயன்றி— அழியாவறிவையறியார்- கெடாதஞானத்தையுண
ரார்கள்—(எ-று) [இ-ம்] அறிவுப்ரத்யக்ஷமாயிருந்துமறியாமையால் விசாரிக்கவில்லையென்பதாம். ✻

(கூ) (அ-கை) ஆசிரியரறியாமையை நீக்கலாமேவெனின். (கவி) ஆயமூடர்க்களித்தபொருளா
ளற்றில்வீழ்ந்தபொருளொக்குந், தீயவரோடுரைத்தவுரைசேணைநோக்கிநாய்குரைத்தல், மேயமட
மாபத்திடமெய்ம்மையுணரார்க்கெவ்வாபத், தேயவணுகாதிம்மாயையெழுவதறிவிலோர்க்கருளால்.
(இ-ள்) ஆயமூடர்க்கு- அப்படிபானமூடர்களுக்கு—அளித்தபொருள்-கொடுத்த(வாக்கி)யார்த்தம்—
அளற்றில்வீழ்ந்த- சேற்றில்விழுந்த— பொருளொக்கும்- வஸ்துவுக்குச்சமானமாகும்— தீயவரோ
டு- தீமையையுடையவர்களுக்கு— உரைத்தவுரை- சொல்லியவாக்கியம்— சேணைநோக்கி- ஆகாயத்
தைப்பார்த்து— நாய்குரைத்தல்- ஞாளிகுலைத்தலாம்—மேயமடம்- பொருந்தியவஞ்ஞானம்— ஆப
த்திடம்- ஆபத்திற்காதாரமாம்— மெய்ம்மையுணரார்க்கு- உண்மையையறியாதவர்களுக்கு— எவ்
வாபத்து- எந்தவாபத்து— ஏயவணுகாது- பொருந்தவரமாட்டாது— இம்மாயை- இந்தமாயையா
னது— அறிவிலோர்க்கு- அறிவில்லாதவர்களுக்கு— அருளால்- கிருபையினால்— எழுவது- உண்டா
குவதாம்— (எ-று) [இ-ம்] விவேகமின்மையாற்போதித்தும்பயன்படாவென்பதாம். - - - - ✻

(ய) (அ-கை) விவேகாவிவேகியிலக்கணம்யாதெனில் (கவி) மெல்லிதாகிக்குளப்படியாய்விவேக
புந்திக்காமுலக, மல்லவாகிக்கனைகாணாவாழமாகுமறிவில்லோர்க், கெல்லையிலதாயறிபொருளாலெண்
ணப்படாதாய்ச்சாந்தமுமாய்ச், சொல்லுமெல்லாமாய்நினைவுதோன்றாச்சற்சிற்சுகமுண்டாம். (இ-ள்)
உலகம்- சகமானது— விவேகபுந்திக்கு- ஞானிகளறிவுக்கு— மெல்லிதாகி- அற்பமானதாய்— குளப்
படியாம்- (பசுவின்) குளப்படியாகவாம்—அறிவில்லோர்க்கு-அஞ்ஞானிகளுக்கு—அல்லவாகி- துன்ப
மாய்— கனைகாணாவாழமாகும்- கரைகாணாதவாழமாம்— எல்லையிலதாய்- அளவில்லாததாயும்— அறி
பொருளால்- விடயங்களினால்—எண்ணப்படாதாய்- எண்ணுதற்கரிதாயும்— சாந்தமுமாய்-உபசாந்
தமாயும்—சொல்லுமெல்லாமாய்-சொல்லப்பட்டசகலமுமாயும்— நினைவுதோன்றா- நினைவுதோற்றாத
தாயுமிருக்கின்ற—சற்சிற்சுகமுண்டாம்-சச்சிதாநந்தஸ்வரூபமேயுண்டாயிருக்கும்(எ-று) [இ-ம்]இச்
சகஅவிவேகிக்ககண்டமாயும்விவேகிகளுக்கற்பமாயுஞ் சச்சிதாநந்தமாயும்விளங்குமென்பதாம் - - ✻

(யக) (அ-கை) இச்சகத்துண்டாகுங்கிரமமியாதெனில் (கவி) சான்றவதினின்றோ ரறிவுதானே
விகாரவுருவாகித், தோன்றி நுண்மைமத்தியமேதூலமென்றுங்கற்பிக்க, மூன்றுவகையாய்ச் சாத்வித
ராசததாமதமுக்குணமாகு, மூன்றுவகையாம்பகுதி பலவுயிர்க்கும்பிறவிதருமிதுவே. (இ-ள்) சான்
றவதினின்று- சாட்சியானவச்சச்சிதாநந்தத்திலிருந்து— ஓரறிவு- ஓர்போதமானது— தானேவிகாரவு
ருவாகி- தானேவிகாரவடிவமாய்— தோன்றி- உண்டாகி— நுண்மை- சூட்சுமமென்றும்— மத்திய
ம்- நடுவென்றும்— தூலமென்றும்- தூலமென்றும்—மூன்றுவகையாய்க்கற்பிக்க- மூன்றுவிதமாயு
ண்டாக்க— சாத்விதம்- சத்துவமென்றும்— ராசதம்- இராசதமென்றும்— தாமசம்- தாமசமென்
றும்— முக்குணமாகும்- மூன்றுகுணமாகும்— பலவுயிர்க்கும்- அநேகசீவர்களுக்கும்— ஊன்று-
சார்ந்த—மூன்றுவகையாமபகுதி- இம்மூன்றுவிதமானவவித்தையான— இதுவே- இதுதானே—பிற
விதரும்-சநநத்தைக்கொடுக்கும்—(எ-று) - - - - - - - - - - - - - ✻

(யஉ) (அ-கை) இ-து. (கவி) இதனின்முடிவேபரமபதமியன்முக்குணமுமும்மூன்று, விதமதா
யொன்பதுகூறும்விரிந்தவவிஞ்சைக்குணவடிவே, சிதறுமிதிற்சத்துவக்கூறுதிரண்டவிருடிமுனிசித்த,ர
திகநாகர்விஞ்சையர்களண்டர்முதலாநல்லுயிர்கள் (இ-ள்) இதனின்முடிவே- இந்தவவித்தையினுச்
மே— பரமபதம்- பிரமபதமாகும்— விரிந்தவவிஞ்சை- மிகுந்தவவித்தையினது—குணவடிவே-கு
ணரூபமேயாம்— இயன்முக்குணமும்- இயல்பாகியமூன்றுகுணமும்— மும்மூன்றுவிதமதாய்-(ஒவ்
வொன்று)மும்மூன்றுவிதமாக— ஒன்பதுகூறும்- ஒன்பதுபங்காகும்—சிதறுமிதில்- சிதறுநின்றவிந்
தவவித்தையில்— சத்துவக்கூறு- சாத்துவிதத்தின்பங்கு— திரண்டவிருடி- கூட்டமாயிருக்கின்றவிரு
டிகளும்— முனிசித்தர்- முனிகளுஞ்சித்தர்களும்—அதிகநாகர்- மிகுந்தநாகர்களும்—விஞ்சையர்கள்-
வித்தியாதரர்களும்—அண்டர்முதலாநல்லுயிர்கள்- தேவர்கள்முதலியநன்மையானசீவர்களாம்(எ-று)✻

(யங) (அ-கை) இ-து (கவி) ஓதுமிச்சாத்திகக்கூற்றிலுறுதாமதம்விஞ்சையர்நாகர், பேதமுறுரா
சதமாகும்பிறந்தமுனிவர்சித்தரெலாந், தீதிலாதசத்துவமார்தேவர்சிவனைமுதலோரா, மீதவிஞ்சைப்
பயில்கூற்றினடையேவிஞ்சைத்திரடடைந்த (இ-ள்) ஓதும- (முன்)சொல்லப்பட்ட—இச்சாத்திகக்கூ
ற்றின்-இந்தச்சாத்தீகத்தினபங்கில்—உறுதாமதம்-பொருந்துகின்றதாமதத்தின்பங்கு—விஞ்சையர்நா
கர்- வித்தியாதரருநாகர்களுமாம்—பேதமுறு- பேதம்பொருந்திய—ராசதம்- இராசதத்தின்பங்கு—

பிறந்தமுனிவர்சித்தரெலாம்- உண்டானமுனிவர்களுஞ்சித்தர்களெனவருமாம்— தீதலாதசத்துவம்- கு
ற்றமற்றசாத்துவிதத்தின்பங்கு—தேவர்சிவனே முதலோராம்- தேவானசிவன்முதலானவர்களும்—ஈத
விஞ்ஞை- இதுவவித்தையின்— பயில்கூற்றினிடை- சொல்லப்பட்டபங்கினிடத்தில்— விஞ்ஞைத்திற
மடைந்த- வித்தையின்றன்மையடைந்தனவாம்— (எ-று) - - - - - - - - - - - *

(௰௪) (அ-கை) இ-து (கவி) ஆசில்சுத்தசத்துவமாமவிஞ்ஞைக்கூறுவிஞ்ஞையெனப்,பேசுமதுவா
மிராசதமும்பிரிதாமதமுமும்மூன்ருய், வீசுசிருட்டியுடைத்தென்பர்மிகுதாமதஞ்சேர்புந்தியர்க்கு, நீ
சமரந்தாபரமாதிநிறையஞ்ஞானவுடல்பெறுமே (இ-ள்.) ஆசில்சுத்தசத்துவமாம்- குற்றமற்றசுத்தசா
த்துவிதகுணமான— அவிஞ்ஞைக்கூறு- அவ்வித்தையின்பங்கு— விஞ்ஞையெனப்பேசுமதுவாம்- வித்
தையென்றுசொல்லப்பட்டதுவாம்— இராசதமும்- இராசதகுணமும்— பிரிதாமதமும்- பிரிந்ததா
மதகுணமும்— மும்மூன்ருய்- மூன்றுமூன்ருக— வீசுசிருட்டி- வீசாநின்றசிருஷ்டியை— உடை
த்தென்பர்- உடையதென்றுசொல்லுவார்கள்— மிகுதாமதஞ்சேர்- மிகுந்ததாமதத்தையுடைய—புத்
தியர்க்கு- புத்தியையுடையவர்களுக்கு— நீசமரந்தாபரமாதி- இழிவானவிருக்ஷமுதலிய— நிறையஞ்
ஞானவுடல்பெறும்- நிறைந்த வஞ்ஞானசரீரத்தைப் பெறும்— (எ-று) [இ-ச-க-ம்] சைதன்யத்தி
லோர்ஸ்புரணமுண்டாக வப்போதறிவறியாமைகட்டி யதின் மூன்றுகுணமுண்டா யதின்வித்தையின்
சுத்தசத்துவத்தின் சிவன்முதலியவிஸ்வரர்களும் அவித்தையின்சத்துவத்திலிருடிமுதலியசீவர்களு மத
னிராசசத்தின் முனிவர்முதலியோருமதன்ருமதத்தி னரகர்முதலியோரு மிராசசதாமசமாறிற்றத்து
வங்களுந்தாமதத்திற்ருமதந்தாபரவுடல்களுமாயுண்டாமென்பதாம் - - - - - - - - - *

(௰௫) (அ-கை) அறிவுதருவாபஞ்ஞானமிகுந்ததெங்ஙனமெனி னதற்குத்தரங்கூறல். (கவி )என
வோதலுந்தாபரமாதியாக்கைமேவியஞ்ஞானங், கனமாயிருப்பதெங்ஙனெனக் கரியோன்கேட்பமுனி
சொல்வான்,ன்மனனமின்மைதானற்றுமனனமற்றுண்டில்லையென,வினவுதடத்தமெனுமுருவைமேவி
நிற்குமிவ்வறிவே (இ-ள்) எனவோதலும்-(இப்படி)யென்றுவசிட்டமுனிசொல்லவும்— தாபரமாதி-
விருக்ஷமுதலாகிய— ஆக்கைமேவி- சரீரத்தைப்பொருந்தி— அஞ்ஞானங்கனமாயிருப்பது- (அறிவு)
அஞ்ஞானமிகுந்திருப்பது— எங்ஙனென- எப்படியென்று— கரியோன்கேட்ப- மேகநிறத்தையு
டையஸ்ரீராமர்கேட்க— முனிசொல்வார்- வசிட்டமுனிசொல்லுவார்— மனனமின்மைதானற்று- மன
னமில்லாததுமிறந்து— மனனமற்று- மனனமுமிறந்து— உண்டில்லையென- சத்தசத்தென்ன—வின
வு- சொல்லாநின்ற— தடத்தமெனுமுருவை- மத்தியகதமென்கின்ற (மூர்க்க) வடிவத்தை— இவ்வ
றிவு- இந்தவறிவு— மேவிநிற்கும்- பொருந்தியிருக்கும்— (எ-று) - - - - - - - *

(௰௬) (அ-கை.) இ-து. (கவி ) சொன்னவறிவுதாவரத்திற்றுயில்செய்புரியட்டகமுளதா, யின்ன
லின்றியூமைகுருடென்னலாகிச்சடம்போலாய், முன்னுசத்தாமாத்திரத்தினிற்குமென்ற முனிவரனை
ப், பின்னுமிராமனன்பினெடும்பேணியிதுதான்வினவிடுவான் (இ-ள்) சொன்னவறிவு- முன்சொல்லி
யஞானமானது—தாவரத்தில்- விருக்ஷத்தில்—துயில்செய்- நித்திரைசெய்கின்ற— புரியட்டகமுளதா-
புரியட்டக (சரீர) முள்ளதாக— இன்னலின்றி- துன்பமில்லாமல்—ஊமைகுருடென்னலாகி- ஊமை
யன்குருடனென்றுசொல்லுவதாய்— சடம்போலாய்- சடத்தைப்போலாகி— முன்னுசத்தாமாத்திர
த்தில்- நினைக்கின்றசத்தாமாத்திரத்தினல்— நிற்குமென்றமுனிவரனை- இருக்குமென்று சொல்லியவ
சிஷ்டமுனியை— பின்னுமிராமன்- திரும்பவுமிராமரானவர்— அன்பினெடும்பேணி- அன்புடன்வி
ரும்பி—இதுதான்வினவிடுவான்- இதைக்கேட்பார்—(எ-று) [இ-உ-க-ம] அறிவுதன்னையறியாமை
யாலஞ்ஞானமயமா யதற்கடுத்தவிருக்ஷவடிவம்பெற்றுச்சத்திலிருந்ததென்பதாம் - - - - *

(௰௭) (அ-கை.) சத்திலறிவடங்கித்தாபரமாயிருத்தலினதுவேசீவன்முத்தனுமெனிலதற்குத்தரங்
கூறல். (கவி ) சத்தையொருமையாய்ப்போதந்தாபரங்கடனினிற்கி, வித்தைமுத்தியெனநினைகேனென்
னமுனிவனிதற்கிசைப்பான், புத்தியாலேயிதுநாடிப்பொய்யில்பொருளின்காட்சியினு, லொத்தசத்
தாசாமானியத்தையுணர்தலுறுதலுயர்முத்தி (இ-ள் )சத்தையொருமையாய்- சத்தையினெற்றுமையா
ச— போதம்- ஞானமானது— தாபரங்கடனினிற்கில்- தாபரங்களினின்ருல்— இத்தைமுத்தியென-
இதைமோக்ஷமென்று— நினைகேனென்ன- நினைக்கின்றேனென்றிராமன்சொல்ல— முனிவன்- வசி
ட்டமுனியானவர்— இதற்கிசைப்பான்- இதற்குச்சொல்லுவார்— புத்தியால்- அறிவினல்— இதுநா
டி- இந்தச்(சகத்தை)விசாரணைசெய்து—பொய்யில்பொருளின்- நித்தியவஸ்துவினது—காட்சியினல்-
தரிசனத்தினல்— ஒத்தசத்தாசாமானியத்தை- பொருந்தினசத்தாசாமானியபதத்தை— உணர்தலுறுத
ல்- அறிதலையடைதல்— உயர்முத்தி- மேலானமோக்ஷமாம்— (எ-று) - - - - - - - *

(௰௮) (அ-கை ) இ-து (கவி) கொத்தாகியவாதனைமுற்றுங்குறிக்கொண்டறிந்துகைவிட்டு, சத்தா
சாமானியவடிவமானுற்றனிவீடதுவென்ப, வொத்தாரியரோடுசாவியுநூலுணர்ந்துமுணர்வொன்றையு
ம்பாவித், தத்தாற்சத்தாசாமானியந்தானுகுமாகுமதுவீடே (இ-ள் )கொத்தாகியவாதனைமுற்றும்- திர
ளானவாசனைகண்முழுதையும்— குறிக்கொண்டறிந்துகைவிட்டு- குறிப்பாகவறிந்துநீக்கி— சத்தாசா
மானியவடிவமானுல்- சத்தாசாமானியஸ்வரூபமானுல்—அதுதனிவீடென்பர்- அதுவேதனித்தமோக்ஷ
மென்றுசொல்லுவார்கள்—ஒத்தாரியரோடு- பொருந்தியவாசாரியருடன்—உசாவியும்- ஆராய்ந்தும்—
நூலுணர்ந்தும்-(ஞான)நூலையறிந்தும்—உணர்வொன்றையும்பாவித்து- ஆத்மஞானமொன்றைமாத்
தூரஞ்சிந்தித்து— அத்தால்- அதனுல்— சத்தாசாமானியந்தானுகும்- சத்தாசாமானியமேதானுகும்—
ஆகுமதுவீடே-(அப்படி)யானதுவேமோக்ஷமாம்(எ-று)[இ-உ-க-ம்] வாசனைநீங்கிச் சுருதிகுருசுவா
னுபவத்தினலாத்மஞானத்தையறிந்ததுசத்திலயிக்கியமாய்விளங்குமாயினதுவே முத்தியென்பதாம் *

(௰௯) (அ-கை.) இவ்வறிவுவாசனையோடுமடங்கினிற்றலிற்பவமுண்டாமெனல். (கவி.) துயிலையு

ள்ளேயுறுமந்தமாகும்விதையூடுறுமுளைபோற், பயில்வாதனைகள்சுழுத்தியதாம் படருஞ்சென்மம்பல கொடுக்குஞ், செயிர்செய்மனனமுள்ளிறந்துசெறிவாதனைகடுயில்சுழுத்தி, குயிலின்சடமாந்திறத்தாலேகொடியபிறவித்துயரளிக்கும். (இ-ள்) விதையூடுறு- வித்துக்குள்ளடங்கிய— முளைபோல்- அங்குரத்தைப்போல— பயில்வாதனைகள்- சொல்லப்பட்டவாசனைகளானவை— உள்ளேதுயிலையுறும்- அசுத்திநித்திரையைப்பொருந்தும்— மந்தமாகும்- மந்தமாம்— சுழுத்தியதாம்- (அதுவே) சுழுத்தியவத்தையுமாம்— படரும்பலசன்மங்கொடுக்கும்- வளராநின்றவநேகசநநங்களைத்தரும்— செயிர்செய்- குற்றஞ்செய்கின்ற— மனனமுள்ளிறந்து- சிந்தனையானதுள்ளேயிறந்து— செறிவாதனைகள்- மிகுந்தவாசனைகள்— துயில்சுழுத்தி- நித்திரையானசுழுத்தியவத்தையில்—குயிலுஞ்சடமாந்திறத்தால்- சொல்லாநின்றசடமா (யடங்கும்) காரணத்தினல்— கொடியபிறவித்துயரளிக்கும்- கொடியசநநதுன்பத்தைக்கொடுக்கும்—(எ-று) - - - - - - - - - - - - - - - *

(உ0) (அ-கை) இ-து (கவி) தாவரங்களிவையெல்லாஞ்சடமாந்திறமாஞ்சுழுத்தியினை, மேவலுற்றுமேன்மேலும்பிறத்தற்குரித்தாம்விதைகளிலே, பூவுமண்ணினுட்கடமும் பொருந்துமதுபோலங்கவற்றி, லோவதில்லவாதனைகளுறுதாவரங்களிடை நிற்கும் (இ-ள்) தாவரங்களிவையெல்லாம்- விருக்ஷங்கண்முதலியவிவைகளியாவும்— சடமாந்திறமாம்- சடத்தன்மையுள்ளதாம்— சுழுத்தியினை- சுழுத்தியை— மேவலுற்றும்- அடைந்தும்— மேன்மேலும்- மேலுமேலும்— பிறத்தற்குரித்தாம்- செனித்தற்குரியதாகும்— விதைகளிலேபூவும்- வித்துகளிற்புட்பமும்— மண்ணினுட்கடமும்- மண்ணுக்குட்கடமும்— பொருந்துமதுபோல்- பொருந்துவதைப்போல— ஆங்கவற்றில்- அவ்விடத்தவைகளில்— ஓவதில்லாவாதனைகள்- ஒழிவில்லாதவாசனைகள்— உறுதாவரங்களிடைநிற்கும்- பொருந்தியவிருக்ஷங்களிடத்திலிருக்கும்—(எ-று) - - - - - - - - - - - - - - - *

(உக) (அ-கை) இ-து. (கவி) அகல்வாதனையின்வித்தானவந்தச்சுழுத்திவீடளியாப், புகல்வித்தல்லாவாதனையேதுரியம்பொன்றுவீடளிக்கு, மிகல்வாதனைதீகடனேய்நஞ்சிறைஞ்சார்கோபநேயமிவை, மிகவேண்டாஞ்சற்றுனு மிக்கவருத்தஞ்செய்திடுமே. (இ-ள்) அகல்வாதனையின்வித்தான- விசாலம்பொருந்தியவாசனையின் விதையாகிய— அந்தச்சுழுத்தி- அச்சுழுத்தியானது— வீடளியா- மோக்ஷத்தைக்கொடாது—புகல்வித்தல்லா- சொல்லாநின்றவிதையல்லாத—வாதனையேதுரியம்- (சுத்த)வாசனையேதுரியமாகும்— பொன்றுவீடளிக்கும்- கெடாதமோக்ஷத்தைக்கொடுக்கும்— இகல்வாதனை- பகையான(வசுத்த)வாசனையும்—தீ- தீயும்—கடன்- கடனும்—நோய்- வியாதியும்—நஞ்சு- விடமும்—இறைஞ்சார்- சத்துருவும்— கோபம்- கோபமும்— நேயம்- அன்புமாகிய— இவைமிகவேண்டாம்- இவைகணிரம்பவும்வேண்டியதில்லை— சற்றுனும்- கொஞ்சமானுலும்—மிக்கவருத்தஞ்செய்திடும்- மிகுந்தவருத்தத்தைக்கொடுக்கும்— (எ-று) [இ-ங-க-ம்] அறிவானது முன்புள்ளவிடயவாசனையோடுஞ்சுழுத்தியிலடங்கிநின்று வெளிப்படிற்பவமாதலாலச் சுழுத்தியிலடங்கியிருக்கும் அசுத்தவாசனையைநீக்கித்துரியமாகவிளக்கிடின்முத்தியேயாமன்றியிஃதாகாவென்பதாம் - - - - - - - *

(உஉ) (அ-கை) சுயஞ்சித்தாய் விளங்கியவறிவைத்தரிசிக்கவேண்டுமெனல். (கவி) தடைவாதனையின்விதைசுட்டுச்சத்தாசாமானியரூப, முடையோரரனேர்க்குடலிருந்துமொழிந்தும்பின்னைத்துயரணுகா, வடைசிற்சத்திவாதனைவித்துருவாந்துயிலேயதற்கியல்பாங், கடையிலறிவைக்காணுமை யவிஞ்சையென்பர்கலைவல்லோர் (இ-ள்) தடைவாதனையின்- அசுத்தவாசனையின்— விதைசுட்டு- வித்தாகியவஞ்ஞானத்தையெரித்து— சத்தாசாமானியரூபம்- சத்தாசாமானியவடிவத்தை—உடையோரானேர்க்கு- உடைத்தானவர்களுக்கு— உடலிருந்தும்- சரீரமிருந்தும்— ஒழிந்தும்- நீங்கியும்— பின்னைத்துயரணுகா- பின்புதுன்பநெருங்காது— அடைசிற்சத்தி- அடையாநின்றசிற்சத்தியானது— வாதனை- வாசனுரூபமும்— வித்துருவாம்- (அதன்)வித்தாகிய (வஞ்ஞான) வுருவமுமாம்—துயிலே- நித்திரையே— அதற்கியல்பாம்- அச்சிற்சத்திக்கியல்பாகும்— கடையில்- முடிவில்லாத— அறிவைக்காணுமை- ஞானத்தைத்தரிசியாததே— கலைவல்லோர்- கலைஞானத்தில்வல்லமையையுடையசத்துக்கள்— அவிஞ்சையென்பர்- அவித்தையென்றுசொல்லுவார்கள்— (எ-று) - - - - - - - - - - *

(உ௩) (அ-கை) அவித்தையைக்கெடுக்குமுபாயமுரைத்தல் (கவி) அவிஞ்சைதன்னின்முதற்கூற்றையற்கூற்றிரண்டுமோருணர்வாற், றவிர்ந்துபோமட்டுஞ்சுட்டுச்சலனமின்றியொன்றுவாய் நிவந்தபிரமமிதுவல்லவென்னுமறுதிநீடவிஞ்சை, யுவந்தபிரமமிதுவென்னுமறுதியவிஞ்சை யொழிந்ததுவே. (இ-ள்) அவிஞ்சைதன்னின்- அவித்தையினது— முதற்கூற்றால்- முதலிலுள்ளசத்துவப்பங்கினுல்— அயற்கூற்றிரண்டும்- அடுத்தவிராசசதாமசமென்னுமிரண்டுபங்கையும்— ஒருணர்வால்- ஒப்பற்றஞானத்தினுல்— தவிர்ந்துபோமட்டுஞ்சுட்டு- ஒழிந்துபோமளவுமெரித்து—சலனமின்றியொன்றுவாய்- சஞ்சலமில்லாமலேகமாவாய்— நிவந்தபிரமம்- உயர்வுள்ளபிரமமானது— இதுவல்லவென்னுமறுதி- இச்சகமல்லவென்கின்ற நிச்சயமே— நீடவிஞ்சை- நீண்டவவித்தையாம்— உவந்தபிரமமிதுவென்னுமறுதி- மகிழ்ந்தபிரமமேயிச்சகத்தென்னு நிச்சயமே— அவிஞ்சையொழிந்ததுவே- அவித்தையொழிந்தவீடாம்— (எ-று.) [இ-உ-க-ம்] வாசனையைக்கெடுத்துச் சர்வம்பிரமமயமென்னு மனுபவத்தினுலஞ்ஞானங்கெடுமென்பதாம் - - - - - - - - - - - - - - - *

(உச) (அ-கை) விருக்ஷத்தின்சுழுத்தியனுபவத்தைநீக்கிச்சிவன்முதலியோர்ஸ்வானுபவத்தைத்தரிசிப்பித்ததன்மயமாக்கத்தொடங்கல். (கவி) நக்கன்முதலாந்தேவர்க்குநாரதாதியிருடிகட்கு, மிக்கநிமலவிதயத்தின்மேவுமறுதியுனக்குறுகத், தக்ககுமராவெனுமுன்னைச்சங்கராதியென்றவிவர், துக்கமேவாநிச்சயமென்சொல்வாயென்னமுனிசொல்வான். (இ-ள்) நக்கன்முதலாந்தேவர்க்கும- சிவன்முதலாகியதேவர்களுக்கும்— நாரதாதியிருடிகட்கும்- நாரதர்முதலியவிருடிகளுக்கும்—மிக்கநிமலவிதயத்தில்-

மேலாகிய நின்மலமனதில்— மேவுமறுதி- பொருந்தா நின்ற நிச்சயமானது— தக்ககுமரா- தகுந்த
(பெருமையையுடைய) குழந்தாய்— உனக்குறுக- உனக்குப்பொருந்தக்கடவது— எனுமுனியை-
என்றருளியவசிட்டமுனியை— சங்கராதியென்றவிவர்- சங்கரர்முதலாகச்சொல்லப்பட்டவிவர்கள்—
துக்கமேவா- துன்பத்தைப்பொருந்தாத— நிச்சயமென்- நிலையென்ன— சொல்வாயென்ன- சொ
ல்லுவாயென்று (ஸ்ரீராமன்) கேட்க— முனிசொல்வான்- வசிட்டமுனிசொல்லுவார்— (எ-று) - *

(உரு) (அ-கை) அவர்கணிச்சயஞ்சர்வம்பிரமமயமாயிருத்தல் (கவி) இஞ்சிலாகிவிரிந்துசகத்திர
ளாய்க்கிளைத்தவிவையெல்லாம், விஞ்சுபிரமமேயறிவுபிரமமேதினிப்பிரமம், பஞ்சபூதம்பிரமநாம்பிர
மநமதுபகைபிரமந், தஞ்சநட்புக்கிளைபிரமஞ் சங்கராதி நிச்சயமே (இ-ள்) இஞ்சிலாகி- அற்பமாகி
யும்— விரிந்து- விஸ்தாரமாகியும்—சகத்திரளாய்-உலகத்தின்கூட்டமாகி— கிளைத்தவிவையெல்லாம்-
உண்டானவிச்சகலமும்— விஞ்சுபிரமமே- களங்கமற்றபிரமமாம்— அறிவுபிரமமே- ஞானமும்பிர
மமே— மேதினிபிரமம்- உலகமும்பிரமமாம்— பஞ்சபூதம்பிரமம்- ஐந்துபூதமும்பிரமமாம—நா
ம்பிரமம்- யாமும்பிரமமாம்— நமதுபகைபிரமம்- நமதுசத்துருபிரமமாம்— தஞ்சநட்புக்கிளைபி
ரமம்- பெருமைபொருந்தியசினேகிதருஞ்சுற்றத்தாரும்பிரமமா (மென்பது)— சங்கராதிநிச்சயம்-
சங்கரர்முதலானவர்கள்சித்தாந்தம்— (எ-று) - - - - - - - - - *

(உசா) (அ-கை.) மற்றுள்ளவறிஞர்களுக்குஞ்சகத்துபிரமாநந்தமாய்விளங்குமெனல் (கவி) அறி
ஞர்க்குலகாநந்தமயமறியாதவருக்கிடர்மயமாஞ், செறிர்தவிருளாமந்தகர்க்குச்செங்கணுள்ளோர்க்கொ
ளியாகும், பிறிவில்பிரமமனைத்துமென நாடிற்பிரமமவனேயா, நறியவமுதுண்டவனமுத மயத்தைந
ண்ணுதிரானன்றே (இ-ள்) உலகு- சகமானது—அந்தகர்க்கு- குருடர்க்கு—செறிந்தவிருளாம்-மிகு
ந்தவிருளாகவும்—செங்கணுள்ளோர்க்கு-செம்மையாகியகண்ணுள்ளவர்களுக்கு—ஒளியாகும்- ப்ரகா
சமாகவு(மிருப்பதுபோல)—அறிஞர்க்கு- ஞானிகளுக்கு—ஆநந்தமயம்- ஆநந்தஸ்வரூபமாகவும்—அ
றியாதவருக்கு- அஞ்ஞானிகளுக்கு—இடர்மயமாம்- துன்பரூபமாகவுமிருக்கும்—அனைத்தும்-சகலமு
ம்— பிறிவில்பிரமமெனநாடில்- பிறிவில்லாதபிரமமென்றுசிந்திக்கில்— அவனேபிரமமாம்- அவனே
பிரமஸ்வரூபமாவன்— நறியவமுதுண்டவன்-நல்லவமுதத்தைப்புசித்தவன்—அமுதமயத்தை- அமுத
ஸ்வரூபத்தை— நண்ணுதிரான்- அடையாதிரான்— (எ-று) - - - - - - - - *

(உஎ) (அ-கை) யாவருக்குஞ்சுயஞ்சித்தேபிரமமென்பதனுபவமாமெனல் (கவி) எறிபேரொளி
மாத்திரமமலமெவர்க்குமுணர்வெங்கணுமுளது, பிறியாவுபசாந்தச்சித்துப் பிரமமென்பதனுபவமா,
நெறிபோமறியாவொருவனைநெஞ்சன்றிநோக்கிலெத்தோற்றஞ், செறிவாமஃதெங்கணுமுளதாஞ்சி
த்தாம்பிரமமாகின்றேம் (இ-ள்) எறிபேரொளிமாத்திரம்- வீசாநின்றசுயம்ப்ரகாசமட்டுமே— அம
லம்- நின்மலமாம்— எவர்க்கும்- யாவருக்கும்— உணர்வு- அறிவானது— எங்கணுமுளது- எவ்விட
த்திலுமுண்டாயிருக்கின்றது—பிறியாவுபசாந்தச்சித்து- நீங்காதவுபசாந்தஞானம்— பிரமமென்பது-
பிரமமென்கின்றது— அனுபவமாம்- ப்ரத்யக்ஷமாகும்— நெறிபோம்- வழியிற்செல்லுகின்ற—
அறியாவொருவனை- தெரியாதவொருபுருடனை— நெஞ்சன்றிநோக்கில்- மனதில்லாம (னேத்திரத்தி
னுற்)பார்க்கில்—எத்தோற்றம்-(அவ்விடத்தி)லெந்தத்தெரிவு—செறிவாம்- நிறைந்திருக்கின்றதோ—
அஃது- அதுவே—எங்கணுமுளதாம்- எவ்விடத்திலுமுள்ளதான—சித்தாம்பிரமம்- ஞானமானபிரம
மாம்— ஆகின்றேம்- (அதுவா) மாகின்றோம்—(எ-று) - - - - - - - - - - *

(உஅ) (அ-கை) பிரமத்தைவணங்குதல் (கவி) சகலசங்கற்பப்பலனுய்ச்சகலவொளிக்குமொளியா
கிச், சகலமானகொள்கையுந்தீர்தனிச்சிற்பரத்தையேத்துகிற்பாஞ், சகலசங்கற்பமுமற்றுச்சகலசந்தோட
முமற்றுச், சகலவாரம்பமுமற்றதனிச்சிற்பரத்தையேத்துகிற்பாம் (இ-ள்) சகலசங்கற்பப்பலனுய்- சங்
கற்பமனைத்திற்கும்பயனைக்கொடுப்பதாய்— சகலவொளிக்குமொளியாகி- எல்லாப்ரகாசத்துக்கும்ப்ர
காசமாய்— சகலமானகொள்கையுந்தீர்- எல்லாக்குணங்களுநீங்கியிருக்கின்ற— தனிச்சிற்பரத்தை- தனி
மையாகியஞானாத்மாவை—ஏத்துகிற்பாம்- துதிப்பாம்—சகலசங்கற்பமுற்று- எல்லாச்சங்கற்பங்களுநீ
ங்கி—சகலசந்தோடமுமற்று- எல்லாச்சுகங்களுநீங்கி—சகலவாரம்பமுமற்ற- எல்லாவாரம்பங்களுநீங்
கியிருக்கின்ற—தனிச்சிற்பரத்தை- தனிமையானஞானாத்மாவை—ஏத்துகிற்பாம்- வணங்குவாம்(எ-று)

(உகூ) (அ-கை.) பிரமஞானியினனுபவத்தைச்சொல்லுதல் (கவி) என்னுமறுதியுடையோராயெ
ல்லா நினைவுகளுமின்றி, முன்னுமுண்மையராயன்னார்முழுமெய்சாந்தஞ்சமமென்னுந், துன்னுபதத்
தேசுகித்திருப்பர்சமமாநிராசைதொடர்மனத்தோர், மன்னுபுந்திநிறைதீரர்வாழ்விற்சாவின்மகிழ்ந்த
யரார். (இ-ள்) என்னும்-(இப்படி)யென்கின்ற—அறுதியுடையோராய்- நிச்சயத்தையுடையவராய்—
எல்லா நினைவுகளுமின்றி- சகலவெண்ணங்களுமில்லாமல்— முன்னுமுண்மையராய்- நினைக்கின்றவுண்
மையையுடையவர்களாய்— அன்னார்- அவர்கள்— முழுமெய்- முழுதுஞ்சத்தியமும்— சாந்தம்- சா
ந்தமும்— சமமென்னும்- சமத்துவமுமென்கின்ற— துன்னுபதத்து- நிறைந்தபிரமபதத்தில்— சுகி
த்திருப்பர்- ஆநந்தித்திருப்பார்கள்— சமமாநிராசை- சமத்துவமான நிராசையை— தொடர்மனத்
தோர்- தொடரா நின்றமனமுடையவர்கள்— மன்னுபுந்தி- நிலைபெற்றஞானமானது— நிறைதீரர்-
பூரணமாயிருக்கின்றதீரரானவர்கள்— வாழ்விற்சாவில்- வாழ்விலுஞ்சாவிலும்— மகிழ்ந்தயரார்- விரு
ம்பிவாடார்கள்— (எ-று) [இ-சு-க-ம்] சர்வமும் பிரமாநந்தமாய்விளங்குமென்பதை மகான்களனு
பவத்தோடும்ப்ரசன்னமாய்விளக்கிவித்ததாம். - - - - - - - - - - - *

(ஙய) (அ-கை) ஞானயோகத்தின்முக்கியமாயிருந்தசீவன்முத்தரதிலக்கணஞ்சொல்லத்தொடங்
கல். (கவி) என்றமுனியைமெய்ஞ்ஞானவிநோதத்தாதலிதுவன்றி, நின்றவுயிரின்றடையாலேடாதனிகழ்
வாதனைநீங்கி, யொன்றுதுயர்தீர்ந்துயர்சீவன்முத்தரிருந்ததுனையென்று; வென்றிவடிவேலவன்கேட்ப

வேதவசிட்டன்விளம்புற்ருன்(இ-ள்)என்றமுனியை-(இப்படி)யென்றுசொல்லியவசிட்டமுனியை—
மெய்ஞ்ஞானவிநோதத்தாதல்- மெய்ஞ்ஞானலீலையினலாவது— இதுவன்றி- இதுவல்லாமல் — நின்
றவுயிரின்றடையாலேயாதல்- நின்றபிராணபந்தனத்தினலேயாவது— நிகழ்வாதனைநீங்கி- விளங்காநி
ன்ற(வசுத்த)வாசனையைவிட்டு—ஒன்றுதுயர்திர்ந்து-பொருந்தாநின்றதுன்பநீங்கி— உயர்சீவன்முத்த
ர்- மேலானசீவன்முத்தர்கள்— இருந்ததுணாயென்று- இருந்ததைச்சொல்லவேண்டுமென்று—வென்
றி- வெற்றிபொருந்திய— வடிவேலவன்சேட்ப-வடித்தவேலையுடையஸ்ரீராமன்வினவ—வேதவசிட்ட
ன்-வேதத்தையுடையவசிட்டமுனியானவர்—விளம்புற்ருன்-(இவை)சொல்லத்தொடங்கினர்(எ-று)*

(௫௧) (அ-கை) யோகத்துக்குரியதுபிராணயாமமெனல். (கவி) உருகும்பிறவித்துயாறுக்கயோக
ப்பெயராமியூகந்தா,னிருமையுண்டாமெய்ஞ்ஞானமேசமுயிரின்றடையேகம்,வருமிவ்விரண்டுமியோ
கப்பேர்மருவுமெனினுமுயிர்த்தடைக்கே, பெருகவுரித்தாமியோகப்பேர் பிஞகபாணி யுரைத்ததுவே.
(இ-ள்) உருகும்பிறவித்துயாறுக்க- சனாச்சும்பவத்துன்பத்தைக்கெடுக்க—யோகப்பெயராம்-யோக
நாமமுடையதாகிய—இயூகந்தானிருமையுண்டாம்-புத்தியானதிரண்டுவிதமாகும்—மெய்ஞ்ஞானமேக
ம்- மெய்ஞ்ஞானமொன்று— உயிரின்றடையேகம்- பிராணபந்தனமொன்று— வருமிவ்விரண்டும்-
வராநின்றவிந்தவிரண்டும்— யோகப்பேர்மருவுமெனினு- யோகநாமத்தைப் பொருந்துமென்றாலு
ம்— முயிர்த்தடைக்கு- பிராணபந்தனத்துக்கு— யோகப்பேர்பெருகவுரித்தாம்- யோகநாமமானது
மிசவுமுரியதாம்—இவை- இவ்விரண்டும்—பிஞகபாணியுரைத்தது-பரமேஸ்வான்சொல்லியது(எ-று)

(௫௨) (அ-கை) முன்புஞானத்தினிலச்கணஞ்சொல்லிப்பின்புயோகத்தினிலக்கணஞ்சொல்லுதல்
(கவி) யோகமொருவற்சரிதாகுமொருவற்குண்மையறிவரிதா, மாகவிவற்றின்மெய்ஞ் ஞானமறைந்
தேன்யோகவடைவினிக்கே ணகவமுதநிகருமொருசரிதை புரைக்கேனொருகான், மேசவூர்தியவைய
த்தேவிண்ணேர்முனிவருடனிருந்தேன். (இ-ள்) ஒருவற்கு- ஒருவனுக்கு— யோகமரிதாகும்- யோக
மானதரியதாகும்— ஒருவற்கு- ஒருவனுக்கு— உண்மையறிவரிதாம்- மெய்ஞ்ஞானமானதரியதாம்—
ஆகவிவற்றின்- ஆகவிந்தவிரண்டின்—மெய்ஞ்ஞானமறைந்தேன்- மெய்ஞ்ஞான (முன்னமே) சொ
ன்னேன்— இனியோகவடைவுகேள்- மேல்யோகத்தின்கிரமத்தைக்கேட்பாய்—நாகவமுதநிகரும்-தே
வாமிர்தத்தையொத்த— ஒருசரிதையுரைக்கேன்- ஒருசரித்திரத்தைச்சொல்லுவேன்— நானொருகால்-
நானொருகாலத்தில்— மேகவூர்தியவையத்து-தேவேந்திரனதுசபையில்— விண்ணேர்முனிவருடனிரு
ந்தேன்- தேவரிஷிகளுடனிருந்தேன்— (எ-று) - - - - - - - - - - - - *

(௫௩) (அ-கை) ஆப்தர்களாலியோகியின்பெருமையைச்கேட்டல். (கவி) நிறக்குநாரதாதிகளானெ
டுநாள்வாழ்வோர்கதைகேட்டேன், சிறக்குமாமேருவின்வடகீழ்த்திக்கிற்பதுமராகவொளி, பிறக்குங்
கோட்டிற்கற்பகத்தின்றென்பாற்பணையிற்பெருங்கூட்டிற், புறக்குன்றிருந்ததெனவிருக்கும்புசுண்
டநாமத்தொருகாகம் (இ-ள்) நிறக்குநாரதாதிகளால்- விளங்காநின்றநாரதர்முதலியமுனிவர்களால்—
நெடுநாள்வாழ்வோர்- சிரஞ்சீவிகளின்— கதைகேட்டேன்- கதைகளைக்கேட்டேன்— சிறக்குமாமே
ருவின்-சிறந்திருக்குமகாமேருவின்—வடகீழ்த்திக்கில்- ஈசானதிசையில்—பதுமராகவொளிபிறக்கும்-
பதுமராகப்ரகாசமுண்டாகிற—கோட்டில்- கொடுமுடியி(லிருக்கின்ற)—கற்பகத்தின்-கற்பகவிருட்ச
த்தினது— தென்பாற்பணையில்- தென்புறக்கொம்பிற்(கட்டிய)— பெருங்கூட்டில்- பெரியகூண்டி
னிடத்தில்— புறக்குன்றிருந்ததென-புறம்பி(லொரு)மலையிருந்ததுபோல—புசுண்டனுமத்தொருகா
கம்- புசுண்டனென்னும்பெயரையுடையவொருவாயசமானது— இருக்கும்- வசிக்கும்— (எ-று) *

(௫௪) (அ-கை) இ-து (கவி) விதியைநிகராயிருந்ததுபோல் வெகுநாளியோகியிருந்தவரார் மு
தியசொர்கலோகத்துமுன்னும்பின்னுமிலதாகு, மதிகவாணாளதுகாதலற்றதுயர்சீருடையதுமா, மதியு
ள்ளதுசாந்தியமிடர்தீர்மனந்தாற்காலமதித்துணரும் (இ-ள்)விதியைநிகராய்- பிரமாவுக்கொப்பாக—
இருந்ததுபோல்- இருந்த (புசுண்டயோகியை) ப்போல—வெகுநாள்-அநேககாலம்—இயோகியிரு
ந்தவரார்- யோகத்திலிருந்தவர்களார்—முதியசொர்கலோகத்தும்- பழமையானசொர்கலோகத்திலு
ம்— முன்னும்பின்னுமிலதாகும்- முன்னும்பின்னுமில்லையாம்— அது- அப்புசுண்டமே— அதிகவா
ணாள்- தீர்க்காயிசுடையது— காதலற்றது- ஆசையில்லாதது—உயர்சீருடையது-மோக்ஷசெல்வமுடைய
து—மாமதியுள்ளது- பெரிதானவறிவையுடையது— சாந்தியது- விஸ்ராந்தியுடையது— இடர்தீர்மன
த்தாற்காலமதித்துணரும- துன்பமற்றமனதினன்(மூன்று)காலத்தையும்வரையறுத்தறியும்—(எ-று)*

(௫௫) (அ-கை) புசுண்டயோகியைக்காண்டல் (கவி) என்றுதேவரவையத்திலெவருங்கேட்பவிரு
காலா,வன்றுபுசுண்டனியல்புண்மையாகவுரைத்தபடிகேட்டுச், சென்றுகாண்டுமெனவிரும்பிமேருவெ
ற்பிற்சிகரத்தின், மன்றல்கமழ்கற்பகத்திருப்பக்கண்டேன்மற்றோர்கற்பகம்போல் (இ-ள்) என்று-
(இப்படி)யென்று—தேவரவையத்தில்-தேவசபையில்—எவருங்கேட்ப-யாவருங்கேட்கும்படியாக—
இருகாலா- இரண்டுதரமாய்— அன்றுபுசுண்டனியல்பு- அப்போதுபுசுண்டயோகியினகுணத்தை—
உண்மையாக- மெய்யாக—உரைத்தபடிகேட்டு- (சாதாதபமுனி)சொன்னப்ரகார(நான்)கேட்டு—செ
ன்றுகாண்டுமெனவிரும்பி- போய்ப்பார்ப்போமென்றிச்சித்து—மேருவெற்பிற்சிகரத்தில்- மகம்மே
ருவின்முடியில்— மன்றல்கமழ்-வாசனைபரிமளிக்கின்ற—கற்பகத்து-கற்பகவிருட்சத்தில்— மற்றோர்
கற்பகம்போல்-வேறொருகற்பகவிருட்சமபோல—இருப்பக்கண்டேன்- இருக்கப்பார்த்தேன்(எ-று)

(௫௬) (அ-கை) புசுண்டயோகியிருச்சிரமசிறப்புக்கூறல் (கவி) அங்குமலையின்சாரமெருறுமுழை
கடோறுமளவின்மலர், தங்குகொடிகடோறும்பணைகடோறுமுறையுநதடம்பரவைத், துங்கணிறத்தி
வாவிரிஞ்சன்றோதமதின்றரன்பார்ப்புத்துங்கமறைகண்மந்திரங்கள்சுவாகாசாரமுடன்சொல்வ.
(இ-ள்) அங்கு- அவ்விடத்தில்— மலையினசாரமெருறும- மலைச்சார்புகடோறும— முழைகடோறு

ம்- குகைகடோறும்— அளவின்மலர்தங்கு- அளவற்றபுட்பங்கடங்கிய— கொடிகடொறும்- கொடிகடோறும்— டணைகடோறும்- கிளைகடோறும்—தடம்பறவை- பெரும்பக்ஷிகள்— உறையும்- வசித்திருக்கும்— திங்கணிறத்தவாய்- சந்திரநிறத்தையுடையனவாயிருக்கின்ற—விரிஞ்சன்றேர்- பிரமதேவனுடையவாகனமாகிய— ஓதிமத்தின்றிரள்- அன்னக்கூட்டங்களினுடைய— பார்ப்பு- குஞ்சுகள்— துங்கமறைகள்- உயர்வானசாமவேதகானங்களையும்— மந்திரங்கள்- மந்திரங்களையும்— சுவாகாகாரமுடன்சொல்வ- சுவாகாகாரத்தோடுமுச்சரிக்கின்றன— (எ-று) - - - - - - - - - - *

(௬௭) (அ-கை) இ-து. (கவி) குயில்கள்கிளிகள்பலபுட்கள்குகன்போதித்தசிவஞானம்,பயிலுமயில்கள்பலகண்டேன்பாரவுடற்காகத்திரளுட் சையிலம்போலுமுயர்வடிவஞ்சாலநிறைந்தமனமோன,முயிரினசைவுபிறவாமலுண்ணோக்கொழியாச்சுகமுளதாய் (இ-ள்) குயில்கள்- கோகிலங்களும்— கிளிகள்- கிள்ளைகளும்—பலபுட்கள்- (இன்னும்)வெகுபக்ஷிகளும்— குகன்போதித்த- சுப்பிரமணியர்போதித்ததாகிய— சிவஞானம்- சிவஞானத்தை— பயிலுமயில்கள்- பற்யிசிசெய்கின்றமயில்களுமாகிய—பலகண்டேன்- அநேகங்களைப்பார்த்தேன்— பாரவுடல்- பெரியசரீரத்தையுடைய— காகத்திரளுள்- வாயசசமுகத்தில்—சையிலம்போலும்- மலையைப்போலும்— உயர்வடிவம்- உயர்ந்தவடிவமும்—சாலநிறைந்தமனம்-மிகவும்பூரணமானமனதும்—மோனம்-மௌனமும்— உயிரினசைவுபிறவாமல்-பிராணசலனமுண்டாகாமல்—உண்ணோக்கொழியாச்சுகமுளதாய்-அகமுகநீங்காதசுகமுள்ளதாய்(எ-று)

(௬௮) (அ-கை )புசுண்ட யோகிபூசித்துமுகமன்வசனமொழிதல் (கவி) இருந்தவதன்முன்னானெய்தவெண்ணமறவந் தெதிர்ந்தென்னைப், பொருந்துமளவில்வசிட்டனெனப்புந்திபண்ணிப்பொருக்கென்னத்,திருந்தவந்தநல்வரத்துமுனியேயென்றுதித்திக்கத்,தருஞ்சங்கற்பத்தான்முளைத்ததடக்கையாலேமலர்தூவி(இ-ள்)இருந்தவதன்முன்-(இப்படி)இருந்தவந்தப்புசுண்டன்முன்பு—நானெய்த-யானுடைய—எண்ணமற-பரவசராய்—எதிர்ந்துவந்து-எதிரேவந்து—என்னைப்பொருந்துமளவில்- என்னைப்பொருந்துஞ்சமயத்தில்—வசிட்டனெனப்புந்திபண்ணி-வசிட்டனென்றறிந்து—பொருக்கென்ன- சீக்கிரமாக—திருந்தவந்த- சிறப்பாகவந்த—நல்வரத்து- நல்லவரவையுடைய— முனியேயென்றுதித்திக்க-முனீஸ்வரரோயென்றினிதுசொல்லி—தருஞ்சங்கற்பத்தான்முளைத்ததடக்கையால்மலர்தூவி-தரா நின்ற சங்கற்பத்தினாலுண்டானவிசாலம்பொருந்தியகரங்களினாற்புட்பத்தையருச்சித்து (எ-று)*

(௬௯) (அ-கை ) இ-து (கவி ) இருக்கவென்னவாசனந்தந்திருந்தபின்னரினிமையுட, னருக்கியத்தைமுதலனைத்துமளித்தன்பானநல்லுரைகள், பெருக்கவோதிப்பெரியோய்நின் காட்சியமுதப்பெருமழையால், வருக்கமுடனானகங்குளிர்ந்தேன் வழிவந்துடலம்வருந்தினையே (இ-ள் இருக்கவென்ன- இருப்பாயென்று— ஆசனந்தந்து- ஆசனத்தைக்கொடுத்து— இருந்தபின்னர்- இருந்தபின்பு— இனிமையுடன்- இன்பத்தோடும்— அருக்கியத்தைமுதலனைத்தும்- அருக்கியமுதலானசகலத்தையும்— அளித்து- கொடுத்து— அன்பானநல்லுரைகள்- அன்பாயிருக்கின்றமதுரவசனங்களை— பெருக்கவோதி- மிகவுஞ்சொல்லி— பெரியோய்- மகானே— நின்காட்சி- உமதுதரிசனமென்னும்—அமுதப்பெருமழையால்- அமுதத்தின்மகாவருடத்தினால்— வருக்கமுடன்- (எனது) கூட்டத்தோடும்— நானகங்குளிர்ந்தேன்- யான்மனமகிழ்ந்தேன்— வழிவந்து- (நீர்) மார்க்க (நடந்து) வந்து— உடலம்வருந்தினை- சரீரம்வருத்தப்பட்டீர்— (எ-று) [இ-ம-க-ம்] கேட்டுக்கண்டமாயினைக்கூறியதாம். - *

(௭௰ (அ-கை ) பூசித்தபுசுண்டயோகியையைத்துசங்கதிவினாவுதல் (கவி ) உனதுபாததரிசனத்தாலுணர்ந்தேனெல்லாநெடுவாணா, ளனகருடனென்னையுநினைத்தீரதுபோனீவந்ததுமறிந்தே,னெனினுநின்சொல்லமுதுண்ணநயந்தேனென்னவதுகேட்டுப், புனிதமானநன்னெஞ்சப் புசுண்டன்றனக்கிவ்வுரைபுகன்றேன் (இ-ள் ) உனதுபாததரிசனத்தால்- தேவரீர்பாததரிசனத்தினால்— எல்லாமுணர்ந்தேன்- அனைத்துமறிந்தேன்— நெடுவாணாளனகருடன்- சிரஞ்சீவியாயிருக்கின்றமாசற்றபெரியோர்களோடும்— என்னையுநினைத்தீர்- எனையுஞ்சிந்தித்தீர்— அதுபோல்- அதைப்போல—நீவந்ததுமறிந்தேனெனினும்- நீர்வந்ததையுந்தெரிந்தேனென்றாலும்— நின்சொல்லமுதுண்ண-உமதுவசனாமிர்தத்தைப்புசிக்க— நயந்தேனென்ன- விரும்பினேனென்றுசொல்ல— அதுகேட்டு- அந்தவசனத்தைக்கேட்டு— புனிதமான- பரிசுத்தமான— நன்னெஞ்சம்- நல்லமனதையுடைய— புசுண்டன்றனக்கு- புசுண்டயோகிக்கு— இவ்வுரைபுகன்றேன்- இந்தவசனத்தைச்சொன்னேன்— (எ று) - - *

(௭௧) (அ-கை ) இ-து (கவி ) பறவைபரசேநீயுரைத்தபடியேயுண்மைநெடுங்கால, மிறவிலாதவுனைக்காண்பானெய்தினேனீயெக்குலத்திற், பிறவியுற்றாய்மெய்ப்பொருளைப்பெற்றாயெங்ஙனெவ்வளவு, நிறைவிதானவாணாளிவ் வுலகினெறிநீநினைதிறனென் (இ-ள் ) பறவையரசே- பக்ஷிகளுக்கிறையே— நீயுரைத்தபடியேயுண்மை- நீர்சொன்னப்ரகாரமேமெய்— நெடுங்காலம்- வெகுகாலமாய்— இறவிலாத- மரணமில்லாத— உனைக்காண்பான்- நின்னைக்காணும்பொருட்டு— எய்தினேன்- வந்தேன்— நீயெக்குலத்தில்- நீயெந்தக்குலத்தில்—பிறவியுற்றாய்- சநநமானாய்— எங்ஙன்மெய்ப்பொருளைப்பெற்றாய்- எப்படித்தத்துவஞானத்தையடைந்தாய்— நிறைவிதானவாணாள்- மாட்சிமையான(வுன)தாயுள்— எவ்வளவு- எவ்வளவாயிற்று— இவ்வுலகினெறி- இச்சகத்தினீதியில்— நீநினைதிறனென்- நீயறிந்திருக்கின்றதன்மையென்ன— (எ-று) - - - - - - - - - - - - - *

(௭௨) (அ-கை) பிரமநிச்சயங்கூறியதன்கண்ணனுபவமானசீவன்முத்தனதியோகநிலையையறிவிக்குநிமித்தம. அவாதபிறப்பும், ஞானம்பெற்றவிடமும், நீண்டவாயுளினளவும், இதுபரியந்தநடந்தசரித்திரங்களும, ஏகாந்தஸ்தானங்கிடைத்ததுமாகிய விவ்வைந்துசங்கைவினாவினதற் குத்தரங்கூறுநமித்த புலபுசாநசாரணங கூறத்தொடங்கல். (கவி ) தீர்க்கதரிசியாமெவனீயிவ்வுரையுட்சேர்வுற்று, பேர்சகலனைத்தபூரையென்னவியல்பார்புசுண்டனுரைசெய்யு, மார்க்குமுயர்ந்தசிவன்றிருமு

ன்னுனைபாடொட்டகங்கரடிப், பார்க்குநிகராமேனமுகம்படைத்தகணங்கள்பலவுண்டால் (இ-ள்) தீர்க்கதரிசியாமெவனல்- சர்வஞ்ஞத்துவமுள்ளயாவனல்— நீயிவ்வுறையுட்சேர்வுற்றாய்- நீயிந்தவிடத்திற்சேர்ந்திருக்கின்றாய்— ஏர்க்கவனைத்தும்- (கிரமமாக) க்கொள்ளும்படி யெல்லாவற்றையும்— உரையென்ன- சொல்லுமென்றுகேட்க— இயல்பார்- ஒழுக்கமிகுந்த— புசுண்டனுரைசெய்யும்- புசுண்டர்சொல்லுவார்— ஆர்க்குமுயர்ந்த- யாவருக்குமேலான— சிவன்திருமுன்- சிவத்தினழகானசந்நிதியில்— ஆனை- கசமுகத்தையும்— ஆடு- அசமுகத்தையும்— ஒட்டகம்- ஒட்டைமுகத்தையும்— கரடி- கரடிமுகத்தையும்— பார்க்குநிகராம்- பூமியின் (பலத்துக்)கொப்பான— ஏனமுகம்படைத்த- மற்றவதனங்களேயும்பெற்றிருக்கின்ற— கணங்கள்பலவுண்டு- (சிவ)கணங்களநேகமுண்டாகும்— (ஏ-று.) ※

(சரு) (அ-கை.) சத்திகணங்களின்சிறப்பைக்கூறல். (கவி) தலைபிற்குளம்பர்குளம்புற்றதடக்கையினருந்தியின்முகத்தர், தொலைவற்றவர்பல்கணத்தோடுஞ்சூழ்வாரவர்போன்மாதர்கண, மலையிலரன்முன்னடஞ்செய்வார்பூதகணங்கள்வணங்குறுவார், சிலையின்சிகைவிண்புவிகாடு மயானந்தேயமிடமானோர். (இ-ள்.) தலையிற்குளம்பர்- சிரசிற்குளம்புள்ளவர்களும்— குளம்புற்றதடக்கையினர்- குளம்புள்ளநீண்டகரங்களேயுடையவர்களும்— உந்தியின்முகத்தர்- வயிற்றின்முகத்தையுடையவர்களுமாகிய— தொலைவற்றவர்- அளவில்லாதவர்களான— பல்கணத்தோடும்- அநேககூட்டங்களோடும்— சூழ்வார்- சூழ்ந்திருப்பார்கள்— அவர்போல்- அப்பூதகணங்களேப்போல— மலையில்- (கைலாச)கிரியில்— அரன்முன்- சிவன்முன்பு— பூதகணங்கள்- பூதகணங்களினல்— வணங்குறுவார்- வணங்கப்பெற்றவர்களாய்— சிலையின்சிகை- மலையினுச்சியும்— விண்- ஆகாயமும்— புவி- பூமியும்— காடு- கானகங்களும்— மயானம்— சுடுகாடும்- தேயம்- உடலும்— இடமானோர்- இடமாகவிருக்கின்ற— மாதர்கணம்- சத்திக்கூட்டங்களானவை— நடனஞ்செய்வார்- நிருத்தஞ்செய்வார்கள்— (ஏ-று.) - - - - - - ※

(சச) (அ-கை) அஷ்டசத்தியினென்றினூர்தி சண்டனெனல் (கவி) தரத்திலுயர்ந்த சயைவிசையைசயந்தியபராசிதைசித்தை,யிரத்தையோடேயலம்புசையுற்பலையென்றெண்மாமாதர்கடாம், புரத்திலுறுநாயகிகளவர்தம்முட் புகன்றவலம்புதைக்குத், திரத்தில்வருவாகனஞ்சண்டனெனும்பேர்சேர்ந்த தொருகாகம் (இ-ள்) தரத்திலுயர்ந்த- தாரதன் மியத்திலுயர்ந் திருக்கின்ற— சயை- சயையென்றும்— விசையை- விசையையென்றும்— சயந்தி- சயந்தியென்றும்— அபராசிதை- அபராசிதையென்றும்— சித்தை- சித்தையென்றும்— இரத்தையோடு- இரத்தையென்றும்— அலம்புசை- அலம்புசையென்றும்— உற்பலையென்று- உற்பலையென்றும்— எண்மாமாதர்கடாம்- எட்மெகாசத்திகளாகும்— புரத்திலுறு- முன்னம்பொருந்திய— நாயகிகள்- தலைவிகளாகிய— அவர்தம்முள்- அந்தவஷ்டசத்திகளுக்குள்— புகன்றவலம்புதைக்கு- சொல்லியவலம் புதையென்னுஞ்சத்திக்கு— திரத்தில்வருவாகனம்- திடமாகவராநின்றவாகனமாகவுடைய— சண்டனெனும்பேர்சேர்ந்த- சண்டனென்கின்றநாமத்தையுடைய— ஒருகாகம்- ஓர்வாயசம்— (ஏ-று) - - - - - - ※

(சரு) (அ-கை) சத்தியினுச்சவஞ்செய்துகளித்தல் (கவி) அட்டகுணச்செல்வமும்படைத்தவந்தமாதரனைவோரு, மிட்டமானசிவனேவவியாருங்கூடிவிண்ணிடையே, முட்டலாதவுச்சவத்தைமுயன்றுபானங்களேயுண்டு, நட்டமிட்டார்பாட்டிசைத்தார்களித்தார்வெடிக்கநகைசெய்தார் (இ-ள்) அட்டகுணச்செல்வமும்படைத்த- (அணிமாதிகுணங்களேயுடைய) வஷ்டவயிஸ்வரியத்தையும்பெற்ற— அந்தமாதரனைவோரும்- அச்சத்திகளனைவரும்— இட்டமானசிவனேவ- இஷ்டமாகிய சிவனுஞ்ஞாபிக்க— இயாருங்கூடி- அனைவருஞ்சேர்ந்து— விண்ணிடை- ஆகாசத்தினிடத்தில்— முட்டலாத- குறைவில்லாத— உச்சவத்தைமுயன்று- திருவிழாவையாரம்பித்து— பானங்களேயுண்டு- மதுக்களேக்குடித்து— நட்டமிட்டார்- நடனஞ்செய்தார்— பாட்டிசைத்தார்- பாடினூர்கள்— களித்தார்- மதர்த்தார்கள்— வெடிக்கநகைசெய்தார்- வெளிப்படச்சிரித்தார்கள்— (ஏ-று) - - - - - - - - ※

(சசா) (அ-கை.) அவர்வாகனங்களுங்களித்தல் (கவி) அந்தவிழாவேநடக்கின்றகாலத்தவர்வாகனமனைத்து, மிந்தமரபிற்பானங்கண்மாந்திக்களித்தாரிவைசெய்தா, ரந்தரத்தினிடையயலே யயன்பேர்மாதின்வாகனங்கள் சந்தமுறுபெட்டோதிமங்கள்சண்டனெனுங்காகத்தோடும் (இ-ள்) அந்தவிழா- அத்திருவிழாவானது— நடக்கின்றகாலத்து- நடக்குங்காலத்தில்— அவர்வாகனமனைத்தும்- அவர்களுடையவாகனங்களியாவும்— இந்தமரபில்- இக்கிரமப்படி— பானங்கண்மாந்தி- மதுக்களேயுண்டு— களித்தாரிவைசெய்தார்- மதர்த்தவர்களிவைகளேச்செய்தார்கள்— அந்தரத்தினிடையயல்- ஆகாயத்தினேர்பக்கத்தில்— அயன்பேர்மாதின்வாகனங்கள்- பிரமசத்தியின்வாகனங்களான— சந்தமுறுபெட்டோதிமங்கள்சண்டனெனுங்காகத்தோடும்- அழகுள்ளபெண்ணன்னங்கள்சண்டனென்கின்றவாயசத்தோடும்— (ஏ-று) ※

(சஎ) (அ-கை) அன்னங்களோடுங்காகம்புணர்தல் (கவி) கூடியாடிக்களித்தந்தக்கோலக்காகத்தினைப்புணர்ந்து, நீடுகருவையடைந்துமிகநெஞ்சங்களிக்குமக்காலை நாடிமுயன்றவிழாமுடித்துநக்கருடைமாதருங்கணமும், பாடலாடலொழிந்துமனமகிழ்ந்துதத்தம்பதிக்ககன்றார். (இ-ள்) கூடியாடி- சேர்ந்துவிளையாடி— களித்து- மதர்த்து— அந்தக்கோலக்காகத்தினைப்புணர்ந்து- அந்தவழகியகாக்கையைக்கூடி— நீடுகருவையடைந்து- நீண்டகருப்பத்தையடைந்து— மிகநெஞ்சங்களிக்கும்- மிகவுமனங்களிக்கின்ற— அக்காலை- அந்தக்காலத்தில்— நாடிமுயன்றவிழாமுடித்து- தேடிமுயர்ச்சித்ததிருவிழாவைமுடித்துக்கொண்டு— நக்கருடைமாதரும்- பரமேஸ்வரனுடையசத்திகளும— கணமும்- அவர்கள்கணங்களும— பாடலாடலொழிந்து- பாடலுமாடலுநீங்கி— மனமகிழ்ந்து- மனமகிழ்ச்சியுடன்— தத்தம்பதிக்ககன்றார்- தங்கடங்களிடத்துக்குப்போனூர்கள்— (ஏ-று) - - - - - - - ※

(சஅ) (அ-கை.) அம்சங்கருவடைதல் (கவி) அனையகாலைக்கருவடைந்தவயன்பேர்மாதினேதிமங்கள், வினையிறமதுநாயகிக்குவிளைந்தபடிமெய்ப்படவுரைப்ப, வினையதாகக்கருவுற்றீரொன்றோர்க்

சும்பமுதலான- ஆகாயமுதலாகிய— துன்றுவடிவங்களைமேவி- நெருங்கியவுருவங்களையடைந்து— தொகுதத்துவஞ்சடனைச்செய்யும்- தொகுப்பானப்ரகிருதி முதலானதத்துவங்களையுண்டாக்கும்—முன்னு- நினைக்கின்ற—பாழிற்கூளிகள்போல்- சூனியத்திற்பேய்களுண்டாவதுபோல—மொழிந்த-சொல்லப்பட்ட(வதில்)— மனவாதனைதோன்றும்- மனோவாசனையுண்டாகும்— (எ-று) [இ-ச-க-ம்]சித்தினசம்பாவமுதற்றிரிஸ்யவாசனைபரியந்தந்தோற்றுமென்பதாம் - - - - - - - - - ※

(சுச) (அ-கை) அபக்குவிக்குபதேசிக்கக்கூடாதெனல். (கவி) சகப்பேர்பெறுமிவ்வாதனைதான்றவிரிலழியாச்சாந்தியதா, மகப்பாவனையிலிச்சகத்திலலகைத்தேரா நீர்தன்னி, லுசப்பாமறுதியுள்ளோர்களுபதேசிக்கவொண்ணுதோர். மிகப்பாவிகளாஞ்சீசீயென்றிகழ் வாரவரைமெய்புணர்ந்தோர். (இ-ள்) சகப்பேர்பெறும்- உலகநாமத்தைப்பெற்றிருக்கின்ற—இவ்வாதனைதான்றவிரில்- இந்தவாதனையானதுகெடுமாயின்— அழியாச்சாந்தியதாம்- கெடாதவுபசாந்தமாம்—அசப்பாவனையில்- அசம்பாவத்திலும்—இச்சகத்தில்-இவ்வுலகத்திலும்—அலகைத்தேரா நீர்தன்னில்-கானற்சலத்திலும்—உசப்பாமறுதியுள்ளோர்கள்-உயர்வான நிச்சயமுடையவர்கள்— உபதேசிக்கவொண்ணுதோர்-அனுக்கிரகிக்கத்தகாதவர்கள்— அவரை- அவர்களை—மெய்புணர்ந்தோர்-உண்மையையறிந்தசத்துக்கள்— மிகப்பாவிகளாம்-மிசவுந்தீயராவர்— சீசீயென்றிகழ்வார்- சைசையென்று நிந்திப்பார்கள்— (எ-று) [இ-ம்] சகநிச்சயபுத்தியுள்ளவனுக்கிவ்வனுபவஞ்சொல்லுதலிழிவென்பதாம் - - - - - - - - ※

(சுரு) (அ-கை) பக்குவிக்குபதேசிக்கவேண்டுமெனல் (கவி) பரமமுணர்ந்தவிவேகியர்க்குப்பரமவுபதேசம்பகர்வர், திரமின்மயக்கத்திழிந்தோர்க்குச்செப்பநினையார்சொற்பனத்தில், வரனைநனவிற்கன்னிகைக்குமகிணனுக்குமியல்பொக்கும், விரதமுனியேநீசொன்ன வினுவுக்குண்மைவிளம்பினமால். (இ-ள்) பரமமுணர்ந்த- பிரமத்தையறிந்த— விவேகியர்க்கு- விவேகத்தையுடையவர்களுக்கு— பரமவுபதேசம்பகர்வர்-பிரமவுபதேசஞ்செய்வார்கள்— திரமின்மயக்கத்திழிந்தோர்க்கு- திரமின்றிப்பிரமையிலிறங்கினவர்களுக்கு— செப்பநினையார்- உபதேசிக்கநினையார்கள்—(சொன்னுலது) சொற்பனத்தில்வரனை- கனவிற்கண்டபுருடனை— நனவிற்கன்னிகைக்கு- சாக்கிரத்திலுள்ளகுமாரிக்கு— மகிணனுக்கும்- சொழுநனுக்குச்செய்கின்ற—இயல்பொக்கும்- தன்மைக்குச்சமானமாம்— விரதமுனியே- தவத்தையுடையவசிட்டமுனியே— நீசொன்னவினுவுக்கு- நீர்கேட்டவினுவுக்கு— உண்மைவிளம்பினம்-தத்துவத்தைச்சொன்னேம்— (எ-று) (ப-ம்) சடத்தைவெறுத்துத்தள்ளும் போதேசித்தாயிருத்தலினவனுக்கேசகஞ்சின்மாத்திரமென் றுபதேசிக்கவேண்டுமென்பார் பரமமுணர்ந்தவிவேகியர்க்கேபரமவுபதேசம்பகர்வரென்றூர் [இ-ம்] சர்வம்பிரமமயமென்றுபதேசிக்கத்தக்கசீடனையுணாத்ததாம். - ※

(சுசு) (அ-கை.) சுவாமியெழுந்தருளுதல் (கவி) இனிதுண்டாகவுனக்கென்பாலேகுவோநாமென்றுமையும், புனிதன்ருனும்பரிவாரம்புறத்துச்சூழவிண்ணகன்ருன், பனிநன்மலாஞ்சலிசொரிந்துபணிந்தேனன்றுமுதலந்தத், துனியினறியாமெய்புணர்வைத்தொடர்பாற்பூசைசெய்கின்றேன். (இ-ள்) உனக்கு- நினக்கு— என்பால்- என்னிடத்தில்— இனிதுண்டாக- அன்புண்டாகக்கடவது—நாம்- யாம்— ஏகுவோமென்று- போவோமென்று— உமையும்- பார்வதியும்— புனிதன்ருனும்- பரமசிவனும்— பரிவாரம்- பரிசனங்கள்—புறத்துச்சூழ்- பக்கத்திற்சூழ்ந்துவர— விண்ணகன்ருன்- ஆகாயத்திற்சென்ருர்—பனிநன்மலரஞ்சலி- குளிர்ச்சியுள்ளநல்லபுட்பாஞ்சலியை— சொரிந்துபணிந்தேன்- வருஷித்துவணங்கினேன்—அன்றுமுதல்- அன்றுமுதலாக—அந்தத்துனியில்- அத்துக்கநிவிர்த்தியையுடைய— நெறியால்- (தடையற்றவாநந்தமுண்டாகும்) வழியினுல்— மெய்புணர்வை- உண்மைஞானத்தை— தொடர்பால்-தொடர்ச்சியுடன்— பூசைசெய்கின்றேன்- ஆராதிக்கின்றேன்— (எ-று) [இ-ம்] தமதாசாரியருபதேசப்படிபோதவிலிங்கத்தைபாரதிக்கின்றேனென்பதாம். - - - - - - ※

(சுஎ) (அ-கை) ஞானபூசையாலுள்ளவனுபவங்கூறல் (கவி) இன்றுமென்றும்பதருமலியற்றுபூசாவிதானத்தாற், றுன்றுகின்றவாதனைகள்சுமையன்றியிலேசுமக்கின்றே, னன்றுவந்தகிரியைகளோடாசாரங்கண்மலராக, நின்றபூசைதனிற்குறைவுநிறைவுகாணேனிராப்பகலே (இ-ள்) இன்றும்- இப்போதும்— என்றும்- எப்போதும்— பதருமலியற்று- தவருமற்செய்கின்ற— பூசாவிதானத்தால்- ஆராதனைக்கிரமத்தினுல்— துன்றுகின்றவாதனைகள்- நெருங்குகின்றவாசனைகள்— சுமையன்றியில்- பாரமில்லாமல்— சுமக்கின்றேன்- தாங்குகின்றேன்—அன்றுவந்த- அப்பொழுதுகிடைத்த—கிரிகைகளோடு- கிரிகைகளுடன்—ஆசாரங்கண்மலராக-ஒழுக்கங்களேபுட்பங்களாக—நின்றபூசைதனில்- இருக்கின்றதேவார்ச்சனையில்—குறைநிறைவு-குறைவையுநிறைவையும்—இராப்பகல்- இராவிலும்பகலிலும்—காணேன்- பார்த்திலன்— (எ-று) (ப-ம்) சகஞ்சித்தாயும் வாசனையதன்பரிமளமாயுமனுபவிக்கின்றேனென்பார். வாதனைகள்சுமையன்றியிலேசுமக்கின்றேனென்றும், சித்தின்விளக்கமேமலராகப்பூசித்துப்பூரணனுனேனென்பார், பூசைதனிற்குறைவுநிறைவுகாணேனிராப்பகலென்ருர். - - - - - ※

(சுஅ) (அ-கை) தனதனுபவப்படிபிராமனுக்காம்பொருட்டுபதேசித்தல் (கவி) கொள்ளுவானுங்கொள்பொருளுங்கூடலுயிர்க்கெல்லாம்பொதுவா, நள்ளுமந்தக்கூட்டத்தேஞானயோகிக்கவதானமுள்ளதேதங்கதுதானேயுயரான்மாவுக்கருச்சனையாந், தெள்ளுமிந்நோக்காற்சங்கஞ்சேராமனத்தாற்சகத்துறைவாய் (இ-ள்.) கொள்ளுவானும்- ஞாதாவும்— கொள்பொருளுங்கூடல்- திரிஸ்யமுஞ்சேர்தல்— உயிர்க்கெல்லாம- ஆத்மாக்களனைத்திற்கும்— பொதுவாம்- சமமாகும்— நள்ளுமந்தக்கூட்டத்து- விரும்புகின்றவச்சங்கத்தில்— ஞானயோகிக்கு- ஞானயோகிகளுக்கு— அவதானம- கிரகித்தலாவது— அங்குள்ளதேது- அவ்விடத்துஉள்ளதெதுவோ— அதுதான்- அதுவேயாம்— உயரான்மாவுக்கு- (அதுவே) மேலானஞானதமாவுக்கு— அருச்சனையாம்- ஆராதனையாகும்— தெள்ளுமிந்நோககால்- தெளிகின்றவிந்தத்திருஷ்டியினுல்— சங்கஞ்சேரா- (விடய)சங்கஞ்சேராத—மனத்தாற்சகத்துறை

வாய்- மனதிறுலகத்தின்கண்ஸ்ரீராமா நீவசிப்பாய்— (எ-று) (ப-ம்.) ஞாதாஞேயத்துடன்கூடியனுபவிக்கும்போதிலவ்விரண்டுநீங்கிச்சுகபோதமாயிருத்தலாத்மாக்களின் சுபாவமென்பார். உயிர்க்கெல்லாம்பொதுவென்றும். அதைஞானிகடனதுஸ்வரூபமாகக்கிரகிப்பாரென்பார், ஞானயோகிக்கவதானமென்றும் அதுவதுவாசவிளங்குமென்பார் உள்ளதேகங்கதுதானேயுபரான்மாவுக்கருச்சனையென்றும் இச்சுவானுபவத்தாற்சீவன்முத்தனுயிராசகாரியங்களைச்செய்வாயென்பார் இந்நோக்காற்சங்கஞ்சேராமனத்தாற்சகத்துறைவாயென்றுங்கூறினர். [இ-உ-க-ம்] தனதுசுவானுபவத்தைக்கூறிநீயுமப்படியேபூசித்துவிளங்குவாயென்பதாம். - - - - - - - - - - - - - - ※

(சுகூ) (அ-கை) இராமன்றனதனுபவமுரைத்தல். (கவி) இவ்வாறுலகமெனும்பெருங்காடெய்தி வருந்தாயென்றலுமே, வெவ்வாளிராமனுரைசெய்வான்விட்டேனையமெலாமிகவுந், தவ்வாதறியற்பாலவெலாமறிந்தேன்சலியாதருள்பெற்றேன், கைவாரணநேராசைதனைக்கடிந்தேனொன்றிலசைவில்லேன் (இ-ள்) இவ்வாறு- இவ்வண்ணம்— உலகமெனும்- சகமென்கின்ற— பெருங்காடெய்தி— மகாரணியத்தையடைந்து— வருந்தாயென்றலும்- துன்புறுதேயென்றுசொல்லவும்— வெவ்வாளிராமன்-கொடியவாளையுடையவிராமரானவர்—உரைசெய்வான்-சொல்லுவார்—ஐயமெலாம்விட்டேன்- சந்தேகங்களனைத்தையுநீக்கினேன்—மிகவுந்தவ்வாது- மிகவுந்தவறுமல்— அறியற்பாலவெலாம்- அறியவேண்டினயாவும்—அறிந்தேன்- தெரிந்துகொண்டேன்—சலியாதருள்பெற்றேன்- சலனமில்லாம(லுமது)கிருபையைப்பெற்றேன்—கைவாரணநேராசைதனைக்கடிந்தேன்- தும்பிக்கையுள்ளயானையையொத்தவிச்சையைக்கெடுத்தேன்—ஒன்றிலசைவில்லேன்- ஒன்றிலுஞ்சலனமில்லாதவனானேன்(எ-று)

(எஎ) (அ-கை) இ-து (கவி) பிறவிக்கடலிற்றீரநிலைபெற்றுப்பிறழ்கற்பனைபெல்லா,மறவிட்டயர்வற்றறவுவிதாயறவேதெளிந்தானந்தத்தையுறவுட்குளிர்ந்துநன்றானதுள்ளமென்றுமெய்ஞ்ஞானத், திறவித்தகனும்வசிட்டனுடன்செப்பிமேலுஞ்செப்புற்றான். (இ-ள்) பிறவிக்கடலின்- பவசாகரத்தின்— தீரநிலைபெற்று- கரையாகியமுத்தியையடைந்து—பிறழ்- விளங்கா நின்ற— கற்பனையெல்லாம்- கற்பனைகளனைத்தையும்— அறவிட்டு- மிகவுநீக்கி— அயர்வற்று- வருத்தமற்று— அறவுவிதாய்-மிகவுமுறுதியாக— அறவேதெளிந்து- மிகவுந்தெளிந்து— ஆநந்தத்தையுற- பிரமாநந்தத்தைப்பொருந்த—உட்குளிர்ந்து- அகமகிழ்ந்து—உள்ளம்- மனமானது— நன்றானதென்று- சுகமானதென்று— மெய்ஞ்ஞானத்திறம்- தத்துவஞானவலிமையுள்ள— வித்தகனும்வசிட்டனுடன்- அற்புதனாகியவசிட்டமுனியோடு—செப்பி- சொல்லி—மேலுஞ்செப்புற்றான்- இன்னமுஞ்சொல்லத்தொடங்கினர்(எ-று) [இ-உ-க-ம்] துச்சநிவிர்த்தியாய்த்தடையற்றபிரமாநந்தாமுதமாயுள்ளம்விஸ்ராந்தியடைந்ததாம். ※

தேவபூசைகதை முற்றிற்று ஆ சதை ௯௰௫ கவிதை (௬௪௭)



# வில்வபலக்கதை.

(அ-கை) முற்கதையிலபரோக்ஷஞானார்ச்சனையினாற்சர்வம்பிரமமயமென்னுநிருவாணசுகஞ்சொல்லியதன்வியாபகமேசர்வமுமாமென்பதையறிவிக்குநிமித்தம்வில்வபலக்கதையை நிரூபிக்குறார். - ※

(க) (அ-கை) இந்தஞானதேவையாராதிப்பதற்கிச்சைதடையாதலாலஃதைநீக்குதற்பொருட்டதனியல்பைக்கூறுதல். (கவி) வே. நின்னுரையமுததாரைநிறைந்துமுள்ளமைவுதோன்றாப், பின்னரும்பூரணத்தைப் பேசெனவிராமன்கேட்ப, மன்னுமாமுனிவன்சொல்வான் வருபொருண்முதற்கணத்தே, பின்னலமாகுமற்றக்கணத்தவ்வாறினிமையாகா, (இ-ள்) நின்னுரையமுததாரை- உமதுவசனமாகியவமுதவருடமானது— நிறைந்தும்- பூரணமாகியும்— உள்ளமைவுதோன்றா- உள்ளேபோதுமென்கின்றதிருத்திபிறக்கவில்லை—பின்னரும்- இன்னமும்— பூரணத்தைப்பேசென- பூரணஞானத்தைச்சொல்லுவாயென்று— இராமன்கேட்ப- இராகவன்கேட்க— மன்னுமாமுனிவன்- நிலைபெற்றமகாஞானவசிட்டமுனி— சொல்வான்- சொல்லுவார்— வருபொருள்- வரா நின்றவஸ்துக்கள்— முதற்கணத்து- முந்தினக்ஷணத்தில்— இன்னலமாகும்- இனிமையாம்—மற்றக்கணத்து- மறுக்ஷணத்தில்—அவ்வாறு- அந்தப்ரகாரம்— இனிமையாகா-இன்பமாகமாட்டாது— (எ-று) - - - - - - ※

(உ) (அ-கை) இ-து (கவி) ஈதனுபவியாதாரரிச்சிக்கவினிதாம்வத்துக், காதலியாதபோதுகைப்புறுமாதலாலே, யாதரமூலமாகுமினிமைக்கிவ்வினிமைதானும், போதுமென்றிடப்போமிச்சைபோக்கினலனைத்தும்போமே. (இ-ள்) ஈதனுபவியாதாரார்- இதையனுபவியாதவர்கள்யாவர்— வத்து- பொருளானது— இச்சிக்கவினிதாம்- ஆசைப்படவின்பமாகும்— காதலியாதபோது- இச்சியாதபோது— கைப்புறும்-கசப்பாகும்— ஆதலால்- ஆகையினால்— ஆதரம்- ஆசையானது— இனிமைக்கு- இன்பத்துக்கு—மூலமாகும்- காரணமாகும்— அவ்வினிமைதானும்- அந்தவினிமையும்— போதுமென்றிடப்போம்- போதுமென்றுதிருத்திபிறக்கநீங்கும்—இச்சைபோக்கினல்- ஆசையைநீக்கினல்— அனைத்தும்போம்- சகலமுநீங்கும்— (எ-று) [இ-உ-க-ம்] இச்சாத்யாகவுத்தியைக்கூறினதாம். - - - ※

(ந) (அ-கை.) வாசனையற்றமனதினாற்செய்யுங்கிரியைதுன்பமாகாதெனல். (கவி) பன்மையாமாசைதீர்கபாவனையறுகசித்த, மின்மையாமொழிகசங்கமிலாமையாயுனக்குச்சொல்வாம், புன்மைவாதனையற்றுவுட்கரணத்தாற் புரியுஞ்செய்கை, வன்மையாற்கலக்கங் கோடிவருகினும் வருத்தஞ்செய்யா.

(இ-ள்) பன்மையாமாசைதீர்க- பலவிதமானவிச்சைகளொழியக்கடவது— பாவனையறா- பாவனைகெ
டக்கடவது— சித்தமின்மையாயொழிக- மனமில்லாததாய்த்தவிரக்கடவது— சங்கமிலாமையாய்- நிற்
சங்கமானவனே— உனக்குச்சொல்வாம்- நினக்குச்சொல்லுவோம்— புன்மைவாதனைபற்று- அற்பமா
கியவாதனையையடையாத— உட்கரணத்தால்- அந்தக்கரணத்தினால்— புரிபுஞ்செய்கை- விரும்பாநின்
றதொழில்கள்— வன்மையால்- வலிமையினால்— கலக்கங்கோடிவருகினும்- கலக்கங்களநேகம்வந்தா
லும்— வருத்தஞ்செய்யா- துன்பஞ்செய்யாது— (எ-று) - - - - - - - - - - - *

(சு)(அ-கை)வாசனநாசத்தான்மனோநாசமாமெனல். (கவி)விழிப்பினோடிமைப்பிற்சித்தஞ்சகத்
தினைவிளைத்தொடுக்கு, மொழித்துவாதனைபிராணனொடுக்கத்தாலுளத்தைமாய்ப்பா, யிழித்தபேதமையி
ன்றோற்றமொடுக்கமாமிரண்டினாலுஞ் சுழித்திடுகரும மெல்லாந்தோன்றிடு மொடுங்குமன்றே.
(இ-ள்)சித்தம்-மனமானது—விழிப்பினோடிமைப்பில்-விழிப்பிலுமிமைப்பிலும்— சகத்தினைவிளைத்
தொடுக்கும்- உலகத்தையுண்டாக்கிக்கெடுக்கும்— வாதனையொழித்து- வாசனையைக்கெடுத்தாவது—
பிராணனொடுக்கத்தால்- பிராணபந்தத்தினாலாவது— உளத்தைமாய்ப்பாய்- மனதைக்கெடுப்பாய்—
இழித்தபேதமையின்- இழிவாயிருக்கின்றவறியாமையினது— தோற்றமொடுக்கமாம்- உண்டாதலு
மொடுங்குதலுமாம்— இரண்டினாலும்- உபயத்தினாலும்— சுழித்திடுகருமமெல்லாம்- சுழிக்கப்பட்
டகன்மங்களனைத்தும்— தோன்றிடுமொடுங்கும்- உண்டாகுமழியும்— (எ-று) - - - - *

(ரு) அ-கை )மனநசித்தவிடமேபரமபதமாமெனல் (கவி) ஆதலாற்குரவனன்னூலகல்கிலாச்செ
றிவால்வன்பிற், பேதமையுளத்தைமாய்ப்பாய்ப்பிராணனைத்தடைசெய்தாலும், வேதனவசைவுதீரவிடு
கிலுஞ்சித்தம்போகுந், தீதறுமதுவேமேலாம்பதமெனச்செப்புமன்றே (இ-ள்.) ஆதலால்- ஆதலினா
ல்— குரவனன்னூல்- ஆசாரியருஞ்ஞானசாஸ்திரங்களுமாகிய (விவைகளுடைய)—அகல்கிலாச்செறிவா
ல்- நீங்காதசங்கத்தினாலும்—வன்பில்-(அதன்)பலத்தினாலும்—பேதமையுளத்தைமாய்ப்பாய்-அஞ்ஞா
னத்தையுடையமனதைக்கெடுப்பாய்— பிராணனைத்தடைசெய்தாலும்- பிராணபந்தனம்பண்ணினாலு
ம்— வேதனவசைவுதீரவிடுகிலும்- அறிவின்சலனந்தீரும்படிவிட்டாலும்— சித்தம்போகும்- மனமா
னதுகெடும்— தீதறுமதுவே- குற்றமற்றவந்தமனோநாசமே— மேலாம்பதமெனச்செப்பும்- மே
லாயிருக்கின்றபரமபதமென்றுசாத்துக்கள்சொல்லுவார்கள்— (எ-று.) - - - - - - - - *

(சூ) (அ-கை) பிரமதிருஷ்டியினான்மனதுநசிக்குமெனல் (கவி) தெரிபொருடரிசனஞ்சேர்கூ
ட்டத்திற்சேர்ந்தவின்பம், விரிபாமார்த்தமாகுமதற்குமேலினிவேறில்லைப், புரிதருபிரமநோக்காமத
னினாற்பொன்றுஞ்சித்தம், வரிசையாஞ்சித்தநாசம்வஞ்சமிலின்பந்தானே (இ-ள்) தெரிபொருள்-தி
ரிஸ்யமும்— தரிசனம்- காட்சியும்— சேர்கூட்டத்தில்- கூடியகூட்டரவில்— சேர்ந்தவின்பம்- (இவ்
விரண்டுநீங்கி)யுண்டானவாநந்தமே—விரிபாமார்த்தமாகும்-வியாபித்திருக்கின்றவிதார்த்தமாகும்—அ
தற்குமேல்- அதற்குமேலாக—இனிவேறில்லை- இனிவேறேவஸ்துவில்லை— புரிதரு- விரும்பத்தக்க—
பிரமநோக்காமதனினால்- பிரமதிருஷ்டியினால்— சித்தம்பொன்றும்- மனதுகெடும்— வரிசையாம்-
ஒழுங்காகிய— சித்தநாசம்- மனோநாசமானது— வஞ்சமிலின்பந்தான- பேராநந்தமாம்— (எ-று)

(எ) (அ-கை) ஞானத்தான்மனதுபரிசுத்தமாமெனல் (கவி) தேய்ந்திடல்வளர்தலில்லைத்தெரிவு
றுமறைந்துபோகா, வாய்ந்துணர்ஞானிசித்தஞ்சித்தமன்றதன்பேருண்மை, யேய்ந்தநாநாத்துவத்தோ
டன்யமெய்தல்சித்தந், தோய்ந்தபோதத்தாற் செம்புசொன்னமாவதுவே போலாம். (இ-ள்.)
தேய்ந்திடல்-(அவ்வாநந்தந்) தேய்தலும்— வளர்தலில்லை- வளர்தலுமில்லையாம்— தெரிவுறு- தோ
ன்றுவது— மறைந்துபோகா- மறையாது— ஆய்ந்துணர்- ஆராய்ந்தறிந்த— ஞானிசித்தம்- ஞானவா
னுடையமனது—சித்தமன்று- மனமல்ல—அதன்பேருண்மை- அதனுமந்தத்துவமாம்— ஏய்ந்த-பொ
ருந்திய— நாநாத்துவத்தோடு- நாநாவிதமானபொருள்களால்— அன்னியமெய்தல்சித்தம்- வேறுபா
டடைகின்றதேமனமாகும்— செம்புசொன்னமாவதுபோல்- தாம்பிரம்பரிசவேதியாற் றங்கமாவது
போல—தோய்ந்தபோதத்தால்-பொருந்தியஞானத்தினால்—ஆம்- நின்மல(மன)மாம்—(எ-று) *

(அ) (அ-கை) சித்தேமனோரூபமாயதீதமாகுதல் (கவி) சித்தெனுந்தத்துவந்தான்சித்தமாய்ச்சக
த்திலோர்காற், றொத்தியவிநோதஞ் செய்துதுரியமாமவத்தைமேவி, நித்தமாந்துரியாதீதநிலைமையா
மாதலாலே,பித்துறுமுலகாய்ப்பன்மையாய் நிற்கும்பிரமமொன்றே(இ-ள்) சித்தெனுந்தத்துவந்தான்-
ஞானமென்கின்றவுண்மையானது— சித்தமாய்- மனமாகி— சகத்திலோர்கால்- உலகத்திலொருதரம்—
தொத்தியவிநோதஞ்செய்து- தொந்தித்தவிளையாடல்செய்து— துரியமாமவத்தைமேவி- துரியாவவத்
தையைப்பொருந்தி— நித்தமாம்- நித்தியமான— துரியாதீதநிலைமையாம்- துரியாதீதவுண்மையாகு
ம்— ஆதலால்- ஆகையினால்—பிரமம்- பிரமமானது— ஒன்று-ஏகமாகியும்— பித்துறுமுலகாய்-மயக்க
முள்ளசகமாய்—பன்மையாய்நிற்கும்- அநேகமாகியுமிருக்கும்(எ-று)[இ-அ-க-ம்]மனதின்கணுள்ள
திரிஸ்யவாசனாரூபமானவிச்சைநீங்கினு லம்மனமுதலியயாவுஞ் சின்மாத்திரமாய்விளங்குமென்பதாம்*

(கூ) (அ-கை)சர்வம்பிரமமயமென்பதைத்திருஷ்டாந்தரூபமாகவறிவிக்கத்தொடங்கல் (கவி)முற்
றுமாம்பிரமமன்றிமொய்ம்மனமுதலவேறு, யுற்றவைசிறிதுமில்லையுளத்திலோர்பணதிபோல,நிற்றலு
நதோன்றுமத்தையறிகுசநிகழ்த்துகின்றேன், கற்றவர்வியக்கநன்றாய்ப்புதுமையாங்கதைநீகேட்பாய்.
(இ-ள்) முற்றுமாம்பிரமமன்றி- எல்லாமானபிரமமேயல்லாமல்—மொய்ம்மனமுதல- மொய்த்திரு
க்கின்றமனமுதலாகிய— வேறாயுற்றவை-வேறுபாடாயிருந்தவைகள்—சிறிதுமில்லை-அற்பமுமில்லை—
உளத்தில்-(மனதிலுண்டான)—ஓர்பணதிபோல- ஒருகற்பனையைப்போல— நிற்றலுந்தோன்றும்- எ
ப்போதுநதோற்றும்—அத்தைநிகழ்த்துகின்றேன்- அதைச்சொல்லுகின்றேன்— அறிகுக- அறியக்க
டவாய்— கற்றவர்வியக்க- கல்வியையுடையவர்களதிசயிக்க— நன்றாய்- நன்றாயும்—புதுமையாம்-

அற்புதமாகியுமிருக்கின்ற—கதைநீகேட்பாய்-ஒரிதிகாசத்தைஸ்ரீராமா நீகேட்பாயாக—(எ-று.) - ※

(௰) (அ-கை) பிரமஸ்வரூபத் தைவில்வக்கனியாக வுருவகப்படுத்திக்கூறல் (கவி) கோடி மாகோடிகோடியிலக்கங்கள்கொண்டகாத,நீடியவகலமொவ்வாதகன்றதுநெடுமாகற்பம், ஷிடியநாளு முற்றாதது மிகப்பழையதேனும், பீடியன்மதிக்கொழுந்திற்பெரிது மெல்லியதுமாதோ (இ-ள்) கோடி-கோடியும்—மாகோடி-மகாகோடியும்—கோடியிலக்கங்கள்-இலட்சங்கோடிகளு(மென் னுமானவை)—கொண்டகாதம்-கொண்டிருக்கின்றகாவதங்கள்—நீடியவகலமொவ்வாதகன்றது- நீண் டவகலத்துக்கொப்பாகாமற்பருத்தது— நெடுமாகற்பம்- நீண்டமகாகற்பம்— ஷிடியநாளும்- வந்திறந்தகாலத்திலும்— முற்றாது- முதிராதது— அதுமிகப்பழையதேனும்- அப்பலமிகவும்புரா தனமானாலும்— பீடியல்- பெருமையியைந்த— மதிக்கொழுந்தில்- மூன்றாம்பிறையிலும்— பெரி துமெல்லியது-மிகவுமிருதுவானதாம்—(எ-று) - - - - - - - - - - - - - ※

(௰௧) (அ-கை) இ-து. (கவி) கற்பத்திற்பெருங்காற்றாலுங்கலக்குறாததுபேரண்டத், துற்பத்தி மூலமாவதொருவில்வப்பெருங்காயுண்டு, சொற்பற்றுமதன்பாற்றோன்றிதொலைவுறுபிரமாண்டங்க, ளற்பத்திலெண்ணவொண்ணுவதனியல்பின்னங்கேளாய் (இ-ள்.) கற்பத்தில்-கற்பா(ந்தத்திலடிக்கின் ற)—பெருங்காற்றாலும்-சண்டமாருதத்தினாலும்— கலக்குறாதது- கலக்கப்பட்டாததாகியும்—பேர ண்டத்துற்பத்தி- பிரமாண்டங்களுண்டாவதற்கு— மூலமாவது- காரணமாகியுமிருக்கின்ற—ஒருவில் வப்பெருங்காயுண்டு- ஒருவில்வக்கனியுண்டு—சொற்பற்றுமதன்பால்- சொல்லாற்குறிக்குமந்தவில்வ க்கனியினிடத்தில்— தோன்றித்தொலைவுறு பிரமாண்டங்கள்- உதித்துநசிக்கின்ற பிரமாண்டங்களான வை— அற்பத்திலெண்ணவொண்ணு- கொஞ்சத்திலெண்ணக்கூடாது—அதனியல்பு- அதன்றன்மை யை— இன்னங்கேளாய்- இன்னமுங்கேட்பாய்—(எ-று) - - - - - - - - - - ※

(௰௨) (அ-கை) இ-து (கவி) என்றும்பக்குவமாய்நின்றுமிறையுமூப்பிடர்செயாது, நின்றபல் கனியின்சாரமனைத்தையுநிறைந்துநிற்குந, துன்றியவதன்பான்மச்சைக்களவில்லைத்துன்னுமச்சை, யெ ன்றதுசிற்சொருபத்தியற்சமத்காரந்தானே (இ-ள்) என்றும்பக்குவமாய்நின்றும்- எப்போதும்பருவ மாகயிருந்தும்—இறையுமூப்பிடர்செயாது-சற்றும்மூப்புவருத்தாதது— நின்றபல்கனியின்சாரமனை த்தையும்-இருந்தவநேகபலங்களினதுசாரமுழுதையும்—நிறைந்துநிற்கும்-பூரணமாகப்பெற்றிருப் பது— துன்றியவதன்பால்- நிறைந்தவக்கனியினுள்ள—மச்சைக்களவில்லை-சதைக்குமட்டில்லை—துன் னுமச்சையென்றது-நிறைந்தசதையென்றது—சிற்சொருபத்து-ஞானவடிவத்தின்—இயற்சமத்காரந் தான்- சுபாவமாகியவிலாசமாம்—(எ-று) [இ-௩-க-ம்] பிரமசுபாபத்தைபறிவித்ததாம் - - - ※

(௰௩) (அ-கை) சிற்சத்தியின்விலாசத்தைமச்சையாகவுருவகப்படுத்திக்கூறல் (கவி) சஞ்சலரூபமா ஞ்சிற்சத்தியாஞ்சமத்காரத்தாற், செஞ்சவேசமமாந்தன்பாற்சிற்கண்டான்விரிந்ததோதில், விஞ்சியவி யோமமீதுகாலத்தின்விகாரமீது, துஞ்சலியனிதியீது துவள்வுறுதொழிலீதென்னும். (இ-ள்) சஞ்சலரூ பமாம்- சஞ்சலவடிவமாயிருக்கின்ற— சிற்சத்தியாம்- சிற்சத்தியென்னும்— சமத்காரத்தால்- சமத் காரத்தினால்— செஞ்சவே- செம்மையாக— சமமாந்தன்பால்- சமமானதன்னிடத்தில் — சிற்கண்டா ன்- (சிருட்டிக்கு) மறிவினுக்கானது— விரிந்ததோதில்- வியாபித்ததைச்சொல்லுமிடத்து— ஈது- இது—விஞ்சியவியோமம்-மிஞ்சினவாகாயம்—ஈது- இது— காலத்தின்விகாரம்- காலத்தின்கலைகள்— ஈது- இது—துஞ்சலினியதி- அறிவில்லாதநியதி— ஈது இது— துவள்வுறு- அசைகின்ற— தொழி லென்னும்- செய்கையென்றுகூறப்படும்—(எ-று) - - - - - - - - - - - ※

(௰௪) (அ-கை) இ-து (கவி) இதுபிரமாண்டமண்டமாசையினெழுங்கிதென்னும், விதமுறுவி ல்வக்காயுள்வியனசமத்காரமச்சை, யதுவனேயென்றலோடுமண்ணலுமுனைப்பான்ஞான, முதல்வநீவி ல்வக்காயாய்மொழிந்ததுதெரிந்ததன்றே (இ-ள்) இது- ஈது— பிரமாண்டமண்டம்- பிரமாண்டம ண்டபம்— ஈது- இது— ஆசையினெழுக்கென்னும்- திசைகளினெழுங்கென்றுசெல்லப்பட்ட— வி தமுறு-பேதம்பொருந்திய—வில்வக்காயுள்- வில்வபலத்தினுள்—மச்சை- தசையானது—அதுவனே- ஸ்ரீராமா— வியன்சமத்காரம்- பெருமையுள்ள (சிற்சத்தி) சமத்க்காரமாம்—என்றலோடும்- என் றுவசிட்டமுனிசொல்லவும்— அண்ணலுமுனைப்பான்- ஸ்ரீராமனுஞ்சொல்லுவார்— ஞானமுதல்வ- ஞானத்துக்குமுதன்மையாவனே— நீவில்வக்காயாய்- நீர்வில்வபலமாக— மொழிந்ததுதெரிந்தது- சொன்னதறிந்தேன்—(எ-று) [இ-உ-க-ம்] சிற்சத்தியின்வியாபகத்தைக்கூறியதாம் - - - - ※

(௰௫) (அ-கை) பூசணிப்பழமுமதன்மச்சையும்பிரமாண்டமுமேருமுதலியவையுமென்றல்போல ப்பிரமமுஞ்சகத்தும்பிரிவின்றிவிளங்குமெனல் (கவி) வில்வக்காயென்றதையபெருஞ்சித்தின்மிகுந்தசத் தைப் புல்லுற்றவகங்காராதிப்பொருளெலாஞ்சித்தின்மச்சை, சொல்லுற்ற விரண்டாமொன்றாய்த்தோ ன்றுசிற்சொருபத்துக்கு மல்லற்றேசிகனேயென்றும்பிரிவிலைமற்றுங்கேளாய். (இ-ள்) ஐய- ஆசாரிய னே—வில்வக்காயென்றது-வில்வப்பழமென்றுசொன்னது— பெருஞ்சித்தின்-பூரணஞானத்தின்—மி குந்தசத்தை-மேலானசற்பாவமே—புல்லுற்றவகங்காராதி- பொருந்தியவகம்பாவமுதலிய— பொரு ளெலாம்- வஸ்துக்களியாவும்—சித்தின்மச்சை-(அந்த)ஞானத்தினதுமச்சையேயாம்— சொல்லுற்ற- சொல்லப்பட்ட— இரண்டாம்- துவிதமாகியும்— ஒன்றாய்- ஏகமாகியும்— தோன்றுசிற்சொருபத்து க்கு- தோற்றாநின்றஞானஸ்வருபத்துக்கு— மல்லற்றேசிகனே- திடமுள்ளவாசாரியனே— என்றும் பிரிவிலை- எப்போதும்பேதமில்லை— மற்றுங்கேளாய்- இன்னமுங்கேட்பாய்—(எ-று.) - - - ※

(௰௬) (அ-கை) இ-து (கவி) புகல்பிரமாண்டமென்னும்பூசணிக்காயுண்மச்சை, யகல்வடமேருவா தியகிலமுமானவாபோல், மிகவுயர்சித்தாம்வில்வக்காயினுள்விரிந்தமச்சைப், பகர்பிரமாண்டமாதியுலக ங்கள்பலவுமென்றான். (இ-ள்.) புகல்பிரமாண்டமென்னும்- சொல்லியபிரமாண்டமென்கின்ற— பூச

ணிக்காயுள்-பூசணிப்பலத்தினுள்— மச்சை- சதையானது—அகல்வடமேருவாதி- மகாமேருமுதலி ய—அகிலமுமானவாபோல்-சகலமுமானதுபோல—மிகவுயர்சித்தாம்- மிகவுமேலாயிருக்குஞானமா கிய— வில்வக்காயினுள்-வில்வபலத்தினுள்— விரிந்தமச்சை- வியாபித்திருக்கின்றதசையானது— பகர்பிரமாண்டமாதி-சொல்லப்பட்டபிரமாண்டமுதலிய—உலகங்கள்பலவுமென்றான்- சகங்களனைத்துமென்றுசொன்னார்—(எ-று)இ-உ-க-ம்பிரமசத்தியேயாவுமாய்விளங்குமென்றறிந்தேனென்பதாம்

வில்வபலக்கதைமுற்றிற்று. ஆ கதை ருமக க்குக் கவிதை (௲சஅ௲)



# சிலைக்கதை.



(அ-கை) முற்கதையிற்சர்வம்பிரமவியாபகமென்பதையறிவித்து, அஃதுவேறுபோற்றோற்றினு ம்பிரமஸ்வரூபப்பிரகாசமேயென்பதைத்திருஷ்டாந்தமாயறிவிக்குநிமித்தஞ்சிலைக்கதையைநிருபிக்கிறார்

(க) (அ-கை) சித்தைச்சிலையாகக்கூறல் (கவி) வே. மீண்டுமோர்கதை விசித்திரவியப்பதுவீரநீகே ளென்று நீண்டமாதவனுரைசெய்வான்சிக் கென்றுநெருங்கிமெல்லியதாகி, யீண்டகன்றுவித்தாரங்க ண்முடிவின்றியிலங்குமோர்பெருங்கல்லு, மாண்டதுண்டதனிடைவிரிகமலங்கண்மலர்ந்தனவரம்பில் லை (இ-ள்) மீண்டுமோர்கதை- திரும்பவுமொருகதையை— விசித்திரவியப்பது- பேரழகானவதிசய த்தையுடையது—வீரநீகேளென்று- இராமாநீகேளென்று— நீண்டமாதவன்- மிகுந்தமகாதவத்தை யுடையவசிட்டமுனி— உரைசெய்வான்- சொல்லுவார்— சிக்கென்றுநெருங்கி- பிரியாமனெருக்கமு ற்று— மெல்லியதாகி- மிருதுவாகி— ஈண்டகன்று- இவ்வண்ணம்பரவி— வித்தாரங்கள்- விசாலங்க ள்— முடிவின்றி- இறுதியில்லாமல்— இலங்குமோர்பெருங்கல்லு- விளங்காநின்றவோர்மகாசிலை— மாண்டதுண்டு- மாட்சிமைப்பட்டதாகவுண்டு— அதனிடை- அச்சிலையினிடத்தில்— விரிகமலங்கள்- விரிந்ததாமரைப்புட்பங்கள்— மலர்ந்தனவரம்பில்லை- விகசித்திருக்கின்றதளவில்லை—(எ-று) - ※

(உ) (அ-கை) சிற்சுபாவமானசகத்தைச்சித்திரமாகக்கூறல். (கவி) இலைசடம்மிற்றுங்கோர்த்தன நெருங்கினவெதிர்சிலதெரியாத, சிலதெரிந்தனமீதுதாளாயினசிலசிலகீழ்த்தாளாய், நிலைகொண்மூலமி ல்லாதனசிலவிவற்றிடையெலாநிகழ்சங்கம், பலதிரண்டனசக்கரமுடிவிலே பண்ணியபதுமம்போல். (இ-ள்) இலைகள்- பத்திரங்கள்— தம்மிற்றுங்கோர்த்தன- ஒன்றிலொன்றுசேர்ந்தன— நெருங்கின நெருக்கமுற்றன— எதிர்சிலதெரியாத- நேரேசிலதுதெரியாதன— சிலதெரிந்தன- சிலதுதெரிந்த ன— சிலமீதுதாளாயின- சிலதுமேலேதாளாயின— சிலகீழ்த்தாளாய்- சிலதுகீழேதாளான—சிலநிலை கொள்- சிலதுநிலையான— மூலமில்லாதன- வேரில்லாதன— இவற்றிடையெலாம்- இதன்மத்தியெ ல்லாம்— நிகழ்சங்கம்- விளங்குகின்றசங்கங்கள்— பலதிரண்டன- அநேகந்திரளாயின— சக்கரம்-சக்கரங்களும்—பண்ணியபதுமம்போல்-செய்ததாமரையைப்போல—முடிவில்-அளவில்லாதன (எ-று)

(ங) (அ-கை) சிலையன்றுசித்தேயெனல் (கவி) என்றபோதுசாலக்கிராமப் பெயரிடத்திலேநெடு மாய, னின்றகுன்றிலேகண்டனனனையதோர்நெடுஞ்சிலையெனக்கூறும் வென்றிவீரனைவசிட்டனுநோ க்கியேவெற்புநீமுதற்கண்டதன்றுபேரண்டநிலைமையுள்ளேயுறையறிவையேசிலையென்றேன் (இ-ள்) என்றபோது- இப்படியென்றுவசிட்டமுனிசொன்னவளவில— சாலக்கிராமம்- சாலக்கிராமமென்னி ன்ற— பெயரிடத்தில்- நாமத்தையுடையஸ்தானத்தில்— நெடுமாயன்- நெடியமாலானவர்— நின்ற குன்றில்- நிற்கப்பட்டமலையில்— அனையது- அப்படிப்பட்டதான— ஓர்நெடுஞ்சிலை- ஒருயர்ந்தகல் லை—கண்டனனென- பார்த்தேனென்று— கூறும்வென்றிவீரனை- சொன்னவெற்றியையுடையஸ்ரீராம னை—வசிட்டனுநோக்கி- வசிட்டமுனியும்பார்த்து—வெற்பு-மலையானது—நீமுதற்கண்டதன்று- நீமு ன்புபார்த்ததன்று—பேரண்டநிலைமை-பெரிதானவண்டத்தினிலைமைகளானவை—உள்ளேயுறை-அகத் தில்வாசஞ்செய்கின்ற— அறிவையே-சித்தையே— சிலையென்றேன்- கல்லென்றுசொன்னேன்(எ-று)

(ச) (அ-கை) சித்துக்குஞ்சகத்துக்கும்வேறுபாடின்மையைக்கூறல் (கவி) பலவுமொன்றுமெய் யாகியசகங்களுட்பயின்றசித்துயர்கல்லா, நலனுறச்செறிந்திறுகியொன்றாகியேநவின்றசிற்சிலையின்பா லுலகசாலங்களுறைந்திடும் வானிலேயுறைதருகாற்றேபோ, னிலன்விண்கால்கிரி திசையெலாமேவியு நெடுஞ்சிலைபுரையாகா. (இ-ள்) பலவும்- அநேகமும்— ஒன்றும்- ஏகமும்— மெய்யாகியசகங்கள்- உண்மையாயிருக்கின்றவுலகங்கள்— உட்பயின்றசித்து- அகத்திற்றங்கியஞானமானது—உயர்கல்லாம்- மேலானசிலையாகும்— நலனுறச்செறிந்திறுகி- நன்றாய்நெருங்கிக்கெட்டியாய்—ஒன்றாகிநவின்ற-ஏக மென்றுசொல்லிய— சிற்சிலையின்பால்-ஞானக்கல்லினிடத்தில்—உலகசாலங்கள்-சகக்கூட்டங்கள்—வா னில்-ஆகாயத்தில்—உறைதருகாற்றேபோல்-வசிக்கின்றவாயுவைப்போல—உறைந்திடும்-வாசஞ்செய் யும்—நிலன்-பூமியும்—விண்-ஆகாயமும்—கால்காற்றும்-கிரி-மலையும்—திசை-திக்குமாகிய—எல்லா மேவியும்-இவையாவுங்கூடியும்—நெடுஞ்சிலைபுரையாக-பெரியகல்லிரந்தரமுடையதாகா—(எ-று) ※

(ரு) (அ-கை.) சித்திற்சகநிச்சலமாய்விளங்குமெனல் (கவி) செவ்விதாங்கல்லில்வனசமுஞ்சங்கமு ந்திகிரியுமெனுங்கிற்று வவ்வுகின்றதோர்சுழுத்தியாமவத்தையாய்மருவுமதுபோலத், தவவில்சித்தினு ளுலகங்கண்முழுவதுந்தங்குமால்வேறன்று, யெவ்விடத்திலியாதெப்படியிருந்த தவ்விடத்தினப்படி யென்ப. (இ-ள்) செவ்விதாங்கல்லில்- அழகானகல்லில்— வனசமும்- தாமரையும்— சங்கமும்- திகிரி

யும்— சக்கரமும்— எனுங்கீற்று- என்கின்றவிரோகைகள்— வவ்வுகின்றது- பொருந்துகின்றது—ஓர் சுழுத்தியாமவத்தையாய்-ஒப்பற்றசுழுத்தியவத்தையாக— மருவுறும்-பொருந்தும்—அதுபோல- அதைப்போல— தவ்விச்சித்திநுள்- குற்றமற்றஞானத்தின்கண்— உலகங்கண்முழுவதும்- சகங்களியாவும்— வேறின்றி- வேறுபாடில்லாமல்— தங்கும்- இருக்கும்— எவ்விடத்தில்- எந்தவிடத்தில்—யாதெப்படியிருந்தது- ஏதெப்படியிருந்ததோ— அவ்விடத்தின்- அந்தவிடத்தில்—அப்படியென்ப- அப்படியேயிருக்குமென்றுசத்துக்கள்செல்லுவார்சள் — (எ-று) - - - - - - - - *

(கூ) (அ-கை) சகத்துசிற்ப்ரகாசமாய்விளங்குமெனல். (கவி) நானாவாம்பணதிகளுண்ணண்ணுகினுமொருமையேநண்ணுங்கற்போ, லானதசகங்களையுள்ளடக்கினும்வேற்றுமைமேவாதறிவொன்றேயாங், கானூர்பங்கயமெல்லாம்வேறன்றிக்கன்மயமாங்கணக்கேபோல,வானூர்சிற்சொருபத்தைப்பிரியாததன்மயமாம்வையமெல்லாம் (இ-ள்) நானாவாம்பணதிகள்- பலவிதமாகியவிரோகைகள்— உண்ணண்ணுகினும்- அகத்திற்பொருந்தினாலும்— ஒருமையேநண்ணுங்கற்போல்- ஒற்றுமையேபொருந்துகின்றசிலையைப்போல— ஆனதசகங்களை - நீங்காதவுலகங்களை — உள்ளடக்கினும்- அகத்திலடக்கியிருந்தாலும்—வேற்றுமைமேவாது- பேதம்பொருந்தாமல் — அறிவொன்றேயாம்- சித்தொன்றுமேயாம்— கானூர்பங்கயமெல்லாம்- காடாகநிரம்பியதாமரைகளனைத்தும்— வேறன்றி- வேறுபடாமல்— கன்மயமாங்கணக்கேபோல- கல்லாகவேயிருக்கும்ஞாயத்தைப்போல—வானூர்சிற்சொருபத்தை-பெருமைபொருந்தியஞானஸ்வரூபத்தை— பிரியாது- வேறுபடாமல்— வையமெல்லாம்- சகமனைத்தும்— அதன்மயமாம்- அச்சித்துமயமாகும்— (எ-று.) - - - - - - - - - - *

(எ) (அ-கை) சகமுற்பத்திலயமின்றியெப்போதுஞ்சித்தில்விளங்குமெனல் (கவி) விரிசிலையிலெழுதியபங்கயமாதியுதித்தத்தமித்ததுண்டோ, திரிபுவனங்களுஞ்சித்திலப்படியேவில்வக்காய்செறிந்தமச்சைப், பரிசினின்முன்னுரைத்ததுபோன்முடிவில்லா விகாரத்தாற்பரந்தவண்டந், துரிசிலாவறிவினிடைதுன்னுமால்வேறென்றுசொல்லவொண்ணு (இ-ள்) விரிசிலையிலெழுதிய- பரந்தகல்லிற்பொறித்த— பங்கயமாதி- தாமரைமுதலியவை— உதித்து- உண்டாகி— அத்தமித்ததுண்டோ- இறந்ததுண்டோ— சித்தில்- ஞானத்தில்— திரிபுவனங்களும்- மூன்றுலகங்களும்— அப்படியே- அந்தப்ரகாரமேயாம்—வில்வக்காய்-வில்வபலத்தில்—செறிந்தமச்சை- நிறைந்தமச்சையினது— பரிசினின்முன்னுரைத்ததுபோல்-கிரமமுன்சொல்லியதுபோல— முடிவில்லாவிகாரத்தால்- அளவற்றவேறுபாட்டினால்— பரந்தவண்டம்- விரிந்தவண்டங்களானவை— துரிசிலாவறிவினிடைதுன்னும்- குற்றமற்றசித்தினிடத்தின்றையும்— வேறென்றுசொல்லவொண்ணு-வேற்றுமையென்றுசொல்லக்கூடாது (எ-று) *

(அ) (அ-கை) பிரமசத்தேப்ரபஞ்சமாகவிளங்குமெனல். (கவி) பிரமத்தின்சற்பாவவடிவானபேருலகின்பேதமெல்லாம், பரமார்த்தசுழுத்தியாய்ச்சாந்தமாய்ச்சமமாகிப் பயின்றசித்தாய்க், கரமுற்றதனுருவாங்கண்ணுகுங்கல்விடைத்தாமரைகள்போலத், திரமற்றசிருட்டியெலாம்பயனில்லையுடல்களெலாஞ்சேராதென்றும். (இ-ள்) பிரமத்தின்- பிரமத்தினது— சற்பாவவடிவான- சற்பாவமேரூபமாகியிருக்கின்ற—பேருலகின்பேதமெல்லாம்-பெரியசகத்தின்வேற்றுமையாவும்—பரமார்த்தம்- உண்மையாக— கல்லிடை-சிலையினிடத்திலிருக்கின்ற—தாமரைகள்போல- பதுமங்கள்போல— சுழுத்தியாய்- சுழுத்தியாகியும்—சாந்தமாய். சாந்தமாகியும்— சமமாகி- சமத்துவமாகியும்—பயின்றசித்தாய்- சொல்லப்பட்டஞானமாகியுமிருக்கின்ற— கரமுற்றதனுருவாம்- கைவசப்பட்டதனதாத்மஸ்வரூபமாகிய—கண்ணுகும்-இடமாகும்—திரமற்ற-நிலையில்லாத—சிருட்டியெலாம்-சிருட்டிகளனைத்தும—பயனில்லை-ப்ரயோசனமில்லாததாம்—உடல்களெலாம்-வடிவங்களனைத்தையும்—என்றுஞ்சேரா-எப்போதுஞ்சேராதனவாம்(எ-று.)[இ-அ-க-ம்] கல்லிற்றோற்றுகின்றசித்திரங்களதற்குவேறுபடாமலதுவாகவிளங்குதல்போலபிரமத்திற்றோற்றுகின்றசகமதற்குவேறுபடாமற் பிரமமாகவேவிளங்குமென்பதாம்

சிலைக்கதைமுற்றிற்று. ஆ கதை ௩௰௨ இ கவிதை (௲௪௯௪)



# அருச்சுனன்கதை.



(அ-கை) மூற்கதையிற்று விதம்போலத்தோற்றுவதுமத்துவி தாநந்தமாதலாற்சர்வம்பிரமமயமென்பதைப்ரத்யக்ஷ மாகத்தரிசிப்பித்துயிவ்வனுபவிக்குயுத்தமுதலிய செய்கையும்வேறுபடாவென்பதைத்தெரிவிக்கு நிமித்தமேனடக்கு மருச்சுனன்கதயை நிரூபிக்கிறார் - - - - *

(க) (அ-கை) சர்வம்பிரமமயமாய்விளங்கப்புரியட்டகசரீரம்வந்தகாரணமியாதெனிலதற்குத்தரங்கூறல் (கவி) என்னனுமேயறிவதெலாமறிவுற்றேன்காண்பனவுமெல்லாங்கண்டே, னுன்னருளாலென்னாநல்லுணர்வுவளர்வுறமீட்டுமொன்றுகேட்கேன் றுன்னுலைசையாயிரமட்டமைப் பதாய்க்கண்ணடிபோற்றோன்றுகின்ற முன்னுபுரியட்டகத்தின்வடிவேதுமொழியென்னமுனிவன்சொல்வான் (இ-ள்) என்னனுமே- இப்படியென்றுவசிட்டமுனிசொல்லவும்— அறிவதெலாம்- தெரியவேண்டுவனயாவையும்—அறிவுற்றேன்- தெரிந்துகொண்டேன்—காண்பனவுமெல்லாம்- பார்க்கவேண்டுவனயாவையும்— உன்னருளால்- உமதுகிருபையினால்— கண்டேனென்னானும்- பார்த்தேனென்றாலும்— நல்லுணர்வு- சுயபோதமானது— வளர்வுற- வளரும்பொருட்டு— மீட்டுமொன்றுகேட்கேன்- திரும்பவுமொன்று

சேட்கின்றேன்— துன்னுலகை- நெருங்கியசகத்தை— ஆயிரமட்டமைப்பதாய்- அநேகசத்தாமுண்
டாக்குவதாய்— கண்ணடிபோல்- ஆடியிற்சாயைபோல—தோற்றுகின்ற- தோற்றுநின்ற—முன்னு
புரியட்டகத்தின்- கருதப்பட்டபுரியட்டகசரீரத்தினது—வடிவேது- உருவம்யாது—மொழியென்ன-
சொல்லுமென்றுகேட்க— முயிவன்சொல்வான்- வசிட்டமுனிசொல்லுவார் (எ-று) - - - ※

(உ) (அ-கை) பிரமப்ரசாசமானசிவஸ்புரணமேபுரியட்டகசரீரமாதல் (கவி) ஆதிமுடிவின்றிசேச
கங்களின்வித்தாம்பிரமமடுத்தவண்ணம், பேதமுறமேவுதலுஞ்சீவனுநாமென்றுபேசித்தெண்ண,மேக
முறநாமெனன்றுமனனமுறமனமாகுமியைந்தபோதம், போதமுறுநிச்சயத்தாற்புந்தியாம்புலன்களா
ற்பொறிகளாகும் (இ-ள்) ஆதிமுடிவின்றி- ஆதியந்தமில்லாததாகியும்— சகங்களின்வித்தாம்- உலக
ங்களின்விதைபாகியுமிருக்கின்ற— பிரமம்- பிரமமானது— அடுத்தவண்ணம்- கிட்டினப்ரசாரம்—
பேதமுறமேவுதலும்- வேறுபாடடையவும்— சீவனும்- சீவனாகும்—நாமென்று- யானென்று— ஏ
ண்ணம்பேதித்து- நினைவுவேற்றுமைப்பட்டு— ஏதமுறநானென்றும்- குற்றமுறவசங்காரமென்ப
தாம்— மனனமுறமனமாகும்- மனனிக்கமனமாகும்— இயைந்தபோதம்- இசைந்தவறிவானது—
போதமுறுநிச்சயத்தால்- அறிகின்றநிச்சயத்தினுல்— புந்தியாம்-புத்தியாகும்—புலன்களால்-விடயங்
களால்— பொறிகளாகும்-இந்திரியங்களாகும்—(எ-று) - - - - - - - - - - - - - ※

(ஙு) (அ-கை) இ-து (கவி) காயமெனுநினைவாலேகாயமாங்கடநினைவாற்கடமதாகு, மேயசுபா
வத்திந்தவடிவுபுரியட்டகமாமென்பர்வீரா, தூயவறிஞன்செய்வோன்புசிப்பவன்சான்றென்றன்முதற்
றுரிசிலோடி, மேயபெயர்சீவனுமறிவுபுரியட்டகமாய்விளம்புமன்றே (இ-ள்) காயமெனுநினைவால்-
சரீரமென்கின்றவெண்ணத்தினுல்— காயமாம்- சரீரமாகும்— கடநினைவால்- கலசமென்னுங்கருத்தி
னுல்— கடமதாகும்- கலசமேயாகும்—ஏயசுபாவத்து- பொருந்தியசுபாவத்தையுடைய— இந்தவடி
வு- இவ்வுருவத்தை— வீரா- ஸ்ரீராமா— புரியட்டகமாமென்பர்- புரியட்டகமாகுமென்றுசத்துக்கள்
சொல்லுவார்கள்— தூயவறிஞன்- பரிசுத்தமானஞாதா— செய்வோன்- கருத்தா—புசிப்பவன்-போக்
தா— சான்று- சாட்சி— என்றனமுதல்- என்றுசொல்லுவதுமுதலியவற்றின்— துரிசிலோடி-வேகமா
கச்சென்று— மேயபெயர்- மேவியநாமமுள்ள— சீவனுமறிவு- சீவனுகியசித்தானதை—புரியட்டகமா
ய்விளம்பும்- புரியட்டகமென்றுசொல்லப்படும்(எ-று) [இ-ஙு-க-ம்]சீவசைதன்யத்திலுதித்தவகங்கார
மனது புத்தி சத்தம் பரிசம் ரூபம் ரசங்கெந்தமென்னுமெண்வகையும்புரியட்டகசரீரமாமென்பதாம்.

(ச) (அ-கை) புரியட்டகத்தைச்சொல்லி யதன்விருத்திகண்முதலிய சகத்துமாத்மஸ்வரூபமாய்வி
ளங்குமென்பதை கிதாசாரந்தாற்போதிக்கத்தொடங்கல். (கவி) கடியபுரியட்டகத்தின்வசத்தாலேகன
வின்மேற்கனவுபற்றி, நெடியபலபொய்காணுநெறிபோலவிச்சகமுநிகழுமன்றே, படியளந்தோனரு
ளுவதோர்நெறிகேளாயந் நெறியைப்பார்த்தன்பற்றி, படிமுடிவில்பதசசீவ ன்முத்தனுய்ச்சுகசீவியா
குமன்றே (இ-ள்) கடியபுரியட்டகத்தின்- புதுமையாயிருக்கின்றபுரியட்டகத்தினுடைய— வசத்தா
ல்- வயத்தினுல்— கனவின்மேற்கனவுபற்றி- சொற்பனத்தில்மேற்சொற்பனம்பிடித்து— நெடியப
லபொய்காணும்- மிகவுநாநாவிதமானமித்தியாகற்பனைகளைக்காணுகின்ற— நெறிபோல- தன்மையை
ப்போல— இச்சகமுநிகழும்- இவ்வுலகமும்விளங்கும்—படியளந்தோன்- பூமியையளந்தகிருஷ்ட்ண
சுவாமியானவர்—அருளுவது- அனுக்கிரகிப்பதாகிய—ஓர்நெறிகேளாய்- ஒருமார்க்கத்தைக்கேட்பாய்—
அந்நெறியை- அந்தமார்க்கத்தை— பார்த்தன்பற்றி- விசயன்பிடித்து— அடிமுடிவில்பத- ஆதியந்த
மில்லாதபிரமபதத்தில்—சீவன்முத்தனுய்- சீவன்முத்தனுகி—சுகசீவியாகும்- சுகசீவியாவன்—(எ-று) ※

(ரு) (அ-கை)இ-து (கவி) வெருவாமலருச்சுனனுட்கழிப்பதுபோனுட்கழிப்பாய்வீரவென்னப்,
பெருமானேயருச்சுனனெப்போதுதிப்பனவனுக்குப்பின்னேகாந்த, னருளாலெவ்வாறுபதேசிப்பதெ
னக்கேட்டருளுமன்னலுக்குத், திருமால்வந்தருச்சுனர்க்குமேலுணர்த்து நெறிவசிட்டன்செப்பலுற்
ருன் (இ-ள்) வெருவாமல்- பயப்படாமல்— அருச்சுனன்- விசயனுனவன்— நாட்கழிப்பதுபோல்-
காலங்கழிப்பதைப்போல—வீர- ஸ்ரீராமா— நாட்கழிப்பாயென்ன- காலத்தைத்தள்ளுவாயென்றுவ
சிட்டமுனிசொல்ல— பெருமானே- மகானே— அருச்சுனன்- விசயனுனவன்—எப்போதுதிப்பன்-
எப்பொழுதுபிறப்பான்— அவனுக்கு- அவ்வருச்சுனனுக்கு— பின்னேகாந்தன்- இலக்ஷுமிநாயகனுனகி
ருஷிட்ணசுவாமியானவர்— அருளால்- கிருபையினுல்— எவ்வாறுபதேசிப்பதென- எப்படியுபதேசிப்
பதென்று—கேட்டருளுமன்னலுக்கு- கேட்ட ஸ்ரீராமருக்கு— திருமால்வந்து- அரிகிருஷ்ட்ணனுகவெ
ழுந்தருளி— அருச்சுனற்கு- விசயனுக்கு—மேலுணர்த்துநெறி- இனியுபதேசிக்குமார்க்கத்தை— வசி
ட்டன்செப்பலுற்ருன்- வசிட்டமுனிசொல்லத்தொடங்கினுர்— (எ-று) [இ-உ-க-ம்] சர்வம்பிரமம
யமென்பதையறிவிக்கத் தொடங்கினதாம் - - - - - - - - - - - - - - - - - - ※

(சா) (அ-கை) இயமன்றபஞ்செய்யுங்காலநிரூபணம் (கவி) உகனுலுமுடிவுதொறுமுயி ரனைத்து
ஞ்செற்றவினையுன்னிக்கூற்று, தகவானதபஞ்செய்யுமொருகாலெட்டாண்டுதசவருடமோர்கால், மிகு
மீராறுண்டொருகாலையாண்டோர்காலோர்கான்மீண்டேழாண்டு,துகடீரும்பதினுறுண்டொருகாலிப்ப
டிபலகாற்றுணிந்துநோற்கும் (இ-ள்)உகனுலுமுடிவுதொறும்-சதுர்யுகமுடிவுகடோறும்—உயிரனைத்
தும்-சீவர்களியாவையும்—செற்றவினை- கொனறதொழிலை—கூற்றுனனி- யமனினைத்து—தகவான-த
குதியாகிய—தவஞ்செய்யும்- தவத்தைச்செய்வான்— ஒருகாலெட்டாண்டு- ஒருகாலமெட்டுவருடமு
ம—ஓர்காற்றசவருடம்- ஒருகாலமபத்துவருடமும்— ஒருகான்மிகுமீராறுண்டு- ஒருகாலமிகுந்தபன்னி
ரண்டுவருடமும்—ஓர்காலையாண்டு- ஒருகாலமைந்துவருடமும்—ஓர்கான்மீண்டேழாண்டு- ஒருகாற்றி
ரும்பவேழுவருடமும்— ஒருகாற்றுகடீருமபதினுறுண்டு- ஒருகாலங்குற்றமற்றபதினுறுவருடமும—
இப்படி- இந்தப்ரகாரம்—பலகாற்றுணிந்துநோற்கும்-பலகாலந்தெளிந்துதவஞ்செய்வன்—(எ-று)

(எ)(அ-கை)அந்தந்தக்காலத்திற்பூபாரநீக்குதல் (கவி) இப்படியேயமன்றவம்பூண்டோருயிருஞ்சொல்லாமலிருந்தபோது,மொய்ப்புறுபல்லுயிராலும்பெயர்விடமற்றறநெருங்குமூரிஞாலமப்படியினாலந்தவிசித்திரமாம்பலபூதமநேகமான, துப்புறுமூகங்களாற்பூபாரந்தொலைவிக்குந்தொன்றுதொட்டே (இ-ள்.) இப்படியேயமன்- இவ்வண்ணமேயமனானவன்— தவம்பூண்டு- தவத்தைத்தரித்து— ஒருயிருஞ்சொல்லாமல்- ஒருசீவனையுங்கொலைசெய்யாமல்— இருந்தபோது- இருந்தகாலத்தில்— மொய்ப்புறுபல்லுயிராலும்- நெருங்கியவநேகசீவர்களாலும்—பெயர்விடமற்று- பேர்தலுக்கிடமில்லாமல்— மூரிஞாலம்- பழையசகமானது— அறநெருங்கும்- மிகவுநெருங்கியிருக்கும்— அப்படியினால்- ஆசையினால்— அந்தவிசித்திரமாம்பலபூதம்- அந்தநாநாவிதமானபலசீவர்கள்—அநேகமான- அளவிறந்தனவாயின— துப்புறுமூகங்களால்- சகாயமுடையயுத்திகளினால்— தொன்றுதொட்டு- ஆதிமுதல்— பூபாரந்தொலைவிக்கும்- (கண்ணன்)பூமிபாரத்தைநீக்கிவிக்கும்— (எ-று) - - - - - *

(அ) (அ-கை ) உயிர்களையிமிசைசெய்தபாபநீங்கும்பொருட்டியமன்றவஞ்செய்தல். (கவி) இவ்வகையேநாலுகமும்பல்லுயிருமுலகமுதலிறந்துபோன, வவ்வகையோரெண்ணில்லையாதித்தன்றந்தமனந்தவண்ணங் கைவளர்பல்லுயிர்கொன்றுகரந்தநாளுறுபாவங்கட்டழிப்பா,னெவ்வமறுதவம்பூண்டுபன்னீராண்டேகாந்தத்திருந்தவெல்லை (இ-ள்.) இவ்வகையே- இந்தப்ரகாரமே—நாலுகமும்- நான்குயுகமும்—பல்லுயிரும்- அநேகசீவர்களும்— உலகமுதலிறந்துபோன- சகமுதலியயாவுமழிந்துபோயின— அவ்வகையோரெண்ணில்லை- அவ்வண்ணநீங்கினதோர்கணக்கில்லை—ஆதித்தன்றந்தமன்- சூரியன்பெற்றயமனானவன்—அந்தவண்ணம்- அந்தப்ரகாரம்—கைவளர்பல்லுயிர்கொன்று- ஒழுங்காகவளர்ந்தபலசீவர்களையுங்கொலைசெய்து— கரந்தநாள்- மறைந்தகாலத்தில்—உறுபாவங்கட்டழிப்பான்- பொருந்தியபாவமற்றபந்தத்தைக்கெடுக்கும்பொருட்டு— எவ்வமறுதவம்பூண்டு- துன்பமில்லாததவசைத்தரித்து—பன்னீராண்டு- பன்னிரண்டுவருடம்—ஏகாந்தத்திருந்தவெல்லை- தனித்திருந்தகாலத்தில் (எ-று.) நியதிப்ரகாரங் கொன்றாலுமிதுதுற்கிருத்தியமென்றஞ்சித்தவஞ்செய்தானெனக்கொள்க *

(கூ) (அ-கை )இப்போதுள்ளபூபாரநீக்குதற்பொருட்டுத்திருமாலிருவடிவாகவவதரித்தல் (கவி) அதனாலேசாவில்லாப்பல்லுயிராலறநெருங்குமதிபாரத்தை, யெதினாலேதீர்வமெனத்திருமாலைச்சரணகவெய்தும்பூமி, மதுசூதனிருவடிவாயவனியிலேயவதரிக்கும்வசுதேவற்குச்,சுதனாகும்வடிவொன்றுபாண்டுவுக்குச்சுதனானசொரூபமொன்றே (இ-ள்.) அதனால்- அதினால்— சாவில்லாப்பல்லுயிரால்- இறவாதபலசீவர்களினால்— அறநெருங்கும்- மிகவுநெருங்கியிருக்கின்ற— அதிபாரத்தை- மிகுந்தபளுவை—எதினாலேதீர்வமென- யாதினால்நீங்குவோமென்று—திருமாலை- விஷ்ட்ணுவை— பூமிசரணகவெய்தும்- பூமிதேவியபையமாகவடைவாள்— மதுசூதன்- திருமாலானவர்— இருவடிவாய்- இரண்டுருவமாக— அவனியிலவதரிக்கும்- பூமியிலவதாரஞ்செய்யும்— (அதில்) வசுதேவர்க்கு- வாசுதேவருக்கு— சுதனாகும்வடிவொன்று- புத்திரனானதொருவடிவம்— பாண்டுவுக்கு- பாண்டவனுக்கு— சுதனானசொரூபமொன்று- புத்திரனானவடிவமொன்று— (எ-று) - - - - - - - - - - *

(ய) (அ-கை ) தனக்குத்தானேயுபதேசித்தல் (கவி) வாசுதேவப்பெயருமருச்சுனனாமமும்படைத்துவருமப்போதில், வீசுதார்திரிதராட்சதன்மைந்தர்கிளைஞரொடும்விசயன்மேலேயேசுபோர்செய்யவருந்தன்கிளைஞர்மரணத்துக்கிரங்கிப்பாத்த,னாசுசராசனமவளையானதுபொருட்டாலுபதேசமருளுமாயோன் (இ-ள் ) வாசுதேவப்பெயரும்- வாசுதேவனென்னுநாமத்தையும்—அருச்சுனனாமமும்- விசயனென்னுநாமத்தையும்—படைத்துவருமப்போதில்- தரித்துவருகின்றவக்காலத்தில்—வீசுதார்- (மணம்)வீசாநின்றமாலையை(யணிந்த)— திரிதராட்சதன்மைந்தர்- திரிதராட்சதனுடையபுத்திரர்களானதிரியோதனாதியர்கள்—கிளைஞரொடும்- பந்துசனங்களுடன்—விசயன்மேல்- அருச்சுனன்மேல்—ஏசுபோர்செய்யவரும்- குற்றமுள்ளயுத்தத்தைச்செய்யவருபவர்களாகிய— தன்கிளைஞர்மரணத்துக்கு- தனதுறவினர்களுடையவிறப்புக்கு— பாத்தனிரங்கி- அருச்சுனனானவனிரக்கமுற்று—ஆசுசராசனம்வளையான்- சீக்கிரமாகவில்லைவளையாதவனானான்— அதுபொருட்டு மாயோன்- அதுநிமித்தங்கிருஷ்ட்ணரானவர்— உபதேசமருளும்- உபதேசிப்பார்—(எ-று) [இ-ரு-ச-ம்] பூபாரந்தீர்க்குநிமித்தந்திருமாலவதாரஞ்செய்துபதேசிப்பதைத்தெரிவித்ததாம் - - - - - - - - - - - *

(யக) (அ-கை.) சரீரத்தின்கண்ணுள்ளசரீரிக்குச்சநநமரணமின்றெனல். (கவி) விசையனெனும்பெயருடற்குவிண்டுவெனுஞானவுடல்விளம்புமுண்மை,யிசைவுறக்கேளநந்தமாய்த்தெரிவரிதாய்முடிவற்றுக்குமுன்னை, யசைவறப்பாரருச்சுனவறிவுருவங்குற்றங்களின்றிநிற்குந், தசையுடலிலொருக்காலும்பிறப்புறாய்பிறப்புறாய்ச்சத்தாய்நின்றாய் (இ-ள் ) விசையனெனும்- விசயனென்கின்ற—பெயருடற்கு- நாமத்தையுடையசரீரிக்கு— விண்டுவெனும்- கிஷ்ட்ணனென்கின்ற— ஞானவுடல்- ஞானசரீரியானது— விளம்புமுண்மை- சொல்லாநின்றதத்துவத்தை— இசைவுறக்கேள்- நன்றாகக்கேட்பாய்— அநந்தமாய்- அந்தமில்லாததாய்—தெரிவரிதாய்- அறிதற்கரியதாய்— அடிமுடிவற்று- ஆதியந்தமில்லாமல்— இருக்குமுன்னை- இருக்கின்றவுனதாத்மஸ்வரூபத்தை— அருச்சுனா- பார்த்தா— அசைவறப்பார்- சலனமின்றிப்பார்— அறிவுருவம்- (அப்போது)ஞானஸ்வரூபமானது — குற்றங்களின்றிநிற்கும்- குற்றமற்றதாயிருக்கும்— தசையுடலிலொருக்காலும்பிறப்புறாய்- மாமிசசரீரத்திலொருகாலத்திலுமசெனியாய்— இறப்புறாய்- மரியாய்—சத்தாய்நின்றாய்- சத்தாகவேயிருந்தாய் (எ-று.)*

(யஉ) (அ-கை ) ஆத்மஸ்வரூபத்தைநிரூபித்தஃதுதயமாம்பொருட்டுச்சங்கத்யாகம்பிரமார்ப்பணமீஸ்வரார்ப்பணஞ்சந்யாசமயோகம்ஞானமெனுமிவ்வாறையுநிரூபித்தல். (கவி) பிறப்பில்லையிறப்பில்லைய்வமென்னவடிவில்லைப்பின்புண்டாகா, வறப்பழுதாய்நித்தமாயழிகின்றசரீரத்திலழியாச்சற்று, முறப்புரியுநதொழில்களீயோயாதுசங்கத்தையொருக்கிச்செய்வாய், யிறப்பில்பிரமார்ப்பணவாசா

முறிற்பிரமமாயிமைப்பினிற்பாய் (இ-ள்) பிறப்பில்லையிறப்பில்லை- சநநமரணமில்லை— இவனென்
னவடிவில்லை- இவனென்னும்படியானவுருவமில்லை— பின்புண்டாகா- பின்புதித்தவில்லை— அறப்பழ
தாய்- மிகவும்புராதனமாகியும்— நித்தமாய்- நித்தியமாகியு(மிருக்கின்றநீ)— அழிகின்றசரீரத்தில்-
கெடாநின்றவுடலி(லிருந்தும்)— சற்றுமழியா-கொஞ்சமுங்கெடாது— உறப்புரியுந்தொழில்களை-
பொருந்தச்செய்யுங்கிரிகைகளை— நீயோயாது- நீவிடாமல்— சங்கத்தையொருக்கிச்செய்வாய்-பலாபே
ட்சையைத்தள்ளிச்செய்வாய்— இறப்பில்பிரமாற்பணவாசாரமதில்- நசியாதபிரமாற்பணமானவொ
ழுங்கையடைந்தால்—இமைப்பிற்பிரமமாய்நிற்பாய்-க்ஷணத்திற்பிரமஸ்வரூபமாயிருப்பாய்(எ-று) *

(௰௩) (அ-கை.) இ-து (கவி) ஈசனிடத்தெப்பொருளுஞ்சமற்பித்துமிகுமீசன்வடிவமெய்தி, பா
சமுறுமுயிர்க்கெல்லாமீசனுய்ச்சங்கற்பப்பற்றுமாய்த்து, நீசமனுய்ச்சாந்தமனத்தினனுகிமுனியாய்ச்ச
ந்நியாசியாகி, யேசறுயோகியுஞானவானுமாய்முத்தியினையெய்துகென்ன (இ-ள்) ஈசனிடத்து- ஈ
ஸ்வரனிடத்தில்— எப்பொருளுஞ்சமற்பித்து- எந்தவஸ்துவையுஞ்செலுத்தி— மிகுமீசன்வடிவமெய்
தி- மேலானவீஸ்வரஸ்வரூபத்தையடைந்து— பாசமுறுமுயிர்க்கெல்லாம்-பந்தமடையுஞ்சீவர்களனை
த்திற்கும்— ஈசனுய்- ஈஸ்வரனுகி— சங்கற்பப்பற்றுமாய்த்து— சங்கற்பத்தின் பிடிப்பைக்கெடுத்
து— நீசமனுய்- நீசமத்துவனுகியும்— சாந்தமனத்தினனுகி-சாந்தமனதையுடையவனுகியும்— மு
னியாய்- தவத்தையுடையவனுகியும்— சந்நியாசியாகி- சந்நியாசத்தையுடையவனுகியும்— ஏசறுயோ
கியும்- குற்றமற்றயோகியாகியும்—ஞானவானுமாய்- ஞானத்தையுடையவனுகியும்—முத்தியினையெ
ய்துகென்ன- மோக்ஷத்தையடையக்கடவாயென்றுசொல்ல— (எ-று) - - - - - - - - *

(௰௪) (அ-கை) இவ்வாறினனுபவத்தைவினவுதல். (கவி) சங்கமறுத்திடல்பிரமாற்பணமீசுராற்ப
ணமேசந்நியாதம், பங்கமறுஞானமேயோகமேயெனுமிவற்றின்பகிர்ச்சியாதோ, செங்கண்முகிலே
யென்றவிசயனுக்குமாலருள்வான்செறிசங்கற்ப, மங்குறவாதனைகெடவோர் நினைவுமிலாவிடம்பரமவத்
துவென்பர். (இ-ள்) சங்கமறுத்திடல்-சங்கத்தைக்கெடுத்தலும்—பிரமாற்பணம்-பிரமாற்பணமும்—
ஈசுராற்பணம்- ஈஸ்வராற்பணமும்— சந்நியாதம்- சந்நியாசமும்— பங்கமறுஞானம்- வேறுபாடி
ல்லாதஞானமும்— யோகமேயெனும்- யோகமுமென்கின்ற— இவற்றின்- இவைகளின்— பகிர்ச்சி
யாது- பகுப்பேது— செங்கண்முகிலே- சிவந்தகண்களையுடையமேகம்போன்றவரே— என்றவிசய
னுக்கு- என்றுகேட்டவருச்சுனனுக்கு—மாலருள்வான்-கிஷ்ட்ணரானவர்சொல்லுவார்—செறிசங்கற்ப
மங்குற- மிகுந்தசங்கற்பங்கெடவும்—வாதனைகெட-வாதனைகெடவும்—ஓர் நினைவுமிலாவிடம்-ஒரொண்
ணமுமற்றவிடமே— பரமவத்துவென்பர்-பிரமவஸ்துவென்றுசத்துக்கள்சொல்லுவார்கள்—(எ-று) *

(௰௫) (அ-கை) இவ்வாறினனுபவத்தைச்சொல்லுதல் (கவி) ஏகமெனும்பிரமத்துக்குறுமுத்தியோ
கமேயிலங்குஞான, மியோகமுமாங்கதுவென்பருலகமுநானும்பிரமத்துருவென்றோர்த,லாகுபிரமாற்
பணமாங்கருமபலம்விடல்சந்நியாதமாகுஞ், சோகமுறுசங்கற்பமறுத்தலேசங்கத்தைத்துடைத்ததென்
பர் (இ-ள்) ஏகமெனும்பிரமத்துக்கு- ஒன்றென்கின்றபிரமத்தையடைவதற்கு— உறுமுத்தியோக
மே- பொருந்துமுயற்சியே—இலங்குஞானம்- விளங்குகின்றஞானமும்—அது- அம்முயற்சியே—
யோகமுமாமென்பர்-யோகமுமாமென்றுசத்துக்கள்சொல்லுவார்கள்—உலகமுநானும்- சகமுமியானு
ம்— பிரமத்துருவென்றோர்தல்- பிரமஸ்வரூபமென்றாராய்ந்தறிதல்— ஆகுபிரமாற்பணமாம்- ஆகா
நின்றபிரமாற்பணமாகும்—கருமபலம்விடல்-கருமபலத்தைவிடுதலே— சந்நியாதமாகும்- சன்னியா
சமாம்—சோகமுறு- துன்பம்பொருந்திய—சங்கற்பமறுத்தலே-சங்கற்பத்தைக்கெடுத்தலே—சங்கத்
தைத்துடைத்ததென்பர்- சங்கத்தைக்கெடுத்ததென்றுசத்துக்கள்சொல்லுவார்கள்— (எ-று) - *

(௰௬) (அ-கை) (இ-து) (கவி) எண்ணமனைத்தினுமீசனொருவனேயென்றிருமையெண்ணந்தீர்தல்,பு
ண்ணியவீசுராற்பணமாமெனைநாடியெனக்கன்பாய்ப்பூசித்தென்னை,நண்ணியெனைத்தொழுதென்னைத்
துதித்தாயேனனெனுநின்சொரூபச்சோதி, யுண்ணிறையும்பரமஞ்சாமானியமென்றிரண்டுவடிவுண்
டெனக்கே (இ-ள்) எண்ணமனைத்தினும்- நினைவுகளிலெல்லாம்— ஈசனொருவனேயென்று- ஈஸ்வ
ரனொருவனேயென்று— இருமையெண்ணந்தீர்தல்- துவிதநினைவுநீங்குதல்— புண்ணியம்- புண்ணி
யத்தையுடைய— ஈசுராற்பணமாம்- ஈஸ்வராற்பணமாகும்— எனைநாடி- என்னைச்சிந்தித்து— எனக்
கன்பாய்ப்பூசித்து- எனக்கன்பனுயாராதனைசெய்து— என்னைநண்ணி-என்னையடைந்து—எனைத்தொ
ழுது-என்னைவணங்கி—என்னைத்துதித்தாயேல்-என்னைத்தோத்திரஞ்செய்வையாயின்— நானெனும்-
நானென்கிற— நின்சொரூபச்சோதி- உமதுஸ்வரூபப்ரகாசமானது— உண்ணிறையும்- உள்ளேபூ
ரணமாம்— பரமஞ்சாமானியமென்று- பரமமுஞ்சாமானியமுமென்றுஞ்சொல்லப்பட்ட— இரண்டு
வடிவு- இரண்டுருவம்— எனக்குண்டு- எனக்குண்டாயிருக்கும்—(எ-று) [இ-சூ-க-ம்.] பிரமஸ்வரூபத்
தையுபதேசித்தஃதடையுமாறுவிதமானமார்க்கத்தைக்கிரமமாகச்சொல்லியதாம் - - - - *

(௰௭) (அ-கை) பிரமத்துக்கிரண்டுவடிவநிரூபித்தில். (கவி) சங்காழிபயில்கரத்தைமுதலானவங்க
ஞ்சாமானியந்தான், மங்காமலடிமுடிவற்றொன்றாய வடிவுபரவடிவமாகு,மிங்கானபிரமமெனப்பர
மமெனவிசைப்படுதலாமிந்தரூபஞ், சிங்காமலிதுதனை நீதெளிவளவுநாலுபுயத்தேவையேத்து (இ-ள்)
சங்காழிபயில்- சங்குசக்கரங்கள்பொருந்திய— கரத்தைமுதலானவங்கம்- கைகண்முதலாகவுடையசு
ரீரமே— சாமானியந்தான்- சாமானியவடிவமாகும்—மங்காமல்- கெடாமல்—அடிமுடிவற்று- ஆதி
யந்தமில்லாமல்— ஒன்றாயவடிவு- ஏகமானஸ்வரூபமே— பரவடிவமாகும்- பிரமஸ்வரூபமாகும்—
இங்கான- இவ்விடத்திலுண்டாகிய—பிரமமென-பிரமமென்றும்—பரமமென-பரமமென்றும்— இ
சைப்படுதலாம்- சொல்லப்படுவனயாவும்—இந்தரூபம்-இந்தப்பரவடிவமாகும்— சிங்காமலிதுதனை-
இளையாமலிந்தப்பரவடிவத்தை— நீதெளிவளவும்-நீதெளிகின்றபரியந்தம்— நாலுபுயத்தேவையேத்

து - சதுர்ப்புசங்களையுடையதெய்வத்தைவணங்கு—(எ-று)[இ-ம்] சாமானியவடிவம்பரவடிவமென்னு மிரண்டிற்பரவடிவத்தையடையும்பொருட்டுச்சாமானிய வடிவத்தைப்பூசிக்கவேண்டுமென்பதாம் ⁂

(௰அ)(அ-கை)பூசாபலனை நிரூபித்தல்.(கவி)அக்கடவுட்பூசையினாலறிவு நிறைந்ததனாலப்பதமுஞ்சேர்வை,மிக்கபரமாகியவென்னுருவமுறிற்பிறவிநோய்மீண்டுசேராப்'பக்கவபிமானம்போய்மோகம்போய்ச்சங்கம் போய்ப்பரமேமெய்யாய்த், துக்கசுகதொந்தம் போயாசைபோயறிவுற்றோர்தொடர்வாரங்கே,(இ-ள்)அக்கடவுட்பூசையினால் - அத்தேவார்ச்சனையினால்— அறிவு நிறைந்ததனால் - ஞானமானது பூர்ணமானவதனால்—அப்பதமுஞ்சேர்வை - அப்பிரமபதத்தையுமடைவாய்— மிக்கபரமாகிய - மேலானபரவடிவாகிய—என்னுருவமுறில் - எனதுஸ்வரூபத்தையடைந்தால்— பிறவிநோய்மீண்டுசேரார் - பவவியாதிதிரும்பவடையாது— பக்கவபிமானம்போய் - நட்புற்றவபிமான நீங்கி— மோகம்போய் - அஞ்ஞானநீங்கி— சங்கம்போய் - பற்றுவிட்டு— பரமேமெய்யாய் - பரவடிவமேயுண்மையாய்— துக்கசுகதொந்தம்போய் - துன்பவின்பங்களின்றொடர்புநீங்கி— ஆசைபோய் - இச்சைவிடுபட்டு— அறிவுற்றோர் - ஞானமடைந்தவர்கள்— அங்குதொடர்வார் - அப்பிரமபதத்தையேதொடர்வார்கள்—(எ-று) [இ-ம்] சகளத்தைப்பூசித்தலினறிவுண்டாயதனானிட்களமானபிரமத்தையடைவார்களென்பதாம் - ⁂

(௰கூ) (அ-கை) சமாதியைச்சொல்லிசகசத்தைச்சொல்லுதல் (கவி) காமமுறுசங்கற்பமின்றியாரம்பமெலாங்கலந்துநிற்போர், தாமமுறுஞானத்தீயாற்கருமங்களைச்சுட்டசான்றோரென்பர், சேமமுமேல்வரும்பொருளுஞ்சிந்தையறத்தொந்தமறச்சித்தாமுண்மை, தோமறப்பெற்றெப்போதுந்தோற்றுதொழில்வழிநிற்பாய்துளக்கமின்றி (இ-ள்) காமமுறு - ஆசைபொருந்தும்— சங்கற்பமின்றி - சங்கற்பமில்லாமல்— ஆரம்பமெலாம் - முயற்சிகளியாவையும்— கலந்துநிற்போர் - சேர்ந்துநிற்பவர்களை— தாமமுறு - சுகத்தைப்பொருந்திய— ஞானத்தீயால் - ஞானாக்கினியினால்— கருமங்களைச்சுட்ட - கன்மங்களையெரித்த— சான்றோரென்பர் - அறிஞரான்றசத்துக்களென்றுசொல்லுவார்கள்— சேமமும் - க்ஷேமமும்— மேல்வரும்பொருளும் - இனிவருவதானவஸ்துக்களும்—சிந்தையற - சிந்தையில்லாமல்— தொந்தமற - தொந்தமில்லாமல்— சித்தாமுண்மை - ஞானமாகியதத்துவத்தை— தோமறப்பெற்று - குற்றமறும்படிபெற்று— எப்போதும் - சதாகாலமும்— தோற்றுதொழில்வழி - உண்டாகின்றசெயன்மார்க்கமாய்— துளக்கமின்றிநிற்பாய் - சலனமில்லாமலிருப்பாய்—(எ-று) [இ-ம்] பிரமாக்கினியினாலியாவையுமெரித்துப் பிரமமாய்ச்சகலதொழிலையுஞ்செய்யவேண்டுமென்பதாம் ⁂

(உ௰) (அ-கை) இப்பிரமானுபவமுதிக்கின்றபரியந்தமுறுதிமொழிகூறல் (கவி) வீசியவூழிக்காற்றுமேவிடினும்விந்தமலைவெடித்தபோதுந், தேசிகனூற்கற்பித்தசெந்நெறியைமதிமான்கடிறம்பல்செய்யார், மாசறுமெய்ஞ்ஞானமிலாமடமையால்வாதனைமெய்வடிவாய்நிற்கும், காசறுமெய்ஞ்ஞானமெனும்பெருங்கடல்கோர்த்தாலதனுட்கரைந்துபோமே (இ-ள்) வீசியவூழிக்காற்றுமேவிடினும் - மோதாநின்றவூழிக்காலதிகரித்தாலும்— விந்தமலைவெடித்தபோதும் - விந்தநாகம்பிளந்தகாலத்திலும்— தேசிகனூல் - ஆசாரிய(ருபதேசிக்கு) ஞானசாத்திரத்தினால்— கற்பித்தசெந்நெறியை - போதித்தசெம்மையானமார்க்கத்தை—மதிமான்கள் - ஞானவான்கள்— திறம்பல்செய்யார் - மாறுபடுத்தார்கள்— மாசறுமெய்ஞ்ஞானமிலா - களங்கமற்றதத்துவஞானமில்லாத— மடமையால் - அறிவின்மையினால்— வாதனை - வாசனையானது— மெய்வடிவாய்நிற்கும் - நித்தியரூபமாயிருக்கும்— காசறுமெய்ஞ்ஞானமெனும் - குற்றமற்றதத்துவஞானமென்கின்ற— பெருங்கடல்கோர்த்தால் - மகோததிமூடிக்கொண்டால்— அதனுட்கரைந்துபோம் - (வாசனை) அதிற்கரைந்துபோகும்—(எ-று) [இ-ம்] சுருதிகுருசுவானுபவத்தின்றிடவற்பியாசத்தினாற்சகலசன்மமுநீங்கிப்பிரமமாத்திரமாய்விளங்குவனென்பதாம் ⁂

(உக) (அ-கை) அனுபவமாதல் (கவி) என்றருளித்திருநெடுமாலிமைப்போதுமோனம்போலிருந்தவோடும்,வென்றிமிகுவிசயன்மகிழ்ந்துரைசெய்யும்வகைகேளாய்மெய்ம்மைவீரா,கன்றுதுயரனைத்தும்போயெனதுமதிபரம்பொருளைக்கலந்ததையா, துன்றிரவிகாணவிரிசமலம்போலெனவிசயன்சொல்லுமன்றே (இ-ள்) என்றருளி - இப்படியென்றனுக்கிரகஞ்செய்து—திருநெடுமால் - கிருஷ்ணசுவாமியும்—இமைப்போது - நிமிடநேரம்—மோனம்போல் - மௌனியைப்போல—இருந்தவோடும் - இருக்கவும்— வென்றிமிகுவிசயன் - வெற்றிமிகுந்தவருச்சுனன்— மகிழ்ந்துரைசெய்யும்வகை - மனங்களித்துச்சொல்லுகின்றவிதத்தை— மெய்ம்மைவீரா - உண்மையானஸ்ரீராமா— கேளாய் - கேட்பாய்— ஐயா - ஆசாரியரே— எனதுமதி - எனதறிவு—கன்றுதுயரனைத்தும்போய் - நைவிக்கின்றதுன்பமெல்லாமவிடுபட்டு— துன்றிரவிகாண - (கிரணங்க)ணெருங்கியசூரியன்பார்க்க—விரிசமலம்போல் - விகசித்ததாமரைப்பூவைப்போல— பரம்பொருளை - பிரமவஸ்துவை—கலந்ததென - கலந்ததென்று— விசயன்சொல்லும் - அருச்சுனன்சொல்லுவான்—(எ-று) [இ-ம்] மவுனமாயிருந்துமவுனத்தைத்தரிசிப்பித்ததாம் ⁂ அருச்சுனன்கதைமுற்றிற்று. ஆ கதை ௱௰௱க்குக் கவிதை (௲௱௰௫)



# சதவுருத்திரர் கதை.



(அ-கை) முற்கதையில்யுத்தஞ்செய்தனமுதலியவிருத்திகளும்வேறுபடாமலாத்மஞான சாக்ஷாத்காரமாய்விளங்குவதையறிவித்து,அதனாலுண்டாணசநநபரம்பரையுஞான திருஷ்டியினாலாத்மசாக்ஷாத்காரமாய்விளங்குவதையறிவிக்குநிமித்தஞ்சதவுருத்திரர்கதையைநிரூபிக்கிறார். ⁂

(௧) (அ-கை) சந்நியாசிசமாதியினின்றுலகவிபகாரத்தை லீலையாகச்செய்யநினைத்தல் (வி) மீட்டுமோர்கதைகேளென்றுவீரற்கு வசிட்டன்சொல்வா, னாட்டுளோர்சந்நியாசி ஞானவான்சமாதியுள்ளோ, னீட்டுறுசமாதியாலே நிமலமாநெஞ்சிநின்றை, யீட்டுறநினையினப் போதெய்துநீரலையாமாப்போல். (இ-ள்) மீட்டும்-திரும்பவும்—ஓர்கதைகேளென்று- ஒருகதையைக்கேட்பாயென்று—வீரற்கு- வீரனைஸ்ரீராமருக்கு— வசிட்டன்சொல்வான்- வசிட்டமுனிசொல்லுவார்— நாட்டுள்- ஓர்தேயத்திலுள்ள— ஞானவான்- ஞானவானும்—சமாதியுள்ளோன்-சமாதியுள்ளவனுமாகிய—ஓர்சந்நியாசி-ஒருசந்நியாசியானவர்— நீட்டுறுசமாதியால்-வெகுகாலமாகச்செய்தசமாதியினால்— நிமலமாநெஞ்சினின்றை-நின்மலமனதினொருபொருளை— ஈட்டுறநினையின்- கிடைக்கும்படி நினைத்தால்— நீரலையாமாப்போல்-சலமலையானதுபோல—அப்போதெய்தும்- அப்போத(வ்வுருவ)மாவன்—(எ-று)

(௨) (அ-கை) இ-து. (கவி) ஒருபகற்சமாதி நீங்கியிருந்தனனுயர்சந்நியாசி, கருதிடுமவர்க்குப் பற்றிப்பாசகருன்காணுமென்று. சுருதியுண்டுலகோர்செய்யுந் தொழிலையாம்விநோதமாக, விருதயத்துன்னுவோமென்றெண்ணியதிவன்றனெஞ்சம். (இ-ள்) உயர்சந்நியாசி- மேலானசந்நியாசியானவர்— ஒருபகல்- ஒருதினத்தில்—சமாதிநீங்கியிருந்தனன்- சமாதியைவிட்டிருந்தனன்— கருதிடுமவர்க்கு- நினைக்கின்றவர்களுக்கு—பற்றிப்பாசகருன்- ப்ரதிபையானது— காணுமென்று- தோற்றுமென்று— சுருதியுண்டு- வேதஞ்சொல்லுவதுண்டு—உலகோர்- சகத்திலுள்ளவர்கள்— செய்யுந்தொழிலை- இயற்றப்பட்டசெய்கையை—யாம்விநோதமாக- நாம்விளையாட்டாக—இருதயத்துன்னுவோமென்று- மனதினினைப்போமென்று—இவன்றனெஞ்சமெண்ணியது- இவனுடையமனதுநினைத்தது—(எ-று) ⁕

(௩) (அ-கை) சந்நியாசிதனதுசங்கற்பத்தாற்றானேசீவடனாதல் (கவி) மற்றொருபுருடனானசைவுமாத்திரத்தான்மீளப், பற்றியும்பண்டையோனைத்தானெனப்பாவிக்கைக்குப் பெற்றிலன்காகதாலீயப்படிபெற்றவாஞ்சை, யுற்றனன்சீவடன்பேரொருவனென்றுணர்ந்தானறன்னை (இ-ள்) அசைவுமாத்திரத்தால்- (மனத்தி)னசைவுமாத்திரத்தினால்—மற்றொருபுருடனானன்- வேறொருபுருடனானன்— மீளப்பற்றியும்- திரும்பப்பிடித்தும்—பண்டையோனை- பழையசந்நியாசியை— தானெனப்பாவிக்கைக்கு- தானென்றுபாவித்தலுக்கு—பெற்றிலன்- அடைந்திலன்—காகதாலீயப்படிபெற்றவாஞ்சை- காகதாலீயஞாயம்போலவடைந்தவிச்சையினால்—தன்னை-(சந்நியாசியாகிய)தன்னை—சீவடன்பேரொருவனென்றுணர்ந்தான்-சீவடனுமமுள்ளவொருவனாகவறிந்து—உற்றனன்- பொருந்தினான்(எ-று) ⁕

(௪) (அ-கை) சீவடனித்திரையடைதல் (கவி) சித்தம்வேறொருவனானசீவடனிவ்வாறாகி,யுற்றவிக்கனவிற்செய்தநகரிலோர்தெருவின்மேவி, மெத்தநாளிருந்தானங்கேவிநோதபானத்தையுண்டு, மத்தனாய்மதுவையுண்டமதுபம்போலுறக்கமுற்றான் (இ-ள்) சித்தம்- மனமானது— வேறொருவனான- மற்றொருவனாகிய— சீவடனிவ்வாறாகி- சீவடனானவனிவ்வண்ணமாய்— உற்றவிக்கனவிற்செய்தநகரில்- பொருந்தப்பட்டவிச்சொற்பனத்தினாலுண்டானபட்டணத்தில்—ஓர்தெருவின்மேவி- ஒருவீதியிற்சென்று—மெத்தநாளிருந்தான்-வெகுகாலமிருந்தான்— ஆங்கு- அவ்விடத்தில்— விநோதபானத்தையுண்டு- விளையாட்டாக்குமதுவைப்புசித்து— மத்தனாய்- களிப்புடையவனாய்— மதுவையுண்டமதுபம்போல- தேனைப்புசித்தவண்டைப்போல—உறக்கமுற்றான்- நித்திரையையடைந்தான் (எ-று)

(௫) (அ-கை) சீவடன்கனவிற்கண்டபிராமணனாய்நித்திரைசெய்தல். (கவி) பாதபம்விதையானாப்போற்பள்ளிகொண்மறையோன்றன்பாற், போதுறுகனவிற்றன்னைப்பொருவில்வன்னியனாக்கண்டான், மேதகுமுணவாற்றுஞ்சிமேவியகனவிற்றன்பாற், பூதலத்தரசனாகவவன்றனைப்பொலியக்கண்டான் (இ-ள்) பாதபம்விதையானாப்போல்- விருக்ஷம்வித்தானதுபோல— பள்ளிகொள்- நித்திரைசெய்கின்ற— மறையோன்றன்பால்- பிராமணனதன்னிடத்தில்— போதுறுகனவிற்றன்னை- அப்போதுண்டானசொற்பனத்திற்பிராமணனை— பொருவில்- ஒப்பற்ற— வன்னியனாய்க்கண்டான்- வன்னியனாகப்பார்த்தான்— மேதகும்- மேன்மையான—உணவாற்றுஞ்சி- போசனத்தினானித்திரைசெய்து— மேவியகனவில்- உண்டானசொற்பனத்தில்— தன்பால்- தன்னிடத்தில்— பூதலத்தரசனாக- பூமிக்கிராசாவாக— அவன்றனை- அந்தவன்னியனை— பொலியக்கண்டான்- விளங்கப்பார்த்தான்— (எ-று) ⁕

(௬) (அ-கை) அந்தணன்கனவிற்கண்டவன்னியனாயவன்கனவிற்கண்டவரசனாதல் (கவி) கனமுறுகனவில்வேறோர்கலைமறையவனாய்க்கண்டான்,மனனிலேபற்றிப்பாசன்மாத்திரமதனான்மற்றோர், சனபதமடைதல்போலாய்ச்சரித்தனன்சின்னாளாங்கே, தினமிகுவியாபாரத்தாற்றேகநொந்துறக்கமுற்றான் (இ-ள்.) கனமுறுகனவில்- கனமுள்ளசொற்பனத்தில்— வேறோர்- மற்றொரு— கலைமறையவனாய்க்கண்டான்-கல்வியையுடையபிராமணனாகக்கண்டான்—மனனிலேபற்றிப்பாசன்மாத்திரமதனால்-மனதிற்ப்ரதிபாமாத்திரமாயிருக்குமதனால்—மற்றோர்சனபதம்- வேறொருநாட்டை— அடைதல்போலாய்- அடைகின்றதுபோலாகி— சின்னாட்சரித்தனன்- சிலதினஞ்சஞ்சரித்தான்— ஆங்கு- அவ்விடத்தில்— ஓர்தினம்- ஒருநாள்— மிகுவியாபாரத்தால்- மிகுந்ததொழில்களினால்— தேகநொந்து- சரீரம்வாடி— உறக்கமுற்றான்- துயின்றான்— (எ-று.) - - - - - - - - - - - - ⁕

(௭) (அ-கை.) அரசன்கனவிற்கண்டதெய்வப்பெண்ணாயவள்கனவிற்கண்டமானாகிநிற்றல். (கவி) அரசனோரிரவுதுஞ்சியடைந்தவோர்கனவிற்றன்னைச். சுரமகளாகக்கண்டான்சுரமகள்சுரதப்போரிற், பரவசமாகத்துஞ்சப்பயில்வுறுகனவிற்றன்பாற், குரமடமானாய்க்கண்டாள்கூறுமானறுயினறதோர்கால். (இ-ள்) அரசன்- இராசாவானவன்— ஓரிரவுதுஞ்சி-ஓரிராத்திரியினித்திரைசெய்து— அடைந்தவோர்கனவில்- அப்போதடைந்தவொருசொற்பனத்தில்— தன்னை- அரசனை—சுரமகளாகக்கண்டான்-தெய்வப்பெண்ணாகப்பார்த்தான்— சுரமகள்- அந்தத்தெய்வப்பெண்ணானவள்— சுரதப்போரில்- இரதிசிரமத்தினால்— பரவசமாகத்துஞ்ச- பரவசமாய்நித்திரைசெய்ய— பயில்வுறுகனவில்- அப்போதனுப

து-சதுர்ப்புசங்களையுடையதெய்வத்தைவணங்கு—(எ-று)[இ-ம்] சாமானியவடிவம்பரவடிவமென்னுமிரண்டிற்பரவடிவத்தையடையும்பொருட்டுச்சாமானிய வடிவத்தைப்பூசிக்கவேண்டுமென்பதாம் ※

(௰௮)(அ-கை) பூசாபலனை நிரூபித்தல். (கவி) அக்கடவுட்பூசையினாலறிவு நிறைந்ததனாலப்பதமுஞ்சேர்வை, மிக்கபரமாகியவென்னுருவமுறிற்பிறவிநோய்மீண்டுசேராப்பக்கவபிமானம்போய்மோகம்போய்ச்சங்கம் போய்ப்பரமேமெய்யாய்த், துக்கசுகதொந்தம் போயாசைபோயறிவுற்றோர்தொடர்வாரங்கே, (இ-ள்) அக்கடவுட்பூசையினால் - அத்தேவார்ச்சனையினால்— அறிவு நிறைந்ததனால் - ஞானமானதுபூரணமானவதனால்—அப்பதமுஞ்சேர்வை - அப்பிரமபதத்தையுமடைவாய்— மிக்கபரமாகிய - மேலானபரவடிவாகிய—என்னுருவமுறில் - எனதுஸ்வரூபத்தையடைந்தால்— பிறவிநோய்மீண்டுசேரார் - பவவியாதிதிரும்பவடையாது— பக்கவபிமானம்போய் - நட்புற்றவபிமானநீங்கி— மோகம்போய் - அஞ்ஞானநீங்கி— சங்கம்போய் - பற்றுவிட்டு— பரமேமெய்யாய் - பரவடிவமேயுண்மையாய்— துக்கசுகதொந்தம்போய் - துன்பவின்பங்களின்றொடர்புநீங்கி— ஆசைபோய் - இச்சைவிடுபட்டு— அறிவுற்றோர் - ஞானமடைந்தவர்கள்— அங்குதொடர்வார் - அப்பிரமபதத்தையேதொடர்வார்கள்—(எ-று) [இ-ம்] சகளத்தைப்பூசித்தலினறிவுண்டாயதனானிட்களமானபிரமத்தையடைவார்களென்பதாம் - ※

(௰௯) (அ-கை) சமாதியைச்சொல்லிசகசத்தைச்சொல்லுதல் (கவி) காமமுறுசங்கற்பமின்றியாரம்பமெலாங்கலந்துநிற்போர், தாமமுறுஞானத்தியாற்கருமங்களைச்சுட்டசான்றோரென்பர், சேமமுமேல்வரும்பொருளுஞ்சிந்தையறத்தொந்தமறச்சித்தாமுண்மை, தோமறப்பெற்றெப்போதுந்தோற்றுதொழில்வழிநிற்பாய்துளக்கமின்றி (இ-ள்) காமமுறு - ஆசைபொருந்தும்— சங்கற்பமின்றி - சங்கற்பமில்லாமல்— ஆரம்பமெலாம் - முயற்சிகளியாவையும்— கலந்துநிற்போர் - சேர்ந்துநிற்பவர்களை— தாமமுறு - சுகத்தைப்பொருந்திய— ஞானத்தீயால் - ஞானக்கினியினால்— கருமங்களைச்சுட்ட - கன்மங்களையெரித்த— சான்றோரென்பர் - அறிஞரான்றசத்துக்கள்சொல்லுவார்கள்— சேமமும் - க்ஷேமமும்— மேல்வரும்பொருளும் - இனிவருவதானவஸ்துக்களும்—சிந்தையற - சிந்தையில்லாமல்— தொந்தமற - தொந்தமில்லாமல்— சித்தாமுண்மை - ஞானமாகியதத்துவத்தை— தோமறப்பெற்று - குற்றமறும்படிபெற்று— எப்போதும் - சதாகாலமும்— தோற்றுதொழில்வழி - உண்டாகின்றசெயன்மார்க்கமாய்— துளக்கமின்றிநிற்பாய் - சலனமில்லாமலிருப்பாய்—(எ-று) [இ-ம்] பிரமாக்கினியினாலியாவையுமெரித்துப் பிரமமாய்ச்சகலதொழிலையுஞ்செய்யவேண்டுமென்பதாம் ※

(௨௰) (அ-கை) இப்பிரமானுபவமுதிக்கின்றபரியந்தமுறுதிமொழிகூறல் (கவி) வீசியவூழிக்காற்றுமேவிடினும்விந்தமலைவெடித்தபோதுந், தேசிகனாற்கற்பித்தசெந்நெறியைமதிமான்கடிறம்பல்செய்யார், மாசறுமெய்ஞ்ஞானமிலாமடமையால்வாதனைமெய்வடிவாய்நிற்குங், காசறுமெய்ஞ்ஞானமெனும்பெருங்கடல்கோர்த்தாலதனுட்கரைந்துபோமே (இ-ள்) வீசியவூழிக்காற்றுமேவிடினும் - மோதாநின்றவூழிக்காலதிசரித்தாலும்— விந்தமலைவெடித்தபோதும் - விந்தநாகம் பிளந்தகாலத்திலும்— தேசிகனால் - ஆசாரிய(ருபதேசிக்கு)ஞானசாத்திரத்தினால்— கற்பித்தசெந்நெறியை - போதித்தசெம்மையானமார்க்கத்தை—மதிமான்கள் - ஞானவான்கள்— திறம்பல்செய்யா - மாறுபடுத்தார்கள்— மாசறுமெய்ஞ்ஞானமிலா - களங்கமற்றதத்துவஞானமில்லாத— மடமையால் - அறிவின்மையினால்— வாதனை - வாசனையானது— மெய்வடிவாய்நிற்கும் - நித்தியரூபமாயிருக்கும்— காசறுமெய்ஞ்ஞானமெனும் - குற்றமற்றதத்துவஞானமென்கின்ற— பெருங்கடல்கோர்த்தால் - மகோததிமூடிக்கொண்டால்— அதனுட்கரைந்துபோம் - (வாசனை) அதிற்கரைந்துபோகும்—(எ-று) [இ-ம்] சுருதிகுருசுவானுபவத்தினிடவற்பியாசத்தினாற்சகலகன்மமுநீங்கிப்பிரமமாத்திரமாய்விளங்குவனென்பதாம் ※

(௨௧) (அ-கை) அனுபவமாதல் (கவி) என்றருளித்திருநெடுமாலிமைப்போதுமோனம்போலிருத்தலோடும், வென்றிமிகுவிசயன்மகிழ்ந்துரைசெய்யும்வகைகேளாய்மெய்ம்மைவீரா, கன்றுதுயரனைத்தும்போயெனதுமதிபரம்பொருளைக்கலந்ததையா, துன்றிரவிகாணவிரிசமலம்போலெனவிசயன்சொல்லுமன்றே (இ-ள்) என்றருளி - இப்படியென்றனுக்கிரகஞ்செய்து—திருநெடுமால் - கிருஷ்ணசுவாமியும்—இமைப்போது - நிமிடநேரம்—மோனம்போல் - மௌனியைப்போல—இருத்தலோடும் - இருக்கவும்— வென்றிமிகுவிசயன் - வெற்றிமிகுந்தவருச்சுனன்— மகிழ்ந்துரைசெய்யும்வகை - மனங்களித்துச்சொல்லுகின்றவிதத்தை— மெய்ம்மைவீரா - உண்மையானஸ்ரீராமா— கேளாய் - கேட்பாய்— ஐயா - ஆசாரியனே— எனதுமதி - எனதறிவு—கன்றுதுயரனைத்தும்போய் - நைவிக்கின்றதுன்பமெல்லாமவிடுபட்டு— துன்றிரவிகாண - (கிரணங்க)ணெருங்கியசூரியன்பார்க்க—விரிசமலம்போல் - விகசித்ததாமரைப்பூவைப்போல— பரம்பொருளை - பிரமவஸ்துவை—கலந்ததெனா - கலந்ததென்று— விசயன்சொல்லும் - அருச்சுனன்சொல்லுவான்—(எ-று) [இ-ம்] மவுனமாயிருந்துமவுனத்தைத்தரிசிப்பித்ததாம் ※ அருச்சுனன்கதைமுற்றிற்று. ஆக கதை ௯௰௯க்குக் கவிதை (௪௲௱௰௯)



# சதவுருத்திரர்கதை.



(அ-கை) முற்கதையில்யுத்தஞ்செய்தனமுதலியவிருத்திகளும்வேறுபடாமலாத்மஞான சாக்ஷாத்காரமாய்விளங்குவதையறிவித்து, அதனாலுண்டானசநகபரம்பரையுஞான திருஷ்டியினாலாத்மசாக்ஷாத்காரமாய்விளங்குவதையறிவிக்குநிமித்தஞ்சதவுருத்திரர்கதையைநிரூபிக்கிறார். - - - - - ※

(க) (அ-கை) சந்நியாசிசமாதியினின்றுலகவிபகாரத்தை லீலையாகச்செய்ய நினைத்தல் (வி) மீட்டுமோர்கதைகேளென்றுவீரற்கு வசிட்டன்சொல்வா, னாட்டுளோர்சந்நியாசி ஞானவான்சமாதியுள்ளோ, னீட்டுறுசமாதியாலேநிமலமாநெஞ்சினொன்றை, யீட்டுறநினையினப் போதெய்துநீரலையாமாப்போல். (இ-ள்) மீட்டும் - திரும்பவும் — ஓர்கதைகேளென்று - ஒருகதையைக்கேட்பாயென்று — வீரற்கு - வீரனைஸ்ரீராமருக்கு — வசிட்டன்சொல்வான் - வசிட்டமுனிசொல்லுவார் — நாட்டுள் - ஓர்தேயத்திலுள்ள — ஞானவான் - ஞானவானும் — சமாதியுள்ளோன் - சமாதியுள்ளவனுமாகிய — ஓர்சந்நியாசி - ஒருசந்நியாசியானவர் — நீட்டுறுசமாதியால் - வெகுகாலமாகச்செய்தசமாதியினால் — நிமலமாநெஞ்சினொன்றை - நின்மலமனதினொருபொருளை — ஈட்டுறநினையின் - கிடைக்கும்படிநினைத்தால் — நீரலையாமாப்போல் - சலமலையானதுபோல — அப்போதெய்தும் - அப்போத(வ்வுருவ)மாவன் — (எ-று)

(உ) (அ-கை) இ-து. (கவி) ஒருபகற்சமாதி நீங்கியிருந்தனனுயர்சந்நியாசி, கருதிடுமவர்க்குப் பற்றிப்பாச்சனுன்காணுமென்று. சுருதியுண்டுலகோர்செய்யுந் தொழிலையாம்விநோதமாக, விருதயத்துன்னுவோமென்றெண்ணியதிவன்றனெஞ்சம். (இ-ள்) உயர்சந்நியாசி - மேலானசந்நியாசியானவர் — ஒருபகல் - ஒருதினத்தில் — சமாதிநீங்கியிருந்தனன் - சமாதியைவிட்டிருந்தனன் — கருதிடுமவர்க்கு - நினைக்கின்றவர்களுக்கு — பற்றிப்பாச்சனுன் - ப்ரதிபையானது — காணுமென்று - தோற்றுமென்று — சுருதியுண்டு - வேதஞ்சொல்லுவதுண்டு — உலகோர் - சகத்திலுள்ளவர்கள் — செய்யுந்தொழிலை - இயற்றப்பட்டசெய்கையை — யாம்விநோதமாக - நாம்விளையாட்டாக — இருதயத்துன்னுவோமென்று - மனதினினைப்போமென்று — இவன்றனெஞ்சமெண்ணியது - இவனுடையமனதுநினைத்தது — (எ-று) ✻

(ந) (அ-கை) சந்நியாசிதனதுசங்கற்பத்தாற்றானேசீவடனாதல் (கவி) மற்றொருபுருடனானானசைவுமாத்திரத்தான்மீளப், பற்றியும்பண்டையோனைத்தானெனப்பாவிக்கைக்குப் பெற்றிலன்காகதாலீயப்படிபெற்றவாஞ்சை, யுற்றனன்சீவடன்பேரொருவனென்றுணர்ந்தான்றன்னை (இ-ள்) அசைவுமாத்திரத்தால் - (மனத்தி)னசைவுமாத்திரத்தினால் — மற்றொருபுருடனானான் - வேறொருபுருடனானான் — மீளப்பற்றியும் - திரும்பப்பிடித்தும் — பண்டையோனை - பழையசந்நியாசியை — தானெனப்பாவிக்கைக்கு - தானென்றுபாவித்தலுக்கு — பெற்றிலன் - அடைந்திலன் — காகதாலீயப்படிபெற்றவாஞ்சை - காகதாலீயஞாயம்போலவடைந்தவிச்சையினால் — தன்னை - (சந்நியாசியாகிய)தன்னை — சீவடன்பேரொருவனென்றுணர்ந்தான் - சீவடனாமமுள்ளவொருவனாகவறிந்து — உற்றனன் - பொருந்தினன் (எ-று) ✻

(ச) (அ-கை) சீவடனித்திரையடைதல் (கவி) சித்தம்வேறொருவனானசீவடனிவ்வாறாகி, யுற்றவிக்கனவிற்செய்தநகரிலோர்தெருவின்மேவி, மெத்தநாளிருந்தானங்கேவிநோதபானத்தையுண்டு, மத்தனாய்மதுவையுண்டமதுபம்போலுறக்கமுற்றான் (இ-ள்) சித்தம் - மனமானது — வேறொருவனான - மற்றொருவனாகிய — சீவடனிவ்வாறாகி - சீவடனானவனிவ்வண்ணமாய் — உற்றவிக்கனவிற்செய்தநகரில் - பொருந்தப்பட்டவிச்சொற்பனத்திலுண்டானபட்டணத்தில் — ஓர்தெருவின்மேவி - ஒருவீதியிற்சென்று — மெத்தநாளிருந்தான் - வெகுகாலமிருந்தான் — ஆங்கு - அவ்விடத்தில் — விநோதபானத்தையுண்டு - விளையாட்டாக்குமதுவைப்புசித்து — மத்தனாய் - களிப்புடையவனாய் — மதுவையுண்டமதுபம்போல - தேனைப்புசித்தவண்டைப்போல — உறக்கமுற்றான் - நித்திரையையடைந்தான் (எ-று)

(ரு) (அ-கை) சீவடன்கனவிற்கண்டபிராமணனாய் நித்திரைசெய்தல். (கவி) பாதபம்விதையானாப்போற்பள்ளிகொண்மறையோன்றன்பாற், போதுறுகனவிற்றன்னைப்பொருவில்வன்னியனாக்கண்டான், மேதகுமுணர்வாற்றுஞ்சிமேவியகனவிற்றன்பாற், பூதலத்தரசனாகவவன்றனைப்பொலியக்கண்டான் (இ-ள்) பாதபம்விதையானாப்போல் - விருக்ஷம்வித்தானதுபோல — பள்ளிகொள் - நித்திரைசெய்கின்ற — மறையோன்றன்பால் - பிராமணனதன்னிடத்தில் — போதுறுகனவிற்றன்னை - அப்போதுண்டானசொற்பனத்திற்பிராமணனை — பொருவில் - ஒப்பற்ற — வன்னியனாக்கண்டான் - வன்னியனாய்ப்பார்த்தான் — மேதகும் - மேன்மையான — உணவாற்றுஞ்சி - போசனத்தினானித்திரைசெய்து — மேவியகனவில் - உண்டானசொற்பனத்தில் — தன்பால் - தன்னிடத்தில் — பூதலத்தரசனாக - பூமிக்கிராசாவாக — அவன்றனை - அந்தவன்னியனை — பொலியக்கண்டான் - விளங்கப்பார்த்தான் — (எ-று) ✻

(சு) (அ-கை) அந்தணன்கனவிற்கண்டவன்னியனாயவன்கனவிற்கண்டவரசனாதல் (கவி) கனமுறுகனவில்வேறோர்கலைமறையவனாய்க்கண்டான், மனனிலேபற்றிப்பாச்சன்மாத்திரமதனான்மற்றோர், சனபதமடைதல்போலாய்ச்சரித்தனன்சின்னாளாங்கே, தினமிகுவியாபாரத்தாற்றேகநொந்துறக்கமுற்றான் (இ-ள்) கனமுறுகனவில் - கனமுள்ளசொற்பனத்தில் — வேறோர் - மற்றொரு — கலைமறையவனாய்க்கண்டான் - கல்வியையுடையபிராமணனாகக்கண்டான் — மனனிலேபற்றிப்பாச்சன்மாத்திரமதனால் - மனதிற்ப்ரதிபாமாத்திரமாயிருக்குமதனால் — மற்றோர்சனபதம் - வேறொருநாட்டை — அடைதல்போலாய் - அடைகின்றதுபோலாகி — சின்னாட்சரித்தனன் - சிலதினஞ்சஞ்சரித்தான் — ஆங்கு - அவ்விடத்தில் — ஓர்தினம் - ஒருநாள் — மிகுவியாபாரத்தால் - மிகுந்ததொழில்களினால் — தேகநொந்து - சரீரம்வாடி — உறக்கமுற்றான் - துயின்றான் — (எ-று) - - - - - - - - - - ✻

(எ) (அ-கை.) அரசன்கனவிற்கண்டதெய்வப்பெண்ணாயவள்கனவிற்கண்டமானாகிநிற்றல். (கவி) அரசனோரிரவுதுஞ்சியடைந்தவோர்கனவிற்றன்னைச். சுரமகளாகக்கண்டான்சுரமகள்சுரதப்போரிற், பரவசமாகத்துஞ்சப்பயில்வுறுகனவிற்றன்பாற், குரமடமானாய்க்கண்டாள்கூறுமான்றுயின்றதோர்கால். (இ-ள்) அரசன் - இராசாவானவன் — ஓரிரவுதுஞ்சி - ஓரிராத்திரியினித்திரைசெய்து — அடைந்தவோர்கனவில் - அப்போதடைந்தவொருசொற்பனத்தில் — தன்னை - அரசனை — சுரமகளாகக்கண்டான் - தெய்வப்பெண்ணாகப்பார்த்தான் — சுரமகள் - அந்தத்தெய்வப்பெண்ணானவள் — சுரதப்போரில் - இரதிசிரமத்தினால் — பரவசமாகத்துஞ்ச - பரவசமாய்நித்திரைசெய்ய — பயில்வுறுகனவில் - அப்போதனுப

விக்கின்றசொற்பனத்தில்—தன்பாற்குரமடமானுய்க்கண்டாள்- தன்னிடத்திற்குளம்புள்ளபெண்மானுகப்பார்த்தாள்—ஓர்சாற்கூறுமான்றுயின்றது- ஒருபோதுணாக்குமானுனது நித்திரைசெய்தது (எ-று)*

(அ) (அ-கை) மாள்கனவிற்கண்டபூங்கொடியாதல். (கவி) துஞ்சுமான்பரிசயத்தாற்சூழ்ந்ததோர்கொடியாய்த்தன்பாற், செஞ்சவேகனவிற்கண்டதண்ணலேதிரியக்கானு, நெஞ்சுறத்கண்டகேட்டமறப்பிலநிகழ்கனுவிற், சஞ்சரித்திடவேகானுமாதலாற்சாற்றக்கேளாய். (இ-ள்) துஞ்சுமான்- நித்திரைசெய்கின்றமானுனது— பரிசயத்தால்-(அதன்)பழக்கத்தினல்—சூழ்ந்தது- சூழ்ந்ததான— ஓர்கொடியாய்- ஒருகொடியாக— தன்பால்- தன்னிடத்தில்—செஞ்சவேகனவிற்கண்டது- செம்மையாகச்சொற்பனத்திற்பார்த்தது— அண்ணலே.. அரசனே—திரியக்கானும்- மிருகமானுலும்—நெஞ்சுறக்கண்ட- மனதிற்பொருந்தப்பார்த்ததும்— கேட்ட- கேட்டதும்— மறப்பில- மறப்பில்லாமல்— நிகழ்கனுவில்- விளங்குகின்றசொற்பனத்தில்— சஞ்சரித்திட- சஞ்சரிக்கும்படி— காணும்- தோற்றும்— ஆதலால்- ஆகையினல்— சாற்றக்கேளாய்- சொல்லக்கேட்பாய்— (எ-று) - - - - - - - - *

(௬) (அ-கை) பூங்கொடியில்வசிக்கின்றவனதேவதைச்சிறப்புக்கூறல் (கவி) பூவுமென்றளிருங்காயும்பொலிந்தவக்கொடிதன்காட்டிற், றேவதையானவந்தத்தேவிவாழ்வனமாய்த்தோன்ற, மேவுவித்தெனுமவற்றிலங்குரமேனியொப்பாய்த், தாவுறுஞேயமுற்றதன்னுடையறிவினலே. (இ-ள்) பூவும்- புட்பங்களும்— மென்றளிரும்- மிருதுவானதுளிர்களும்— காயும்- காய்களும்— பொலிந்த- விளங்கிய— அக்கொடி- அந்தக்கொடியானது— தன்காட்டிற்றேவதையான- தனதுவனதேவதையாகிய— அந்தத்தேவிவாழ்- அந்தத்தெய்வப்பெண்வாழுகின்ற— வனமாய்த்தோன்ற- கொடிவீடாயுண்டாக— மேவு- பொருந்திய— வித்தெனுமவற்றில்- விதையென்கின்றவைகளிலுள்ள— அங்குரமேனியொப்பாய்- முளைநிறத்துக்குச்சமானமாய்— தாவுறும்- புலப்படுகின்ற— ஞேயமுற்ற- விடயத்தைப்பொருந்திய— தன்னுடையறிவினல்- தனதறிவினல்— (எ-று) - - - - - - - - *

(௭) (அ-கை) பூங்கொடிசுழுத்தியினல்வண்டாதல் (கவி) தன்னுடைவனந்தூரத்தேசார்ந்ததாய்த்தன்னுட்கண்டு, முன்னியசுழுத்தியுற்றவறிவினன்மூடத்தன்மை, துன்னுறவனுபவித்துச்சுரும்பெனத்தன்னைக்கண்ட, தன்னவண்டோடைக்கஞ்சவலையங்கிண்டதனுள்ளான. (இ-ள்) தன்னுடைவனம்- தனக்குப்பற்ருகியசோலை— தூரத்து- சேய்மையில்- சார்ந்ததாய்— பொருந்தினதாக— தன்னுட்கண்டு- தனக்குள்ளேபார்த்து—முன்னிய- நினைக்கப்பட்ட—சுழுத்தியுற்றவறிவினல்- சுழுத்தியவத்தையையடைந்தஞானத்தினல்— மூடத்தன்மை- அறியாமையை— துன்னுறவனுபவித்து- நன்ருயனுபவித்து—சுரும்பென- வண்டாக—தன்னைக்கண்டது-(கொடியான)தன்னைப்பார்த்தது—அன்னவண்டு- அந்தவண்டானது— ஓடைக்கஞ்சவலையங்கிண்டதனுள்ளான- குளத்திற்ருமரைத்தண்டைக்கிழித்ததற்குள்ளானது (எ-று) சுழுத்தியவத்தையிலிருக்கின்றபூங்கொடிவண்டானதெங்ஙனமெனின் ஃதோரறிவுயிரானபடியாற்புட்பத்தின்மொய்க்குமளியின்பரிசத்தையறியுமறிவினலஃதாயினதெனக்கொள்க *

(௮) (அ-கை) வண்டானையைப்பார்த்தல். (கவி) சடமதியுயிர்க்குமுள்ளஞ்சார்ந்திடும்விளையாட்டோர்பான், மடல்வனசத்துளாங்கேவண்டுறைதடத்துவந்தோர், கடகரிகுழப்பிவீசக்கஞ்சமுங்கயமுமவண்டுந், தொடர்பொடியானவந்தத்தும்பியைத்தும்பிநோக்கி (இ-ள்) சடமதியுயிர்க்கும்- மூடபுத்தியையுடைய(கிருமிகீடாதி) யுயிர்களுக்கும— உள்ளம்- மனமானது— ஓர்பல்- ஓரிடத்தில்—விளையாட்டு- விநோதமாக— சார்ந்திடும்- சேர்ந்திருக்கும்— மடல்வனசத்துள்- இதழ்களையுடையதாமரைப்பூவினுள்— ஆங்கு- அவ்விடத்தில்— வண்டுறைதடத்து- ஞிமிறுகள்வாசஞ்செய்கின்றதடாகத்தில்— ஓர்சடகரிவந்து- ஒருமதயானைவந்து—குழப்பிவீச- கலக்கியெறிய—சஞ்சமும்- (அதினுள்ள) தாமரைகளும்—கயமும்- குளமும்—வண்டும்- ஞிமிறும்—தொடர்பொடியான- தொடரப்பட்டதூளியாயின—அந்தத்தும்பியை- அந்தயானையை— தும்பிநோக்கி-(இந்த)வண்டானதுபார்த்து (எ-று)

(௯) (அ-கை) வண்டியானையைப்பார்த்தலாலியானையாகவுமியானைவண்டின்பரிசத்தால்வண்டுமாதல். (கவி) அக்கரியாசத்தன்னைக்கண்டதுகுளப்பள்ளத்திற். கைக்கரிவிழ்நததநதக்கரியையோர்வேந்தன்பாகன், சிகெனக்கொடுபோயாங்கோர்செருவிலேசிதையச்செய்தான், பக்கவண்டிணக்கத்தாற்கைப்பகடுமீண்டளியாய்த்றன்றே (இ-ள்) அக்கரியாக- அந்தயானையாக— தன்னைக்கண்டது- (வண்டு) தன்னைப்பார்த்தது— குளப்பள்ளத்தில்-பெரியபள்ளத்தில்—கைக்கரிவிழ்ந்தது- தும்பிக்கையையுடையயானையானதுவிழுந்தது— அந்தக்கரியை- அந்தயானையை— ஓர்வேந்தன்பாகன்- ஓரரசனுடைய(யானைப்)பாகன்—சிக்கெனக்கொடுபோய்- கெட்டியாகப்பிடித்துக்கொண்டுபோய்— ஆங்கோர்செருவில்- அவ்விடத்திலொருயுத்தத்தில்— சிதையச்செய்தான்- மடியச்செய்தான்—பக்கம்- (கன்னப்) பக்கத்திலிருக்கும்— வண்டிணக்கத்தால்- சுரும்பின்கூட்டரவினல்— கைப்பகடு- தும்பிக்கையையுடையயானையானது— மீண்டளியாய்த்று- திரும்பவண்டானது— (எ-று) - - - - - - - - *

(௧௦) (அ-கை) வண்டன்னநினைவினலன்னமாய்ப்பின்சிலபிறப்பையடைந்தன்னப்பற்ருவிசைபாடுமன்னமாதல். (கவி) கடுத்ததோர்களிருன்மீளக்கயத்தொடவ்வண்டுதாளா, யடுத்தகூலத்திலன்னவறிவினலன்னமான, துடுத்தநீருலகிலன்னமுலப்பிலாயோனியெய்தி, தடுத்தநீர்க்கயக்கஞ்சத்தோர்சாரசமானதன்றே. (இ-ள்) கடுத்ததோர்களிருல்- கோபித்தவோர்யானையினல்— மீள- திரும்பவும்— அக்கயத்தொடு- அக்குளத்தோடும்— அவ்வண்டுதாளாய்- அவ்வண்டானதுபொடியாகி— அடுத்தகூலத்தில்- சேர்ந்தகரையில்— அன்னவறிவினல்- அம்சவுணர்வினல்— அன்னமானது- அம்சமாயிற்று— உடுத்தநீருலகில்-சமுத்திரஞ்சூழ்ந்தசகத்தில்—அன்னம்-(அவ்)வன்னமானது—உலப்பிலாயோனியெய்தி- வருத்தமில்லாதசிலயோனிகளையடைந்து— தடுத்தநீர்- தடுத்திருக்கின்றசலத்தையுடைய— கயக்கஞ்சத்து- ஓடையிலுள்ளதாமரையில்— ஓர்சாரசமானது- ஒப்பற்றவன்னமாயிற்று— (எ-று) *

(௰௪) (அ-கை) அஃனஞ்சிவோகபாவனையாற்சிவமாதல் (கவி) அக்குருகொருகால்விண்போயரன்புரத்தரனைக்கண்டு, மிக்கசங்கரனுமென்றேமெய்ம்மையாய் நினைத்தலோடு, நக்கனதுருவமாகிநயந்தவாவிசனாட்டிற், றொக்கபல்கணங்களோடுஞ்சூக்கமெய்ஞ்ஞானத்தோடும் (இ-ள்) அக்குருகு- அவ்வன்னமானது — ஒருகால்விண்போய் - ஒருபோதாகாயத்திற்சென்று — அரன்புரத்து - உருத்திரனுலகத்தின் — அரனைக்கண்டு - உருத்திரனைப்பார்த்து — மிக்கசங்கரனுமென்று - மேலானவிந்தவுருத்திரனேயானென்று — மெய்ம்மையாய்நினைத்தலோடும் - உண்மையாகப்பாவித்தவுடன் — நக்கனதுருவமாகி - உருத்திரனதுஸ்வரூபமாய் — நயந்தவாவிசனாட்டில் - இச்சித்தபடிவுருத்திரவுலகத்தில் — தொக்கபல்கணங்களோடுஞ்சூக்கமெய்ஞ்ஞானத்தோடும் - கூடியவநேகசிவகணங்களுடன் சூட்சுமமானவுண்மைஞானத்துடனும் (எ-று) [இ-௰௪-க-ம்] சந்நியாசிசீவடன்முதலுத்திரனீறாகநூறுசென்மமெடுத்ததென்பதாம்

(௰௫) (அ-கை.) உருத்திரன்முன்னெடுத்தசநநங்களைப்பார்த்தல். (கவி) ஈசனாயியங்குவான்முன்னியன்றனசரிதையெல்லா, மாசறுபுந்தியாலேமதித்தனன்மறைப்பிலாத, தேசுவிஞ்ஞானமேனிச்சிவன்றனியிருந்துசெப்பும், விசியசனவுநூற்றின்வியப்பெலாம்விளங்கநோக்கி (இ-ள்) ஈசனாயியங்குவான் - சிவனாகச்சஞ்சரிப்பவன் — முன்னியன்றனசரிதையெல்லாம் - முன்னடந்தசரித்திரங்களனைத்தையும் — மாசறுபுந்தியால்மதித்தனன் - குற்றமற்றவறிவினாலறிந்தான் — மறைப்பிலாத - மறைவில்லாத — தேசுவிஞ்ஞானமேனி - ப்ரகாசமானவிஞ்ஞானசரீரத்தையுடைய — சிவன்றனியிருந்து - உருத்திரனாகவேகாந்தத்திருந்து — விசியசனவுநூற்றின் - விசாநின்றநூறுசொற்பனத்தினது — வியப்பெலாம்விளங்க - அதிசயங்களனைத்தையும்ப்ரகாசிக்க — நோக்கிச்செப்பும் - பார்த்துச்சொல்லுவார் — (எ-று) - - *

(௰௬) (அ-கை) சங்கற்பமானமாயாவிசித்திரத்தைப்பார்த்ததிசயித்தல். (கவி) சித்திரமம்மவிந்தச்சகத்தைமோகஞ்செய்மாயை, மித்தையாயிருந்துங்கெட்டேன்மெய்ம்மையாங்கானல்போல, வித்திறமயக்கமாகவிப்பெருமாயைக்காட்டி, லொத்தபல்விடத்திற்புக்கேயுழன்றனனெல்லையின்றி (இ-ள்) சித்திரமம்ம - அதிசயமதிசயம் — இந்தச்சகத்தை - இவ்வுலகத்தை — மோகஞ்செய்மாயை - மயக்கஞ்செய்கின்றமாயையானது — மித்தையாயிருந்தும் - பொய்யாயிருந்தும் — கெட்டேன் - ஆச்சரியம் — கானல்போல - கானற்சலத்தைப்போல — மெய்ம்மையாம் - உண்மையாகும் — இத்திறமயக்கமாக - இந்தப்ரகாரம்பிரமையாக — இப்பெருமாயைக்காட்டில் - இந்தமகாமாயாவனத்தில் — ஒத்தபல்விடத்திற்புக்கு - பொருந்தியபலவிடத்திற்சென்று — எல்லையின்றியுழன்றனன் - அளவில்லாமற்சுழன்றேன் (எ-று) *

(௰௭) (அ-கை) உருத்திரன் சீவடன்முதலியபவநூற்றையுந்தன் மயமாக்கக்கருதுதல். (கவி) என்னுளமாத்திரத்திலெழுந்தகற்பனையினாலே, முன்னொருசிருட்டிக்கேநான் மொழிந்தசீவடப்பேரானேன், பின்னொருசிருட்டிதன்னிற்பெருங்கலைமறையோனானேன், மன்னவனானேன்பின்புவந்ததோர்சிருட்டிதன்னில். (இ-ள்) என்னுளமாத்திரத்தில் - எனதுமனதளவில் — எழுந்தகற்பனையினால் - உண்டாகியகற்பனையினால் — முன்னொருசிருட்டிக்கு - முன்பொருசிருஷ்டியில் — நான்மொழிந்த - யான்சொல்லிய — சீவடப்பேரானேன் - சீவடனென்னுநாமத்தையுடையவனானேன் — பின்னொருசிருட்டிதன்னில் - பின்னொருசிருஷ்டியில் — பெருங்கலைமறையோனானேன் - மகாகலைஞானங்களையுணர்ந்தபிராமணனானேன் — பின்புவந்தது - பின்னுண்டானதாகிய — ஓர்சிருட்டிதன்னில் - ஒருசிருஷ்டியில் — மன்னவனானேன் - அரசனானேன் — (எ-று) - - - - - - - - - - - - - - - *

(௰௮) (அ-கை) இ-து. (கவி) இத்திறநூறுயோனியெய்தியிங்கீசனானேன், மெத்தியவாண்டுகங்கள்விருத்திகளநேகஞ்சென்ற, வத்தனைபிறப்பும்போய்நாமறிகுவோமறிந்துநன்றா, யொத்தவாறாக்கியெல்லாமொருவழிப்படுத்துகிற்போம் (இ-ள்) இத்திறம் - இந்தப்ரகாரம் — நூறுயோனியெய்தி - சதயோனியையடைந்து — இங்கீசனானேன் - இவ்விடத்திலுருத்திரனானேன் — மெத்தியவாண்டு - மிகுந்தவருடமும் — உகங்கள் - யுகங்களும் — விருத்திகள் - தொழில்களும் — அநேகஞ்சென்ற - பலகழிந்தன — அத்தனைபிறப்பும் - அவ்வளவுசநநத்தையும் — போய்நாமறிகுவோம் - சென்றுயாம்பார்ப்போம் — நன்றாயறிந்து - நன்றாகப்பார்த்து — ஒத்தவாறாக்கி - ஒருமையாகச்செய்து — எல்லாம் - சகலத்தையும் — ஒருவழிப்படுத்துகிற்போம் - ஒன்றாகச்செய்வோம் — (எ-று) [இ-௪-க-ம்] உருத்திரன்றனதுசிவஞானத்தாற்சங்கற்பவடிவமானநூற்றையுஞ்சிவாகாரமாக்கநினைத்ததாம். - - - *

(௰௯) (அ-கை) சந்நியாசியின்சங்கற்பநீக்குதல் (கவி) என்றுணர்ந்தீசன்முன்னேயிருந்தசந்நியாசிதன்பாற், சென்றவன்றனையெழுப்பிச்சேதனத்தொடுநெஞ்சோடு, மொன்றுறச்செய்தலோடுமுணர்ந்தசந்நியாசிதானு, நின்றதன்மயக்கமெல்லாநினைவுறநோக்கினானே (இ-ள்) என்றுணர்ந்தீசன் - (இப்படி) யென்றுசிந்தித்தவுருத்திரனானவன் — முன்னிருந்தசந்நியாசிதன்பால் - முன்னிருந்தசந்நியாசியினிடத்தில் — சென்று - போய் — அவன்றனையெழுப்பி - அவனைநித்திரையைவிட்டெழுப்பி — சேதனத்தொடும் - ஞானத்துடன் — நெஞ்சோடும் - மனதை — ஒன்றுறச்செய்தலோடும் - ஒன்றுபடச்செய்தவளவில் — உணர்ந்தசந்நியாசிதானும் - விழித்துணர்ந்தசந்நியாசியும் — நின்றதன்மயக்கமெல்லாம் - நின்றதனதுபிரமைகளனைத்தையும் — நினைவுறநோக்கினான் - நினைப்புண்டாகப்பார்த்தான் — (எ-று) (ப-ம்) சங்கற்பமாகியசுழுத்தியினின்றும் ஞானமாகியநனவில்வெளிப்படுத்தினானென்பார், எழுப்பியென்றும், ஞானமாய்ச்சங்கற்பத்தைக்களைத்தானென்பார், சேதனத்தொடுநெஞ்சோடுமொன்றுறச்செய்தென்றுங்கூறினார். - - - - - - - - - - - - - - - *

(௨௰) (அ-கை) சீவடனைச்சிவரூபமாக்குதல். (கவி) சீவடனாதியாந்தன் வடிவத்தைச்சிவன் சிந்தித்துத், தாவில்சிற்கனதோர்பாற்சார்ந்ததுசீவடன்வாழ்தேசங், கேவலந்தானுஞ்சந்நியாதியுங்கிட்டியன்றான், மேவுறடனத்திறனும்மற்றொடுமேவவித்தான (இ-ள்) சீவடனாதியாம் - சீவடன்முதலான — தன்வடிவத்தை - தனதுசநநரூபத்தை — சிவன்சிந்தித்து - உருத்திரனாலோசித்து — தாவில் - சலன

மற்ற—சிற்ககனத்து- ஞானாயத்தின்—ஓர்பால்- ஒருபக்கத்தில்—சார்ந்து- சேர்ந்து—சீவடன்வாழ்தேசம்- சீவடன்வாழாநின்றநாட்டில்—கேவலந்தானும்- தனிமையானவுருத்திரனும்—சந்நியாதியும்- சந்நியாசியும்—கிட்டி- நெருங்கி—அன்றன்மேவுற- அச்சீவடன்ஞானமடைய—அறிவொடும்- ஞானத்துடன்—மனத்தினெடும்- மனதை—மேவவித்தான்- பொருந்தச்செய்தான்—(எ-று)

(உக) (அ-கை) மூவருங்கூடிச்சேறல் (கவி) மூவருமறிவுபெற்றோர்முதுபழக்கத்தினலே, மாவியப்புற்றுஞ்சற்றும்வியப்பிலாவடிவமொன்றை,மேவுமூவடிவமானேர்மிகுமுருத்திரனுமற்றச், சீவடன்றானுஞ்சந்நியாசியுஞ்சேர்ந்துசென்று. (இ-ள்) மூவரும்- மூன்றுபேர்களும்—அறிவுபெற்றோர்- ஞானத்தைப்பெற்றவர்களாய்—முதுபழக்கத்தினல்- பழையபழக்கத்தினல்—மாவியப்புற்றும்- மிகுந்தவாச்சரியத்தையடைந்தும்—சற்றும்- எவ்வளவும்—வியப்பிலார்- அதிசயமில்லாதவர்களாய்—வடிவமொன்றைமேவும்- ஒன்றானசிவரூபத்தைப்பொருந்தியும்—மூவடிவமானேர்- (தேக)மூன்றுருவமானவர்கள்—மிகுமுருத்திரனும்- மேலானவுருத்திரனும்—சீவடன்றானும்- சீவடனும்—சந்நியாசியும்- சந்நியாசியும்—சேர்ந்துசென்று- கூடிப்போய்—(எ-று) - - - - - - - - - ※

(உஉ) (அ-கை) மறையவன்முதலியதொண்ணூற்றெண்வரையுஞ்சிவமாக்குதல். (கவி) வேதியன்முதலாயுள்ளோர்பிறப்பிடமெல்லாமேவித், தீதறக்கூட்டித்தெய்வஞானத்தாற்றேசுமிக்க,சோதிருத்திரர்களாகியறிவுற்றார்சொன்னவீசன், போதிரொன்றேவதத்தமிடங்களிற்போயினரோ (இ-ள்) வேதியன்முதலாயுள்ளோர்- பிராமணன்முதலாகவுள்ளவர்கள்—பிறப்பிடமெல்லாமேவி- செனித்தவிடங்களெல்லாஞ்சென்று—தீதற- தீமைகெடும்படி—கூட்டி- தங்களுடன்சேர்த்து—தெய்வஞானத்தால்- தெய்விகஞானத்தினல்—தேசுமிக்க- ஒளிமிகுந்த—சோதிருத்திரர்களாகி- ப்ரகாசத்தையுடையவுருத்திரர்களாய்—அறிவுற்றார்- ஞானமடைந்தார்கள்—சொன்னவீசன்- முன்சொல்லப்பட்டவுருத்திரனனவர்—போதிரொன்றேவ- (உங்களிடத்துக்குப்)போங்களென்றுத்தரவுசெய்ய—தத்தமிடங்களிற்போயினர்- தங்கடங்களிடத்துக்குப்போனர்கள்—(எ-று)- - - - - - - - - - ※

(உங) (அ-கை) சீவன்முத்தராயிருந்துவிதேகமுத்தராதல். (கவி) சீவடன்மறையோனாதியாவருஞ்சென்றுதத்தம், பாவைபரோடும்வாழ்ந்துபாலுறவுடல்போநாளின், மேவுருத்திரனைச்சேர்ந்தாரென்றலும்வீரன்கேளா, வாவிதுபுதுமையென்னவதன்றிறம்வினவலுற்றான். (இ-ள்) சீவடன்- சீவடனும்—மறையோனாதி- பிராமணன்முதலான—யாவருஞ்சென்று- சகலரும்போய்—தத்தம்- தங்கடங்களுடைய—பாவைபரோடும்வாழ்ந்து- மனைவியர்களோடுங்கூடிவாழ்ந்து—பாலுற- (தங்கள்)ஊரிமையைப்பெற—உடல்போநாளில்- சரீராந்தத்தில்—மேவுருத்திரனை- பொருந்தியசிவத்தை—சேர்ந்தார்- அடைந்தார்கள்—என்றலும்- யென்றுவசிட்டமுனிசொல்லியவளவில்—வீரன்கேளா- வீரனனஸ்ரீராமன்கேட்டு—ஆவிதுபுதுமையென்ன- இதாச்சரியமாச்சரியமென்று—அதன்றிறம்- அதன்காரணத்தை—வினவலுற்றான்- கேட்கத்தொடங்கினர்—(எ-று [இ-சு-க-ம்]சந்நியாசியின்ஞானவியாபகத்தினின்றுதித்தசங்கற்பவடிவம்பின்ஞானவடிவமாகவேவிளங்கிற்றென்பதாம் - - - - - - ※

(உச) (அ-கை) சங்கற்பரூபஞ்சத்தியமானதெங்ஙனமென்றவதற் குத்தரஞ்சொல்லத்தொடங்கல் (கவி) அங்குசீவடனையாதியானவர்சந்நியாசி சங்கற்பத்துருவமானேர்சத்தியமானதெங்ஙன், பொங்குற்றசங்கற்பத்தின்பொருளெலாம்பொய்யேயன்றே, யிங்கிதைவிளக்காயென்றவிராமற்குவசிட்டன்சொல்வான் (இ-ள்) அங்கு- அவ்விடத்தில்—சீவடனையாதியானவர்- சீவடன்முதலானவர்கள்—சந்நியாசி- சந்நியாசியினது—சங்கற்பத்து- சங்கற்பத்தினல்—உருவமானேர்- வடிவமானவர்கள்—சத்தியமானதெங்ஙன்- உண்மையானதெப்படி—பொங்குற்றசங்கற்பத்தின்- மிகுந்தசங்கற்பத்தினது—பொருளெலாம்- வஸ்துக்களியாவும்—பொய்யேயன்றே- மித்தையேயல்லவா—இங்கிதை- இவ்விடத்திலிதை—விளக்காயென்ற- தெரிவிப்பாயென்றுகேட்ட—இராமற்கு- ஸ்ரீராமனுக்கு—வசிட்டன்சொல்வான்- வசிட்டமுனிசொல்லுவார்—(எ-று) - - - - - - - - - - ※

(உரு) (அ-கை) சித்தியாவுமஃதாயிருத்தலிற்சங்கற்பஞ்சத்தியமாயிற்றெனல். (கவி) எதுவுமுண்டறிவினுள்ளேயெப்படியெத்தைக்கண்ட, ததனையப்படிச்சித்தெய்துமனைத்துமாதலினுண்மையே, யெதுகனவிற்காண்கின்றதெதுசங்கற்பத்திற்சேர்ந்த, ததுவங்கேயுண்டெப்போதுமப்படிவடிவமாகும் (இ-ள்) அறிவினுள்- அறிவினிடத்தில்—எதுவுமுண்டு- யாவுமுண்டு—சித்து- சித்தானது—எப்படியெத்தைக்கண்டது- எந்தப்ரகாரமெதைக்கண்டதோ—அனைத்துமாதலினல்- தான்சகலமுமாதலால்—அதனை- அதை—அப்படியெய்தும்- அந்தப்ரகாரமாயடையும்—மெய்யே- உண்மையே—எது-யாது—கனவிற்காண்கின்றது- சொற்பனத்திற்பார்க்கப்படுகின்றதோ—எது- யாது—சங்கற்பத்திற்சேர்ந்த- சங்கற்பத்தினிடத்திற்சேர்ந்ததோ—அது- அந்தவஸ்து—எப்போதும்- எக்காலமும்—அங்கேயுண்டு- அவ்விடத்திலுண்டாயிருக்கும்—அப்படிவடிவமாகும்- அவ்வண்ணமுருவமாகும்(எ-று) ※

(உசா) (அ-கை) அங்ஙனமாயினுயிர்களின்சங்கற்பமனைத்துமுண்மையாகவேண்டுமேயெனினங்ஙனங்கூடாவவ்வுயிர்கள்சின்மாத்திரமாயிருந்துசங்கற்பிக்கினஃதுண்மையாமெனல் (கவி) வேசங்கற்பத்திற்கனவுதனிற்சார்ந்தபொருளெப்படிசேர்ந்த, தங்கப்பொருடான்பரமத்தினழுந்தும்பழக்கமியோகமெனுந், துங்கத்திறத்தல்லதுமெய்யாய்த் தோன்றுதியோகவிஞ்ஞான, மிங்குப்பெறலாற்சிவன்முதலோரெங்குமெல்லாங்காண்கின்றார். (இ-ள்) சங்கற்பத்தில்- சங்கற்பத்திலும்—கனவுதனில்- சொற்பனத்திலும்—சார்ந்தபொருள்- சேர்ந்தவஸ்துவானது—எப்படிசேர்ந்தது- எப்படியடைந்ததோ—அங்கு- அவ்விடத்தில்—அப்பொருடான்- அந்தவஸ்துவானது—பரமத்தின்- பிரமத்தின்—அழுந்தும்பழக்கம்- அழுந்துகின்றவப்பியாசம்—இயோகமெனும்- யோகமென்கின்ற—துங்கத்திறத்தல்லது- பரிசுத்தமானதன்மையினலன்றி—மெய்யாய்த்தோன்றுது- சத்தியமாகத்தோற்றுது—

இயோகவிஞ்ஞானம்- யோகத்தையு ஞானத்தையும்— இங்குப்பெறலால்- இவ்விடத்திலடைதலினுல்— சிவன்முதலோர்- ஈசன்முதலியதேவர்களும்— எங்கும்- எவ்விடத்திலும்— எல்லாங்காண்கின்றுர்- யாவையும்பார்க்கின்றுர்கள்— (எ-று.) - - - - - - - - - - - - - - - ✻

(உஎ) (அ-கை) ஆயிற்சீவன்சித்தன்றேவெனின்சித்தாயிருந்துமதனைமறந்துசிதாபாசனுகச்சேறலினஃதைமறந்ததற் காதாரமானபிரமநிஷ்டாபரனுயிற் சங்கற்பித்தபடிசுளுவிற்கிடைக்குமெனல். (கவி) இட்டமானபொருளெல்லாமேகநிட்டர்க்கெளிதெய்துந், திட்டமாந்தென்றிசைநோக்கிச்செல்வார்வடக்கெப்படிசேர்வார், தொட்டசங்கற்பத்தருத்தஞ்சூழ்வாரதுவேதுன்னுவரான், முட்டிறமதுபயன்வசத்தோர்முன்சேர்பொருளைமுன்னுரே. (இ-ள்) இட்டமானபொருளெல்லாம்- பிரியமாயிருக்கின்றவஸ்துக்களியாவும்— ஏகநிட்டர்க்கு- ஒன்றுனநிஷ்டையையுடையவர்களுக்கு—எளிதெய்தும்- எளிதிற்கிடைக்கும்— திட்டமாம்-செவ்வையாக—தென்றிசைநோக்கி-தென்றிசையைப்பார்த்து—செல்வார்- நடப்பவர்கள்— வடக்கெப்படிசேர்வார்- உத்தரதிசையையெப்படியடைவார்கள்— தொட்ட- பரிசித்த—சங்கற்பத்தருத்தம்- சங்கற்பத்தினுலுண்டானவஸ்துவை— சூழ்வார்- கருதுபவர்கள்— அதுவேதுன்னுவர்- அதையேயடைவார்கள்— முட்டில்- குறைவற்ற— தமதுபயன்வசத்தோர்- தமதாத்மப்ரயோசனவசத்திலுள்ளவர்கள்— முன்சேர்பொருளை- முன்புசேர்திருக்கின்றவிடயவஸ்துவை—முன்னுர்- நினையார்கள்—(எ-று) - - - - - - - - - - - - - - ✻

(உஅ) (அ-கை.) பிரமநிட்டாள்சங்கற்பமுழுதுமுண்மையாமோவெனிற்சங்கற்பமொன்றிலழுந்துமாயினஃதுண்மையாமிரண்டாயினுகாவெனல், (கவி) முன்னுபொருளிற்சங்கற்பமுட்டிவிரும்புமொய்ப்புந்தி, யன்னபொழுதேகத்துவத்திலழுந்தாமையினுலவ்விரண்டு, மின்னபுந்திநசிப்பிக்குமினிநான்விச்சாதரனுகு, மன்னுகின்றநானிங்குமறையோனுமென்றுறநோக்க (இ-ள்) முன்னுபொருளில்- முன்னிருக்கின்றவஸ்துக்களுக்கிடமாகியும்— சங்கற்பமுட்டி- சங்கற்பத்தையெதிர்த்து—விரும்பும்- இச்சிக்கின்ற— மொய்ப்புந்தி- மூடபுத்தியானது— அன்னபொழுது- அப்பொழுதே— ஏகத்துவத்தில்- ஒன்றில்— அழுந்தாமையினுல்- அழுந்தாதபடியினுல்— அவ்விரண்டும்- அந்தவிரண்டையும்— இன்னபுந்தி- இந்தப்புத்தியானது— நசிப்பிக்கும்- கெடுப்பிக்கும்—இனிநான்- இனிமேலியான்—விச்சாதரனுகும்-வித்தியாதரனுகும் -மன்னுகின்றநான்- நிலையாயிருக்கின்றயான்—இங்கு-இவ்விடத்தில்—மறையோனுமென்று-பிராமணனுமென்று— உறநினைக்க- பொருந்தச்சிந்திக்க (எ-று)

(உகூ) (அ-கை) சித்தாயிருந்தொன்றிலழுந்தினபடியாற்சந்நியாசிசங்கற்பமுழுதுமுண்மையாயிற்றெனல் (கவி) இதுவேயேகத்துவமதனிலெய்துபேற்றின்றிட்டாந்த மதுகாரியஞ்சித்தியின்பொருட்டாமாதலாலேகப்பொருளிற், றிதநிட்டையினுற்சந்நியாசிசீவன்சிவனுய்ச்சிவவடிவா, லுதவுகின்றசங்கற்பத்துற்றபொருட்குண்மையைமேவும். (இ-ள்) இதுவே- இந்தநினைவே—ஏகத்துவமதனில்-ஒருவிடயத்தில்— எய்துபேற்றின்- அடைகின்றபயனின்— திட்டாந்தம்- திருஷ்டாந்தமாம்— அதுகாரியம்- அக்காரியமானது— சித்தியின்பொருட்டாம்- சித்தியினிமித்தமாம— ஆதலால்- ஆசையினுல்— ஏகப்பொருளில்- ஒன்றுனவஸ்துவில்— திதநிட்டையினுல்- திரம்பொருந்தியசமாதியினுல்— சந்நியாசிசீவன்- சந்நியாசியின்சீவனுனது— சிவனுய்- உருத்திரனுகி— சிவவடிவால்- உருத்திரரூபத்தினுல்— உதவுகின்ற- பொருந்துகின்ற— சங்கற்பத்து- சங்கற்பத்தினுல்— உற்றபொருட்கு— அடைந்தவஸ்துவுக்கு— உண்மையைமேவி- உண்மையைப்பொருந்தி— (எ-று.) - - - - - - ✻

(௩௰) (அ-கை.) சங்கற்பத்தையதற்காதாரமானசிவஞானமாகக்கனைத்தலிலந்நூற்றுவருஞ்சீவன்முத்தராயவரவரிடத்தில்வசித்தார்களெனல் (கவி) தெளிசந்யாசிசங்கற்பத்தவராஞ்சீவடன்முதலோர், களிகொடத்தம்வேற்றுலகைக்கண்டாரீசனுருவத்தால், விளிவில்சங்கற்பத்துண்மைமேவினுர்தஞ்சங்கற்பத், தெளிதுசேருநகரடைந்தாரீசன்விஞ்ஞானத்தாலே (இ-ள்) தெளிசந்யாசி- தெளிந்தசந்நியாசியின்— சங்கற்பத்தவராம- சங்கற்பத்திலுண்டானவர்களாகிய— சீவடன்முதலோர்- சீவடனுதியானோர்கள்—களிகொடத்தம்-களிப்புடையதங்கடங்களின்—வேற்றுலகை-வேறுனசகங்களை—ஈசனுருவத்தால்- உருத்திரரூபத்தினுல்— கண்டார்- பார்த்தார்கள்— விளிவில்சங்கற்பத்து- சத்தியசங்கற்பத்தினுல்— உண்மைமேவினுர்- தத்துவத்தையடைந்தார்கள்— ஈசன்விஞ்ஞானத்தால்- உருத்திரனதுஞானத்தினுல்— தன்சங்கற்பத்து- தனதுசங்கற்பத்தினுல்— எளிதுசேரும்- எளிதாகச்சேராநின்ற— நகரடைந்தார்- பட்டணத்திற்சேர்ந்தார்கள்— (எ-று) [இ-எ-க-ம்] சைதன்யவியாபகமாயிருந்துசங்கற்பிக்கிலதுசத்தியமாமென்றுமஃதையறிந்தச்சங்கற்பமாயிருந்துசங்கற்பிக்கிலஃதசத்தியமாமென்றுங்கூறியதாம் ✻ சதவுருத்திரர்கதைமுற்றிற்று. ஆ கதை ௩௰௪ கவிதை (௲௩௱௪)



# வேதாளகதை.



(அ-கை) தன்னிடத்திற்சொற்பனகற்பிதமாகத் தோற்றினசதநபரம்பரைகளிதாற்றதிஷ்டியினுற்பிரமசாக்ஷாத்காரமாகவிளங்கினதையறிவித் திவ்வனுபவநன்றுய்விளங்கும் பொருட்டிச்சுமுத்திமவுனமுள்ளவேதாளகதையைநிருபிக்கிறுர். - - - - - - - - - - - - - ✻

(௧) (அ-கை.) மவுனத்திரமாக்கும்பொருட்டுச்சுழுத்திமவுனமாய்ச்சுகிப்பாயென்றுசீர்வதிக்சவவை
யாரெனவினவுதல். (கவி) சுழுத்திமவுனத்தினனுகித்தொடருமனத்தினெழுச்சியற, வழுத்துமலக்கற்ப
னை நீக்கியகண்டபதத்திலிருவெனலும், வழுத்துகாணமவுனஞ்சொன்மவுனங்காட்டமவுனமெனச், செ
ழுந்தமூன்றுந்தெளிந்திடமேற்சுழுத்திமவுனஞ்செப்பென்ன (இ-ள்) சுழுத்திமவுனத்தினனுகி- சுழு
த்திமவுனத்தையுடையவனுய்— தொடருமனத்தின்- தொடராநின்றமனதினது— எழுச்சியற- உதய
மறும்படி— அழுத்தும்- அமிழ்த்தாநின்ற—மலக்கற்பனைநீக்கி- சஉங்கமானசங்கற்பத்தைக்கெடுத்து—
அகண்டபதத்தில்- அகண்டாகாரமானபிரமபதத்தில்—இருவெனலும்- இருப்பாயென்றுவசிட்டமுனி
சொல்லவும்— வழுத்து- சொல்லப்பட்ட— சொன்மவுனம்- வாக்குமவுனமும்— கரணமவுனம்- கர
ணமவுனமும்— காட்டமவுனமென- காட்டமவுனமுமென்று— செழுத்தமூன்றும்- மாட்சிமைப்ப
ட்டமூன்றையும்— சுழுத்திமௌனம்- சுழுத்திமௌனத்தையும்—தெளிந்திட- தெளியும்பொருட்
டு— மேற்செப்பென்ன -இனிச்சொல்வாயென்றுஸ்ரீராமன்கேட்க— (எ-று.) - - - - - ✻

(௨) (அ-கை) முனிவரிரண்டிற்காட்டத்தவமுனிவனிலக்கணங்கூறல் (கவி) ஓவின்முனிவரிருவ
கையாமொருவன்காட்டத்தவனுகுஞ், சீவன்முத்தன்மற்றவனுஞ்செய்யுங்கிரியைதனிலழுத்த, மேவுநி
னைவுற்றிந்தியத்தைமிக்கவலியால்வென்றவனைக், காவன்மன்னர்புகழ்வீராகாட்டத்தவனுமுனியென்பர்.
(இ-ள்) ஓவில்- வருத்தமில்லாத— முனிவரிருவகையாம்- தவசிகளிரண்டுவிதமாவர்— ஒருவன்காட்ட
த்தவனுகும்- ஒருவன்காட்டதபசியாவன்— மற்றவன்- பின்னொருவன்— சீவன்முத்தனும்- சீவன்மு
த்தனுவன்— செய்யுங்கிரியைதனில்- செய்கின்றபிராணயாமத்தொழில்களில்— அழுத்தமேவுநினைவு
ற்று- திடமானசிந்தையைப்பொருந்தி— இந்தியத்தை- இந்திரியங்களை— மிக்கவலியால்- மிகுந்தவ
லியையுடைய(வடையோகசத்தி)னல்—வென்றவனை- செயித்தவனை— காவல்- காத்தலையுடைய— மன்
னர்புகழ்வீரா- அரசர்கடுதிக்கப்பட்டவீரத்தையுடையஸ்ரீராமா— காட்டத்தவனுமுனியென்பர்- காட்
டத்தவமுனிவனென்று(சத்துக்கள்)சொல்லுவார்கள்— (எ-று) - - - - - - - - - ✻

(௩) (அ-கை.) சீவன்முத்தமுனிவனிலக்கணங்கூறல் (கவி) சகநேருள்ளபடியுணர்ந்துதன்பாற்ற
ன்னைநினைத்துலகை, நிகராகியுமுள்ளமைவுற்றேனிமலமுத்தனுமிந்த, மிகுநீள்சாந்தமுனிவரன்பான்
மிக்கமனத்தின்மெய்யுருவந், தகுநீடுருவாம்பாவனையேசாற்றுமௌனச்சொற்பொருளே (இ-ள்.)
சகநேருள்ளபடி- உலகத்தின்றன்மையையிதார்த்தமாக— உணர்ந்து- அறிந்து— தன்பால்- தன்னி
டத்தில்— தன்னைநினைத்து- ஆத்மாவைச்சிந்தித்து— உலகை- உலகத்தாருக்கு— நிகராகியும்- கிரிகை
யலொப்பாயிருந்தாலும்— உள்ளமமைவுற்றோன்- அகத்திலமைவுபிறந்தவன்— நிமலமுத்தனும்-
நன்மலமானசிவன்முத்தனுகும்— இந்த- இப்படிப்பட்ட— மிகுநீள்- மிகவுமுயர்வாள— சாந்தமு
னிவரன்பால்- சாந்தமுனிவனிடத்தில்—மிக்கமனத்தின்- மேலானமனத்தினது— மெய்யுருவம்- உண்
மைவடிவமாயிருக்கின்ற— தகுநீடுருவாம்பாவனையே- தகுந்தவுயர்வுள்ளவடிவமாகியபாவனையே— சா
ற்றும- சொல்லப்பட்ட—மௌனச்சொற்பொருள்- மௌனவாக்கியத்துக்கருத்தம்— (எ-று) - ✻

(௪) (அ-கை) மவுனநான்கிற்காட்டத்தவமுனிவர்க்கியல்பானமூன்றுமவுனத்தினிலக்கணங்கூறல்.
(கவி) வாக்குமவுனஞ்சொற்றடையாம்வலிந்திந்திரியமடங்குவித்த, றாக்குகரணமவுனமதாந்தனதுசே
ட்டையெலாம்விடுதல், வீக்குங்காட்டமவுனமதாம்விளங்குசித்தவியாபாரம், நீக்கமில்லாமூவகையாய்நிக
ழ்த்துமவுனமிவையாகும். (இ-ள்) வாக்குமௌனம்- வாக்குமௌனமானது— சொற்றடையாம்- வச
னத்தையடக்குதலாம்— வலிந்து- வலிமையாக— இந்திரியமடங்குவித்தல்- இந்திரியத்தையடக்குத
லே— தாக்கு- தாக்காநின்ற— கரணமவுனமதாம்- கரணமவுனமாகும்—தனதுசேட்டையெலாம்விடு
தல்- தனதுதொழிலனைத்தையுநீக்கிலே—வீக்குங்காட்டமௌனமதாம்- மிகுந்தகாட்டமவுனமாகும்—
விளங்குஞ்சித்தவியாபாரம்- ப்ரகாசிக்குமனோவிபகாரம— நீக்கமில்லாமூவகையாய்- நீக்கமின்றிமூன்
றுவிதமாக—நிகழ்த்துமௌனமிவையாகும்- சொல்லப்பட்டமௌனங்களிவைகளேயாகும(எ-று.) ✻

(௫) (அ-கை.) சீவன்முத்தமுனிவர்க்கியல்பானவோர்சுழுத்திமவுனத்தினிலக்கணங்கூறல் (கவி) வ
ன்பிலியற்றுமிம்மூன்றுமவுனங்காட்டத்தவர்க்கியல்பா, முன்பினின்றிப்பிறிவின்றிமொய்த்ததுயரற்றி
ருக்கின்ற, வின்பவனுபூதியர்க்கெனினுமிலாதார்க்கெனினுமிதுதானே, துன்பமொன்றுமணுகாதசுழு
த்திமவுனமெனச்சொல்வர். (இ-ள்) வன்பிலியற்றும்- உறுதியாகச்செயப்படுகின்ற—இம்மூன்றுமௌ
னம்- இந்தமூன்றுமௌனங்களும்— காட்டத்தவர்க்கியல்பாம்- காட்டத்தவமுனிவருக்குச்சுபாவமாகு
ம்— முன்பின்னின்றி- ஆதியந்தமில்லாமல்—பிறிவின்றி- வேற்றுமையில்லாமல்—மொய்த்ததுயரற்று-
மிகுந்ததுன்பங்கணீங்கி— இருக்கின்றவின்பம்- இராநின்றவாநந்தமானது— அனுபூதியர்க்கெனினு
ம்- ஆநந்தாநுபூதியையுடையவர்களுக்காயினும்— இலாதார்க்கெனினும்- இந்தவனுபூதியில்லாதவர்க
ளுக்காயினும்—இதுதானே- இந்தப்பிரமாநந்தமே— துன்பமொன்றுமணுகாத- ஒருதுன்பமுநெரு
ங்காத—சுழுத்திமௌனமெனச்சொல்வர்- சுழுத்திமவுனமென்றுசத்துக்கள்சொல்லுவார்கள்(எ-று) ✻

(௬) (அ-கை.) இ-து (கவி) பன்மைமோகத்திவ்வுலகைப்பற்றியுள்ளபடியுணர்ந்து, தன்மைநி
லையாயையமறற்றுனேசுழுத்திமௌனமதாஞ், சின்மயனேகவற்வுருவாஞ்சிவமேயவையாவையுமெ
னனுந், தொன்மைமுடிவின்லதானேசுழுத்திமௌனமெனச்சொல்வர் (இ-ள்) பன்மைமோகத்து-
பலவிதமானமயக்கத்தையுடைய— இவ்வுலகைப்பற்றி- இச்சகத்தைப்பிடித்து— உள்ளபடியுணர்த்
து- அதற்குள்ளகுணங்களையறிந்து— தன்மைநிலையாய்- குணமுள்ளநிச்சயத்தையுடையவனுய்— ஐ
யமறற்றுனை- சந்தேகநீங்குவதே— சுழுத்திமௌனமதாம- சுழுத்திமவுனமாகும்— சின்மயன்-
ஞானமயமுள்ள—ஏகவற்வுருவாஞ்சிவமே- பூரணஞானவடிவமாகியசுவஸ்வரூபமே— இவையாவையுமெ
னனும- இச்சகமெல்லாமென்கின்ற—தொன்மைமுடிவினிலதானே- முன்முடிவானசித்தாந்தமே—

சுழுத்திமௌனமௌனச்சொல்வர் - சுழுத்திமௌனமென்று(சத்துக்கள்) சொல்லுவார்கள்---(எ-று)[இ-௬-௧-ம்]மவுனநான்கினிலக்கணமுமஃதையுடையமுனிவரிருவரிலக்கணமும்பிரமாயறிவித்ததாம் ※

(௭)(அ-கை.)சுழுத்திமவுனஞ்சாங்கியம்யோகமெனவிரண்டுவிதமாமெனல் (கவி) நின்றவிண்ணுண்டல்லவுமாநிகழுமனைத்துமுளதிலதா, மென்றசமமுஞ்சாந்தமுமாயிருத்தல்சுழுத்திமவுனமதா,மொன்றுசுழுத்திமவுனந்தானுபயவிதமாமியோகியர்க்குத், துன்றுகின்றசாங்கியமுந் தூயதானயோகமுமே. (இ-ள்) உண்டு- சத்தாகவும்— அல்லவுமாம்- அசத்தாகவும்— உளதிலதாம்- சதசத்தாகவும்— நிகழுமனைத்தும்- விளங்காநின்றயாவும்— நின்றவிண்ணென்று- நித்தியமாயிருக்கின்றசிதாகாசமென்(றெண்ணி)—சமமும்- சமத்துவமும்— சாந்தமுமாய்- சாந்தமுமாகி—இருத்தல்- இருக்கின்றது—சுழுத்திமவுனமதாம்- சுழுத்திமவுனமென்றுசொல்லப்படும்—ஒன்றுசுழுத்திமவுனந்தான்- பொருந்தினசுழுத்திமவுனமானது— யோகியர்க்கு- யோகிகளுக்கு— துன்றுகின்றசாங்கியமும்- நெருங்குஞ்சாங்கியமென்றும்— தூயதானயோகமும்- பரிசுத்தமாகியயோகமென்றும்- உபயவிதமாம்- இருவகைத்து (எ-று)

(௮) (அ-கை.) சாங்கியயோகம்யோகயோகமாகியவிரண்டினிலக்கணங்கூறல் (கவி) தெளிவாஞானவுணர்வாலேதினமுமேகசமாதியினு, னளவாஞ்சங்கையாலறிந்தவவர்சாங்கியயோகியராகு, மூளதாம்பிராணன்முதல்வாயுவுபசாந்தியினூகத்தாலே, யெளிதாமுடிவிலுயர்பதத்தை யிசைந்தோர்யோகயோகியரே. (இ-ள்.) தெளிவாம்- தெளிவாகிய— ஞானவுணர்வால்- கல்வியறிவினாலும்—தினமும்- நாடோறும்— ஏகசமாதியினால்- பூரணநிஷ்டையினாலும்— அளவாஞ்சங்கையால்- பிரமாணமானவிசாரணையினாலும்—அறிந்தவவர்தான் -பிரமமென்றுணர்ந்தவவர்களே— சாங்கியயோகியராகும்-சாங்கியயோகியர்களாகும்—ஊகத்தாலுளதாம்- யுத்திகளினாலுண்டான— பிராணன்முதல்வாயு-பிராணாதிபவனங்கள்— உபசாந்தியில்- அடங்கினவிடத்தில்— எளிதாம்- எளிதாக— முடிவிலுயர்பதத்தையடைந்தோர்- அந்தமில்லாதமேலானபதத்தையடைந்தவர்கள்---இயோகயோகியர்- யோகயோகியர்கள் (எ-று)

(௯) (அ-கை) இவ்விருவரிலக்கணமுஞ் சொல்லியவர்களபிப்பிராயமுமறிவித்தல் (கவி) பண்ணப்படாதவுபசாந்தபதமேயெவர்க்கும்பற்றுரு, மெண்ணத்தகுசாங்கியரெய்துமிடமேயிடமாமியோகியர்க்குங், கண்ணத்தகுவாதனைவலைசூழ்கடியபிராணன்மனமிரண்டு, நண்ணப்படுசெய்தொழிறீரநசிக்கிலதுவேபரமபதம் (இ-ள்.) பண்ணப்படாத- நித்தியமாகிய— உபசாந்தபதமே- உபசாந்தமானவிடமே— எவர்க்கும்பற்றுரும்- யாவருக்கும்பிடிப்பாகும்— எண்ணத்தகு- நினைக்கத்தகுந்த— சாங்கியரெய்துமிடமே- சாங்கியரடைகின்றபதமே— யோகியர்க்குமிடமாம்- யோகிகளுக்குமிடமாகும்— கண்ணத்தகு- கருதத்தகுந்த— வாதனைவலைசூழ்- வாசனைவலையினாற் சுற்றப்பட்ட— கடியபிராணன்- வேகமுள்ளபிராணனும்— மனம்- மனமுமாகிய— இரண்டும்- இவ்விரண்டும்— நண்ணப்படு- சாரப்பட்ட— செய்தொழில்- இயற்றுங்கிரியைகள்— தீரநசிக்கில்- முழுதுங்கெடுமாயின்— அதுவேபரமபதம்- அதுவேபிரமபதமாகும்— (எ-று) [இ-௯-௧-ம்] சுழுத்திமவுனத்தினியல்பைநன்றாய்ப்பகுத்துச்சொல்லியதாம் - - - - - - - - - - - - - ※

(௰) (அ-கை) சுழுத்திமவுனிகளபிப்பிராயத்தையடையுஞ்சாதனமூன்றுண்டெனல். (கவி)வினவினோக்காமையிற்சித்தமெய்போற்றோன்றும்பொய்யேயாங், கனவிற்றனதுமரணந்தான்காணுநின்றுமுளதாமோ, வனகவேகப்பொருட்பழக்கத்தழுத்தம்பிராணனுள்ளடக்கன், மனனையடக்கலிவைமுத்திவசனப்பொருளாஞ்சுருக்கத்தில். (இ-ள்.) வினவிநோக்காமையின்- விசாரித்துப்பாராமையினால்— சித்தம்- மனமானது— மெய்போற்றோன்றும்- உள்ளதுபோலத்தோற்றும்— (விசாரிக்கில்) பொய்யேயாம்- மித்தையேயாகும்— கனவில்- சொற்பனத்தில்— தனதுமரணம்- தனதுமரணத்தை— தான்காணுநின்றும்- தான்கண்டிருந்தும்— உளதாமோ- மெய்யாமோ— அனகவேகப்பொருள்- களங்கமற்றவத்துவிதவஸ்துவில்— பழக்கத்தழுத்தம்- அப்பியாசத்திடமும்— பிராணனுள்ளடக்கல்- பிராணபந்தனமும்— மனனையடக்கல்- மனோபந்தனமுமாகிய— இவை- இவைகளே— சுருக்கத்தில்- சுருக்கமாக— முத்திவசனப்பொருளாம்- மோக்ஷசத்தார்த்தமாம்— (எ-று) - - - - - ※

(௰௧) (அ-கை.) சாதனமூன்றினொருமையுரைத்தல் (கவி) உரமாமொருமைப்பொருட்பழக்கமுயிரினொடுக்கமுளத்தொடுக்கந், தரமாமொன்றுபலிக்குமெனிற்றம்மிற்றாமூன்றும்பலமாம், பரமாமுயிர்நெஞ்சிலதாகிற்பயிலாதெவர்க்கும்பாவனைக, டிரமாமிவையொன்றாமலருமணமுந்திலமுந்தயிலமும்போல் (இ-ள்.) உரமாம்- திடமாகிய— ஒருமைப்பொருட்பழக்கம்- ஒருவஸ்துவினப்பியாசமும்— உயிரினொடுக்கம்- பிராணனொடுங்குதலும்—உளத்தொடுக்கம்- மனமடங்குதலு(மாகியமூன்றில்)—தரமாமொன்றுபலிக்குமெனில்- பக்குவமாயொன்றுகிடைக்குமாயின்— தம்மிற்றாம்- ஒன்றுக்கொன்றுசம்பந்தமான— மூன்றும்பலமாம் -மூன்றும்பிரயோசனமாகும்—பரமாமுயிர்- மேலானபிராணனும்—நெஞ்சு- மனதும்— இலதாகில்- இல்லையாயின்— எவர்க்கும்பாவனைபயிலாது- யாவருக்குநினைவுகள்சேராது—மலருமணமும்- புட்பமும்வாசனையும்—திலமுந்தயிலமும்போல்- எள்ளுமெண்ணெயும்போல— திரமாமிவையொன்றாம்- நிலையாகவிவ்விரண்டுமொன்றாகும்— (எ-று.) - - ※

(௰௨) (அ-கை) இம்மூன்றினொன்றினுறுதியாசச்சாதிக்கவேண்டுமெனல் (கவி) ஆதாராதேயம்போலாமதிலொன்றிறக்கிலயலதும்போ, மோதாநின்றவிவைமாயினுயர்ந்தவீடுமுதவிடுமா, மீதாகியதன்பரிசயத்தால்வெளியாய்நினைவுபோமளவு, மேதாகிலுமோர்தத்துவத்திலிறுகவேண்டும்பாவனையே (இ-ள்.) ஆதாராதேயம்போலாம்- (பிராணனுமனமு)மாதாரமுமாதேயமும்போலவாம்—அதிலொன்றிறக்கில்- அவற்றிலொன்றுகெடுமாயின்— அயலதும்போம்- அடுத்தமற்றொன்றுங்கெடும்—ஓதாநின்ற- சொல்லாநின்ற— இவைமாயில்- இவ்விரண்டுங்கெட்டால்— உயர்ந்தவீடுமுதவிடும்- மேலாகியமோக்ஷத்தையுங்கொடுக்கும்— மீதாகியதன்பரிசயத்தால்- மேலாகியதனதப்பியாசத்தினால்— வெளியாய்-

ப்ரத்தியக்ஷமாக— நினைவுபோமளவும்- எண்ணமானது கெடுமட்டும்— ஏதாகிலுமோர்தத்துவத்தில்- ஏதாகிலுமொருண்மையில்—பாவனை- நினைவானது—இறுகவேண்டும்- அழுந்தவேண்டும்—(எ-று) ※

(௰௩) (அ-கை) இச்சாதனத்தாற்பவமபக்கநீங்கிநனவிற்சுழுத்திவருமென்றுரைத் திதற்சோர்திருஷ்டாந்தமுரைக்கத்தொடங்கல் (கவி) நெடுநாட்பழகுஞ்சுபாவத்தானெஞ்சினொருமையொன்றுண்டா, முடனேமிகுமித்திரனெல்லாமொருங்கிப்போகும்பிறப்பிறப்பி, னிடமார்கனவுபோய்விழித்த விகல்வேதாளமிசைத்தவினாத், தடமார்புயனேகேட்டியெனத்தவமார்வசிட்டன்சாற்றிடுவான். (இ-ள்) நெடுநாட்பழகும்- வெகுகாலமாயப்பியாசிக்கின்ற— சுபாவத்தால்- தன்மையினால்— நெஞ்சின்-மனதினிடத்தில்— ஒருமையொன்றுண்டாம்- ஏகத்துவமானதொன்றுண்டாகும்— உடன்- அக்கணத்தில்—மிகுமித்திரனெல்லாம்-மிகுந்தவிக்கூட்டங்களனைத்தும்— ஒருங்கிப்போகும்- கெட்டுப்போகும்—பிறப்பிறப்பின்-சந்நமாணத்தின்—இடமார்கனவுபோய்-தீர்க்கசொற்பனநீங்கி—விழித்த-(துரியத்தில்)விழித்துக்கொண்ட—இகல்வேதாளம் வலியுள்ளவேதாளமானது—இசைத்தவினா-கேட்டகேள்வியை— தடமார்புயனே- விசாலம்பொருந்திய தோள்களையுடையஸ்ரீராமா— கேட்டியென்- கேட்பாயென்று—தவமார்- தவமிகுந்த—வசிட்டன்சாற்றிடுவான்-வசிட்டமுனிசொல்லுவார்(எ-று) - ※

(௰௪) (அ-கை) வேதாளவியல்புகூறல் (கவி) விந்தவனத்தோர்வேதாளம் வேறோர்நாட்டில்வெம்பசியால், வந்துபுகுந்தோர்நல்லோன்பால்வரம்பில்பலிபெற்றுண்மகிழு, முந்திபசித்தீமுடிகிடினுமுன்வந்தோர்க்குநியமின்றி, நிந்தையின்றிக்கொலைபுரியாநெடியோர்நெறியைநீங்குவரோ (இ-ள்) விந்தவனத்து- விந்தாடவியிலிருக்கின்ற— ஓர்வேதாளம்- ஒருவேதாளமானது— வேறோர்நாட்டில்-மற்றொருதேயத்தில்— வெம்பசியால்- கொடிதாகியபசியினால்— வந்துபுகுந்து- வந்துசேர்ந்து— ஓர்நல்லோன்பால்- ஒப்பற்றசத்துவினிடத்தில்— வரம்பில்பலிபெற்று- அளவற்றவுணவைப்பெற்று— உண்மகிழும்-மனங்களிக்கும்—முந்துபசித்தீ-முதன்மையாகின்றவுதராக்கினியானது— முடிகிடினும்- மிகுந்தாலும்— முன்வந்தோர்க்கும்- எதிர்வந்தவர்களுக்கும்— நியமின்றி- (வருந்துங்) காரணமில்லாமலும்— நிந்தையின்றி-இகழ்வில்லாமலும்—கொலைபுரியா-கொலைசெய்யாது—நெடியோர்-பெரியோர்கள்—நெறியை-சன்மார்க்கத்தை—நீங்குவரோ- பிரிவார்களோ (எ-று.) - - - - - - - - ※

(௰௫) (அ-கை) வேதாளம்வினாக்கூறத்தொடங்கல். (கவி) கானின்றந்தவேதாளஞ்சுடுந்தீப்பசியானீதியினா, லானவூகத்தாற்சனத்தையசனமாக்கநகரெய்தி, தானநிருபனிரவுதிரிசமயத்தவனைத்தான்கண்டு, வானிடிபோல்வேதாளமன்னற்குரைத்தபடிகேளாய் (இ-ள்) கானின்று- காட்டிலிருந்து— அந்தவேதாளம்- அவ்வேதாளமானது— சுடுந்தீப்பசியால்- கொடியவுதராக்கினிக்கு— நீதியினாலான- நியாயத்தினா(னன்குதீதென்றறிகின்ற)தான—ஊகத்தால்- புத்தியினால்—சனத்தை- மனிதரை— அசனமாக்க- புசிப்பாகச்செய்ய— நகரெய்தி- ஒருபட்டணத்தில்வந்து—தானநிருபன்- அவ்விடத்திற்குரியவரசன்—இரவுதிரிசமயத்து- இராத்திரியிற்சஞ்சரிக்கின்றகாலத்தில்— அவனைத்தான்கண்டு- அவ்வரசனைக்கண்டு— வானிடிபோல்- ஆகாயத்தினிடியைப்போல— வேதாளம்- வேதாளமானது—மன்னற்குரைத்தபடி-அரசனுக்குச்சொல்லியவிதத்தை—கேளாய்-ஸ்ரீராமாயான்சொல்லக்கேட்பாய் (எ-று) ※

(௰௬) (அ-கை) வேதாளஞ்சொல்லவரசனுரைத்தல் (கவி) மன்னாவென்கைப்பட்டனையால்வானேறனையவென்னாலே, யுன்னாருயிரிற்றனையினியென்னுணவாகுதியென்றுரைத்தலுமே, நின்னானெறியாலன்றியெனைநெருங்கிற்றலைநீறெழுமென்னச், சொன்னான்மன்னன்வேதாளஞ்சொன்னமன்னற்கெதிர்சொல்லும் (இ-ள்) மன்னா- அரசனே—என்கைப்பட்டனை- என்கைவசமானாய்—வானேறனையவென்னால்- மேலாயவான்சிங்கத்துக்கொப்பாகியவென்னால்—உன்னாருயிரிற்றனை- உனதுநிறைந்தவுயிரையிழந்தாய்—இனியென்னுணவாகுதியென்று- மேலெனக்குப்புசிப்பாகக்கடவாயென்று—உரைத்தலும்- (வேதாளஞ்)சொல்லவும்—நெறியின்றி-ஞாயமில்லாமல்—எனைநெருங்கில்- என்னிடத்திலொருங்குவையாயின்—நின்னால்- உன்னால்— தலைநீறெழுமென்ன- (உனது) சிரசுபொடியாகப்போகுமென்று— மன்னன்- அரசனானவன்— சொன்னான்- சொல்லினான்— வேதாளம்- வேதாளமானது— சொன்னமன்னற்கு-(இப்படியென்று)சொல்லியவரசனுக்கு—எதிர்சொல்லும்- பதிலுத்தரவுசொல்லும் (எ-று)

(௰௭) (அ-கை) வினாவுக்குவிடையாசித்தல் (கவி) நீதியின்றியுனையடேனெறியேயுரைக்கேனிருபா நீ; தீதிலிரவாளருக்கெல்லாஞ்சிறுமைதீர்க்குந்திறத்தனையா, லாதலாலென்குறைதீர்ப்பாயையப்பாடாங்குறைகேட்டு, நாதனேநின்சொற்கொடையானன்றுநிறைப்பாயெனவுரைக்கும் (இ-ள்) நீதியன்றி- நியாயமில்லாமல்— உனையடேன்- நின்னைக்கொல்லேன்—நெறியையுரைக்கேன்- நீதியைச்சொல்லுவேன்—நிருபா நீ- அரசனேநீர்—தீதிலிரவாளருக்கெல்லாம்-குற்றமற்றயாசகாளனைவருக்கும்—சிறுமைதீர்க்குந்திறத்தனையாதலால்-குறைவைநீக்குகின்றகுணத்தையுடையவனாதலினால்—என்குறைதீர்ப்பாய்- எனதுகுறையைநீக்குவாய்—ஐயப்பாடாம்- சந்தேகமான—குறைகேட்டு- குறைவைக்கேட்டு—நாதனே- அரசனே— நின்சொற்கொடையால்- உனதுத்தரமாகியவீகையினால்—நன்றுநிறைப்பாயென- நன்மையாகப்பூரணஞ்செய்வாயென்று—உரைக்கும்-(வேதாளஞ்)சொல்லும்(எ-று.) [இ-௬-௧-ம்]வேதாளமனுபவவேத்தியத்தைக்குறித்துப்பிரமஸ்வரூபத்தைப்பகுத்துவினவத்தொடங்கினதாம்.

(௰௮) (அ-கை) ,வேதாளம்வினாவினவினாவாறின்மூன்றுவினாவுதல் (கவி) எந்தவெய்யோன்கிரணங்கட்கிந்தப்பிரமாண்டங்களெலாஞ், சிந்துஞ்சிறியவணுத்திரளாய்த்திகழுமெந்தமாருதத்தி, லந்தமில்லாக்ககனமெனுமணுக்கள்விளங்குமளவின்றி ,வந்தகனுமேற்கனவுற்றுமாறுத்தெளிவாமொழிவடிவென் (இ-ள்) எந்தவெய்யோன்கிரணங்கட்கு- எந்தசூரியனதுகதிர்களுக்கு— இந்தப்பிரமாண்டங்களெலாம்- இப்பிரமாண்டங்களியாவும்— சிந்தும்- சிந்துகின்ற— சிறியவணுத்திரளாய்- அற்பமானவணுக்கூட்டங்களாக— திகழும்- விளங்குமோ— எந்தமாருதத்தில்- எந்தக்காற்றினால்—அந்தமில்லா-

முடிவற்ற— ககனமெனும் - ஆகாசமென்கின்ற— அணுக்கள்விளங்கும் - அணுக்கள்ப்ரகாசிக்கும்—
அளவின்றிவந்தகனமேல் - மிகவுமுண்டாகிய சொற்பனத்தின்மேல்—கனவுற்றும் - சொற்பனமுண்டா
னாலும்— மாறாத்தெளிவாமொளிவடிவென் - திரிவின்றியதெளிவானப்ரகாசஸ்வரூபமியாது—(எ-று)*

(௰௯) (அ-கை) இரண்டுவினாவுதல் (கவி) அரம்பைதன்டுளுட்போயுமந்தத்தன்டேயாவதுபோ
ல், வரம்பிலுள்ளுள்ளேயெனினுமற்றொன்றாகாவணுவேது, நிரம்புமண்டவின்னுயிர்கணிகழுங்கதிர்
பொற்கிரியனைத்தும்பரம்புபரமாணுக்களெனப்பயின்று நீங்காவணுவேது (இ-ள்) அரம்பை - வாழையி
னது— தண்டுள் - தண்டினுள்—உட்போயும் - உள்ளேபோகியும்— அந்தத்தன்டேயாவதுபோல் - அந்
தத்தண்டேயிருப்பதுபோல— வரம்பில் - அளவில்லாத— உள்ளுள்ளேயெனினும் - உள்ளுள்ளேயானு
லும— மற்றொன்றாகாவணுவேது - வேறொன்றாகாதவணுவேது— நிரம்புமண்டம் - நிறைந்தபிரமா
ண்டமும்— விண் - ஆகாயமும்— உயிர்கள் - சீவகோடிகளும்— திகழுங்கதிர் - ப்ரகாசிக்கின்றசூரிய
னும்—பொற்கிரியனைத்தும் - மகாமேருவுமாகியசகலமும்— பரம்பு - விரிந்த— பரமாணுக்களென -
பரமாணுக்களைப்போல—பயின்றுநீங்கா - கூடிப்பிரியாத— அணுவேது - அணுவானதேது (எ-று)*

(௨௰) (அ-கை) ஒன்றுவினாவுதல் (கவி) அங்கமொன்றுமறப்பரமவணுவாமெந்தமாகிரிக்குத்தங்
குகற்போற்செறிந்தொன்றுஞ்சகங்கண்மச்சையாமென்று, துங்கவேதாளஞ்சொன்னசொற்குநகைத்
துச்சுடர்மௌலி, யங்கணரசன்சொன்னதெலாமடவேகேட்டியிராகவனே. (இ-ள்) அங்கமொன்று
மற - அவயவங்களொன்றுமில்லாமல்— பரமவணுவாம் - பரமாணுவாகிய— எந்தமாகிரிக்கு - எந்த
ப்பெரியமலைக்கு—தங்குகற்போல் - தங்காநின்றகல்லைப்போல— செறிந்தொன்றும் - நெருங்கியொ
ன்றாயிருக்கின்ற— சகங்கண்மச்சையாமென்று - உலகங்கண்மச்சையாயிருக்குமென்று— துங்கவேதா
ளம் - உயர்வானவேதாளமானது— சொன்னசொற்கு - கேட்டவசனங்களுக்கு— நகைத்து - நகைசெ
ய்து— சுடர்மௌலி - ப்ரகாசிக்கின்றகிரீடத்தையுடைய— அங்கணரசன் - அழகியகண்களையுடையவிராச
ன்— சொன்னதெலாம் - சொல்லியயாவையும்— இராகவனே - ஸ்ரீராமா— அடவேகேட்டி - நீக்கிரம
மாகக்கேட்பாய் (எ-று) [இ-௱-௧-ம்] வேதாளம்வினாவாறுக்குமரசனுத்தரஞ்சொல்லத்தொடங்கினதாம்.

(௨௧) (அ-கை.) எந்தச்சூரியகிரணத்துக் கிந்தச்சகங்க ளணுவாகுமென்று கேட்டமுதல்வினாவுக்
குத்தரங்கூறல். (கவி) உதித்தவிந்தச்சிற்பானுளுலகாமிவையெல்லாம்விளங்கு, மதித்தவிமலவிஞ்ஞான
வடிவாம்பரமவாதித்தன், கதித்தவொளியாமிவ்வெய்யோன்கதிர்க்கிவ்வுலகெல்லாமணுவாந் துதித்தவிந்
தமார்த்தாண்டன்சுடராற்றோன்றிவிளங்கிடுமால். (இ-ள்) உதித்தவிந்தச்சிற்பானுள் - உதயமானவிந்த
ஞானசூரியனுள்— உலகமிவையெல்லாம் - சகமுதலியவிச்சகலமும்— விளங்கும் - ப்ரகாசிக்கின்ற—ம
தித்த - நிச்சயத்திருக்கப்பட்ட— விமலவிஞ்ஞானவடிவாம் - நின்மலஸ்வரூபஞான— பரமவாதித்தன் -
பிரமசூரியனது— கதித்தவொளியாம் - மிகுந்தப்ரகாசமாகிய— இவ்வெய்யோன்கதிர்க்கு - இந்தச்சூரி
யன்கிரணத்துக்கு— இவ்வுலகெல்லாமணுவாம் - இச்சகங்களியாவுமணுக்களாகும்— துதித்த - தோத்தி
ரஞ்செய்யப்பட்ட— இந்தமார்த்தாண்டன் - இந்தச்சூரியனது— சுடரால் - ப்ரகாசத்தினால்— தோ
ன்றிவிளங்கிடும் - (சகத்) துண்டாகிப்ரகாசிக்கும்— (எ-று) [இ-ம்] பிரமசூரியனது ஞானப்ரகாசமா
னது கிரணங்களுக்குச்சகலசகங்களு மணுக்களாய்விளங்குமென்பதாம். - - - - - - - *

(௨௨) (அ-கை) எந்தக்காற்றிற்காலமாகாயமுதலியசத்தைகடுகளாமென்று கேட்டவிரண்டாம்வினா
வுக்குத்தரங்கூறல். (கவி) காலமுண்மைவிசும்புண்மைகன்னுயசையுமறிவுண்மை, சாலவிமலவறிவுண்
மைதனைமுதலாமுண்மையெலாஞ், சீலப்பரமப்பெருங்காற்றிற்சிறுதூளாகித்திகழ்ந்திடுமாற், கோல
மலரின்மணம்போற்றாங்கொண்டசொரூபசுபாவத்தால் (இ-ள்) காலமுண்மை - காலசத்தையும்—விசு
ம்புண்மை - வியோமசத்தையும்— கன்னுயசையும் - கன்னுயிருக்கின்றசலனசத்தையும்— அறிவுண்மை -
ஞானசத்தையும்— சாலவிமலம் - மிகவுநின்மலமான— அறிவுண்மைதன்னை - சேதனசத்தையும்—முதலா
முண்மையெலாம் - முதலியசத்தைகளனைத்தும்— சீலப்பரமப்பெருங்காற்றின் - நல்லறிவானபிரம
மெனனுஞ் சண்டமாருதத்தினால்— சிறுதூளாகி - பொடிபொடியாகி— கோலமலரின்மணம்போ
ல் - அழகியபுட்பத்தின துவாசனையைப்போல— தாங்கொண்ட - தாங்கொண்டிருக்கின்ற— சொரூபசு
பாவத்தால் - ஸ்வரூபசுபாவத்தினால்— திகழ்ந்திடும் - ப்ரகாசிக்கும்— (எ-று) [இ-ம்] நித்தியத்துவமெ
னலுங்காலதத்துவமுதலியசத்தையாவும்பிரமானிலத்திற்றூளாய்நீங்குமென்பதாம் - - - - *

(௨௩) (அ-கை) கனவின்மேற் கனவுவரினு மதன்வயமாக மயங்காமற்றெளிந்தபடியிருக்கின்ற
தேதுவென்ற மூன்றாம்வினாவுக்கும், அரம்பையைப்போல வசத்திற்செல்லச்செல்ல வேறாயிராததே
துவென்ற நான்காம்வினாவுக்கு முத்தரங்கூறல் (கவி) உலகநாமப்பெருங்கனவி லொன்றின்மேலொ
ன்றாக்கனவு, பலபற்றியுந்தன்வடிவைவிடாப்பயில்சாந்தத்தால்விரிபிரம, மிலகுங்கதலியுள்ளுள்ளேயி
லையேயாகுமியல்பென்ன, வலகிலாதவுள்ளுள்ளேயானபோதுமப்பிரமம். (இ-ள்) உலகநாமம் - சகமெ
ன்னும்பெயரையுடைய— பெருங்கனவில் - தீர்க்கசொற்பனத்தில்—ஒன்றின்மேல் - ஒருசொற்பனத்
தின்மேல்— ஒன்றாக்கனவு - ஒருசொற்பனமாக— பலபற்றியும் - அநேகம்பிடித்தும்— தன்வடிவை
விடா - தனதுபடிவத்தைப்பிரியாமல்— பயில்சாந்தத்தால் - பொருந்தியசாந்தியினால்—விரிபிரமமிலகு
ம் - வியாபகமானபிரமமொளிரும்— கதலியுள்ளுள்ளும் - வாழைமரத்துக்குள்ளேயுள்ளேயும்— இலையே
யாகுமியல்பென்ன - மடலேயிருக்கின்றதன்மையைப்போல— அலகிலாத - அளவற்ற— உள்ளுள்ளே -
சகமுள்ளுக்குள்ளே— ஆனபோதும் - ஆகியபோதும்— அப்பிரமம் - அந்தப்பிரமமேவிளங்கும (எ-று)
[இ-ம்] சகத்தென்கின்றதீர்க்கசொற்பனத்திற்சங்கற்பமாகியசொற்பனநாநாவிதமாகத்தோற்றியுமிவை
களினமறைவுபடாமற்றன்னைத்தெளிவுற்றிருப்பதுபிரமமென்றுங் கதலியைப்பிரக்கவதனமண்டையிரு
ப்பதுபோலப்பிரமத்தை வேறுவேறுசெய்தவிடத்துந் தானாகவே விளங்குமென்றுசொல்லியதாம். *

(௨௪) (அ-கை.) எத்தவணுவிற்பிரமாண்டமுதலியசீவர்களனைத்தும்பரமாணுக்களாமென்றவைந்தாம்வினவுக்குத்தரங்கூறல். (கவி) சூக்கமாயெட்டாமையினாற்சொன்னபரமேபரமாணு, நீக்குமெல்லையிலாமையினானெடியமேருமுதலனைத்தின், றுக்குமூலமிதுவாகுந்தடமேருவையாதிகளிதற்கு, நோக்கும்பரமாணுவைப்போல நடங்கிவிளங்குநோக்கிடினே (இ-ள்) சூக்கமாய்- சூட்சுமமாய்—எட்டாமையினால்- அறிதற்கருமையினால்— சொன்னபரமே-முன்சொல்லப்பட்டபிரமமே—பரமாணு-பரமாணுவாம்—நீக்கும்- நீக்குகின்ற— எல்லையிலாமையினால்-முடிவில்லாததினால்— நெடியமேருமுதலனைத்தின்- நீண்டமகாமேருவாதியானசகலத்துக்கும்—இதுதாக்குமூலமாகும்- இதுவேதாக்கப்பட்டகாரணமாகும்—மேருவையாதிகள்-விசாலமானமகம்மேருமுதலியவைகளை —இதற்கு- இந்தப்பரமாணுவுக்கு— நோக்கும்பரமாணுவைப்போல- பார்க்கும்பரமாணுவைப்போல—நோக்கிடின்- பார்க்குமிடத்தில்— நடங்கிவிளங்கும்- துயட்சியாகப்ரகாசிக்கும். எ-று)[இ-ம்]அணுவுக்கணுவாய்மகத்துக்கும சத்தாய்விளங்குகின்றபிரமவியாபகத்திற்சாலபிரமாண்டங்களும்பரமாணுக்களாகவிளங்குமென்பதாம்

(௨௫) (அ-கை) அவயவரகிதமானவெந்தவணுவுக்குச்சகமச்சையாமென்றவாறும்வினவுக்குத்தரங்கூறல் (கவி) எட்டாமையினாற்பரவணுவா மிவனேநிறைவாற்பெரியகிரி, தட்டாவவயவங்களெலாந்தரித்துமவையில்லாப்புருடன்;முட்டாவிஞ்ஞானத்துருவாய்முழுதும்பொருட்குமிடமாகு, மெட்டாவிதற்குவிஞ்ஞானசாரமச்சையிவையனைத்தும் (இ-ள்.)எட்டாமையினால்-அடையப்படாமையினால்— பரவணுவாமிவனே- பரமாணுவாகியவிப்பிரமமே— நிறைவால்- பூரணத்தினால்— பெரியகிரி- பேரசலமாகும்—தட்டாவவயவங்களெலாம்- குறைவில்லாதவவயவங்களியாவையும்— தரித்தும்- அணிந்தும்—அவையில்லாப்புருடன்-அவைகளைத்தரியாதவாத்மாவானவன்—முட்டாவிஞ்ஞானத்துருவாய்-குறைவில்லாதமெஞ்ஞானஸ்வரூபமாய்— முழுதும்பொருட்குமிடமாகி- சகலவஸ்துக்களுக்குமாதாரமாயிருப்பன்— எட்டாவிதற்கு-(அறிதற்)கரியவிந்தவாத்மாவுக்கு— இவையனைத்தும்- இந்தச்சகலசகங்களும்— விஞ்ஞானசாரமச்சை- விஞ்ஞானவிரசமாகியமச்சையாகும்— (எ-று.) [இ-ம்] அகோசரமானபிரமஞானத்துக்குச்சாரமானமச்சையாகச்சகத்துவிளங்குமென்பதாம். - - - - - - - - *

(௨௬)(அ-கை)இ-து(கவி)இயல்விஞ்ஞானமாத்திரத்தினிடையேயுலகமிருக்குமென, வுயர்மன்னவனோதலுங்கேளாவுளத்தேதன்னைபுணர்வுற்று,மயலில்விசாரத்தாற்சாந்தமனவேதாளந்தனியிடம்போய்த், துயர்கொள்பசியைமறந்தசையாத்தூயதியானத்திருந்ததுவே, (இ-ள்) இயல்விஞ்ஞானமாத்திரத்தின்- பொருந்தியவிஞ்ஞானமாத்திரத்தினது— இடையேயுலகமிருக்குமென-மத்தியிற்சகமானதிருக்குமென்று— உயர்மன்னவனோதலும்- மேலானவரசன்சொல்லவும்—கேளா- கேட்டு—உளத்து- மனத்தில்— தன்னைபுணர்வுற்று- தனதுஸ்வரூபத்தையறிந்து—மயலில்விசாரத்தால்- மயக்கமற்றவிசாரணையினால்— சாந்தமனவேதாளம- உபசாந்தமனத்தையுடையவேதாளமானது— தனியிடம்போய்- ஏகாந்தஸ்தானத்துக்குச்சென்று— துயர்கொள்- துக்கமுள்ள— பசியைமறந்து- உதராக்கினியைமறந்து—அசையா-சலனமில்லாத—தூயதியானத்திருந்தது-பரிசுத்தமானசமாதியிலிருந்தது—(எ-று) [இ-ம்]சர்வம்பிரமமயமாய்விளங்குமென்றவுத்தரங்கேட்டவேதாளஞ்சாந்தியுடனந்தாமிர்தம்புசித்துச்சமாதியையடைந்ததென்பதாம். வேதாளகதைமுற்றிற்று. ஆ௨ கதை ௩௰௫இ கவிதை (௩௫௱௭௧)



# பகீரதன்கதை.



(அ-கை) முற்கதையிற்சுழுத்திமவுனத்தாற்சர்வம்பிரமமயமாய்விளங்குமென்பதைவினாவிடையினாலறிவித்து இவ்வனுபவமடைதற்கரிதாயினுஞ் சங்கத்தியாகமுள்ளதனதுமுயற்சியினாலெளிதாயடையலாமென்பதையறிவிக்குநிமித்தம் பகீரதன்கதையைநிரூபிக்கின்றார் - - - - - - - *

(௧) (அ-கை) மனந்தெளிந்துநிற்குஞ்சகசானுபவமருளிச்செய்தல் (கவி) அசைவிலாவுட்போதத்தாலனைத்தினுமுளத்தைவாங்கி, யிசைவசெய்திச்சையின்றியிளைப்பறப்புந்தியாறி, விசையிலாநெஞ்சானெஞ்சைவிண்ணெனவிமலமாக்கி, யசைவறுமவுனியேகன்சாந்தமேவடிவமாகி. (இ-ள்.) அசைவிலா-சலனமற்ற—உட்போதத்தால்- அந்தராத்மாவினால்— அனைத்தினும- சகலவிடயங்களினின்றும— உளத்தைவாங்கி- மனதைத்திருப்பி— இசைவசெய்து- இசையத்தக்கவைகளைச்செய்து— இச்சையின்றி- ஆசையில்லாமல்— இளைப்பற- மெலிவில்லாமல்— புந்தியாறி- மனதுவிஸ்ராந்தியடைந்து— விசையிலாநெஞ்சால்-சாந்தமனதினால்—நெஞ்சை-(அசுத்த)மனதை —விண்ணென-ஆகாயத்தைப்போல— விமலமாக்கி- நின்மலமாகச்செய்து— அசைவறுமவுனி- சலனமற்றமவுனியாகியும்— ஏகன்-ஒருவனாகியும்— சாந்தமேவடிவதாகி- உபசாந்தமேஸ்வரூபமாகியும— (எ-று) - - - - - *

(௨) (அ-கை.) பகீரதனைப்போலசுகத்தைப்பெறுவாயெனல் (கவி) சமனுமாயிதயவிண்போற்சாலவுந்தெளிந்துநிற்பாய், நிமலமாமபுந்திதின்மைநிறைவுற்றுமூடமின்றி, யமரவந்தனைபின்செல்லுமாசனுமபகீரதன்போற், குமரனேயாயதேதுவங்குறைவறப்பெறலாமென்றான். (இ-ள்.) சமனுமாய- சமத்துவனாகியும— இதயம-மனமானது—விண்போல்- ஆகாயத்தைப்போல—சாலவுந்தெளிந்துநிற்பாய்-ஸ்ரீராமா நீமிகவுநதெளிந்திருக்கக்கடவாய்— நிமலமாமபுந்திதின்மைநிறைவுற்று- நின்மலமபுத்திதிடநிறைந்து— மூடமின்றியமரவந்தனை- அறியாமையின்றியமைவாகவந்தவைகளை —பின்

செல்லுமரசனும்பகீரதன்போல்-அனுசரிக்கின்றவேந்தனாகியபகீரதனைப்போல—குமரனே-குழந்தா
ய்—அரியதேனும்-(அடைதற்)கரியதாயினும்— குறைவறப்பெறலாமென்றான்-குறைவின்றியடைய
லாமென்றுவசிட்டமுனிசொன்னார்(எ-று)[இ-உ-க-ம]சகசநிஷ்டையையனுக்கிரகித்ததாம் - - ✻

(௩) (அ-கை) பகீரதன்யாதினாலாத்மானுபவம்பெற்றதுங்கங்கையைச்சொண்டுவந்ததுமென்றரா
ஜாவின்முதல்வினாவுக்குத்தரங்கூறத்தொடங்கல். (கவி) என்றலுமவனைநோக்கியெம்மனவல்லபத்தா, லெ
ன்றுகங்கையைக்கொணர்ந்தான்பகீரதனையாவென்று, நன்றுணர்வள்ளல்சேட்பநான்மறைவசிட்டன்
சொல்வா,னொன்றுணர்பகீரதப்பேரொருவனுண்டுலகின்வேந்தன் (இ-ள்) என்றலும்-(இப்படி)யெ
ன்றுவசிட்டமுனிசொல்லவும்— அவனைநோக்கி- அவனைப்பார்த்து— ஐயா-(என)தாசிரியரோ—பகீர
தன்- பகீரதவரசனானவன்— எம்மனவல்லபத்தால்- எந்தமனவல்லமையினால்— நன்றுணர்- பரமசுக
த்தையறிந்தான்— அன்றுகங்கையை- அப்போதுதேவநதியை— கொணர்ந்தானென்று- கொண்டுவ
ந்தானென்று— வள்ளல்சேட்ப- ஸ்ரீராமன்கேட்க—நான்மறை- நான்குவேதங்களையு(முணர்ந்த)—
வசிட்டன்சொல்வான்- வசிட்டமுனிசொல்லுவார்—ஒன்றுணர்- ஏகத்துவத்தையறிந்த— பகீரதப்பே
ர்- பகீரதனென்னுநாமத்தையுடைய— வேந்தன்- அரசனானவன்— உலகின்- பூமியின்கண்— ஒருவ
னுண்டு- ஒருவனிருந்தான்— (எ-று) நிமலமாம்புந்திதின்மைநிறைவுற்றுமூடமின்றியம.வந்தன
பின்செல்லுமரசனும்பகீரதன்போலென்றதற்கு, எம்மனவல்லபத்தாலன்றுகங்கையைக்கொணர்ந்தா
னென்பதுவினாவழுவும், அதற்குஞானமடைந்தவருத்தஞ்சொல்லுதல்விடைவழுவுமாம், அங்ஙனமன்
றுஞானமனவல்லபத்தாற்கங்கையைக்கொணர்ந்தானெனில், அதுமலைகல்லியெலிபுடித்தானென்னுங்க
தைக்கொப்பாகும்.அஃதன்றியுந்தவத்தாற்கொண்டுவந்தானென்றுத்தரமிருத்தலின் பரஸ்பரம்விரோத
மாமிங்ஙனமகாரிஷிகள்வாக்கிராதாதலாலெம்மனவல்லபத்தானென்பதினன்றுணர்ந்தானென்னும்விஞ
வொளித்திருந்ததையின்னூலாசிரியர்,வெளிப்படுத்தினரெனக்கொள்க - - - - - - - ✻

(௪) (அ-கை) பகீரதன்மகிமையைக்கூறல் (கவி). மாநிலமுழுதுங்காப்போன்மணியினும்வண்
மைமிக்கோன், சானவிபடியொழுங்காற்சாம்பராய்ப்பாதலத்திற், போனதன்கிளையையெல்லாம்பூம
கனுலகிலேற்றி, தீநரகொழியவைத்தோன்திங்கள்வெண்கவிகைமன்னன். (இ-ள்) மாநிலமுழுதும்-
பெரிதானபூமியனைத்தையும்— காப்போன்- காப்பவன்— மணியினும்- சிந்தாமணியினும் -வண்மை
மிக்கோன்- ஈகையின்மிகுந்தவன்— சானவிபடியொழுங்கால்- கங்காசோபானக்கிரமத்தினால்— பாத
லத்தில்- பாதாளத்தில்— சாம்பராய்ப்போன- பஸ்பமாகிய— தன்கிளையையெல்லாம்- தனதுபாட்
டன்மார்களனைவரையும்—தீநரகொழிய- கொடியநரகநீங்கும்படி—பூமகனுலகிலேற்றி- சத்தியலோ
கத்தைச்சேர்த்து— வைத்தோன்- (சுகிக்க)வைத்தவன்—திங்கள்வெண்கவிகைமன்னன்- சந்திரன்போ
ன்றவெண்மையாகிய-பூச்சக்கரக்குடையையுடையவரசன்—(எ-று) - - - - - - - ✻

(௫) (அ-கை) விடயதோடதிருஷ்டியினால்விசாரமுதித்தல். (கவி) அன்னவன்சாலையானபருவத்
திலவனிதன்னி. லின்னல்கூர்நடையாமித்தைநோக்கலுந்தனதெண்ணத்தி, லுன்னியவற்பமானவிசார
த்தாலுதித்ததந்தோ, மன்னிளம்பக்குவத்தின்மனனத்தின்மாசிறேற்றம் (இ-ள்) அன்னவன்- அப்ப
டிப்பட்டபகீரதன்—காளையானபருவத்தில்- எவ்வன்னகாலத்தில்—அவனிதன்னின்- உலகத்தினது—
இன்னல்கூர்- துன்பமிகுந்த— நடையாமித்தை- ஆசாரமாகியவிதை— நோக்கலும்- பார்த்தவளவி
ல்— தனதெண்ணத்திலுன்னிய- தன்னுடையநினைவினினைத்த—அற்பமானவிசாரத்தால்- சூட்சுமவிசா
ரணையினது— மாசிறேற்றம்-சஞ்சமற்றதோற்றமானது— மனனத்தில்- மனதில்— மன்னிளம்பக்
குவத்தின்- நிலைபெற்றவிளம்பருவத்தில்— உதித்ததந்தோ- உண்டானததிசயம்—(எ-று) - - ✻

(௬) (அ-கை) தனித்திருந்துசகத்தன்மையைவிசாரித்தல் (கவி) விதியினாற்கானன்மேட்டிற்கொ
டியெனவிசாரந்தோன்ற, வுதவுமேகாந்தமெய்தியொன்றொடொன்றொவ்வாக்கூட்டத், ததிசயவுலகி
ன்றன்மையிதனைப்பார்த்தகத்திற்றேர்வான், புதிதிலையொன்றுமென்றும் போனதேபுகுதுமீட்டும்.
(இ-ள்) விதியினால்- ஊழினால்— கானன்மேட்டில்- அளரப்பூமியினது— கொடியென- (புட்பக்)
கெடியைப்போல— விசாரந்தோன்ற- விசாரணையுதயமாக— உதவுமேகாந்தமெய்தி- கொடுக்கின்ற
வேகாந்தஸ்தானத்தையடைந்து— ஒன்றொடொன்றொவ்வா-ஒன்றோடொன்றுபொருந்தாத— கூட்
டத்ததிசயவுலகின்றன்மை- சமூகமானவியப்புள்ளசகத்தின்சுபாவமான—இதனைப்பார்த்தகத்திற்றேர்
வான்- இவைகளைப்பார்த்துமனதில்விசாரிப்பான்—ஒன்றும்புதிதிலை- ஒன்றுவதுநூதனமானதில்லை—
என்றும்-எப்பொழுதும்—போனதே- போயினதே—மீட்டும்புகுதும்- திரும்பவும்வரும்—(எ-று)

(௭) (அ-கை) புவனபோகங்களைக்கானற்நீரம்போலக்கருதுதல் (கவி) போகியபகலேமீளப்போ
கியவிரவேமீள, வேகியகொடையேமீளவேகியவிரப்பேமீள, வாகியவுணவேமீளவாகியதொழிலேமீள,
மொகியர்மீளமீளமுயலுவாரொன்றினானார் (இ-ள்) போகியபகலேமீள- போனபகலேதிரும்பவும்வ
ருகின்றது— போகியவிரவேமீள- போனவிராத்திரியேதிரும்பவும்வருகின்றது— ஏகியகொடையே
மீள- போனவிசையேதிரும்பவும்வருகின்றது—ஏகியவிரப்பேமீள- போனயாசகமேதிரும்பவும்வரு
கின்றது— ஆகியவுணவேமீள- ஆனபுசிப்பேதிரும்பவும்வருகின்றது— ஆகியதொழிலேமீள- ஆனக
ருமமே திரும்பவும்வருகின்றது— மோகியர்- மோகத்தையுடையவர்கள்— ஒன்றினானார்- ஒன்றிலும்
வெட்கப்படாமல்—மீளமீள- திரும்பத்திரும்ப—முயலுவார்- (அதின்)முயற்சிசெய்வார்கள்—(எ-று)

(௮) (அ-கை) ஆத்மாநந்தங்கொடாதகன்மத்தைவெறுத்துப்பூரணாநந்தத்தைக்கொடுக்குங்கன்ம
த்தைவிரும்புதல் (கவி) சுவையறவுணங்குமந்தக்கருமமேசூழாநிற்பர், நவையறவெத்தைச்சேர்ந்தாண
ணுறுதில்லையென்ன வெவையுமவந்தனுகுமத்தையியற்றலேயியல்பாஞ்செய்கை, கவையுறுமற்ற
வெல்லாக்கருமமும்விடுசியாகும் (இ-ள்) சுவையறவுணங்கும்- இரசமில்லாமல்வாடுகின்ற— அந்தக்

கருமமே - அத்தொழிலையே — சூழா நிற்பர் - சூழ்ந்திருப்பார்கள் — நவையற - குற்றமறும்படி — எத்தைச்சேர்ந்தால் - எதையடைந்தால் — நண்ணுறாதில்லையென்ன - அடையப்படாததில்லையென்றுசொல்லும்படி — எவையும்வந்தணுகும் - யாவையும்வந்துபொருந்தும் — அத்தையியற்றலே - அதைச்செய்தலே — இயல்பாஞ்செய்கை - சுபாவமாகியதொழிலாம் — கவைபுறும் - இரண்டுபடுகின்ற — மற்றவெல்லாக்கருமமும் - மற்றசகலகருமங்களும் — விடுசியாகும் - விடுசிகாரோகமாம் — (இ-ள்.) [இ-சு-க-ம்.] கிதசன்மபுண்ணியபரியாகத்தினாற்சாதனசதுஷ்டயமுண்டாயிற்றென்பதாம் - - - - - ✻

(௯) (அ-கை.) சற்குருவைத்தரிசித்துப்பவத்துன்பத்தைநீக்குதற் பொருட்டுக்கூறுதல் (கவி) பலபடச்செய்தசெய்வார்பாமரரறிஞர்செய்யா,ருலகியலிதுவென்றுள்ளமவெருவினனொருகாற்சென்று,நலனுறுதிரிதுலப்பேர்நற்குருசரணந்தாழ்ந்து,சலனுறுபிறவிக்கஞ்சித்தனித்திவைகழறலுற்றான் (இ-ள்) பாமரர் - அஞ்ஞானிகள் — பலபடச்செய்தசெய்வார் - அநேகமாகச்செய்ததையேசெய்வார்கள் — அறிஞர்செய்யார் - ஞானிகள்செய்யமாட்டார்கள் — உலகியலிதுவென்று - சகத்தின்நடையிதுவென்று — உள்ளம்வெருவினன் - மனதிலச்சமுற்றபகீரதனானவன் — ஒருகாற்சென்று - ஒருநாட்போய் — நலனுறுதிரிதுலப்பேர் - நன்மைபொருந்தியதிரிதுலனென்னுநாமத்தையுடைய — நற்குருசரணந்தாழ்ந்து - சற்குருவினதுபாதத்தைவணங்கி — சலனுறுபிறவிக்கஞ்சி - துன்பமிகுந்தபவத்துக்குப்பயந்து — தனித்து - ஏகாந்தமாய் — இவைகழறலுற்றான் - இவைகளைச்சொல்லத்தொடங்கினான் (எ-று) - - - - - - - ✻

(௰) (அ-கை) பவத்துன்பநீக்கமியாதென்றவினாவுக்குத்திரிதுலமுனியஃதுநீங்கும்பொருட்டாத்மஞானமுபதேசித்தல் (கவி) பகீரதனுரைப்பானையாபயில்சரைமரணமோகமகிலமாமச்சஞ்செய்புமருந்துயர்க்கவதியேது, திகழ்வுறவருள்வாயென்னத்திரிதுலனுரைப்பான்மன்னா, நிகழ்வுறுநேயன்றன்னைநிறைவடிவாகநோக்கில் (இ-ள்) பகீரதனுரைப்பான - பகீரதன்சொல்லுவான் — ஐயா - முனீஸ்வரா — பயில் - சொல்லப்பட்ட — சரை - மூப்பும் — மரணம் - மரிப்பும் — மோகம் - மயக்கமுமுதலிய — அகிலமாமச்சஞ்செய்பும் - சமஸ்தமானபயத்தைச்செய்யாநின்ற — அருந்துயர்க்கு - அரியதுன்பத்துக்கு — அவதியேது - முடிவியாது — திகழ்வுற - விளங்கும்படியாக — அருள்வாயென்ன - அனுக்கிரகிப்பாயென்றுபகீரதன்கேட்க — திரிதுலனுரைப்பான் - திரிதுலமுனிசொல்லுவார் — மன்னா - அரசனே — நிகழ்வுறு - ப்ரகாசம்பொருந்திய — நேயன்றன்னை - ஞானாத்மாவை — நிறைவடிவாகநோக்கில் - பூரணாகாரமாகப்பார்க்கில் — (எ-று) - - - - - - - - - - - - - - ✻

(௰௧) (அ-கை) இ-து (கவி) அன்றுபோந்துன்பமெல்லாமகப்பந்தமனைத்துமாயுமொன்றலாவையம்போகுமுறுகருமங்கண்மாயு, நன்றதாநேயந்தானுஞானமேவடிவமாகி, நின்றதற்சுருபமாகுநிகழ்த்திடவிதனைக்கேளாய் (இ-ள்) துன்பமெல்லாம் - துக்கங்களனைத்தும் — அன்றுபோம் - அப்பொழுதுநீங்கும் — அகப்பந்தமனைத்துமாயும் - இதயத்திலுள்ளபந்தங்களெல்லாங்கெடும் — ஒன்றலா - பலவாகிய — ஐயம்போகும் - சந்தேசநீங்கும் — உறுகருமங்கண்மாயும் - மிகுந்தகருமங்கள்கெடும் — நன்றதா - செம்மையாக — நேயந்தானும் - அறியத்தக்கதானது — ஞானமேவடிவமாகி - சின்மாத்திரமேஸ்வரூபமாகி — நின்றதற்சுருபமாகும் - இருந்தபரமார்த்தஸ்வரூபமாம் — நிகழ்த்திட - சொல்ல — இதனைக்கேளாய் - இதைக்கேட்பாய் — (எ-று) - - - - - - - - - - - - - - ✻

(௰௨) (அ-கை.) இ-து (கவி) எங்கணுமுளதுநித்தமெழுதலத்தமித்தலில்லை, யங்கண்மெய்யறிவுசாந்தமமலமச்சுதங்குணங்க, டங்குதலில்லையீதொன்றுளதெனச்சாற்றலோடும, பங்கமின்முனியைநோக்கிப்பகீரதனுரைக்கலுற்றான் (இ-ள்) எங்கணுமுளது - எவ்விடத்திலுமுள்ளதான — நித்தம் - நித்தியமானது — எழுதலத்தமித்தலில்லை - உதித்தொடுங்குதலில்லாதது — அங்கண்மெய்யறிவு - அழகியவுண்மைஞானமும் — சாந்தம் - உபசாந்தமும் — அமலம் - நின்மலமும் — அச்சுதம் - கெடாததும் — குணங்கடங்குதலில்லை - திரிகுணங்களுந்தங்காததுமாகிய — ஈதொன்றுளதென - இப்படிப்பட்டதொன்றுண்டாயிருக்கின்றதென்று — சாற்றலோடும் - சொன்னவுடன் — பங்கமில் - வேறுபாடில்லாத — முனியைநோக்கி - திரிதுலமுனியைப்பார்த்து — பகீரதனுரைக்கலுற்றான் - பகீரதன்சொல்லத்தொடங்கினான் (எ-று) [இ-சு-க-ம்] ஆத்மஞானநந்தசாக்ஷாத்காரம்வருமாயின்பவத்துன்பநீங்குமென்பதாம்.

(௰௩) (அ-கை) தேசமுதலியவிருத்திகணீங்கிச்சித்தாயிருப்பதெங்ஙனமெனில் (கவி) ஒழிந்துளவுடலமாதியொன்றையுங்காணேனாகி, யிழிந்துளதொழில்களெல்லாந்திரமின்றியேகநின்றன், மொழிந்துளவறிவேயாகிமுட்டறவிருப்பதெங்ஙன், பொழிந்துளகருணையையாபுகலெனப்புகலலுற்றான் (இ-ள்.) ஒழிந்துள - தனக்குவேறாகிநின்ற — உடலமாதி - சரீரமுதலான — ஒன்றையுங்காணேனாகி - ஒருவிடயத்தையும்பாராதவனாய் — இழிந்துளதொழில்களெல்லாம் - ஈனமானவியாபாரங்களியாவும் — திரமின்றியேக - திரமில்லாமற்போக — நின்னன்மொழிந்துள - தேவரீராற்சொல்லப்பட்ட — அறிவேயாகி - ஞானஸ்வரூபமாகி — முட்டறவிருப்பதெங்ஙன் - தடையில்லாமலிருப்பதெப்படி — பொழிந்துளகருணையையா - கிருபையுள்ளவாசிரியரே — புகலென - சொல்லுமென்றுபகீரதன்கேட்க — புகலலுற்றான் - முனிசொல்லத்தொடங்கினார் — (எ-று) - - - - - - - - - - - ✻

(௰௪) (அ-கை) சமாதியினான்ஞானமுதயமாகிற்சனனமரணநீங்குமெனல் (கவி) திரிதுலனுரைப்பான்மன்னாசித்தந்தானிதயவிண்ணில், விரியுஞானத்தானேயநிட்டையைமேவும்பின்னர், பெரியதாமனைத்துமேனிப்பெருந்தகையாயசீவன், பரிபவமாயசன்மம்பயில்வுறாதுலகின்மீட்டே (இ-ள்) திரிதுலனுரைப்பான் - திரிதுலமுனியானவர்சொல்லுவார் — மன்னா - அரசனே — சித்தந்தான் - மனமானது — இதயவிண்ணில் - இதயாம்பரத்தில் — விரியுஞானத்தால் - வியாபகமானவறிவினால் — நேயநிட்டையைமேவும் - ஸ்வரூபநிட்டையைப்பொருந்தும் — பின்னர்பெரியதாமனைத்துமேனி - பின்புபெரிதானசகலவடிவங்களுமான — பெருந்தகையாயசீவன் - மிகவுமேம்பாடானசீவனானது — பரிபவமாயசன்ம

ம்-இசழ்ச்சியாகியசநநர்தை—உலகின்மீட்டு-சகத்திற்றிரும்பவும்—பயில்வுறாது-அடையாது (எ-று.)
(௰௫) (அ-கை) சமாதிகூடுதற்குச்சங்கத்யாகம்வேண்டுமெனல். (கவி) இல்லவளில்லமாதிப்பற்
றறவிட்டாநிட்டம், புல்லிடிற்சமசிற்பாவம்பொருந்துதநனக்குப்பேதமல்லவாயவற்றவற்றின்ரூற்
றங்களாதலென்று, மல்லலேகாந்தஞ்சேர்தன்மானிடத்திரளைநீத்தல் (இ-ள்) இல்லவள்-மனையாள்—
இல்லமாதியான-மனைமுதலியவிவற்றில்—பற்றறல்-பற்றுநீங்குதலும்—இட்டாநிட்டம-சுகதுக்
கங்கள்—புல்லிடில்-சார்ந்தால்—சமசிற்பாவம்-சமமானஞானபாவனை—பொருந்துதல்-அடைத
லும்—தனக்குப்பேதமல்லவாய்-தனக்குப்பேதமல்லாதனவாய்—என்றும்-எப்போதும்—அவற்ற
வற்றின்ரூற்றங்களாதல்-அவையவைகளின்ரூற்றங்களாகுதலும்—மல்லலேகாந்தஞ்சேர்தல்-வளப்
பமுள்ளவேகாந்தத்தையடைதலும்—மானிடத்திரளைநீத்தல்-மானிடக்கூட்டங்களைநீக்குதலும் (எ-று)
(௰௬) (அ-கை) ஞானசமாதிககிந்தசங்கத்யாகமேமார்க்கமெனல் (கவி) ஆற்றுமதத்துவத்திலலசி
லாஞானநிட்டை, யூற்றமாமுண்மைஞானத்துறுபொருட்காட்சியிந்தத், தோற்றமாங்குறிகள்சேர்தன்
ஞானமாய்ச்செல்வர்சொல்வர், வேற்றுளவழிகண்முற்றும்விதனவஞ்ஞானந்தானே (இ-ள்) ஆற்றுமத
த்துவத்தில்-ஆத்மதத்துவத்தில்—அசல்கிலாஞானநிட்டை-நீங்காதஞானநிட்டையும்—ஊற்றமாம்-
அசைவின்றிநிற்கின்ற—உண்மைஞானத்து-தத்துவஞானத்தில்—உறுபொருட்காட்சி-உண்டானவப
ரோட்சானுபவமும்—இந்தத்தோற்றமாம்-இப்படிப்பட்டதோற்றமாகிய—குறிகள்சேர்தல்-அடை
யாளங்களையடைவதே—ஞானமாய்-உணர்வாக—செல்வர்-(மோக்ஷ)செல்வத்தையுடையசத்துக்கள்—
சொல்வர்-சொல்லுவார்கள்—வேற்றுள-(இதற்கு)வேறாயிருக்கின்ற—வழிகண்முற்றும்-மார்க்கங்களி
யாவும்—விதனவஞ்ஞானந்தான்-வேதனையுள்ளவறியாமையாம்— (எ-று) - - - - - - - - - ※
(௰௭) (அ-கை) தேசோகநீங்கிற்சித்துப்ரத்யக்ஷமாமெனல் (கவி) ஏதமதாகநானென்றெண்ணு
தலிறந்தபோது, காதலுமுனிவுந்தீர்க்குங்களைகணயப்பிறவிநோய்க்கு, மேதகுமருந்தாஞானம்வெளி
ப்படுமென்றுசொன்ன, சேதனமுனிவனைதிரிதுலர்க்கரசன்செப்பும் (இ-ள்) ஏதமது-குற்றத்தை
யுடையதான—ஆகம்-சரீரத்தை—நானென்றெண்ணுதல்-யானென்றுநினைத்தல்—இறந்தபோது-
நசித்தபோ(ததுவே)—காதலுமுனிவுந்தீர்க்கும்-இராகத்துவேடத்தைநீக்காநின்ற—களைகணய-ஆதா
ரமாக—பிறவிநோய்க்கு-சநநவியாதிக்கு—மேதகுமருந்தாம்-மேன்மைபொருந்தியவவிடதமா
கும்—ஞானம்வெளிப்படுமென்று-சைதன்னியப்பிரத்தியக்ஷமாகுமென்று—சொன்ன-அனுக்கிர
கித்த—சேதனமுனிவனை-ஞானமுனிவனாகிய—திரிதுலற்கு-திரிதுலமுனிக்கு—அரசன்செப்பும்-
பகீரதவரசன்சொல்லுவான்— (எ-று) [இ-௫-க-ம்] இச்சாதனங்களாற்பவமுந்தொழிலும்பற்றறநீ
ங்கிமிச்சமாகியஞானம்வெளிப்படுமென்பதாம். - - - - - - - - - - - - - ※
(௰௮) (அ-கை) எங்ஙனந்தேகோகநீங்குமென்றவதற்குச்சாதனங்கூறல். (கவி) மலைமிசைமரம்
போனீணுள்வன்புறவிந்தமெய்யி, னிலைபெறநானென்றெண்ணநீக்குவதெங்ஙனென்னத், தலைமைசே
ர்குரவன்சொல்வான்றன்மனவருத்தத்தாலே, தொலைவறுபோகத்தெண்ணந்துவக்கறத்துடைத்துநீக்கி.
(இ-ள்) மலைமிசைமரம்போல்-கிரியின்மேலிருக்கின்றவிருட்சத்தைப்போல—நீணுள்வன்புற-நெடு
நாளாகவலிமைபொருந்த—இந்தமெய்யில்-இச்சரீரத்தில்—நிலைபெறநானென்றெண்ணம்-திரமா
கநானென்றெண்ணுகின்றநினைப்பை—நீக்குவது-தள்ளுவது—எங்ஙனென்ன-எப்படியென்றுப
கீரதன்கேட்க—தலைமைசேர்குரவன்-சிரேஷ்டமானவாசாரியர்—சொல்வான்-சொல்லுவார்—தன்
மனவருத்தத்தால்-தனதுமனோவருத்தத்தினுல்—தொலைவறுபோகத்து-நீங்காதபோகத்தில்—எண்
ணந்துவக்கற-நினைவுதொடராமல்—துடைத்துநீக்கி-கெடுத்து— (எ-று.) - - - - - ※
(௰௯) (அ-கை) அத்துவிதஞானமடைதலைக்கூறல் (கவி) விரிவுறுமுண்மைமேவில்வினையகங்கா
ரமாளும், புரிவறவிவற்றையெல்லாம்புந்தியாற்றிரநீக்கித், துரிசலைவின்றிநின்றாயென்னினுனென்னு
ந்தோற்றத், தெரிகிலாததுவேநீயாந்தெளிந்ததற்பாமும்மஃதே (இ-ள்) விரிவுறும்-வியாபித்திருக்கி
ன்ற—உண்மைமேவில்-சற்பாவத்தைப்பொருந்தினுல்—வினையகங்காரமாளும்-வினையானவகங்கா
ரங்கெடும்—புரிவற-ஆசைகெட—இவற்றையெல்லாம்-இவைசளனைத்தையும்—புந்தியாற்றிரநீக்
கி-அறிவினுற்றிரும்படிகெடுத்து—துரிசலைவின்றி-துன்பமானசலனமில்லாமல்—நின்றாயெனனில்-
இருப்பாயானுல்—தானெனனுந்தோற்றம்-யானென்கின்றதோற்றமானது—தெரிகிலாது-தெரி
யாமல்—அதுவேநீயாம்-பிரமமேகூடஷ்த்தமானவத்துவிதஸ்வரூபமாம்—தெளிந்ததற்பாமும்மஃ
தே-(வேதங்களாற்)றுணிந்தபிரமமுமதுவேயாம்—(எ-று) [இ-உ-க-ம்] விடயசுகம்விட்டுப்பிரமசு
கஞ்சேரிலகம்பாவநீங்கிநீயத்துவிதப்பிரமமாவாயென்பதாம் - - - - - - - - - ※
(௨௰) (அ-கை) விடயசுகம்விடுதற்குச்சாதனங்கூறல். (கவி) அனைத்துளவிசேடநீங்கியச்சமற்றே
டணைக்குட், டினைத்துணைபற்றற்றின்மைசிக்கெனச்சேர்ந்துசெல்வம், வினைப்பகைக்கீந்துநானென்
பதுவிட்டுமேனிச்செய்கை. தனைத்துறந்தவர்பாலையந்தனையிரந்தெனையும்விட்டு (இ-ள்) அனைத்துள-
வெகுவாயிருக்கின்ற—விசேடநீங்கி-(வன்னச்சிரமபேதமான)விசேடத்தைவிட்டு—அச்சமற்று-பய
மில்லாமல்—ஏடணைக்குள்-ஈடணத்திரயத்தில்—தினைத்துணைபற்றற்று-தினையளவும்பற்றில்லாமல்—
இன்மைசிக்கெனச்சேர்ந்து-தாரித்திரத்தையுறுதியாகவடைந்து—செல்வம்-செல்வங்களை—வினைப்
பகைக்கீந்து-போர்செய்கின்றசத்துருக்களுக்குக்கொடுத்து—நானென்பதுவிட்டு-அகம்பாவத்தை
நீக்கி—மேனிச்செய்கைதனைத்துறந்து-சரீரத்தினதுதொழிலைவிட்டு—அவர்பால்-அச்சத்துருக்களி
டத்தில்—ஐயந்தனையிரந்து-பிச்சையைவாங்கி—எனையும்விட்டு-என்னையும்விட்டு— (எ-று) - ※
(௨௧) (அ-கை.) இங்ஙனநிற்கினீயேபிரமமாவாயென்றருள்செய்தல். (கவி) திற்பாமாயில்வாறு
நிற்கில.மேலுச்சுமேலாந, தற்பரநீயேயாதியென்றவன்சாற்றக்கேட்டு, வெற்பமர்தோளாமனஞ்சிற்

செய்வதாந்தன்மைமேவிப், பற்பலதன்செய்கைக்கேபகிரதனிற்பதானன். (இ-ள்) நிற்பரமாய்- பாரமில்லாமல்— இவ்வாறுநிற்கின்- இப்படிநின்றால்— மேலுக்குமேலாந்தற்பரம்- உயர்வுக்குயர்வாகியபிரமம்— நீயேயாதியென்று- நீயாகக்கடவாயென்று— அவன்சாற்றக்கேட்டு- அத்திரிகுலமுனியானவர்சொல்லக்கேட்டு—வெற்படர்தோளான்- மலையுடன்பொருதுகின்றபுயத்தையுடையபகீரதன்— நெஞ்சில்-மனதில்—செய்வதாந்தன்மைமேவி-செய்வதானகுணத்தைவிரும்பி—பற்பலதன்செய்கைக்கு-நாநாவிதமானதனதரசத்தொழிலில்— பகிரதனிற்பதானன்- பகீரதவரசனிருப்பதானன்(எ-று) [இ-உ-க-ம்-]சற்வசங்கற்பப்பரித்தியாகத்தினாற்பவத்துன்பநீங்கியாத்மசுகமுண்டாமென்பதாம் *

(உஉ) (அ-கை) செல்வமனைத்துந்துறத்தல் (கவி) சிறிதுநாட்கழிந்தபின்னர்சிறந்ததோர்வேழ்விசெய்து,நெறிவளர்செல்வமுற்றுநீசமுமுயர்வுநாடி, வறியராமறையோர்தெய்வங்கிளைமுதல்வந்தோர்க்கீந்து, பிறிவறுதுகிலொன்றன்றிப்பிறிதிலன்மூன்றுநாளில். (இ-ள்) சிறிதுநாட்கழிந்தபின்னர்- சிலகாலம்போனபின்பு—சிறந்ததோர்வேழ்விசெய்து-சிறப்பானவோ(ரக்கினிஷ்டோம)யாகஞ்செய்து— நெறிவளர்செல்வமுற்றும்- நீதியாகவளர்ந்தசம்பத்தெல்லாம்— நீசமுமுயர்வுநாடி- பாத்திராபாத்திரம்விசாரித்து— வறியராமறையோர்- தரித்திரரானபிராமணர்கள்— தெய்வம்- தெய்வங்கள்— கிளை- உறவினர்கள்— முதல்வந்தோர்க்கு- முதலாகவந்தவர்களுக்கு— ஈந்து- கொடுத்து— பிறிவறுதுகிலொன்றன்றி- தரித்திருக்கும்வஸ்திரமொன்றேயல்லாமல்— மூன்றுநாளில்- மூன்றுதினத்தில்— பிறிதிலன்- வேறில்லாதவனானான்— (எ-று) - - - - - - - - - - - - - - *

(உ௩) (அ-கை) துறவியாய்த்தனியேசஞ்சரித்தல் (கவி) யாவருமிரங்கயாதுமினிமையாந்தனதுநாட்டை, மேவரும்பகைவர்க்கீந்துவேறறுதுகிலொன்றானோன், மூவருமுனியாய்ஞானமுனிக்குணஞ்சார்ந்துதன்ன, தோவறுநாடுநீங்கியொருவனாயுலாவலுற்றான் (இ-ள்) யாவருமிரங்க- சகலருங்கண்ணீர்விட்டழ— யாதுமினிமையாம்- சகலமுமினிமையாகவிருந்த— தனதுநாட்டை- தனதுதேயத்தை—மேவரும்- அடைதற்கரிய— பகைவர்க்கீந்து- சத்துருக்களுக்குக்கொடுத்து—வேறறுதுகிலொன்றானோன்- தரித்திருக்கின்றவோர்வஸ்திரத்தையுடையவனானபகிரதன்— தாவருமுனியாய்- நினைத்தற்கரியமுனிவனாய்— ஞானமுனிக்குணஞ்சார்ந்து- ஞானமுனிவர்கள்குணத்தையடைந்து— தன்னது- தன்னுடைய— ஓவறுநாடுநீங்கி- விடுதற்கரியதேயத்தைவிட்டு— ஒருவனாய்- தனியனாக— உலாவலுற்றான்- சஞ்சரிக்கத்தொடங்கினான்— (எ-று) - - - - - - - *

(உ௪) (அ-கை) அகமபாவநீங்கியாத்மஞானமுதயமாய்விஸ்ராந்தியடைதல் (கவி) முகத்தினாற்பெயராற்கண்டோரறிகிலாமூதூர்தோறு, நகத்துயர்வனங்கடோறுநண்ணினன்றீரனாகி, யகத்திலேடணைகளெல்லாமவிழ்த்தனன்சிறிதுநாளி, லிகத்துயர்சாந்தியாற்றன்னிடத்திளைப்பாறினானே. (இ-ள் முகத்தினால்- வதனத்தினாலும்—பெயரால்- நாமத்தினாலும்—கண்டோரறிகிலா- பார்த்தவர்களறியாத— மூதூர்தோறும்- பழையவூருகடோறும்— நகத்து- மலைகடோறும்— உயர்வனங்கடோறும்- உயர்ந்தகாடுகடோறும்— தீரனாகி- தீரனாய்— நண்ணினன்- அடைந்தான்- அகத்தில்- மனதிலுள்ள—ஏடணைகளெல்லாம்- இச்சைகளனைத்தையும்— சிறிதுநாளில்- சிலதினத்தில்— அவிழ்த்தனன்- வெளிப்படுத்தினான்— இகத்து- இப்பொழுதே—உயர்சாந்தியால்- மேலானசாந்தத்தினால்—தன்னிடத்து- ஆத்மாவினிடத்தில்—இளைப்பாறினான்-விஸ்ராந்தியடைந்தான்(எ-று) [இ-௩-க-ம்] சர்வசங்கற்பப்பரித்தியாகஞ்செய்தாத்மநிட்டையினாலபரோக்ஷஞானம்பெற்றானென்பதாம் - - - - - - - - *

(உ௫) (அ-கை) ஞானத்தாற்றேகாபிமானநீங்கிநிற்றல் (கவி) படிமுழுதுழல்வானோர்காற்பகைவர்க்குத்தான்முன்னீந்த, கடிநகர்புக்கானெல்லாக்கரணமும்வென்றோன்சென்று, மடியிலாவமைச்சர்மற்றோர்மனையெலாமையமேற்றான்,முடியுடையிவனைநோக்கியிரங்கினார்முன்புகண்டோர் (இ-ள்) படிமுழுதுழல்வான்- பூமியெல்லாஞ்சஞ்சரித்து—ஓர்கால்-ஒருதினம்—பகைவர்க்கு- சத்துருவுக்கு— தானமுன்னீந்த-தான்முன்புகொடுத்த— கடிநகர்புக்கான்-விளக்கமானபட்டணத்திற்புகுந்து—எல்லாக்கரணமும்- சகலகரணங்களையும்—வென்றோன்-சயித்தபகிரதன்—மடியிலாவமைச்சர்- அசத்தியமில்லாதமந்திரிகள்— மற்றோர்- ஏனையோர்கள்— மனையெலாஞ்சென்று- வீடுகடோறும்போய்— ஐயமேற்றான்-பிச்சைவாங்கினான்—முடியுடையிவனைநோக்கி-கிரீடத்தையுடையவிந்தப்பகீரதவரசனைப்பார்த்து—முன்புகண்டோர்-எதிரேபார்த்தவர்கள்—இரங்கினார்-கண்ணீர்விட்டழுதார்கள்(எ-று) *

(உ௬) (அ-கை) ஆத்மபோகத்தாலநாத்மபோகநீங்கிநிற்றல். (கவி) அதிகபூசனைகள்பண்ணியரசுசெய்தருளுகென்றே, பதிபெறுபகைவன்றானும்பகரவும்பலியேயன்றி, யெதிரொருதிரணமேனுமிச்சையற்றிருந்துசின்னாட், புதிதிதென்றெவரும்வெம்பப்போயினன்புறத்துந்தானே (இ-ள்) அதிகபூசனைகள்பண்ணி- மிகுந்தவாராதனைகளைச்செய்து—அரசுசெய்து- அரசாட்சிசெய்து—அருளுகென்று- இரட்சிப்பாயென்று— பதிபெறு- (இவன்) பட்டணத்தைப்பெற்றிருக்கின்ற— பகைவன்றானும்- சத்துருவும்— பகரவும்- சொல்லவும்— பலியேயன்றி- பிச்சையேயல்லாமல்— எதிரொருதிரணமேனும்- வேறொருதுரும்பையாவது— இச்சையற்றிருந்து- விரும்பாமலிருந்து— சின்னாள்- சிறிதுநாள்— புதிதிதென்று- ஈததிசயமென்று— எவரும்வெம்ப- யாவரும்வாட்டத்தையடைய—தானே- சுயமாகவே— புறத்தும்-புறநாட்டிலும்—போயினன்-சென்றனன்—(எ-று) [இ-உ-க-ம்.] சமாதியனுபவங்கைகூடினதென்பதாம் - - - - - - - - - - - *

(உ௭) (அ-கை.) சமாதிஞானநீங்கிச்சகசஞானமுதிக்கும்பொருட்டாசிரியரொதிரிட்டிருவரும்பிரமானந்தலீலையாகச்சஞ்சரித்தல் (கவி) சாந்தியேவடிவாய்ப்புந்திதளர்வின்றியின்பமெய்தி, காந்திசேர்தன்சொரூபக்கண்ணிலேவிநோதமேவிப்,யோந்திசையதனில்வந்தகுருவினைப்புகழ்ந்துசேர்ந்துதாந்திரிவுற்றானன்னார்சைலத்தில்வனத்திலூட்டில். (இ-ள்) சாந்தியேவடிவாய்- சாந்தமேவ்வடிவமாகி—

புந்திதளர்வின்றி- மனநுதளர்ச்சியில்லாமல்— இன்பமெய்தி- ஆநந்தமடைந்து— காந்திசேர்- ப்ரகாசம்பொருந்திய— தன்சொரூபக்கண்ணில்- தனதாத்மதிருஷ்டியில்— விநோதமேவி- விளையாட்டையடைந்து— போந்திசையதனில்- செல்லப்பட்டதிக்கில்—வந்தகுருவினை- வரப்பட்டதிரிதுலராசியசற்குருவை— புகழ்ந்துசேர்ந்து- தோத்திரஞ்செய்துகூடி— சைலத்தில்- மலைகளிலும்— வனத்தில்- கானகங்களிலும்— நாட்டில்- நாடுகளிலும்— அன்னார்திரிவுற்றார்- அவர்கள்சஞ்சரித்தார்கள் (எ-று)

(௨௮) (அ-கை) சகசஞானமுதயமாதல். (கவி) குருவுமாணுக்கன்றானுங்குறைவறுசமத்தைமேவி, யிருவருநிலைமையொப்போர்விநோதத்தாலாக்கைதாங்கிக், கருவுடலிருந்தென்போயென்காமித்தபடியுலாவி, யொருமையிலுள்ளவாற்றாலுறைசெனவுறைக்கவுன்னி. (இ-ள்) குருவும்- ஆசாரியரும்— மாணுக்கன்றானும்- சீடனும்—குறைவறு- பூரணமான—சமத்தைமேவி- சமத்துவத்தையடைந்து— இருவரும்- இரண்டுபேரும்— நிலைமையொப்போர்- குணத்திற்சமமானவர்களாய்—விநோதத்தால்- விளையாட்டினால்— ஆக்கைதாங்கி- சரீரத்தைச்சுமந்து—கருவுடலிருந்தென்- கருப்பத்திலுண்டாகியசரீரமிருந்தென்ன— போயென்- போயென்ன—காமித்தபடியுலாவி- இச்சித்தபடிசஞ்சரித்து— ஒருமையில்- ஒற்றுமையாக— உள்ளவாற்றால்- உள்ளபடி—உறைசென- இருக்கக்கடவதென்று— உறைக்கவுன்னி- நன்றாயாலோசித்து— (எ-று) - - - - - - - - - - - - - - - - - *

(௨௯) (அ-கை) தமதுசிதாநந்தபோசத்தாற்றேவபோகமுந்திரணமாகநீங்குதல். (கவி) துன்புறாவாநந்தத்தாசுகத்தினுமத்திமத்து, மின்புறார்தனங்கண்மாதரியைநிதியிருநாற்செல்வமுன்புறவிரும்பிச்சித்தர்தந்தவைமோகமின்றி, மென்புலெனத்தொழிந்தார்வேறோர்மேதகுநாட்டிற்சென்றார் (இ-ள்) துன்புறா- துக்கமடையாத— ஆநந்தத்து- சுகத்திலும்— அசுகத்தும்- துக்கத்திலும்— மத்திமத்தும்- நடுவிலும்—இன்புறார்- சுகமடையாதவர்களாய்—தனங்கள்- திரவியங்களும்—மாதர்- ஸ்திரீகளும்— இயைநிதி- இசைந்தசெல்வங்களும்—இருநாற்செல்வம்- அணிமாமுதலியவஷ்டவயிஸ்வரியங்களும்— முன்புறவிரும்பி- முன்பாகவிருப்பமுற்று—சித்தர்தந்தவை- சித்தர்கள்கொடுத்தவைகளை—மோகமின்றி- ஆசையில்லாமல்— மென்புலெனத்து- மிருதுவானதிரணத்துக்கொப்பாகி— ஒழிந்தார்- விட்டுநீங்கி— வேறோர்- மற்றொரு— மேதகுநாட்டில்- மேன்மையானதேயத்தில்— சென்றார்- போயினார்கள்— (எ-று.) [இ-ங-க-ம்] சகசசமாதிகைகூடினதாம். - - - - - - - - - - *

(௩௰) (அ-கை.) ஸ்வரூபசாக்ஷாத்காரமாய்விளங்குதற்றெரிவிக்கும்பொருட்டரசாங்கஞ்செய்யும்படிபிராரத்தகன்மங்கூட்டிவித்தல் (கவி) மைந்தனில்லாதவந்தமாநகர்மன்னனாவி, நந்தலுமமைச்சரொல்லாநலங்கொண்மன்னவனொன்று, சிந்தனைசெய்புங்காலைச்சிறுபலிமுனிவனான, சுந்தரமன்னைநோக்கிச்சுடர்முடிவேந்தனாக்க (இ-ள்) மைந்தனில்லாத- புத்திரனில்லாத— அந்தமாநகர்மன்னன்- அந்தப்பெரியபட்டணத்தரசன்— ஆவிநந்தலும்- மரித்தமாத்திரத்தில்— அமைச்சரொல்லாம்- மந்திரிகளனைவரும்— நலங்கொள்- நன்மையையுடைய— மன்னவனொன்று- அரசனெவனென்று— சிந்தனைசெய்புங்காலை- யோசிக்குங்காலத்தில்— சிறுபலி- அற்பமானபிச்சையையுடைய— முனிவனான- முனிவனாகிய— சுந்தரமன்னைநோக்கி- அழகையுடையபகீரதவரசனைப்பார்த்து— சுடர்முடி- ப்ரகாசிக்கின்றகிரீடத்தையுடைய— வேந்தனாக்க- அரசனாகச்செய்ய— (எ-று) - - - - - - - - *

(௩௧) (அ-கை) முன்னாட்டோர்விருப்பப்படியதற்குமரசனாதல். (கவி) பகீரதனரசனாகிப்பலபெருஞ்சேனைசூழ, மகிதலம்புரத்தல்கேட்டுவந்தனர்பண்டைநாட்டோர், விகிதமாய்நீமுன்வைத்தவெம்முடையேந்தன்வீந்தா, னகிலருங்களைகண்காணேமரசனீயாதல்வேண்டும் (இ-ள்.) பகீரதன்- பகீரதனெனுமவன்— அரசனாகி- இராசாவாகி— பலபெருஞ்சேனைசூழ- அநேகம்பெரியதானைபடைகள்சூழும்படியாக— மகிதலம்புரத்தல்- பூமிபாலனஞ்செய்வதை—பண்டைநாட்டோர்- பழையபட்டணத்தோராகிய(மந்திரிமுதலியவர்கள்)—கேட்டுவந்தனர்- கேட்டுவந்து—விகிதமாய்- கிரமமாக— நீமுன்வைத்த- நீர்முன்புவைத்த— எம்முடைவேந்தன்- எங்களுடையவரசன்— வீந்தான்- இறந்தான்— அகிலரும்- நாங்களனைவரும்— களைகண்காணேம்- ஆதரவுகாண்கிலேம்— நீயரசனாதல்வேண்டும்- நீரேயிராசாவாகவேண்டும்— (எ-று) - - - - - - - - - - - - - - - *

(௩௨) (அ-கை) உபசாந்தனாயிருந்தரசுசெய்தல் (கவி) விருப்பறத்தானேவந்தவெறுக்கையைவெறுக்கைநன்றன், றொருப்படல்வேண்டுமென்றேயுள்ளன்பால்வேண்டக்கண்டு, திருப்பொலிமார்பன்சென்றுதிண்புவிசேரவாண்டா, னிருப்புழிமௌனஞ்சாந்திசமமெய்தியிராகமின்றி (இ-ள்) விருப்பறத்தானேவந்த- ஆசியாமல்வலியவந்த— வெறுக்கையை- செல்வத்தை—வெறுக்கைநன்றன்று- வெறுக்குதனல்லதன்று— ஒருப்படல்வேண்டுமென்று- சம்மதிக்கவேண்டுமென்று (நினைத்து)— உள்ளன்பால்- மனக்களிப்பினால்— வேண்டக்கண்டு- பிரார்த்திக்கப்பார்த்து—திருப்பொலிமார்பன்சென்று- அழகுவிளங்காநின்றமார்பையுடையபகீரதவரசன்போய்— திண்புவிசேரவாண்டான்- திடமானபூமிமுழுவதையுமாண்டு— இருப்புழி- இருக்கும்போது— மௌனம்- மகாமௌனத்தையும்—சாந்தி- உபசாந்தத்தையும்— சமமெய்தி- சமத்துவத்தையுமடைந்து— இராகமின்றி- ஆசையில்லாமல்— (எ-று) [இ-ங-க-ம்] துறந்தமனவல்லபத்தாற்பிரமசாக்ஷாத்காரசுகமாய்விளங்கினுனென்பதாம் - *

(௩௩) (அ-கை) இரண்டாம்வினாவுக்குத்தரங்கூறல் (கவி) மச்சரமின்றிவந்ததொழிலொன்றின்வழியினின்று, மெச்சியவியப்பிலாதோன்மிகுந்தபல்லாண்டுநோற்று, துச்சமிறவத்தாற்கங்கைகொணர்ந்துதொல்பிதாக்களுய்ய, விச்சகமிசையேகீர்த்தியுற்றறநிறுத்தினனே. (இ-ள்) மச்சரமின்றி- மாச்சரியமில்லாமல்—வந்ததொழில்- வந்தவிபகாரங்களின்—ஒன்றின்வழியினின்று- ஒருமார்க்கத்திலிருந்து— மெச்சிய- துதிக்கப்பட்ட— வியப்பிலாதோன்- அதிசயமில்லாதவனாய்— தொல்பிதாக்களுய்ய- பாட்டன்மார்கள்கரையேற— மிகுந்தபல்லாண்டுநோற்று- மிகுந்தவருஷங்களாகத்தவஞ்செய்து— துச்சமி

றலத்தால்- நிந்தனையற்றதப்சினால்— கங்கைகொணர்ந்து- தேவநதியைக்கொண்டுவந்து— இச்சகமி
சை- இந்தப்பூமியின்மேல்— கீர்த்திமிறற- புகழழியாமல்— திருத்தினன்- ஸ்தாபித்தான்— (எ-று.)
[இ-ம்] பிதாமகாள்முதலியசிவர்களுய்யும்பொருட்டுத்தபோமனவல்லமையாற்கங்கையைக்கொண்டுவ
ந்தானென்பதாம். பகீரதன்கதைமுற்றிற்று. ஆ கதை ௩௯ க்குக் கவிதை (௧௪௲௯௱௪)



# சிகித்துவசன்கதை.



(அ-கை) முற்கதையின்முன்புறப்பற்றையு மதனாலகப்பற்றையுநீக்கிப் பின்றனதுமுயற்சியி
னாற்பிரமசாக்ஷாத்காரமடைந்ததைத்தெரிவித்திவ்வனுபவம் ப்ரதிபந்த சேடத்தினாற் றானடைவதற்கரி
யதாயினுமுபதேசவுபாயங்களாற்போதிக்குமாசாரியர் வல்லமையினாலுண்டாமென்பதையறிவிக்குநிமித்
தஞ் சிகித்துவசன்கதையை நிரூபிக்கிறார். - - - - - - - - - - - - - ※

(௧) (அ-கை) மனதைக்களைத்துச்சிகித்துவசனைப்போலவுணர்விற்சுகிப்பாயெனல் (கவி) வகிர்த்து
நிமிர்மனமென்னுமாப்பறவைதனைமுன்னமாற்றியோட்டிச், சிகித்துவசன்றனைப்போலச்சாந்தனாயுன்
னிடத்தேசெறிவாயென்ன, சுகித்துணர்வினின்றுளவச்சிகித்துவசனானாயாசொல்வாயெல்லாஞ், சகித்து
ணர்வுமேன்மேனிறைவதற்கென்றவன்கேட்பத்தவனுஞ்சொல்வான் (இ-ள்) வகிர்த்துநிமிர்மனமெ
ன்னும்- பகுத்தெழுவதானமனமென்கின்ற— மாப்பறவைதனை- பெரியபட்சியை—முன்னமாற்றி
யோட்டி- முன்னீக்கித்துரத்தி— சிகித்துவசன்றனைப்போல- சிகித்துவவரசனைப்போல— சாந்தனாய்-
உபசாந்தமுடையவனாய்— உன்னிடத்து- உனதாத்மஸ்வரூபத்தில்— செறிவாயென்ன- மூழ்குவாயெ
ன்று (வசிட்டமுனி) சொல்ல—சுகித்துணர்வினின்றுள- ஆநந்தானுபவபோதமாயிருந்துள்ள— அச்சிகி
த்துவசனார்- அந்தச்சிகித்துவசனானவன்யார்—ஐயா- ஆசிரியரே— எல்லாஞ்சகித்துணர்வு- அனைத்தை
யுந்தாங்காநின்றஞானமானது—மேன்மேலும்- மேலுமேலும்—நிறைவதற்கு- பூரணமாவதற்கு—
சொல்வாயென்று- அனுக்கிரகிப்பாயென்று— அவன்கேட்ப- அவ்விராமன்கேட்க— தவனுஞ்சொல்
வான்- தவத்தையுடையவசிட்டமுனியுஞ்சொல்லத்தொடங்கினார்— (எ-று) - - - - - ※

(௨) (அ-கை) சிகித்துவசனிலக்கணங்கூறல் (கவி) துவாபரமாமுகத்துமுதலுண்டானேனேழும
னுத்துஞ்சுமெல்லைத், திவாகரநேர்மாளவதேசத்திறைவன்சிகித்துவசன்செங்கோல்வேந்த, னவாமுதறீ
க்குணமில்லோனுதாரமுதனற்குணங்களனைத்துமுள்ளோன், விவாதமறுமோனத்தோன்சமதமமாங்கு
ணநிறைந்தோன்மிகவுநல்லோன் (இ-ள்) துவாபரமாமுகத்து- துவாபரயுகத்தில்—முதலுண்டானே
ன்- முதலிற்பிறந்தவன்— ஏழுமனுத்துஞ்சுமெல்லை- ஏழுமனுக்களிறந்தகாலத்தில்— திவாகரநேர்-
சூரியனுக்கொப்பான— மாளவதேசத்திறைவன்- மாளவதேயத்துக்கரசன்— சிகித்துவசன்- சிகித்துவ
சனென்னுநாமத்தையுடையவன்— செங்கோல்வேந்தன்- நீதியையுடையவரசன்— அவாமுதல்- ஆ
சைமுதலாகிய— தீக்குணமில்லோன்- துற்குணமில்லாதவன்—உதாரமுதல்- கொடைமுதலிய—நற்
குணங்களனைத்துமுள்ளோன்- சற்குணங்களியாவுமுள்ளவன்— விவாதமறு- சொற்கலகமற்ற—மோ
னத்தோன்- மௌனத்தையுடையவன்— சமதமமாம்- சமமுந்தமமுமாகிய— குணநிறைந்தோன்-
குணங்கணிறைந்தவன்— மிகவுநல்லோன்- மிகவுநன்மையையுடையவன்—(எ-று) - - - - - ※

(௩) (அ-கை) மனைவியோடுஞ்சுகித்திருத்தல் (கவி) சூடாலையெனுங்கன்னிச்சுராட்டிரமன்னவ
னளித்ததோகைபோல்வாள், விடாதநற்குணத்தாற்றனையொப்பாளவளையவன்விவாகஞ்செய்தான், வா
டாதநினைவொன்றிப்பிறிவின்றிச்செய்தொழில்கண்மாறுபாடற், றிடானபலகலைக்குமவல்லவராயிருவ
ருமொத்தினிதுவாழ்ந்தார் (இ-ள்) சுராட்டிரமன்னவன்- சுராட்டிரதேயத்தரசன்— அளித்த- பெ
ற்ற— சூடாலையெனுங்கன்னி- சூடாலையென்னுந்தவப்பெண்— தோகைபோல்வாள்- மயிலுக்கொப்
பானவள்— விடாதநற்குணத்தால்- கெடாதசற்குணத்தினால்— தனையொப்பாள்- தனக்குத்தானேசம
மானமானவள்— அவளை- அச்சூடாலையை— அவன்- அச்சிகித்துவசன்— விவாகஞ்செய்தான்- கலியா
ணஞ்செய்தான்— வாடாதநினைவொன்றி- தளர்வற்றமனமொத்து— பிறிவின்றி- பிரிவில்லாமல்—
செய்தொழில்கள்- செய்யப்பட்டகிரியைகள்—மாறுபாடற்று- வேறுபாடில்லாமல்—ஈடானபலகலை
க்கும்- பெருமையுள்ளசகலகலைஞானங்களுக்கும்— வல்லவராய்- வல்லமையுள்ளவர்களாய்—இருவரு
மொத்து- இருவர்மனமுமொன்றாய்—இனிதுவாழ்ந்தார்- இனிமையுடன்வாழ்ந்தார்கள்— (எ-று) ※

(௪) (அ-கை) சராவருமென்றதற்கஞ்சுதல் (கவி) ஈருடலுக்கோருயிர்போலிருவருஞ்சேர்ந்திள
மைநலமினிதுதுய்த்தார், சீருடையவருடங்களிவ்வகையேயெல்லையறச்செல்லலோடு மொருறுதியி
லாவிளமையுடைந்தகுடநீர்போலவொழுகிப்போக, நீருறுசெந்தாமரைமேற்பனியிடிபோற்சராவந்
தடைநேர்ந்ததன்றே (இ-ள்) ஈருடலுக்கு- இரண்டுசரீரத்துக்கும்— ஒருயிர்போல்- ஒருபிராணனைப்
போல— இருவருஞ்சேர்ந்து- இரண்டும்பருங்கூடி— இளமைநலம்- எவ்வன்னசுகத்தை— இனிதுது
ய்த்தார்- இன்பமாகப்புசித்தார்கள்— சீருடையவருடங்கள்- சிறப்பையுடையவருடங்களானவை— இ
வ்வகையே- இப்படியே— எல்லையறச்செல்லலோடும்- அளவின்றிநீங்கினவளவில்—ஒருறுதியிலாவிள
மை- ஒருநிச்சயமுமில்லாதயெவ்வனமானது— உடைந்தகுடநீர்போல- உடைபட்டகடசலத்தைப்
போல— ஒழுகிப்போக- ஓடிப்போக— நீருறுசெந்தாமரைமேல்- புனலினுள்ளகோகனகத்தின்மே

ல்—பனியிடிபோல்-பனிக்கட்டினய போல—சனாவந்துநேர்ந்தது-மூப்புவந்தெதிரிடும்—(எ-று)

(ரு) (அ-கை) விடயசுகானுபவநீங்குமெனல் (கவி) காதலத்துநீரதுபோனிற்றலும்வாணுண்மெல்லக்கழன்றுசெல்லத்,திரண்மழைநாட்சுனைக்கொடிபோற்றிராமாலொன்றுமேதீர்க்கமாக, விரவுசரற்காலத்திலாற்றுநீர்போலழகுவினைவிலோடப், புரமுறுநற்சுகங்களெலாஞ்சில விடுத்தசரங்களைப்போற்போயிற்றன்றே. (இ-ள்.) காதலத்துநீரதுபோல்-உள்ளங்கைசலத்தைப்போல— நிற்றலும்வாணுள்-நாடோறுமாயுளானது— மெல்லக்கழன்றுசெல்ல-மிருதுவாசக்கழிந்துபோக— திரண்மழைநாள்-மிகுந்துவருஷிக்குங்காலத்திலுள்ள— சுனைக்கொடிபோல்- சுனைக்கொடியைப்போல— திராமாலொன்றுமே- நீங்காதவோராசையே— தீர்க்கமாக- விசாலமாக— விரவுசரற்காலத்தில்- பொருந்தியசரற்காலத்தில்— ஆற்றுநீர்போல். நதியின்சலத்தைப்போல— அழகுவினைவிலோட- எழிலானதுசீக்கிரத்திற்போக— புரமுறு- சரீரத்திற்பொருந்திய— நற்சுகங்களெலாம்- நல்லின்பங்களனைத்தும்— சில விடுத்த- வில்லைவிட்டுநீங்கின— சரங்களைப்போல்- அம்புகளைப்போல— போயிற்று- செல்லும்— (எ-று) [இ-ரு-க-ம்.] சனாவரின்சுகானுபவங்களனைத்துநீங்கிமரணமுண்டாமெனவிதினிராசைதோற்றிற்றெனபதாம் மேல்- எம கவிதையில்சனாயாலேயாக்கைநைந்தாற்பசந்தமாலறவனமேபோகலாமிளமைநாட்பான்மையன்றுமென்றதனுனும்- எமக கவியில்- படாமுலைநீசிறியையாலுடன்வருதற்காகாவென்றதனுனு மிங்ஙனமிறந்தகாலத்தை யெதிர்காலமாகக் கூறினதெனக்சொள்க. - - - ※

(சு) (அ-கை) நித்தியசுகத்தைக்கொடுக்கின்றஞான நூலேசநநமரணத்தைநீக்குமென்றுலோசித்தல். (கவி) கதலியுறுகருப்போலநிராசையைத்தந்ததுபயன்றீர்காரியந்தா, னிதமுறவாங்கவர் நினைவாமொத்தையடைந்துள்ளமீண்டெங்கும்விழா, ததுமிகநன்றவ்வகையானதுகிடையாதிம்மோகத்தழுந்துவார்க்குத்.திதமுறவத்தியாத்துமதத்துவநூலேபிறவிநோய்தீர்ப்பதன்றே (இ-ள்)கதலிபுறுகருப்போல- வாழையானதடைந்தகருப்பத்தைப்போல— பயன்றீர்- ப்ரயோசனமற்ற—காரியந்தான்- தொழிலானது— நிராசையைத்தந்தது- விராகத்தையடைந்ததது— இதமுற- உரிமையாக—ஆங்கவர் நினைவார்- அவ்விடத்தவர்கள்சிந்திப்பார்கள்—எத்தையடைந்து-எதைப்பெற்று—உள்ளம்-மனமானது— மீண்டெங்கும்விழாது- திரும்பபாதிலுஞ்செல்லாததோ— அதுமிகநன்று- அதுமிகவுநன்மையாம்— இம்மோகத்தழுந்துவார்க்கு- இச்சமுசாரத்தின்முழுகுபவர்களுக்கு—அவ்வகையானதுகிடையாது- அப்பகுப்பருமையாம்—. திதமுற- திடமாக— அத்தியாத்துமதத்துவநூலே- அத்தியாத்துமஞானசாஸ்திரமே— பிறவிநோய்தீர்ப்பது- சநநவியாதியைநீக்கு (மவிடதமாம்)— (எ-று) - - - - ※

(எ) (அ-கை) சாதுசங்கத்துடன்கூடியாத்மவிசாரஞ்செய்தல் (கவி) ஆற்றுமதத்துவஞானமொன்றுலுமலதுபிறப்பறுதென்றெண்ணி, யூற்றமுறுதற்பராயதின்மனமாயதிற்சேர்ந்தவுயிராய்நித்தஞ், சாற்றுமதினிட்டையராயதற்கடுத்தோர்சார்வாய்ச்சான்றோர்கள்பூசைக், கேற்றசெயலாற்சிறிதுமிடைவிடாப்பரிசயமாயிரண்டுபேரும் (இ-ள்) இரண்டுபேரும்- இருவர்களும்— ஆற்றுமதத்வஞானம்- ஆத்மதத்துவஞானமாகிய— ஒன்றாலுமலது- ஒன்றினாலேயல்லாமல்— பிறப்பறுதென்றெண்ணி- (மற்றொன்றால்)சநந நீங்காதென்றுசிந்தித்து—ஊற்றமுறுதற்பராய்- நிலைபெற்றவாத்மஞானிகளாயும்— அதின்மனமாய்- அதின்மனதுடையவர்களாயும்— அதிற்சேர்ந்தவுயிராய்- அதையடைந்தபிராணனையுடையவராயும்—நித்தம்-எப்போதும்—சாற்றும்-சொல்லப்பட்ட— அதனிட்டையராய்- அதனிட்டையையுடையவராயும்—அதற்கடுத்தோர்சார்வாய்- அதற்கடுத்தசத்துக்கள்சார்பையுடையவராயும்—சான்றோர்கள்-அறிஞர்கள்—பூசைக்கேற்றசெயலால்- அராதனைக்கடுத்தசெய்கையினால்—சிறிதுமிடைவிடா- சற்றுமிடைவிடாமல்—பரிசயமாய்- பழக்கமுள்ளவர்களாயும்— (எ-று.) - - - ※

(அ) (அ-கை) சூடாலைதனித்துச்சூட்சுமவிசாரஞ்செய்தல். (கவி) தம்மிற்றுமுணர்ந்துளராயதற்கடுத்தவாசாரந்தரித்துநீணாள், விம்முற்றமகிட்சியராய்விளங்கினர்பின்பந்தவிவேகமங்கை, யம்மைக்காநல்லபதவொழுங்கினுற்பேரறிஞராருளிச்செய்த, செம்மைச்சாத்திரப்பொருள்கடரிக்கலாமளவறிந்துதிருந்தக்கேட்டு (இ-ள்)தம்மிற்றுமுணர்ந்துளராய்- தமக்குட்டாங்களறிந்தவர்களாயும்— அதற்கடுத்த- அதற்கடுத்ததான —ஆசாரந்தரித்து-ஒழுக்கத்தைப்பூண்டு— நீணாள்-நெடுங்காலம்—விம்முற்றமகிட்சியராய்-மிகுந்தகளிப்புள்ளவர்களாயும்—விளங்கினர்- ப்ரகாசித்தார்கள்—பின்பந்தவிவேகமங்கை-பின்னந்தவிவேகப்பெண்ணனசூடாலையானவள்—அம்மைக்காம- மறுமைக்காகிய—நல்லபதவொழுங்கினுல்- நன்மையானபதக்கிரமத்தினுல்—பேரறிஞர்- மூதறிஞரானவர்கள்— அருளிச்செய்த- அனுக்கிரகித்த— செம்மைச்சாத்திரப்பொருள்கள்- செவ்வையானசாஸ்திரார்த்தங்களை— தரிக்கலாமளவு- தரிக்கத்தகுந்தமாத்திரம்—அறிந்து- தெரிந்து—திருந்தக்கேட்டு- நன்றாயக்கேட்டு—(எ-று)[இ-ரு-க-ம்] இருவருமாத்மவிசாரஞ்செய்வதிற்றிவரமாகச்சூடாலைதனித்னுபவமாய்விசாரிக்கத்தொடங்கினதாம். ※

(கூ) (அ-கை) ஆத்மாவு மஃதைமறைக்கு மோகமு மஃதையுடையவனு மஃதுதிக்குமிடமுமாகிய நான்கையும் விசாரிக்கத்தொடங்கி முன் னாத்மஸ்வரூபத்தை விசாரித்தல். (கவி) எள்ளுருவியாபாரம்வியாபாரமில்லாமையிரண்டுமின்றி, வெள்ளிதாய்விளங்கியநற்புந்தியாற்சூடாலைவிசாரிக்கின்று, டெள்ளியேதன்னைமுதனோக்கிநானென்றெத்தைச்செப்புகின்றோ, முள்ளறுவிம்மோகமாருடையதெவ்வாறெங்குதித்ததால். (இ-ள்) எள்ளுருவியாபாரம்- நிந்தியாதகாரியமும்— வியாபாரமில்லாமை- காரியமில்லாமையும்— இரண்டுமின்றி- இரண்டுமில்லாமல்— வெள்ளிதாய்விளங்கிய- தாவள்யமாய்விளங்கிய— நற்புந்தியால்- நல்லறிவினுல்— சூடாலைவிசாரிக்கின்றாள்- சூடாலையானவள்விசாரணைசெய்கிறாள்— தெள்ளியே- தெளிவாக—தன்னைமுதனோக்கி- ஆத்மாவைமுன்னேபார்த்து— நானென்றெதைச்செப்புகின்றோம்- யானென்றெதைச்சொல்லுகின்றோம்—உள்ளறு- மனதினீங்காத— இம்மோகம்- இந்தமோகமியாது—ஆருடையது-இஃதியாருக்குரியது—எவ்வாறு- எந்தப்ரகார

ம்—எத்தால்- யாதினுல்—எங்குதித்தது- எவ்விடத்திலுண்டானது—(எ-று) - - - - - *

(௰)(அ-கை) இந்திரியங்களைக்கண்டுதேகத்தையுமனதைக்கண்டிந்திரியங்களையுநியதிகளைதல் (கவி)
முதலானவுடல்சடமாமூகமாநானென்றுமொழியலாகா, விதமானகருமஞானேந்திரியங்கள்சடமாகிவெ
வ்வேறுகு மதனுன்னன்றாகுந்தடியினுலோடுகளையசைக்குமாபோற், றிதமாகாமனத்தாலேயிவையி
ளைந்துஞ்சேட்டைசெய்யுமன்றே (இ-ள்)முதலானவுடல்- முன்னே(தோற்றுவ)தானதேகத்தை(நா
னென்னில்—சடமாமூகமாம்- சடமாகவுமூடமாகவு(மிருப்பதனுல்)—நானென்றுமொழியலாகா- நா
னென்றுரைக்கதக்கதன்று—விதமான- (இவ்) விதமான(தேகத்தைபற்றித்தசைப்பிக்கின்ற)—கருமஞா
னேந்திரியங்கள்- பத்திந்திரியங்களையு(நானென்னில்)— தடியினுலோடுகளையசைக்குமாபோல்- தண்டி
னுலோட்டை(யசைக்கவஃ)தசைவதுபோல— திதமாகாமனத்தால்- சபலசித்தத்தினுல்— சடமாகிவெ
வ்வேறாகும்- மூடமாய்த்தனித்தனியேயிருக்கின்ற—இவையிளைந்தும்- இப்பத்திந்திரியங்களும்—சே
ட்டைசெய்யும்-அசைகின்றன—அதனுனன்றாகும்- அதனுனல்லவாம்—(எ-று) - - - - *

(௰௧) (அ-கை) புத்தியைக்கண்டுமனதையுமகங்காரத்தைக்கண்டு புத்தியையுநியதிகளைதல் (கவி)
செறிதருசங்கற்பமெனுஞ் சத்தியுளதாய்ச்சடமாஞ்சித்தந்தானு, மெறிகவணுற்கற்போலபுந்தியினிச்
சயத்தாலேயியக்கமெய்து, மறிவுறுபுந்தியுஞ்சடமாமறுதியிடலேவடிவாயசங்காரத்தா, னெறியுறுசெ
ய்கையையுறுமாற்பள்ளத்தாலோடுநதிநீர்களேபோல்(இ-ள்)செறிதருசங்கற்பமெனுஞ்சத்தியுளதாய்-
இந்திரியங்களையசைப்பிக்கு மிகுந்தசங்கற்பமென்கின்றசத்தியையுடையதாகிய— சித்தந்தானும்- மன
தை(நானென்றாலது)வும்—கவணுலெறிகற்போல- கவண்டினுல்வீசச்(செல்லுங்) கல்லைப்போல— புந்
தியினிச்சயத்தால்-புத்திநிச்சயத்தினுல்— இயக்கமெய்துஞ்சடமாம்- அசைகின்றசடமாகு(மதனுலம்ம
னமுநானன்றாம்)— அறுதியிடலேவடிவாயறிவுறுபுந்தியும்- (மனதையசைப்பிக்கின்ற)நிச்சயத்தறிவ
தேயுருவமாயுள்ளபுத்தியை(நானன்றாலது வும்—பள்ளத்தாலோடுநதிநீர்களேபோல்- பள்ளத்திற்செ
ல்கின்றவாற்றின்சலம்போல—அகங்காரத்தானெறியுறுசெய்கையையுறும்- அகங்காரத்தொழின்மார்க்
கத்திற்செல்லுகின்ற—சடமாம்-சடமாகு (மதனுனப்புத்தியுமல்லவாம்) — (எ-று) - - - - *

(௰௨) (அ-கை.) சீவனைக்கண்டகங்காரத்தையும்ப்ரத்யேகாத்மாவைத் தரிசித்துச்சீவனையுநியதிகளை
தல் (கவி) தீதகங்காரஞ்சடமாய்ப்பயனிலியாயவசமாய்ச்சீவனுலே, சாதமுறுமிதுசிறுவர்மயக்கத்திற்
பேய்தோன்றுந்தன்மைபோலா, மோதியசீவனுந்தொழிலேவடிவாய்க்காற்றுருவாகியிதயமுற்று, மே
தகையசுகுமாரமாயுள்ளேமற்றொன்றாய்மேவிவாழும் (இ-ள்.) தீதகங்காரம்- (புத்தியையசைப்பிக்
கின்ற) தீயவகங்காரத்தை(நானென்றால்)— பயனிலியாய்- ப்ரயோசனமில்லாததாய்— அவசமாய்-ப
ராதீனமாய்—சிறுவர்மயக்கத்தில்-குழந்தைகளின்பிரமையில்—பேய்தோன்றுந்தன்மைபோல்-பிசாச
நதோற்றும்விதத்தைப்போல— சீவனுலேசாதமுறுமிதுசடமாம். சீவனுற்றோற்றுகின்ற விதுசடமா)
மாதலாலிவ்வகங்காரமுநானல்லவாம்)—ஓதியசீவனும்-(அகங்காரத்தையசைக்குமென்)றுரைத்தசீவ(னு
னென்னிலதுவு)ம்—தொழிலேவடிவாய்-கிரியையேயபடிவமாய்—காற்றுருவாகி-பிராணுகாரமாய்—உ
ள்ளே-அகத்தில்—இதயமுற்றுமேதகையசுகுமாரமாய்-இருதயத்துற்றுமிக்வுமிருதுவா(யிருந்தும்)—
மற்றொன்றாய்மேவிவாழும்-ப்ரத்யேகாத்மாவாற்சுகிக்கு(மதனுலச்சீவனுநானல்லவாம்(எ-று)(ப-ம்)
சீவனைச்சலனுகாரமாயிருத்தலிற்சாற்றுருவென்றும் அந்தக்கரணப்ரதிபலனுயிருத்தலினிதயமுற்றென்
றும், சுழுத்தியிலோய்ந்திருத்தலின் சுகுமாரமென்றுங்கூறினர் [இ-ரு-க-ம்] சிதனைத்தானெனக்கண்டு
சீவன்முதலியவற்றைத்தானல்லவெனத்தள்ளியதாம்- நானென்றெண்பதைமற்றநான்கிடத்துங்கூட்டுக*

(௰௩) (அ-கை) ஆத்மதரிசனமாயதனுற்சீவன்விளங்கினதறிதல் (கவி) ஆற்றுமதத்துவவறிவென்
றறிந்தேனீதறிபொருளாலழுக்குமேவா, தேற்றமெனதருவமாயசீரணமாஞ்சித்துருவாற்சீவன்வாழு
ந், தோற்றுபொருள்களின்மயங்குஞ்சித்துருவாற்சீவன்வாழ்தொடர்ச்சிகூறிற், காற்றதனுன்மணம்போ
லும்பள்ளத்தானீர்போலுங்கருதுங்காலே (இ-ள்) ஆற்றுமதத்துவவறிவென்று- (சீவனைச்சுகிப்பிக்கின்
றவிதுவே)சுவாத்மாவாகியவுண்மைஞானமென்று —அறிந்தேன- உணர்ந்தேன்— ஈது- இவ்வறிவான
து—அறிபொருளாலழுக்குமேவா-விடயங்களாற்களங்கமடையாமல்—தேற்றமெனதருவமாய்-தெ
ளியுமெனதாத்மஸ்வரூபமாய்—அசீரணமாஞ்சித்துருவால்- நித்தியமான ஞானஸ்வரூ(பமாமித)னுல்—
சீவன்வாழும்- சீவன்சீவிக்கும்— சித்துருவால்- இஞ்ஞானஸ்வரூபத்தினுல்— தோற்றுபொருள்களின்
மயங்கும்- விடயவஸ்துக்களிற்பிரமிக்கின்ற— சீவன்வாழ்தொடர்ச்சிகூறில்- சீவன்சீவிக்குந்தொடர்
பைச்சொல்ல— கருதுங்கால்- நினைக்குமிடத்து— காற்றதனுன்மணம்போலும்- வாயுவினுல்வரும்
வாசனைபோலவும்—பள்ளத்தானீர்போலும்-பள்ளத்திற்றங்குஞ்சலம்போலவுமாம்—(எ-று)[இ-ம்]
ஆத்மாசுயம்பிரகாசமொனவுமதனுற்சீவன்விளங்குமெனவுமறிந்ததாம். - - - - - - - - *

(௰௪) (அ-கை) மோகவிலக்கணமுமஃதுடையவனையும்விசாரித்தல்(கவி) பொய்யாகிச்சடமான
வறிபொருளின்புணர்ச்சியாற்போதரூப, மையான்சடமாகிப்பெருநீருட்கனல்போற்றன் வடிவைவி
ட்டும், மெய்யானசித்துருவமிப்படியேயறிபொருளைமேவலாலே, யையோபொய்யாய்ச்சடமாமறி
விஞுலறிவிக்கவறித்ததன்றே (இ-ள்) பொய்யாகி- மித்தையாகியும்— சடமான- மூடமாகியுமிருக்கி
ன்ற— அறிபொருளின்- விடயங்களின்— புணர்ச்சியால்- கலத்தலினுல்— போதரூபம்- ஞானஸ்வ
ரூப (சத்தியானது)— மையானசடமாகி- கள்ளமுள்ளசடரூபமாய்— பெருநீருள்- மிகுந்தசலத்து
க்குள்— கனல்போல்-அக்கினியைப்போல—தன்வடிவைவிட்டும்-தனதுருவத்தைமறந்து(சீவனும்)—
மெய்யானசித்துருவம்-உண்மையாகியசிற்சத்தியானது—இப்படியேயறிபொருளைமேவலால்- இந்த
ப்ரசாரஞ்(சீவனும்)விடயத்தைவிரும்புதலினுல்—ஐயோபொய்யாய்ச்சடமாம்- அதிசயமித்தையாகிமூ
டமாகி—அறிவினுலறிவிக்கவறிர்தது- ஆத்மஞானத்தினுற்றெரிவிக்கத்தெரிந்தது(எ-று)[இ-ம்]ஆத்மா

தன்னைவிடயமாசக்கண்டுமெய்யுமீனமயக்கமேமோசமென்றுமஃதுள்ளவன்சீவனென்றுமறிந்ததாம். ※

(௰௫) (அ-கை.) மோசமுதிக்குங்காரணம்விசாரித்தல். (கவி) இந்தவறிவெத்தாற்காணப்பட்டதெனினில்வேறேதுமில்லை, யந்தமில்காலத்தாலேயறியவேண்டியதறிந்தேனம்மவம்மா. மூந்துவறிவின்பாப்பைமுடிவாசமனங்கரணமுதலவெல்லாஞ், சிந்தனைசெய்யாமையாலுதித்தனவாஞ்சிந்தித்தாற்சேரப்பொய்யே. (இ-ள்) இந்தவறிவு- இந்தவாத்மஞானமானது— எத்தாற்காணப்பட்டதெனனில்- யாதினாற்றெரியப்பட்டதென்றால்—வேறேதுமில்லை-(தன்னாலன்றி)வேறொன்றினாலுமில்லை—அந்தமில்காலத்தால்- முடிவற்றகாலத்தினால்— அறியவேண்டியதறிந்தேன்- அறியத்தக்கவாத்மஞானத்தையறிந்தேன்— அம்மவம்மா- ஆச்சரியமாச்சரியம்— மூந்துவறிவின்பரப்பை- முதன்மையானசித்துவியாபகத்தை— முடிவாக- அந்தமாக— சிந்தனைசெய்யாமையால்- சிந்தியாதத்தினால்— மனங்கரணமுதலவெல்லாம்- ஆறிந்தியமுதலியவனைத்தும்—உதித்தனவாம்- உண்டாயினவாம்— சிந்தித்தால்- (அவ்வறிவைச்) சிந்தித்தால்— சேரப்பொய்யே- (அம்மனமுதலிய) சகலமுமித்தையேயாம்— (எ-று) [இ-ம்] ஆத்மாவேசீவன்முதலியசகத்தாகவிளங்குமேயன்றிவேறின்றென்னுமனுபவமாயறியாததேமோசமுண்டாவதற்குக்காரணமாயிற்றென்பதாம் - - - - - - - - - - - - - - ※

(௰௬) (அ-கை) இவ்விசாரங்களாலாத்மாவேபிரமமென்னுமத்துவிதஞானமுதயமாதல்.(கவி) எல்லையில்பேரறிவேயிங்குளதிதனைப் பேருண்மையென்றுஞ்சொல்வா, ரல்லலுறுங்களங்கமறச்சமமாகியசங்கரமில்வடிவமாகித்,தொல்லையொளியொருக்காலேதுலங்குவதாய்நித்தபரிசுத்தமாகி மல்லலுயர்பிரமமெனப்பரமமெனப்பெயர்பெற்றுவழங்குமன்றே (இ-ள்)எல்லையில்பேரறிவே- அளவற்றபூரணஞானமே— இங்குளது-இவ்விடத்திலுள்ளதாம்— இதனை- இந்தப்பூரணஞானத்தை—பேருண்மையென்றுஞ்சொல்வார்- மகாசத்தையென்றுஞ்சொல்லுவார்கள்— அல்லலுறுங்களங்கமற- துன்பமிகுந்தமாசுநீங்க— சமமாகி- சமத்துவமாய்—அசங்கரமில்வடிவாகி- அசம்பாவமற்றஸ்வரூபமாகி—தொல்லையொளி- சுயம்ப்ரகாசமானது— ஒருக்கால்-ஏககாலத்தில்— துலங்குவதாய்-ப்ரகாசிப்பதாயும்— நித்தம்- நித்தியமாயும்—பரிசுத்தமாகி-சுத்தமாகியுமிருக்கின்ற—மல்லலுயர்பிரமமென- திடமுள்ளமேலானபிரமமென்றும்—பரமமெனப்பெயர்பெற்றுவழங்கும்-பரமமென்றுநாமத்தைத்தரித்துவழங்கும்—(எ-று)※

(௰௭) (அ-கை) சகத்திலிச்சொரூபானுசந்தானமுதிர்ச்சியாயிற்றெனல். (கவி இவ்வாறுதினந்தோறுந் தன்சுருபத்தேகளிக்குமிதயநோக்கா, றவ்வாதபகுதிநிலையாயாசைபோய்ச்சங்கஞ் சற்றுமின்றி, யொவ்வாததொந்தனைபோய்த் தொழிலின்றி பற்றுவிடொன்றுமின்றி, சவ்வாதவியற்றொழில் செய்துயர்பரமப்பெரும்பேற்றாற்கருத்துமுற்றி (இ-ள்)இவ்வாறு-இந்தப்ரகாரம்— தின்நதோறும்- நாடோறும்— தன்சுருபத்து- தனதான்மஸ்வரூபத்தில்— களிக்கும்- சுகிக்கின்ற—இதயநோக்கால்-மனோதிருஷ்டியினால்—தவ்வாதபகுதிநிலையாய்-தவறுதசுபாவமானநிலையினின்று— ஆசைபோய்ச்சங்கஞ்சற்றுமின்றி-அவாநீங்கி(விடய)சங்கமெவ்வளவுமில்லாமல்— ஒவ்வாததொந்தனைபோய்- பொருந்தாததொந்தம்விட்டு— தொழிலின்றி- செய்கையில்லாமல்— பற்றுவிடொன்றுமின்றி- விருப்புவெறுப்பொன்றுமில்லாமல்—கவ்வாதவியற்றொழில்செய்து-பற்றில்லாதவியல்பானசெயல்களைச்செய்து— உயர்பரமப்பெரும்பேற்றால்-மேலானபிரமப்ரயோசனத்தினால்—கருத்துமுற்றி-மனம்பழுத்து எ-று )※

(௰௮) (அ-கை ) அத்துவிதஞானவபரோக்ஷசாக்ஷாத்காரஸ்வரூபமாதல். (கவி) உள்ளுறுபூரணமெய்தியுவமைகட்கப்பாலாகியொருவராலுந், தெள்ளியளவிடவொண்ணாநிலையாந்தன்விவேகத்தின்செறிபழுக்க, வெள்ளமுறத்தன்சுருபம்வெளியாய்மென்மலர்க்கொடிபோல்விளக்கமுற்று, எள்ளரியவபிநவமாம்பேரொழில்கூரிவள்பொலிவையினிதுநோக்கி (இ-ள் ) உள்ளுறுபூரணமெய்தி- உள்ளத்திற்பொருந்தியபரிபூரணத்தையடைந்து— உவமைகட்கு- உவமானங்களுக்கு— அப்பாலாகி- அதீதமாய்—ஒருவராலும்- யாவராலும்— தெள்ளியளவிடவொண்ணா- ஆராய்ந்தளவிடக்கூடாத— நிலையாம்- நிச்சயமாகிய— தன்விவேகத்தின்- தனதுவிவேகத்திலுண்டான— செறிபழுக்கவெள்ளமுற- மிகுந்தவற்பியாசமிக— தன்சுருபம்- தனதாத்மஸ்வரூபமானது— வெளியாய்- ப்ரத்யக்ஷமாய்—மென்மலர்க்கொடிபோல்- மிருதுவானபுட்பக்கொடியைப்போல— விளக்கமுற்றாள்- விளங்கினாள்— எள்ளரிய- நிந்தித்தற்கரிய— அபிநவமாம்- புதுமையான— பேரொழில்கூர்- பேரழகுமிகுந்த—இவள்பொலிவை- இந்தச்சூடாலைபின்றேயுசை— இனிதுநோக்கி- இனிமையாக(சிகித்துவசன்) பார்த்து— (எ-று)[இ-௯௭-ம் ] சமாதியினின்றுநீங்கிச்சகசநிஷ்டைகைகூடிச்சர்வம்பிரமமயமென்கின்றநிரதிசயாநந்தசாக்ஷாத்காரவடிவமாகப்பிரமதேசசாய்விளங்கினாளென்பதாம். - - - - - - - - - - - - - ※

" (௰௯) (அ-கை ) சூடாலையினழகைப்பார்த்தரசனதிசயித்துவினவுதல். (கவி) கண்டறியாவழகிதெனமிகவியந்துசிகித்துவசன்கழறலுற்றான், பண்டையிளநலமீண்டுபடைத்தனைபோலலங்காரம்பலபெற்றாய்போ, லண்டமுதுண்டனைபோலார்க்குமுறவரியபதமடைவுற்றாய்போன், மண்டுகின்றவாநந்தநிறைந்தனைபோற்பொலிகின்றாய்மாசிலாளே (இ-ள் ) கண்டறியாவழகிதென- இதுநான்பார்த்தறியாதவழகென்று— மிகவியந்து- மிகவுமதிசயித்து— சிகித்துவசன- சிகித்துவராசன்—கழறலுற்றான்-சொல்லத்தொடங்கினான்— பண்டையிளநலம்- முன்னெவ்வனத்திலுள்ளவழகை— மீண்டுபடைத்தனைபோல்- திருமபப்பெற்றவள்போலவும்—அலங்காரம்பலபெற்றாய்போல்-பேரழகையநேகமாகவடைந்தவள்போலவும்— அண்டமுதுண்டனைபோல்- தேவாமுதம்புசித்தவள்போலவும்— ஆர்க்கும்- யாவருக்கும்— உறவரியபதம்- பொருந்துதற்கரியபிரமபதத்தை— அடைவுற்றாய்போல்- அடைந்தவள்போலவும்— மண்டுகின்றவாநந்தம்- பூரணாநந்தம்— நிறைந்தனைபோல்- நிறைந்தவள்போலவும்— மாசிலாளே- களங்கமற்றவளே— பொலிகின்றாய்- நீவிளங்குகின்றாய்— (எ-று) - - - - - ※

(௨௰) (அ-கை.)(இ-து ) (கவி) போகத்துக்கிரங்காதுசாந்தமாயுற்றமாய்ப்பொலிவுண்டாகி,பே

கத்திற்சமமாய்செம்பீரமாயு னதுமனதிருப்பதென்னே, தேகத்திற்பெருமழகுஞ் சித்தத்திற்பேரழ
குஞ்சேர்ந்ததெங்ஙன், னீகற்பாலுரையென்னகாதலற்குச்சூடாலைநிகழ்த்தலுற்றாள். (இ-ள்) போகத்து
க்கிரங்சாது- போகத்தையிச்சியாமல்— சாந்தமாய்- உபசாந்தமாகியும்— ஊற்றமாய்- அசைவின்றிநி
ற்பதாகியும்— பொலிவுண்டாகி- ப்ரகாசமுண்டானதாகியும்— ஏகத்திற்சமமாய்- ஒன்றிற்சமமாகியு
ம்—கெம்பீரமாய்-செம்பீரமாகியும்—உனதுமனதிருப்பதென்னே-உன்மனமிருக்குந்தன்மையென்
ன— தேகத்திற்பெருமழகும்- சரீரத்திற்பெற்றிருக்குமழகும்— சித்தத்திற்பேரழகும்- மனதினுண்
டாயமிகுந்தவழகும்— சேர்ந்ததெங்ஙன்- உண்டானதெப்படி— நீகற்பாலுரையென்ன- நீகற்பினு
ற்சொல்லென்றுகேட்ட— காதலற்கு- தலைவனுக்கு— சூடாலைநிகழ்த்தலுற்றாள்- சூடாலையானவள்
சொல்லத்தொடங்கினள்(எ-று)[இ-உ-க-ம்]அரசனரசிக்கழகுண்டானகாரணம்வினவினதென்பதாம்.

(உக) (அ-கை) அழகுண்டானதற்குக்காரணமான வாத்மசாக்ஷாத்கா நித்தியாநந்தவனுபவவி
சத்தை யெழுவிதமாகப்பகுத்துச்சொல்லுதல் (கவி) கிஞ்சிலுமின்றிக்கிஞ்சில் வடிவானவிதுவிட்டுக்கிஞ்
சிலன்றி, விஞ்சுமொருவடிவுற்றேனதனலேசீருடைத்தாய்விளங்கா நின்றேன், கிஞ்சிலேகிஞ்சிலெனச்சு
யாவநிலையாயுதயங்கெடுதியின்றாய். விஞ்சுவதேததையறிந்தேனதனலேசீருடைத்தாய் விளங்காநின்
றேன் (இ-ள்) கிஞ்சிலுமின்றி- அற்பமுமில்லாமல்— கிஞ்சில்வடிவான- அற்பவுருவமுமாயிருக்கின்
ற— இதுவிட்டு- இச்சகத்தைநீக்கி— கிஞ்சிலன்றி- மகத்தான— விஞ்சுமொருவடிவுற்றேன்- சேடித்
தவொப்பற்றஞானஸ்வரூபத்தைப்பெற்றேன்— அதனல்- அதினல்—சீருடைத்தாய்விளங்காநின்றே
ன்- அழகையுடையவளாய்ப்ரகாசிக்கின்றேன்— கிஞ்சிலேகிஞ்சிலென- அணுவுக்கணுவாகியும்— சுபா
வநிலையாய்- ஒருதன்மையாயும்— உதயங்கெடுதியின்றாய்- உற்பத்திநாசமில்லாததாயும்— விஞ்சுவ
தேது- மிஞ்சினதெதுவோ— அதையறிந்தேன்- அதைத்தெரிந்துகொண்டேன்— அதனல்- அதினு
லே— சீருடைத்தாய்- அழகையுடையவளாய்—விளங்காநின்றேன்-ப்ரகாசிக்கின்றேன்—(எ-று.) *

(உஉ)(அ-கை) இ-து (கவி) அருந்தாமற்றூரிதாம்போகங்களருந்தினபோலமைந்தின்புற்று,
வருந்தாமல்விருப்புவெறுப்பிலவதனற்சீருடைத்தாய்வாழாநின்றேன், பெருங்கோபம்பற்றிரண்டுஞ்
சிறுதொழிற்பாங்கியாறிவாம்பெரியபெண்கண், மருங்கேசாத்திரநோக்கிற்களிக்கின்றேனதனற்சீர்வாழ்
வுபெற்றேன் (இ-ள்) தூரிதாம்போகங்கள்- செய்மையாயிருக்கும்போகங்களை— அருந்தாமல்-அ
னுபவியாம (விருந்தும்)— அருந்தினபோல்- அனுபவித்ததுபோல— அமைந்தின்புற்று- பொருந்
திச்சுகத்தையடைந்து— வருந்தாமல்- துன்பப்படாமல்— விருப்புவெறுப்பில- இராகத்துவேடநீங்
கின— அதனல்- அதினல்— சீருடைத்தாய்- அழகையுடையவளாய்— வாழாநின்றேன்- சுகிக்கின்றே
ன்— பெருங்கோபம்பற்றிரண்டும்-பெரிதானவிராகத்துவேடமாகியவிரண்டும்— சிறுதொழிற்பாங்கி
யர்- ஏவற்செயலுள்ளதோழிபாரசவும்— அறிவாம்பெரியபெண்கள்- ஞானமாகியமகாமாதர்கள்—
மருங்கு-பக்கமாய்— சாத்திரநோக்கிற்களிக்கின்றேன்- சாஸ்திரதிருஷ்டியிற்சுகிக்கின்றேன்— அதனு
ல்-அதினல்—சீர்-(தேக)வழகையும்— வாழ்வுபெற்றேன்-(மனமகிழ்ச்சியையு)மடைந்தேன்(எ-று)

(உ௩) (அ-கை) இ-து (கவி) கிஞ்சின்மாத்திரமுருவிலாதவுலகுக்கெல்லாங்கிளர்தேவாகி, யெஞ்
சலிலனென்றென்பா லின்புறுவனதனற்சீரெழில்பெற்றேனன், புஞ்சமுறுமிவையெல்லாம்விட்டன
ன்வேறேபொய்புமெய்புமாகி விஞ்சுமதுமுற்றுமடைந்தேனதனற்சீருடைத்தாய்விளங்காநின்றேன்.
(இ-ள்) கிஞ்சின்மாத்திரம்- அற்பமும்— உருவிலாத- ஸ்வரூபமில்லாத— உலகுக்கெல்லாம்- சகங்க
ளனைத்திற்கும்— கிளர்தேவாகி- சுயம்ப்ரகாசமானதெய்வமாய்— எஞ்சலிலனென்று- பூரணமாயிரு
ப்பவனென்று— என்பாலின்புறுவன்- ஆத்மாவில்ரம்மிப்பேன்— அதனுனன்- அதினல்யான்—
சீரெழில்பெற்றேன்- சிறந்தவழகையடைந்தேன்— புஞ்சமுறும்- திரளான— இவையெல்லாம்விட்
டனன்-இச்சகலத்தையும்விட்டேன்—வேறு-விலக்ஷணமாய்—பொய்யும்-அசத்தும்—மெய்யுமாகி-ச
த்துமாகி—விஞ்சுமது-சேடித்தவதை—முற்றுமடைந்தேன்-பூரணமாகப்பெற்றேன்— அதனல்- அ
தினல்—சீருடைத்தாய்-அழகுடைத்தானவளாய்—விளங்காநின்றேன்-ப்ரகாசிக்கின்றேன் (எ-று) *

(உ௪)(அ-கை)இ-து (கவி)கண்ணுற்பல்கரணத்தாற்கருத்தாலிங்கெதுகாண்கேனதுதான்கிஞ்சி, ன
ண்ணமலதற்பிறிதாய்க்கிஞ்சிலாதொனறுள்ளேநன்றாய்க்காண்கேன், பண்ணுனசீரிதெனச்சூடாலைசொ
ன்னவற்றைப்பற்றிப்பாரா, னெண்ணுமனைத்தவளைச் சிகித்துவசன்வேறொன்றை யியம்பலுற்றான்.
(இ-ள்.) கண்ணல்- நயனங்களினலும்— பல்கரணத்தால்- பலவிந்திரியங்களினலும்— கருத்தால்-மன
தினலும்— இங்கெதுகாண்கேன்- இவ்விடத்தெதைப்பார்ப்பேனே— அதுதான்- அத்திரிப்யத்தை
யே— கிஞ்சினண்ணமல்- அற்பமும்பாராமல்— அதற்பிறிதாய்- அச்சகத்விலக்ஷணமாய்—கிஞ்சிலா
தொன்று- அற்பமாகாதவேகமானசைதன்யத்தை— உள்ளேநன்றாய்க்காண்கேன்- அகத்தின்கண்சுக
மாகப்பார்ப்பேன்— பண்ணுனசீரிதென- உண்டாகியவழகிதுவென்று— சூடாலைசொன்னவற்றை-
சூடாலையானவளுரைத்தவகளை— பற்றிப்பாரான்- ஊன்றிப்பாராதவனுய்— அவளை- அச்சூடாலை
யை— எண்ணுமனைத்து- மதியாமற்சிரித்து— சிகித்துவசன்- சிகித்துவவரசன்— வேறொன்றையிய
ம்பலுற்றான்- மற்றொன்றைச்சொல்லத்தொடங்கினன்— (எ-று) [இ-ரு-க-ம்] பிரமாநந்தமேவடி
வமாய்விளங்குகிறேனென்றுண்மையாயறிவித்தாளென்பதாம். - - - - - - - - *

(உ௫) (அ-கை) தலைவனிடத்துள்ளவன்பினுற்பக்குவமில்லாதகாலத்திற்போதிக்கத்தகாதசுவானுப
வசாக்ஷாத்காரமாகியபா[illegible]தப்போதித்தும அதைசிரவணத்தினு லுண்டான வைராஞானபுத்திரா
ன்கினன் மறுக்கத்தொட[illegible]ற்சேடித்தவஸ்துவானதினுலும, அஃதையறிந்ததுமயமானதி
னுலும் சகசத்தி[illegible]ப்புவெறுப்பின்மையினுலும் வாக்கியார்த்த திருஷ்டியினுலும் சா
க்ஷாத்காரத்திற் [illegible]றதலினுலும், பூரணமானதினுலும் அணுவுக்கணுவானவஸ்து

வைத்தரிசித்ததுவாயிருக்கின்றதினாலும், விளங்குகின்றேனென்கின்றவேழருத்தத்தையும், அரசபோகத்திற்றிகழ்கின்றவர்களாத்மபோகத்திலெங்ஙனந்திகழ்வான்றேகத்தைநீக்கித்தேகியானவன்பின்பெங்ஙனமத்தேசமாய்விளங்குவான், போகத்தைவெறுத்ததரித்திரனெங்ஙனஞ்செல்வத்திற்றிகழ்வான, காண்பவையை நீக்கிக் காண்பவனாயிருப்பவன் வசனத்திலெங்ஙனம் விளங்குவானென்னு நான்குயுத்தியினான்மறுத்தானெனல் (கவி) வஞ்சியிடையாயிசையா ததுசொன்னாய்சிறியார்போன்மருளாநின்றாய்,விஞ்சுதராதிபர்வாழ்வின்மிளிர்கின்றாயுன்னிலேமிளிராநிற்பாய், கிஞ்சிலைவிட்டுக்கிஞ்சிலாதடைந்தோர்முன்னிலையைக்கிட்டாரொன்னிற், பஞ்சிலடியாயவர்தாமுன்னிலையாய்விளங்குவதெப்படியேசொல்வாய் (இ-ள்) வஞ்சியிடையாய்- வஞ்சிக்கொடிபோன்றவிடையையுடையபெண்ணே— இசையாததுசொன்னாய்- தகாதவசனத்தைக்கூறினாய்— சிறியார்போல்- அறிவில்லாதவர்களைப்போல— மருளாநின்றாய்- மயங்குகின்றாய்— விஞ்சுதராதிபர்வாழ்வில்- மேலாகியவரசரதுசெல்வத்தில்— மிளிர்கின்றாய்- விளங்குகின்றநீ— உன்னில்- ஆத்மாவில்— மிளிராநிற்பாய்- எங்ஙனம்விளங்குவாய்— கிஞ்சிலைவிட்டு- அற்பமானசகத்தைவிட்டு— கிஞ்சிலாது- அற்பமல்லாதபூரணவஸ்துவை— அடைந்தோர்- அடைந்தசத்துக்கள்—முன்னிலையை- ப்ரத்தியக்ஷமானசகத்தை—கிட்டாரொன்னில்- சேரார்களாயின்— பஞ்சிலடியாய்- பஞ்சிலு(மிருதுவான)பாதங்களையுடையவளே—அவர்தாம்- அந்தச்சத்துக்கள்—முன்னிலையாய்விளங்குவது- ப்ரத்தியக்ஷமாகப்ரகாசிப்பது—எப்படிசொல்வாய்- எங்ஙனங்கூறுவாய்(எ-று)

(௨௬) (அ-கை) இ-து (கவி)அருந்தலுறாப்போகத்தாலகமகிழ்ந்தேனென்றதனையகற்றுகிற்பார், பொருந்துமிடியினர்போனிற்பாக்கியராமவரெங்ஙன்பொலிவார்சொல்வாய், திருந்துறக்காண்பவைகாணேம்வேறேகாண்குதுமென்றுசெப்புகிற்பார், இருந்துரைக்குமிவ்வுரையைவிடாமலவர்விளங்குவதெப்படியேசொல்வாய், (இ-ள்) அருந்தலுறாப்போகத்தால்- அனுபவியாதபோகத்தினால்— அகமகிழ்ந்தேனென்று- யானுமகிழ்ச்சியானேனென்று—அதனையகற்றுகிற்பார்- அப்போகதனைநீக்குபவர்கள்— பொருந்துமிடியினர்போல்- பொருந்தியதரித்திரரைப்போல— நிற்பாக்கியராமவர்- அபாக்கியவான்கள்— எங்ஙன்பொலிவார்சொல்வாய்- எப்படிவிளங்குவார்கள்சொல்லக்கடவாய்— திருந்துற- செவ்வையாக— காண்பவைகாணேம்- சகத்தைப்பார்க்கிலேம்—வேறேகாண்குதும்- வேறேயாத்மாவைப்பார்ப்போம்—என்றுசெப்புகிற்பார்- என்றுசொல்லுபவர்கள்—இருந்துரைக்கும்- இருந்துசொல்லப்பட்ட—இவ்வுரையைவிடாமல்- இந்தவசனத்தைத்தவிராமல்—அவர்விளங்குவதெப்படி- அவர்கள்ப்ரகாசிப்பதெவ்வண்ணம்— சொல்வாய்- கூறுவாய்(எ-று) [இ-உ-க-ம்] சூடாலைகூறியவேழருத்தத்துக்கும்பகுத்துச்சொல்லும்விவேகமின்றிநான்கினைக்கிச்சொன்னாராயினுமவற்றின்மூன்றிற்கோருத்தியும்-இரண்டுக்கோருத்தியும்-மற்றிரண்டுக்குமிரண்டுத்தியுமாயமைத்துக்கொள்ளவேண்டுமென்பதாம்

(௨௭) (அ-கை) சுவானுபவத்தையிங்ஙனமிழத்தலுச்கிரங்கியிவனுக்கிவ்விதார்த்தத்தையற்புதங்களோடுமறிவிக்குநிமித்தமணிமாதிசித்திபை யடையத்தொடங்கியாதனங்கட்டல். (கவி) ஆதலாற்பேதைப்பாயறிவிலியாயலைபவளாய நேகஞ்சொல்லாற், போதநீகளிக்கின்றாயென வெடிக்கநகைத்தயலேபோனான்மன்னன், மாதராளதற்கிரங்கிதன்னறிவிலிளைப்பாறிமகிழானாகிப்,பேதமாயென்னுரையைமன்னனறிந்திலனென்றுபேசுற்றாளே (இ-ள்) ஆதலால்- ஆதலினால்— பேதையாய்- பேதமையுடையவளாயும்— அறிவிலியாய்- அறிவில்லாதவளாயும்— அலைபவளாய்- சஞ்சலமுள்ளவளாயும்— அநேகஞ்சொல்லால்- பலவசனங்களினாலும்— போதநீகளிக்கின்றாயென- மிகவுஞ்சந்தோஷிக்கின்றாயென்றுசொல்லி—வெடிக்கநகைத்து- வெளிப்படச்சிரித்து— மன்னன்- அரசனானவன்— அயலேபோனான்- வேறோரிடத்திற்சென்றான்— மாதராள்- சூடாலையானவள்— அதற்கிரங்கி- அவ்வறியாமைக்கிரக்கமுற்று—தன்னறிவிலிளைப்பாறி- ஆத்மஞானத்தில்விச்ராந்தியடைந்து—மகிழானாகி- சுகியாதவளாய்— பேதமாய்- வேற்றுமையாக— என்னுரையை- எனதுவாக்கியத்தை— மன்னனறிந்திலனென்று- அரசனறியவில்லையென்று— பேசுற்றாள்- சொன்னாள்— (எ-று) - - - - - - - - *

(௨௮) (அ-கை) (இ-து.) (கவி) பின்னருமன்னனுந்தானுந்தலைநாட்போற்பேதமறப்பெருநாள்வாழ்ந்தார், துன்னுமமைவாயாசையொன்றுமிலாதிருந்துஞ்சூடாலைதானே, யுன்னியுயராகாசந்தனினடக்கவியற்றுதுமென்றுறுபோகங்க, ளின்னலறவனைத்தையும் விட்டேகாந்தச் சுகாசனத்திலிருக்கையெய்தி (இ-ள்.) பின்னரும்-பின்பும்— மன்னனுந்தானும்- இராசாவுஞ்சூடாலையும்— தலைநாட்போல்- முற்காலம்போல— பேதமற- வேற்றுமையில்லாமல்— பெருநாள்வாழ்ந்தார்- வெகுகாலஞ்சுகித்தார்கள்— துன்னுமமைவாய்- மிகுந்தவமைதியையுடையவளாய்—ஆசை- அவாவானது— ஒன்றுமிலாதிருந்தும்- சற்றுமில்லாதிருந்தும்— சூடாலை- சூடாலையானவள்—தானேயுன்னி- சுயமாகநினைத்து—உயராகாசந்தனினடக்க- மேலானவாகாயகமனஞ்செய்ய—இயற்றுதுமென்று- செய்வோமென்று—உறுபோகங்கள்- மிகுந்தபோகங்களின்— இன்னலற- துன்பநீங்க— அனைத்தையும்விட்டு- சகலத்தையுநீங்கி—ஏகாந்தம்- ஏகாந்தஸ்தானத்தில்— சுகாசனத்தில்- சுகாசனத்தினில்—இருக்கையெய்தி- இருந்து— (எ-று)[இ-ங-க-ம்-]நாயகனைமுன்னிட்டுபரவிச்சாபிராரத்தத்தினான்யோகமவந்தடுத்ததென்பதாம் *

(௨௯) (அ-கை) ஆகாயகமனமுதலியசித்திகள்வருமார்க்கமியாதெனவினவுதல் (கவி) பெரியபிராணனைநேரோமேலேனுக்கப்பழகினாள்பெருநாளென்ன, கரியமுகில்கேட்டருளிமிகவருந்திநெடுங்காலங்கையாண்டக்கா, லரியவிசும்பினினடத்தனமுதலானசித்திமெலாமளிக்கத்தக்க, வுரியவழியெதுசொல்வாயெனக்கேட்பவசிட்டமுனியுரைப்பதானான (இ-ள்) பெரியபிராணனை- பெரிதானபிராணவாயுவை— நேரோமேலேனுக்க- நேரோபேனாகரும்படியாக— பெருநாள்- வெகுநாள்— பழகினாளென்ன- அப்பியாசித்தாளென்றுவசிட்டமுனிசொல்ல— கரியமுகில்கேட்டருளி- கரியமேகவண்ணனாஞ்ஸ்ரீராமன்கேட்டு— மிகவருந்தி- மிகவுமவருத்தப்பட்டு—நெடுங்காலம்- வெகுகாலம்—கையாண்டக்கால்-

அற்பியாசஞ்செய்தல்— அரியவிசும்பினிடைத்தல்- அரிதானவாகாயகமனஞ்செய்தல்— முதலான
சித்தியெலாம்- முதலாகியசித்திகளனைத்தையும்— அளிக்கத்தக்க- கொடுக்கத்தகுந்த— உரியவழியே
து- உரித்தானமார்க்கமியாது— சொல்வாயெனக்கேட்ப- அருள்வாயென்றுகேட்க— வசிட்டமுனிபு
ஙைப்பதானன்- வசிட்டமுனிசொல்லத்தொடங்கினர்— (எ-று) - - - - - - - - - - ✻

(௩௰) (அ-கை) பிராணயாமத்தாற்சித்திகளுண்டாகுமற்பியாசங்களையறிவிக்கத்தொடங்கல் (கவி)
சீமானுஞ்சிகித்துவசன்கதைக்கிடையேவினவுதலாற்செப்புகின்றேன், கோமானேபிராணதிபவனத்தி
ன்பரிசயத்தின்கொள்கையாகிச், சாமாறில்லாப்பயன்செய் நெறிகேட்பாய்வாதனைகள் சற்றுமின்றிப்,
போமாறுசெய்துளத்திலிதற்கடுத்தவாதனையேயொருந்திநின்று (இ-ள்) சீமானும்- செல்வனுகிய—
சிகித்துவசன்- சிகித்துவராசன்— கதைக்கிடை- கதைக்குமத்தியில்— வினவுதலால்- (யோகங்) கேட்
கின்றபடியால்— செப்புகின்றேன்- (அதைச்) சொல்லுகின்றேன்— கோமானே- இராசாவே— பிரா
ணதிபவனத்தின்- பிராணன்முதலியவாயுவின்—பரிசயத்தின்- பழக்கத்தினது—கொள்கையாகி- குண
மாகி— சாமாறிலாப்பயன்செய்- மரியாதப்ரயோசனத்தைக்கொடுக்கின்ற—நெறிகேட்பாய்- மார்க்கத்
தைக்கேட்கக்கடவாய்—சற்றும்வாதனைகளின்றி- எவ்வளவும்வாசனைகளில்லாமல்—போமாறுசெய்து-
நீங்கும்படிசெய்து— உளத்தில்- மனதினிடத்தில்— இதற்கடுத்தவாதனையே- இச்சாதனத்துக்குத்தகு
ந்தவாசனையே— பொருந்திநின்று- அடைந்திருந்து— (எ-று) - - - - - - - - - ✻

(௩௧) (அ-கை) இ-து. (கவி) குதமுதலாந்துவாரத்தின்சிறுமையாற்றானமுதற்குறிக்குஞ்செய்
கை, விதவொழுங்காற்போசனத்தாற்சுகாதனத்தாற்சுத்தத்தான்மிக்கநன்னூ, லுதவுபொருட்பாவனை
யாலதனுசாரத்தினுலுயர்ந்தோர்சார்வா, லதனையொழிந்தனவெல்லாம்விடுத்தலாலடுத்த பிராணயாமத்
தால். (இ-ள்) குதமுதலாம்- குதமுதலாகிய— துவாரத்தின்- இரந்தரங்களினது— சிறுமைபால்- சு
ருக்கத்தினுலும்— தானமுதல்- (மகாமுத்திரையான) தானமுதலாக—குறிக்குஞ்செய்கை- குறிக்கின்
றதொழில்களின்— விதவொழுங்கால்- விதமானமுறைமையினுலும்— போசனத்தால்- உணவினுலு
ம்— சுகாசனத்தால்- சுகாசனத்தினுலும்—சுத்தத்தால்- பரிசுத்தத்தினுலும்— மிக்கநன்னூல்- மிகுந்தந
ன்மையுள்ள (யோக)சாஸ்திரங்களினுலும்— உதவுபொருட்பாவனையால்- உதவாநின்றவருத்தசிந்தையி
னுலும்— அதனுசாரத்தினல்- அதனடையினுலும்—உயர்ந்தோர்சார்வால்- மேலானசத்துக்களின்சார்பி
னுலும்—அதனையொழிந்தனவெல்லாம்- அதொழியமற்றச்சகலத்தையும்— விடுத்தலால்- நீக்குதலாலு
ம்— அடுத்தபிராணயாமத்தால்- சேர்ந்தபிராணயாமத்தினுலும்— (எ-று) குதாதிதுவாரநிரோதத்து
க்குக்காரணங்கள்மூலபந்தனுதிகள்அவைகளின்மூலபந்தனமென்றதுகுதிகாலினுல்யோனியைப்பிடித்
துக்குதத்தைச்சுருக்கி அபானவாயுவைமேலேயாகரஷணஞ்செய்தல்தானமுதலென்றது தசவிதமுத்தி
ரைபோசனமென்றதுஅற்தாசாரமுணல் சுகாசனமென்றது அந்தந்தயோகத்துக்குத்தகுந்த வாசனங்
கட்டல்பிராணயாமமென்றது ரேசகபூரககும்பகஞ்செய்தல். - - - - - - - - - ✻

(௩௨) (அ-கை) (இ-து) (கவி) கோவலோபாதியும்போகம்விடுத்தலாற்சிலர்க்குக்குறித்தநாளி,
லோவிலாப்பற்றுவிடொழிந்தநாட்கைவசமாயுயிர்கடாமே, தேவரூபிகளாதலாற் றங்கள்குணமறிந்து
சேர்ந்துளோருக்,கேவலாட்போலுலகையாள்விக்கும்வீடளிக்குமெல்லாநல்கும் (இ-ள்) கோவலோபா
தியும்- குரோதலோபமுதலியவைகளையும்— போகம்- போகங்களையும்— விடுத்தலால்- நீக்குதலினு
லும்— சிலர்க்குக்குறித்தநாளில்- சிலபேர்களுக்குக்குறித்தகாலத்தில்— ஓவிலாப்பற்றுவிடு- ஒழியாதப
ற்றுதலும்விடுதலும்— ஒழிந்தநாள்- நீங்கியகாலத்தில்—கைவசமாய்- கைவசமாக— உயிர்கடாம்- பிரா
ணன்களானவை—தேவரூபிகளாதலால்- தேவவடிவமாகின்றபடியால்— தங்கள்குணமறிந்துசேர்ந்து
ளோர்க்கு- அந்தவாயுக்களின்றன்மையுணர்ந்தடைந்தவர்களுக்கு—ஏவலாட்போலுலகையாள்விக்கும்-
பரிசனங்களைப்போலச்சகத்தையாளும்படிசெய்யும்—வீடளிக்கும்- மோக்ஷத்தைக்கொடுக்கும்— எல்
லாநல்கும்- சகல(சித்தியை)யுங்கொடுக்கும்(எ-று) [இ-௩-க-ம்] இச்சாதனத்துக்கிதரமானவாசனைகளனை
த்தையுந்தள்ளிக் குதத்துவாரஞ்சிறுசன்முதலியசாதனங்களினுற்பிராணன்கைவசமானுலதையறிந்தபுரு
டனுக்கப்பிராணதிவாயுவுக ளேவலாளைப்போலச் சகமுதலியவற்றைச்சுவாதீனமாக்குமென்பதாம் ✻

(௩௩) (அ-கை) ஆந்தரவேஷ்டனியினிலக்கணமுரைத்தல் (கவி) ஆந்திரவேட்டனிகையென்றோர்
தனிநாடிநாடிகணூறணுகிநிற்கும் வாய்ந்தவிசைவீணையுடல்வட்டம்போனீர்ச்சுழிபோல் வட்டமேயா,
மேய்ந்துளதானங்களெலாமெய்தலுறுமயனிடத்துமெறும்பின்பாலும், போந்துளபல்லுயிரிடத்துமு
டற்றோறுந்தோன்றியேபொருந்திநிற்கும். (இ-ள்) ஆந்திரவேட்டனிகையென்று- ஆந்திரவேட்டனிகை
யென்னுநாமத்தையுடைய— ஓர்தனிநாடி- ஒப்பற்றவொருநாடியானது— நாடிகணூறு- நூறுநாடிக
ளி(னடுவே)—அணுகிநிற்கும்- பொருந்தியிருக்கும— வாய்ந்தவிசை- பொருந்தியவிராகத்தையுடை
ய—வீணையுடல்- வீணையினங்கத்திலுள்ள—வட்டம்போல்- விற்தத்தைப்போலவும் —நீர்ச்சுழிபோல்- நீ
ர்ச்சுழியைப்போலவும்— வட்டமேயாம்- விற்தமேயாகும்— எய்ந்துள- பொருந்திய— தானங்களெ
லாம்- இடங்களனைத்தும்—எய்தலுறும்- அடையும— அயனிடத்தும்- பிரமாவினிடத்தும்— எறும்பின்
பாலும்- பிபிலீகத்தினிடத்தும்—போந்துளபல்லுயிரிடத்தும்- உண்டானசகலசீவர்களிடத்துமுள்ள—
உடற்றோறும்- சரீரங்கடோறும்—தோன்றியேபொருந்திநிற்கும்- உண்டாகியடைந்திருக்கும் (எ-று)

(௩௪) (அ-கை) குண்டலிசத்தியினிலக்கணங்கூறல் (கவி) சீதவருத்தத்தினுற்றுயில்பாம்பினுடல்
போற்சிக்கெனவளைந்தெய், போதுமடைசவறுங்காற்றானிலைநிற்குஞ்சத்தியின்மெனபூப்போலுள்ளுமே
தகமெல்லியதாகுமதனூடேயொருசத்திவிசுத்தமாகி, யேதமறுபாமமாய்ச் சத்திகட்கெல்லாம்வெற்றி
யெய்தநல்கும். (இ-ள்) சீதவருத்தத்தினுல்- குளிர்ச்சியின்வருத்தத்தினுல்— துயில்- நித்திரைசெய்கி
ன்ற— பாமபினுடல்போல்- அரவினங்கத்தைப்போல— சிக்கெனவளைந்து- செட்டியாகவளைந்து—

எப்போதும்-சதாகாலமும்—அசைவறும்- அசைவற்ற— காற்றுனிலை நிற்கும்-(ஆந்திரவேட்டனிகை யானது) பிராணவாயுவினுனிலையாயிருக்கும்—கதலியின்மென்பூப்போல்- வாழையினதுமிருதுவான மலரைப்போல— உள்ளும்- அகத்திலும்—மேதக- மேன்மையாக— மெல்லியதாகும்- மிருதுவான தாகும்—— அதனூடு- அவ்வாந்தரவேட்டனிகையினிடத்தில்— ஒருசத்தி- ஒரு(குண்டலி)சத்தியானது— விசுத்தமாகி- பரிசுத்தமாய்— ஏதமறுபரமமாய்- குற்றமற்றமேலானதாய்— சத்திகட்கெல்லாம்-சத்திகளனைத்திற்கும்—வெற்றியெய்தநல்கும்-சயத்தையடையக்கொடுக்கும்—(எ-று) - - *

(௩௫) (அ-கை) இ-து. (கவி) முனிவுறுபெண்பாம்புபோன்மூச்செறியுமெப்போதுமுகமேலாகு, மனிசமசைவுக்கேதுவாமிதயகோசத்தையடைந்தநாடி, யெனையவுமிக்கிதனிடையேகட்டுண்ணுங் குண்டலினியிதன்பேராகுந், துனைதலுறவசைகின்றபரிசவறிவின்கலையாற்சுத்தமாகும் (இ-ள்) முனிவுறுபெண்பாம்புபோல்- கோபமிகுந்தபெண்சற்பத்தைப்போல—மூச்செறியும்-பெருமூச்சுவிடும்— எப்போதும்- சதாகாலமும்— முகமேலாகும்- வதனமேலாயிருக்கும்— அனிசம்- எப்போதும்— அசைவுக்கேதுவாம்-சலனத்துக்குக்காரணமாகும்—இதயகோசத்தை-மனப்பெட்டியை—அடைந்த- சேர்ந்திருக்கின்ற—நாடியேனையவும்- நாடிகளியாவும்—இதனிடை- இக்(குண்டலிசத்தியி)னிடத்தில்—கட்டுண்ணும்-பந்தப்படும்—இதன்பேர் இதனதுநாமம்—குண்டலினியாகும்- குண்டலினிசத்தியாம்— துனைதலுறவசைகின்றபரிசம்-நெருக்கமாகவியங்குகின்றபரிசமான—அறிவின்கலையாற்சுத்தமாகும்-ஞானத்தினதுகலையினுற்பரிசுத்தமாகும்—(எ-று) [இ-௩-க-ம்] சதநாடியின்மத்தியின்விளங்கியவாந்தரவேஷ்டினியினியல்பையுமதனிடமாகவிளங்கினகுண்டலிசத்தியினியல்பையுந்தெரிவித்ததாம்.

(௩௬) (அ-கை) இக்குண்டலிசத்தியின்பாவனையேகலைகண்முதலியவாய்ப்புரியட்டகசரீரமாமெனல் (கவி) சிந்தனையாற்கலையாகுஞ்சேதனத்தாற்சித்தாகுஞ்சீவனத்தாற், சந்தமுறுசீவனுமனனத்தான் மனமாகுஞ்சங்கற்பத்தா,லந்தமில்சங்கற்பமாம்போதத்தாற்புந்தியாமகங்காரத்தால், வந்தவகங்காரமாமினையபுரியட்டகப்பேர்மருவுந்தானே (இ-ள்) சிந்தனையாற்கலையாகும்-(அக்குண்டலிசத்தியானது) சிந்தனையினுற்கலையாகும்— சேதனத்தாற்சித்தாகும்- ஞானத்தாஞ்ஞானமாம்— சீவனத்தால்- சீவனத்தினுல்— சந்தமுறுசீவனும்- அழகுபொருநதியசீவனுகும— மனனத்தால்- மனனத்தினுல்— மனமாகும்- மனமாகும்— சங்கற்பத்தால்-சங்கற்பத்தினுல்— அந்தமில்சங்கற்பமாம்- அளவற்றசங்கற்பமாகும்— போதத்தால்-(நச்சய)வறிவினுல்— புந்தியாம்- புத்தியாகும்— அகங்காரத்தால்- அகம்பாவத்தால்— வந்தவகங்காரமாம்- வரப்பட்டவகங்காரமாகும்— இனைய- இப்படிப்பட்ட—புரியட்டகப்பேர்மருவும்- புரியட்டகமென்னுநாமத்தைப் பொருநதும்—(எ-று) - - - *

(௩௭) (அ-கை) குண்டலினிசத்தியேபிராணுபானரூபமாய்ச் சீவனுக்குச்சநநமாணத்தைக்கொடுக்குமெனல் (கவி) குண்டலினியெனுஞ்சீவசத்திமிகநல்லதாய்க்கூடி நிற்குமண்டுபிராணுபானவடிவமாதலிற்கீழ்மேல்வந்துபோகு,மிண்டறமேற்போகிலுமெல்லாமாய்ப்போமீளினுமெல்லாமாய்மீளுந், தண்டலிலாப்புமானுகிச்சாமேவும்பிராணனுமச்சத்திதானே (இ-ள்) குண்டலினியெனும்- குண்டலினியென்கின்ற— சீவசத்தி- சீவசத்தியானது— மிகநல்லதாய்- மிகவுநன்மையதாக— கூடிநிற்கும்-(தேகத்திற்)புணர்ந்திருக்கும்— மண்டு- நெருங்கிய— பிராணுபானவடிவமாதலில்- பிராணவபானவுருவமாதலினுல்— கீழ்மேல்- கீழிலுமேலிலும்— வந்துபோகும்-வருதலும்போதலுமாகும்—மிண்டற- உறுதியில்லாமல்— எல்லாமாய்- சமஸ்தமுமாய்— மேற்போகிலும்போம்- உளர்த்தமுகத்திற்சென்றுலுஞ்செல்லும்— எல்லாமாய்- சகலமுமாய்— மீளினுமீளும்-(அதோமுகத்திற்)றிரும்பினுலுந்திரும்பும்— தண்டலிலா- தடையில்லாமல்— புமானுகி- சீவனுய்— சாமேவும்- மரணத்தையடைகின்ற—பிராணனும்- பிராணவாயுவும்—அச்சத்திதான்- அந்தக்குண்டலிசத்தியேயாம்—(எ-று)

(௩௮) (அ-கை) அக்குண்டலினிசத்தி பிராணசலனமின்றியசைவற நிற்கிற் சராமரணவியாதியுண்டாகாவெனல் (கவி) தன்னிடத்தேயெப்படியும் போக்குவரத்தொழித்திந்தச்சத்திநிற்கின், மன்னுயிர்க்குநோய்வாராதுள்ளுறவேமாருதத்தைமறுத்தலாலே, யென்னுமேயாதிவியாதிகளிரண்டுந்தோன்றுதலுமிறத்தலுனு, நின்னருளாலுரையென்னவிராகவன்கேட்டலும்வசிட்டனிகழ்த்தலுற்றுன். (இ-ள்)தன்னிடத்து-தனதிடத்தில்—எப்படியும்-எவ்விதத்திலும்—போக்குவரத்தொழித்து-செல்லுதின்மீள்தலைக்கெடுத்து— இந்தச்சத்திநிற்கின்- இக்குண்டலிசத்திநின்றுல்— உள்ளுற-அகத்திற்சேர—மாருதத்தைமறுத்தலால்-(பிராண)வாயுவைத்தடுத்தலினுல்—மன்னுயிர்க்கு- நிலைபெற்றசீவர்களுக்கு—நோய்வாரா-வியாதிவரமாட்டாது—என்னலும்-என்றுசொல்லவும்—ஆதிவியாதிகள்- ஆதியும்வியாதிகளுமாகிய—இரண்டுந்தோன்றுதலும்-இரண்டுமுண்டாகுதலையும்—இறத்தலுனும்-நசித்தலையும்—நின்னருளாலுரையென்ன- உமதுகிருபையினுற்சொல்லவேண்டுமென்று—இராகவன்கேட்டலும்-ஸ்ரீராமன்கேட்டவளவில்— வசிட்டனிகழ்த்தலுற்றுன்- வசிட்டமுனிசொல்லத்தொடங்கினுர்—(எ-று)[இ-௩-க-ம்.] குண்டலினிசத்தியினசைவேபவநோயுமஃதின்மையேயவந்நோய்நிவிர்த்தியுமென்பதாம *

(௩௯) (அ-கை.) ஆதிவியாதியினுற்பத்திலயமியாதென்றவினுவுக்குத்தரங்கூறல். (கவி) அங்கத்தின்வருத்தத்தைநோயென்பர்வாதனையையாதியென்பர்,பங்கற்றஞானலயத்தேநாபிமூலத்தேயயிலுமாதி, பொங்குற்றஞானமிலாமையிற்பொறிகடமையடக்கப்போகாவாற்றுற் றங்குற்றவிதயத்திற்சிறுமையறமாலகோட்டந்தழைத்தலாலே. (இ-ள்) அங்கத்தின்வருத்தத்தை- சரீரத்தினதுதுன்பத்தை—நோயென்பர்- வியாதியெனபார்கள்— வாதனையை-(அநதக்கரண)வாசனையை— ஆதியென்பர்-ஆதியென்றுசொல்லுவார்கள்— பங்கற்றஞானலயத்து- பேதமுள்ளவஞ்ஞானத்தினுல்— நாபிமூலத்து-உந்தியினதுமூலத்தில்—ஆதியயிலும்- ஆதியானதுண்டாயிருக்கும— பொங்குற்ற-உயர்வுள்ள—ஞானமிலாமையில்- ஞானமில்லாமையினுலும்— பொறிகடமை- இந்திரியங்களை— அடக்கப்போகாவா

ற்றால்- அடக்கப்படாதபடியினாலும்— தங்குற்றவிதயத்தில்- தங்காநின்றமனதில்—சிறுமையற- விஸ்தாரமாய்— மால்- ஆசையும்— கோபம்- அகங்காரமும்— தழைத்தலால்- வளர்தலினாலும்—(எ-று.)

(சய) (அ-கை) இ-து (கவி) இதுபெற்றோமீதில்லையென்னுமவதானத்தாலிறுகுமோக, மதுமெத்தவுண்டாகமழைநாளிற்செறிபனிபோலாதிதுன்னு, முதிர்ச்சைவெளியாகிமூர்க்கபாவனைசாலமுற்றும்போதில், விதியுற்றதொழிலன்றித்தீத்தொழில்கள்செய்தலினால்வியாதியுண்டாம் (இ-ள்.) இதுபெற்றோம்-இதையடைந்தோம்—ஈதில்லையென்னும்- இ(தடைய)வில்லையென்கின்ற—அவதானத்தால்- அவதானத்தினால்— மோகமிறுகும்- மோகங்கெட்டிப்படும்—அதுமெத்தவுண்டாக-(அம்மோக)மிகவுமுண்டாக—மழைநாளில்-வருடகாலத்தில்—செறிபனிபோல்- மிகுந்தபனியைப்போல— ஆதிதுன்னும்- ஆதியானது நெருங்கும்— முதிர்ச்சைவெளியாகி- மிகுந்தவாசையானது வெளிப்பட்டு—மூர்க்கபாவனை- மூடபாவனையானது— சாலமுற்றும்போதில்- மிகவுமுதிருங்காலத்தில்— விதியுற்றதொழிலன்றி- நியமித்தவிபகாரத்தையல்லாமல்—தீத்தொழில்கள்-கொடியவிபகாரங்களை— செய்தலினால்- செய்கின்றதினால்—வியாதியுண்டாம்-(சரீர)வியாதியுண்டாகும்— (எ-று) [இ-உ-க-ம்] வாசனாரூபமானவாதியுந்தேசவருத்தமானவியாதியுமதனிலக்கணமுமஃதினுற்பத்தியுங்கூறினதாம் - - *

(சக) (அ-கை) வியாதியுண்டாகுதலின்காரணமுரைத்தல் (கவி) பொல்லாதவுணவினாற்பொல்லாததேசத்திற்போகைதன்னால், பொல்லாதகாலவிவகாரத்தாற்செய்தொழில்கள் புரிபொல்லாப்பாற், பொல்லாதசயவருறுகூட்டத்தாற்பொல்லாதபொருளெண்ணத்தாற், பொல்லாதவிச்சையாற்பொல்லாததெண்ணிக்கைபொருந்தறன்னால் (இ-ள்) பொல்லாதவுணவினால்- துற்புசிப்பினானும்— பொல்லாததேசத்திற்போகைதன்னால்- கொடியதேயங்களிற்சஞ்சரித்தலினானும்— பொல்லாதகாலவிவகாரத்தால்- துற்காலவிவகாரங்களானும்— செய்தொழில்கள்- செய்கின்றகிருத்தியங்களின்—புரிபொல்லாப்பால்- கட்டுப்படும்பொல்லாங்குகளினானும்—பொல்லாதசயவருறுகூட்டத்தால்- துற்சனசங்கத்தினானும்—பொல்லாதபொருளெண்ணத்தால்- கொடியவஸ்துவைநினைத்தலானும்—பொல்லாதவிச்சையால்- துராசையினானும்—பொல்லாதவெண்ணிக்கைபொருந்தறன்னால்- துர்நினைப்படைதலினானும்(எ-று)

(சஉ) (அ-கை) (இ-து) (கவி) நாடிகளில்வெளிகணுக்கள்சிறுகுதலாற்பெருகுதலானற்பிராண, னோடிமிகச்சிதறலுமேயுடறானுஞ்சிதறுதலையுறமுற்றச்சால், கேடிதெனமுன்னுரைத்தகுற்றங்கள்காரணமாய்க்கிளர்நோயுண்டா,நீடியகோடையுமழையுநதிக்குறைவுநிறைவுகளைநேருமாபோல் (இ-ள்) நாடிகளில்- நாடிகளிடத்தில்—கணுக்கள்வெளி- கணுக்களினதுரந்தரங்கள்— சிறுகுதலாற்பெருகுதலால்- சிறுத்தல்பெருத்தலினானும்— நற்பிராணன்- நல்லபிராணவாயுவானது— ஓடிமிகச்சிதறலும்- ஓடிமிகவுஞ்சின்னாபின்னமாகவும்— உடறானுஞ்சிதறுதலையுறும்- தேகமுஞ்சிதறுதலைப்படையும்— உற்றச்சால்- (அதை)யடைந்தால்—கேடிதென- கேடிதுவென்னும்படி— முன்னுரைத்தகுற்றங்கள்- முன்சொல்லப்பட்டகுற்றங்களானவை— காரணமாய்- மூலமாக— நீடியகோடையுமழையும்-நீண்டவேனிற்காலத்திலும்வருடகாலத்தினாலும்— நதி- ஆற்றுநீர்— குறைவுநிறைவுகளை- குறைவையுநிறைவையும்—நேருமாபோல்- பேறுகின்றதுபோல—கிளர்நோயுண்டாம்- தேகத்தின்மிகுந்தவியாதியுண்டாகும்— (எ-று) [இ-உ-க-ம்-] செயற்கைத்தொழிலேவியாதியுதிப்பதற்குக்காரணமென்பதாம் *

(சங) (அ-கை) ஆதிவியாதியுண்டாகும்ஸ்தானமுரைத்தல் (கவி) தொல்லைபதாகினுமிங்குள்ளனவெனினுஞ்சுபமெனினுமசுபமேனு, மெல்லையறமிகுந்ததேதததுதன்பாலப்படியேயிழுத்துக்கொள்ளும்,புல்லுறவிவ்வகையாகியாதிவியாதிகளைந்துபூதத்துண்டாஞ்’ சொல்லியவிவ்வாதிகடானிருவகையாயிறக்குநெறிசொல்லக்கேட்பாய் (இ-ள்)தொல்லையதாகினும்-பழைய(சநநத்திலுள்ள)தானாலும்—இங்குள்ளனவெனினும்-இச்(சநநத்திலுள்ள)தானாலும—சுபமெனினும- சுபமானாலும்— அசுபமேனும்- அசுபமானாலும்— எல்லையற- அளவின்றி— மிகுந்ததேது மிகுந்த(வாசனை)யெதுவோ— அதுதன்பால்- அதுதன்னிடத்தில்— அப்படியேயிழுத்துக்கொள்ளும்- அவ்வண்ணமேகிரகித்துக்கொள்ளும்— புல்லுற- பொருந்தும்படியாக— இவ்வகையாகி- இவ்வண்ணமாய்— ஆதிவியாதிகள்- ஆதிகளும்வியாதிகளும்— ஐந்துபூதத்துண்டாம்- பஞ்சபூதத்திலுண்டாகும்— சொல்லியவிவ்வாதிகடான்- சொல்லப்பட்டவிந்தவாதிகளானவை— இருவகையாய்- இரண்டுவிதமாய்—இறக்குநெறி- நசிக்கின்றகிரமத்தை—சொல்லக்கேட்பாய்-(ஸ்ரீராமா நீயான்)சொல்லக்கேட்கக்கடவாய்(எ-று) [இ-ம] பஞ்சதன்மாத்திரையிலாதியும்பஞ்சபூதத்தில்வியாதியுமுண்டானதையறிவித்தாதிகளிரண்டுவிதமாய்நசிப்பதைச்சொல்வதாம் *

(சச)(அ-கை) ஆதியானதுசாமானியஞ்சாரமெனவிரண்டாமவற்றிற்சாமானியவாதிகெடுகின்றமார்க்கமுரைத்தல் (கவி) மேவியசாமானியமுஞ்சாரமுமென்றிருவகையாமாதியென்பர், தாவுறுசாமானியந்தானுடற்பிணியாஞ்சாரந்தான்சநநமாகுங், கேவலமிவ்வுடற்பிணிதான்றனக்கடுத்தபொருட்பேற்றாற்கெட்டுப்போகும் பாவனையாமாதிகளில்லாதாகிற்றோன்றுபிணியறந்துபோமே (இ-ள்)மேவிய- பொருந்திய— சாமானியமும்- சாமானியமென்றும்—சாரமுமென்று- சாரமென்றும்— ஆதி- ஆதியானது— இருவகையாமென்பர்- இரண்டுவிதமாமென்றுசொல்லுவார்கள்— தாவுறு- தாவாநின்ற— சாமானியந்தான்- சாமானியமானது— உடற்பிணியாம்- சரீரத்திலுள்ளவியாதியாம்— சாரந்தான்- சாரமானது—சநநமாகும்- பிறப்பாகும்—கேவலமிவ்வுடல்-முழுதுமிச்சரீரத்திலுள்ள—பிணிதான்- வியாதியானது— தனக்கடுத்தபொருட்பேற்றால்- தனக்குரியவஸ்துவையடைந்தால்— கெட்டுப்போகும- நாசமடையும—பாவனையாம்-பாவனையான—ஆதிகளில்லாதாகில்- ஆதிகளில்லாவிடின்—தோன்றுபிணியறந்துபோம்- உண்டாகும்வியாதியானது நீங்கிப்போகும்— (எ-று) - - - - *

(சரு) (அ-கை) சாரவாதிநசிக்கின்றமார்க்கமுமாதியிலுண்டாகாதவியாதியிறக்குமார்க்கமுங்கூறுதல். (கவி) சாரமெனுமபிறவிநோய்தத்துவஞானத்தன்றச்சற்றும்போகா,தீரவிதுகயறென்னும்போ

தத்தாலன்றியாரச்சிதைவதுண்டோ, பாரமுறுமாதியிற்றோன்றாப்பிணிமந்திரமருந்து பலநூல்கற்ற,கூரறிவின்மருத்துவரொன்றிவ்வகையாற்போமிதுநாங்கூறவேண்டா (இ-ள்) சாரமெனும்பிறவிநோய்- சாரமென்கின்றசநநவியாதியானது— தத்துவஞானத்தன்றி- ஆத்மஞானத்தினாலல்லாமல்— சற்றும்போகா-எவ்வளவுநீங்காது—தீர-திரும்படி—இதுகயறென்னும்-இதுபழுதையென்கிற—போதத்தாலன்றி- அறிவினாலல்லாமல்— அராச்சிதைவதுண்டோ- சற்பஞ்செமிவதுண்டோ— பாரமுறும்- சுமைமிருந்த—ஆதியிற்றோன்றாப்பிணி- ஆதியிலுண்டாகாத(சரீர)வியாதியானது—மந்திரம்-மந்திரத்தினாலும்—மருந்து- அவிடதத்தினாலும்—பலநூல்கற்ற- அநேகவயித்தியசாஸ்திரங்களை யற்பியாசித்த—கூரறிவின்-மிகுந்தவறிவினையுடைய—மருத்துவரொன்று-வயித்தியரொன்றுரைத்த— இவ்வகையாற்போம்-இத்தன்மையாற்கெடும்—இதுநாங்கூறவேண்டா-இதையாஞ்சொல்லவேண்டுவதில்லை(எ-று) [இ-உ-க-ம்]அபிமதவஸ்துலபிதத்தாற்சாமானியவாதியும்-ஆத்மஞானத்தாற்சாரவாதியுமணிமந்திரவவிஷதங்களினலாதியிலுதியாமலசனுதிக்கிரமவிரோதங்களினாலுண்டானவியாதிகளுநசிக்குமென்பதாம்※

(௪௬) (அ-கை) ஆதியிலெங்ஙனம்வியாதியுற்பத்திலயமாயிற்றென்கின்றவினாவிரண்டிற்கதனுற்பத்தியைச்கூறல் (கவி) என்றலுமேயாதியினின்றெவ்வகையுண்டாம்பிணிமற்றெவையான்மாளுங், குன்றனையாயுரையென்னவிராமன்கேட்டலும்வசிட்டன்கூறுகிற்பா,னின்றமனங்கலங்குதலுமுடல்கலங்குமுடல்கலங்கினேர்வந்துற்ற,தொன்றுமறியாமனேர்வழிவிலங்கித்தீவழியிலோடாநிற்கும் (இ-ள்)என்றலும்- இப்படியென்றுசொல்லிய வளவில்— ஆதியினின்று- ஆதியிலிருந்து— பிணி-வியாதியானது—எவ்வகையுண்டாம்-எப்படியுண்டாகும்—மற்றெவையான்மாளும்-பின்பெதினாற்கெடும்—குன்றனையாயுரையென்ன-மலைக்கொப்பானவரேநீசொல்வாயென்று—இராமன்கேட்டலும்- ஸ்ரீராமன்கேட்டமாத்திரத்தில்—வசிட்டன்கூறுகிற்பான்-வசிட்டமுனிசொல்லுவார்— நின்றமனம்- நிலையாயிருந்தமனது—கலங்குதலும்-கலங்கவும்—உடல்கலங்கும்-சரீரங்கலங்கும்—உடல்கலங்கின்-சரீரங்கலங்கினால்—நேர்வந்துற்ற-எதிரேவந்துபொருந்திய—ஒன்றுமறியாமல்- ஒன்றையுந்தெரியாமல்— நேர்வழிவிலங்கி-நேரானமார்க்கம்விட்டு—தீவழியிலோடாநிற்கும்-தீயமார்க்கத்திற்(பிராண)னோடும்(எ-று)※

(௪௭) (அ-கை.) இ-து (கவி) பிறையம்புபடுமான்போன்முறிந்தோடுங்கலக்கத்தாற்பிராணவாயு, நிறைகின்றசமமின்றிப் பரந்தோடுநாடிகளுநிலையினில்லா, வறைகின்றசீரணமாயசீரணமாயதிசீரணமாகியன்ன, முறைகின்றவுடலுக்குக்கூற்றமானாடியுயிருலைவினாலே (இ-ள்) பிறையம்பு- அர்த்தசந்திரபாணமானது— படுமான்போல்- தைக்கின்றமிருகத்தைப்போல—முறிந்தோடும்- வழிதப்பியோடும்— கலக்கத்தால்-கலக்கத்தினால்—பிராணவாயுநிறைகின்ற-பிராணவாயுநிறைந்திருக்கின்ற—சமமின்றிப்பரந்தோடும்- சமமில்லாமற்பரந்துசெல்லும்—நாடிகளுநிலையினில்லாது-நாடிகளுநிலையினிற்கமாட்டாது—அறைகின்றசீரணமாய்-சொல்லாநின்றசீரணமாகியும்— அசீரணமாய்- அசீரணமாகியும்—அதிசீரணமாகி-மிகுந்தசீரணமாகியும்—அன்னம்-அசனமானது—உறைகின்றவுடலுக்கு-தங்குகின்றசரீரத்துக்கு—நாடியுயிருலைவினால்-நாடிகள்பிராணன்களுடையசலனத்தினால்—கூற்றமாம்-நமனாகும்(எ-று)

(௪௮) (அ-கை) இ-து.(கவி) உடலுள்ளேவிரோதத்தாலுறைகின்றவன்னம்வேற்றுருவமாகி, விடலுறுநோயாகுமவ்வகையாலாதியினால்வியாதியுண்டாந், தொடர்வுறுவாதிநசித்திடுமாகில்வியாதிகளுந்துஞ்சிப்போகுங், கடவதாமந்திரத்தால்வியாதிகணீங்கிடுநெறியைக்கழறக்கேட்பாய் (இ-ள்) உடலுள்-சரீரத்தினுள்— விரோதத்தால்- விரோதத்தினால்— உறைகின்றவன்னம்- தரிக்கின்ற வன்னமானது—வேற்றுருவமாகி- வேறுவடிவமாய்— விடலுறுநோயாகும்- தீராதவியாதியாகும்— அவ்வகையால்-அத்தன்மையால்—ஆதியினால்வியாதியுண்டாம்- ஆதியினால்வியாதிபுறக்கும்— தொடர்வுறு-தொடர்பில்லாமல்— ஆதிநசித்திடுமாகில்- ஆதியானதுகெடுமானால்—வியாதிகளுந்துஞ்சிப்போகும்- நோய்களுநாசமடையும்— கடவதாமந்திரத்தால்- உச்சரிப்பதானமந்திரத்தினால்— வியாதிகணீங்கிடுநெறியை-நோய்கணீங்காநின்றமார்க்கத்தை— கழறக்கேட்பாய்- சொல்லக்கேட்பாய்— (எ-று)[இ-ரு-க-ம்-] ஆதியில்வியாதிமனக்கலக்கத்தினாலுண்டானகிரமமறிவித்ததாம் - - - - - - - - - - - - - ※

(௪௯) (அ-கை.) வியாதியினாசங்கூறல் (கவி) எப்படியேகடுக்காய்கள்விரேசனத்தைப்பண்ணுகின்றதியல்பினாலே, யப்படியேபாவனையால்யரலவவாதிகள்காரியங்களாக்கு,மெய்ப்படிபுண்ணியமாகிச்சுத்தமாங்கிரியையான்மேலோர்சார்வாற், றப்பின்மனந்தெளிவெய்தும்புடம்வைத்தவானன்றாந்தமனியம்போல் (இ-ள்) எப்படி- எவ்விதத்தில்— கடுக்காய்கள்-கடுக்காய்களானவை—இயல்பினால்-சுபாவத்தினால்— விரேசனத்தைப்பண்ணுகின்றது- மலவிமோசனத்தைச்செய்கின்றதோ— அப்படியே-அவ்வண்ணமே— யரலவவாதிகள்- யரலவமுதலியமந்திராக்ஷரங்களின்—பாவனையால்- பாவனையினால்—காரியங்களாக்கும்-(ஆரோக்கிய)காரியங்களைச்செய்யும்—மெய்ப்படிபுண்ணியமாகி-மெய்யாகியபுண்ணியமாய்— சுத்தமாங்கிரியையால்-பரிசுத்தமாகியதொழிலினாலும்—மேலோர்சார்வால்- சத்துக்களின்சார்பினாலும்— புடம்வைத்தலால்- (பொன்னைப்) புடம்வைத்தலினால்—நன்றாந்தமனியம்போல்-நல்லதங்கமானதுபோல—தப்பின்மனந்தெளிவெய்தும்-தவறில்லாமன்மனதுபரிசுத்தமடையும்(எ-று)※

(௫௰) (அ-கை.) இ-து. (கவி) சுத்தமுறமனந்தெளியிலுடலிலேயாநந்தந்தோன்றாநிற்கு,மெத்துமதியுதித்தக்காலுலகமெலாநன்றாகவிளங்கிடாதோ, சத்துவமாமனந்தெளியிற்பிராணவாயுமொழுங்கிற்சரித்துலாவு, முய்ந்துளவன்னமுநெறியிற்சீரணிக்குமதனானேயொன்றுந்தோன்றா (இ-ள்)சுத்தமுறமனந்தெளியில்- பரிசுத்தமாகமனதுதெளிந்தால்— உடலில்- சரீரத்தில்—ஆநந்தந்தோன்றாநிற்கும்- ஆநந்தந்தோன்றும்— மெத்து- மெதுவான—மதியுதித்தக்கால்- மிருதுவானபூரணசந்திரனுதயமானால்— உலகமெலாம்- சகங்களனைத்தும்— நன்றாகவிளங்கிடாதோ- நன்மையாகப்ரகாசிக்கமாட்டாதோ— சத்துவமாமனந்தெளியில்-சாத்துவிகத்தையுடையமனதுதெளிந்தால்—பிராணவாயுவும்-

பிராணவாயுவுக்களும்— ஒழுங்கிற்சரித்துலாவும்- கிரமமாகச்சஞ்சரிக்கும்—உய்த்துள வன்னமும்- புசி
த்தபோனகமும்— நெறியிற்சீரணிக்கும்- கிரமமாகச்சீரணத்தையடையும்-- அதனால்- அதனாலே—
நோயொன்றுந்தோன்றா- வியாதியொன்றுமுண்டாகாது— (எ-று) [இ-உ-க-ம்]வியாதிகண்மன ந்
தெளிந்தா நந்தமடைதலினசிக்குங்கிரமமறிவித்ததாம். - - - - - - - - - - ※

(ருச) (அ-கை) குண்டலினி சத்திக்குஞ்சீவனுக்குமபேதங்கூறல். (கவி) ஆதிவியாதிகளிரண்டுந்
தோன்றியொடுங்கிடுநெறிகளறைந்தோமன்றே, ஓதியகுண்டலினிதனதொழுங்கான் முன்னுனைப்
புற்றயோகங்கேளாய், தீதில்புரியட்டகமென்றொருபெயர்கொள்சீவனுக்குத்திகழ்பிராண, வாதமெனு
ம்பெயர்பெற்றகுண்டலினிமணத்துக்குமலர்போனிற்கும். (இ-ள்.)ஆதிவியாதிகளிரண்டும்- ஆதிவியா
திகளானவிரண்டும்— தோன்றியொடுங்கிடும்- உண்டாகிநசிக்கின்ற—நெறிகள்-மார்க்கங்களை —அறை
ந்தோம்-சொன்னோம்—ஓதிய-முன்சொல்லப்பட்ட —குண்டலினிதனது- குண்டலிசத்தியினது—ஒ
ழுங்கால்-கிரமத்தினால்—முன்னுனைப்புற்ற-முன்சொல்லிய—யோகங்கேளாய்-யோகத்தைக்கேட்பா
ய்—தீதில்புரியட்டகமென்று-குற்றமற்றபுரியட்டகமென்று—ஒருபெயர்கொள்சீவனுக்கு-ஒருநாமத்
தைத்தரித்தசீவனுக்கு— திகழ்பிராணவாதமெனும்- விளங்கியபிராணவாயுவென்கின்ற— பெயர்பெற்
ற- நாமத்தைத்தரித்த— குண்டலினி- குண்டலிசத்தியானது— மணத்துக்கு-வாசனைக்(கிடமாகிய)—
மலர்போல்-புட்பத்தைப்போல—நிற்கும்-இருக்கும்— (எ-று) - - - - - - - - ※

(ருஉ) (அ-கை) குண்டலினிசத்தியினற்பியாசித்தினாலுண்டான சித்திகளுன்கையறிவிக்கத்தொட
ங்கி கிரிமாவுமாகாயகமனமுமாகியவிரண்டின்சித்திமார்க்கங்கூறல். (கவி.) புகல்வுறுகுண்டலிதன்னை
ப்பூரகத்தின்பரிசயத்தாற்பூர்ணமாக்கித், திகழ்வுறநின்றாலன்று வடமேருநிகரான திண்மையுண்டாம்,
மிகவுடலந்தடிப்பெய்தும்பூரகத்தாற்பிராணனிறைவுற்றமெய்யைப், பகரறிவுமேனாக்கியொருக்கா
லேவிண்செல்லப்படரவிக்கும் (இ-ள்) புகல்வுறு- சொல்லப்பட்ட— குண்டலிதன்னை- குண்டலிச
த்தியை— பூரகத்தின்பரிசயத்தால்- பூரகப்பழக்கத்தினால்— பூர்ணமாக்கி- பூரணஞ்செய்து— திகழ்வு
றநின்றால்- ப்ரகாசிக்கும்படிநின்றால்— அன்று- அப்பொழுது— வடமேருநிகரான- மகாமேருவு
க்கொப்பாகிய— திண்மையுண்டாம்- வலிமையுண்டாகும்—மிகவுடலந்தடிப்பெய்தும்.. மிகவுஞ்சரீர
ம்பருக்கும்— பூரகத்தால்- பூரகத்தினால்—பிராணனிறைவுற்றமெய்யை- பிராணனிறைந்திருக்கின்றசரீ
ரத்தை—பகரறிவுமேனாக்கின்-சொல்கின்றவறிவானதுமேனாக்கினால்— ஒருக்காலே-ஒருபோதே—
விண்செல்லப்படரவிக்கும்- ஆகாயசமனஞ்செய்விக்கும்— (எ-று) - - - - - - - - ※

(ருங) (அ-கை) இ-து (கவி) பாம்புபோல்விரைந்துதடிபோனிமிர்ந்துகுண்டலினிபடர்ந்துமே
ற்போந்,தாம்புபோலுடல்பிணித்தநரம்பெல்லாந்தான்கவர்ந்துசரீரமெல்லாந், தேம்புறுவகைமேலே
யெழுப்பிவிக்குங்காற்றினாற்செறிந்தபைதான், றாம்புசூழ்நீரிடையேயமுழ்த்துகினுமேற்கிளப்புந்தொ
டர்ச்சிபோல. (இ-ள்) பாம்புபோல்விரைந்து-சற்பத்தைப்போலவேகமாய்— தடிபோனிமிர்ந்து- த
ண்டைப்போலுயர்ந்து—குண்டலினி- குண்டலிசத்தியானது—படர்ந்துமேற்போம்-விரிந்துமேலே
செல்லும்— தாம்புபோல்- கயற்றைப்போல—உடல்பிணித்த- சரீரத்தைக்கட்டிய— நரம்பெல்லாம்-
நாடிகளனைத்தும்—தான்கவர்ந்து-தான்கிரகித்து—சரீரமெல்லாம்-தேகமியாவும்—தேம்புறுவகை-இ
ளையாதவண்ணம்—காற்றினாற்செறிந்தபைதான் -வாயுவினானிறைந்ததோற்பையானது—தாம்புசூழ்நீரி
டையமுழ்த்துகினும்-மடைசூழ்ந்தசலத்தின் மத்தியிலமிழ்த்தினாலும்— மேற்கிளப்புந்தொடர்ச்சிபோ
ல்-மேலேயெழுப்புகின்றதொடர்புபோல—மேலெழுப்பிவிக்கும்-மேலேகிளப்பிவிக்கும்(எ-று) ※

(ருச) (அ-கை) (இ-து) (கவி)இத்திறனேமிகப்பழகுமியோகத்தாலியோகிகடாமெழுந்துவிண்
மேற், கொத்திகவர்தூண்டில்சேர்மீன்போலவுலாவுவர்குண்டலினியென்னுஞ், சத்தியதுபிரமநாடியி
லோடிக்கபாலத்தின்றனிப்புறம்போ, யுத்துளமேலேவிரலோர்பன்னிரண்டினெல்லையினிலுறுவதாகி.
(இ-ள்) இத்திறனே- இந்தப்ரகாரமே— மிகப்பழகும்- மிகவுமற்பியாசிக்கின்ற— இயோகத்தால்-இ
யோகத்தினால்— இயோகிகடாம்- யோகியரானவர்கள்— விண்மேலெழுந்து- ஆகாயத்திலெழும்பி—
கொத்திகவர்-கொத்திக்கிரகிக்கின்ற—தூண்டில்சேர்மீன்போல- தூண்டிலிலடைந்தமச்சத்தைப்போ
ல—உலாவுவர்- சஞ்சரிப்பார்கள்— குண்டலினியென்னுஞ்சத்தியது- குண்டலினியென்கின்றசத்தியா
னது— பிரமநாடியிலோடி- சுழிமுனைக்குட்சென்று— கபாலத்தின்-பிரமாந்தரத்தின்—தனிப்புறம்
போய்-மேலாகப்புறப்பட்டு—உத்துள- பொருந்தியிருக்கின்ற—மேல்விரலோர்பன்னிரண்டின்-மே
லொருபன்னிரண்டங்குலத்தினது—எல்லையினிலுறுவதாகி- அளவிலடைவதாகி— (எ-று) - - - ※

(ருரு) (அ-கை )சித்ததரிசனசித்திமார்க்கங்கூறல் (கவி) நாடிகளெல்லாந்தகையுமிரேசகத்தாலொ
ருமுகுர்த்தநண்ணிநிற்கி, னீடியவிண்சரிப்பவரைக்காணலாம்விஞ்ஞானநேர்மையாலே, யூடுறதாரத்
தோடும்புந்திவிழியால்விண்ணிலூன்றத்தோன்றும், பீடுறுநற்பொருளுதவுஞ்சித்தர்கணங்களுவிலே
பிறங்குமாபோல். (இ-ள்) நாடிகளெல்லாம்- நாடிகளனைத்தையும்— தகையுமிரேசகத்தால்- தடுக்கி
ன்றவிரேசகத்தினால்— ஒருமுகுர்த்தம்- இரண்டுநாழிகை—நண்ணிநிற்கின்- அடைந்திருந்தால்— நீடி
யவிண்சரிப்பவரை- நீண்டவாகாயகமனஞ்செய்பவர்களை— காணலாம்- தரிசிக்கலாம—விஞ்ஞானநே
ர்மையால்- ஞான நுட்பத்தினால்—ஊடுற- பொருந்த—அதாரத்தோடும்-சமீபத்திற்செல்லுகின்ற—
புந்திவிழியால-ஞான திருஷ்டியினால்—விண்ணிற்பீடுறுநற்பொருளுதவும்- ஆகாயத்திற்பெருமையுள்
ள(வணிமாமுதலிய)நல்லவஸ்துக்களைக்கொடுக்கின்ற— சித்தர்கணங்களுவிற்பிறங்குமாபோல் -சித்தர்கு
ழாங்கள்சொற்பனத்திற்றோற்றுவதுபோல—ஊன்றத்தோன்றும்- நலமாகத்தோற்றும்—(எ-று) ※

(ருசு) (அ-கை) பரகாயப்ரவேசசித்திமார்க்கங்கூறல். (கவி) பனனிரண்டங்குலத்தின்முகத்தின்பு
றம்போயிரேசகத்தினபழக்கத்தாலே,மன்னுயிர்தானெடிதுநிலைநிற்குமேல்வேற்றுடலைமருவுமென்ன,

சொன்னமுனிவனை வள்ளல்சூக்கவழிசெல்கைக்குந் தூலமாய்விண், டன்னை நிறைகைக்குமணுத்துவந் தூலத்துவமுடற்குத்தருமாறெங்ஙன் (இ-ள்) பன்னிரண்டங்குலத்தின்- பன்னிரண்டுவிரலளவு— முகத்தின்புறம்போய்- வதனத்தின்முன்புசென்று— இரேசகத்தின்- இரேசகத்தினுடைய—பழக்கத்தால்- அற்பியாசத்தினால்—மன்னுயிர்தான்- நிலைபெற்றபிராணனானது—நெடிது நிலைநிற்குமேல்- வெகுகாலநிலையாயிருக்குமாயின்— வேற்றுடலைமருவுமென்னசொன்னமுனிவனை- பரகாயப்பிரவேசஞ்செய்யுமென்றுரைத்தவசிட்டமுனியை— வள்ளல்- ஸ்ரீராமர்— சூக்கவழிசெல்கைக்கும்- சூட்சுமமார்க்கத்திற்போவதற்கும்—தூலமாய்விண்டன்னை நிறைகைக்கும்-பருமனைகவாகாயத்தை நிறைவதற்கும்—உடற்கு- சரீரத்துக்கு—அணுத்துவம்- அணுத்துவமும்—தூலத்துவம்- மகத்துவமும்—தருமாறெங்ஙன்- கொடுக்கும்வண்ணமெப்படி— (எ-று) [இ-௬-௧-ம்] நான்குசித்தியுண்டாகுங்கிரமமறிவித்ததாம் ⁂

(௫௭) (அ-கை) இச்சித்திகளையடையத்தேகத்துக்குச்சூக்குமத்துவமுந் தூலத்துவமுமெங்ஙனமுண்டாயிற்றென்னும்வினாவுக்குத்தரங்கூறல் (கவி) அருள்வாயென்றலுமுனிவனுரைசெய்வானேகமாயற்வொன்றேயா, யொருவாதசமமாகிச்சாந்தமாய்ச்சுத்தமாயொருபற்றல்லாப், பொருளாய் நுண்மையின்மிகவு நுண்மையாய்ப்புவியன்றாய்ப்புவிசேராதாய், மருவா நின்றுளததுதான்சங்கற்பமுறத்தனைத்தான்வகையாய்ச்செய்யும், (இ-ள்) அருள்வாயென்றலும்- கிருபைசெய்வாயென்றிராமர்கேட்கவும்—முனிவனுரைசெய்வான்- வசிட்டமுனிசொல்லுவார்— ஏகமாய்- ஒன்றாகியும்— அறிவொன்றேயாய் சின்மாத்திரமாகியும்— ஒருவாதசமமாகி- நீங்காதசமத்துவமாகியும்—சுத்தமாய்- பரிசுத்தமாகியும்—சாந்தமாய்- உபசாந்தமாகியும்— ஒருபற்றில்லாப்பொருளாய்- ஒருசம்பந்தமுமில்லாதவஸ்துவாகியும்— நுண்மையில்- சூட்சுமத்தில்— மிகவு நுண்மையாய்- மிகவுஞ்சூட்சுமமாகியும்— புவியன்றாய்- சகமல்லாததாகியும்— புவிசேராதாய்- சகத்தைச்சேராததாகியும்— மருவா நின்றுளது- பொருந்தியிருக்கின்றது(ஒன்றுண்டு)— அதுதான்- அதுவே—சங்கற்பமுற- சங்கற்பத்தையடைய—தனைத்தான்- தன்னைத்தானே— வகையாய்ச்செய்யும்- பிரிவாகச்செய்யும் (எ-று) - - - - - - - - ⁂

(௫அ) (அ-கை) இ-து (கவி) பலவுஞ்சூழ்வுறச்சீவனும்பொய்யேசங்கற்பம்பயின்மயக்காற், கலங்குஞ்சீவன் சடமாயிவ்வுடல்காணும்பாலர்காணும்பேய்போற், குலவும்பலவுயிர்களுமிவ்வகையேயெப்படியெத்தைக்குறிக்கின்றார்க, ளுலகின்கணப்படியேயதைக்காண்பார் நினைவின்சணாற்றத்தாலே. (இ-ள்.) பலவுஞ்சூழ்வுற- அநேகமான (கலக்கஞ்) சூழ்ந்தபோது—சீவனும்- சீவனாகும்—சங்கற்பம்- சங்கற்பமென்று—பயின்மயக்கால்-சொல்லப்பட்டபிரமையினால்—கலங்குஞ்சீவன்- கலங்கப்பட்டசீவனானவன்—சடமாய்- மூடமாய்—பாலர்காணும்- குழந்தைகள்பார்க்கப்பட்ட— பேய்போல்-பசாசைப்போல—இவ்வுடல்காணும்- (மித்தையாகிய)விந்தச்சரீரத்தைப்பார்க்கும்— குலவும்பலவுயிர்களும்-பொருந்தியவநேகசீவர்களும்—இவ்வகையே- இப்படியே—எப்படியெத்தைக்குறிக்கின்றார்கள்- எவ்வனமெதைக்கருதுகின்றார்களோ—அப்படியேயுலகின்கண்- அந்தப்ரகாரமேசகத்தில்— நினைவின்சணாற்றத்தால்-மனதின்கண்ணுள்ளதிடத்தினால்— அதைக்காண்பார்- அதைப்பார்ப்பார்கள் (எ-று) ⁂

(௫௯) (அ-கை) இ-து (கவி) ஊற்றமுறுபாவனையின்பரிசயத்தான்மூடர்களுமொன்றையொன்றான், மாற்றிவிடமமுதாக்கியமுதத்தை நஞ்சாக்கிமருவா நிற்ப, ரேற்றமுறுஞ்சத்தியபாவனையாலேவித்தேகந்தேகமான, தோற்றியவித்தேகமீண்டசத்தியபாவனையால்விண்சுரூபமாய்ப்போம். (இ-ள்.) ஊற்றமுறுபாவனையின்- திடமானபாவனையினது— பரிசயத்தால்- அற்பியாசத்தினால்— மூடர்களும்- அறிவில்லாதவர்களும்— ஒன்றையொன்றான்மாற்றி- ஒன்றையொன்றினாற்கெடுத்து— விடமமுதாக்கி- விடத்தையமுதமாக்கி—அமுதத்தை நஞ்சாக்கி- அமுதத்தைவிடமாக்கி—மருவா நிற்பர்-பொருந்தியிருப்பார்கள்— ஏற்றமுறும்- மேன்மைபொருந்திய— சத்தியபாவனையால்- மெய்ப்பாவனையால்— இத்தேகந்தேகமான- இவ்வுடலானதுதூலமாயிற்று— தோற்றியவித்தேகம்- தோற்றப்பட்டவிச்சரீரமானது—மீண்டு- திரும்பவும்—அசத்தியபாவனையால்- மித்தையென்னும்பாவனையினால்—விண்சுரூபமாய்ப்போம்- சூட்சுமரூபமாம்— (எ-று) [இ-௩-௪-ம்] அகோசரமானசைதன்யம்பாவனையாற்சித்துஞ்சகத்துமாவதுபோல,சீவனணுத்துவபாவனையாற்சூக்குமத்துவமு,மகத்துவபாவனையாற்றூலத்துவமுமவனதுபாவனாவடிவமானதேகத்துக்குவருமென்பதாம். - - - - - - - - ⁂

(௬௰) (அ-கை) இவ்வணிமாதியஷ்டசித்திகளையுஞ்சூடாலைபெற்றுவிளங்குதல். (கவி) அணிமாதிகுணப்பேற்றின் பாவனையூகங்களுமிவ்வடைவேயாகுந், துணிவாலேயோகத்தின்சித்தியறிவார்க்கிதுதானசுலபமாகுங், குணியானவணிமாதிகுணச்செல்வமிகப்பழகுங் குறிப்பாற்பெற்று, மணியாழியுலகெல்லாங்கணத்தில்விளையாடினண்மறுவிலாதாள். (இ-ள்) அணிமாதி- அணிமாமுதலிய (அஷ்டசித்தியினது)— குணப்பேற்றின்-தன்மையையடைவதின்— பாவனையூகங்களும்- பாவனையாலுண்டானயுத்திகளும்— இவ்வடைவேயாகும்- இந்தமார்க்கமேயாகும்— துணிவால்- தெளிவினால்—யோகத்தின்சித்தி- யோகத்தினதுசித்தியை— அறிவார்க்கு- தெரியவர்களுக்கு— இதுதான்சுலபமாகும்- ஈதெளிதாகும்— குணியான-காரணமாகிய—அணிமாதி- அணிமாமுதலிய—குணச்செல்வம்- குணசம்பத்தை—மிகப்பழகுங்குறிப்பாற்பெற்று- மிகவுமற்பியாசிக்கின்றகருத்தினாலடைந்து— மணியாழி- இரத்தினங்களையுடையசமுத்திரஞ்சூழ்ந்த— உலகெலாம்- சகங்களனைத்திலும்— கணத்தில்-க்ஷணநேரத்தில்— மறுவிலாதாள்- களங்கமற்றசூடாலையானவள்— விளையாடினாள்- லீலைசெய்தாள்—(எ-று) [இ-ம்] கணவனையுட்விக்குநிமித்தம்சித்திகளைப்பெற்றாளென்பதாம் அணிமாதியஷ்டசித்தியாவன, அணிமா, மகிமா, கிமா, லகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவமெனபனவாம் - - - - ⁂

(௬௧) (அ-௯க.) நாநாவிதவுபாயங்களாற்போதித்துமறிவுண்டாகாமையாலஃதை நிறுத்தல் (கவி) நாயகனையெமைப்போதுநீங்காதானல்லமுதாஞானந்தன்னை, யாயவனுக்கநேக வுபாயத்தினாலறிவித்து

மனையமன்னன், றாயறிவிலிளைப்பாறப்பெற்றிலன்மாயோகினியாஞ்சூடாலைக்கு, மேயகுணங்களுமறி
ந்தானில்லைப்பாலகர்விஞ்சைமேவாதாப்போல். (இ-ள்) நாயகனை- தலைவனை— இமைப்போதுநீங்
காதாள்- நொடிநேரமும்பிரியாதவள்—நல்லமுதாஞானந்தன்னை- அநந்தாமுதமாகியஞானத்தை—
ஆயவவனுக்கு- சிறந்ததனதுபுருடனுக்கு— அநேசவுபாயத்தினல்- பலதந்திரங்களினல்—அறிவித்து
ம்- தெரிவித்தும்— அனையமன்னன்- அந்தவரசனனவன்— தாயறிவில்- பரிசுத்தஞானத்தில்— இளை
ப்பாறப்பெற்றிலன்- விஸ்ராந்தியையடைந்திலன்— மாயோகினியாம்- மகாயோகினியாகிய— சூடா
லைக்குமேயகுணங்களும்- சூடாலைக்குப்பொருந்தியகுணங்களையும்— பாலகர்- குழந்தைகள்—விஞ்
சைமேவாதாப்போல்- கல்வியையறியாததுபோல— அறிந்தானில்லை- தெரிந்திலன்—(எ-று) - *

(சூஉ) (அ-கை) இ-து (கவி) தன்னறிவிலிளைப்பாறலிலாமையாலவனுக்குத்தனதுயோக, நன்னிதி
யையுரைத்திலளாற்சூத்திரர்க்குயாகநெறிநவில்வாருண்டோ, வென்னவுமேமகத்தானசித்தயோகினிவ
ருந்தியியம்பவேயு, மன்னசிகித்துவசனறிவுற்றிலனுற் பிறரெங்ஙனறிவாரையா (இ-ள்.) தன்னறிவில்- தி
னதாத்மஞானத்தில்— இளைப்பாறலிலாமையால்- விஸ்ராந்தியடையாததினல்—அவனுக்கு- அந்தப்பு
ருடனுக்கு— தனதுயோகநன்னிதியை- தனதுநல்லஞானசம்பத்தை—உரைத்திலள்- சொற்றிலள்—
சூத்திரர்க்கு- சதுத்தர்களுக்கு— யாகநெறிநவில்வாருண்டோ- யாகமார்க்கத்தைச் சொல்லுவாருமுளரோ—
என்னவும்- என்றுவசிட்டமுனிசொன்னவளவில்— மகத்தானசித்தயோகினி- மகாசித்திகளையு
டையசூடாலையானவள்— வருந்தியியம்பவேயும்- வருந்திச்சொல்லவும்—அன்னசிகித்துவசன்- அந்த
ச்சிகித்துவசனனவன்— அறிவுற்றிலனல்- ஞானத்தையடைந்திலனுதலால்—ஐயா- ஆசாரியரோ— பிற
ரெங்ஙனறிவார்- மற்றவர்களெப்படிதெரிந்துகொள்ளுவார்கள்—(எ-று) [இ-உ-க-ம்] பக்குவமின்
றியகாலத்தெவ்விதத்திலுண்மையைப்போதிக்கினுமஃதுதிபாதென்பதாம் - - - - - - *

(சூங)(அ-கை.)வல்லமையுள்ளவாசிரியர்போதித்துமுதியாதவறிவுமேலெங்ஙனமுண்டாமெனிலா
சிரியவாக்கியத்தினம்பிக்கையுள்ளசீடனறிவேகாரணமாகவுண்டாகுமெனல் (கவி) ஒல்லும்வகையுரையெ
ன்னவிராகவன்கேட்டலும்வசிட்டனுத்தரிப்பா, னல்லவுபதேசந்தானம்பிக்கைமாத்திரத்தைநன்ருய்ச்
செய்த, வெல்லையிலாவறிவுக்குச்சுத்தமாமசனறிவேயேதுவென்று, சொல்லுதலுமீண்டந்தமுனிதனக்கு
ரகுநாதன்சொல்லுகிற்பான். (இ-ள்) ஒல்லும்வகையுரையென்ன- அடையும்வகையைச்சொல்லுமெ
ன்று— இராகவன்கேட்டலும்- ஸ்ரீராமன்கேட்கவும்— வசிட்டனுத்தரிப்பான்- வசிட்டமுனியுத்தரஞ்
சொல்லுவார்— நல்லவுபதேசந்தான்-பிரமோபதேசமானது— நம்பிக்கைமாத்திரத்தை- நம்புதன்மா
த்திரம்— நன்ருய்ச்செய்தல்-நன்மையாகச்செய்வதாம்—எல்லையிலாவறிவுக்கு- அறிதற்கரியவாத்மஞா
னத்துக்கு— சுத்தமாமசனறிவே- பரிசுத்தமானசீடனறிவே— ஏதுவென்று- காரணமாகுமென்று—
சொல்லுதலும்- சொல்லியவளவில்— மீண்டு- திரும்பவும்— அந்தமுனிதனக்கு- அந்தவசிட்டமுனிக்
கு—ரகுநாதன்சொல்லுகிற்பான்-ஸ்ரீராமன்சொல்லுவார்— (எ-று)- - - - - - - - - - *

(சூச) (அ-கை) சீடனறிவேயேதுவென்ருலாசிரியவசனமேதுவன்ரேவெனிலஃதேயேதுவென்
பதற்கோரிதியாசமுரைத்தல் (கவி) மகனறிவேயேதுவெனிற்குருவசனமேதுவாய்வருவதெங்ஙன், மி
குமறிவுக்கெனக்கேட்பவசிட்டனதற்குரைசெய்வான்விந்தவெற்பி, னகல்வனத்திலொருவேடன்பெரு
ங்குடும்பியவனெருநாளடவிதன்னிற் புகுநெறியிற்பலசறையொன்றினைக்கெடுத்துத்தேடினன்புலம்
பலோடும் (இ-ள்) மகனறிவேயேதுவெனில்- சீடனறிவேகாரணமானல்— குருவசனமேதுவாய்- ஆ
சாரியவசனங்காரணமாக— மிகுமறிவுக்கு- மேலானவாத்மஞானத்துக்கு— வருவதெங்ஙன்- வருவ
தெப்படி— எனக்கேட்ப- என்றிராமன்கேட்க—வசிட்டன்- வசிட்டமுனியானவர்— அதற்குரைசெ
ய்வான்- அதற்குச்சொல்லுவார்— விந்தவெற்பினகல்வனத்தில்- விந்தமலைபின்மகாரணியத்தில்—ஒரு
வேடன்பெருங்குடும்பி- ஒருவேடன்பெரியசம்சாரி—அவனெருநாளடவிதன்னில்- அவ்வேடனெரு
தினம்(புல்லுசணிறைந்த)காட்டில்—புகுநெறியிற்பலகறையொன்றினைக்கெடுத்து- நடக்கினறமார்க்க
த்திலோர்பலகறையைப்போட்டுவிட்டு—புலம்பலோடுந்தேடினன்- அழுகையுடன்றேடினன்(எ-று)

(சூரு) (அ-கை.) இ-து (கவி) மூன்றுநாடேடியபின் முழுமதிநேர்மணியொன்றுமுன்னேகண்
டா, னென்றுபலசறைதேடவேழுலகும்பெறுமணியையெதிர்ந்தான்வேடன் ஞான்றவுபதேசத்தாற்க
ல்வியான்ஞானமுறுமதுவேபோல, வூன்றுறவொன்றைக்கருதவொன்றுவெளிப்படுங்குருவினுபதே
சத்தால். (இ-ள்) மூன்றுநாடேடியபின்- மூன்றுதினந்தேடினபின்பு— முழுமதிநேர்மணியொன்
று— பூர்ணசந்திரனையொத்தவொருவிரத்தினத்தை—முன்னேகண்டான்- எதிரேகண்டான்— என்று
பலகறைதேட- எக்கமுற்றுபலசறையைத்தேட —ஏழுலகும்பெறுமணியை- சத்தவுலகமும்விலைபெ
றத்தகுந்தவிரத்தினத்தை— வேடனெதிர்ந்தான்- வேடுவனேபெற்றான்— அதுபோல்- அதைப்
போல— ஞான்றவுபதேசத்தால்- (பக்குவ) காலத்திற்செய்யும்பிரமவுபதேசத்தினலும்— கல்வியால்-
(வேதாந்தசாஸ்திர)ஞானத்தினலும்—ஞானமுறும்- அறிவுண்டாம்—குருவினுபதேசத்தால்- ஆசாரிய
ருபதேசத்தினல்—ஊன்றுறவொன்றைக்கருத- திரமாகவொன்றைநினைக்க— ஒன்றுவெளிப்படும்- ம
ற்றென்றுதயமாம்— (எ-று) (ப-ம்) குருவாக்கியப்படிதுரியவடிவைச்சிந்திக்கச்சிந்திக்கவச்சிந்தி
னமிறந்துசிந்தனுதீதமான துரியாதீதம்வெளிப்படுமென்பார், ஒன்றைக்கருதவொன்றுவெளிப்படுங்
குருவினுபதேசத்தாலென்றூர். [இ-ங-க-ம்] குருவாக்கியங் காரணமாகச்சீடன்முயற்சிக்கின்ஞானமு
திககுமாசலின துவேகாரணமாமென்பதாம் - - - - - - - - *

(சூசு) (அ-கை) சீடனறிவுமுயற்சிக்குமாசிரியர்வாக்கதன்பயனுக்குமேதுவெனக்கூறிச்சூடாலையி
ன்கூட்டரவால்நித்திடவ்வேசந் தோற்றிற்றெனல். (கவி) நலனுறுபேரறிவுக்குக்குருவசனங்காரணத்தை
நன்ளும்தனும், பலசலறநன்மணிக்கேதுவாளுப்போலேதுவாய்ப்பலத்தைநல்குங், குலவுசிகித்துவசன

றன்ஞானமிலாமையின்மோகங்கூடிச்சாலச், சுலபமுறுதன்செல்வம்பெருங்கனலென்றெண்ணியேது ன்பமுற்றான். (இ-ள்.) நலனுறுபேரறிவுக்கு- சுகம்பொருந்தியவியாபகஞானத்துக்கு — குருவசனம்- ஆசாரியருபதேசமானது — காரணத்தைநண்ணுதேனும்- காரணமாதலைக்கிட்டாததானாலும் — பலக றை- பலகறையானது — நன்மணிக்கு- நல்லவிரத்தினங் (கிடைப்பதற்கு) — ஏதுவானாற்போல்-கார ணமானதுபோல — துவாய்பலத்தைதநல்கும்-காரணமாகப்பயனைக்கொடுக்கும் — குலவுசிகித்துவசன்று ன்- குலவாநின்றசிகித்துவவரசனானவன் — ஞானமிலாமையின்- ஆத்மஞானமில்லாததினால் — மோகங் கூடிசாலச்சுலபமுறு- மயக்கமடைந்துமிகவும்லகுவாய்ப்பொருந்துகின்ற — தன்செல்வம்பெருங்கன லென்றெண்ணிதுன்பமுற்றான்- தனதுசெல்வங்காடாக்கினியென்றுநினைத்துதுக்கமடைந்தான் (எ-று)

(கூஎ) (அ-கை)இல்லறத்தருமப்படிதானமுதலியவைகளைச்செய்துந்துன்பநீங்காமையாற்றுறவ றத்திற்றவஞ்செய்தலைவிரும்பித்தேவிக்குரைத்தல் (கவி) அருந்தானம்பலகொடுத்தான் றவமிகச்செய் தான்றீர்த்தமனைத்துந்தோய்ந்தான், வருந்தாமையவற்றாலும்பெற்றிலன்பேரிடராலேமனநொந்தோ ர்தா, னிருந்தானேகாந்தத்தின்மடிமேலேசூடாலையிருககச்செய்து, பெருந்தாபமுறுகின்றதுயரொல் லாமவளுக்குப்பேசலுற்றான் (இ-ள்)அருந்தானம்- அரியதானங்கள் — பலகொடுத்தான்- அநேகங்க ளைச்செய்தான் — தவமிகச்செய்தான்-விரதங்களைமிகுதியாகச்செய்தான் — தீர்த்தமனைத்துந்தோய்ந்தா ன்- தீர்த்தங்களிலெல்லாமுழுகினான் — வருந்தாமை- துன்பமில்லாமையை — அவற்றாலும்பெற்றில ன்-அவைகளாலுமடைந்திலன் — பேரிடரால்-மிகுந்ததுன்பத்தினால் — மனநொந்து-மனதுநைந்து — ஓர்தானேகாந்தத்தினிருந்தான்- ஒருதினந்தனியேயிருந்து — மடிமேற்சூடாலையிருக்கச்செய்து-(தன து) மடியின்மேற்சூடாலையைவைத்துக்கொண்டு — பெருந்தாபமுறுகின்றதுயரொல்லாம்-மகாவெப்ப மடைகின்றதுன்பங்களனைத்தையும் — அவளுக்குப்பேசலுற்றான்-அவளுக்குச்சொல்லுவான்(எ-று) *

(கூஅ) (அ-கை) இ-து (கவி) ஆண்டவரசினும்புசித்தசெல்வத்துமின்றுநானாசையற்றேன், னீண் டவனம்புகநயந்தேன்றுக்கசுகமாபத்துநிதிகளெல்லா, மாண்டவனத்துறைவோரை துயர்செய்யாப் பு விபொருட்டான்மயங்கவேண்டாக், காண்டகுதன்கிளைநாசந்தோன்றாதநாட்டினும்வன்காடுநன்றே. (இ-ள்.) ஆண்டவரசினும்- ஆளப்பட்டவரசாட்சியிலும் — புசித்தசெல்வத்தும்- அனுபவித்தசம்பத்தி லும் — இன்றுநானாசையற்றேன்- இப்போதுயானிச்சைவிட்டேன் — நீண்டவனம்புகநயந்தேன்- நெடியகாட்டினிடத்திற்செல்லவிரும்பினேன் — துக்கசுகம்- துன்பவின்பங்களும் — ஆபத்துநிதிகள்- ஆபத்துச்சம்பத்துகளுமாகிய — எல்லாம்- யாவும் — மாண்டவனத்துறைவோரை- மாட்சிமைப்பட்ட வாரணியத்தில்வசிப்பவர்களை — துயர்செய்யா- துன்பஞ்செய்யாது — புவிபொருட்டு- பூமியினி மித்தம் — மயங்கவேண்டாம்- பிரமிக்கவேண்டுவதில்லை — காண்டகு- காணத்தகுந்த — தன்கிளை-தன துயிர்ச்சார்பு(பொருட்சார்பில்) — நாசந்தோன்றாது-பற்றுநீங்காதிருக்கும் — நாட்டினும்- இராச்சி யத்தைக்காட்டிலும் — வன்காடுநன்று- வலியவனதன்மையாம் — (எ-று) - - - - - - - - *

(கூகூ)(அ-கை.)இ-து (கவி)பற்றின்றித்தனியிருக்குமனத்தைப்போற்பனிமதியும்பதுமத்தோனு ம், பொற்றிரள்சேரிந்திரனுஞ்சுகமடையாராதலிற்கான்போகுமென்னை, குற்றமெனவிலக்கலைநீகணவ ர்நயந்ததுவிலக்கார்குலத்தின்மாதர்,சிற்றிடையாயென்றுரைத்தமன்னனுக்குச்சூடாலைசெப்பலுற்றாள். (இ-ள்) பற்றின்றி- ஆசையில்லாமல் — தனியிருக்கும்- ஏகாந்தமாயிருக்கின்ற — மனத்தைப்போல்- மனதைப்போல — பனிமதியும்- குளிர்ச்சிபொருந்தியசந்திரனும் — பதுமத்தோனும்- பிரமதேவ னும் — பொற்றிரள்சேரிந்திரனும்- சொர்ணசமுகத்தையடைந்திருக்கின்றதேவேந்திரனும் — சுகம டையார்- இன்பமடையார்கள் — ஆதலில்- ஆதலால் — கான்போகுமென்னை- வனத்திற்செல்லுகின்ற வென்னை — நீகுற்றமெனவிலக்கலை- நீகுற்றமென்றுதள்ளாதே — கணவர்நயந்தது- தலைவன்விரும்பி யது — குலத்தின்மாதர்- குலஸ்திரீகள் — விலக்கார்-மாற்றார்கள் — சிற்றிடையாயென்று- நுண்ணிய விடையையுடையபெண்ணேயென்று — உரைத்தமன்னனுக்கு- சொல்லியவரசனுக்கு — சூடாலைசெப் பலுற்றாள்-சூடாலைசொல்லத்தொடங்கினாள் — (எ-று) [இ-ம-க-ம்-]நித்தியாநித்தியவஸ்துவிவேகமு ண்டாயதனானிகபரவிச்சைவிராகமுதித்ததென்பதாம். - - - - - - - - - - - - - - - *

(எ௰)(அ-கை.)அரசன்கருத்துமுதிருநிமித்தங்கபடமாய்வனஞ்செல்வதைவிதிப்படிதடுத்தல்(கவி) வசந்தநாண்மலர்விளங்குஞ் சரற்காலங்காய்விளங்குமரபுபோல, விசைந்தநாட்செய்ததொழில்விளங் குமாற்சரையாலேயாக்கைநைந்தாற்,பசைந்தமாலறவனமேபோகலாமிளமைநாட்பான்மையன்று, ம சைந்திடாதொழிகவெனச்சூடாலைசொல்லியதற்கரசன்சொல்வான் (இ-ள்) வசந்தநாள்-வசந்தகாலத்தி ல் — மலர்விளங்கும்- புட்பங்கள்பிரகாசிக்கும் — சரற்காலம்- சரற்காத்தில் — காய்விளங்கும்-காய்க ள்ப்ரகாசிக்கும் — மரபுபோல்- முறைமைபோல — இசைந்தநாள்- உரியகாலத்தில் — செய்ததொ ழில்விளங்கும்- செய்யப்பட்டகன்மங்கள்ப்ரகாசிக்கும் — சரையால்- மூப்பினால் — ஆக்கைநைந்தால்- சரீரமானதுதளர்ந்தால் — பசைந்தமாலற-நட்புற்றவிச்சைகெட — வனமேபோகலாம்- கானகத்திற்செ ல்லலாம் — இளமைநாள்-எவ்வன்னகாலத்திற்(செல்லுதல்) — பான்மையன்றும்-முறைமையன்று — அ சைந்திடாதொழிகவென- செல்லாதிருப்பாயென்று — சூடாலைசொல்லியதற்கு-சூடாலைசொன்னதற் கு — அரசன்சொல்வான்- மன்னன்கூறுவான் — (எ-று.) - - - - - - - *

(எக) (அ-கை.)வனஞ்செல்லக்கூடாதென்றசூடாலைவசனத்தைவிதிப்படிதடுத்தல் (கவி)தடாதொ ழிவாயேகாந்தவனம்புகுந்தேநிற்பேனுஞ்சற்றுந்தாழேன, படாமுலைநீசிறியையாலுடன்வருதற்காகா தீயாரைத்தாங்கி, விடாதிருத்திநன்மனையிற்கணவரகன்றாற்குடும்பமெலிவுறாமற், கெடாதளித்தல்குல மகளிர்விரதமெனநீர்படிவான்கிளர்ந்துபோனான். (இ-ள்.) தடாதொழிவாய்- தடுக்காமலிருப்பாய் — ஏகாந்தவனம்- ஏகாந்தமானகானகத்தில் — நான்புகுந்துநிற்பேன்-யான்சென்றிருப்பேன் — சற்றுந்

நாமழன் - எவ்வளவுந்தங்கமாட்டேன்— படாமுலை - கச்சிறுங்கியதனத்தையுடையவளே — நீசிறியையா
ல் - நீசிறுபெண்ணுதலால்—உடன்வருதற்காகா - (என்) னுடன்வருதற்குக்கூடாது— நீயாளைத்தாய்ச்சி-
நீபூமியாலனைஞ்செய்து— விடாதிருந்தி - நீங்காமலிருப்பாய்— நன்மனையிற்கணவரகன்றால் - நல்லவீ
ட்டினின்றுநாயகனீங்கினுல்— குடும்பமெலிவுருமல் - சம்சாரமினைக்காமல் —கெடாதளித்தல் - கெடா
மலிரட்சிக்குதல்— குலமகளிர்விரதமெனக்கிளர்ந்து - குலஸ்திரீக்குத்தவமென்றுசொல்லி— நீர்படிவா
ன் - ஸ்நானஞ்செய்யும்பொருட்டு—போனான் - சென்றான்—(எ-று) - - - - - - - - *

(எஉ) (அ-கை) அரசனரசியறியாதவண்ணம்வனஞ்செல்லல் (கவி) பகற்பொழுதுசென்றதற்பின்
சந்திநியதிகள்பண்ணிப்பாவையோடுஞ், சுகித்தமளியெனநிலத்திற்றுயில்வுற்றானள்ளிரவிற்றுஞ்சும்வ
ஞ்சி, யகத்திருப்பமெல்லவெழுந்தவளறியாவகையேகி யறிந்தோர்க்கெல்லா, நகர்க்குளுலாவுதுமென்
றியாவரையுநிறுத்திப்போய்நகரைநீத்தான் (இ-ள்) பகற்பொழுதுசென்றதற்பின் - பகற்காலம்
போனபின்பு—சந்திநியதிகள்பண்ணி - சந்தியாவந்தனநியமங்களைச்செய்து— பாவையோடும் - மனை
யாளுடன்— சுகித்தமளியென - இன்புற்றபஞ்சணைமெத்தையைப்போல— நிலத்திற்றுயிலுற்றான் -
பூமியினித்திரைசெய்து— நள்ளிரவில் - அர்த்தசாமத்தில்— துஞ்சும்வஞ்சி - நித்திரைசெய்யும்வஞ்சிக்
கொடிபோன்றகூடாலையானவள் — அகத்திருப்ப - உள்ளேயிருக்க— மெல்லவெழுந்தவளறியாவகை
யேகி - மிருதுவாகவெழுந்திருந்தவளறியாதபடிபோய்—அறிந்தோர்க்கெல்லாம் - தெரிந்தவனைவர்களு
க்கும் — நகர்க்குளுலாவுதுமென்று - நகர்சோதனையாகச்செல்வோமென்று —யாவரையுநிறுத்தி - எல்லா
ரையுநிறுத்தி— போய் - (வெளியிற்)சென்று— நகரைநீத்தான் - பட்டணத்தினின்றுநீங்கினான் (எ-று) *

(எங) (அ-கை) மந்தரவெற்பின்சாரலைபடைதல் (கவி) சடமகலாப்பெருந்திருவேயுனைத்தொழு
தேனில்லென்றுதன்னேறேகி, படவிபுகுந்தானதினமோர்பன்னிரண்டிற்பலகிரியுமாறுநீங்கிப், பட
ர்சனங்கள்செலற்கரிதாய்மந்திரவெற்புக்கருகாம் பழுவம்புக்கான், மடலவிழ்பங்கயவாவிமலர்ப்பொழி
ல்சூழவ்விடத்தில்வசிப்பதானான் (இ-ள்) சடமகலாப்பெருந்திருவே - உடைத்தன்மையைநீங்காதபெரி
யசம்பத்தே—உனைத்தொழுதேன - உன்னைவணங்கினேன்— நில்லென்று - நிற்பாயென்று (நிறுத்தி)—
தன்னேறேகி - தானேசென்று— அடவிபுகுந்தான் - காட்டிற்ப்ரவேசித்து— தினமோர்பன்னிரண்
டில் - பன்னிரண்டுநாளில்— பலகிரியும் - அநேகமலைகளையும்— ஆறும் - அநேகநதிகளையும்— நீங்கி-
கடந்து— படர்சனங்கள் - செல்லுகின்றமனிதர்கள்— செலற்கரிதாம் - போகக்கூடாததாகிய—மந்தர
வெற்புக்கு - மந்தரமலைக்கு— அருகாம் பழுவம்புக்கான் - பக்கமானவனத்திற்சென்று— மடலவிழ்
பங்கயவாவி - இதழ்கள்விரிந்ததாமரைத்தடாகமும்— மலர்ப்பொழில் - பூங்காவனமும்— சூழவ்விடத்
தில் - சூழ்ந்திருக்கின்றவந்தஸ்தானத்தில்— வசிப்பதானான் - வாசஞ்செய்வதானான்—(எ-று) - - *

(எச)(அ-கை) தவவேடம்பூண்டுநியமப்படிதவத்தைச்செய்தல் (கவி) சாலைபமைத்தான்மூங்கிற்ற
ண்டிழைத்தான்கமண்டலமுஞ்சமைத்தானக்கு, மாலையுங்கந்தையுங்கனிகாயமைப்பனபாத்திரங்களுமா
ன்றோலுஞ்சேர்த்தான், மேலேயுயர்தவந்தொடங்கிச்சந்திநியமமுஞ்செபமும்விடிந்தசாமஞ், சோலை
மலர்பறித்தலிரண்டாஞ்சாமமிவ்வகையேதொழில்களாக்கி. (இ-ள்) சாலையமைத்தான் - (பன்னக) சா
லைசெய்தான்— மூங்கிற்றண்டிழைத்தான் - வேணுத்தண்டஞ்செய்தான்— கமண்டலமுஞ்சமைத்தா
ன் - கமண்டலத்தையுஞ்செய்தான்— அக்குமாலையும் - செபமாலையும்— கந்தையும் - வஸ்திரமும்—
கனிகாயமைப்பனபாத்திரங்களும் - காய்கனிகள்வைக்கத்தகுந்தபாத்திரங்களும்— மான்றோலும் - மிரு
கசருமமுமாகியவிவைகளை —சேர்த்தான் - சேகரஞ்செய்தான்—மேலே - மேல்—உயர்தவந்தொடங்கி -
மேலானதபசைச்செய்யத்தொடர்ந்து— விடிந்தசாமம் - உதயமானமுதற்சாமத்தில்—சந்திநியமம் -
சந்தியாவந்தனமும்—செபமும் - செபமும்—இரண்டாஞ்சாமஞ்சோலைமலர்பறித்தல் - இரண்டாஞ்சா
மத்திற்புட்பமெடுத்தலும்—இவ்வகையேதொழில்களாக்கி - இப்படியேகன்மங்களுண்டாக்கி (எ-று) *

(எரு) (அ-கை.) இ-து. (கவி) கடவுள்பூசனைமூன்றாஞ் சாமநாலாஞ்சாமங்கனிகாய்கொள்ளல்,ப
டரிரவெல்லாஞ்செபமாமிவ்வாறுதவம்புரிந்தான்பகர்ந்தவேந்தன் மடவரலிங்கரையிரவிற்கண்விழித்தா
டனருகுமன்னனைக்காணு, ளிடர்மருவிவாழ்வகன்றுவனம்புகுந்தானரசனெனவிரங்கிவாடி (இ-ள்)
மூன்றாஞ்சாமம் - மூன்றாஞ்சாமத்தில்— கடவுள்பூசனை - தேவாருச்சனையும்— நாலாஞ்சாமம் - நான்
காவதுசாமத்தில்— கனிகாய்கொள்ளல் - கனிகாய்களைப்புசித்தலும்— படரிரவெல்லாம் - படர்ந்தவிரா
முழுதும்—செபமாம் - செபமுமாகும்—இவ்வாறு - இப்படி —பகர்ந்தவேந்தன் - சொல்லப்பட்டசிகி
த்துவசராசன்—தவம்புரிந்தான் - தவஞ்செய்தான்—ஈங்கு - இந்தவரண்மனையிலிருக்கின்ற—மடவரல் -
கூடாலையானவள்— அரையிரவில் - பாதிராத்திரியில்— கண்விழித்தாள் - விழித்துக்கொண்டாள்— த
ன்னருகு - தனதுபக்கத்திலிருந்த— மன்னனைக்காணுள் - அரசனைக்காணுதவளாய்— இடர்மருவி - துன்ப
மடைந்து —வாழ்வகன்று - செல்வத்தினின்றுநீங்கி—அரசன் - மன்னவன் —வனம்புகுந்தானென - கான
கத்திற்சென்றானென்று— இரங்கிவாடி - இரக்கத்துடன்மெலிந்து (எ-று) [இ-சூ-க-ம்]புறப்பற்று
கியவுயிர்ச்சார்பு பொருட்சார்புதுன்பமெனக்கண்டஃதைத்துறந்தசப்பற்றைநீங்கத்தவஞ்செய்ததாம.

(எசா) (அ-கை.) தலைவிதலைவனைப்பார்த்துமேனடக்குங்காரியங்களையாலோசித்தல் (கவி) பதி
யொழிந்துகதியில்லைக்குலமகளிர்க்கரசனைநாம்பயிறுமென்று, மதிநினைந்துசாளரத்தாற் புறப்பட்டு
வானேகிவானிற்சித்த,ரதிசயித்தோர்மதியென்னமுகத்திகழப்போகின்றாளாங்கேகண்டாள், சதிர்வடிவா
ளுடனிரவிற்றனிப்போமன்னனைக்கண்டுகருதுகிற்பாள் (இ-ள்) பதியொழிந்து - கொழுநனையல்லாம
ல்— குலமகளிர்க்கு - குலப்பெண்களுக்கு— கதியில்லை - (வேறே) கதியில்லை— (ஆதலன்) அரசனை -
இராசாவை—நாம்பயிறுமென்று - யாங்கூடவேண்டுமென்று—மதிநினைந்து - மனதிற்சிந்தித்து—சா
ளரத்தாற்புறப்பட்டு - பலகணிவாயலால்வெளிப்பட்டு— வானேகி - ஆகாயத்திற்சென்று— வானிற்சித்

தர்- ஆகாயத்திலுள்ளசித்தர்கள்— அதிகமிதோர்மதியென்ன - மிச்சமானவிதோவொருசந்திரனென்று
சொல்லும்படி— முகந்திகழ- வதனமானதுவிளங்க— போகின்றாள்- செல்லுகின்றவள்— ஆங்கு-அ
வ்விடத்தில்— கதிர்வடிவாளுடன்- ப்ரகாசம்பொருந்தியவடித்தசத்தியோடும்— இரவில்- இராத்திரி
யில்— தனிப்போம்- ஒருவனாகச்செல்கின்ற— மன்னனைக்கண்டு- அரசனைப்பார்த்து— கண்டாள்-
பார்த்தசூடாலையானவள்— கருதுகிற்பாள்- சிந்திப்பாள்— (எ-று) - - - - - - - - ※

(எஎ) (அ-கை) சாருங்காலமிதுவன்றெனத்திரும்பிவிடுவருதல். (கவி) இனியிவன்செய்வனவெ
ன்னென்றெண்ணுதலுமேற்செய்வதெல்லாங்கண்டாள், கனிமொழியாடிரும்பினாளின்றிவனைநாஞ்சே
ருங்காலமல்ல, துனியறப்பின்சேர்வதேவிதிநெறியாமெனமீண்டுதொல்வீடுற்றாள், வினவினர்க்குமன்
னவனோர்காரணத்தேகினனென்றுவிளம்பியார்க்கும் (இ-ள்) இனியிவன்- இனிமேலிவன்- செய்வன
வென்னென்று- செய்யத்தக்கனவென்னவென்று— எண்ணுதலும்- சிந்தித்துப்பார்த்தலும்— மேற்செ
ய்வதெல்லாங்கண்டாள்- இனிநடப்பவையாவையும்பார்த்தாள்— கனிமொழியாள்- மதுரவசனமுள்ளசூ
டாலையானவள்— திரும்பினாள்-(தன்சிந்தனையினின்று)திரும்பினாள்— இன்றிவனை- இப்பொழுதிவ்வர
சனை— நாஞ்சேருங்காலமல்ல- நாமடையுங்காலமல்ல— துனியற- இராகத்துவேடங்கெட— பின்சேர்வ
தே- பின்னடைவதே— விதிநெறியாமென- நியதிமார்க்கமாமென்று— மீண்டுதொல்வீடுற்றாள்- திரு
ம்பிப்பழையபதியில்வந்தாள்— வினவினர்க்கு- கேட்டவர்களுக்கு— மன்னவனோர்காரணத்தேகினனெ
ன்று- அரசனொருகாரணத்தினாற்போனானென்று— யார்க்கும்விளம்பி- யாவருக்குஞ்சொல்லி (எ-று) ※

(எஅ) (அ-கை) தலைவனுத்தரவின்படியரசுசெய்துமீண்டேகுதல். (கவி) அரசனொழுங்காற்புவி
யைத்தனிகாத்தாள்சமனோக்காலணங்குபோல்வாள், வரிசையுடன்பதினெட்டாண்டகன்றுசூடாலையுந்
தன்மனையில்வாழ்ந்தாள், புனைசெறிகானத்திருந்தான்சிகித்துவசனவன்பானாம்போவதற்கு, விரவியநா
ளிதுவென்னவிருளிலேபுறப்பட்டுவிண்ணிற்போனாள். (இ-ள்) அணங்குபோல்வாள்- தெய்வப்பெ
ண்ணுக்கொப்பானசூடாலையானவள்— அரசனொழுங்கால்- இராசநீதியினால்— புவியை- பூமியை— சம
நோக்கால்- சமதிருஷ்டியினால்— தனிகாத்தாள்- தனிமையாகவிரட்சித்தாள்— வரிசையுடன்- கிரம
மாக— பதினெட்டாண்டகன்று- பதினெண்வருடநீங்க— சூடாலையும்- சூடாலையென்பவளும்— த
ன்மனையில்வாழ்ந்தாள்- தனதரண்மனையில்வாழ்ந்திருந்தாள்— சிகித்துவசன்- சிகித்துவவரசன்— பு
னைசெறி- குற்றமிகுந்த— கானகத்திருந்தான்- வனத்திலிருந்தான்— அவன்பால்- அவனிடத்தில்—
நாம்போவதற்கு- யாஞ்செல்வதற்கு— இது விரவியநாளென்ன- இதுதகுந்தகாலமென்று— இரு
ளிலேபுறப்பட்டு- இராத்திரியிலேவெளிப்பட்டு— விண்ணிற்போனாள்- ஆகாயத்திற்சென்றாள்(எ-று)

(எகூ) (அ-கை.) தலைவனைக்கண்டுதலைவிவிசனப்படுதல். (கவி) மாருதத்தின்கழுத்தேறிமறைந்து
போய்மந்தரமாமலையைச்சார்ந்தா, ளாரமறமணிப்பூண்களின்றியேகறுத்துலர்ந்தவங்கமாகி, யோருட
லின்றதுகண்டாளறிந்திலண்மாயோகத்தாலுணர்ந்துமன்னைக், கூருமிடர்சிறிதடைந்துதன்னிலேமன
த்தோடுகூறலுற்றாள். (இ-ள்) மாருதத்தின்கழுத்தேறி- வாயுவின்றோளிலேறி— மறைந்துபோய்-
தெரியாமற்சென்று— மந்தரமாமலையைச்சார்ந்தாள்- மந்தரகிரியைச்சேர்ந்தாள்— ஆரம்- முத்துமா
லையும்— அறமணிப்பூண்கள்- மிகுந்தவிரத்தினாபரணங்களும்— இன்றி- இல்லாமல்— கறுத்துலர்ந்த-
கருகியுலர்ந்துபோன- அங்கமாகி- சரீரமாய்— ஒருடலின்றதுகண்டாள்- ஒருசரீரமிருந்ததைப்பார்த்
தாள்— அறிந்திலள்- (தனதுதலைவனென்று) தெரிந்திலள்— மாயோகத்தால்- மகாயோகத்தினால்—
மன்னை-(தனதுநாயகனான)வரசனென்று— உணர்ந்து- அறிந்து— கூருமிடர்- மிகுந்ததுன்பங்களை—
சிறிதடைந்து- கொஞ்சமடைந்து— தன்னில்- தன்னிடத்தில்— மனத்தோடுகூறலுற்றாள்- மனதுட
ன்சொல்லத்தொடங்கினாள்—(எ-று)[இ-சு-க-ம்]பக்குவமுண்டாகும்பரியந்தம்பார்த்தஃதுதித்தகா
லம்போதிக்கவெழுந்தருளித்துறந்துவந்தவறியாமைசெய்ததைப்பார்த்தகத்தில்வருந்தினாளென்பதாம்

(அ௰)(அ-கை)போதித்தற்குதெய்வீகவடிவமெடுக்கவாலோசித்தல்.(கவி)அறியாமையறக்கொடி
தந்தோவந்தோவதனாலிவ்வரசனொந்தான், பிறியாதஞானமும்போகமும்வீடுமின்றளிப்பேன்பிறிதொ
ன்றில்லைச், சிறியாணம்மனைவியிவளென்றிகழாவகைவேறோர்தேகமேவி, நெறியாகவுணர்த்துவன்பே
தமைதீருநெஞ்சினனாய்நிருபனின்றான் (இ-ள்) அந்தோவந்தோ- அதிசயமதிசயம்— அறியாமை-
அஞ்ஞானமானது— அறக்கொடிது- மிகவுங்கொடியது— அதனால்- ஆதலால்— இவ்வரசன்- இவ்வே
ந்தனானவன்— நொந்தான்- துன்பமுற்றான்— பிறியாதஞானமும- பிரிவற்றவாத்மஞானமும்— போ
கமும- சம்பத்தும— வீடும்- மோக்ஷமுமானவிவைகளை— இன்றளிப்பேன்- இப்போதேகொடுப்
பேன்— பிறிதொன்றில்லை- வேறொருசந்தேகமில்லை— சிறியாள்- சிறியவளாகிய— இவள்- இந்தப்பெ
ண்— நம்மனைவி- நமதுபாரியாள்— என்றிகழாவகை- என்றுநிந்தியாதபடி— வேறோர்தேகமேவி-
மற்றொருசரீரத்தையெடுத்து— நெறியாகவுணர்த்துவன்- கிரமமாகப்போதிப்பன்— பேதமைதீரும்-
அறியாமைநீங்கும்— நெஞ்சினனாய்- மனதுடையவனாய்— நிருபனின்றான்- அரசனிருந்தான்—(எ-று)

(அக) (அ-கை.) தேவகுமாரனாகத்தெரிசனங்கொடுத்தல். (கவி) பக்குவமாதலினந்தவிமலமனத்
தேயற்புபற்றபாயுந், தக்கதிதுவென்றெண்ணி யொருசிறந்தியானத்தாற்றானவேறாகி, மிக்கதொரு
வேதியன்சேயாய்க்கணவன்முற்குதித்தாள்விண்ணினின்று, மக்கணமேயவனோக்கிக்கடிதெழுந்தங்கிகா
ரமனைத்துஞ்செய்தான் (இ-ள்) பக்குவமாதலின- பக்குவமாயிருத்தலின்— இந்தவிமலமனத்து- இந்த
நிர்மலமானமனதில்— அற்புபற்றபாயும்- ஞானமானதுப்ரதிபலிக்கும்— இது- இப்பருவம்— தக்
கதென்றெண்ணி- தகுந்ததென்றுசிந்தித்து— ஒருசிறந்தியானத்தால்- ஒப்பற்றசிலதியானத்தினா
ல்— தானவேறாகி- தானவேற்றுருவமாகி— மிக்கதொருவேதியன்சேயாய்- மேலானவொருபிராமண
ன்குமாரனாய்— விண்ணினின்று- ஆகாயத்திலிருந்து— கணவன்முற்குதித்தாள்- தனதுதலைவன்முன்னி

றங்கினன்— அக்கணமே- அந்தக்ஷணமே— அவனேக்கி- அவ்வரசன்பார்த்து— கடிதெழுந்து- சீக்கி
ரத்திலெழுந்து— அங்கிகாரமனைத்துஞ்செய்தான்- ஏற்கத்தகுந்தபூசைகளெல்லாஞ்செய்தான் (எ-று)

(அஉ) (அ-கை) பிரமரிஷியுமரசரிஷியுமொருவருக்கொருவருபசரித்தல் (கவி) பொன்னிறத்தன்
வெண்டரளமாலையன்வெண்டுகிலுடையன்புரிவெண்ணூலோ, னன்னிலத்தைவிடச்சிறிதுமேனிற்போ
ன்றனைநோக்கிநடவிங்கென்று, தன்னிடத்தாதனங்கொடுத்தான்சிகித்துவசன்மறையவன்சேய்தானுமீ
ண்டு, மன்னியற்கைத்தவமுனியேயுனைத்தொழுதேனென்றுமறுமாற்றஞ்சொல்லி (இ-ள்.) பொன்னி
றத்தன்- சொன்னமயமானவடிவமுடையவன்— வெண்டரளமாலையன்- வெண்மையானமுத்துமாலை
யையுடையவன்— வெண்டுகிலுடையன்- வெள்ளைவஸ்திரத்தைத்தரித்தவன்—புரிவெண்ணூலோன்-மு
றுக்கியவெண்பூணூலையுடையவன்— நன்னிலத்தைவிட- நல்லபூமியைநீங்க— சிறிதுமேனிற்போன்ற
னை- கொஞ்சமேலேநிற்கின்றவனை— நோக்கி- பார்த்து— இங்கு- இவ்விடத்தில்— நடவென்று- எ
ழுந்தருளுமென்று— சிகித்துவசன்- சிகித்துவவரசன்— தன்னிடத்து- தன்னிடத்திலுள்ள— ஆதனங்
கொடுத்தான்- ஆசனங்கொடுத்தான்— மறையவன்சேய்தானும்- பிராமணனுடையகுமாரனும்— மீ
ண்டு- திரும்ப—இயற்கைத்தவம்- இயல்பானதவத்தையுடைய— மன்முனியேயுனைத்தொழுதேனென்
று-இராசரிஷியேயுன்னைவணங்கினேனென்று—மறுமாற்றஞ்சொல்லி-மறுவசனஞ்சொல்லி (எ-று).*

(அ௩) (அ-கை) பூசித்துத்துதித்தவரசமுனிக்குப்பிரமமுனிமுகமன்கூறல் (கவி) ஆதனத்திலிருத்
தலுமேமன்னுரைப்பான்கடவுண்மகனுனநீதான், போதலினற்பயன்பெற்றேனின்றன்றேவென்றுப
லபூசைபண்ணி, யேதமறவிட்டதேவதையென்றேகருதினனிவனுமந்தப், பூதலமன்னனைநோக்கிநின்
குணமும்வினையுமார்பொருந்துகிற்பார். (இ-ள்) ஆதனத்திலிருத்தலும்- ஆசனத்திலிருந்தவளவி
ல்— மன்னுரைப்பான்- அரசன்சொல்லுவார்— கடவுண்மகனுனநீதான- தேவகுமாரனுகியநீர்— போ
தலினல்- வருதலினல்— இன்றன்றே- இப்பொழுதல்லவா— பயன்பெற்றேனென்று- (ஆத்ம) ப்ர
யோசனமடைதே(னென்றுசொல்லி)—பலபூசைபண்ணி- அநந்தவாராதனைகளைச்செய்து— ஏதமற-
களங்கமற—இட்டதேவதையென்று-(நம)திஷ்டதெய்வமென்று— கருதினன்- நினைத்தான்—இவனு
மந்தப்பூதலமன்னனைநோக்கி-இந்தப்பிராமணனுமப்பூமிக்கரசனைப்பார்த்து— நின்குணமும்வினைய
மும்- உமதுகுணமும்வினையமும்— ஆர்பொருந்துகிற்பார்- யாரடைந்திருக்கின்றார்கள்— (எ-று)*

(அச) (அ-கை) இ-து (கவி) அதனலேநீடூழிவாழ்தியாலுபசாந்தமானநெஞ்சால் விதமானக
ற்பனையற்றரியதவம்வீடுபெறமிகச்செய்தாயோ, சதவேழ்விவாசவனேர்வேந்தனும்பதம்விட்டுத்தவவ
னத்தை, யிதமாகநினைந்துறைதலசிதாரவிரதமெனுமியற்கையொக்கும். (இ-ள்) அதனல்-அதனல்—
நீடூழிவாழ்தி- வெகுகாலம்வாழக்கடவாய்— உபசாந்தமானநெஞ்சால்- உபசாந்தமுள்ளமனதினல்—
விதமானகற்பனையற்று-நாநாவிதமாகியகற்பனைகளிறந்து— அரியதவம்- அரிதானதவத்தை— வீடு
பெற- மோக்ஷத்தையடைய— மிகச்செய்தாயோ- மிகவுஞ்செய்தீரோ— சதவேழ்விவாசவனேர்- சத
மகனையொத்த— வேந்தனும்பதம்விட்டு- அரசனுகியபதத்தைநீக்கி—தவம்-தவத்தைச்செய்ய— வனத்
தையிதமாகநினைந்துறைதல்- காட்டையினிதாகக்கருதிவசித்தல்— அசிதாரவிரதமெனுமியற்கையொக்
கும்-சத்திமுனையிற்செய்யுந்தவமென்கின்றவியல்புக்கொப்பாகும் (எ-று) [இ-ரு-ச-ம்] யோதிப்ப
ந்னம்பிக்கையுண்டாகும்படியிறந்தகாலவியற்கையைக் கூறித்தனதுமுகப்பமுத்திகொண்டதாம் *

(அரு) (இ-கை) முனியைமன்றுவினுவினவுதல் (கவி) என்றமறையவனனைப்பார்த்தரசனுரை
ப்பானிங்கென்னியற்கையெல்லா, நன்றுணர்வுற்றாய்தேவனுதலாலிவ்வியப்பு நண்ணற்பாற்று, நின்
றனைநீயார்புதல்வனின்பெயரென்வருபொருளெனிகழ்த்துமென்ன, வொன்றுமொழியாதுரைப்பக்கே
ட்டியெனமறையவன்சேயுரைக்கலுற்றான். (இ-ள்) என்ற- (இப்படி) யென்று (சொல்லிய)— மறை
யவன்றனைப்பார்த்து- பிராமணனைப்பார்த்து—அரசனுரைப்பான்- மன்னன்சொல்லுவான்— இங்கு-
இவ்விடத்தில்— என்னியற்கையெல்லாம்- எனதுதன்மைகளனைத்தையும— தேவனுதலால்- கடவுளா
தலால்— நன்றுணர்வுற்றாய்- நன்றாயறிந்தாய்— இதில்வியப்புநண்ணற்பாற்றுநின்றனை- இதிலதி
சயமுறும்படிநின்றாய்— நீயார்புதல்வன்- நீராருடையபுத்திரர்— நின்பெயரென்- உமதுநாமமெ
ன்ன— வருபொருளென்- (இங்கு) வந்தகாரியமென்ன— நிகழ்த்துமென்ன- சொல்லவேண்டுமென்
றுகேட்க— ஒன்றுமொழியாது- ஒன்றுந்தவிராமல்— உரைப்பக்கேட்டியென- சொல்லக்கேட்பா
யென்று—மறையவன்சேய்-பிராமணகுமாரன்—உரைக்கலுற்றான்- சொல்லத்தொடங்கனர் (எ-று)

(அசா) (அ-கை) ஒருசிறிதுதியானத்தாற் கும்பவடிவெடுத்தலையோர்வரலாறுகக்கூறுதல் (கவி)
நாரதனென்றொருமுனவன்மெஞ்ஞானவிளக்கொப்பானன்னீர்சங்கைத், திரமுறுபொற்றலத்திற்சமா
தியிருந்தானந்ததியானம்விட்டோர், நேரமிருப்புழிவிளையாட்டொலியொன்றுசெவியுறவந்நெறி
யைப்பார்த்தான், பேரழகிலரம்பைதிலோர்த்தமையொப்பார் திரண்டுசிலபெண்கள்வந்தார். (இ-ள்)
நா ரதனென்றொருமுனிவன்- நாரதனென்ரே ரந்தணன்— மெஞ்ஞானவிளக்கொப்பான்- மெ
ய்ஞ்ஞானதீபத்தையொத்தவன்— நன்னீர்- நல்லசலத்தையுடைய— சங்கைத்திரமுறு- சங்கைக்கரையி
லிருக்கின்ற— பொற்றலத்தில்- அழகியவிடத்தில்— சமாதியிருந்தான்- நிட்டையிருந்தார்— அந்தத்
தியானம்விட்டு- அச்சமாதியினின்றுநீங்கி— ஓர்நேரமிருப்புழி- ஒருநேரமிருக்கின்றசமயத்தில்— வி
ளையாட்டொலியொன்று— விளையாடுகின்றவொருசத்தமானது— செவியுற- காதிற்புக— அந்நெறி
யைப்பார்த்தான்-அந்தமார்க்கத்தைக்கண்டான்— பேரழகிலரம்பை- அழகிலுயர்ந்தவரம்பைக்கும்—
திலோர்த்தமை- திலோர்த்தமைக்கும்— ஒப்பார்-ஒத்தவர்களாகிய—சிலபெண்கள்-சிலதேவஸ்திரீகள்—
திரண்டுவரதார் கூடிவந்தார்கள்— (எ-று) - - - - - - - - - - - - - - - - - - - - *

(அஎ) (அ-கை.) இ-து (கவி) கங்கையினீர்விளையாட்டிற் களிப்புறுவார்புருடரயல்காணுவாற்ற

ற், சங்கையறத்துகிலில்லாரவர்வாற்றைக்கண்டு மனந்தாவியோடி, துங்கவிவேகந்துறந்துசுகமடையவு யிரலைந்துதொடர்ந்துநிற்கும் பங்கமிலாநாரதன்றன்மனநழுவிச்சுக்கிலமும்பாய்ந்ததன்றே (இ-ள்.) கங்கையில் - தேவநதியில் — நீர்விளையாட்டில் - சலக்கிரீடையில் — களிப்புறுவார் - சந்தோஷிப்பவர்களும் — புருடரயல்காணுவாற்றால் - புருடர்களசமீபத்திற்காணுதபடியால் — சங்கையற - வெட்கயில்லாமல் — துகிலில்லார் - வஸ்திரமில்லாதவர்களுமாகிய — அவர்வரத்தைக்கண்டு - அவர்களிவரவைப்பார்த்து — மனந்தாவியோடி - மனமானதுதாவிச்சொண்டுபோய் — துங்கவிவேகந்துறந்து - பரிசுத்தமானவிவேகத்தைவிட்டு — சுகமடைய - (விடய)சுகத்தையடைவதற்கு — உயிரலைந்து - பிராணனலைவுற்று — தொடர்ந்துநிற்கும் - தொடர்ந்திருக்கின்ற — பங்கமிலாநாரதன்றன் - குற்றமற்றநாரதனது — மனநழுவி - மனமானது நிலைபிறழ்ந்து — சுக்கிலமும்பாய்ந்தது - இந்திரியமுமொழுகிற்று — (எ-று) - - - - ※

(௮௮) (அ-கை) ஞானிக்கெங்ஙனங்காமமுதிக்குமென்றிடையிலரசன்வினவினதற்குத்தரங்கூறல் (கவி) என்னவுமேநின்மொழியாமின்னமுதாலுளங்குளிர்ந்தேனெனினும்வேறு, பன்னுமொழி பரம்பொருள்போலறிவரிதாற்குவித்துனதுற்பத்திசொல்வாய், பின்னருயர்பரம்பொருளைவருந்திபுங் கேட்கின்றேன் மேற்பேசுமென்ன, மன்னனுரைசெயக்கேட்டுச்சூடாலைபாமறையோன் மைந்தன் சொல்வான் (இ-ள்.) என்னவுமே - (இப்படி)யென்றுமுனியானவர்சொல்லவும் (அரசன்கேட்குதல்) (அப்படிப்பட்டவராயிருந்தும் வெகுஞராயிருந்தும் சீவன்முத்தராயிருந்தும் நாரதமுனி இப்படிப் பட்டவராய் மன்மதவசியத்தை யெப்படியடைந்தாரென்றவரசனுக்குக் கும்பமுனிவாக்கியம் — (௬-௧) நின்மலமானவாத்மஸ்வரூபம் நிமிடமாத்திரமறக்கப்பட்டால்வருடாகாலத்தின்மேகம்போலத்திரிஸ்ய மெல்லாசத்தையடையும் — (௬-௨) சின்மாத்திரசுபாவமானஸ்வரூபமானது சதாகாலமுமனுசந்தானத்தின நிமிடமாத்திரமுமறக்கப்படாமலிருந்ததானால் திரிஸ்யரூபமானபிசாசமானது பிரகாசிக்கமாட்டாது — (௬-௩) சீவனுக்கு சுகதுக்கங்கள் அற்பமாவது ஸ்புரிப்பதேபந்தமாகும் அவைகளில்லாமையே மோட்சமாகுமென்பது பந்தமோட்சங்களுக்கு நிர்ணயம் — (௬-௪) ஸ்வரூபஞ்ஞானபின்னமாயும் சுத்தமாயுமிருக்கின்ற அறியத்தக்கதானபதார்த்தவானுபோதத்தினாலே சுகதுக்காதிகளில்லையென்றறியப்பட்டால், ஞானியானவன் சீவன்முத்தபாவத்தையடைகிறான் — (௬-௫) சகலசகத்துஞ்சிதாகாசமான பிரமமேயென்னுந்திடநிச்சயநிலையையடைந்தாற் சீவபாவம் நெய்யற்றதீபம்போலவுபசாந்தமடைகிறது — (௬-௬) இந்தச்சகத்துஆத்மஸ்வரூபத்தினின்று முண்டானதாய்வாசனையாலிலையையடைந்துதருமாதருமவசத்திலிருக்கின்றது — (௬-௭) ஆசையால்வாசனைகளைக்கெடுத்துதருமாதருமங்களினாற்பந்தப்படாவிட்டாற் சிவன்சநநத்தையடையமாட்டானென்பது எங்களுடையமதமென்ன — (௬-௮) நின்மொழியாம் - உமதுவசனமாகிய — இன்னமுதால் - இனியவமுதத்தினால் — உளங்குளிர்ந்தேனெனினும் - மனஞ்சாந்தியானேனானாலும் — வேறுபன்னுமொழி - வேறேசொல்லுகின்றவசனம் — பரம்பொருள் போல் - பரமார்த்தத்தைப்போல — அறிவரிது - அறிதற்கரியது — உனதுற்பத்தி - நீயுதித்ததை — குவித்துச்சொல்வாய் - சுருக்கிச்சொல்லுவாய் — பின்னர் - பின்பு — உயர்பரம்பொருளை - மேலானஞானத்ததை — வருந்திபுங்கேட்கின்றேன் - பிரார்த்தித்துக்கேட்கின்றேன் — மேற்பேசுமென்ன - மேலேசொல்லுவாயென்று — மன்னனுரைசெயக்கேட்டு - அரசனானவன்சொல்லக்கேட்டு — சூடாலையாம் - சூடாலையாகிய — மறையோன்மைந்தன் - பிராமணகுமாரன் — சொல்வான் - உரைப்பார் — (எ-று) இக்கவியினிடையினிருக்கவேண்டிய விவ்வெண்சுலோகார்த்தமறைந்திருந்ததைவடநூலோர்க்காக வெளிப்படுத்தல் ※

(௮௯) (அ-கை) தாதுகடத்திற்கருக்கொண்டுவளர்தல் (கவி) நழுவுமனமெனு மத்தமதகயத்தை நாரதனுர்நல்விவேகப், பழுதில்பெருந்தூணிலேநற்புத்திதோட்டியாற்பற்றிக்கட்டி, தழுவுபடிகக்குடத்திற்றுதுவைவிட்டான்பாலைச்சாலவார்த்தான், செழுமதியம்பாற்கடலில் வளர்வதுபோற்கருவளர்ந்து சிறந்ததன்றே (இ-ள்) நழுவுமனமெனும் - நிலைபிறழுமனமென்கின்ற — மத்தமதகயத்தை - மதத்தமதயானையை — நாரதனுர் - நாரதமுனியானவர் — நல்விவேகம் - நல்லவிவேகமென்னும் — பழுதில் பெருந்தூணில் - குற்றமற்றபெரியஸ்தம்பத்தில் — நற்புத்திதோட்டியால் - நல்லவறிவென்னுமங்குசத்தினால் — பற்றிக்கட்டி - (அன்பென்னும்)வடகயற்றாற்பிணித்து — தழுவுபடிகக்குடத்தில் - தழுவாநின்றபளிங்குகடத்தில் — தாதுவைவிட்டான் - இந்திரியத்தைவிட்டான் — பாலைச்சாலவார்த்தான - பாலைநிரம்பவும்விட்டான் — செழுமதியம் - செழுமையானசந்திரன் — பாற்கடலில் - க்ஷீரசாகரத்தில் — வளர்வதுபோல் - வளருதல்போல — கருவளர்ந்து - கருப்பமானதுவளர்ந்து — சிறந்தது - சிறப்புற்றது (எ-று)

(௯௰) (அ-கை) புறப்பாட்டிகூறிநாமம்வந்தகாரணமுரைத்தல் (கவி) குடநின்றுபுறப்பட்டகுமரனுக்குவிஞ்சையெனுங் குறைவில்செல்வப், படலங்களுண்டாக்கிபிதாமகன்பாற்கொடுபோகப்பதுமத் தோனுங், கடனென்றுபேரனுக்குமெய்ஞ்ஞானக்கரைகாணக்காட்டிவிட்டா, னுடனந்நாளன்னவனாற் குடம்பெறலாற்கும்பனெனுமொருபேர்பெற்றேன் (இ-ள்) குடநின்றுபுறப்பட்ட - கடத்திலிருந்து வெளியில்வந்த — குமரனுக்கு - புத்திரனுக்கு — விஞ்சையெனுங்குறைவில்செல்வம் - வித்தையென்கின்றகுறைவற்றசம்பத்தாகிய — படலங்களுண்டாக்கி - சமூகங்களைக்கொடுத்து — பிதாமகன்பால் - பிரமதேவனிடத்தில் — கொடுபோக - (என்னைக்)கொண்டுபோக — பதுமத்தோனும் - பிரமாவும் — கடனென்று - (நமக்குக்)கடமையென்று — பேரனுக்கு - பௌத்திரனானவெனக்கு — மெய்ஞ்ஞானக்கரைகாண - தத்துவஞானமாகியமுடிவைத்தரிசிக்கும்படி — காட்டிவிட்டான் - தெரிவித்தான் — உடனந்நாள் - உடனேயத்தினத்தில் — அன்னவனால் - அப்பிதாமகனால் — குடம்பெறலால் - (நான்)கும்பத்திற்பிறந்தபடியால் — கும்பனெனும் - கும்பமுனியென்கின்ற — ஒருபேர்பெற்றேன் - ஓர்நாமத்தையடைந்தேன் — (எ-று.)

(௯௧) (அ-கை) பிறப்பும்நாமமுங்கூறிவரவைக்கூறல் (கவி) செய்யகலைமகளெனக்குத்தாயாங்காயத்திரிதானசிறியதாயா, மையில்சதுர்வேதமெனுந்தோழருடன்விளையாடிவந்தேனென்ன, வையவுனைத்தே

சிகித்தேன்பெறவேண்டும்பேறெல்லாமமையப்பெற்றேன்,மெய்யிதுவென்றான்மன்னன்கும்பனதற்
கிவ்வாறுவிளம்பலுற்றான் (இ-ள்) செப்பகலைமகள்-செவ்வையானசால்வதி—எனக்குத்தாயாம்-எனக்
குமாதாவாம்—காயத்திரிதான்- காயத்திரியானவள்—சிறியதாயாம்- சிறியமாதாவாம்— மையில்சதுர்
வேதமெனும்- குற்றமற்றநான்குவேதமென்கின்ற— தோழருடன்- சினேகிதரோடும்—விளையாடி-
விலைசெய்துகொண்டு— வந்தேனென்ன- வந்தேனென்றுகும்பமுனிசொல்ல— ஐய- ஆசாரியரே—
உனைத்தரிசித்தேன்- உம்மைதரிசனஞ்செய்தேன்— பெறவேண்டும்-அடையவேண்டிய—பேறெல்
லாம்- இலாபமனைத்தையும்— அமையப்பெற்றேன்- பொருந்தவடைந்தேன்—மன்னன்- அரசனான
வன்— இதுமெய்யென்றான்- ஈதுண்மையென்றுசொன்னான்— கும்பன்- கும்பமுனியானவர்— அ
தற்கிவ்வாறு-அதற்கிவ்வண்ணம்— விளம்பலுற்றான்-சொல்லத்தொடங்கினார்—(எ-று) சிந்தனைதீதத்
தினின்றுமுதித்தவறிவைநாரதனென்றொருமுனிவன்மெஞ்ஞானவிளக்கொப்பானென்றும்- அவ்வறிவு
பிரமாநந்தத்தின்பக்கமிருந்தஃதைபடையமுயல்வதை- கங்கைத்தீரமுறுபொற்றலத்திற்சமாதியிருந்
தென்றும்- அம்முயற்சியானஃதையடைந்துவெளிப்படுவதை- தியானம்விட்டோர்நேரமிருப்புழி
யென்றும்- அப்போதுநாதரூபமாயெதிரிட்டதைப்பார்த்ததை- விளையாட்டொலியொன்றுசெவியுற
வந்நெறியைப்பார்த்தென்றும் அந்நாதவறிவிற்றனித்தனிதனதுசுகமெதிரிடுதலை-சிலபெண்கள்வந்தா
ரென்றும்- மறைப்பின்றிவிளங்குதலை- சங்கையறத்துகிலில்லாரென்றும்-மனமச்சுகத்தையடையச்செ
ல்லுதலை- அவர்வரத்தைக்கண்டுமெனந்தாவியோடியென்றும்- அச்சுகமோசமாயஃதையடையச்செல்வ
தை- துங்கவிவேகந்துறந்துசுகமடையவுபிரலைந் தென்றும்- அஃதுநினைவிறந்ததனதுபிரமசுகமாய்
வெளிப்படுதலை- மனநழுவிச்சுக்கிலமும்பாய்ந்ததென்றும்-அஃதைப்பேதமாகவறியுஞ்சங்கற்பத்தை
த்தன்னிடத்தடக்குவதை- நழுவுமனமெனுமத்தமதகயத்தைநாரதனார்நல்விவேகப்பழுதில்பெருந்தூ
ணிலேநற்புந்திதோட்டியாற்பற்றிக்கட்டியென்றும்- அப்பிரமஞ்சுயஞ்சித்தில்விளங்குவதை- தழுவு
படிகக்குடத்திற்றுதலைவிட்டானென்றும- சாக்ஷாத்காரதிருஷ்டிகொடுத்தலை- பாலைச்சாலவார்த்தா
னென்றும்- அவ்வறிவாநந்தமாய்விளங்குவதை- சருவளர்ந்துசிறந்ததென்றும்- பரோக்ஷமபரோக்ஷ
மானதை- குடநின்றுவெளிப்பட்டகுமரனென்றும்- அனுபவவிலாசமுண்டானதை- குறைவில்செல்
வப்படலங்களுண்டாக்கியென்றும்- சர்வம்பிரமமயமென்பதை- பதுமத்தோனுமெஞ்ஞானக்கணாகா
ணகாட்டிவிட்டானென்றும்- அத்துவிதப்பிரமத்தினின்று வெளிப்படுதல்பிரமமேயென்பதை- குட
ம்பெறலாற்கும்பனெனுமொருபேர்பெற்றேனென்றும்- வாக்கியார்த்தநிச்சயமூலமென்பதை- செ
ய்யகலைமகளெனக்குத்தாயென்றும்- அவ்வாக்கியத்துக்குமந்திரமுரித்தென்பதை- காயத்திரியெனக்
குச்சிறியதாயென்றும்-மகாவாக்கியார்த்தவுல்லாசமாகவிளங்குகிறேனென்பதைசதுர்வேதமெனுந்தோழ
ருடன்விளையாடிவந்தேனென்றுங்கூறினானெனக்கொள்க [இ-எ-க-ம்] பிரமத்தினின்றும்பிரபஞ்சமு
ண்டாயஃதப்பிரமமாய்விளங்குமெனமேலறிவிப்பதைக் குறிப்பாய்றியும்பொருட்டு தனதுதியான
மேவிச்சரீரமாயிற்றென்பதைநாரதமுனிபுத்திரனனவோர்வரலாறாகச்சொல்லியதென்பதாம் - - *

(கூஉ) (அ-கை) அரசன்வரன்முறையைவினவுதலுக்குத்தரங்கூறல் (கவி) எனையுரைத்தேனுனக்
குமுதனியாரென்செய்கின்றாயெனக்குநீயு,முனையுரைப்பாயென்றலுமேமன்னனுரைப்பான்பிறவிக்கு
ளமஞ்சி, வினையறுகானகம்புகுந்தேன் சிகித்துவசன்பேர்நாட்டில்வேந்தாந்தன்மை, தனையிகழ்ந்தி
ங்கிருக்கின்றேன்பிறவிக்கேவிடாமலுளந்தவியாநின்றேன். (இ-ள்) உனக்கு- உமக்கு— முதலெனையு
ரைத்தேன்-முன்னெனது(வரலாற்றைச்) சொன்னேன்—நீயார்- நீரார்—என்செய்கின்றாய்- (இங்) கெ
ன்னசெய்கிறாய்— எனக்குநீயும்- என்றனக்குநீரும்—உனையுரைப்பாயென்றலும்-உமதுவரலாற்றைச்
சொல்லுமென்றுகும்பமுனிகேட்கவும்—மன்னனுரைப்பான்- அரசன்சொல்வான்— பிறவிக்குள்ளம
ஞ்சி-பவதுக்கமனதுபயந்து— வினையறுகானகம்புகுந்தேன்-செயலற்றவனத்துக்குவந்தேன்— பே
ர்சிகித்துவசன்- நாமஞ்சிகித்துவசனும்— நாட்டில்- பட்டணத்தில்— வேந்தாந்தன்மைதனையிகழ்ந்து-
அரசாந்தன்மையைநீக்கி— இங்கிருக்கின்றேன்- இவ்விடத்திலிருக்கின்றேன்—பிறவிக்கே- சநநத்துக்
கே—விடாமல்- ஓயாமல்—உளந்தவியாநின்றேன்- மனதுதவிக்கின்றேன்—(எ-று) - - - *

(கூ௩) (அ-கை.) துறந்துசெய்யுந்தவமுந்துன்பமாயிற்றென்றவரசனுக்கத்துன்பத்தைநீக்கிச்சித்
தசாந்தியிலுன்ஞானமுதிப்பிக்கும்பொருட்டுச்சுகங்கொடுப்பது ஞானமேயன்றித்தவக்கிரியைகொடா
தெனல். (கவி) இப்பரிசேதவததொழிற்குவேண்டினவெல்லாந்தேடியியற்றுநின்றுந், செப்பரியது
யர்விட்டுப்பெருந்துயர்சேர்ந்தேம்முதத்தீநஞ்சான, தொப்பரியாயென்றலுமேகும்பனுரைப்பான்கு
ரவனுணர்த்துஞான,மெய்ப்படவந்தாற்சுகமாமபோதுபோக்குங்கிரியைவிநோதமன்றோ (இ-ள்) இப்
பரிசே- இவ்வண்ணமே—தவத்தொழிற்கு-தவக்கிரியைக்கு—வேண்டினவெல்லாந்தேடி- உண்டான
சகலமுஞ்சம்பாதித்து— இயற்றுநின்றும்-நடத்தியும்— துயர்விட்டு- துன்பத்தைநீக்கி— செப்பரிய
பெருந்துயர்சேர்ந்தேன்- உரைத்தற்கரியபெரியதுன்பத்தையடைந்தேன்—ஒப்பரியாய்- உவமித்தற்க
ரியமுனியே— அமுதத்தீநஞ்சானது-யாற்றியவிடமாயிற்று— என்றலும்- என்றரசன்சொல்லவும்—
கும்பனுரைப்பான்- கும்பமுனிசொல்லுவார்—குரவனுணர்த்துஞானம்- ஆசாரியரறிவிக்குஞானமான
து—மெய்ப்படவந்தால்-உண்மையாகவந்தால்—சுகமாம்-பிரமாநந்தமாகும்— கிரியை- தவத்தொழி
லானது— போதுபோக்கும்- காலத்தைக்கழிக்கின்ற—விநோதமன்றோ- விளையாட்டல்லவா (எ-று)

(கூச), (அ-கை), கிரியைக்கிப்பயன்வாசனையாதலிலவ்வாசனைநசிக்கிற்கிரியைநீங்குமெனல். (கவி)
ஞானமில்லாதவர்க்கெல்லாங்கிரியையேகதியாநற்கிரியைவேந்தா, வினமுறுவாதனைமாத்திரம்பலமாத
லற்பலமுமெய்தநல்குமானமுறுமருதுவரினமுன்பலங்கள்ளங்ஙனமாய்தல்போல, வுளமுறுவாதனை
மாயந்தாற்கிரியையுறுபலமுமொழிந்துபோமே.(இ-ள்) வேந்தா- அரசனே—ஞானமில்லாதவர்க்கெ

ல்லாம்- ஞானமில்லாதசகலருக்கும்— கிரியையேகதியாம்- கன்மமேகதியாகும்—நற்கிரியை- சற்கிருத்தியமானது— ஈனமுறுவாதனைமாத்திரம்பலம்- அசுத்தவாசனையேயபயனாகவுடையது— ஆதலில்- ஆதலால்— பலமுமெய்தநல்கும்- (கன்மமுஞ்சொற்காதிய) பலனையடையும்படிகொடுக்கும— மானைமுறுமிருதுவரில்- அளவையடைந்தவிருதுவநதால்— முன்பலங்கள்- (முந்தின்விருதுக்களின்) பயன்கள்—அங்ஙனேமாய்தல்போல- அவ்விடத்திற்றானேகெடுவதுபோல— ஊனமுறு வாதனைமாய்ந்தால்- அசுத்தவாசனைகெட்டால்— கிரியையுறுபலமும்- கிரியையினால்வரப்பட்டப்ரயோசனமும்— ஒழிந்துபோம்- தவிர்ந்துபோகும்—(எ-று) - - - - - - - - - - - - - *

(௯௫) (அ-கை) சர்வம்பிரமமயமென்னுஞானம்வந்தால்வாசனைநசிக்குமெனல் (கவி) பலமதனையொருக்காலும்பலியாதசரவணத்தின் பரிசுபோல, வலமருவாதனைதீர்ந்தகிரியையுமேற்பலந்தனையளிக்கமாட்டா, வுலகமெலாம்பிரமமெனும்பாவனையாலஞ்ஞானமொழிந்துபோனான்.மலமுறுவாதனைதோன்றாக்கானலினீருண்டென்றுமதிப்பாருண்டோ. (இ-ள்) பலமதனை- பழங்களை— ஒருக்காலும்பலியாத- ஒருகாலத்திலுங்கொடாத— சரவணத்தின்பரிசுபோல- நாணலின்றன்மையைப்போல— அலமருவாதனைதீர்ந்த- சஞ்சலமுள்ளவாசனைநீங்கிய— கிரியையும்- கிரியையும்— மேற்பலந்தன்னையளிக்கமாட்டா- மேற்பயனைக்கொடுக்கமாட்டாது— உலகமெலாம்பிரமமெனும் பாவனையால்- சர்வம்பிரமமென்கின்றபாவனையினால்— அஞ்ஞானமொழிந்துபோனால்- அஞ்ஞானநீங்கிவிட்டால்— மலமுறுவாதனைதோன்றா- அசுத்தவாசனையுண்டாகாது— கானலினீருண்டென்று- கானலிற்சலமிருக்கின்றதென்று— மதிப்பாருண்டோ- நிச்சயிப்பவர்களுண்டோ— (எ-று) - - - - *

(௯௬) (அ-கை) வாசனைநசிக்கிற்பிரமானுபவமுண்டாமாதலா லவ்வாசனையுள்ளமனமாகிய வஞ்ஞானத்தைக்கெடுத்தஃதின்றியஞானமனதினாற்பிரமசிந்தனைசெய்யிற்பவத்துன்பநீங்குமெனல். (கவி) வாதனைமாத்திரம்விட்டாற்சனைமரணமுறுபிறவிமருவாதான, தீதில்பதமுண்டாகும் வாதனையோடேசேர்ந்தசித்தந்தானே, பேதமையஞ்ஞானமாம்வாதனைதீர்மனந்தானேபிறவாஞான, மேதமறுஞானத்தானேயமுணர்ந்தாற்பிறவியெய்தாதன்றே. (இ-ள்.) வாதனைமாத்திரம்விட்டால்- வாசனையைமட்டுநீக்கினால்— சனைமரணம்- சராமரணங்கள்—உறுபிறவி- பொருந்தியசநநமானது—மருவாதான- பொருந்தாததாகிய—தீதில்பதமுண்டாகும்- குற்றமற்ற(பரம)பதமுண்டாகும்—வாதனையோடு- வாசனையுடன்— சேர்ந்தசித்தந்தான்- பொருந்தியமனமானது— பேதமையஞ்ஞானமாம்- வேற்றுமையானவஞ்ஞானமேயாகும்— வாதனைதீர்மனந்தான்- வாதனைநீங்கியமனமானது— பிறவாஞானம்- சலியாதவாத்மஞானமாம்— ஏதமறுஞானத்தால்- குற்றமற்றஞானத்தினால்—நேயமுணர்ந்தால்- (சீவனானவன்) பிரமவஸ்துவையறிந்தால்— பிறவிபெய்தாது- சநநமடையாது— (எ-று) [இ-ரு-க-ம்]. வாசனாட்சயம்வரிற்கிரியாபலநீங்கிப்பரஞானமுண்டாய்ச்சநநமரணநீங்குமென்பதாம் - - - - *

(௯௭)(அ-கை)அறிவைவிரும்பாமலுமதருமுகமாய்ச்சித்தென்னு முத்தியாது சகத்துற்பத்திலயமென்கின்றபத்தமியாதென்றுவிசாரித்திஃதைநீக்கியஃதையடையாமலுமேன்வருந்துகின்றாயெனல்.(கவி) ஞானமிகநன்றென்றேயயன்முதலாநல்லோர்கணவிலாநிற்க, நீநயவாதிருந்தனையென் னியானரிவ்வுலகெங்ஙனேர்ந்ததெங்ஙன்,றானமுறவிறக்குமெனநினைகிலையென்பேதையர்போற்றளர்கின்றாயெ, ஞானகுரவனையிறைஞ்சிபந்தம்வீடெப்படியென்றறிகிலாயென் (இ-ள்)ஞானமிகநன்றென்று-ஞானமேமிகவுநல்லதென்று— அயன்முதலாம்- பிரமாமுதலாகிய— நல்லோர்கள்- பெரியோர்கள்— நவிலாநிற்க-சொல்லியிருக்க— நீநயவாதிருந்தனையென்- நீர்விரும்பாதிருந்ததென்ன— நானர்- யானர்—இவ்வுலகெங்ஙனேர்ந்தது- இச்சகமெப்படியுண்டாயிற்று— எங்ஙன்றானமுறவிறக்கும்- எவ்விடத்திலிறக்குமென்று— நினைகிலையென்- கருதாததென்ன—பேதையர்போல்- அறிவில்லாதவர்களைப்போல— தளர்கின்றாயென்- சோர்கின்றதென்ன— ஆனகுரவனையிறைஞ்சி- மகாஞானவாசிரியனைவணங்கி— பந்தம்வீடு- பந்தமோக்ஷம்— எப்படியென்றறிகிலாயென்- எவ்விதமென்றறியாததென்ன— (எ-று)

(௯௮) (அ-கை) சாதுசங்கத்தால்விசாரஞானமுத்திக்குமெனல் (கவி) நிறையறிவின்சமமானநோக்கினரைச்சேவித்துநிரந்தரித்துப்,பொறையுடனேவினவினான்முத்திபெறு நுண்ணறிவுபொருந்துமென்னு, மறையவன்போதித்தலுமேகண்கணீர்சொரிந்திரங்கிமன்னன்சொல்வா,னிறையவனேயறப்புதுமையுன்னாலேயுணர்வுற்றேனேழையானே (இ-ள்) நிறையறிவின்- பூரணஞானத்தினால்— சமமானநோக்கினரை- சமதிருஷ்டியுள்ளவர்களை— சேவித்து- தரிசித்(தடைந்து)—நிரந்தரித்து-நிரந்தரமாய்—பொறையுடன்வினாவினால்-பொறுமையாகவிசாரித்தால்—முத்திபெறு நுண்ணறிவு-மோக்ஷமடைகின்றசூட்சுமஞானமாது— பொருந்துமென்னு- கிடைக்குமென்று— மறையவன்போதித்தலும்- கும்பமுனிசொல்லவும்— கண்கணீர்சொரிந்து- கண்களிலாநந்தம்பாஷ்பம்பொழிந்து—இரங்கி- அழுது— மன்னன்சொல்வான்- அரசனுரைப்பான்— இறையவனே- ஆசாரியனே—அறப்புதுமை- மிகவுமாச்சரியம்—ஏழையான்- எளியேன்—உன்னாலுணர்வுற்றேன்- தேவராற்றெரிந்தேன்— (எ-று) [இ-உ-க-ம்] ஞானசுகமுண்டாவதற்குக்காரணமாத்மவிசாரமென்றறிவித்ததாம் - - - *

(௯௯), (அ-கை) தேவரீராசிரியராயடியேனையடிமைகொண்டனுக்கிரகஞ்செய்யவேண்டுமெனல். (கவி) மடமையாற்பெரியவர்தஞ்சேர்வையைவிட்டித்தனிமேவனத்தில்வந்தே, னிடர்மேவுபாவமெலாமின்றொழிந்தேன்வனத்தினியெய்தியென்னைக், கடனாகவுணர்த்துதலாற் குருநீயென்பிதாநீயென்காதலோனீ, திடமானமாணாக்கனாய்த்தொழுகின்றேன்கருணைசெய்யவேண்டும் (இ-ள்)மடமையால்- அஞ்ஞானத்தினால்— பெரியவர்தம- மகான்களுடைய—சேர்வையைவிட்டு- சமுகத்தைவிட்டு— இத்தனிவனத்தில்வந்தேன்- இந்தத்தனிமையானகாட்டில்வந்தேன்—இடர்மேவுபாவமெலாம்- துன்பம்பொருந்தியபாவங்களனைத்தையும்— இன்றொழிந்தேன்- இப்பொழுதுதவிர்ந்தேன்—வனத்தின்- காட்டில்

ருக்கின்ற— என்னை- அடியேனை— நீறெய்தி- நீரடைந்து— கடனாகவுணர்த்துதலாற் - கடமையாசவறிவிப்பதால்— குருநீ- ஆசாரியருநீர்தான்— என்பிதாநீ- எனதுதந்தையுநீர்தான்— என்காதலோனீ- எனதுசினேகிதனுநீர்தான்— திடமானமாணாக்கனாய்- திடமுள்ளசீடனாய்— தொழுகின்றேன்- (யானுமதுபாதத்தை)வணங்குகிறேன்— கருணைசெய்யவேண்டும்- கிருபைசெய்யவேண்டும்— (எ-று) - ※

(௱) (அ-கை) நித்தியாநந்தமாகும்பொருட்டனுக்கிரகிக்குமெனது வாக்கியத்திற்சித்தமேகாக்கிரப்படுமாயினுரைப்பேனெனல். (கவி) உதாரமிகவுண்டாகியுணர்வுற்றாற்றுன்பமெலாமொழிப்பதாகிச்,சதாசுகமாம்பொருளாகநீயறிந்ததேதெனச்சாற்றுகிற்பாய், பிதாமகனொப்பாயென்றமன்னனுக்குகும்பன்றான்பேசுகிற்பான்,கதாவியெழுமனமொருப்பட்டுணர்தியேலுனக்குண்மைகழறுகிற்பேன். (இ-ள்) உதாரமிகவுண்டாகி- உதாரமிகவுமுள்ளதாகியும் — உணர்வுற்றால்- அறிந்தால்— துன்பமெலாமொழிப்பதாகி- துயரங்களனைத்தையுநீக்குவதாகியும்— சதாசுகமாம்பொருளாக- சதாநந்தமானவஸ்துவாகியுமிருக்கின்ற—நீயறிந்ததேது- நீயுணர்ந்தவஸ்துவெதுவோ— அதனைச்சாற்றுகிற்பாய்- அதையெனக்குச்சொல்லுவாய்— பிதாமகனொப்பாயென்ற- பிரமதேவனுக்குச்சமானமானவரோவென்றுசொல்லிய— மன்னனுக்கு- அரசனுக்கு— கும்பன்றான்பேசுகிற்பான்- கும்பமுனிசொல்லுவார்—கதாவியெழுமனம்- வேகமாய்த்தாவியெழாநின்றமனதில்— ஒருப்பட்டுணர்தியேல்- ஒன்றுபட்டறிவாயனால்—உனக்கு- நினக்கு—உண்மைகழறுகிற்பேன்- ஞானத்தைச்சொல்லுவேன்—(எ-று) - - ※

(௱க)(அ-கை)இ-து(கவி) சொன்னதுகைக்கொள்ளாதுவிநோதத்தாற்கேட்பவர்க்குச்சொன்னவார்த்தை,பன்னியுமோர்பயனாகாதிருளிலேவிழிக்குணர்வுபலிப்பதுண்டோ, வென்னவுமன்னவனுரைப்பான்வேதவிதியேநீயிங்கிசைத்தவெல்லாம், நின்னருளாற்கைக்கொண்டுசத்தியமேநன்றாகநினையாநிற்பேன் (இ-ள்) சொன்னது- உரைத்ததை— கைக்கொள்ளாது- கிரகிக்காமல்— விநோதத்தால்- விளையாட்டினால்— கேட்பவர்க்கு- கேட்குமவர்களுக்கு— சொன்னவார்த்தை- உரைத்தவாக்கியம்—பன்னியுமோர்பயனாகாது- சொல்லியுமொருப்ரயோசனமில்லை— இருளில்- அந்தகாரத்தில்— விழிக்கு-கண்களுக்கு— உணர்வுபலிப்பதுண்டோ- அறியும்பலனுண்டாமோ— என்னவும்- என்றுகும்பமுனிசொல்லவும்— மன்னவனுரைப்பான்- அரசன்சொல்லுவான்— நின்னருளால்- உமதுகிருபையினால்— நீயிங்கிசைத்தவெல்லாம்- நீரிவ்விடத்திற்சொல்லியசர்வார்த்தமும்— வேதவிதியே- வேதநியமமென்று— சத்தியமே- உண்மையாக— கைக்கொண்டு- கிரகித்துக்கொண்டு— நன்றாகநினையாநிற்பேன்- நன்றாகச்சிந்திப்பேன்— (எ-று) [இ-௯-க-ம்] முற்போதனைநிட்பலமானதுபோலவாகாமலுறுதிப்படுத்திக்கொண்டுபதேசிக்கத்தொடங்கினதென்பதாம் - - - - - - - - - - - - - - - - - ※

(௱உ) (அ-கை) எளிதாய்க்கிடைத்ததையிகழ்ந்தரிதாய்க்கிடைத்ததைப் புகழ்ந்தவறியாமையைநீக்குநிமித்தஞ்சிந்தாமணிகதையைச்சாமானியமாகச்சொல்லத்தொடங்கல் (கவி) என்றுமன்னனுரைசெய்யவெழிலார்கும்பனுரைசெய்வா, னொன்றுமறியாப்பாலகனுக்குரியதந்தையுரைப்பதுபோல்,வென்றிமன்னாநானுனக்குவிளம்புமுறையைவினவாது, நன்றிதென்றேகேளென்று ஞானந்தோன்றநவில்வுற்றான் (இ-ள்) என்றுமன்னனுரைசெய்ய- (இப்படி) யென்றரசன்சொல்ல— எழிலார்- அழகுநிறைந்த— கும்பனுரைசெய்வான்- கும்பமுனிசொல்லுவார்— ஒன்றுமறியாப்பாலகனுக்கு- ஒன்றுந்தெரியாதகுழந்தைக்கு—உரியதந்தையுரைப்பதுபோல்- உரிமையானபிதாசொல்லுவதுபோல— வென்றிமன்னா- வெற்றியையுடையவரசனே— நான்- யான்— உனக்குவிளம்புமுறையை- உமக்குச்சொல்லும்வசனத்தை— வினவாது- தடுத்துக்கேளாமல்—நன்றிதென்றேகேளென்று- (இது)நன்மையெனநினைத்துக்கேட்பாயென்று—ஞானந்தோன்றநவில்வுற்றான்- அறிவுண்டாககூறத்தொடங்கினார் (எ-று)

(௱௩) (அ-கை) இ-து (கவி) மன்னாவிதோர்கதைகேட்பாய்மற்றிக்கதையினுறுபொருளைப், பின்னாயுரைக்கேன்முன்னாளிற்பெரியோனொருவன்பெருஞ்செல்வன் பன்னாநின்றகலைநூல்கள்பலவும்வல்லோன்ஞானமிலோ, னன்னாணுயர்சிந்தாமணியையறவேமுயன்றுதேடுற்றான். (இ-ள்) மன்னா- அரசனே— ஈதோர்கதை- இஃதொருகதையை—கேட்பாய்- (சொல்லக்)கேட்கக்கடவாய்— இக்கதையின்- இந்தக்கதையில்— உறுபொருளை- பொருந்தியவருத்தத்தை—பின்னாயுரைக்கேன்- பின்புயான்சொல்லுவேன்— முன்னாளில்-முற்காலத்தில்— பெரியோனொருவன்- ஒருபெரியவர்—பெருஞ்செல்வன்- மிகுந்தசம்பத்துடையவன்— பன்னாநின்றகலைநூல்கள்- சொல்லாநின்றகலைஞானங்கள்(முதலிய)—பலவும்வல்லோன்- சகலசாஸ்திரங்களிலும்வல்லமையுடையவன்—ஞானமிலோன்- ஆத்மஞானமில்லாதவன்— அன்னான்- அப்படிப்பட்டவன்— உயர்சிந்தாமணியை- மேலானசிந்தாமணியை— அறவேமுயன்று- மிகவுமுயற்சித்து— தேடுற்றான்- தேடத்தொடங்கினான்— (எ-று) - - ※

(௱௪) (அ-கை) இ-து (கவி) மிக்கவருத்தத்தாற்றீரமேவவேண்டுமெனுமுயல்வாற், றக்கமணிகிட்டினவருந்திச்சாலமுயன்றார்க்கேன்கிடையா,தொக்கசுடர்மாமணிதன்முனேறாநின்றிமதியின்விளங்கிடவு, நக்கமணியைக்கைக்கொள்ளாநாநாவிதமாய்நாடுற்றான் (இ-ள்) மிக்கவருத்தத்தால்- மிகுந்தப்ரயாசமுள்ளதபசினால்— தீரமேவவேண்டுமெனும்- தீர்ப்பாகவடையவேண்டுமென்கின்ற— முயல்வால்- முயற்சியினால்— தக்கமணிகிட்டின- தகுந்தசிந்தாமணிகிடைத்தது— வருந்தி- வருத்தப்பட்டு— சாலமுயன்றார்க்கு- மிகவுமுயற்சித்தவர்களுக்கு— ஏன்கிடையாது- என்னபலிக்காது— தொக்கசுடர்மாமணி- மிகுந்தப்ரகாசமுள்ளசிந்தாமணியானது— தன்முன்னேறாநின்றி- தன்னெதிரிற்றோற்றி—மதியின்விளங்கிடவும்- சந்திரன்போலப்ரகாசிக்கவும்—நக்கமணியைக்கைக்கொள்ளா- ப்ரகாசித்தசிந்தாமணியைக்கைவசப்படுத்தாமல்— நாநாவிதமாய்நாடுற்றான்- பலவிதமாகச்சிந்தித்தான் (எ-று)

(௱௫) (அ-கை) இ-து (கவி) சிந்தாமணியன்றிதுவேறோர்சிறுமாமணிசிந்தாமணிதா, னைந்தூராய்ந்துவாளாட்போய்நடங்கும்போதல்லால்வருமோ,நைந்துழும்பாவியர்க்கெய்தா நல்லோர்சிலர்க்

குநண்ணலுறுந், தந்தாம்வினையை நினையாமற்றளர்ந்தாற்கடிதினெய்திடுமோ (இ-ள்) இது சிந்தாமணியன்று - இதுசிந்தாமணியல்ல— வேறோர்சிறுமாமணி - வேறேயொருவற்பமணியாகும்— சிந்தாமணிதான் - சிந்தாமணியானது— நொந்து - வருத்தப்பட்டு— ஆராய்ந்து - வெகுநாடேடி— வாணாட்போய் - வாழுங்காலமெல்லாநீங்கி— நடங்கும்போதல்லால் - மெலியுங்காலத்திலல்லாமல்— வருமோ - கிடைக்குமோ— நைந்தாலும் - துன்பப்பட்டாலும்—பாவியர்க்கெய்தா - பாவிகளுக்குக்கிடையாது— நல்லோர்சிலர்க்கு - நல்லவர்களிற்சிலபேர்களுக்கு— நண்ணலுறும் - கிட்டும்— தந்தாம்வினையை - தங்கள் தங்கள்கன்மத்தை— நினையாமல் - எண்ணுமல்— தளர்ந்தால் - சோர்வுற்றால்— கடிதினெய்திடுமோ - (அவர்களுக்குச்) சீக்கிரத்திலடையுமோ—(எ-று.) - - - - - - - - - - - - - ※

(௱௬) (அ-கை) இ-து (கவி) மனிதனுமெனென்றவமற்பம் வல்லபங்கள்சிறிதில்லைத், துனிசெய்நிற்பாக்கியனெனக்குத்தோன்றுமணிமுன்றோன்றிடுமோ, நனியின்னமுந்தேடுது மென்றுநன்மாமணியையெடுத்திலனூற், புனிதமணியும்போயினதாற்பொல்லாதார்க்குநலனுறுமோ. (இ-ள்) நான்மனிதன் - யானுமனுடன்— என்றவமற்பம் - எனதுதவமோசொல்ப்பம்— வல்லபங்கள்சிறிதில்லை - வல்லமைகளோவெனக்கற்பமுமில்லை— துனிசெய்நிற்பாக்கியன் - துன்பப்படுத்துகின்றதரித்திரமுள்ளவன்— எனக்கு - (இப்படிப்பட்ட)வெனக்கு—தோன்றுமணி - சாணற்சரியசிந்தாமணியானது— முன்றோன்றிடுமோ - எளிதாகமுன்னேதோற்றுமா— நனியின்னமுந் தேடுதுமென்று - மிகவுமின்னமுந்தேடுவோமென்று— நன்மாமணியை - நல்லசிந்தாமணியை— எடுத்திலன் - எடுக்கவில்லை— புனிதமணியும் - பரிசுத்தமுள்ளசிந்தாமணியும்— போயினது - போய்விட்டது— பொல்லாதார்க்கு - தீயவர்களுக்கு— நலனுறுமோ - நன்மையுண்டாமோ—(எ-று) - - - - - - - - - - ※

(௱௭) (அ-கை) இ-து (கவி) மீண்டும்வருந்தித்தேடுற்றான்வெம்பிச்சிலநாளுழன்றளவே, யாண்டுமறைந்துசிலசித்தரவனைநகுவான்காட்டிவிக்கக், கீண்டவளையின்முறியொன்றுகிடப்பக்கண்டானறிவில்லான், மாண்டசிந்தாமணியிதெனமகிழ்ந்துவியந்துகைச்சொண்டான் (இ-ள்) மீண்டும் - திரும்பவும்—வருந்தித்தேடுற்றான் - வருத்தமுற்றுதேடினன்—வெம்பிசிலநாளுழன்றளவே - வெப்பமுற்றுசிறிதுநாட்சுற்றவும்— ஆண்டுமறைந்து - அவ்விடத்தில்மறைவாகி— சிலசித்தரவனைநகுவான் - சிலசித்தர்கணங்களவனைப்பரியாசஞ்செய்யும்பொருட்டு— கீண்டவளையின்முறி - உடைந்தவளையலின்றுணுக்கை—காட்டிவிக்க - எதிரோகாண்பிக்க— ஒன்றுகிடப்பக்கண்டான் - ஒருமணியிருக்கப்பார்த்தான்—அறிவில்லான் - அறிவில்லாதவன்—மாண்டசிந்தாமணியிதெனமகிழ்ந்து - மாட்சிமைப்பட்டசிந்தாமணியிதுவென்றுசந்தோடித்து— வியந்து - அதிசயித்து—கைக்கொண்டான் - கிரிகித்தான்— (எ-று) ※

(௱௮) (அ-கை) இ-து (கவி) வெந்தமணியைமிகப்பேணிமிக்கநிதியெல்லாம்விட்டான் வந்தமணியெல்லாமளிக்குமற்றநிதிகளென்னென்றே, சிந்தைசெய்தானித்தேசந்தீயோருண்டுசுகமில்லை, யிந்தவிடந்தீதெனவனத்திலிருந்துசுகிப்போமென்றகன்றான் (இ-ள்) வெந்தமணியை - காச்சுக்கல்லை— மிகப்பேணி - மிகவும்விரும்பி—மிக்கநிதியெல்லாம்விட்டான் - மிகுந்தசெல்வங்களனைத்தையு நீக்கினன்— வந்தமணி - கிடைத்தகாச்சுக்கல்— எல்லாமளிக்கும் - சகலசெல்வத்தையுங்கொடுக்கும்— மற்றநிதிகளென்னென்றே - மற்றத்தனங்களென்னத்துக்கென்று— சிந்தைசெய்தான் - நினைத்தான்— இத்தேசம் - இந்நாட்டில்— தீயோருண்டு - கொடியவர்களுண்டு— சுகமில்லை - சுகங்கிடையாது—இந்தவிடந்தீதென - இத்தேசங்கொடியதென்று— வனத்திலிருந்து - கானகத்திலிருந்து— சுகிப்போமென - இன்டமடைவோமென்று—அகன்றான் - நீங்கினன்—(எ-று) [இ-எ-க-ம்] சிந்தாமணியின்குணந்தெரியினங்ஙனந்துன்பம்வாராததுபோலச்சகலத்யாகத்திறுண்மைதெரியினஃதெளிதிற் கிடைக்கினுமரிதிற்கிடைக்கினுமப்போதே துன்பமற்ற பரமசுகத்தையடையலாமென்பதைக்குறிப்பாற்சொல்லியதாம் ※

(௱௯) (அ-கை) அறியாமைக் கிரங்கக்கூடாதென்பதை யுறுதிப்படுத்துநிமித்த மியானையின்கதையைச்சாமானியமாக நிரூபித்தல் (கவி) வாழலாமென்றெண்ணிப்புன்மணியால்வருத்தமெலாமுற்றுத், தாழநின்றான்வேறொன்றுசாற்றக்கேளாய்புந்திக்குச், சூழவறவுண்டாக்கிவிக்குந்தொல்லை விந்தவனத்திடையே, வேழமொன்றுகரிகட்குமேலாமிகவுமுயர்ந்ததுவே (இ-ள்) வாழலாமென்றெண்ணி - சுகிக்கலாமென்றுநினைத்து— புன்மணியால் - காச்சுகல்லினால்— வருத்தமெலாமுற்று - துன்பங்களனைத்தையுமடைந்து—தாழநின்றான் - தாழ்வையடைந்தான் — வேறொன்றுசாற்றக்கேளாய் - மற்றொருகதையைசொல்லக்கேட்பாய்— புந்திக்குச்சூழவறவுண்டாக்கிவிக்கும் - புத்திக்குப்பூரணமாகவறிவைக்கொடுப்பிக்கும்—தொல்லைவிந்தவனத்திடை - பழையவிந்தவனமத்தியில்—வேழமொன்று - ஒருயானையானது—கரிகட்குமேலாமிகவுமுயர்ந்தது - யானைகளுக்குமேலாகமிகவுமுன்னதமுள்ளதாம் (எ-று)

(௱௰) (அ-கை) இ-து (கவி) வயிரத்தினுநீண்டறக்கூராய்வலிதாகியகோடிரண்டுளது, பயில்வுற்றிருப்புக்கயிற்றாலேபாகன்பிணித்துவிலங்கிட்டான் செயிர்பற்றியபல்பிணிப்பாலே சிந்தைதளர்ந்து கொம்பிரண்டாற், குயில்வித்தளவன்கட்டெல்லாங்குலைத்ததொருநாற்கடிகையிலே (இ-ள்) வயிரத்தினும் - வச்சிராயுதத்தைக்காட்டிலும்— நீண்டு - நீளமாய்— அறக்கூராய் - மிகவுங்கூர்மையையுடையதாய்— வலிதாகிய - வல்லமையாயிருக்கின்ற—கோடிரண்டுளது - இரண்டுதந்தங்களையுடையதான (யானையுடன்)—பயில்வுற்று - பழகி— இருப்புக்கயிற்றால் - அயப்பாசத்தினால்— பாகன்பிணித்து விலங்கிட்டான் - மாவுத்தன்கட்டிநிகளம்பூட்டினன்— செயிர்பற்றிய - குற்றம்பொருந்திய— பல்பிணிப்பால் - அநேகங்கட்டுகளினால்— சிந்தைதளர்ந்து - மனஞ்சோர்ந்து— கொம்பிரண்டால் - இரண்டுதந்தங்களினலும்— குயில்வித்தள - நெருக்கிவைத்த— வன்கட்டெல்லாம் - வலியகட்டுகளனைத்தையும்— ஒருநாற்கடிகையில் - ஓரிரண்டுமுகுர்த்தத்தில்— குலைத்தது - கெடுத்தது—(எ-று.) - - - - - - ※

(௱௰௧) (அ-கை) இ-து (கவி) விலங்குமறிந்தபடிகண்டான்வேழத்தலைவிழ்ந்துயர்பாகன், கல

ல்கிவிழ்ந்தானவன்விழக்கண்டகளிறுகருணைபினுன், மலங்கவதஞ்செய்யாதகலமற்றப்பாகன்மீண்டெழுந்து, சலங்கொண்டேகியக்களிற்றறைத்தானேதேடியெதிருற்முன். (இ-ள்) விலங்குமுறிந்தபடிகண்டான்- நிலைமுடைந்ததன்மையைப்பார்த்தவனுகிய— உயர்பாகன்- மேலானமாவுத்தன்— வேழத்தலைவிழ்ந்து- (யானைமரத்திருந்து)யானைமத்தகத்திற்குதித்து—கலங்கிவிழ்ந்தான்- கலக்கமுற்று(த்தவறிப்பூமியில்)விழுந்தான்—அவன்விழக்கண்டகளிறு- அவன்விழப்பார்த்தயானையானது—கருணையினுல்- கிருபையினுல்—மலங்கவதஞ்செய்யாதகல- கவிக்கும்படிகொல்லாமனிங்க— மற்றப்பாகன்- பின்பந்தமாவுத்தன்—மீண்டெழுந்து- திரும்பவுமெழுந்திருந்து—சலங்கொண்டேகி- தணியாதகோபத்துடன்போய்—அக்களிற்றறைத்தான்- அந்தயானையை—தேடியெதிருற்முன்- தேடியெதிரேசென்முன்(எ-று)

(௱௰௨) (அ-கை) இ-து (கவி)ஒருகானிடையேயக்கரியையுற்முன்குழியொன்றுண்டாக்கிச்,சருகாற்கொடியான்மறைவித்தான் றந்திசிலநாடிரித்தங்கே, வருகாலையில்விழ்ந்தது குழியில் வந்தபாகனுறப்பிணித்தான், கருதா நின்றதுயரோடுக்களிறு நின்றதிப்போதும். (இ-ள்) ஒருகானிடை- ஒருகாட்டினடுவில்— அக்கரியையுற்முன்- அந்தயானையையடைந்தான்—குழியொன்றுண்டாக்கி- ஒருபடுகுழிதோண்டி—சருகாற்கொடியான்- உலர்ந்தவிலைகளினுலுங்கொடிகளினுலும்—மறைவித்தான்- மறைவுசெய்தான்— தந்தி- யானையானது— சிலநாடிரித்து- சிறிதுநாட்சஞ்சரித்து— அங்கேவருகாலையில்- அவ்விடத்தில்வருகின்றகாலத்தில்—குழியில்விழ்ந்தது- படுகுழியில்விழுந்தது—வந்தபாகன்- வந்தமாவுத்தனுனவன்—உறப்பிணித்தான்- அழுந்தக்கட்டினுன்— கருதா நின்றகளிறு- நினைக்கின்றயானையானது—இப்போதும்- இப்பொழுதும்— துயரோடும்- துன்பத்துடன்— நின்றது- இருந்தது—(எ-று)*

(௱௰௩) (அ-கை.) இ-து (கவி) தனதுவீட்டிற்சிறையிருக்குந்தவிமாவவிபோனின்றகரி, முனமுன்வீழ்ந்தபகைப்பாகன்மூளைசிதறித்தெனில்வந்து, வனவெங்குழியிற்கட்டுண்டுமயங்கவேண்டாமதுபோல, வினவிநிகழ்காலத்தான்மேல்வினைநோக்காதார்மெலிகுவரோ (இ-ள்) தனதுவீட்டில்- தனதரண்மனையில்—சிறையிருக்கும்- காவலிலிருக்கின்ற—தனிமாவவிபோல்- ஒப்பற்றமாவிலியைப்போல—நின்றகரி- இருந்தயானையானது—முனமுன்வீழ்ந்த- பூர்வத்திற்(றனது)முன்னேவிழுந்த—பகைப்பாகன்- சத்துருவாகியமாவுத்தன்—மூளைசிதறித்தெனில்- (தலை)மூளைசிதறும்படியாகக்கொன்முல்—வனம்வந்து- கானகத்துக்குவந்து—வெங்குழியில்- கொடியபடுகுழியில்— சட்டுண்டு- பிணிப்புற்று—மயங்கவேண்டாம்- கலங்கவேண்டியதில்லை—அதுபோல- அக்கதையைப்போல— வினவி- விசாரித்து—நிகழ்காலத்தால்- வர்த்தமானகாலத்திலுல்— மேல்- இனிவருங்காலத்தில்— வினைநோக்காதார்- காரியாகாரியங்களைப்பாராதவர்கள்— மெலிகுவர்- துன்பத்தையடைவார்கள்— (எ-று) [இ-ரு-க-ம்] வல்லமையுள்ளயானையாயிருந்துமஃதின்றியமனிதனுல்வருந்துவதுபோலப்பூரணஞானமானது, அற்பசங்கற்பமானவறியாமையால்வருந்துவதைப்பார்த்தஃதைக்கெடுக்கவேண்டுமென்றறிவித்ததாம் - - *

(௱௰௪)(அ-கை )இவ்விரண்டுகதையையும்பகுத்துவினுவினதற்குமுற்சிந்தாமணியைக்கூறல் (கவி) என்றலோடுஞ்சிசித்துவசனெந்தாய்சிந்தாமணியாலும், வென்றிவேழந்தன்னுலும்விளம்புகதையைவிளக்குகென, நின்றகும்பனுரைசெய்வானெடுநூற்பொருள்கள்பலவுணர்ந்தோ, னன்றிஞானமில்லாதோனன்மாமணிதேடியவவன்முன் (இ-ள்) என்றலோடும்- (இப்படி)யென்று (கும்பமுனி) சொன்னவளவில்— சிசித்துவசன்- சிசித்துவவரசனுனவன்—எந்தாய்- எனதுபிதாவே—சிந்தாமணியாலும்- சிந்தாமணியினுலும்— வென்றிவேழந்தன்னுலும்- வெற்றியையுடையயானையினுலும்— விளம்புகதையை- சொல்லியகதையை— விளக்குகென- தெரிவிப்பாயென்றுகேட்க— நின்றகும்பனுரைசெய்வான்- நிலையாயிருந்தகும்பமுனிசொல்லுவார்—நெடுநூற்பொருள்கள்- மிகுந்தசாஸ்திரார்த்தங்கள்— பலவுணர்ந்தோன்- சகலமுமுணர்ந்தவனும்—நன்றி- நன்மையான— ஞானமில்லாதோன்- தத்துவஞானமில்லாதவனும்—நன்மாமணிதேடியவவன்முன்- நல்லசிந்தாமணியைத்தேடினவவனும்—(எ-று) *

(௱௰௫) (அ-கை) இ-து (கவி) என்னவுரைத்ததனையாநீயெல்லாநூலுங்கற்றுணர்ந்து,மன்னுசாந்திபெற்றிலைவான்மணியென்றதுதானேதென்னி, லுன்னுவஞ்சமறவெல்லா மொழிதலாகுந் துயரானைத்துந், துன்னலில்லாவதுதேடத்தொடங்கியரசுதுறந்தனையால். (இ-ள்) என்னவுரைத்தது- இப்படியென்றுசொல்லியது— உனையாம்- உன்னையேயாம்— நீயெல்லாநூலுங்கற்றுணர்ந்தும்- நீசகலசாஸ்திரங்களையுமற்பியாசித்தறிந்தும்— மன்னுசாந்திபெற்றிலை- நிலைபெற்றவுபசாந்தத்தையடைந்தாயில்லை— வான்மணியென்றதுதானேதென்னில்- சிந்தாமணியென்றதெதுவென்முல்— உன்னுவஞ்சமற- நினைக்கப்பட்டவஞ்சகங்கெட— எல்லாமொழிதலாகும்- சர்வத்யாகமாம்— துயரனைத்தும்- துன்பங்களியாவும்— துன்னலில்லாவது- நெருங்காதவச்சகலத்யாகத்தை— தேடத்தொடங்கி- தேடமுயற்சித்து— அரசுதுறந்தனை- அரசாக்ஷிவிடுத்தாய்— (எ-று) - - - - - - - - - - - - - - - *

(௱௰௬)(அ-கை)இ-த(கவி)மனையுங்கிளையுந்துறந்திங்ஙனவனத்தில்வந்தாய்நாடகன்முய,அனையசகலத்தியாகநிறைவாகுமளவிலதன்விகற்ப, நினைவில்வளர்ந்துவிண்மூடுநீலமுகில்போலுனைமறைக்க,வினையசகலத்தியாகமுயரின்பமல்லமகத்தல்ல. (இ-ள்) மனையுங்கிளையுந்துறந்து- இல்லாளையுமுறவையுநீங்கி— இங்ஙனவனத்தில்வந்தாய்- இந்தக்காட்டினிடத்தில்வந்தாய்—நாடகன்முய்- (உனது) தேசத்தைவிட்டுநீங்கினுய்—அனையசகலத்தியாகம்- அப்படிப்பட்டசகலத்யாகமானது— நிறைவாகுமளவில்- நிறைவாகின்றசமயத்தில்— அதன்விகற்பம்- அத்தியாகவிகற்பவபிமானமானது— நினைவில்வளர்ந்து- மனதில்வளர்ந்து— விண்மூடும்- ஆகாயத்தைமறைக்கும்— நீலமுகில்போல்- கரியமேகத்தைப்போல— உனைமறைக்க- உன்னைமறைவுசெய்ய— இனையசகலத்தியாகம்- இப்படிப்பட்டசகலத்யாகமானது— உயரின்பமல்ல- மேலானசுகமல்ல— மகத்தல்ல- மகத்துமல்ல— (எ-று) - - - - - - *

(௱௰௭) (அ-கை) இ-து (கவி)பிறிதொன்றுயர்ந்ததுளததுதான்பெருநான்முயன்முலெய்துமெ

ண, வெறியவிகற்பமன நிறையமிக்கதியாகம்போயினதாம், நெறிகொள்சகலத்யாகம்போய் நினதுதவமா
ம்வளையின்முறி, யறிவில்விகற்பவிழியாற்கண்டதுநன்றென்றேயழுங்குதியால் (இ-ள்.) பிறிதொன்று-
வேறொன்று— உயர்ந்ததுளது- மேலானதுண்டென்று நினைத்து—அதுதான்- அச்சகலத்யாகம்—பெ
ருநாண்முயன்றாலெய்துமென- அநேககாலமுயற்சிசெய்தால்வருமென்று—வெறியவிகற்பமன நிறை
ய- பயனின்றியவிகற்பமானதுமன திநிரம்ப— மிக்கதியாகம்- மேலானசற்வத்யாகமானது— போயி
னதாம்- நீங்கினதாம்— நெறிகொள்- சன்மார்க்கமுள்ள— சகலத்யாகம்போய்- சகலத்யாகமென்னு
மிரத்தினம்போக— நினதுதவமாம்- உனதுதவமாகிய— வளையின்முறி- காச்சுக்கல்லை—அறிவில்-உண
ர்வில்லாத—விகற்பவிழியாற்கண்டு- விகற்பதிருஷ்டியினாற்பார்த்து—அதுநன்றென்று- அதுநன்மை
யென்று— அழுங்குதி- துன்பப்படுகிறாய்— எ-று) - - - - - - - - - - - - *

(௱௰அ) (அ-கை) இ-து (கவி) அளவற்றெளிதாஞ்சுகமகற்றியரிதாமற்பமாம்பொருளி, லுளமு
ற்றவரோயுயிர்க்கொலைஞருயர்வஞ்சகரொன்றுலகுழைக்கும், வளமிக்குயர்சிந்தாமணிநீவந்ததென்றெண்
ணியதவத்தாற், றளர்வற்றலைபெற்றிலையொன்றுந்தந்திறென்றதினிக்கேளாய் (இ-ள்.) அளவற்று- ம
ட்டில்லாமல்— எளிதாஞ்சுகமகற்றி- இலேசாய்க்கிடைத்தசுகத்தைத்தள்ளி— அரிதாம்- அரிதாகிய—
அற்பமாம்பொருளில்- அற்பமானவஸ்துவில்— உளமுற்றவரோ-மனதுபொருந்தினவர்களோ—உயிர்க்
கொலைஞர்-ஆத்மாவைக்கொன்றவர்களென்றும்—உயர்வஞ்சகரொன்று-மிகுந்தகொடியவரொன்றும்—
உலகுழைக்கும்- சத்துக்கள்சொல்லுவார்கள்— வளமிக்குயர்சிந்தாமணி- வளப்பத்தின மிகுந்தமேலான
சிந்தாமணியானது— நீவந்ததென்று- நீகிடைத்ததென்று— எண்ணியதவத்தால்- கருதினதவத்தினா
ல்— தளர்வற்றிலை- தளர்வைநீங்கினாயில்லை— பெற்றிலையொன்றும்- ஒரு (பளிங்கின்) ப்ரயோசனத்
தையுமடைந்தாயில்லை— தந்திறென்றதினிக்கேளாய்- யானையென்றுசொல்லியதினிமேற்கேட்பாய்—
(எ-று) [இ-ரு-க-ம்] சிந்தாமணிதேடினவன்முதலியதிருஷ்டாந்தத்துக்குச்சாந்தியைத்தேடினவரச
ன்முதலியதாஷ்டாந்தங்களாற்சகலத்யாகமென்னுஞ் சிந்தாமணியுனக்குலகுவாய்க்கிடைத்துமதையிக
ழ்ந்துதவமென்னுங்காச்சுக்கல்லினாற்றுன்பப்படுகின்றாயென்றுவிசேடமாய் நிரூபித்ததாம் - - *

(௱௰௧) (அ-கை) யானைக்கதையைப்பகுத்துக்கூறல் (கவி) மதமாவென்றதனையாகும்வயிராக்கிய
மும்விவேகமுமே, யதனீள்கொம்பாமுன்குணங்களானைமேற்கொண்டுழல்பாகன், விதமாவுன்னைமெ
லிவிக்குமிகுமஞ்ஞானமதனாலே, சிதறுநின்றாயரந்தைகளாற்செலுத்துமவனாற்கரிபோல (இ-ள்) மத
மாவென்றது- மதத்தையுடையயானையென்றுசொல்லியது— உனையாகும்- உன்னையேயாகும்—வயி
ராக்கியமும்- வயிராக்கியமென்பதும்— விவேகமும்- விவேகமென்பதும்— அதனீள்கொம்பாம்- அ
தனுடையநீண்டதந்தங்களாகும்— உன்குணங்கள்- உன(தறியாமையையுடைய)குணங்களே— ஆனை
மேற்கொண்டுழல்பாகன்- யானைமேலேறிநடத்தாநின்றமாவுத்தனாகும்— விதமாவுன்னைமெலிவிக்கு
ம்-நாநாவிதமாகவுன்னைமெலிவுசெய்கின்றது—மிகுமஞ்ஞானம்- மிகுந்தவஞ்ஞானமாகும்— அதனா
ல்- அந்தவஞ்ஞானத்தினா(லுண்டான)—அரந்தைகளாற்செலுத்தும்- துன்பங்களினைடாத்துகின்ற—
அவனால்- அந்தமாவுத்தனால்—கரிபோல-யானையைப்போல—சிதறுநின்றாய்-சிதறுகின்றாய் (எ-று.) *

(௱௨௰) (அ-கை) இ-து (கவி) இருப்புக்கயிறும்விலங்குகளுமிச்சாபாசமென்பனவாம், பெருக்
கவிவற்றாற்கட்டுண்டாய்ப்பேசுமிரும்பின்மிகவன்பா, மிருப்புக்கயிறும்விலங்குகளுமிகுநாட்செல்வி
ற்றேய்ந்தொழியுஞ், செருக்குமாசைமேன்மேலே திடமாய்வளருந்தீர்க்கமுற (இ-ள்) இருப்புக்கயி
றும்- அயப்பாசமும்— விலங்குகளும்- நிகளங்களும்— இச்சாபாசமென்பனவாம்- ஆசாபாசமெ
ன்றுசொல்லப்பட்டனவாம்— பெருக்கவிவற்றாற்கட்டுண்டாய்- மிகவுமிவைகளாற்பந்தப்பட்டாய்—
பேசுமிரும்பில்-சொல்லப்பட்டவிரும்பிலும்—மிகவன்பாம்-இச்சைமிகவுமுறுதியாம்—இருப்புக்கயி
றும்-இரும்புச்சங்கிலிகளும்—விலங்குகளும். சாற்றளைகளும்— மிகுநாட்செல்வில்- வெகுகாலமானா
ல்—தேய்ந்தொழியும்- தேய்ந்துகெடும்—செருக்குமாசை- களிக்கின்றவிச்சையானது— மேன்மே
ல்- மேலுமேலும்— தீர்க்கமுற- நெடிதாக—திடமாய்வளரும்- உறுதியாகவளரும்— (எ-று) - *

(௱௨௧) (அ-கை) இ-து (கவி) மூரிக்கயிறும்விலங்குகளுமுறித்ததானையென்றதுதான், பாரிச்
சுகமெல்லாநீமுன்பற்றறத்தெறிழித்தபடியாகுஞ், சூரிற்பாகன்வீழ்ந்ததுநின்றுறவின்மடமைவீழ்ந்தது
வாம், பேரிச்சையைநீக்கிடிற்பின்னைப்பிறவிதரும்பேதமையுண்டோ (இ-ள்) மூரிக்கயிறும்-பலமு
ள்ள(விருப்புக்)கயிற்றையும்— விலங்குகளும்- தளைகளையும்— ஆனைமுறித்ததென்றதுதான்- களி
றறுத்ததென்றுசொல்லியது—பார்- பூமியிலுள்ள—இச்சுகமெல்லாம்- இப்போகங்களனைத்தையும்—
நீமுன்- நீமுன்னமே— பற்றறத்தெறிழித்தபடியாகும்- இச்சையில்லாமற்கெடுத்தவிதமாகும்— சூரிற்
பாகன்- வீரத்துவமில்லாதமாவுத்தன்— வீழ்ந்தது-(பனைமரத்தினின்று)விழுந்ததென்பது— நின்றுற
வில்- உமதுவிரத்தியில்— மடமைவீழ்ந்ததுவாம்- அஞ்ஞானங்கெட்டதாகும்— பேரிச்சையைநீக்கி
டில்- மிகுந்தவாசையையொழித்தால்— பின்னை- பின்பு— பிறவிதரும்பேதமையுண்டோ- சநநத்
தைக்கொடுக்கின்றவஞ்ஞானமுண்டோ— (எ-று.) - - - - - - - *

(௱௨௨) (அ-கை.) இ-து. (கவி) போகமயலைவிரத்தியினாற்போக்கநினையிலஞ்ஞான, மேகநினை
ந்துவெட்டுமரத்திருக்கும்பேய்போனின்றலையு, மோகமறவேபோகங்கண்முற்றுமவிவேகத்தால்விட்
டால், வேசமறப்போமஞ்ஞானம்வெட்டிவீழ்ந்தமரப்பேய்போல். (இ-ள்) போகமயலை-செல்வமய
க்கத்தை— விரத்தியினாற்போக்கநினையில்- துறவினாற்கெடுக்கவெண்ணினால்— அஞ்ஞானம்- அஞ்ஞா
னமானது— ஏகநினைந்து- ஒடநினைத்து—வெட்டுமரத்திருக்கும்பேய்போல்- வெட்டுகின்றதருவிலி
ருக்குமலகையைப்போல—நின்றலையும்- இருந்தலையும்—மோகமற-மயக்கங்கெடும்படியாக—போ
கங்கண்முற்றும்- செல்வங்களனைத்தையும்— விவேகத்தால்விட்டால்- விவேகத்தினனீக்கினால்—வெட்

டிவிழ்ந்த- வெட்டித்தள்ளிய— மரப்பேய்போல்- விருட்சத்திலிருக்கும்பசாசைப்போல— அஞ்ஞானம்- அஞ்ஞானமானது— வேசமுறப்போம்- விரைவினீங்கும்— (எ-று) - - - *

(௱௨௩) (அ-கை) இ-து (கவி மட்டில்போகமெலாமொழிந்தான்மடமைத்தொடர்ச்சியெல்லாம்போம், வெட்டிவீழ்ந்தமரநின்றுவிழ்ந்துபோம்புட்கூடுகள்போற், கிட்டிவனநீயடைந்தளவேகிளரஞ்ஞானம்விழ்ந்ததாற், றட்டில்சகலத்யாகமெனுந்தனிவாளாற்கொன்றிலையதனை, (இ-ள்.) மட்டில்போகமெலாம்- அளவற்றபோகங்களனைத்தையும்— ஒழித்தால்- தவிர்த்தால்— மடமைத்தொடர்ச்சியெல்லாம்போம்- அஞ்ஞானத்தொடர்புகளனைத்துநீங்கும்— வெட்டிவீழ்ந்தமரநின்று- வெட்டுப்பட்டுவிழுந்தவிருக்ஷத்திலிருந்து—விழ்ந்துபோம்- விழுந்துபோகின்ற— புட்கூடுகள்போல்- பட்சியின்கூண்டுகளைப்போல—வனம்- கானகத்தை—கிட்டி- நெருங்கி— நீயடைந்தளவே- நீயடைந்தமாத்திரத்தில்— கிளரஞ்ஞானம்விழ்ந்தது- மிகுந்தவஞ்ஞானமானதுவிழுந்தது— தட்டில்சகலத்யாகமெனும்- தடையற்றசகலத்யாகமென்கின்ற— தனிவாளால்- ஒப்பற்றசத்தியினுல்— அதனை- அவ்வஞ்ஞானத்தை— கொன்றிலை- கெடுத்திலை— (எ-று) - - - - - - - - - *

(௱௨௪) (அ-கை) இ-து (கவி) அதனுன்மீளமுளைத்தெழுந்தவஞ்ஞானத்தாலறநொந்தாய், மதமாவுக்குப்படுகுழியைவகுத்தான்பாகனென்றதுதான், றிதமாவுனக்குத்தவத்துன்பஞ்செறியஞ்ஞானஞ்சேர்த்தியதாஞ், சுதமார்குழிமேன்மேன்கொடிகடுயர்கூர்தவஞ்சேர்நற்றெழில்கள். (இ-ள்) அதனுல்- அதைக்(கொல்லாமையி)னுல்— மீளமுளைத்தெழுந்த- திரும்பவுமுண்டாகிவளர்ந்த— அஞ்ஞானத்தால்- அறியாமையினுல்— அறநொந்தாய்- மிகவுமவருந்தினய்— மதமாவுக்கு- மதத்தையுடையயானைக்கு— பாகன்- மாவுத்தனுனவன்— படுகுழியைவகுத்தானென்றதுதான்- கொப்பமுண்டாக்கினனென்பது— திதமாவுனக்கு- திரமாகநினக்கு— தவத்துன்பம்- தவமென்கின்றதுயரை— செறியஞ்ஞானம்- மிகுந்தவஞ்ஞானமானது—சேர்த்தியதாம்-கொடுத்ததாகும்— சுதமார்குழி- கேடுநிறைந்தபடுகுழியின்— மேன்மேன்கொடிகள்- மேலுமேலுங்கொடிகளென்பது— துயர்கூர்- துன்பமிகுந்த— தவஞ்சேர்- தவத்தைச்சார்ந்த—நற்றெழில்கள்- சற்கிருத்தியங்கள்—(எ-று)[இ-சூ-க-ம்]யானைமுதலியதிருஷ்டாந்தத்துக்கு, அரசன்முதலியதாஷ்டாந்தங்களாற்சகலத்யாகமுதித்தவிடத்துநீங்கினவஞ்ஞானத்தையங்ஙனெகெடுக்காமலதனுன்வகுக்கப்பட்டதவத்துன்பத்தில் விழ்ந்துவருந்துகின்றுயென்றவைதநீக்கும்பொருட்டு விசேடமாயறிவித்ததாம் - - - - - - - - - - - - - - *

(௱௨௫) (அ-கை.) சகலத்யாகத்தைமுன்னிட்டுத்தடுக்கத்தடுக்கவனேபற்றுக்களனைத்தையுங்கண்டுநீக்கித்தேசமுதலியவற்றையுநியதிகளைந்துதொம்பதஸ்வரூபத்தையடையும்பொருட்டேன் ஞானத்தையுஞ்சகலத்யாகத்தையுமிழந்தாயெனல். (கவி) இவ்வாறின்றுமிடர்தவமாமித்தக்குழியிலுழக்கின்றுய், வெவ்வாள்வலிமாவலிசிறையாய்மிகுபாதலத்திலிருப்பதுபோற், றவ்வாமொழிமென்கூடாலைசாற்றுஞானமிழந்தனையென், னைவாய்சகலத்யாகத்தைநழுவினுயேனவில்கென்ன (இ-ள்) இவ்வாறின்றும்- இவ்விதமாயிப்போதும்— இடர்தவமாம்- துன்பமென்னுந்தவமாகிய— இந்தக்குழியில்- இந்தப்பள்ளத்தில்— வெவ்வாள்வலி- கொடியவாட்டிறத்தையுடைய— மாவலி- மாபலியானவன்— சிறையாய்- சிறையிலடைபட்டவனுய்— மிகுபாதலத்தில்- மிகுந்தபாதாளத்தில்— இருப்பதுபோல்- இருப்பதைப்போல— உழக்கின்றுய்- இருக்கிறுய்— தவ்வாமொழி- தவறுதவசனத்தையுடைய— மென்கூடாலை- மிருதுவானகூடாலையானவள்— சாற்றுஞானம்-சொல்லப்பட்டஞானத்தை—ஏனிழந்தனை-ஏனிழந்து— நைவாய்- வருந்துகிறுய்— சகலத்யாகத்தை- சகலத்யாகத்தை— ஏனழுவினுய்- ஏன்விட்டுவிட்டாய்— நவில்கென்ன- சொல்லென்றுகும்பமுனிகேட்க—(எ-று) - - - - - *

(௱௨௬) (அ-கை)உயிர்ச்சார்புபொருட்சார்புநீக்கினேனெனிலஃதுசகலத்யாகமன்றெனல் (கவி) வேந்தனுரைப்பான்பார்விட்டேனவீடுவிட்டேனதிவிட்டேன், காந்தைதனைவிட்டேன் சகலத்யாகங்கைவிட்டதுமற்றென், றேர்ந்துபுகலென்றலுங்கும்பன்செப்புவானீதேசமுதற், சார்ந்தவெல்லாம்விட்டாலுஞ்சகலத்யாகமன்றுகும் (இ-ள்) வேந்தனுரைப்பான்- அரசன்சொல்லுவான்—பார்விட்டேன்- (எனது) பூமியைவிடுத்தேன்— வீடுவிட்டேன்- அரண்மனையைவிடுத்தேன்— நிதிவிட்டேன்-செல்வத்தைவிடுத்தேன்—காந்தைதனைவிட்டேன்-பாரியாளைவிடுத்தேன்— சகலத்யாகம்-சகத்யாகமானதுகைவிட்டது- (இப்பொழுது)நீக்கினதைக்காட்டிலும்— மற்றென்- வேறியாது—தேர்ந்துபுகலென்றலும்- ஆராய்ந்துசொல்லவேண்டுமென்(றரசன்)கேட்கவும—கும்பன்செப்புவான்- கும்பமுனிசொல்லுவார்— நீதேசமுதல்- நீநாடுமுதலாக— சார்ந்தவெல்லாம்- சேர்ந்திருக்கின்றசகலத்தையும்— விட்டாலும்- விட்டுவிட்டாலும்— சகலத்யாகமன்றுகும்- சகலத்யாகமல்லவாம்— (எ-று) - - *

(௱௨௭)(அ-கை.)வனப்பற்றிருக்கின்றமென்றறிந்தவஃதைநீக்கினேனெனினஃதுஞ்சகலத்யாகமன்றெனல். (கவி) எல்லாத்திலும்பற்றுண்டுனக்கவ்விச்சையெல்லாமறவிட்டு, நல்லார்க்குரியநல்லின்பநண்ணுகென்னமன்னுரைப்பான்,மல்லார்புவிவிட்டதுசகலமன்றேல்வனமேயெனக்குராது, கல்லாற்றருவானிறைகாட்டிற்காதலுறுவாதனைவிட்டேன். (இ-ள்) உனக்கு- நினக்கு— எல்லாத்திலும்பற்றுண்டு- சகலத்திலுமாசையுண்டு—அவ்விச்சையெல்லாமறவிட்டு- அந்தவாசைகளனைத்தையுமொருங்கேநீக்கி — நல்லார்க்குரியநல்லின்பம்- சத்துக்களுக்குரியபிரமாநந்தத்தை— நண்ணுகென்ன- அடைவாயென்றுகும்பமுனிசொல்ல— மன்னுரைப்பான்- அரசன்சொல்லுவான்— மல்லார்புவிவிட்டது- வளமைநிறைந்தசகத்தைவிட்டது— சகலமன்றேல்-சகலத்யாகமல்லவானல்— எனக்குளதுவனமே- எனக்குடையதுகானகமே—கல்லால்- மலைகளினுலும்— தருவால்- மரங்களினுலும்— நிறைகாட்டில்- நிறைந்திருக்கின்றகானகத்தில்—காதலுறு-விருப்பப்பட்ட—வாதனைவிட்டேன்- வாசனையைநீக்கினேன் (எ-று)

(௱௨௮) (அ-கை.) இ-து. (கவி) இன்றான்சகலத்யாகத்தைமெய்தினேனெனலுங்கும்பன்,கனி

யார்மரமுநெடுமலையுங்கழன்றாற்சகலமன்றுனக்குத், துனியார்பற்றுண்டேனத்தினுமற்றுன்பந்துறந் தாற்சுகமென்னப், புனிதாயிதுவுமன்றாகிற்புகல்வேனெனப்பூபதிபுகலும். (இ-ள்) இனிநான்- இப் பொழுதியான்— சகலத்யாகத்தை- சகலத்யாகமென்பதை— எய்தினேனென்றலும்- அடைந்தேனெ ன்றரசன்சொல்லவும்— கும்பன்- கும்பமுனியானவர்— கனியார்மரமும்- பழங்கனிநிறைந்தவிருட்சங் களும்— நெடுமலையும்- உயர்ந்தகிரிகளும்—கழன்றால்- நீங்கினால்— சகலமன்று- சகலத்யாகமல்ல— அனைத்தினும்-சகலத்திலும்—உனக்குத்துனியார்பற்றுண்டு- நினக்குத்துன்பமிருந்தவாசையுண்டு—அ த்துன்பந்துறந்தால்- அந்தத்துயரை நீங்கினால்— சுகமென்ன- பாமசுகமென்றுசொல்ல—புனிதா- ப ரிசுத்தத்தையுடையமுனியே— இதுவுமன்றாகில்- இதுவுமல்லவானால்— புகல்வேனென- சொல்லுவே னென்று— பூபதிபுகலும்- அரசனானவன்சொல்லுவான்—(எ-று) - - - - - - - - - - - *

(௱௨௧)(அ-கை) வஸ்திரமுதலியபற்றுக்களிருக்கின்றதென்றறிந்தவைகளைத்தகனஞ்செய்துநீக்கு தல். (கவி) கந்தைதண்டுசெபமாலைகலைத்தோல்பாண்டங்கமண்டலமுண், டெந்தைபிவற்றைவிடுகின்றே னென்றுகூட்டியெரிகொளுத்திச், சிந்தைகளித்துவேற்றுடலாய்ச்சிக்கற்றனன்பற்றிலனென்றே, முந் தையறிஞன்முகநோக்கிமொழியலுற்றான்சிகித்துவசன். (இ-ள்) கந்தை- வஸ்திரமும்— தண்டு- தண் டமும்—செபமாலை- உருத்திராக்ஷத்தாவடமும்—கலைத்தோல்- மான்றோலும்—பாண்டம்- மண்பாத் திரங்களும்— கமண்டலம்- கமண்டலமும்—உண்டு- (எனக்)கிருக்கின்றன—எந்தை- என்பிதாவே— இவற்றைவிடுகின்றேனென்று- இவைகளை நீக்குகின்றேனென்று— கூட்டியெரிகொளுத்தி- சேர்த்தக் கினியிலெரித்து—சிந்தைகளித்து- மனமகிழ்ந்து—வேற்றுடலாய்- வேறுசரீரமாய்—சிக்கற்றனன்- நட்பற்றனன்— பற்றிலனென்று- ஆசையில்லாதவனானேனென்று— முந்தையறிஞன்- அநாதிஞா னஸ்ருவபியானகும்பமுனியினது—முகநோக்கி- வதனத்தைப்பார்த்து— சிகித்துவசன்- சிகித்துவசரா சன்— மொழியலுற்றான்- சொல்லத்தொடங்கினான்—(எ-று) - - - - - - - - - *

(௱௨௨) (அ-கை) சகலத்யாகத்தையடைந்தேனெனல். (கவி) அம்மவம்மகடவுண்மகனானவுன்னா லறிவுற்றேன், மம்மரொழிந்தேன்கேவலமாய்மலங்களற்றேனிதுவென்று, விம்முசங்கற்பத்தெய்தா வேறொன்றறயாவையும்விட்டேன், செம்முபொருளின்றிரளெல்லாஞ் செநநமளிக்கும் பந்தனையே. (இ-ள்) அம்மவம்ம- ஆச்சரியமாச்சரியம்— கடவுண்மகனானவுன்னால்- தேவகுமாரனானவும்மால்—அ றிவுற்றேன்- அறிவைப்பெற்றேன்—மம்மரொழிந்தேன்- துன்பத்தினின்று நீங்கினேன்—கேவலமா ய்- தனிமையாக—மலங்களற்றேன்- களங்கமொழிந்தேன்—இதுவென்று- இப்படிப்பட்டதென்று— விம்முசங்கற்பத்தெய்தா- மிகவுஞ்சங்கற்பத்தினாற்பொருந்தி—வேறொன்றற- பிறிதொன்றில்லாமல்— யாவையும்விட்டேன்- சகலத்தையுநீக்கினேன்—செம்முபொருளின்றிரளெல்லாம்- செவ்வியபதார்த்த ங்களின்கூட்டங்களியாவும்— செநநமளிக்கும்பந்தனை- பிறவியைக்கொடுக்கின்றபந்தமாம்—(எ-று)

(௱௨௩) (அ-கை) இ-து (கவி) பொருள்களெம்மட்டெம்மட்டுபோனதம்மட்டம்மட்டுந், தெ ருளுமனந்தான்சுகமடையுஞ்செயித்தேயந்தச்சுகம்பெற்றேன், மருள்செய்பந்தங்களுமற்றேன்மாசி லாததிகம்பரனே, யருள்செய்சகலத்யாகத்தையடைந்தேன்வேறென்னுளவென்றான் (இ-ள்) பொருள்க ள்- பதார்த்தங்களானவை— எம்மட்டெம்மட்டு- எவ்வளவெவ்வளவு— போன- நீங்கினவோ— அம் மட்டம்மட்டும்- அவ்வளவவ்வளவும்— தெருளுமனந்தான்- தெளிவுள்ளமனமானது— சுகமடையு ம்- ஆநந்தத்தைப்பெறும்—செயித்தே- (பொருள்களைச்)செயஞ்செய்து— அந்தச்சுகம்பெற்றேன்- அவ்வாநந்தத்தையடைந்தேன்— மருள்செய்பந்தங்களுமற்றேன்- மயக்கத்தைச்செய்கின்றபந்தங்க ளுநீங்கினேன்— மாசிலாத- களங்கமற்ற— திகம்பரனே- திருவாணியாய்— அருள்செய்- (தேவரீர்) கிருபைசெய்யாநின்ற— சகலத்யாகத்தை- சகலத்யாகத்தை— அடைந்தேன்- பெற்றேன்— வேறெ ன்னுளவென்றான்- வேறென்னவிருக்கின்றனவென்றரசன்கேட்டான்—(எ-று) [இ-எ-க-ம்] புறம் பாயுள்ளபற்றுக்களியாவையுந்தானேகண்டுகழலும்படிசெய்வித்ததாம் - - - - - - - *

(௱௨௪) (அ-கை) இஃதுஞ்சகலத்யாகமன்றெனிலிந்திரியங்களுக்கிடமானதேகந்தானிருக்கின்ற தென்றறிந்தப்பற்றையுநீக்குகின்றேனெனல் (கவி) கும்பனுரைப்பான்சகலமும்விட்டிலைநீயிந்தக்கூ த்தாடல், வம்புகாணென்றலுமன்னன்மனத்தினினைந்துமீண்டுரைப்பான் வெம்புகரணப்பாம்புகள்சே ர்வெள்ளென்பூனுமுடலொன்றே, யிம்பமீந்ததெனக்கிதனையின்றேயெளிதின்விடுகின்றேன். (இ-ள்) கும்பனுரைப்பான்- கும்பமுனிசொல்லுவார்—நீசகலமும்விட்டிலை- நீயொன்றையாவது நீக்கவில்லை— இந்தக்கூத்தாடல்- இச்சகலத்யாகவபினயம்— வம்புகாணென்றலும்- வீணென்றுசொல்லுமளவில்— மன்னன்- அரசனானவன்— மனத்தினினைந்து- மனதிற்சிந்தித்து— மீண்டுரைப்பான்- திருப்பவுஞ் சொல்லுவான்— வெம்புகரணப்பாம்புகள்சேர்- கொடியபஞ்சேந்திரியங்களென்னுஞ்சற்பங்கள்சார் ந்திருக்கின்ற— வெள்ளென்பு- வெள்ளையெலும்புகளும்— ஊனும்- மாமிசங்களுமான— உடலொ ன்றே- சரீரமொன்றே— எனக்கு- அடியேனுக்கு— இன்பமீந்தது- இவ்விடத்தின்மிஞ்சினது— இ தனையின்றே- இச்சரீரத்தையிப்போதே— எளிதின்விடுகின்றேன்- சுளுவினீக்குகின்றேன்—(எ-று)

(௱௨௫)(அ-கை) தேகத்யாகமுஞ்சகலத்யாகமன்றெனல் (கவி) காண்டியென்றோர்வரையேறிக்கவிழு மளவிலுயர்கும்ப, னீண்டிதென்னேயிவ்வுடலானென்னகுறைசெய்ததுபேதாய், மாண்டுபயனென்னி ளங்கன்றைவல்லேறடர்ந்துமுனிவதுபோற், றீண்டிவிழுந்துமெய்விடினுஞ்சகலத்யாகியாகாயே (இ-ள்) காண்டியென்று- பார்ப்பாயென்று— ஓர்வரையேறி- ஒருமலையிலேறி—கவிழுமளவில்- (அரசன்) விழுகி ன்றசமயத்தில்— உயர்கும்பன்- மேலானகும்பமுனியானவர்—ஈண்டிதென்னே- இவ்விடத்திலிதெ(ன்) னகாரியம்— இவ்வுடலான்- இச்சரீரமானது—பேதாய்- அறிவில்லாதவனே— என்னகுறைசெய்தது- (உனக்கென்ன) குறைவைச்செய்தது— மாண்டுபயனென்- இறந்துப்ரயோசனமென்ன— இளங்கன்

றை - இளமையானபசுவின்கன்றை— வல்லேறு - பலம்பொருந்திய விடையானது— அடர்ந்துமுனி
வதுபோல் - பொருதிக்கோபிப்பதைப்போல— தாண்டிவிழுந்து - தாண்டிக்குதித்து— மெய்விடினு
ம் - சரீரத்தைவிட்டாலும்— சகலத்யாகியாகாய் - சகலத்யாகியாகமாட்டாய்— (எ - று.) - - - ※

(௱௧௪) (அ - கை) பவபீசமானதைநீக்கலேசகலத்யாகமெனிலஃதியாததனை நீக்குமுபாயமியா
தெனல் (கவி) எத்தாலுடலமசைகின்றதெதுதான்பிறவி கருமத்தின், வித்தாய்நின்றததுவிட்டால்வேந்
தாவெல்லாம்விட்டனவா, நித்தாரமிதென்றலுமுடலையசைத்துப்பிறவி நிறைவித்தாய், தத்தா நின்றதே
ததனைத்தவிருமாறுசொல்லென்ன (இ - ள்) எத்தாலுடலமசைகின்றது - யாதினாற்சரீரஞ்சஞ்சரிக்கின்ற
தோ— எதுதான் - யாதொன்று— பிறவி - சநநத்துக்கும்— கருமத்தின் - கருமத்தினுக்கும்— வித்தா
ய்நின்றது - விதையாயிருந்ததோ— அதுவிட்டால் - அதைவிடுவையாயின்— வேந்தா - அரசனே— எல்
லாம்விட்டனவாம் - சகலத்யாகமாம்— நித்தாரமிதென்றலும் - உண்மையானதிதுவென்று (கும்பமு
னி) சொல்லவும்— உடலையசைத்து - சரீரத்தையசைத்து— பிறவிநிறைவித்தாய் - சநநத்தைமிகுவிக்கு
ம்விதையாகி— தத்தா நின்றதேது - தாவாநின்றதெதுவோ— அதனைத்தவிருமாறு - அதைநீக்கும்விதத்
தை— சொல்லென்ன - சொல்லுவாயென்றரசன்கேட்டான்— (எ - று) - - - - - - - - - - ※

(௱௧௫) (அ - கை) பிரமசங்கற்பமானமனமேசகலபற்றுயுமிருக்கின்றதெனல். (கவி) இயலார்கு
ம்பனுரைசெய்வானெல்லாற்றினுஞ்சேர்சுகமாகி, வியனார்சீவன்பிராணனென மேவுபெயர்கள்பலபெ
ற்று, பயனார்சடமுமசடமுமன்றாகிப்பரந்தசித்தத்தை, யுயர்வோர்சகலமென்றுரைப்பருலகுமிதுபந்த
முமிதுவே (இ - ள்) இயலார்கும்பனுரைசெய்வான் - சற்குணநிறைந்தகும்பமுனி சொல்லுவார்— எ
ல்லாற்றினும் - சகலபதார்த்தங்களிலும்— சேர்சுகமாகி - சார்ந்திருக்கின்றவின்பமாய்— வியனார்சீவன் -
பெருமைபொருந்தியசீவனென்றும்— பிராணனென - பிராணனென்றும்— மேவுபெயர்கள் - பொ
ருந்தியநாமங்கள்— பலபெற்று - அநேகந்தரித்து— பயனார்சடமும் - ப்ரயோசனமுள்ள சடமும்—
அசடம் - அசடமும்— அன்றாகி - அல்லாததாய்— பரந்தசித்தத்தை - (மயக்கத்தில்) விரிந்தமனதை— உ
யர்வோர் - சத்துக்கள்— சகலமென்றுரைப்பர் - சகலமென்றுசொல்லுவார்கள்— உலகுமிது - சகமுமி
து— பந்தமுமிதுவே - பந்தமுமிச்சித்தமே— (எ - று). - - - - - - - - - - - - - ※

(௱௧௬) (அ - கை) சித்தத்யாகமேசகலத்யாகமதுவேபரமசுகத்தைக்கொடுக்குமெனல் (கவி) சன
னகருமங்களின்வித்தாய்த்தருவையசைக்குங்காற்றேபோற், றினமுமுடலையசைப்பதுவுஞ்சித்தமிதனை
த்தீர்வதுவே, யனசசகலத்யாகமதாமதுவேபரமவாநந்தம், வினவுபிறவெல்லாமிகவும்வெருவுகின்றவெ
ந்துயரோ. (இ - ள்) சனனகருமங்களின்வித்தாய் - பவக்கன்மங்களுக்குப்பீசமாய்— தருவையசைக்கு
ங்காற்றேபோல் - மரத்தையசைக்கின்றவாயுவைப்போல— தினமும் - நித்தமும்— உடலையசைப்பது
வும் - சரீரத்தையாட்டிவிப்பதும்— சித்தம் - மனமாகும்— இதனைத்தீர்வதுவே - இம்மனதைவிட்டுவிடு
வதே— அனக - களங்கமற்றவரசனே— சகலத்யாகமதாம் - சகலத்யாகமாகும்— அதுவேபரமவாநந்த
ம் - அச்சகலத்யாகமேபிரமாநந்தமாகும்— வினவுபிறவெல்லாம் - சொல்லப்பட்டமற்றயாவும்— மிக
வும்வெருவுகின்ற - மிகவும்பயப்படுகின்ற— வெந்துயரோ - வெவ்வியதுன்பமே— (எ - று) - - - ※

(௱௧௭) (அ - கை) சித்தத்யாகமேயாத்மாவெனிலதன்காரணமுமுருவமு மதைக்கெடுக்குமுபாய
முமியாதெனில் (கவி) சகலத்யாகந்தனைச்செய்துசாந்தனாய்மச்சரமின்றி, பகுதிநிலையாற்றெளிவுற்று
ற்பயின்றவடிவேததுநீயாய், நிகழுவாயென்றலுமன்னனுரைப்பானீசொன்னெஞ்சுக்குப், பசுருமுத
லாம்வடிவேதெப்படிநான்றீர்ப்பதுரையென்ன. (இ - ள்) சகலத்யாகந்தனைச்செய்து - சகலத்யாகத்
தைப்பண்ணி— சாந்தனாய் - உபசாந்தமுடையவனாய்— மச்சரமின்றி - துவேடமில்லாமல்— பகுதிநி
லையால் - இயல்பானகுணத்தினால்— தெளிவுற்றால் - தெளிவடைந்தால்— பயின்றவடிவேது - சொல்
லப்பட்டஸ்வரூபமெதுவோ— அது - அப்பிரமஸ்வரூபமும்— நீ - உனதாத்மஸ்வரூபமும்— ஆய் - அபி
ன்னமாய்— நிகழுவாயென்றலும் - ப்ரகாசிப்பாயென்று கும்பமுனிசொல்லவும்— மன்னனுரைப்பா
ன் - அரசன்சொல்லுவான்— நீசொன்னெஞ்சுக்கு - தேவரீர்சொல்லியமனதுக்கு— பசுருமுதலாம் -
சொல்லப்பட்டகாரணமியாது— வடிவேது - உருவமியாது— எப்படி - எவ்விதம்— நான்றீர்ப்பது - யா
(னந்தமனதைக்) கெடுப்பது— உரையென்ன - சொல்லுவாயென்றுகேட்க— (எ - று.) - - - - ※

(௱௧௮) (அ - கை) மனதிற்குருவம்வாசனையதின்காரணமகம்பாவமாமெனல் (கவி) மற்றுங்கு
ம்பனுரைசெய்வான்மனத்துக்குருவம்வாதனையே, யுற்றமனமென்றுரைக்குமுரையுறுவாதனையின்பரி
யாயங், குற்றமெல்லாங்குவிந்திருக்குங்கூடாநானென்பதுதானே, செற்றமனமாமரத்துக்குத்திசழும்
விதையாற்றேர்வேந்தே (இ - ள்) மற்றுங்கும்பனுரைசெய்வான் - திரும்பவுங்கும்பமுனிசொல்லுவா
ர்— மனத்துக்குருவம் - மனத்துக்குவடிவமானது— வாதனையே - வாசனையேயாம்— உற்ற - பொருந்
திய— மனமென்றுரைக்குமுரை - மனமென்றுசொல்லப்பட்டசொல்— உறுவாதனையின் - பொருந்
தகின்றவாசனையினது— பரியாயம் - பரியாயநாமங்களாகும்— குற்றமெல்லாம் - பிழைகளியாவும்—
குவிந்திருக்குங்கூடாம் - கூடியிருக்கின்றகூண்டாகிய— நானென்பதுதானே - யானென்கின்றதே—
செற்றமனமாமரத்துக்கு - சலஞ்சாதிக்குமனமாகியவிருட்சத்துக்கு— திசழும்விதையாம் - விளங்குகி
ன்றவித்தாகும்— வேந்தே - அரசனே— தேர் - அறிந்துகொள்வாய்— (எ - ள்) - - - - ※

(௱௧௯) (அ - கை) அகம்பாவத்திலுதித்ததேயநந்தக்கரணமாமெனல் (கவி) வேறதியிலுண்டான
விதனங்குரந்தானுபவம்மெய்யாயறுதயம்வதாகி, போதமுருவனறியிலேபுதிதுமதனைதையுணர்செய்வ
ர்புத்தியெனவுரைத்தவிந்த, நீதியுறுபுத்தியெனுமங்குரத்தினாறை வளர்வைக்கொம்பைச்சங்கற்பமெ
ன்பர், பேதமிவையாதலாற்சித்தம்புநதும்பெரியமனமெனபதெலாம்பேர்கடானே. (இ - ள்) ஆதியிலு
ண்டான - முதலிலுண்டாகிய— இதனங்குரந்தான் - இவ் (அகம்பாவத்தின்) முளையானது— அனுபவ

மெய்யாய்- அநுபவாகாரமாய்— அறுதியிடுவதாகி- நிச்சயிப்பதாய்— ஒதுமுருவன்றியில்- சொல்லு
ம்வடிவமில்லாமல்— உதிக்கும்- உண்டாகும்—அத்தை- அந்தமுளையை— புத்தியென- புத்தியென்
று— உரைசெய்வர்- சொல்லுவார்கள்—உரைத்த- சொல்லப்பட்ட—இந்தநீதியுறு- இந்நீதியையுடை
ய— புத்தியெனுமங்குரத்தில்- புத்தியென்கின்றமுளையினிடத்தில்— நிறைவளர்வை- நிறைந்துவள
ர்தலையுடைய—கொம்பைச்சங்கற்பமென்பர்-கிளைகளைச்சங்கற்பமென்றுசொல்லுவார்கள்— பேதமிவை
யாதலால்- வேறுபாடிவையாதலினால்—சித்தம்புத்தி-சித்தமும்புத்தியும்— பெரியமனமெய்தெலாம்-
பெரிதாகியமனமென்பனயாவும்— பேர்படான்- அசங்கரத்தினதுநாமங்களாம்—(எ-று) - .. - *

(௩௪௰) (அ-கை) மனதைக்கெடுக்குமுபாயமறிவித்தல் (கவி) இனையமனமெனும்பொல்லா மரத்
தின்கொம்பையெப்பொழுதும்வெட்டிவேரீர்த்துமாய்ப்பாய், வினைபுறுவாதனைபணைகள்பலகாய்காய்
க்கும்வேதனைவாளாலுள்ளேவெட்டின்மாயு, நினைவறப்பற்றறமவுனமாகிவந்து நேர்ந்ததுசெய்வாருள்
ளேநெஞ்சைச்செற்றோர், ரனையமரப்பணைவெட்டற்செவுணமென்பரதன்வேரையறுத்தலேயறநன்றெ
ன்பார். (இ-ள்) இனையமனமெனும்- இப்படிப்பட்டமனமென்கின்ற— பொல்லாமரத்தின்கொம்
பை- கொடியவிருட்சத்தினதுகிளையை— எப்பொழுதும்- நாடோறும்— வெட்டிவேரீர்த்துமாய்ப்
பாய்- தறித்துத்தாரோடுங்கெடுப்பாய்—வினையுறுவாதனை- வினையையுடையவாசனையென்னும்—பணை
கள்- கிளைகள்— பலகாய்காய்க்கும்- வெகுவானகாய்களைக்காய்க்கும்— வேதனைவாளால்- ஞானமென்
னுங்கத்தியினால்— உள்ளேவெட்டின்மாயும்- அகத்திற்றறிக்கிற்கெடும்— நினைவற- பாவனைகெடவு
ம்— பற்றற- ஆசைகெடவும்— மவுனமாகி- மகாமௌனமாய்— வந்துநேர்ந்ததுசெய்வார்- வந்தெ
திர்ந்ததைச்செய்பவர்கள்— உள்ளேநெஞ்சைச்செற்றோர்- அகத்தின்மனதைச் செயித்தவர்கள்— அ
னையமரப்பணைவெட்டல்- அவ்விருட்சத்தின்கிளைகளைவெட்டுதல்—செவுணமென்பர்- செவுணமென்
றுசொல்லுவார்கள் — அதன்வேரையறுத்தலே- அதனதுமூலத்தைக்கெடுத்தலே— அறநன்றென்பர்-
முக்கியமென்றுசொல்லுவார்கள்— (இ-று) [இ-கூ-க-ம] இந்திரியத்தோடுந்தேசப்பற்றைநீக்கிச்சித்
தத்யாகஞ்செய்யும்பொருட்டதனுருவமாகியவாசனைமுதலிய சங்கற்பங்களைக்கெடுத்தல்செவுணமென
வும், அதன்மூலமாகியவகம்பாவத்தைக்கெடுத்தல் முக்கியமெனவுமிரண்டுவிதமாகக்கூறினதென்பதாம்

(௩௪௧) (அ-கை) அகம்பாவத்தைக்கெடுக்குமுபாயங்கூறல். (கவி) ஆதலினான்மிகநல்லநெறியா
லேநீயந்தமனமரத்தின்வேரறுத்துச்சுட்டாற், சாதமுறாதென்றலுமேமன்னன்சொல்வான்றனிமரத்தி
ன்வித்தாகுமகம்பாவத்தை, மாதவனேசுடக்கனலேதெனலுங்கும்பன்மறுத்துரைப்பானானொன்றெண்
ணுகின்ற, போதவிசாரந்தானேமனத்தின்வித்தைப்பொன்றுவிக்குங்கனலெனவும் பூபன்சொல்வான்.
(இ-ள்) ஆதலினால்- ஆதலால்— மிகநல்லநெறியால்- மிகுந்தசன்மார்க்கத்தினால்— அந்தமனம்- அந்
தமனமென்னும்— மரத்தின்வேர்- விருட்சத்தினதுமூலமாகிய (வகம்பாவனையை)— நீயறுத்துச்சுட்
டால்- நீகளைந்தெரித்தால்— சாதமுறாதென்றலும்- (மன) முண்டாகாதென்றுகும்பமுனிசொல்லவு
ம்— மன்னன்சொல்வான்- அரசன்சொல்லுவான்—தனிமரத்தின்.. தனிமையானமனவிருட்சத்தின்—
வித்தாகும்- பீசமாகிய— அகம்பாவத்தை- அகம்பாவனையை— மாதவனே- மேலானதவமுடையமு
னியே— சுடக்கனலேதெனலும்- எரிக்கவக்கினியேதென்றரசன்கேட்கவும்— கும்பன்மறுத்துரைப்பா
ன்— கும்பமுனிதிரும்பவுஞ்சொல்லுவார்—நானொன்றெண்ணுகின்ற- யானொன்றுசிந்திக்கின்ற—
போதவிசாரந்தானே- ஆத்மஞானவிசாரணையே— மனத்தின்வித்தை- மனதினதுபீசத்தை— பொ
ன்றிவிக்கும்- கெடுக்கின்ற— கனலெனவும்- அக்கினியெனவும்— பூபன்சொல்வான்- அரசன்சொல்லு
வான்— (எ-று) [இ-ம்] அகம்பாவத்தைக்கெடுக்கின்மனமுண்டாகாததலாலதையாத்மஞானவிசா
ரத்தாற் கெடுக்கவேண்டுமென்பதாம் - - - - - - - - - - - - - - - - - - *

(௩௪௨) (அ-கை) விசாரமுகத்தான்முன்பற்றறநீக்கியசகத்துமுதலியவைகளையறிகின்றவறிவைக்கொ
ண்டுபார்க்கினவைகள்சடமாயிருத்தலா லவைகளியானன்றெனத்தள்ளினவிடத்தவைகட்குச் சாக்ஷியா
ய்விளங்கியசுயஞ்சித்தேசேஷித்திருத்தலாலதேதானெனத்தரிசித்தானெனல் (கவி) என்னுடையபுந்தி
யினாலெண்ணினேனானிச்சகநானல்லமலவுடலுநானல்லத், துன்னுபொறிகளுமல்லமனமுமல்லத்தொடர்பு
த்தியல்லவகங்காரமல்ல, வின்னசடமாதலினாலெனலுங்கும் பனிவையன்றேல்வேறார்நீயியம்புகென்ன,
மன்னனுரைப்பானெல்லாம்படைத்தளித்தமாசறுசின்மாத்திரமாம்வடிவதானே (இ-ள்) என்னுடைய
புந்தியினால்- எனதறிவினால்— நான்- யான்—எண்ணினேன்- (அநேகவிதமாகச்) சிந்தித்துப்பார்த்தே
ன்— சடமாதலினால்- அறிவின்மையாதலின்— இச்சகநானல்ல- இவ்வுலகமும்யானன்று—மலவுடலு
னல்ல- (இம்) மலசரீரமும்யானன்று— துன்னுபொறிகளுமல்ல- பொருந்தியவிந்திரியங்களும்யான
ன்று— மனமுமல்ல- (சிந்திக்கின்ற) மனமும்யானன்று—தொடர்புத்தியல்ல- தொடர்பாகின்றபுத்தி
யும்யானன்று— இன்னவகங்காரமல்ல- (அபிமானித்தெழுகின்ற) தீயவகங்காரமும்யானன்று—எனலு
ம்- என்றரசன்சொல்லவும்— கும்பன்- கும்பமுனியானவர்— இவையன்றேல்- இவைகளீயல்லவாயி
ன்— நீவேறார்- நீவேறியார்—இயம்புகென்ன- சொல்வாயென்றுகேட்க— மன்னனுரைப்பான்- அ
ரசன்சொல்லுவான்—எல்லாம்படைத்து-சகலத்தையுமுண்டாக்கி—அளித்த- இரட்சித்(தடக்குகின்ற)—
மாசறு- களங்கமற்ற—சின்மாத்திரமாம்- சைதன்யமாத்திரமாகிய— வடிவதானே- ஸ்வரூபமேயான்
(எ-று.) [இ-ம்.] பரத்யோகாத்மஸ்வரூபமாய்விளங்கிடகூடஸ்தஸ்வரூபமானேனென்பதாம் - - - - *

(௩௪௩). (அ-கை.) தொம்பதத்தைத்தரிசிப்பித்துதற்பதத்தைத்தரிசிப்பிக்கத்தொடங்கியதிகளைந்த
சடப்வேறுசித்துவேறாயிருமைப்பட்டிருத்தலைச்சின்மாத்திரமாயொருமைப்படுத்துநிமித்தமச்சொரூ
பஞானப்ரதிபலனமாகத்தோற்றியசகத்துமதையறிந்தவிருத்திஞானமுமஃதைத்தானென்கின்றவகம்பா
வமுதலியவுங் கற்பிதமாகக்காண்பிக்கவவ்வகம்பாவத்தின்காரணமியாதெனவினவுதல் (கவி) இத்தவடிவா

மெனக்கோரோதுகா ணேனிடர்மனத்தாரு வின்விதையாமகங்காரத்தை, யுந்தும்வகையறிகிலேனுந்தவு
ந்தவோடிவருமிதனுலுள்ளுடைந்தேனென்ன வந்தணன்சொல்வான்மன்னுகாரணத்தையன்றியோர்கா
ரியமுண்டாகமாட்டா முந்துமகங்காரகாரணத்தை நாடிமொழி யென்னமீண்டரசன்மொழிவதானுன்.
(இ-ள்) இந்தவடிவாமெனக்கு-இப்படிப்பட்டஞானஸ்வரூபமாகியவெனக்கு— ஒரோதுகாணேன்-ஒ
ருகாரணத்தையுங்கண்டிலன்— இடர்- துன்பத்தையுடைய— மனத்தாருவின்விதையாம்- மனவிருட்
சத்தின்வித்தாகிய— அகங்காரத்தை- அகம்பாவத்தை— உந்தும்வகையறிகிலேன்- தள்ளுகின்றமார்க்கத்
தைத்தெரிந்திலன்— உர்தவுந்த- தள்ளத்தள்ள— ஓடிவருமிதனுல்- ஓடிவாராநின்ற (விவ்வகம்) பாவத்
தினுல்— உள்ளுடைந்தேனென்ன- மனந்தளர்த்தேனென்றரசன்சொல்ல— அந்தணன்சொல்வான்-
கும்பமுனிசொல்லுவார்— மன்னு- அரசனே— காரணத்தையன்றி- காரணத்தையல்லாமல்—ஓர்காரி
யமுண்டாகமாட்டா- ஒருகாரியமுண்டாகாது—முந்து-முன்னுநின்ற— அகங்காரகாரணத்தைநாடி-
அகம்பாவத்தின் காரணத்தைப் பார்த்து— மொழியென்ன- சொல்லுவாயென்றுசொல்ல— மீண்டர
சன்மொழிவதானுன்- திரும்பமன்னவன்சொல்லத்தொடங்கினுன்— (எ-று) - - - - - *

(௱௪௪) (அ-கை) அகம்பாவத்தின்காரணமறிவெனிலதன்காரணமியாதெனல். (கவி) அகமென்
னுங்குற்றத்தின்காரணந்தானறிவாகுமவ்வறிவிங்கடங்குமாறென், மிகவுங்காண்பவற்றிலறிவெழுதலா
லேமெலிகின்றேன்காண்பவற்றைவிடுமாறெங்ஙன், புகல்கென்னமீண்டந்தக்கும்பன்சொல்வான்போ
தத்தின்காரணநீபுகன்றாற்பின்னே, நிகழுங்காரணமுமகாரணமுஞ்சொல்வேனினக்குநானெனவதற்கு
நிருபன்சொல்வான் (இ-ள்) அகமென்னுங்குற்றத்தின்- அகம்பாவமென்கின்றகுற்றத்திற்கு— காரண
ந்தான்-காரணமானது—அறிவாகும்-போதமாகும்— அவ்வறிவு- அப்போதமானது—இங்கடங்குமா
றென்- இவ்விடத்திலயிக்கும்விதமென்ன— மிகவுங்காண்பவற்றில்- மிகவுந்திரிஸ்யத்தில்— அறிவெழு
தலால்- போதமுண்டாதலினுல்— மெலிகின்றேன்- இளைக்கின்றேன்— காண்பவற்றை- காணப்பட்
டதிரிஸ்யத்தை—விடுமாறெங்ஙன்- நீக்கும்விதமெப்படி— புகல்கென்ன-சொல்லுவாயென்(றரசன்)
கேட்க— மீண்டந்தக்கும்பன்சொல்வான்- திரும்பவந்தக்கும்பமுனிசொல்லுவார்— போதத்தின்கார
ணம்-அறிவின்காரணத்தை—நீபுகன்றால்-நீசொன்னுல்—பின்னே நிகழுங்காரணமும்- பின்புவிளங்கு
ங்காரணத்தையும்—அ காரணமும்-காரணமல்லாததையும்— நினக்குநான்சொல்வேனென- உனக்கு
யான்சொல்வேனென்றுசொல்ல— அதற்குநிருபன்சொல்வான்- அதற்கரசன்சொல்வான் (எ-று) *

(௱௪௫) (அ-கை) விருத்திஞானம்விடயத்தைப்பற்றியெழுதலினவ்விடயங்காரணமாமஃதுநசிக்
கினகம்பாவஞானமுநசிக்குமெனிலவ்விடயநீங்கினவிடத்தறிவெங்ஙனம்விளங்குமெனல். (கவி) புகன்
றவுடன்முதற்பொருளுண்டாதலாலேபோதமுளதாமவைபொய்யானுவில்லை, யகங்கரவேதனமென்னு
மனத்தின்வித்துமடங்கிவிடுமெனவதற்குக்கும்பன்சொல்வா, னுகந்தவுடலாதியுளதேற்சித்துண்டாமு
டலாதியல்பொருள்களிலாதபோதி, னிகழ்ந்தவறிவெப்படியேநின்றதென்றுநிகழ்த்தென்னமீண்டந்
தநிருபன்சொல்வான். (இ-ள்) புகன்றவுடன்முதல்- சொல்லப்பட்டசரீரமுதலாகிய— பொருளுண்
டாதலால்- வஸ்துசத்தையினுல்— போதமுளதாம்- அறிவுண்டாகும்— அவை- அந்தவஸ்துசத்தை—
பொய்யானுவில்லை- அசத்தியமானு(லறி)வில்லை— அகங்கரவேதனமென்னும்- அகம்பாவஞானமெ
ன்கின்ற— மனத்தின்வித்தும்- மனத்தின்விதையும்— அடங்கிவிடுமென- ஒடுங்கிவிடுமென்(றரசன்)
சொல்ல— அதற்குக்கும்பன்சொல்வான்- அதற்குக்கும்பமுனிசொல்லுவார்— உகந்தவுடலாதியுளதே
ல்- விரும்பியசரீரமுதலானவஸ்துசத்தையிருந்தால்— சித்துண்டாம்- அறிவுண்டாயிருக்கும்— உடலா
தி- சரீரமுதலான— பல்பொருள்களிலாதபோதின்- பலவஸ்துக்களில்லாதசமயத்தில்— நிகழ்ந்தவ
றிவு- விளங்கியஞானமானது— எப்படிநின்றதென்று- எப்படியிருந்ததென்று— நிகழ்த்தென்ன-
சொல்லென்றுகேட்க— மீண்டந்தநிருபன்சொல்வான்- திரும்பவந்தவரசன்சொல்லுவான்— (எ-று)

(௱௪௬) (அ-கை) தேகமுதலியவிடயமெங்ஙனநீங்குமதைப்பற்றியெழுகின்றவறிவெங்ஙனந்த
னியேயிருக்குமெனிலங்ஙனந்தனியேயில்லாமையாற்றேகங்காரணமாகாவஃதங்ஙனமாகவேயிப்போ
தங்காரியமாகாவஃதங்ஙனமாகவேவதனுற்றோற்றியவகம்பாவமுதலிய யாவுமித்தையாய்ப்பிரமப்ரதி
பாமாத்திரமாய்விளங்குதெனல்(கவி) கரசரணமுதலங்கமுதலாய்ச்செய்யுங்கருமபலமுளதாய்கையாளு
ங்காயங், குரவவிலதெனும்படியென்னென்னக்கும்பன்கூறுவான்காரணத்தைக்கூடாதெனனில், விரவி
யகாரியத்தானுமிலதாமந்தவேதனமுமயக்கமேமிகுமயக்கால், வருவனவெல்லாமிலதாமேதுவன்றிவரு
பொருள்பொய்யாங்கயிற்றில்வருநாகம்போல். (இ-ள்) கரசரணமுதல்- அத்தபாதாதிய— அங்கமு
தலாய்ச்செய்யும்-அவயவங்களாதியாகச்செய்யப்பட்ட—கருமபலமுளதாய்- கருமத்தின்பயனையுடை
யதாய்— கையாளுங்காயம்- அனுபவிக்கப்பட்டசரீரமானது— குரவ- எனதாசிரியரே— இலதெனும்
படியென்னென்ன- இல்லையென்கின்றவிதமெப்படியென்(றரசன்)கேட்க— கும்பன்கூறுவான்- கும்
பமுனிசொல்லுவார்— காரணத்தைக்கூடாதென்னில்-(கருமத்தினுலுள்ளவிக்காயங்)காரணத்தைப்பொ
ருந்தாததானுல்—விரவியகாரியத்தானுமிலதாம்-பொருந்திய (போதமென்னுங்)காரியமுமில்லையாகு
ம்—அந்தவேதனமும- அந்தவறிவும்—மயக்கமே-பிரமையேயாம்—மிகுமயக்கால்-மிகுந்தபிரமையி
னுல்— வருவனவெல்லாமிலதாம்-வருவனவாகிய(வகம்பாவமுதலிய)சகலமுமில்லாததாகும்—ஏதுவன்
றிவருபொருள்-காரணமல்லாமல்வரப்பட்டவஸ்துக்கள்—கயிற்றில்வருநாகம்போற்பொய்யாம்- இரச்
சுவிலுண்டான சர்ப்பத்தைப்போலமித்தையாம் (எ-று.) [இ-ச-கம] பிரமப்ரதியாமாத்திரமாகப்யா
ஞ்சபூதமெனஇகநதோற்றினதேயன்றியதற்கோருருவமின்மையாலதுவுமதனுற் றோற்றியயாவையுஞ்
சிதப்ரகாசமாய்விளங்குதலாற்காரணகாரியமிரண்டுமின்றென்றதற்பதார்த்தத்தைத் தரிசிப்பித்ததாம

(௱௪௭) (அ-கை.) தற்பதத்தைத்தரிசிப்பித்தசிபதத்தைத்தரிசிப்பிக்கத்தொடங்கிவிடயமும்யோது

முங்காரணகாரியமாகாதெனக்கூறவஃதெங்ஙனங்கூடுஞ்சகத்துக்குப்பிரமன்காரணமல்லவாமெவ்விபியா வுஞ்சத்தாமாத்திரமாயிருத்தலிற்காரணமாகானெனல். (கவி)என்றலுமேயாதிமுதலுள்ளவேதாவியற்றி யபல்படைப்பாகுமிந்தஞால, நின்றவவனிதற்குக்காரணமல்லாதநெறியேதென்றலுங்கும்பனிசழ்த்து கிற்பான்,துன்றுசிருட்டியின்முன்புவெறிதாய்ச்சாந்தந்தொடர்பிரமமேயுளதாய்த்துலங்குமந்தவொ ன்றொழியவிரண்டில்லாக்காரணத்தாலுயர்வேதாக்காரணத்தையுறானென்றேத (இ-ள்) என்றலும்- இப்படியென்றுகும்பமுனிசொல்லவும்— இந்தஞாலம்- இச்சகத்து— ஆதிமுதலுள்ளவேதா- முதன் மையாயிருக்கின்றபிரமன்— இயற்றிய- உண்டாக்கிய— பல்படைப்பாகும்- பலசிருட்டியாகிய— இ ந்தஞாலநின்றன- இச்சகமிருந்தன—அவன்- அந்தப்பிரமன்— இதற்குக்காரணமல்லாத- இச்சகத்துக் குக்காரணமல்லாத— நெறியேதென்றலும்- மார்க்கமெதுவென்றரசன்கேட்கவும்— கும்பனிகழ்த்து கிற்பான்- கும்பமுனிசொல்லுவார்— துன்றுசிருட்டியின்முன்பு- நெருங்கியசிருட்டிக்குமுன்னே— வெறிதாய்- கேவலமாய்— சாந்தந்தொடர்பிரமமே- உபசாந்தமாகியபிரமஸ்வரூபமே— உளதா ய்த்துலங்கும்- சத்தாய்ப்பிரகாசிக்கும்—அந்தவொன்றொழிய- அவவொன்றைத்தவிர— இரண்டில்லா க்காரணத்தால்- இரண்டில்லாதகாரணத்தினால்— உயர்வேதா- மேலானபிரமாவும்— காரணத்தையுறா ன்- காரணத்தையடையான்— என்றோத- என்றுசொல்ல— (எ-று) - - - - - - - ※

(௩௪௮)(அ-கை.)அங்ஙனமாயின்பிரமனுக்குப் பிரமங்காரணமன்றோவெனிலஃதுமில்லையெனல் (கவி) காவலன்பார்த்துயர்பிரமம்வேதாவுக்குக்காரணமன்றோவென்னக்கும்பன்சொல்வான், கேவலம ச்சுதமநந்தஞ்சாந்தஞ்சுத்தங் கேடுபிறப்பிடர்தோற்றங் கிட்டாதென்றும், பாவனையற்றடிமுடிவற் றொன்றாய்த்துன்றிப் பகர்வரிதாய் நாடரிதாய்ப்பரமநிற்குந், தாவரியவதுவெங்ஙனேதுவெத்தாற்ச மைப்பவனுய்ப்புசிப்பவனுய்ச்சாருமாறே (இ-ள்) காவலன்பார்த்து- அரசன்கும்ப(முனியை)நோக் கி— உயர்பிரமம்- மேலானபிரமமானது— வேதாவுக்கு- பிரமாவுக்கு— காரணமன்றோவென்ன- கா ரணமல்லவாவென்றுகேட்க— கும்பன்சொல்வான்- கும்பமுனிசொல்லுவார்— கேவலம்- கைவல்ய மாகியும்— அச்சுதம்- கெடாததாகியும்—அநந்தம்- அளவில்லாததாகியும்—சாந்தம்- உபசாந்தமாகி யும்— சுத்தம்- பரிசுத்தமாகியும்—கேடு- இறத்தலும்—பிறப்பு- சனித்தலும்—இடர்- துன்பமும்— தோற்றம்- வியக்தமும்— என்றும்- எப்பொழுதும்—கிட்டாது- நெருங்காமல்— பாவனையற்று- பாவமிறந்து— அடிமுடிவற்று- ஆதியந்தமிறந்து—ஒன்றாய்த்துன்றி- அத்துவிதமாகநிறைந்து—ப கர்வரிதாய்நாடரிதாய்- வசனாதீதமாகியும்சித்தனாதீதமாகியுமிருக்கின்ற—பரமநிற்கும்- பிரமஸ்வரூபமி ருக்கும்— தாவரியவதுவெங்ஙனேது- அறிதற்கரியவப்பிரமமெப்படிகாரணமாம்— எத்தால்- யாதினா ல்—சமைப்பவனுய்ப்புசிப்பவனுய்ச்சாருமாறு- கருத்தாவாகியும்போக்தாவாகியுஞ்சேரும்விதம்(எ-று)

(௩௪௯) (அ-கை) சர்வம்பிரமமயமெனல் (கவி) ஆதலினுலீதொன்றுஞ்செய்ததல்லவடுத்துளவி ச்சகமில்லையறிவுமட்டு, மேதகுசங்கற்பிதமேவேதாவாகு மெய்யாகவறிவன்றிவேறொன்றில்லைச், சேத னமாத்திரத்துதித்தசிருட்டியந்தச் சேதனமேவடிவென்று செப்பலாகு, மோதியசெய்வோன்புசிப் போனிரண்டுமல்லனுறுபவந்தீர் பிரமமேயுள்ளவெல்லாம் (இ-ள்) ஆதலினால்- ஆகையினால்—ஈது- இச்சகம்— ஒன்றுஞ்செய்ததல்ல- எவ்வளவும்பண்ணப்பட்டதன்று— அடுத்துள- சேர்ந்திருக்கின் ற— இச்சகமில்லை- இவ்வுலகமுண்டானதுமில்லை— அறிவுமட்டும்- சித்துமாத்திரத்தின்— மேதகுசங்க ற்பிதமே- மேன்மையானசங்கற்பமே— வேதாவாகும்- பிரமாவாகும்—மெய்யாக- உண்மையாக— அறிவன்றி- ஞானத்தைத்தவிர—வேறொன்றில்லை- வேறேயொன்றுமில்லை—சேதனமாத்திரத்து- ஞா னமாத்திரத்தில்— உதித்தசிருட்டி- உண்டானசிருஷ்டியானது— அந்தச்சேதனமே வடிவென்று- அ ந்தஞானமேஸ்வரூபமென்று—செப்பலாகும்- சொல்லப்படும்—உள்ளவெல்லாம்- இருக்கின்றசகலமு ம்— உறுபவந்தீர்பிரமமே- பொருந்தியசநநந்தீர்த்தபிரமஸ்வரூபமே(யாதலால்)— ஓதியசெய்வோ ன்- சொல்லப்பட்டகருத்தாவும்—புசிப்போன்- போக்தாவும்— இரண்டுமல்லன்- இவ்விரண்டுமல்லாத வன்(எ-று) [இ-௩-௧-ம்] பிரமப்ரதிபாமாத்திரமாய்ச்சகத்துவிளங்குதலாற் சகமேயில்லையிங்ஙனமாம் போதெங்ஙனங்காரியமாமிங்ஙனங்காரிய மாகாதபோது பிரமனெங்ஙனங்காரணமாவனிவர்க்குக் கார ணம்பிரமமென்றலது சுசாதியம்விசாதியஞ்சுகதபேதமறத்தானேதானாய் விளங்குதலினெங்ஙனங்கார ணமாமாதலாற்காரணகாரியமின்றிச்சின்மாத்திரமேவிளங்குமெனவசிட்டவருத்தத்தைத்தரிசிப்பித்ததாம்

(௩௫௰)(அ-கை.)சர்வம்பிரமமயமென்னுமனுபவதிருஷ்டியாலஞ்ஞானங்கெடுமெனல்.(கவி)திட முறநிச்சயித்துள்ளேயஞ்ஞானத்தைச்சிதைவித்தாலஞ்ஞானஞ்சிதைந்ததேயாம்,படர்கருமச்சிதைவினுலவ ன்றிமோகம்பகர்நிலைமைநழுவாதுபகரஞ்ஞானமடைவுறத்தேய்ந்திடிற்பழையநிலைமைநீங்காவாதிப தமாமதனுலாதிதேவன்,றடமுறுசிற்சுருபத்தாற் றன்மனத்தாற்றானேநித்தலுஞ்சிருட்டிதந்துநல்கும். (இ-ள்.) திடமுறநிச்சயித்து- உறுதியாகநிச்சயஞ்செய்து— உள்ளஞ்ஞானமதைச்சிதைவித்தால்- அகத் தின்கண்ணுள்ளவறியாமையைக்கெடுப்பித்தால்—அஞ்ஞானம்- அறியாமையானது—சிதைந்ததேயாம்- அழிந்ததேயாகும்— படர்கருமச்சிதைவினாலன்றி- மிகுந்தகருமநாசத்தினாலல்லாமல்— மோகம்பகர் நிலைமைநழுவாது- மயக்கமாகச்சொல்லியநிச்சயம்வழுவாது—பகரஞ்ஞானம்- சொல்லப்பட்டவஞ்ஞா னமானது— அடைவுறத்தேய்ந்திடில்- கிரமமாகநசிக்கில்—பழையநிலைமைநீங்கா- முன்னுள்ளசகத்தி னிச்சயநீங்காமல்— ஆதிபதமாம்- முதன்மையானபரமபதமாகும்— அதனாலாதிதேவன்- அதனான்மு தற்கடவுளானபரமாத்மா— தடமுறுசிற்சுருபத்தால்- வியாபகமாகியஞானஸ்வரூபத்தினால்—தனமனத் தாற்றானே- தன்மனதினால்— நித்தலுஞ்சிருட்டிதந்துநல்கும்- எப்பொழுதுஞ்சிருஷ்டியைச்செய்யும்(எ-று)

(௩௫௧) (அ-கை) அஞ்ஞானநீங்கிவிளங்கியல்வாறுபூதியைக்கூறுதல் (கவி) ஆற்றுமதத்துவமா னவைநாற்றேயபமெனவே சொலப்பட்ட தசிலமாகித், தோற்றுமிவையுபசாந்தச்சுருபமாகுந்தோ

ன்றலேயெனவொக்குஞ்சொன்னதெல்லா, மேற்றனவேபடைப்பவனின்மையினால்வையமில்லையாமத
னாற்பல்பொருணோக்கில்லைத், தேற்றுகின்றவிவ்வகையாலறிந்தேனன்றாய்ச்சிவமானேன்வேறொன்றுந்
தெரியக்காணேன் (இ-ள்) ஆற்றுமதத்துவமானவதனால்- ஆத்மதத்துவமாயவதனாலே— அயனென்
று- பிரமாவென்று— சொல்லப்பட்டது- சொல்லப்படுவது— அகிலமாகி- எல்லாமாய்— தோற்று
மிவை- காணப்பட்டவிச்சகங்கள்— உபசாந்தச்சுருபமாகும்- உபசாந்தஸ்வருபமேயாகும்— தோன்ற
லேயென- அரசனேயென்று— சொன்னதெல்லாம்- (கும்பமுனி) யுபதேசித்தவனைத்தும்— ஒக்கும்-
ஒப்பேயாகும்— ஏற்றனவே- (சிருட்டிக்கு) முன்னமே— படைப்பவன்- சிருட்டிப்பவன்— இன்
மையினால்- இல்லாததினால்— வையமில்லையாம்- சகமில்லையாகும்— அதனால்- அதினாலே— பல்பொரு
ணோக்கில்லை- பலவானபதார்த்ததிருஷ்டியில்லை— தேற்றுகின்ற- தெளிவிக்கின்ற— இவ்வகையால்- இந்
தப்ரகாரத்தினால்— நன்றாய்- நன்றாக— அறிந்தேன்- தெரிந்தேன்— சிவமானேன்- சிவஸ்வருபமா
னேன்— வேறொன்றும்- மற்றொன்றும்— தெரியக்காணேன்- தோற்றப்பார்த்திலன்— (எ-று) *
[இ-உ-க-ம்] பிரமமேபிரமனைப்போலவும்ப்ரபஞ்சம்போலவுந்தோற்றினதேயன்றிவேறின்றென்னு
மனுபவத்தினாலஞ்ஞானங்கெடுமெனப்போதிக்கமுன்னமேயகோசரமானபிரமமாத்திரமாய்விளங்குதி
னஃதெங்ஙனங்காரணமாமது காரணமாகாதபோதுசகமெப்படிகாரியப்படுமஃதின்றியபோதத்தைய
றியும்போதமெங்ஙனமுண்டாமஃதின்றிய போதத்தையானென்னுமகம்பாவமெங்ஙனமுண்டாமஃதி
ன்றியபோதத்தைச்சிந்திக்குஞ்சித்தமெங்ஙனமுண்டாமாதலாற்சர்வம்பிரமமென்னுந்திருஷ்டியாற்சர்வ
மில்லாமற்போனதாலஞ்ஞானநீங்கிச்சிவஸ்வருபமாய்விளங்குகின்றேனென்பதாம் - - - - - *

(௱௫௨) (அ-கை) இவ்வனுபவஞ்சமாதிகூடிச்சகத்திலாளவேண்டுநிமித்தஞ்சின்மயமாய்நிற்கி
ன்றேனென்றவனைநெடுநாளாயுள்ளவிடயபழக்கமிதனாற்சிலநாளினிங்கிச்சின்மாத்திரமாய்விளங்குவா
யெனல். (கவி) எனைத்தொழுதேன்பல்பொருணோக்கறிவினாலே யிப்படிபொய்யாய்த் தோன்றிற்றிப்
போதத்தா, னினைப்பினுபசாந்தமாய்விசும்பினைப்போனிற்கின்றேனென நிருபனிகழ்த்தலோடுந், தனை
த்தருகும்பனுஞ்சொல்வான்றேசகாலந்தடந்திசைச்சிந்தனைத்தொழில்கள்சார்ந்தவெல்லா, மனைத்தையு
ங்காண்பதுசகத்தைப்பிரித்துக்காண்கையதுநெடுநாளிற்சாந்தமாகிப்போகும் (இ-ள்) எனைத்தொழு
தேன்- ஆத்மாவைவணங்கினேன்—பல்பொருள்- பலபதார்த்தங்களை— நோக்கறிவினால்- பார்க்கின்றவறி
வினால்—இப்படிபொய்யாய்த்தோன்றிற்று- இங்ஙனமசத்தியமாய்த்தோற்றினதென்றறிந்தது— இப்
போதத்தால்- இந்தஞானத்தினால்— நினைப்பினுபசாந்தமாய்- சிந்தனையற்றவுபசாந்தமாகி— விசும்பினை
ப்போல்- ஆகாயத்தைப்போல— நிற்கின்றேனென- (பூரணமா)யிருக்கின்றேனென்று— நிருபன்- அர
சனானவன்— நிகழ்த்தலோடும்- சொல்லவும்— தனைத்தரு- ஆத்மாவைக்கொடுக்கின்ற— கும்பனுஞ்
சொல்வான்- கும்பமுனியுஞ்சொல்லுவார்— தேசம்- தேசமும்— காலம்- காலமும்— தடந்திசை-
விசாலமாகியதிக்குகளும்— சிந்தனைத்தொழில்கள்- மனச்செயல்களும்— சார்ந்தவெல்லாம்- அடைந்
தசகலமும்— அனைத்தையுங்காண்பது- யாவையும்பார்ப்பது—சகத்தை- உலகத்தை— பிரித்துக்காண்
கை- பகுத்துப்பார்ப்பதாம்— அதுநெடுநாளில்- அப்பிரிவுவெகுகாலமாயுள்ளது— (சிலநாளில்) சா
ந்தமாகிப்போகும்- விடுபட்டுப்போகும்— (எ-று) - - - - - - - - - - - - *

(௱௫௩)(அ-கை) முன்சிரவணமானபடிமனனஞ்செய்துநிதித்தியிற்காக்ஷிப்பட்டானெனல் (கவி)
சாந்தமுறவழிவற்றபிரமமாங்கேதனிநிற்குமெனக்கும்பன்சாற்றலோடும், வேந்தனறிவுற்றுமிகவிளங்
கிநின்றான்வெம்மாயைக்குகைநின்றுவெளியிலானா, னந்திறமேபணதியறக்கும்பன்சொன்னவதுகுறித்
துத்தனதாமித்தற்பதத்தே, காந்தியுறச்சேர்ந்தொளித்தான்மனமுங்கண்ணுங்கட்டுரையற்றானிறைந்தா
ன்கணத்திலாங்கே (இ-ள்) சாந்தமுற- உபசாந்தமடைய— அழிவற்றபிரமம்- நாசமில்லாதபிரமமா
னது— ஆங்கேதனிநிற்குமென- அவ்விடத்திற்றனிமையாயிருக்குமென்று— கும்பன்சாற்றலோடும்-
கும்பமுனிசொல்லவும்— வேந்தன்- அரசனானவன்— அறிவுற்று- ஞானத்தைபடைந்து— மிகவிளங்
கிநின்றான்- மிகவும்ப்ரகாசித்திருந்தான்— வெம்மாயைக்குகைநின்று- கொடியமாயாக்கிரகத்திலிரு
ந்து— வெளியிலானான்- வெளிப்பட்டான்— அந்திறமே- அப்படியே—பணதியற- கற்பனைநீங்கு
ம்படி— கும்பன்சொன்ன- கும்பமுனியருள்செய்த— அதுகுறித்து- அதைக்கருதி— தனதாமித்தற்ப
தத்து- தனதாகியவிப்பிரமபதத்தில்— காந்தியுற- ப்ரகாசமாக—சேர்ந்தொளித்தான்- சேர்ந்தடங்கினா
ன்— மனமும்- மனத்தையும்—கண்ணும்- பார்வையையும்— கட்டுரை- மிகுவசனத்தையும்—அற்றான்-
நீங்கினவன்— கணத்தில்- ஒருக்ஷணத்தில்— ஆங்கு- அந்தப்பிரமபதத்தில்— நிறைந்தான்- பூரணமா
னான்— எ-று ) [இ-உ-க-ம] சந்தேகம்விபரீதமின்றிபாத்மஸ்வரூபத்தைத்தரிசித்தானென்பதாம் *

(௱௫௪) (அ-கை) நிதித்தியின்காக்ஷிபிற்றுங்கநிவிற்தியுந்தலைப்பற்றவாநந்தமுதலிய வனுபவமு
முண்டாயிருக்குதோவென்றாசிரியரனுபவம்வினவுதல் (கவி) ஒருமுகுர்த்தமிருந்துணர்ந்துவிழித்த
லோடுமுயர்கும்பனுரைசெய்வானுளதாய்நன்றாய், நிருமலமாய்ச்சுத்தமாய்மிகமெற்றென்றுநிருவிக
ற்பங்களுக்கெல்லாநிலையமாகித், திருமிகுமிப்பதத்திலேசுகமாய்த்துன்பந்தீர்ந்தனையோவுள்ளுணர்வு
தெளிவுற்றாயோ, வருமயக்கமொழிந்தனையோவுபநன்றாயறிந்தனையோகாண்பனகண்டனையோவெ
ன்றான் (இ-ள்) ஒருமுகுர்த்தமிருந்துணர்ந்து- ஒருசடிகைநிதித்தியிலிருந்தறிந்து—விழித்தலோடு
ம்- (அரசன்)விழித்தமாத்திரத்தில்— உயர்கும்பனுரைசெய்வான்- மேலானகும்பமுனிசொல்லுவார்— உ
ளதாய்- உள்ளதாகியும்— நன்றாய்- நன்றாகியும்— நிருமலமாய்- நிருமலமாகியும்— சுத்தமாய்- பரி
சுத்தமாகியும்— மிகமெற்றென்று- மிகவுமிருதுவாகியும்— நிருவிகற்பங்களுக்கெல்லாம்- நிருவிகற்
பங்களனைத்தினுக்கும்— நிலையமாகி- நிலையாகியுமிருக்கின்ற— திருமிகும்- செல்வமிகுந்த— இப்பதத்
தில்- இந்தப்பிரமபதத்தில்—சுகமாய்- ஆநந்தமாகி— துன்பந்தீர்ந்தனையோ- துக்கநிவர்த்தியோ— உள்

ளுணர்வு- ஆத்மஞானத்தில்— தெளிவுற்றாயோ- தெளிவடைந்தாயோ— வருமயக்கமொழிந்தனையோ- வாராநின்றபிரமைநீங்கினையோ— ஞேயநன்றாயறிந்தனையோ- அறியத்தக்கதை நன்றாயறிந்தாயோ— காண்டனகண்டனையோவென்றான்- பார்க்கவேண்டியதைப்பார்த்தாயோவென்றுகேட்டார் (எ-று) *

(ாருரு) (அ-கை) பெற்றவனுபூதியின்விலாசத்தைச்சொல்லுதல் (கவி) நரபாலனதற்குரைப்பான்பகவனே நின்னருளாலேபெருஞ்செல்வநலத்தான்மிக்குப், பரமாகியனைத்திற்குமேலாய்விஞ்சுபதங்கண்டேனகோவகோபரமஞானந், திரமானபெரும்பெரியோர்கூட்டங்கிட்டாத்தெள்ளமுதாய்ப்பேரின்பத்தேங்கநல்கு.வரமாநின்கூட்டத்தாலொருகாலத்தும்வாராதநல்லமுதுவரப்பெற்றேனால் (இ-ள்) நரபாலன்- அரசனானவன்— அதற்குரைப்பான்- அதற்குச்சொல்லுவார்— பகவனே- பகவானே— நின்னருளால்- உமதகிருபையினால்— பெருஞ்செல்வநலத்தால்- மகாசம்பத்தாகியவின்பத்தினால்— மிக்குப்பரமாகி- மிகவுமகத்தாகி— அனைத்திற்குமேலாய்- சகலத்துக்குமுயர்வாகி—விஞ்சுபதங்கண்டேன்- மிஞ்சியபரமபதத்தையறிந்தேன்— அகோவகோ- ஆச்சரியமாச்சரியம்— பரமஞானந்திரமான- பிரமஞானத்தைத்திடமாகப்பெற்ற— பெரும்பெரியோர்- மகத்துக்கள்—கூட்டங்கிட்டா- குழாத்தையடைந்து— தெள்ளமுதாய்ப்பேரின்பந்தேங்கநல்கும்- தெளிவானவமுதமாய்ப் பேரானந்தத்தை நிறையக்கொடுக்கின்ற— வரமாநின்கூட்டத்தால்- வரமாகியவுமதுசங்கத்தினால்— ஒருகாலத்தும்வாராதநல்லமுது- ஒருபொழுதுங்கிடையாதபராவமுதத்தை—வரப்பெற்றேன்- அடையப்பெற்றேன்(எ-று)

(ாருசு) (அ-கை) சென்றகாலத்துக்கிரங்கிவினவுதலுக்குத்தரங்கூறல் (கவி) அனந்தமாமிவ்வமுதமெனக்குமுன்னாளரிதானதென்னவெனக்கும்பன்சொல்வரன், மனந்தனிலேசாந்தியாய்ப்போகங்கைத்துவன்பொறிமீண்டுளமடமைமாய்ந்தபோதே, புனந்தருசெங்குசும்பைநீரழுக்குப்போனபுடவையிலேநிறமுறல்போற்புதல்வர்நெஞ்சிற், கனந்தருநற்குருவசனங்கலந்துநன்றாங்காயமலங்களுமரத்தின்காய்கள்போற்போம் (இ-ள்) அனந்தமாம்- அளவில்லாததாகிய— இவ்வமுதம்- இந்தப்பராவமுதமானது— எனக்கு- அடியேனுக்கு—முன்னாள்- பூர்வத்தில் —அரிதானதென்னவென- அரியதானதென்னவென்றரசன்கேட்க— கும்பன்சொல்வான்- கும்பமுனிசொல்லுவார்— மனந்தனிலேசாந்தியாய்- மனதிற்சாந்தமடைந்து— போகங்கைத்து- போகத்திற்கசப்புவந்து— வன்பொறிமீண்டு- வலியவிந்திரியங்களகத்திற்றிரும்பி— உளமடமைமாய்ந்தபோதே- மனவஞ்ஞானநசித்தபோதே— புனந்தரு- வனத்திலுண்டாகும்— செங்குசும்பைநீர்- சிவந்தகுசும்பாசலமானது— அழுக்குப்போனபுடவையில்- களங்கமற்றவஸ்திரத்தில்— நிறமுறல்போல்- ஒளிவடைவதுபோல— புதல்வர்நெஞ்சில்- சீடனுடையமனதில்— கனந்தரும்- மேன்மையான— நற்குருவசனம்- சற்குருவாக்கியம்— கலந்துநன்றாம்- கலந்துநன்மையாகும்— காயமலங்களும்- தேகத்திலுள்ளகளங்கங்களும்— மரத்தின்காய்கள்போல்- விருட்சத்தினதுகனிகளைப்போல— போம்- (நழுவிப்)போகும்— (எ-று) - - *

(ாருஎ) (அ-கை) இங்ஙனம்பெற்றவனுபவப்படிஸ்திரமாய்நிற்பாயெனல் (கவி) உள்ளத்திலிருமையெனவொருமையென்னவுன்னுதலஞ்ஞானமிவைபொழிதன்ஞானந், தெள்ளுற்றசுதியுமதுவேதெளிந்தமுத்திசேர்ந்தனைசித்தமும்விட்டாய்செல்வனாகித், தள்ளுற்றமலநீங்கி மௌனியாகித் தனிநிற்பாயென்றலுமேதமையுணர்ந்தோர், சொள்ளுற்றதொழிலெல்லாமனத்ததன்றேகொள்மனமன்றியிடைக்குங்கொள்கையென்னே (இ-ள்) உள்ளத்தில்- மனதில்—இருமையென- இரண்டென்றும்— ஒருமையென்ன- ஒன்றென்றும்— உன்னுதலஞ்ஞானம்- நினைத்தலேயஞ்ஞானமாம்— இவைபொழிதன்ஞானம்- இவ்விரண்டுநீங்குதலேஞானமாகும்—தெள்ளுற்றசுதியுமது- தெளிவானபரகதியுமதுவேயாகும்— தெளிந்தமுத்திசேர்ந்தனை- தெளிவுற்றுமோக்ஷத்தையடைந்தாய்—சித்தமும்விட்டாய்- மனதையுந்தவிர்த்தாய் —செல்வனாகி- (ஞான)சம்பத்தையுடையவனாய்—தள்ளுற்றமலநீங்கி- தள்ளப்பட்டகளங்கத்தைவிட்டு—மௌனியாகி- மகாமவுனியாய்— தனிநிற்பாயென்றலும்- தனித்திருப்பாயென்று கும்பமுனிசொல்லவும்— தமையுணர்ந்தோர்- சீவன்முத்தர்கள் — சொள்ளுற்றதொழிலெல்லாம்- கொள்ளப்பட்டசெயல்களனைத்தும்— மனத்ததன்றே- மனதினாலல்லவா— கொள்மனமன்றியில்- கொள்ளப்பட்டமனதையன்றி—இடைக்குங்கொள்கையென்னே- நடக்குந்தன்மையாது (எ-று) *

(ாருஅ) (அ-கை) சமாதியிற்றியானித்தன்முதலியதொழின்மனதையன்றியெங்ஙனங்கூடுமெனிலதற்குத்தரங்கூறல் (கவி) உளாயெனமன்னவன்கேட்பக்கும்பன்சொல்வானுளமென்றுசொன்னதுவேறொன்றுமன்று, களையறுபல்பவந்தருவாதனையேவுள்ளயகண்டதனையறிந்தாலக்கவலையில்லை, வளையறக்கண்டவர்கருமங்களிற்சரிக்கும்வாதனைதானமறுபிறப்பைவழங்காதந்தப், புளைமனஞ்சத்துவமென்பர்சித்தமென்றுபோதமில்லாச்சித்தத்தைப்புகல்வரன்றே. (இ-ள்) உளாயென- சொல்லவேண்டுமென்று— மன்னவன்கேட்ப- அரசனானவன்கேட்க— கும்பன்சொல்வான்- கும்பமுனிசொல்லுவார்— உளமென்றுசொன்னது- மனமென்றுசொல்லியது— வேறொன்றுமன்று- மற்றொன்றுமல்ல—களையறுபல்பவந்தரு- அளவற்றசனனங்களைக்கொடுக்கின்ற—வாதனையேவுள்ளம்- வாசனையேமனமாம்— கண்டதனையறிந்தால்- காணப்பட்டதன்னைத்தெரிந்துகொண்டால்— அக்கவலையில்லை- அந்தவச்சமில்லை— வளையறக்கண்டவர்- தடையறப்பார்த்தவர்கள்— கருமங்களிற்சரிக்கும்- கருமங்களிற்சஞ்சரிக்கின்ற— வாதனைதான்மறுபிறப்பைவழங்காது- சுத்தவாசனைமறுபவத்தைக்கொடாது—அந்தப்புளைமனம்- அவ்வுயர்வுள்ளமனதை— சத்துவமென்பர்- சாத்துவிதமென்றுசொல்லுவார்கள்— போதமில்லாச்சித்தத்தை- ஞானமில்லாதமனதை— சித்தமென்றுபுகல்வர்- மனமென்றுரைப்பர்— (எ-று) - - *

(ாருகூ) (அ-கை) இ-து (கவி) ஞானமனஞ்சத்துவமேயென்றுசொல்வர்ஞானமிலாதார்சித்தநடையினிற்ப, ரீனமறுஞானிகள்சத்துவத்தேநிற்பரோதொன்றுகுவர்க்கம்விடெல்லாநல்கு, மானவையெல்லாமவ்வட்டுச்சமமாஞ்சோதியாஞ்லேதாருதிய்ங்கதுநீயாகு, மூனமுறுபொருளொன்றுங்கைக்கொ

னாமலுள்ளமலைசவுறதிர்பாயமுறுதியாக (இ-ள்) ஞானமனம்- ஞானமுள்ளமனைத—சத்துவமேயென்றுசொல்வர்- சாத்துவிதமேயென்றுசொல்லுவார்கள்— ஞானமிலாதார்- ஞானமில்லாதவர்கள்—சித்தநடையினிற்பர்- மனதினடையிலிருப்பார்கள்— ஈனமறஞானிகள்- குற்றமற்றஞானவான்கள்—சத்துவத்தேநிற்பர்- சாத்துவிதத்திலிருப்பார்கள்— ஏதொன்று- யாதொன்று— சுவர்க்கம்விடு- சுவர்க்கமுமோக்ஷமுமாகிய— எல்லாநல்குதம்- இவைகளனைத்தையுங்கொடுக்கின்றதோ— அனைவையெல்லாம்விட்டு- ஆகியவச்சலத்தையுந்தள்ளி— சமமாஞ்சோதியானல்- சமமான சுயம்ப்ரகாசமானல்— ஏதாகுதி- ஏதாகின்ருயோ— இங்கு- இவ்விடத்தில்— அதுநீயாகும்- அதுவேயுனதுஸ்வரூபமாகும்— ஊனமுறுபொருள்- ஈனமாகியபதார்த்தங்கள்— ஒன்றுங்கைக்கொளாமல்- ஒன்றையுங்கைவசப்படுத்தாமல்—உள்ளமசைவற- மனேசலனமில்லாமல்— உறுதியாக- திடமாக— நிற்பாய்- இருப்பாய்— (எ-று) [இ-உ-க-ம] வாசுனுரூபமானமனமிரண்டு விதமாமவற்றுள், இராசததாமதத்துடன்கூடி வெளிமுகத்தில் அறிவின்மையாகச்செய்யுந் தொழிலாற்பவத்தைக்கொடுக்குமனதுக்கு மனமென்றுபேர்சத்துவத்துடன்கூடியக்முகத்தின் ஞானமயமாய்ச்செய்யுங்கிரியையான் முத்தியைக்கொடுக்குமனதுக்குமனமெனப்பெயரின்ருமாதலாலவ்விரண்டையுநீக்கிமகாவாக்கியார்த்தப்படிசலனுசலனமின்றிச்சுயஞ்சோதியேநீயாய்விளங்குவாயென்பதாம். - - - - - - - - - - - - - - - - ✻

(௩௬௰)(அ-கை) பிரமத்திலுண்டானஸ்புரணம்பிரமமாய்விளங்குதென்பதைக்கையாண்டஃதொருமையாய்ச்சமாதியடையுநிமித்தஞ்சலனுசலனமின்றியயிக்கியங்கூடும்விதமெங்ஙனமெனிலதற்குத்தரங்கூறல். (கவி) நெஞ்சிலாதவர்பிறவிநெடுந்தூரம்போநீணிலத்திற்றுயரொன்றுநேர்ந்ததல்ல, வஞ்சுமனமசைதலிலுண்டானதாகுமசைவசையாமைகளிரண்டுமயிக்கமாக்கிச், சஞ்சலமாற்றிச்சித்தாம்படிநில்லென்னத்தரணிபன்சொல்வானயிக்சஞ்சார்வதெங்ஙன், விஞ்சுமசைவசையாமையிரண்டுமொன்ருய்விடும்படிசொல்லெனக்கும்பன்விளம்பலுற்ருன். (இ-ள்) நெஞ்சிலாதவர்பிறவி- மனமில்லாதவர்கள்பவம்—நெடுந்தூரம்போம்- வெகுதூரத்திற்செல்லும்—நீணிலத்தில்- நீண்டபூமியில்— துயரொன்றுநேர்ந்ததல்ல- துன்பமானதுசற்றுநேரிடாது— அஞ்சுமனம்- பயப்படுகின்றமனமானது— அசைதலிலுண்டானதாகும்- சஞ்சலத்திலுண்டானதாகும்— அசைவு- அசைதலும்— அசையாமைகள்- அசையாமைகளுமாகிய— இரண்டுமயிக்கமாக்கி— இரண்டையுமொன்ருக்கி- சஞ்சலமாற்றி- சஞ்சலத்தைக்கெடுத்து— சித்தாம்படி- ஞானமாகும்படிக்கு— நில்லென்ன- நிற்பாயென்றுகும்பமுனிசொல்ல—தரணிபன்சொல்வான்- அரசன்சொல்லுவான்— அயிக்கஞ்சார்வதெங்ஙன்- அயிக்கியமடைவதெப்படி— விஞ்சுமசைவு- மிகுந்தவசைவும்— அசையாமை- அசையாமையும்— இரண்டுமொன்ருய்- இரண்டுமொன்ருக— விடும்படிசொல்லெனை- நீங்கும்படிசொல்லுவாயென்றரசன்கேட்க—கும்பன்விளம்பலுற்ருன்- கும்பமுனிசொல்லத்தொடங்கினர்— (எ-று) - - - - - - - - ✻

(௩௬௧) (அ-கை) இ-து. (கவி) உவரினீர்போலுலகெல்லாமொன்ருனவுணர்வுமாத்திரமதுதானுற்றபுந்திக், கவர்வுறுதலாலசையுநிறையுநீர்தான்கல்லோலத்தாலசையுங்கணக்கேபோலச், சிவமுணர்வுமாத்திரமெய்ப்பிரமமாதித்திரள்பெயராய்ப்புகல்பொருளைச்சகமென்றெண்ணித் தவமறுபேதையர்காண்பாறிவுதானேசற்றசைந்தமாத்திரத்தாற்சருக்கமுண்டாம் (இ-ள்) உவரிநீர்போல்- சமுத்திரத்தின்சலத்தைப்போல— உலகெல்லாம்- சகங்களனைத்தும்— ஒன்ருன- ஏகமாகிய—உணர்வுமாத்திரம்-சின்மாத்திரமேயாகும்—அதுதான்- அச்சின்மாத்திரமானது—உற்றபுந்தி- பொருந்தியபுந்தியை—கவர்வுறுதலால்- கிரிகித்தலினுல்— நிறையுநீர்தான்- நிறைந்தசலமானது— கல்லோலத்தால்- பேரலையினுல்— அசையுங்கணக்கேபோல- அசைகின்றதன்மையைப்போல— அசையும்- சஞ்சரிக்கும்—சிவம்- சிவமும்— உணர்வுமாத்திரம்- சின்மாத்திரமும்— மெய்- சத்தியமும— பிரமமாதி- பிரமமுதலாகிய— திரள்பெயராய்- அநேகநாமங்களையுடையதாய்— புகல்பொருளை- சொல்லிய(பர)வஸ்துவை—சகமென்றெண்ணி- உலகமென்றுமதித்து— தவமறுபேதையர்காண்பர்- நிஷ்டையற்ற மூடர்கள்பார்ப்பார்கள்—அறிவுதான்- சித்தானது—சற்றசைந்தமாத்திரத்து- கொஞ்சமசைந்தமாத்திரத்தில்—சருக்கமுண்டாம்- சகசிருட்டியுண்டாகும் — (எ-று) - - - - - - - - - - - - - - ✻

(௩௬௨) (அ-கை.) இ-து (கவி) உண்டானசிருட்டிதானன்ருய்ப்பார்க்கிலொழிந்துபோமுறுதியாயுணராவற்ருற், கண்டார்கள்கயிற்றிலேபாம்பென்பார்போற்சுட்சிராயுறுங்கலைநூலாற்கற்ருேர்சார்வாற், றண்டாதபரிசயத்தாற்சிலகாலத்திற்ருவுமனநின்மலமாய்ச்சசிபோனிற்கிற், பண்டாயவனுபூதிமயமாய்த்தானேபாக்கியவான்களுக்கிந்தப்பார்வைதோன்றும் (இ-ள்) உண்டானசிருட்டிதான்- தோன்றினசகசிருட்டியை—நன்ருய்ப்பார்க்கில்- ஞானசுகமாகப்பார்த்தால்— ஒழிந்துபோம்- அஃதிறந்துபோகும்— உறுதியாய்- திடமாக—உணராவாற்ருல்- அறியாததன்மையினுல்—கயிற்றில்- பழுதையில்—பாம்பென்பார்போல்- சற்பமென்பவர்களைப்போல—கண்டார்கள்- திரிஸ்யமாகப்பார்த்தார்கள்—காக்ஷியுறும்- ப்ரத்யக்ஷமாகின்ற— கலைநூலால்- ஞானசாஸ்திரங்களினுலும்— கற்ருேர்சார்வால்- சாதுசங்கத்தினுலும்— தண்டாதபரிசயத்தால்- தடையற்றவப்பியாசத்தினுலும்— சிலகாலத்தில்- சிலநாட்களில்— தாவுமனம்- பாயாநின்றமனமானது— நின்மலமாய்- விமலமாக— சசிபோனிற்கில்- சந்திரனைப்போலநின்ருல்—பண்டாய- பழமையான—அனுபூதிமயமாய்த்தானே- அனுபூதிமயமாகவே—பாக்கியவான்களுக்கு- ஞானசம்பத்துள்ளவர்களுக்கு — இந்தப்பார்வைதோன்றும்- இந்தத்திருஷ்டிதோற்றம்— (எ-று) [இ-௩-க-ம] உததியும்புனலுமபோலச்சுயஞ்சைதன்யமுமதன்ஸ்புரணமும்விளங்குந்தயன்றிவேறன்றெனக்காரணத்தைத் தரிசித்ததுவாகநிற்கிற்காரியமுமதுவாகவிளங்குமப்போதுசலனுசலனமின்றியயிக்கியமானநிருவிகற்பசமாதிகூடுமென்பதாம். - - - - - - - - ✻

(௩௬௩) (அ-கை.) சமாதியற்றனதுஸ்வானுபூதியின்னுஸ்பூரிக்கின்றஸ்புரணமெதிரிடாமற்ற

ன்மையமாக்கிக்கொள்ளெனச்சமாதியில்வைத்தஃதுகூடுநிமித்தர்தனியேவைக்கநினைத்தல் (கவி) வே உல சத னுதயநாசமுண்மையையுணாத்தேனித்தை, நல னுறச்செய்துநாடி நழுவுரு நயத்தவண்ணம், விலகலற் றெதிர்ந்தவெல்லாமெய்ப்பதத்தாக்கிநிற்பாய், திலகமாஞ்சொன்னநாடுசேர்வனுன்காலமீதே (இ-ள்) உலகதன்- சகத்தினுடைய— உதயநாசம்- உற்பத்திலயத்தின்— உண்மையையுணாத்தேன்- தத்துவத் தைச்சொன்னேன்— இத்தை- இந்தவருத்தத்தை— நலனுறச்செய்து- சுகமுண்டாகவற்பியாசித்து— நாடி- சிந்தித்து— நழுவுரு- வழுவாமல்— நயத்தவண்ணம்- விரும்பியபடி—விலகலற்று- நீங்குத லில்லாமல்— எதிர்ந்தவெல்லாம்- நேரிட்டவனைத்தையும்— மெய்ப்பதத்தாக்கிநிற்பாய்- பிரமபதந் துக்காகச்செய்திருப்பாய்— திலகமாம்-(சகலத்துக்குந்)திலதமாகிய— சொன்னநாடு- சுவர்க்கலோகத் தை— நான்சேர்வன்- யானடைவேன்— ஈதுகாலம்- இதுவேகாலமாம்— (எ-று) - - - ※

(௱௬௪) (அ-கை) இ-து. (கவி) அயனுலகினும்பொன்னுடுற்றங்கெனைக்காணனென்னிற், பயமு றமுனியுமெற்றைநாரதன்பரிந்தமைந்த, ருயர்குருமுனியப்பண்ணவொருசற்றுமொண்ணுமன்னு, மயலறப்பேதநீக்கிமகிழ்ந்திதைநோக்கிநிற்பாய். (இ-ள்) அயனுலகினும்- சத்தியலோகத்தினின்றும்— பொன்னுடுற்று- தெய்வலோகத்தையடைந்து— அங்கு- அவ்விடத்தில்— எனைக்காணனென்னில்- எ ன்னைப்பார்க்கானுயின்— எற்றை- எனதுபிதாவாகிய— நாரதன்- நாரதமுனியானவர்— பயமுறமுனி யும்- பயப்படும்படிகோவிப்பார்— பரிந்தமைந்தர்- அன்புள்ளசீடர்—உயர்குரு- மேலானவாசாரிய ரா— முனியப்பண்ண- கோபம்வரும்படிசெய்ய— ஒருசற்றுமொண்ணு- எவ்வளவுங்கூடாது— ம ன்னு- அரசனே— மயலற- மயக்கமில்லாமல்—பேதநீக்கி- வேற்றுமையைக்கெடுத்து— மகிழ்ந்து- சந்தோஷித்து— இதைநோக்கிநிற்பாய்- இந்தத்திருட்டியிலிருப்பாயென்றுகும்பமுனிசொன்னர்— (எ-று) [இ-உ-க-ம்] நிருவிகற்பசமாதிகூடுநெறியையறிவித்தகன்றனரொன்பதாம் - - - ※

(௱௬௫) (அ-கை) நிதித்தியிற்கண்டபேரானந்தபோதமேதானுகவியப்புறுதல். (கவி) போதுநா மென்னக்கும்பன்மறைதலும்பூபனென்னுஞ், சீதளஞ்சுத்தஞ்சாந்தந்தெள்ளமுதூறலொக்கு, மீதொ ருபதவியென்னுளிருந்தவாவென்னேயென்னே. கோதிலென்சத்துவத்திற்குளிர்வுறச்செய்ததென்றா ன். (இ-ள்) நாம்போதுமென்ன- யாம்போகின்றேமென்று— கும்பன்மறைதலும்- கும்பமுனியா னவர்மறையவும்— பூபனென்னும்- அரசனானவனினைக்கின்றான்— சீதளம்- குளிர்ச்சியாகியும்— சுத் தம்- பரிசுத்தமாகியும்— சாந்தம்- உபசாந்தமாகியும்— தெள்ளமுதூறலொக்கும்- தெளிந்தவமுத வூற்றுக்கொப்பாகியுமிருக்கின்ற— ஈதொருபதவி- இந்தவொப்பற்றபதவியானது— என்னுள்ளிரு ந்தவா- எனக்குள்ளிருந்தவிதம்— என்னேயென்னே- ஆச்சரியமாச்சரியம்— கோதிலென்- குற்றம ற்றவென்னை— சத்துவத்தில்- சத்தாமாத்திரத்தில்— குளிர்வுறச்செய்ததென்றான்- விஸ்ராந்தியடைய ச்செய்ததென்றரசன்சொன்னான்— (எ-று.) - - - - - - - - - - - - - ※

(௱௬௬) (அ-கை) வியப்புற்றபடிசமாதிகூடல். (கவி) ஆனவாதனைகளின்றியசைவற்றுப்பேரா னுகி, மோனமாய்நிருவிகற்பமாய்ப்பற்றுமுற்றுமற்று, தானமேயமுந்திக்கற்போற்றருவைப்போற் சு வர்போனின்றான், போனகுடாலைபண்டைப்பொற்கொடிவடிவமெய்தி. (இ-ள்) ஆனவாதனைகளின் றி- உண்டாகியவாதனைகளிறந்து— அசைவற்று- சலனமற்று—பேரானுகி- நிலைபினீங்காதவனுய்— மோனமாய்- மௌனமாகியும்— நிருவிகற்பமாய்- நிருவிகற்பமாகியும்—பற்றுமுற்றுமற்று- இச்சை யனைத்துமற்ற— தானமழுந்தி- இடத்திலமர்ந்து—கற்போல்- கல்லைப்போலவும்— தருவைப்போல்- மரத்தைப் போலவும்— சுவர்போல்- மதிலைப்போலவும்— நின்றான்-(சமாதியி)லிருந்தான்—போன குடாலை- சென்ற(கும்பமுனியென்னுஞ்)குடாலையானவள்— பண்டை பொற்கொடிவடிவமெய்தி- மு ன்னழகியபுட்பக்கொடிபோன்றதனதுருவமடைந்து— (எ-று.)[இ-உ-க-ம்] ஆசாரியரனுக்கிரகத்தி லனுபவமானதனதுஸ்வானுபூதிமாத்திரமாய்நிருவிகற்ப சமாதியடைந்தனரொன்பதாம். - - - - ※

(௱௬௭) (அ-கை) ஆசாரியர்சென்றுபின்னுமெழுந்தருளுதல் (கவி) அம்பரத்தேகியந்தப்புரம் புக்காளவனிகாவ, னம்பரமென்றுகாத்தாணடந்ததுவருடமூன்று, கும்பனுய்க்கணவன்காட்டைக்குறி கியாங்கவனைக்கண்டா, டம்பமாய்நிருவிகற்பசமாதியிலிருத்தல்கண்டு. (இ-ள்) அம்பரத்தேகி- ஆகாய த்திற்போய்— அந்தப்புரம்புக்காள்- அந்தப்புரத்திற்புகுந்தாள்— அவனிகாவல்- பூமியாலனம்— நம்பரமென்றுகாத்தாள்- நமதுபாரமென்றிரட்சித்தாள்—வருடமூன்றுநடந்தது-மூன்றுவருடஞ்செ ன்றது—கும்பனுய்- (திரும்பவுங்)கும்பமுனியாய்—கணவன்காட்டைக்குறிகி- தலைவனிருக்கின்றவன த்தையடைந்து—ஆங்கவனைக்கண்டாள்- அவ்விடத்திலக்கணவனைப்பார்த்தாள்—தம்பமாய்நிருவிகற்ப சமாதியிலிருத்தல்கண்டு- தூணைப்போல நிர்விகற்பசமாதியிலிருக்கையைப்பார்த்து—(எ-று) - ※

(௱௬௮) (அ-கை.) சமாதியிலசைவறநிற்றலைப்பார்த்தாலோசித்தல் (கவி) அறிவிப்போமென்று சிங்கநாதத்தாலார்த்தமட்டிற், பொறியுற்றதில்லைமேன்மேற்றுணித்திவள்பூபன்றன்னை,மறியத்தள்ளு தலும்வீழ்ந்துமறிந்திலன்மற்றென்னென்று, நெறியுய்க்குங்கும்பன்மேனிநேரிழைநினைப்பதானுள். (இ-ள்) அறிவிப்போமென்று- (நமதுவரவைத்) தெரிவிப்போமென்று— சிங்கநாதத்தால்- சிங்கத் தொனியினால்— ஆர்த்தமட்டில்- சத்தித்தவளவிலும்—பொறியுற்றதில்லை- அறிந்ததில்லை— மேன்மே ற்றுணிந்து- மேலுமேலுஞ்சத்தித்து—இவள்- இந்தச்சூடாலையானவள்— பூபனுறன்னை- அரசனை— மறியத்தள்ளுதலும்- கவிழும்படிதள்ளவும்— வீழ்ந்துமறிந்திலன்- கீழேவிழுந்துமுணர்ந்திலன்—ம ற்றென்னென்று- இதெனனவென்று— நெறியுய்க்கும்- கிரமமாகவாழ்விக்கின்ற—கும்பன்மேனி- கு மபவடிவத்தையுடைய—நேரிழைநினைப்பதானுள்- சூடாலையானவளெண்ணத்தொடங்கினாள் (எ-று) ※

(௱௬௯) (அ-கை.) இ-து. (கவி) உத்தமனறற்பதத்தோடொன்றினன்வியப்பிதம்மா, வித்தலையு டலைப்டார்த்தால்தயத்தினறிவின்வித்தாஞ், சத்துவசேடமுண்டேற்றலைவனைப்புணர்வமெல்லெலன், றத்

தியால்வாழ்தமன்றேலங்ஙனவடிவம்விட்டு (இ-ள்) உத்தமன்- உத்தமனுனவாசன்— தற்பதத்தோ
டொன்றினன்- பிரமபதத்திற்கலந்தான்— வியப்பிதம்மா-ஈதுசெயம்—இத்தனியுடலை- இந்தத்தனி
மையானசரீரத்தை— பார்த்தால்- நோக்கினுல்— இதயத்தின்- இருதயத்தில்— அறிவின்வித்தாம்- அ
றிவுக்குவிதையாகிய—சத்துவசேடமுண்டேல்- சத்துவசேடமிருக்குமாயின்— தலைவனைப்புணர்வம்-
நாயகனைச்சேர்ந்து— மெல்லென்று- மிருதுவாக—அத்திபால்வாழ்தும- திரமாகவாழ்வோம்— அன்
றேல்- (சத்துவசேட)மில்லாவிடின்—அங்ஙனவடிவம்விட்டு- நமதுபெண்ணுருவத்தைவிட்டு (எ-று)

(௩௭௰) (அ-கை) இ-து (கவி) மறுபவமுருதவண்ணமாசறுபதத்தைச்சேர்து, மறுதியிதென்ன
வுன்னிப்பரிசத்தால்விழியாலன்று, னுறுமறிவுக்குவித்தாயுற்றசத்துவசேடந்தா, னிறுதியற்றிதயந்தன்னி
லிருந்ததுகண்டாலென்ன (இ-ள்) மறுபவம்- மறுபிறப்பை— உறுதவண்ணம்- அடையாதபடி—
மாசறு- குற்றமற்ற— பதத்தைச்சேர்தும்- பிரமபதத்தையடைவோம்— அறுதியிதென்னவுன்னி-
நிச்சயமிதுவென்றுசிந்தித்து—பரிசத்தால்- பரிசத்தினுலும்— விழியால்- கண்ணினுலும்— அன்றுன்-
அவ்வாசன்— உறுமறிவுக்கு- பொருந்தியவறிவுக்கு— வித்தாயுற்ற- விதையாகப்பொருந்திய—
சத்துவசேடந்தான்- சத்துவசேடமானது— இறுதியற்று- கெடுதலில்லாமல்— இதயந்தன்னில்- இ
ருதயத்தில்—இருந்ததுகண்டாலென்ன-இருந்ததைப்பார்த்தாளென்றுவசிட்டமுனிசொல்ல—(எ-று)
[இ-௩-க-ம்] இச்சமாதிசிவன்முத்தமாவிதேகமுத்தமாவென்றையுற்றூன்றிப்பார்க்கின்சீவன்முத்தித்
தன்மையினாலக்கணத்தைக்கண்டனரென்பதாம். - - - - - - - ⁕

(௩௭௧) (அ-கை) மனமிறந்தல்வரூபசமாதியிற்சத்துவசேடமெங்ஙனமிருக்குமெனல் (கவி)கே
ட்டதுமிராமன்சொல்வான்கிளர்மனந்தீரமாய்ந்து, காட்டலோட்டம்போற்சுத்தக்கண்ணிலேகலந்து
ளோருக்கிட்டுசத்துவசேடந்தானெங்ஙனேமுளைக்குமென்ன வாட்டமின்ஞானமிக்கவசிட்டமாமுனிவ
ன்சொல்வான் (இ-ள்) கேட்டதும்- (இதைக்) கேட்கவும்—இராமன்சொல்வான்-ஸ்ரீராமன்சொல்லு
வார்— கிளர்- சொல்லப்பட்ட—மனந்தீரமாய்ந்து-மனதுமுழுதுங்கெட்டு— காட்டலோட்டம்போ
ல்- கட்டையுங்கல்லையும்போல— சுத்தக்கண்ணில்- பரிசுத்தஞானமானதிருஷ்டியில்— கலந்துளோர்க்
கு-கலந்தவர்களுக்கு—ஈட்டுசத்துவசேடந்தான்-இவ்விடத்திற்சத்துவசேடமானது—எங்ஙனேமுளை
க்குமென்ன- எப்படியுண்டாமென்றுகேட்க— வாட்டமில்- தளர்வில்லாத— ஞானமிக்க- அறிவின்மி
குந்த— வசிட்டமாமுனிவன்- வசிட்டமாமுனியானவர்— சொல்வான்-சொல்லுவார்—(எ-று) - ⁕

(௩௭௨) (அ-கை)தேகநிமித்தஞ்சத்துவசேடமிருக்குமெனல் (கவி)வித்தினுட்பூவுங்காயுமேவல்போ
லிதயந்தன்னிற், சித்தின்காரணமதானசத்துவசேடநிற்கு, முத்தனுய்மனமிறந்தான்மொய்யுடல்போ
காபோகத்தொத்தவின்பத்துன்பங்கள்சார்தலற்றொருமைத்தாகும் (இ-ள்) வித்தினுள்-விதைகருள்—
பூவும்- புட்பமும்—காயும்- பழங்களும்—மேவல்போல்- பொருந்திபிருப்பதுபோல— இதயந்தன்
னில்- இருதயத்தில்— சித்தின்காரணமதாம்- அறிவுக்குக்காரணமாகிய—சத்துவசேடநிற்கும்- சத்துவ
சேடமிருக்கும்—முத்தனுய்மனமிறந்தால்-சீவன்முத்தனுய்மனோநாசமானுல்— மொய்யுடல்போகா-
வலிமையுள்ளசரீரநசியாது— போகத்தொத்த- போகங்களிற்பொருந்திய—இன்பத்துன்பங்கள்-சுகதுக்
கங்கள்—சார்தலற்று- கிட்டாமல்—ஒருமைத்தாகும்-ஒற்றுமையாகும்—(எ-று) [இ-உ-க-ம்] சத்து
வசேடமிருக்குந்தன்மையைவினுவினதற்குத்தரங்கூறினதாம் சத்துவசேடமென்பது, அறிவுக்குவித்தா
கியசத்திலவ்வறிவுசீவன்முத்தி பரியந்தங்களையாமலடங்கிநுண்ணிதாய்மிஞ்சியிருத்தலெனக்கொள்க.⁕

(௩௭௩) (அ-கை) சித்தாய்ச்சென்றுசத்திலடங்கியிருந்தசித்தைவெளிப்படுத்தல் (கவி) ஆதலாலி
ராமனேயவ்வணங்களுளந்தமெய்விட், டேதமிலாதியந்தமின்றியவறிவினுட்போய், மேதகுசத்துவஞ்
சேர்வேந்தனெஞ்சசையப்பண்ணி, தீதிறன்றுடலின்மீளச்சேர்ந்தனள்கூடார்புட்போல் (இ-ள்) ஆத
லால்- ஆதலினுல்—இராமனே- ஸ்ரீராமா—அவ்வணங்களுள்- அத்தேவ்கன்னிக்கொப்பானசூடாலை யா
னவள்— அந்தமெய்விட்டு- அக்கும்பவடிவத்தைவிட்டு—ஏதமில- குற்றமற்றதாய்— ஆதியந்தமின்றி
ய- ஆதிமத்தியாந்தரகிதமான— அறிவினுட்போய்- சித்தினுள்ளேபுகுந்து— மேதகு- மேன்மை
பொருந்திய—சத்துவஞ்சேர்-சத்துவசேடமடைந்திருக்கின்ற—வேந்தனெஞ்சு- அரசனதுமனதை—
அசையப்பண்ணி- சலிக்கச்செய்து— தீதிறன்றுடலில்-குற்றமற்றதனதுசரீரத்தில்— கூடார்புட்போ
ல்-கூண்டிலடைகின்றபட்சியைப்போல—மீளச்சேர்ந்தனள்-திரும்பவந்தடைந்தனள்—(எ-று) - ⁕

(௩௭௪) (அ-கை) சத்தினின்றுஞ்சித்துவிகசித்தல் (கவி) கும்பன்மெய்யாகிப்பூமேலிருந்தனள்
குழல்போற்பாடத், தம்பமாயிருந்தோன்மெய்யிற்சத்துவகுணஞ்சார்போதந், தும்பிநேர்யாட்டை
க்கேட்டுபையப்பையச்சூரியன்சே, ரம்புயம்போல்விரிந்துவவன்மனநிலையாயிற்றே.(இ-ள்) கும்பன்
மெய்யாகி- கும்பமுனிவடிவமாய்— பூமேலிருந்தனள்- பூமியிற்றனதாசனத்திலிருந்தவளாய்— குழ
ல்போல்பாட- பிள்ளாங்குழலைப்போல— பாட (சாம) கானஞ்செய்துகொண்டிருக்க— தம்பமாயி
ருந்தோன- சட்டையைப்போலிருந்தவரசன்— மெய்யில்- சரீரத்தில்— சத்துவகுணஞ்சார்போதம்-
சாத்துவிதகுணத்தையடைந்திருக்கின்றஞானமானது— தும்பிநேர்- வண்டுக்கொப்பாக— பாட்டை
க்கேட்டு- (பாடுகின்ற) சாமகானத்தைக்கேட்டு— பையப்பைய- மெல்லமெல்ல— சூரியன்சேர்- ஆதி
த்தகிரணத்தைச்சார்ந்த— அம்புயம்போல்- தாமரைமலரைப்போல— விரிந்து- விகசிதமாய்— அவ
ன்மனநிலையாயிற்று- அவனுடையமனதுநிலையாயினது— (எ-று.) - - - - - - - - ⁕

(௩௭௫) (அ-கை) ஆநந்தத்தோடுமாசிரியரைத்தரிசித்துவணங்கித்துதித்தல் (கவி)கண்டனன்கும்
பன்றன்னைகளிப்புறுமனத்தனுகித் தண்டலில்லருளாலென்னைவாழ்விப்பானருளேவரதான், பண்டைய
க்குரவனென்றுபரவிநன்மலர்தூயேத்த, மண்டலவேந்தன்றன்னைமற்றவனுரைக்கச்சொல்வான் (இ-ள்)
கும்பன்றன்னை- கும்பமுனியை— கண்டனன்- பார்த்தனன்— களிப்புறுமனத்தனுகி- இன்பமிகுந்

தமனத்தையுடையவனாய்— தண்டலில்- தடையற்ற— அருளால்- கிருபையினால்— என்னைவாழ்விப்பான்- என்னைச்சுகிக்கச்செய்யும்பொருட்டு—பண்டையத்குரவன்- முன்பெழுந்தருளியகுருநாதன்—தானேவந்தானென்று- சுயமாகவேவந்தானென்று—நன்மலர்தூய்- நல்லபுட்பங்களைச்சொரிந்து— பரவியேத்த- வணங்கித்துதிசெய்ய—மண்டலவேந்தன்றன்னை- பூமிக்கரசனை—மற்றவனுக்கு- பின்பத்தக்கும்பமுனியானவர்பார்த்து—சொல்வான்- சொல்லுவார்—(எ-று) [இ-ங-க-ம்.] சமாதியினிரதிசயாநந்தமாய்க்கரைந்தவறிவவ்வனுபவத்தோடும் வெளிப்பட்டாசிரியனையநந்தவடிவமாகத்தரிசித்ததாம்

(௫௭௬) (அ-கை) சிட்டன்சமாதிசுகத்தைக்கண்டுசர்தோடித்தல் (கவி) இங்குநின்றகன்றநாடொட்டின்றளவுன்பாற்சித்தம், பங்கறநின்றதண்டர்பதியுநின்கூட்டம்போல, வங்கிதமல்லவென்னவன்னைலேவாழ்ந்தேனின்னுற்றுங்சமாயுற்றவின்பசமாதியிற்றுயரந்தீர்ந்தேன் (இ-ள்) இங்குநின்று- இவ்விடத்திலிருந்து— அகன்றநாடொட்டு- நீங்கினநாடடங்கி— இன்றளவு- இன்றையவரைக்கும்— உன்பாற்சித்தம்- உன்னிடத்திலென்மனமானது— பங்கறநின்றது- பிரிவற்றிருந்தது— அண்டர்பதியும்- தெய்வலோகமும்— நின்கூட்டம்போல- உனதுசங்கத்தைப்போல— அங்கிதமல்லவென்ன- இன்பமல்லவென்றுகும்பமுனிசொல்ல— அண்ணலே- பெருமையிற்சிறந்ததெய்வமே— நின்னால்வாழ்ந்தேன்- உம்மாற்சுகத்தையடைந்தேன்— துங்கமாய்- பரிசுத்தமாகி—உற்றவின்பசமாதியில்- பொருந்தியசுகசமாதியில்— துயரந்தீர்ந்தேன்- துன்பமற்றேன்—(எ-று) - - - - - - - - ※

(௫௭௭) (அ-கை) ஆசிரியரவ்வனுபவவிலாசத்தைநான்குவிதமாசப்பகுத்துவினவுதல். (கவி) நிருவிகற்பத்திலின்பநிறைந்தபொன்னாட்டுமில்லை, யொருமையுற்றதனைமேவியும்பரிலிம்பர்தன்னிற், றிரிவனென்றரசன்சொல்லக்கும்பனுஞ்செப்புகிற்பா, னரியவாநந்தவாழ்விலயர்வெலாமறவாழ்ந்தாயோ. (இ-ள்) நிருவிகற்பத்தில்- நிருவிகற்பசமாதியிலுள்ள—இன்பம்- ஆநந்தமானது—நிறைந்த- (புண்ணிய)நிறைந்த—பொன்னாட்டுமில்லை- சுவர்க்கத்திலுமில்லை—ஒருமையுற்று- தனிமையாகி— அதனைமேவி- அவ்வாநந்தத்தையடைந்து— உம்பரில்- தெய்வலோகத்திலும்— இம்பர்தன்னில்- பூலோகத்திலும்— திரிவனென்று- உலாவுவனென்று— அரசன்சொல்ல- வேந்தன்சொல்ல— கும்பனுஞ்செப்புகிற்பான்- கும்பமுனியுஞ்சொல்லுவார்— அரியவாநந்தவாழ்வில்- அரிதானபிரமாநந்தவாழ்வில்— அயர்வெலாமற- வருத்தங்களனைத்துநீங்க— வாழ்ந்தாயோ- சுகித்தாயோ—(எ-று) - - ※

(௫௭௮) (அ-கை) இ-து (கவி) பேதமேவடிவமானதுன்பங்கள்பேதித்தாயோ, போதல்போதினிதாஞ்சங்கற்பத்தினிற்பூண்டவின்பந், தீதெனவேருஞ்செற்றுசமதரிசனமுற்றாயோ, யாதினும்விடுபற்றற்றியைந்தசெய்தின்புற்றாயோ (இ-ள்) பேதமேவடிவமான- வேற்றுமையேயுருவமாயிருக்கின்ற— துன்பங்கள்- துயரங்களை— பேதித்தாயோ- கெடுத்தாயோ— போதல்போது- வரும்பொழுது— இனிதாம்- இனிமையாகிய— சங்கற்பத்தினில்- சங்கற்பத்தில்— பூண்டவின்பம்- கொண்டசுகத்தை— தீதென- குற்றமென்று— வேருஞ்செற்று- மூலத்துடன்கெடுத்து— சமதரிசனம்- சமதிருஷ்டியை— உற்றாயோ- அடைந்தாயோ— யாதினும்- எதிலும்— விடுபற்றற்று- விடுதலும்பற்றுதலுநீங்கி- இயைந்தசெய்து- நேர்ந்தகாரியங்களைச்செய்து— இன்புற்றாயோ- சுகமடைந்தாயோ—(எ-று) [இ-ங-க-ம்] சுட்டறப்பெற்றசுகானுபவத்தைச்சுட்டிற்றரிசிக்கப்பகுத்துவினவினதாம் - ※

(௫௭௯) (அ-கை.) அனுபவவிலாசத்தைச்சொல்லுதல் (கவி) எனலுநின்னருளாற்பங்கிற்றெய்வத்தாலெலாம்விட்டப்பான், மனநிலைநின்றேன்மாயைக்கனாகண்டேன்வருபேறெல்லாங், கனமுறப்பெற்றேன்கேட்கக்காணவேண்டுவதொன்றில்லை, யனவரதமுநிறைந்தேனயர்வற்றேன் பிறவியற்றேன். (இ-ள்) என்றலும்- (இப்படி) யென்று (கும்பமுனிகேட்கவும்)— நின்னருளால்- உமதுகிருபையினாலும்— பங்கிற்றெய்வத்தால்- எம்பங்கிலுள்ளதேவாதீனத்தினாலும்— எலாம்விட்டப்பால்- திரிபுமனைத்துநீங்கினவதீதத்தில்—மனநிலைநின்றேன்- மனநிலையாயிருந்த— மாயை- சம்சாரத்தினது— கனா கண்டேன்- முடிவைப்பார்த்தேன்— வரும்பேறெல்லாம்- வரப்பட்டவிலாபங்களனைத்தையும்— கனமுறப்பெற்றேன்- திடமாகவடைந்தேன்— கேட்கக்காண- கேட்டதற்கும்பார்ப்பதற்கும்—வேண்டுவதொன்றில்லை- விரும்புவதொன்றுமில்லை— அனவரதமும்- எப்பொழுதும்— நிறைந்தேன்- பூரணமானேன்— அயர்வற்றேன்- துன்பநீங்கினேன்— பிறவியற்றேன்- பவநீங்கினேன்—(எ-று) - ※

(௫௮௰) (அ-கை) இ-து (கவி) பயமற்றேன்மோகமற்றேன்பற்றற்றேன்சமமாய்நின்றே, னுயர்வுற்றேனெல்லாமானேனொருசெயலற்றேன்விண்ணு, வியலொத்ததெளிவாய்ச்சாந்தமெய்தினேனென்றான்மோகச், செயன்முற்றுங்கடந்தசிந்தைச்சிகித்துவசப்பேர்மன்னன் (இ-ள்) பயமற்றேன்- அச்சநீங்கினேன்— மோகமற்றேன்- மயக்கநீங்கினேன்— பற்றற்றேன்- ஆசைநீங்கினேன்— சமமாய்நின்றேன்- சமமாயிருந்தேன்— உயர்வுற்றேன்- மேன்மையடைந்தேன்— எல்லாமானேன்- சகலமுமானேன்— ஒருசெயலற்றேன்- ஒருதொழிலுமில்லாதவனானேன்— விண்ணுவியலொத்த- ஆகாயத்தின்றன்மையையொத்த— தெளிவாய்- தெளிவையுடையவனாய்— சாந்தமெய்தினேன்- உபசாந்தத்தையடைந்தேன்— மோகச்செயன்முற்றும்- மயக்கத்தினதுதொழிலெல்லாம்— கடந்தசிந்தை- தாண்டினமனத்தையுடைய— சிகித்துவசப்பேர்- சிகித்துவசனென்னுநாமத்தையுடைய— மன்னனென்றான்- அரசன்சொன்னான்— (எ-று) [இ-உ-க-ம்] நீங்கவேண்டினபேதநீங்கியடையவேண்டினவபேதமடைந்ததைப்பதினைந்துவிதமாகப்பகுத்துச்சொல்லியதாம். - - - - - - - - - - - ※

(௫௮௧) (அ-கை) சகசதிருஷ்டியினாற்சாக்ஷாத்காரவனுபவமுண்டாகும்பொருட்டாசிரியருஞ்சீடனுமொன்றாகச்சஞ்சரித்தல். (கவி) அவ்வகையிரண்டுபெருமாற்றுமதத்துவத்தின், செவ்வியவசாரத்தாலுற்தெளிதருமொழிசளாலுந், தவ்வறுநேயமிக்கோர் தம்மிற்றாமுணர்தலுற்று, வெவ்வண்மோடைகுன்றுவேறறுவெங்கும்வாழ்ந்தார். (இ-ள்) அவ்வகை- அப்படியே— இரண்டுபேரும்- இருவரு

ம்— ஆற்றுமதத்துவத்தின்- ஆன்மதத்துவத்தினது— செவ்வியவிசாரத்தாலும்- அழகானவிசாரணையினாலும்— தெளிதருமொழிகளாலும்- தெளிகின்றவசனங்களினாலும்— தவ்வறுதேயமிக்கோர்- அழிவில்லாதவன்பின்மிகுந்தவர்கள்— தம்மிற்றாம்- தங்களிற்றாங்கள்— உணர்தலுற்று- அறிந்துகொண்டு— வெவ்வனம்- விருப்பத்தையுடையகானகங்களிலும்—ஓடை- தடாகங்களிலும்—குன்று-மலைகளிலும்— வேறறவெங்கும்வாழ்ந்தார்- வேற்றுமையின்றி யெவ்விடத்திலுஞ்சுகித்தார்கள்— (எ-று) *

(௱௮௨) (அ-கை) தாங்கள்கொண்டகோலமேகோலமாகச்சஞ்சரித்தல் (கவி) இயலறிவன்புசெய்கையிணையற்றோர்பற்றும்விடு, மயலறவிட்டுதென்றற்கசைவுறு வடகுன்றொப்பார், பயிலுடலொருகாற்றூளிபடர்விப்பாரொருகானீறு, வியனுறவணிவரோர்காற்சந்தனவிரையேசேர்வார் (இ-ள்) இயலறிவு- சுபாவமானஞானத்திலும்— அன்புசெய்கை- அன்புள்ளதொழில்களிலும்— இணையற்றோர்- ஒப்பில்லாதவர்கள்—பற்றும்- இராகமும்—விடும்- துவேடமுமாகிய—மயலறவிட்டு- மயக்கத்தையொருங்கேயொழித்து— தென்றற்கு- தென்றற்காற்றுக்கு— அசைவுறுவடகுன்றொப்பார்- சலியாதமகம்மேருவுக்கொப்பானவர்கள்— பயிலுடல்- சொல்லப்பட்டசரீரத்தில்— ஒருகால்- ஒருபொழுது— தூளிபடர்விப்பார்- புழுதியைப்படரச்செய்வார்கள்— ஒருகால்- ஒருபொழுது— நீறுவியனுறவணிவர்- விபூதியைப்பெருமையாகத்தரிப்பார்கள்— ஓர்கால்- ஒருபொழுது—விரை- வாசனையுள்ள—சந்தனம்- சந்தனத்தை— சேர்வார்- தரிப்பார்கள்— (எ-று) [இ-உ-க-ம்.] இராகத்துவேடமின்றியேதேதெப்படிபோவதுவதப்படியாய்விளங்கினனெனவறிந்ததாம். - - - - - - - - - - *

(௱௮௩) (அ-கை.) முன்புஞானமும்போகமும்விடுமின்றளிப்பேனென்றபடிஸ்வரூபஞானத்தைக்கொடுத்துப்போகங்கொடுப்பதற்கதின்பற்றுநீக்கம்பரிசோதிக்கச்சிந்தித்தல். (கவி) சிறிதுநாளுடனேவாழ்ந்துதேமொழிவேந்தைநோக்கி, பிறிவுறுகணவன்சாலவுதாரமாய்ப்பீடையற்றான், செறியெழில்விடலையாகுஞ்செல்வம் பூமனையுமெல்லாம், வறியபோலவமாய்ப் போமால்வாழுனரிலாமையாலே. (இ-ள்.) சிறிதுநாள்- கொஞ்சகாலம்— உடனேவாழ்ந்து- கூடவேவாழ்ந்திருந்து— தேமொழி- மதுரவசனத்தையுடையசூடாலையானவள்— வேந்தைநோக்கி- அரசனை (மனதிற்) பார்த்து— பிறிவுறுகணவன்- தன்னைப்பிரிந்திருக்கின்றதலைவனானசிகித்துவசன்—சாலவுதாரமாய்- அனுபூதியின்மிகவுமுறுதியுள்ளவனாய்— பீடையற்றான்- துன்பநீங்கினான்— செறியெழில்- மிகுந்தவழகையுடைய— விடலையாகும்- இளமையாகிய— செல்வம்- சம்பத்தும்—பூமனையும்- புட்பங்கணிறைந்தவரண்மனையுமாகிய— எல்லாம்- சகலமும்— வறியபோல்- இல்லாமையைப்போல— வாழுனரிலாமையால்- சுகிக்கின்றவர்களில்லாமையினால்— அவமாய்ப்போம்- வீணாய்ப்போகும்— (எ-று) - - - - - - *

(௱௮௪) (அ-கை.) ஸ்திரீயிச்சையைப்பரிசோதிக்கச்சிந்தித்தல் (கவி) இழிவறுஞானம்பெற்றோரியல்புறத்தானேவந்த, தொழிவுறவிடுவதொன்னிலுண்மையையுணர்ந்ததென்னும், வழிபடுமன்னனம்பான்மணஞ்செயற்கானதொன்றை, யழிவறுமறிவினாலிங்கமைத்துமென் றுளத்திலெண்ணி (இ-ள்) இழிவறுஞானம்பெற்றோர்- பூரணஞானத்தையடைந்தவர்கள்— இயல்புற- சுபாவமாக—தானேவந்தது- வலியவந்ததை—ஒழிவுற- தவிரும்படியாக—விடுவதொன்னில்- விடுவார்களானால்—உண்மையை- தத்துவத்தை—உணர்ந்ததென்- அறிந்ததென்ன—வழிபடுமன்னன்- சன்மார்க்கமுள்ளவரசன்— நம்பால்- நம்மிடத்தில்—மணஞ்செயற்கு- கலியாணஞ்செய்வதற்கு— ஆனதொன்றை- உண்டாகியவொருயுத்தியை— அழிவறுமறிவினால்- அழிவற்றவுணர்வினால்— இங்கமைத்துமென்று- இவ்விடத்திலுண்டாக்குவோமென்று— உளத்திலெண்ணி- மனதினினைத்து— (எ-று) - - - - - - - - - - - *

(௱௮௫) (அ-கை) திருவிழாவைக்குறித்துச்செல்லவேண்டுமெனல் (கவி) தலைவனைநோக்கிச்சொல்வாள்சதமகனுலகினின்றோர், நிலைபெறவிழாவுண்டாங்கேநெருநாரதரோடியானு, முலைவறநிற்றல்வேண்டுமுயர்விதிவலியார்வெல்வர், மலைமிசையிரவிபோங்காலவருவனிவ்விரைவிலிங்கே. (இ-ள்) தலைவனைநோக்கி- நாயகனைப்பார்த்து— சொல்வாள்- (கும்பமுனியான) சூடாலைசொல்லுவாள்— சதமகனுலகின்- தேவலோகத்தில்—இன்று-இன்றையத்தினம— ஓர்நிலைபெற- ஒருநிலைபெறும்படிசெய்யும்- விழாவுண்டு- திருவிழாவுண்டு— ஆங்கு- அவ்விடத்தில்— நெருநாரதரோடு- பொருந்தியநாரதருடன்— இயானும்- நானும்— உலைவறநிற்றல்வேண்டும- அசைவறவிருக்கவேண்டும்— உயர்விதிவலி- மேலானநியதியின்பலத்தை— யார்வெல்வர்- யாவர்செயிப்பார்கள்— மலைமிசை- அஸ்தமனபர்வதத்தின்மேல்— இரவிபோங்கால்- சூரியன்போகின்றசமயத்தில்— இவ்விரைவில்- இதோசீக்கிரமாக—இங்குவருவன்- இவ்விடத்தில்வருவேன்— (எ-று) - - - - - - - - - - - *

(௱௮௬) (அ-கை) சகசசமாதியிலிருத்திச்செல்லுதல். (கவி) நீங்கருமுணர்வினோடுநீயிவணிருத்தியென்றோர், தேங்கமழ்மலரின்கொத்தைச்சிகித்துவசனுக்குநல்கி, யோங்கினள்விசும்பிலேகியவன்விழிபுறுதமட்டிற், றாங்கியகும்பன்மேனிதவிர்த்துதன்வடிவமானாள் (இ-ள்) நீங்கருமுணர்வினோடு- நீங்குதற்கரியவறிவுடன்— நீயிவணிருத்தியென்று- நீயிவ்விடத்திலிருப்பாயென்று— ஓர்- ஒரு— தேங்கமழ்மலரின்கொத்தை- வாசனைபரிமளிக்குமபுட்பக்கொத்தை— சிகித்துவசனுக்குநல்கி- சிகித்துவசனுக்குக்கொடுத்து—விசும்பிலோங்கினள்- ஆகாயத்திலெழும்பினள்— அவன்விழிபுறுதமட்டிலேகி- அவன்கண்ணுக்குத்தெரியாதவரைக்கும்போய்—தாங்கியகும்பன- சுமந்தகும்பனென்கின்ற—மேனிதவிர்த்து- சரீரத்தைவிட்டு—தன்வடிவமானாள்- தனதுசூடாலைவடிவமுள்ளவளானாள்— (எ-று)

(௱௮௭) (அ-கை) அரசாக்ஷிசெய்துவருதல். (கவி) இந்திரனிருக்கையேய்ந்தவில்லம்புக்கறியாவண்ணம், மந்திரநெறியின்மன்னன்காரியமரபிற்செய்து, சந்திரவதனமீண்டுங்கும்பனாய்த்தலைவன்றன்பால் வந்திழிவுற்றுசாலவாடியமுகத்தன்போலாய் (இ-ள்) இந்திரன்- தேவேந்திரனானவன்— இருக்கையேய்ந்த- இருக்கின்றதெய்வலோகத்துக்கொப்பாகிய—இல்லம்புக்கு- அரண்மனையிற்புகுந்து—அறியாவ

(௰) (அ-கை.) தத்துவபாவனையாலசத்தானவகம்பாவமெங்கெயிருக்குமெனல். (கவி) சுத்தமி
த்தையேயாதலிலகங்கரந்தொலைந்துபோமெய்யான,தத்துவந்தனை நினைதலாற்சித்திலேசாற்றகங்கரமெ
ங்கே, மெத்துநீரிலேபுழுதியுங்கனலிலேமேவுதோயமுமுண்டோ, நித்தருபத்தை நினைந்திலனுனெ
னு நிச்சயமறநிற்பாய். (இ-ள்) சுத்தமித்தையேயாதலில்- முழுதுமசத்தியமேயாதலால்— அகங்கர
ம்- அகங்கரமானது—தொலைந்துபோம்- கெட்டுப்போகும்—மெய்யான- சத்தியமாகிய— தத்துவ
ந்தனை நினைதலால்- ஆத்மாவைச்சிந்தித்தலினல்— சித்தில்- ஞானத்தில்—சாற்றகங்கரமெங்கே- சொல்
லியவகங்கரமெங்கேயிருக்கும்— மெத்துநீரில்புழுதியும்- மிருதுவானசலத்திற்றூளியும்— கனலில்-
அக்கினியில்— மேவுதோயமுமுண்டோ- மேவா நின்றசலமுமுண்டாயிருக்குமோ—நித்தருபத்தை-
நித்தியஸ்வரூபத்தை— நினைந்து- சிந்தித்து— இவனுனெனும்- இவனுனென்கின்ற— நிச்சயமறநிற்
பாய்- மெய்ம்மையதும்படியிருப்பாய்—(எ-று.) - - - - - - - - - - - - - *

(௰௧) (அ-கை) விடயத்தோற்றமின்றிச்சுயஞ்சித்தாய்விளங்கிநிற்பாயெனல் (கவி) திக்குங்கா
லமுமுதலியவசத்துறுசிறுவடிவறத்துன்பந். தொக்கவன்னவற்ருன்மறையாமலேசூக்கமாய்நொய்தாகி,
மிக்கசோதியாயனைத்துமாயொன்றுமாய்மெய்யறிவொன்றேயாந், தக்கவிந்நிலைநில்லெனவுரைத்தன
ன்றலைமையாமுபதேசம் (இ-ள்) திக்கும்- திசையும்— காலமுமுதலிய- காலமும்முதலாகியவைகளி
ன்— வசத்துறு- வசத்திற்பொருந்திய— சிறுவடிவற- அற்பமாகியவடிவமில்லாமல்— துன்பந்தொ
க்க- துக்கமானது நிறையும்படி— அன்னவற்ருல்- அப்படிப்பட்டவைகளால்— மறையாமல்- மறை
வுபடாமல்— சூக்கமாய்- சூட்சுமமாகியும்— நொய்தாகி- சொச்சமாகியும்— மிக்கசோதியாய்- மே
லான(சுயஞ்)சோதியாகியும்—அனைத்துமாய்- எல்லாமாகியும்— ஒன்றுமாய்- ஏகமாகியுமிருக்கின்ற—
மெய்யறிவொன்றேயாம்- தத்துவஞானமானதொன்றேயாகும்— தக்கவிந்நிலை- தகுந்தவிந்தநிச்சய
ம்—நில்லென(உனதாத்மஸ்வரூபமென்றறிந்ததி)னிற்பாயென்று—தலைமையாமுபதேசம்-முதன்மை
யானவுபதேசத்தை— உரைத்தனன்- (பிரகஸ்பதிபகவான்)சொன்னுர்—(எ-று.) [இ-௰௧-க-ம்] உள்ள
தானஸ்வானுபூதிதிஷ்டியினுலில்லாததானவகம்பாவநீங்குமஃதேசகலத்யாகமென்பதையறிவித்ததாம்*

(௰௨) (அ-கை) ஸ்ரீராகவற்கிதவுபதேசஞ்செய்தல். (கவி) சீவன்முத்தனுநிலைமை பெற்றங்கரந்
தீர்ந்தெனதென்னுமன், மேவுமுட்பந்தம்விழ்ந்துபோய்ப்புந்தியில்விகற்பங்களனைத்தும்போய்ப்,பா
வமுற்றியசசனின்றநிலையினீபற்றுதலறநிற்பாய், கேவலத்திந்தவகங்கரம்பொய்ம்மையாங்கெடுத்தல்ப
ற்றுதல்வேண்டாம். (இ-ள்) சீவன்முத்தனும்-சீவன்முத்தனுகிய— நிலைமைபெற்று- நிலைமையையடை
ந்து— அகங்கரந்தீர்ந்து- அசம்பாவம்விட்டு—எனதென்னுமல்-யானெனதென்றுசொல்லாமல்—மே
வுமுட்பந்தம்- பொருந்தியவகப்பற்றுனது— விழ்ந்துபோய்- கெட்டுப்போகி— புந்தியில்- புத்தி
யில்—விகற்பங்களனைத்தும்போய்-விகற்பங்களியாவுநீங்கி—பாவமுற்றிய-(ஆத்ம)பாவனைமுதிர்ந்த—
சசனின்றநிலையில்- சசமுனியிருந்தநிலையில்— நீ- ஸ்ரீராமா நீ—பற்றுதலறநிற்பாய்-இச்சையானதுநீங்
கும்படியிருப்பாய்— கேவலத்து- கைவல்யத்தில்— இந்தவகங்கரம்- இந்தவகம்பாவமானது— பொ
ய்ம்மையாம்- மித்தையேயாகும்— கெடுத்தல்- இதைவிடுத்தலும்— பற்றுதல்- பிடித்தலும்—வேண்
டாம்-உனக்குவேண்டாம்—(எ-று.)சகலத்திலும்-நான்-கர்த்தனல்ல-வென்னுந்-திடபாவனையினுலே-
பிரகிருதத்தில்வருகின்றதொழில்களைச்செய்தாலும்-அதினுல்-பந்தப்படமாட்டான்,சு-க தனதுமன தி
ண்பிரவிர்த்தியில்லாததினுலேவிடயவிராகத்தையடைகிறுன்-ஆகையினுல்-சதாகாலமும்-நான்-கர்த்தனல்
லவென்னும்பாவனையினுலே-பரமாநந்தமென்னுநாமமுடைய-அந்த-சமபாவம்-சேடமாகும்,சு-உ.
நான்-சகலமும்- செய்கிறேனென்னும்-மகாகர்த்துவபாவத்தினுலே- நிலையை- பிச்சித்திரோயாகில்-அத்
த-மகாகர்த்துவத்தையும்-உத்தமமாகசத்துக்களிசொல்லுகிறுர்கள்,சு-ங சகலபதார்த்தங்களில்-யாதொரு
சமபாவமுண்டோ- அதுவே-உண்மையானநிலை- அதில்வைக்கப்பட்டசித்தம்- திரும்பவுஞ்சநநத்தை
யடையமாட்டாது,சு-ச. சச்சம்பந்தமானசகலப்ரமத்தையுநான்செய்கின்றேனென்றுசொல்லப்பட்
ட-கர்த்துவத்தில்- வேறுகர்த்தாயில்லாததினுலே-ராகத்துவேடங்களேது,சு-ரு எனதுதேகமானது-அன்
னியனுல்-லாளனைசெய்யப்பட்டது-அன்னியனுல்-தெகளஞ்செய்யப்பட்டது-என்றுசொல்லப்பட்
டது- யாதொன்றே- அது- எனதுகன்மவியாகம்-என்னுங்கர்த்துவத்தில்-ராகத்துவேடமேது,சு-சூ என
து-சுகதுக்கங்களின்- விஸ்தாரமாகியசகத்திரளின்- உதயநாசத்தினுனேகர்த்தாவென்னுமுள்ளத்திற்சித்
திக்கின்றமகாகர்த்துவத்தில்ராகத்துவேடங்களேது, சு-எ சுகதுக்கவிலாசங்களில்- ஆன்மாவுக்கே- முக்கி
யமான- கர்த்துருபாவத்தினுலே-தனதுசங்கற்பதாசமுண்டாகுஞ்சமபாவமேசேடமாகிறது, சு-அ இவ்
வெண்சுலோகாருத்தத்தையிந்நூலாசிரியர்சீவன்முத்தனுமென்னும்பதத்திலடக்கிக்கூறினுர். - - *

(௰௫) (அ-கை) அகம்பாவமோர்பொருளனறுதலாலஃதைப்பற்றுதல்விடுதல்கூடாவெனல் (கவி)
பொய்யதாமுயற்கொம்பினைப் பற்றவும்போக்கவு நினைப்பாரா, ரையனேபரபோதபூரணத்திலேயய
லொன்றுவருமாறென், பொய்யதாகியவநேகபாவனையினைப்பொருந்தல்புன்பிறப்பாகு, மையமின்றி
யவேகபாவனையினிலழுந்துதல்பவத்தீர்தல். (இ-ள்) பொய்யதாம்- மித்தையாயிருக்கின்ற— முயற்
கொம்பினை- சசவிஷாணத்தை— பற்றவும்- பிடிக்கவும்— போக்கவும்- விடுக்கவும்— நினைப்பாரார்-
கருதுபவர்யாவர்— ஐயனே- எனதாசிரியரே— பரபோதபூரணத்தில்- பிரமஞானமாகியபூரணத்தில்—
அயலொன்று- வேறொன்று— வருமாறென்- வருகின்றவிதமென்ன— பொய்யதாகிய- அசத்தியமா
கிய— அநேகபாவனையினை- பலபாவனையை— பொருந்தல்- அடைதல்—புன்பிறப்பாகும்- அற்பமா
னசநநமாகும்— ஐயமின்றிய- சந்தேகமில்லாத— ஏகபாவனையினில்- ஒன்ருனஸ்வரூபபாவனையில்—
அழுந்துதல்- அமிழுதலே— பவந்தீர்தல்- சநநந்தீர்தலென்று (வசிட்டமுனிசொன்னுர்) — (எ-று)
[இ-உ-க-ம்] அறிவினுண்மையைப்போதித்தகம்பாவத்தைநீக்கினதென்பதாம் - - - - *

கசன்கதைமுற்றிற்று. ஆ-கதை ௩அ-க்குக் கவிதை (௲அ௱ள)



# மித்தையாபுருடன்கதை.



(அ-கை.) முற்கதையிலாத்மவிசாரத்திலுதித்தவகங்காரத்யாகமானசகலத்யாகத்தாற்சர்வம்பிரமமயமென்றறிவித்தவ்விசாரமின்றியகங்காரநீங்காதவிடத்திற்றிரிஸ்ய ரூபமாயனுபவிக்குந்துன்பங்களையறிவிக்குநிமித்தமசம்பாவவுருவகமாகமித்தையாபுருடன்கதையைநிரூபிக்கிறார். - - - - - - *

(க) (அ-கை.)பேதநீங்கியசுயஞ்சித்திற்சுகிப்பாயெனல் (கவி) வே, இருமையோடொருமைநீக்கிநின்றதிலெய்தியின்ப, மருவுவாய்மித்தையானபுருடன்போல்வருந்தவேண்டாங், குருசிலேயெனவுமெந்தாய்கூறுபொய்ப்புருடனேனே, னொருபயனின்றித்துன்பமுற்றவனுலைந்தவாறென். (இ-ள்.) இருமையோடு- இரண்டுடன்— ஒருமைநீக்கி- ஒன்றையுந்தள்ளி— நின்றதிலெய்தி- இருந்தவாத்மஞானத்தையடைந்து— இன்பமருவுவாய்- (பரம) சுகத்தையடைவாய்— மித்தையானபுருடன்போல்- மித்தையாபுருடனைப்போல— குருசிலே- ஸ்ரீராமா—வருந்தவேண்டாமெனவும்- வருத்தப்படவேண்டாமென்றுவசிட்டமுனிசொல்லவும்— எந்தாய்- எனதுபிதாவானவசிட்டமுனியே— கூறுபொய்ப்புருடனேனென்- சொல்லாநின்றமித்தையாபுருடனவன்— ஒருபயனின்றி- ஓர்ப்ரயோசனமுமில்லாமல்— துன்பமுற்று- துயரத்தையடைந்து— அவனுலைந்தவாறென்- அவனலைந்தவிதமென்ன(எ-று)

(உ) (அ-கை) அசம்பாவநீக்கற்பொருட்டதன்விகாசத்தைச்சாமானியமா, யறிவிக்கத்தொடங்கல் (கவி) ஞானமாமமுதிறைலேநலம்பெறநிறைந்ததேனு, மியானறிவுறவித்தன்மையியம்பெனவிராமன்கேட்ப, மானமாவசிட்டன்சொல்வான்வள்ளலேநகைக்குமூல, மானவிக்கதையான்சொல்வதறவியப்புளதுமன்றோ (இ-ள்) ஞானமாமமுதினல்- ஞானமாகியவமுர்தத்தினல்— நலம்பெற- நன்மையுண்டாக— நிறைந்ததேனும்- நிறைந்ததானாலும்— யானறிவுற- நானறியும்படியாக— இத்தன்மையியம்பென- இத்தத்தன்மையைச்சொல்லுவாயென்று—இராமன்கேட்ப-இராகவர்கேட்க—மானமாவசிட்டன்சொல்வான்- மாட்சிமையுள்ளவசிட்டமுனியானவர்சொல்லுவார்— வள்ளலே- இராசாவே— நகைக்குமூலமான- சிரிப்புக்குக்காரணமாகிய— இக்கதை- இந்தக்கதையை— யான்சொல்வது- நான்செப்புவது— அறவியப்புளது- மிகவுமதிசயமுடையது— (எ-று) - - - - - - - - - *

(௩)(அ-கை)சூனியத்திலுண்டானவனசங்காரனெனல் (கவி)ஒருதலத்தேகாந்தத்திலுற்றசூனியத்திலுண்டாய்,மருவுமத்தலத்தினிற்போன்மாயையெந்திரமயத்தோர்,புருடனுண்டஞ்ஞானத்தோன்புன்மையாயிளமைப்பண்பாய்,மிருதுவாம்புத்தியுள்ளோன்கேவலமிகுந்தமூர்க்கன். (இ-ள்) ஒருதலத்து- (சிதாகாசமான)வோரிடத்தில்—ஏகாந்தத்தில்-(ப்ரபஞ்சமில்லாமற்)றனித்தவிடத்தில்—உற்றசூனியத்தில்-பொருந்தியவிசேடமில்லாதவிடத்தில்—உண்டாய்மருவும்-உண்டாகிப்பொருந்துகின்ற—அத்தலத்தினிற்போன்-அந்தவிடத்திலிருப்பவன்—மாயையெந்திரமயத்து- மாயாயெந்திரமயத்தையுடைய— ஓர்புருடனுண்டு- ஓராண்மகனுண்டு- அஞ்ஞானத்தோன்- அவனஞ்ஞானத்தையுடையவன்— புன்மையாய்- ஈனமாகியும்—இளமைப்பண்பாய்-குழந்தையினதன்மையாகியும்— மிருதுவாம்- அற்பமாகியுமிருக்கின்ற— புத்தியுள்ளோன்- புத்தியையுடையவன்— கேவலமிகுந்தமூர்க்கன்- மிகுந்தமூடத்தன்மையையுடையவன்— (எ-று) - - - - - - - - - - - - - *

(௪) (அ-கை) சூனியத்தில்வளர்கின்றவனெனல். (கவி) வானிலேசுருண்டுதோன்றுமயிற்சுருண்மருத்தலத்திற், கானனீரொன்னவன்னுன்றோன்றியேசலத்தபாழிற், சூனியமலாதொன்றில்லையாதொன்றுதோன்றிற்றங்கே, மானவவதுவுமன்னுன்மற்றவன்வளர்வுமாங்கே (இ-ள்)வானில்- ஆகாயத்தில்— சுருண்டுதோன்றும்- சுருண்டுதோற்றுகின்ற— மயிற்சுருள்- மயிற்சுருளைப்போலவும்— மருத்தலத்தில்- அளர்ப்பூமியிற்றோற்றுகின்ற— கானனீரொன்ன- கானற்சலத்தைப்போலவும்— அன்னுன்- அந்தமித்தையாபுருடன்— தோன்றி- உண்டாகி— கலந்தபாழில்- கலந்திருக்கின்றசூனியத்தில்— சூனியமலாது—சூனியமேயல்லாமல்—ஒன்றில்லை-வேறொன்றுமில்லை—அங்கு-அவ்விடத்தில்—யாதொன்று-ஏதொன்று—தோன்றிற்று-உண்டானதோ—மானவ-மனுகுலத்திற்பிறந்தவனே— அதுவுமன்னுன்- அதுவுமந்தமித்தையாபுருடனே—அவன்வளர்வுமாங்கு-அவனதுவளர்ச்சியுமவ்விடத்தில்(எ-று)*

(௫) (அ-கை) ஆகாயத்தைக்காக்கவொரகங்கட்டல் (கவி) வேறுமாயேயெப்போதும்விளங்குந்தன்மையவன்காணன், கூறுவானேர்சங்கற்பங்கூடினன்விண்ணினைப்பேணி, யூறுபடாமல்வைகுதுமீதுயர்ந்ததேயென்றுளத்துன்னி,தேறுமூவகையுடன்விண்ணைச்சேமிப்பானேர்வீடமைத்தான். (இ-ள்) வேறுமாயே- (ப்ரபஞ்சத்துக்கு) வேறாகவே— எப்போதும்- எக்காலமும்— விளங்குந்தன்மை- ப்ரகாசிக்கின்ற (சித்தினது) சுபாவத்தை— அவன்காணன்- அவன்பாராதவனாய்— கூறுவான்- சொல்லப்பட்டமித்தையாபுருடன்— ஓர்சங்கற்பங்கூடினன்- ஒருசங்கற்பத்தையடைந்து— விண்ணினைப்பேணி- ஆகாயத்தைவிரும்பி— ஊறுபடாமல்வைகுதும்- இடையூறில்லாமல்வைப்போம்— ஈதுயர்ந்ததேயென்று- இதுமேலானதேயென்று— உளத்துன்னி- மனதினினைத்து— தேறுமூவகையுடன்- திடமானசந்தோஷத்தோடும்— விண்ணை- ஆகாயத்தை— சேமிப்பான்- காவல்செய்யும்பொருட்டு— ஓர்வீடமைத்தான்- ஒருவீடுகட்டினன்— (எ-று) - - - - - - - - - - - *

(௬) (அ-கை.) வீடுகெடவிண்போனதெனவருந்தல் (கவி) அந்தமனையில்விண்ணினைவைத்தளிக்கின்றோமென்றதிலாசை. பந்தமுறலுமவன்வீடுபடர்காலத்தாலழிவெய்தி, யிந்தமருத்தாற்றரங்கம்போலிருதுமுடிவால் வருடம்போற், சிந்தியொழிய வவன்கண்டு சேண்போயினதென் றலறுற்றான். (இ-ள்.) அந்தமனையில்- அவ்வீட்டில்—விண்ணினைவைத்து- ஆகாயத்தைவைத்து— அளிக்கின்றோமென்று- காக்கின்றோமென்று— அதில்- அவ்விண்ணில்— ஆசைபந்தமுறலும்- இச்சைகட்டுப்படவும்— அவன்வீடு- அவன்மனையானது— படர்காலத்தால்- வெகுகாலத்தினால்— அழிவெய்தி- நாசமடைந்து— இந்தமருத்தாற்றரங்கம்போல்- இந்தக்காற்றினாலலையு மலையைப்போலவும்— இருதுமுடிவால்- சரரிதுவினந்தத்தினால்— வருடம்போல்- மழையைப்போலவும்— சிந்தியொழிய- கெட்டுப்போக— அவன்கண்டு- அந்தமித்தையாபுருடன்பார்த்து— சேண்போயினதென்று- ஆகாயம்போய்விட்டதென்று— அலறுற்றான்- அழத்தொடங்கினான்— (எ-று) - - - - - - - - - - *

(௭)(அ-கை.)மனைகெடவிண்ணைக்கூபத்தில்வைத்தல்.(கவி) நில்லாவீட்டில்விண்ணேயோ நீயெங்கேகன்றாயொருகணத்தி, லல்லாயானாயெனவீட்டினாகாசத்துக்கறம்புலம்பி, பொல்லாமனத்தான்மீண்டங்கோர்புதியகிணறுசமைத்தொருவர், கொல்லாதிதனிலிருத்துமெனக்கூபாகாசபரனானான். (இ-ள்) வீட்டினில்லா- மனையிலிராமல்— விண்ணேயோ- ஆகாயமே— ஒருகணத்தில்- ஒருக்ஷணத்தில்— நீயெங்கேகன்றாய்- நீயெங்கேபோனாய்— அல்லாயானாயென- இல்லாததானாயென்று— வீட்டினாகாசத்துக்கு- கிருகாகாயத்துக்கு— அறப்புலம்பி- மிகவுமழுது— பொல்லாமனத்தால்- கொடியமனதினால்— மீண்டங்கு- திரும்பவுமவ்விடத்தில்— ஓர்புதியகிணறுசமைத்து- ஒருநூதனமான கூபத்தையுண்டாக்கி— ஒருவர்கொல்லாது- ஒருவருங்கெடுக்காமல்— இதனிலிருத்துமென- இதனிடத்தில் வைப்போமென்று— கூபாகாசபரனானான்- கிணற்றாகாயத்திற்பற்றுள்ளவனானான்— (எ-று) - - - - - - *

(௮) (அ-கை) கிணறுகெடவிண்ணுக்கிரங்கிக்கும்பாகாயத்தடைத்தல். (கவி) காலமதனாற்கூபந்தான்கழிதலோடுங்கதறுற்றான், சாலவருந்திமீண்டங்கேதனைக்காப்பதற்கோர்குடம்பண்ணிக், கோலமுடையதெனமகிழ்ந்துக்கும்பாகாசபரனானான், நீலமுகிலேயக்குடமு நிகழ்காலத்தாலுடைந்ததுவே. (இ-ள்) காலமதனால்- சிலகாலத்தினால்— கூபந்தான்- கிணறானது— அழிதலோடும்- அழிந்தமாத்திரத்தில்— சாலவருந்தி- மிகவுந்துன்புற்று— கதறுற்றான்- கதறினான்— மீண்டு- திரும்பவும்— அங்கதனைக்காப்பதற்கு- அவ்விடத்திலவ்வாகாயத்தை யிரட்சிப்பதற்கு— ஓர்குடம்பண்ணி- ஒருகுடத்தைச்செய்து— கோலமுடையதென- அழகையுடையதென்று— மகிழ்ந்து- சந்தோஷித்து— அக்கும்பாகாசபரனானான்- அக்கடாகாயத்திற்பற்றுள்ளவனானான்— நீலமுகிலே- கறுத்தமேகம்போன்றஸ்ரீராமா— அக்குடமும்- அக்கலசமும்— நிகழ்காலத்தாலுடைந்தது- நடக்குங்காலத்தாலுடைபட்டது (எ-று) *

(௯) (அ-கை) கும்பங்கெடவவ்விண்ணுக்கிரங்கிக்குண்டத்திலடைத்தல். (கவி) நம்பிநம்பியடைந்ததெலாநாசமெய்தத்திருவிலியக், கும்பவிண்ணுக்கழுததற்பின்குண்டமொன்றங்கேகெல்லித், தம்பமென்றுதற்பரனாய்ச்சார்ந்தானந்தக்குழிதனையுந், தும்பிகாலமழித்துளதாற்றுன்னு மிருளைச்சுடர்போல. (இ-ள்) நம்பிநம்பி- மிகவுநம்பிக்கையுற்று- அடைந்ததெலாம்- பெற்றவனைத்தும்— நாசமெய்த- கெட்டுப்போக— திருவிலி- செல்வமற்றமித்தையாபுருடன்— அக்கும்பவிண்ணுக்கழுது- அந்தக்கடாகாயத்துக்குப்புலம்பி— அதற்பின்- அதன்பின்பு— குண்டமொன்று- ஒருகுழியை— அங்கேகெல்லி- அவ்விடத்திற்றோண்டி— தம்பமென்று- நிலையென்று— தற்பரனாய்- அக்குண்டாகாயத்திற்பற்றுள்ளவனாய்— சார்ந்தான்- அடைந்தான்— அந்தக்குழிதனையும்- அப்பள்ளத்தையும்— துன்னுமிருளை- நெருங்கியவிருட்டை(க்கெடுக்கின்ற)— சுடர்போல- ப்ரகாசத்தைப்போல— தும்பிகாலமழித்துளது- யானையாகியகாலமழித்தது— (எ-று) - - - - - - - - - - *

(௰) (அ-கை) குண்டங்கெடவவ்விண்ணுக்கிரங்கிநாற்சாரகங்கட்டியதில்வைத்தல் (கவி) குண்டவிண்ணுக்கழுததற்பின்குலவுநாற்சாரகங்கட்டி, மண்டுமருள்கூர்தற்பரனாய்வாழ்ந்தானந்தமனைதனையு, மண்டமுழுதுங்கொல்காலமழிவுசெய்யவதற்கழுது, சண்டபவனனிடைப்பட்டசருகுபோலத்தளர்ந்துலைந்தான் (இ-ள்.) குண்டவிண்ணுக்கு- குழியாகாசத்துக்கு— அழுததற்பின்- புலம்பினபின்பு— நாற்சாரகங்கட்டி- வளைவானநாற்சாரி மனையைக்கட்டி— மண்டுமருள்கூர்- அளவற்றகிருபைமிகுந்த— தற்பரனாய்வாழ்ந்தான்- அதுபற்றுள்ளவனாசவாழ்ந்தான்— அந்தமனைதனையும்- அந்தவீட்டையும்— அண்டமுழுதும்- அண்டங்களையெல்லாம்— கொல்காலம்- அழிக்கின்றகாலமானது— அழிவுசெய்ய- கெடுக்க— அதற்கழுது- அதற்குவிசனப்பட்டு— சண்டபவனனிடைப்பட்ட- பெருங்காற்றிலகப்பட்ட— சருகுபோல- உலர்ந்தவிலையைப்போல— தளர்ந்துலைந்தான்- சோர்வுற்றலைந்தான் (எ-று) *

(௧௧) அ-கை) நாற்சாரகங்கெடவதற்கிரங்கிக்குதிர்செய்தடைத்தல் (கவி) தடனார்நாற்சாற்கழுததற்பின்றற்காப்பதற்கோர்குதிர்பண்ணி, யிடனார்குதிர்புக்கவனிருப்பவிதுவுங்காலனிறப்பித்தா, னுடனேகுதிர்விண்ணினுக்கழுதானொன்றேவீடுகுதிர்குண்டங், குடநாற்சாரவென்பவற்றாற்குறைவில்காலந்துயருற்றான். (இ-ள்) தடனார்நாற்சாற்கு- விசாலமுள்ளநாற்சாரியாகாயத்துக்கு— அழுததன்பின்- இரங்கினவதன்பின்பு— தற்காப்பதற்கு- அந்தவாகாயத்தைக்காவல்செய்வதற்கு— ஓர்குதிர்பண்ணி- ஒருகுதிரைச்செய்து— இடனார்குதிர்புக்கு- விசாலமுள்ளகுதிரிற்ப்ரவேசித்து— அவனிருப்ப- அவனிருக்க— இதுவும்- இக்குதிரையும்— காலனிறப்பித்தான்- காலனழிப்பித்தான்— உடனேகுதிர்விண்ணினுக்கழுதான்- உடனேகுதிராகாயத்துக்கலறினான்— ஒன்றே- ஒன்றுதானே— வீடும்- வீடாகாயமும்— குதிர்- குதிராகாயமும்— குண்டம்- குழியாகாயமும்— குடம்- கடாகாயமும்— நாற்சார- நாற்சாராகாயமும்— என்பவற்றால்- என்கின்றவிவைகளினால்— குறைவில்காலம்- வெகுகாலம்— துயருற்றான்- துன்பத்தையடைந்தான்— (எ-று.) - - - - - - - - - - - - *

(௰௨) (அ-கை.) இ-து. (கவி) விண்ணைவீட்டிலடைத்தவனாய்வீட்டில்விண்டான்றானாகி, புண்ணை
யுற்றபெருந்துயராலுழைக்கும்பிழைக்குமோவொருகா, லெண்ணி நிற்பதிதுபோவதிதுவென்றறியானி
வனென்று, புண்ணியத்தின்வடிவானோன்புகலவீரன்புகலுற்றான். (இ-ள்) விண்ணை- ஆகாயத்தை—வீ
ட்டிலடைத்தவனாய்- கிரகத்திலடைத்தவனாய்—வீட்டில்விண்டான்- கிரகாகாயமானது—தானாகி- தன்
மயனாய்— உண்ணவுற்ற- மனந்தளர்வையடைந்த— பெருந்துயரால்- மிகுந்ததுக்கத்தினால்— ஒரொ
ருகால்- ஒவ்வொருகாலத்தில்— உழைக்கும்-உழைப்பவனாகவும்—பிழைக்கும்- பிழைப்பவனாகவும்—
எண்ணி- நினைத்து— நிற்பதிது- இருப்பதிது—போவதிதுவென்றறியான்- நசிப்பதிதுவென்றறியா
த— இவன்- இந்தப்புருடன்— அறியானென்று- தெரியாதவனென்று—புண்ணியத்தின்வடிவானோ
ன்புகல- தருமரூபியானவசிட்டமுனிசொல்ல— வீரன்புகலுற்றான்-ஸ்ரீராமன்சொல்லத்தொடங்கினார்
(எ-று.)[இ-௰௨-க-ம் ]வீடுமுதலியவைசண்டரித்தலைவிண்ணிறந்ததாகநினைத்துவருந்தினதென்பதாம்

(௰௩) (அ-கை) இத்திருஷ்டாந்தத்தினபிப்பிராயங்கூறத்தொடங்கல் (கவி) பொய்யாமனிதன்க
தையாலென்புகன்றாய்மாயாபுருடனையே,யையாவிவன்விணகாத்தானென்றறைந்ததேதென்றருள்கெ
ன்ன, மெய்யாம்வசிட்டனுரைசெய்வான்மித்தாபுருடனென்றவிவன், மையார்முகிலேசூனியமாம்வானி
லெழுந்தவகங்கரமே (இ-ள்) பொய்யாமனிதன்- மித்தையாபுருடனுடைய— கதையாலென்புகன்
றாய்.. கதையினாலென்னசொன்னீர்— அய்யா- ஆசாரியரே— மாயாபுருடனை- மித்தையாபுருடனை—
இவன்விண்காத்தானென்று- இவனாகாயத்தைக்காவல்செய்தானென்று—அறைந்ததேதென்று- சொன்
னதேதுவென்று— அருள்கென்ன- அருள்செய்வாயென்றிராமன்கேட்க— மெய்யாம்- உண்மையா
ன— வசிட்டனுரைசெய்வான்- வசிட்டமுனிசொல்லுவார்— மித்தாபுருடனென்றவிவன் மித்தையா
புருடனென்றுசொல்லியவிவன்— மையார்முகிலே- கரியநிறத்தையுடையமேகம்போன்றவரே— சூ
னியமாம்வானில்- சூனியவாகாயத்தில்— எழுந்தவகங்கரமே-உண்டானவகங்காரமாம்—(எ-று) - *

(௰௪) (அ-கை) இ-து (கவி) இந்தவுலகெல்லாமிருக்குமிந்தவிண்ணேதது நிறைவுற், றந்தமின்
றிச்சிருட்டிதனக்காதிதனிற்றானே நிற்கு, மைந்தவதன்பாலகங்காரமருத்திற்பரிசம்வருவதுபோன்,மு
ந்துதோன்றித்தனைக்காக்கமுயன்றான்வடிவாய்முளையாதோன்.(இ-ள்.)இந்தவுலகெல்லாமிருக்கும்-இச்
சகங்களனைத்துமிருக்கின்ற—இந்தவிண்ணெது-இவ்வாகாயமெதுவோ—அதுநிறைவுற்று- அதுபூரண
மாய்— அந்தமின்றி- முடிவில்லாததாய்—சிருட்டிதனக்காதிதனில்- சிருட்டிக்குமுன்னமே— தானே
நிற்கும்- சுயமாகவேயிருக்கும்— மைந்த- குழந்தாய்— அதன்பால்- அதனிடத்தில்— அகங்காரம-
அகம்பாவமானது— மருத்திற்பரிசம்வருவதுபோல்- காற்றிற்பரிசமுண்டாவதுபோல— முந்துதோ
ன்றி- முன்னமேயுண்டாகி- தனைக்காக்க- (சிதாகசமான) வாத்மவைக்காப்பதற்காக— வடிவாய்முளை
யாதோன்- சூனியமானவகங்காரன்—முயன்றான்- முயற்சித்தான்— (எ-று) - - - - - *

(௰௫) (அ-கை) இ-து (கவி) கூவங்குண்டங்குடநாற்சார்குதிரென்பனவாங்குரம்பைகளை, மே
வநாநாவிதமாகவிதித்துமீண்டுமீண்டிழந்து, தாவமுற்றானுடறோறுந்தனைக்காத்தனனென்றாகாச, பா
வனைக்கேநிலைப்பட்டான்பாழேவருந்திப்பதைத்தனனால் (இ-ள்)கூவம்- கிணறும்— குண்டம்- குழி
யும்—குடம்- கடமும்—நாற்சார்- நாற்சாரியும்—குதிர்- குதிரும்— என்பனவாம்- என்றுசொல்லப்
பட்டனவாகிய— குரம்பைகளைமேவ- சரீரங்களைப்பொருந்த— நாநாவிதமாகவிதித்து- பலவிதமாக
வுண்டாக்கி—மீண்டுமீண்டிழந்து- திரும்பத்திரும்பவிழந்து—தாவமுற்றான் - துன்பமடைந்தான்—
உடறோறும்- சரீரங்கடோறும்— தனைக்காத்தனனென்று. (சிதாகாச)வாத்மாவைக்காவல்செய்தேனெ
ன்று—ஆகாசபாவனைக்கு- (பூ)தாகாயபாவனைக்கு—நிலைப்பட்டான்- நிலையானான்— பாழேவருந்தி-
வீணாகவருத்தப்பட்டு— பதைத்தனன்- பதைபதைத்தான்— (எ-று) - - - - - - - - - - *

(௰௬) (அ-கை) இ-து. (கவி) விண்ணானென்றேசேமித்துவிட்டாகாசமாதிகளி, னண்ணாமெலிவு
ற்றிடுமித்தையான்போல்வருந்தாதொழிசமலர்க், கண்ணாவிண்ணின்மிகப்பெரிதாய்க்களங்கமற்றநு
ண்ணியதா,யெண்ணாலடங்காவழிவில்சிவமியலாத்துமதத்துவந்தானே (இ-ள்)விண்ணானென்று-(பூ)தா
காயத்தைநானென்று— சேமித்து- காவல்செய்து—விட்டாகாசமாதிகளின்- கிரகாகாசமுதலானவைக
ளில்— நண்ணாமெலிவுற்றிடும்-பொருந்தித்தளர்வடைகின்ற—மித்தையன்போல்- மித்தையாபுருட
னைப்போல — மலர்க்கண்ணா- தாமரைக்கண்ணனானஸ்ரீராமா— வருந்தாதொழிக- துன்புறாமனீங்கக்
கடவாய்— விண்ணில்- ஆகாயத்திலும்— மிகப்பெரிதாய்- மிகவும்வியாபகமாகியும்— களங்கமற்று-
மாசில்லாததாகியும்— நுண்ணியதாய்-சொச்சமாகியுமிருக்கின்ற— எண்ணாலடங்கா- நினைவினாலடங்
காத— அழிவில்சிவம்- அழிவற்றசிவமே— இயலாத்துமதத்துவந்தான்- சுபாவமானவாத்மதத்துவமா
ம்— (எ-று.) [இ-ச-க-ம்] உள்ளதானசிதாகாயத்திலில்லாததாயுதித்தவகம்பாவமேமித்தியாபுருடன்,
சிதாகாயத்தைக்காக்கநினைத்தல் விண்காக்கநினைத்தல்தேவர்முதலிய சரீரங்கள்வீடுமுதலியனசநநமரண
மே, அவைகளுண்டாகியழிதல் நீங்காதசிதாகாய, நீங்கினதாகவிரங்குதலேவினைச்சக்கதறினாலெனக்கூறி
யிவ்வகம்பாவத்தால்வருந்தாமற் சிவஸ்வரூபமாய்விளங்குவாயென்பதாம் - - - - - - *

(௰௭) (அ-கை) தேகநீங்கினாலுஞ்சித்துநீங்காதெனல். (கவி) அவ்வாற்றுமதத்துவங்காணலாமோ
வெவர்க்குமகப்படுமோ, விவ்வாறிருக்கவுடலிறந்தாலிதயாகாசமாத்திரத்தை, வெவ்வாளரசேநானிறந்
தேனென்று மெலிவர்விவேகமிலோர், தவ்வாவிசும்புகடாதிகடான்ற சேர்ந்தபோதுதனந்தமோ.
(இ-ள்) அவ்வாற்றுமதத்துவம்- அந்தவாத்துமதத்துவமானது— காணலாமோ- தரிசிக்கப்படுமோ—
எவர்க்குமகப்படுமோ- யாவர்க்குங்கிடைக்குமா— இவ்வாறிருக்க- இப்படியிருக்க— உடலிறந்தால்-
சரீரமரித்தால்— இதயாகாசமாத்திரத்தை- இதயாமபரமாத்திரமானவை— வெவ்வாளரசே- கொடிய
வாளாயுதத்தையுடையவரசனே —நானிறந்தேனென்று-யானிறந்துபோனேனென்று—மெலிவர்

ர் - விவேகமற்றவர்கள்— மெலிவர் - தளருவார்கள்—தவ்வாவிசும்பு - தவிராதவாகாயமானது—கடாதிக
டான் - கடமுதலியனவைகள்—தகர்ந்தபோது - கெட்டபோது—தணந்திடுமோ - நீங்கிப்போமோ (எ-

(௰அ) அ-கை ) தானென்பது நிறைந்துநானென்பதிறக்குமெனல் (சவி) கடமதுடைந்தால்விண்
பிரியாக்காயமழிந்தாலுயிரழியா, தடவிதாஞ்சின்மாத்திரமாய்ச்சத்தாய்விண்ணினுண்ணியதாய்த்,தொ
டருமணுவுக்கணுவாகுஞ்சுருபமைந்தா நானென்று, படருமனுபூதியினளவேபயிலுங்குடம்போனசித்
திடுமால் (இ-ள்) கடமதுடைந்தால் - குடமுடைந்தால்— விண்பிரியா - ஆகாயமானதுபிரியமாட்டா
து— காயமழிந்தால் - சரீரநசித்தால்— உயிரழியா - ஆத்மாவானதழியமாட்டாது— தடவிதாஞ்சின்மா
த்திரமாய் - பெருமைபொருந்தியசின்மாத்திரமாகியும்— சத்தாய் - சத்தாகியும்— விண்ணினுண்ணிய
தாய் - ஆகாயத்திலுஞ்சூட்சுமமாகியும்— தொடருமணுவுக்கணுவாகும் - தொடராநின்றவணுவுக்கணு
வாகியுமிருக்கின்ற— சுருபம் - பிரமஸ்வருபமானது— மைந்தா - குழந்தாய்— அனுபூதியினளவேப
டரும் - அனுபூதியின்மட்டேவியாபிக்கும்— நானென்றுபயிலும் - யானென்றுசொல்லிய (வகங்கார
மானது) — குடம்போனசித்திடும் - கடத்தைப்போலழியும்—(எ-று)[இ-உ-க-ம்] வீடுமுதலியவை
கணசிக்கினுமதிலக யட்டதுபோலத்தோற்றியகிரகாகாச முதலாகச்சொல்லுஞ் சத்தமிறந்ததேயன்றி
யதனருத்தமான பூதாகாசமிறவாததுபோலத் தேகாதிகணசிக்கினு மதிற்பந்தப்பட்டதுபோலத்தோ
ற்றினசத்தருபமானசிதாபாசனுனவசம்பாவநீங்குவதேயன்றியதனருத்தமானசித்து நீங்காவென்பதாம்.

(௰க) (அ-கை) செகத்துருவஞ்சித்தேயெனல் (சவி) யாதுமென்றுமெவ்விடத்துமிறத்தல்பிறத்தலி
லதாகு, மோதுமிந்தருபத்தாலுலகாய்ப்பிரமமேவளரு, மாதலாலில்வுலகெல்லாமடியுமுடியுநடுவுமற
ப், பேதமறப்பாவாபாவம்பிறவாப்பொருளென்றிடர்தீர்வாய் (இ-ள்) யாதும் - எதுவும்— என்றும் -
எப்போதும்— எவ்விடத்தும் - எந்தவிடத்திலும்—இறத்தல் - மரித்தலும்—பிறத்தல் - செனித்தலும்—
இலதாகும் - இல்லாததாகும்— ஓதுமிந்தருபத்தால் - சொல்லப்பட்ட விவ்வுருவத்தினால்— உலகாய் -
சகமாய்—பிரமமேவளரும் - பிரமமேவிர்த்தியடையும்—ஆதலால் - ஆதலில்—இவ்வுலகெல்லாம் - இச்ச
கங்களனைத்தும்— அடியும் - ஆதியும்— நடுவும் - மத்தியும்— முடிவுமற - அந்தமுமில்லாமலும்—பேதம
ற - பேதாபேதமில்லாமலும்— பாவாபாவம்பிறவா - பாவமும்பாவமுமுண்டாகாமலுமிருக்கின்ற— பொ
ருளென்று - பரவஸ்துவென்றெண்ணி —இடர்தீர்வாய் - துன்பநீங்குவாய்—(எ-று) - - - - - - *

(௰௨) (அ-கை.) அசம்பாவத்தையறிவிற்கெடுக்கவேண்டுமெனல் (சவி) ஆபத்துக்கெல்லா நிலையம
நித்தமவசமவிவேகம், பாவத்துக்குமுதன்மடமைப்பவவித்தழிவைப்பற்றியது,தாபத்துக்கோரிடமான
தகவிலகங்காரந்தன்னை, நீபற்றில்லாவறிவாலேநீக்கிலதுவேநிமலநிலை. (இ-ள்) ஆபத்துக்கெல்லாம் - ஆப
த்துக்களனைத்திற்கும்— நிலையம் - இடமாகியும்— அநித்தம் - அநித்தியமாகியும்— அவசம் - வசமில்
லாததாகியும்— அவிவேகம் - விவேகமில்லாததாகியும்— பாவத்துக்குமுதல் - பாபங்களுக்குமுதலா
கியும்— மடமை - அஞ்ஞானமாகியும்— பவவித்து - சநநபீசமாகியும்— அழிவைப்பற்றியது - நாச
த்தையுடையதாகியும்— தாபத்துக்கோரிடமான - துன்பத்திற்கோர்வித்தாகியுமிருக்கின்ற— தகவி
லகங்காரந்தன்னை - அறிவற்றவகம்பாவத்தை— நீபற்றில்லாவறிவால் - இராகவவிச்சையற்றவாத்மஞான
த்தினால்— நீக்கில் - செப்பாயானால்—அதுவே - அவ்(வகங்காரமிறந்த)விடமே— நிமலநிலை - நின்மலமா
னசுபனமுறதிப்பதமாம்—(எ-று)[இ-உ-க-ம்] சித்தேசகத்தாய்விளங்குமென்றறியினஃதையானெ
ன்னுமகம்பாவநீங்கிச்சர்வமுந்தானாகவேவிளங்குமென்பதாம் - - - - - - - - *

மித்தையாபுருடன்கதை முற்றிற்று ஆகதை ௩௧ க்குக்கவிதை (௩அ௭௭)



# விரதருசையகதை.



(அ-கை) முற்கதையிலகம்பாவத்தான்விளைகவருந்துவதை திஷ்டாந்தப்படுத்தியஃதுநீக்கிற்சர்வ
ம்பிரமமயமாய்விளங்குமென்பதையறிவித்திவ்வனுபவமியாவிற்குஞ்சான்றுதானேயென்னுமகாகற்த்
தத்வமுதலியவற்றுவிளங்குமென்பதையறிவிக்குநிமித்தமவிரதருசையகதையை நிரூபிக்கிறார் - - *

(க) (அ-கை.) சிற்பிரகாசமேசகத்தாகவிளங்குமெனல் (சவி) ஆதலாற்காண்பவற்றினுண்மைநிலை
யிப்படியேயறிவில்வையம், பேதமாய்வேறொன்றிற்பிறந்ததிலைக்கயிற்றிலராப்பிறப்பதேபோ, லாதப
னல்வேறிலையாதபமெனறேயாவித்தோர்க்கா தபந்தான், பேதமறவாதபனும்பேணுநிருவிகற்பமிதுபே
சுங்காலே. (இ-ள்.) ஆதலால் - ஆதலினால்— காண்பவற்றினுண்மைநலை - சகத்திநிச்சயமானது— இப்
படியே - இந்தப்ரகாரமேயாகும்— அறிவில் - ஆத்மஞானத்தில்— வையம் - சகமானது— சயற்றிலரா
ப்பிறப்பதேபோல் - ரச்சுவிற்சற்பமுண்டாவதுபோல(வுதித்ததேயன்றி)—பேதமாய் - வேற்றுமையா
க— வேறொன்றிற்பிறந்ததிலை - மற்றொன்றிலுண்டானதில்லை— ஆதபனல் - சூரியனைவிட— ஆதபம் - கிர
ணமானது— வேறிலையென்று - வேறில்லையென்று— பாவித்தோர்க்கு - பாவனைசெய்தவர்களுக்கு— ஆத
பந்தான் - கிரணமே— பேதமறவாதபனும் - வேற்றுமையில்லாமற் சூரியனுக்கும்— பேசுங்கால் - சொ
ல்லுமிடத்தில்— இதுபேணுநிருவிகற்பம் - இதுவேவிரும்பப்பட்ட நிருவிகற்பமாகும்— (எ-று)

(உ) (அ-கை) அபேதானுபவமுரைத்தல் (சவி) பொன்னில்வேற்றுமையன்றுகேயூரமெனநினை
விற்பொன்றோன்றேயா, மின்னதேநருவிகற்பமெனபராவிரவிவெயிலென்றுநாடின், மின்னுகதிரி

ரவிக்குவேறுபோலாங்கண்டாய்விவிதமாகத், துன்னுநாநாத்துவம்விட்டறிவதிலாநல்லறிவிற் றுணிந்துநிற்பாய். (இ-ள்) பொன்னில்- கனகத்துக்கு— கேயூரம்- தோளணியானது—வேற்றுமையன்றெனநினையில்- வேறுபாடல்லவென்றுபாவிக்கில்—பொன்னென்றேயாம்- தமனியமொன்றுமேயாம்—இன்னது- இவ்வபின்னத்தையே— நிருவிகற்பமென்பர்- நிருவிகற்பமென்றுசொல்லுவார்கள்— இரவி- சூரியனென்றும்— வெயிலென்று- கிரணமென்றும்— நாடில்- வேருகநாடினுல்— மின்னுகதிர் ப்ரகாசிக்கின்றகிரணத்துக்கும்—இரவிக்கு- சூரியனுக்கும்—வேறுபோலாங்கண்டாய்- வேற்றுமையைப்போலத்தோற்றும்— விவிதமாகத்துன்னும்- நாநாவிதமாகநெருங்கிப— நாநாத்துவம்விட்டு- பலவிதங்களையும்விட்டு— அறிவதிலா- சகமில்லாத— நல்லறிவில்- அநுபூதிஞானத்தில்—துணிந்துநிற்பாய்- (ஸ்ரீராமா) நீதெளிந்திருப்பாய்—(எ-று) [இ-உ-க-ம்] கிரணமென்று மாபரணமென்றும் வேறுபிரித்துப்பாராமற்சூரியனுசவும்பொன்னுசவும் பார்க்கினவைகளாய்விளங்குவதுபோலச் சகத்தை வேறுபிரித்துப்பாராமற்சின்மாத்திரமாகப்பார்க்கிலஃதாகவேயாவும்விளங்குமென்பதாம். - - - ※

(௩) (அ-கை) பிரமசங்கற்பமேமனமுதலியசகமாகத்தோற்றுமெனல். (கவி) சங்கற்பமெனும் புரணசத்தியினைத்தற்பரமந்தானே தன்னுற், பொங்குற்றவாயுவலைவைச்செய்யுமாறுபோற்புரிந்தபோது, சங்கற்பவிரிபுருவாயயல்போலாய்ச் சகவடிவாய்த்தனைத்தானுடிப், பொங்குற்றமனமாகுஞ்சங்கற்பமயமாமிப்புவியைக்காணக் (இ-ள்) சங்கற்பமெனும்- சங்கற்பமென்கின்ற— புரணசத்தியினை- சலனசத்தியை— தற்பரமந்தானே- பிரமமே— பொங்குற்றவாயு- மிக்குற்றகாற்றுனது— அலைவைச்செய்யுமாறுபோல்- சலனத்தைச்செய்யுந்தன்மையைப்போல— தன்னுற்புரிந்தபோது- தன்னுற்சங்கற்பித்தபொழுதில்— சங்கற்பம்- அச்சங்கற்பமானது— விரிபுருவாய்- பரந்தவடிவமாகி— அயல்போலாய்- வேறுபோலாகி— சகவடிவாய்- உலகத்துருவமாகி— தனைத்தானுடி- தன்னைத்தானேபார்த்து— பொங்குற்றமனமாகும்- பொலிவுள்ளமனமாகும்—சங்கற்பமயமாம்- (அதன்) சங்கற்பமயமாக— இப்புவியைக்காண்க- இச்சகத்தைப்பார்க்கக்கடவாய்—(எ-று) - - - - - - - - - - ※

(௪) (அ-கை) அநுற்வாச்சியமான சகத்துமுதலியசர்வமும்பிரமமாகவேவிளங்குமெனல் (கவி) தெரிபொருளென்றுளதல்லபொய்யுமலசொற்பனத்தின்றிரள்போற்றோற்றுந், தெரிபவன்கேட்போன்சொல்வோன்பரிசிப்போன் மணங்கொள்வோன்செல்வோன்மீள்வோன், புரிவனவெல்லாந்தானே புதிதாகுமலவெல்லாம்பொருளென்றோர்வாய், புரிதருநின்றொழிலெல்லாமலமறுசின்மாத்திரமாம் பொருளேகண்டாய். (இ-ள்) தெரிபொருள்- சகமானது— என்று- எப்போதும்— உளதல்ல- சத்தியமுமல்ல— பொய்யுமல- அசத்தியமுமல்ல—சொற்பனத்தின்றிரள்போல்- கனவின்கூட்டத்தைப்போல— தோன்றும்- தோற்றும்—தெரிபவன்- காண்பவனும்—கேட்போன்- கேட்பவனும்—சொல்வோன்- பேசுபவனும்— பரிசிப்போன்- பரிசிப்பவனும்— மணங்கொள்வோன்- வாசனைகொள்ளுபவனும்— செல்வோன்- நடப்பவனும்— மீள்வோன்- திரும்புபவனும்— புரிவனவெல்லாந்தான்- சொல்லப்பட்டசகலமும்— புதிதாகுமல- நூதனமாகவுண்டானதல்ல— எல்லாம்பொருளென்று- சகலமுமுண்மையென்று— ஓர்வாய்- அறிவாய்—புரிதரும்- செய்கின்ற— நின்றொழிலெல்லாம்- உனதுசெய்கைகளனைத்தும்—மலமறு- களங்கமற்ற— சின்மாத்திரமாம்பொருளே- ஞானமயமானவஸ்துவேயாம்— (எ-று) [இ-உ-க-ம்] சைதன்யத்தனதல்லாசத்திஞற்றுனேசகமுதலியவைபோலத்தோற்றமகிழ்தலேயன்றிவேறின்றெனபதாம் - - - - - - - - - - - - - - ※

(௫) (அ-கை) சைதன்யவியாபகமுணாத்தல் (கவி) பெரும்பெரியவடிவான பிரமமேயாதலாற்பிறிதொன்றில்லை, வருபொருளெல்லாமறிவின்கனதையாயிருத்தலிவ்வையமெல்லாங், கரும்புயலேயறிவேயாங்கற்பனைவேறில்லையாற்காணப்பட்ட, வரும்பொருள்கடனிலறிவுண்டாதலினுலறிபொருளாமனைத்துமில்லை (இ-ள்) பெரும்பெரியவடிவான- மகத்துக்குமகத்துருபமானது— பிரமமேயாதலால்- பிரமஸ்வருபமேயாதலால்— பிறிதொன்றில்லை- (சகத்தென்பது) வேறொன்றுமில்லை— வருபொருளெல்லாம்- வராநின்றவஸ்துக்களனைத்தும்— அறிவின்கனதையாய்- சித்தின்வடிவாகி—இருத்தலில்- தங்குதலினுல்— இவ்வையமெல்லாம்- இச்சகங்களனைத்தும்— கரும்புயலே- கரியமேகமே—அறிவேயாம்- சின்மாத்திரமேயாம்— கற்பனைவேறில்லையால்- கற்பிதம்வேறில்லாததினுல்—காணப்பட்ட- பார்க்கப்பட்ட— வரும்பொருள்கடனில்- வராநின்றவஸ்துக்களில்— அறிவுண்டாதலினுல்- சித்துண்டாயிருத்தலின்—அறிபொருளாமனைத்துமில்லை- விடயமாகியசகலமுமில்லை—(எ-று) [இ-ம்] காணப்பட்ட சகலவஸ்துக்களுஞ்சைதன்யமாய் நிறைந்திருக்கின்றபடியாலதைத்தவிரவேறுவஸ்துவில்லையென்பதாம்.

(௬) (அ-கை) அசம்பாவநீங்கியசாங்கஞ்செய்வாயெனல் (கவி) ஆதலினுற்பந்தம்விடெங்குளதுவிடிதெனவடுத்தபந்த, மீதெனவெண்ணுவதெல்லாம்வலிந்தகற்றியபிமானமிறையுமின்றித், தீதுதவிர்மவுனியாய்ப்பொறிவெனுமானமதந்தீர்மேலோனு, யோதியநின்காரியஞ்செய்திராமனேயசங்காரமொழிந்துநிற்பாய் (இ-ள்) ஆதலினுல்- ஆசையினுல்— பந்தம்விடு- பெத்தமுத்தி— எங்குளது- எங்கேயிருக்கின்றது— விடிதென- முத்தியிதுவென்றும்— அடுத்தபந்தமீதென- சேர்ந்திருக்கின்றபெத்தமிதுவென்றும்— எண்ணுவதெல்லாம்- நினைப்பதனைத்தையும்— வலிந்தகற்றி- உறுதியாகத்தள்ளி— அபிமானம்- அபிமானமானது—இறையுமின்றி- அற்பமுமில்லாமல்— தீதுதவிர்மவுனியாய்- குற்றமற்றமவுனியாகி—பொறிவென்று- இந்திரியங்களைச்செயித்து—மானம்- அபிமானமும்—மதம- செருக்கும்— தீர்மேலோனுய்- நீங்கியமேலானவனுய்— ஓதியநின்காரியஞ்செய்து- சொல்லியவுனதுதொழிலைச்செய்து— இராமனே- ஸ்ரீராமா—அசங்காரமொழிந்துநிற்பாய்- அசம்பாவர்தவிர்ந்திருப்பாய்— (எ-று) [இ-ம்] பற்றுமுதலியயாவும்பிரமத்தைத்தவிரவில்லையென்னுமனுபவத்திலுலகம்பாவத்தைநீக்கியராசப்ரவிர்த்தியைச்செய்வாயென்பதாம். - - - - - - - ※

# விரதகுணையகதை.

(எ) (அ-கை) பிரமமயமாயிருந்துவிபகரிக்கும்பொருட்டுமோகத்தன்முதலியவற்றைச்சொல்லத்தொடங்கல். (கவி) மோகத்தில்வருமையமெல்லாம்போயறுதிநிலைமுற்றும்பற்றி, மாகத்தன்மாயோகிமகத்தானதியாகியாய்வாழ்தியென்ன, மேகத்தைநிகர்வள்ளலிம்மூன்றுகுணங்களெவைவிளம்பாயென்ன, யோகத்தையுணர்முனிவனக்குணமூன்றையுந்தோன்றவுரைக்கலுற்றான் (இ-ள்) மோகத்தில்வரும்- மயக்கத்தினால்வராநின்ற— ஐயமெல்லாம்போய்- சந்தேகங்களனைத்துநீங்கி— அறுதிநிலைமுற்றும்பற்றி- நிச்சயமானகுணத்தைமுழுதும்பிடித்து— மாகத்தன்- மகாகர்த்தனுகியும்— மாயோகி- மகாயோகியாகியும்— மகத்தானதியாகியாய்- மகாத்யாகியாகியும்— வாழ்தியென்ன- நீவாழக்கடவாயென்றுவசிட்டமுனிசொல்ல— மேகத்தைநிகர்வள்ளல்- முகிலுக்கொப்பாகியஸ்ரீராமர்— இம்மூன்றுகுணங்கள்- இந்தமூன்றுகுணங்களும்— எவைவிளம்பாயென்ன- யாதுசொல்வாயென்றுகேட்க— யோகத்தையுணர்முனிவன்- உபாயந்தெரிந்தவசிட்டமுனியானவர்— அக்குணமூன்றையும்- அந்தமூன்றுகுணங்களையும்—தோன்றவுரைக்கலுற்றான்- தோற்றும்படிசொல்லத்தொடங்கினர்— (எ-று) - ※

(அ) (அ-கை.) பிறிங்கிசன்றனதுமயக்கநீங்கும்பொருட்டுப்பரமேசுரனைவினவுதல் (கவி) மூன்றுவகைவிரதமெனுமிதுதன்னைப்பிருங்கிசன்மோகம்போக,வின்றுபரம்பொருளறியும்விருப்பினலேமகிரிவடகோடெய்தி,வான்றுணையாஞ்சங்கரனைத்தொழுதிறைஞ்சியிப்பிறவிமயக்கைநோக்கித்,தோன்றுணர்விலாறுதலில்லாமையினன்மோகித்துத்துவண்டேனென்றும் (இ-ள்) மூன்றுவகைவிரதமெனும்- மூவகையானநோன்பென்கின்ற—இதுதன்னை- இந்தவருத்தத்தை— பிரிங்கிசன்- பிரிங்கிசனுனவர்—மோகம்போக- தனதுமயக்கங்கெட— ஈன்றுபரம்பொருள்- உண்டானபரமாத்தத்தை—அறியும்விருப்பினல்- அறியவேண்டுமென்கின்றபிரியத்தினல்— ஏமகிரிவடகோடெய்தி- மகம்மேருவினுத்தாசிகரத்தையடைந்து— வான்றுணையாம்- சிதாகாசத்துக்கொப்பாகிய—சங்கரனை- பரமேசுவரனை— தொழுதிறைஞ்சி- வணங்கிப்போற்றி— இப்பிறவிமயக்கைநோக்கி- இந்தச்சநநமயக்கத்தைப்பார்த்து— தோன்றுணர்வில்- தோற்றப்பட்டஞானத்தில்—ஆறுதலில்லாமையினல்- விஸ்ராந்தியில்லாத்தினல்—மோகித்து- மயக்கமுற்று— துவண்டேனென்றும- அலைந்தேனென்றுஞ்சொல்லி— (எ-று) - - - ※

(கூ) அ-கை )மோகநீங்கும்படிவிரதத்திறையமாவாயெனல். (கவி )இச்சகமாம்பழங்குடிவிலிளைப்பாறிநான்றிரிவதெந்நனென்று, மச்சமறுநிச்சயமாமொழுங்கையருள்வாயென்றுமன்பாற்கேட்ப, நிச்சயமாயரனருள்வானையமெலாமறுத்தறுதிநிலைமைபற்றின், மெச்சியமாகத்தன்மாயோகி மாத்யாகியாய்விடுவையென்ன (இ-ள்) இச்சகமாம்- இவ்வுலகமாகிய— பழங்குடிவில்- சீரணமானவீட்டில்—இளைப்பாறி- விஸ்ராந்தியடைந்து—நானறிரிவதெந்நன்- யான்சஞ்சரிப்பதெப்படி—என்றும்-எப்போதும்— அச்சமறும்- பயமில்லாமலிருக்கின்ற— நிச்சயமாமொழுங்கை- நிச்சயமானமார்க்கத்தை—அருள்வாயென்றும்- அனுக்கிரகஞ்செய்வாயென்று— அன்பாற்கேட்ப- அன்பினற்கேட்க— நிச்சயமாயரனருள்வான்- நிச்சயமாகப்பரமேசுவரன்கிருபைசெய்வார்— ஐயமெலாமறுத்து. சந்தேகங்களனைத்தையுங்கெடுத்து—அறுதிநிலைமைபற்றில்- முடிவானநிச்சயத்தைப்பிடித்தால்— மெச்சியமாகத்தன்- துதிக்கப்பட்டமகாகத்தனும்— மாயோகி- மகாயோகியும்— மாத்யாகி-மகாத்யாகியும்— ஆய்விடுவையென்ன- ஆவாயென்றுசொன்னர்— (எ-று) [இ-ங-க-ம்] பவப்பிணிநீங்கும்பொருட்டிவ்விரதமூன்றையுமனுட்டித்ததன்மயமாவாயென்பதாம். - - - - - - - - - - - - - - ※

(ய) (அ-கை ) மாகத்தனிலக்கணங்கூறல். (கவி) செப்பியவிம்மாகத்தன்மாயோகிமகத்தானதியாகியென்ற, விப்பரிசுவிளங்கவருளெனக்கேட்டபிருங்கிசற்கீசன்சொல்வான், வெப்பமுறுமிராகமுனிவின்பமிடரறம்பாவமிகுமிவற்றின், றப்பில்பலாபலமிவற்றில்விருப்பமறச் செய்வோனேதனிமாகத்தன். (இ-ள்) செப்பிய- சொல்லிய— இம்மாகத்தன்- இந்தமகாகத்தனும் மாயோகி- மகாயோகியும்— மகத்தானதியாகி- மகாத்யாகியும்—என்ற- என்றுசொல்லிய—இப்பரிசு- இக்குணங்களை— விளங்கவருளென- தெரியும்படியாகவருள்செய்வாயென்று—கேட்டபிருங்கிசற்கு- வினவினபிருங்கிசருக்கு— ஈசன்சொல்வான்- பரமேசுவரன்சொல்லுவார்—வெப்பமுறும்-கொடிதாகிய— இராகமுனிவு-விருப்புவெறுப்பும்— இன்பமிடர்-சுகதுக்கமும்—அறம்பாவம்-தருமாதருமமுமாகிய—மிகுமிவற்றின்-மிகுந்தவினைகளில்— தப்பில்பலாபலமிவற்றில்- தவறுதபலமுமபலமுமாகியவினைகளில்—விருப்பமற- இச்சையில்லாமல்— செய்வோனே-இயற்றுபவனே— தனிமாகத்தன்- ஒப்பற்றமகாகத்தனும் (எ-று)

(யக) (அ-கை ) இ-து (கவி) மோனமுறவகங்காரமுமானமுமச்சரமும்போய்முடுகிவாடா, தீனமிலாதனசெய்வோனெங்கணுமன்பறச்சாட்சியெனலாயிச்சை, தானறவேகாரியஞ்செய்வோன்வெருட்சியாநந்தந்தாக்குறாதோ, னுனசமநொய்யதொழிலாவிடரற்றுதயமுறுதவன்மாகத்தன் (இ-ள்) மோனமுற- மௌனமாய்— அகங்காரமும்- அகங்காரமும்— மானமும்- அபிமானமும் — மச்சரமும்போய்- மாச்சரியமுநீங்கி— முடுகிவாடாது- வலித்துமெலியாமல்— ஈனமிலாதன செய்வோன்- குறைவற்றவைகளைச்செய்பவனும்— எங்கணும்- எவ்விடத்தும்— அன்பற- பற்றற— சாட்சியெனலாய்- சாக்ஷியென்றுசொல்லும்படியாய்— இச்சைதானற- ஒன்றிலுமாசையற— காரியஞ்செய்வோன்- தொழிலைச்செயபவனும்— வெருட்சி-பயமும்— ஆநந்தம்- சுகமும்—தாக்குறாதோன்- தட்டுப்படாதவனும்—ஆனசமம். ஆகியசமமாக—நொய்யதொழிலால்- சொச்சமானசெயலினல்—இடரற்று- துன்பமற்று—உதயமுறுதவன்-(சந்தோட)முறியாதவனுமாகியவிவனே—மாகத்தன்-மகாகத்தனும்— (எ-று) [இ-உ-க-ம்] சந்நிதிமாத்திரத்தின் விளங்கியயாவிலும்பற்றற்றதற்குச்சாக்ஷியாகநின்றவைகளை நடத்து,நானென்கின்றதைத்தானென்னுமனுடவமாய்நடாத்திவிப்பதேமாகத்தனென்பதாம் - ※

(யஉ) (அ-கை) மாகத்தனிலக்கணங்கூறிமாயோகியினிலக்கணங்கூறல். (கவி) சனநத்தின்மரணத்திலுதயத்திலத்தமனந்தனுனோராகி, மனமொத்தோனமாகத்தனைத்தெளிவாய்மாயோகிமரபுகூ

திற், சினமுற்றென்றினைநீக்காதொன்றைவிரும்பான்பகுதிசேரத்துய்ப்போன், வினவுற்றமாயோகி யிவன்பெருமைமீளவுதாம்விளம்பக்கேளாய் (இ-ள்.) சனநத்தில்- பிறப்பிலும்— மரணத்தில்- இறப்பிலும்— உதயத்தில்- தோற்றுதலிலும்— அத்தமனந்தனில்- மறைதலிலும்— நேராகி- சமமாய்— மனமொத்தோன்- மனதொத்தவன்— மாகத்தனெனத்தெளிவாய்- மாகாத்தனென்றுதெளிந்துகொள்வாய்— மாயோகிமாபுகூறில்- மாயோகியினதுகுணத்தைச்சொல்லுமிடத்தில்— சினமுற்று- கோபமடைந்து— ஒன்றினைநீக்கான்- ஒன்றையுந்தள்ளாதவனும்— ஒன்றைவிரும்பான்- ஒன்றையுமாசியாதவனும்— பகுதிசேரத்துய்ப்போன்- இயல்பாகவந்ததைமுழுதும்புசிப்பவனு(மாகியவிவனே)—வினவுற்றமாயோகி- முன்சொல்லியமகாயோகியாம்— இவன்பெருமை- இவனதுபெருமையை—மீளவும்- திரும்பவும்— நாம்விளம்பக்கேளாய்- யாஞ்சொல்லக்கேட்பாய்— (எ-று) - - - - - ✻

(௰௩) (அ-கை) இ-து (கவி) மிகவெருவலாநந் தமில்லவாய்மயக்கமேவிளைப்பதான,சுகமிடர்கள் புசித்தவற்றாற்கலங்காதோன்சராமரணந்தொடருமாயத், தகலரசுமிடிகளுநன்றெனப்புசிப்போன்புளிப்புக்கைப்பழற்சியுப்புப், பகர்நிறைவுகுறைவுசமமாய்ப்புசிப்போன்மாயோகிப்பான்மையோனே. (இ-ள்)மிகவெருவல்- மிகவும்பயப்படுதலும்— ஆநந்தம்- சுகமும்— இல்லவாய்- இல்லாதவனாய்— மயக்கமேவிளைப்பதான- பிரமையையுண்டாக்குவதான— சுகமிடர்கள்- சுகதுக்கங்களை— புசித்து- அனுபவித்து— அவற்றாற்கலங்காதோன்- அவைகளாற் கலங்காதவனும்— சராமரணம்- மூப்பிறத்தலும்— தொடருமாயத்து- தொடராநின்றவாயத்தும்— அகலரசும்- சிறந்தவரசாக்ஷியும்— மிடிகளும்- தாரித்திரங்களும்— நன்றெனப்புசிப்போன்- நல்லதென் றனுபவிப்பவனும்— புளிப்பு- புளிப்பும்— கைப்பு- கசப்பும்— அழற்சி-உறப்பும்— உப்பு- உவர்த்தலும்— பகர்- சொல்லப்பட்ட (விவைகளின்)— நிறைவுகுறைவு-சந்துஷ்டியசந்துஷ்டியின்றி—சமமாய்ப்புசிப்போன்- சமமாயுண்பவனும்— மாயோகிப்பான்மையோன்- மகாயோகித் தன்மையையுடையவன்— (எ-று)[இ-உ-க-ம்]விருப்புவெறுப்பின்றிச்சகலபோகங்களுந்தனதாநந்தானுபவமாகப்போகிப்பவனேமகாயோகியென்பதாம் ✻

(௰௪) (அ-கை) மாயோகியினிலக்கணங்கூறிமாத்யாகியினிலக்கணங்கூறல் (கவி) உப்பினியல்பெனதன்மைதீமையிரண்டிலுஞ்சமமாயொத்துநிற்போன், றுப்புறுமாயோகியாமகத்தானதியாகிகுணஞ்சொல்லக்கேளாய்த், தப்பிலறம்பாவமிடர்சுகமரணஞ் சநநமெலாஞ்சேரத்தள்ளுந், செப்பமுளபுத்தியுளோன்மகத்தானதியாகியெனத்தெளிந்துகொள்வாய் (இ-ள்) உப்பினியல்பென- உப்பின்றன்மையைப்போல— நன்மைதீமை- நன்குதீங்காகிய— இரண்டிலும்- இவ்விரண்டிலும்— சமமாய்- சமமாகி— ஒத்துநிற்போன்- சேர்ந்திருப்பவன்—துப்புறுமாயோகியாம்- பரிசுத்தம்பொருந்தியமகாயோகியாகும்— மகத்தானதியாகிகுணம்- மகாத்யாகியின்றன்மையை— சொல்லக்கேளாய்- மொழியக்கேட்பாய்—தப்பிலறம்பாவம்- குற்றமற்றதருமாதருமமும்—இடர்சுகம்- துன்பவின்பமும்—மரணஞ்சநநமெலாம்-மரித்தல்செனித்தலாகியவனைத்தையும்— சேரத்தள்ளும்- ஒருமிக்கத்தள்ளாநின்ற—செப்பமுளபுத்தியுளோன்-செவ்வையானபுத்தியையுடையவனே— மகத்தானதியாகியென- மகாத்யாகியென்று— தெளிந்துகொள்வாய்- அறிந்துகொள்ளுவாய்— (எ-று) - - - - - - - - - ✻

(௰௫) (அ-கை) இ-து (கவி) அனைத்தாசையனைத்தையமனைத்தானதொழிலனைத் தாமறுதியாவுந், தினைத்தானுமேவாதபுத்தியோன்றன்னைமகத்யாகியென்ப, ரனைத்தானவறம் பாவமனமனனத்தொழிலிதயத்தெல்லாந்தீர்ந்தோன்,வினைத்தாயபிருங்கிசாமகத்தானதியாகியெனவிளம்புமன்றே (இ-ள்) அனைத்தாசை- சகலவிச்சைகளும்— அனைத்தையம்- சகலசந்தேகங்களும்— அனைத்தானதொழில்- சகலசெய்கைகளும்—அனைத்தாமறுதி-சகலநிச்சயங்களுமாகிய—யாவும்- எல்லாம்— தினைத்தானும்- தினையளவேனும்—மேவாதபுத்தியோன்றன்னை- அடையாதவறிவையுடையவனை—மகத்யாகியென்பர்-மகாத்யாகியென்றுசொல்லுவார்கள்—அனைத்தான- மற்றுள்ளதாகிய— அறம்பாவம்- தருமாதருமமும்—மனம்- மனதும்— மனனம்- சிந்தனையும்— தொழிலுமெல்லாம்-செயல்களுமாகியயாவையும்— இதயத்து- உள்ளத்தில்— தீர்ந்தோன்- நீங்கினவனே— வினைத்தாய- வணக்கமுடையவரான— பிருங்கிசா-பிருங்கிசனே— மகத்தானதியாகியென- மகாத்யாகியென்று— விளம்பும்- சுருதிசொல்லும்— (எ-று) ✻

(௰௬) (அ-கை) இ-து. (கவி) தெரிபவத்திலெண்ணமாய்க்காணுமிவை யெவ்வளவத்திரள்களெல்லாங், கரிசறநன்றாய்விட்டோன்மகத்தானதியாகியெனக்கருணையீச, ஹரியபிருங்கிசனுக்குமுன்னுளோதினனித்தவுயர்ந்தநோக்கைப்,பரிசயமுற்றுப்பிடித்துத்துயரொழிவாயுலகளிக்கும்பதுமக்கண்ணு. (இ-ள்)தெரிபவத்திலெண்ணமாய்- திரிப்ஸயத்தினினைவாக— காணுமிவையெவ்வளவு- பார்க்கின்றவைகளெவ்வளவோ—அத்திரள்களெல்லாம்- அக்கூட்டங்களனைத்தும்— கரிசற- களங்கமில்லாமல்— நன்றாய்விட்டோன்- நன்றாகவிட்டவனே—மகத்தானதியாகியென- மகாத்யாகியென்று— கருணையீசன்- திருபாஸ்வரூபியானபரமேஸ்வரன்—உரியபிருங்கிசனுக்கு- உரித்தாகியபிருங்கிசருக்கு— முன்னுளோதினன்- முன்னுரைத்சொன்னார்— இந்தவுயர்ந்தநோக்கை- இம்மேலானபார்வையை— பரிசயமுற்று- பழக்கஞ்செய்து— பிடித்து- நீயதற்கொண்டு— உலகளிக்கும்- சகத்தையிரட்சிக்கின்ற— பதுமக்கண்ணு- தாமரைக்கண்ணையுடையவிராமா—துயரொழிவாய்- துன்பநீங்குவாய்—(எ-று) [இ-ங-க-ம்] தனக்குக்கிராயுள்ளபாவையுமப்பிரமமாகவறிந்து துதான்மாத்திரமாய்விளங்கியவைகளனைத்தையுந்தள்ளினவனேமாத்யாகியென் றீஸ்வரனனுக்கிரகப்படிநீவிளங்குவாயென்பதாம். - - - - ✻

(௰௭) (அ-கை.) இத்திஷ்டியினின்றுயாவுஞ்செய்வாயெனல். (கவி) நித்தமுறாமுதயமுளதாகியாகுவதநந்தநிமலமேக, மத்தையபிரமமேயுளதுவிகற்பத்தெண்ணமயமொன்றில்லை, யித்திறமென்றேபாவித்தழுகிலனுய்ச்சுகமேவியியற்றுஞ்செய்கை, சுத்தவிமலச்சாந்த முறவெல்லாமேவுவாய்சுத்தவீரா. (இ-ள்.) நித்தமுறாமுதயமுளது- சதோதயமுள்ளதும்— முதலாவது- ஆதியானதும்— அநந்த

ம்- முடிவில்லாததும்—நிமலம்- நின்மலமானதும்—ஏகம்- ஒன்றுனதுமாயிருக்கின்ற— அத்தகை யபிரமமேயுளது- அப்படிப்பட்டபிரமஸ்வருபமேயுள்ளது— விகற்பத்தெண்ணம்-வேறுநினைவு—அ யலொன்றில்லை- மற்றொன்றுமில்லை— இத்திறமென்று- இந்தப்ரகாரமென்று— பாவித்து- பாவனை செய்து— அழுக்கிலனாய்- களங்கமில்லாதவனாய்—சுகமேவி- ஆநந்தத்தையடைந்து— இயற்றுஞ்செ ய்கை- முயற்சிக்கின்றதொழில்கள்— சுத்தம்-பரிசுத்தமாகி— விமலச்சாந்தமுற- நின்மலமானவுபசாந் தமுண்டாக—சுத்தவீரா-ஸ்ரீராமா— எல்லாமேவுவாய்-அனைத்தையும்பொருந்துவாய் (எ-று.)[இ-ம்] நிரதிசயாநந்தவடிவமாய்நின்றுசகல தொழிலையுஞ்செய்யிற்செய்துஞ்செய்யாததென்பதாம் - - ⁕

(௰அ) (அ-கை) பாவனையனைத்துமின்றியெப்போதுஞ்சின்மாத்திரமேவிளங்குமெனல். (கவி) தீ ங்கிடர்தீர்பிரமமாய்க்கற்பனையெல்லாமேவிச்செய்கையொன்றே, யோங்கியவித்தாய்ப்பரமரூபமாய்ப் பேரியோனாயுயர்மகத்தாய், வீங்கியபாவனையெல்லா நிறைவதாய்மெய்ஞ்ஞானவீராகிஞ்சி, லீங்கிலதெ ன்றுரைப்பதாமாகாயமேதுவேயென்றுமுண்டால் (இ-ள்) தீங்கிடர்தீர்- குற்றமுள்ளதுன்பநீங்கி ய—பிரமமாய்- பிரமமாகியும்— கற்பனையெல்லாமேவி- கற்பனைகளனைத்தும்பொருந்தி— செய்கை யொன்றே- கிரியையொன்றுக்கும்— ஓங்கியவித்தாய்- உயர்ந்தவித்தையாகியும்— பரமரூபமாய்- பர மாத்மஸ்வரூபமாகியும்— பெரியோனாய்- மகானாகியும்—உயர்மகத்தாய். மேலானமகத்தாகியும்— வீ ங்கியபாவனையெல்லாம்- பருத்தபாவனைகளனைத்தும்— நிறைவதாய்- நிறைவதாகியுமிருக்கின்ற— ஆ காயமேது- (ஞா) ஞாகாசமெதுவோ— அதுவேயென்றுமுண்டு- அதுவேயெப்போதுமுண்டாயிரு க்கின்றது— மெய்ஞ்ஞானவீரா- மெய்ஞ்ஞானவீரனான ஸ்ரீராமா— ஈங்கு- இவ்விடத்தில்— கிஞ்சில்- அற்பமும்— இலதெனறுரைப்பதாம்- (வேறொன்று) மில்லையென்றுசொல்லுவதாம்— (எ-று) ⁕

(௰௧) (அ-கை) பிரமத்தைத்தவிரவற்பமும்வேறின்றெனல் (கவி) அன்னியமாவோரிடத்திலிது கிஞ்சிலெனவென்றுமசத்துஞ்சத்துந், துன்னலுறுதென்றுள்ளேதிட நிலையாயகங்காரந்துடைத்துநிற் பா, யுன்னுள்ளே முகமாகிப்புறத்தின்வருவனவெல்லாமொருங்குசெய்து, பின்னுதொழிலிடர்மேவா துருவமிலாவகந்தைதனை யநீபிரியவென்றான். (இ-ள்) அன்னியமா- அயலாக— ஓரிடத்தில்- ஒருவிடத் திலும்— இதுகிஞ்சிலென- ஈதற்பமுமில்லையென்றும்— என்றும்- எப்போதும்— அசத்தும்- அசத் தியமும்— சத்தும- சத்தியமும்— துன்னலுறுதென்று- நெருங்கமாட்டாதென்றும்— உள்ளேதிட நிலையாய்- உள்ளேதிடநிச்சயமாய்— அகங்காரந்துடைத்துநிற்பாய்- அகம்பாவத்தைக்கெடுத்திருப் பாய்— உன்னுள்ளேமுகமாகி- உன்னிலகமுகத்தை யுடையவனாய்— புறத்தின்- புறம்பில்—வ ருவனவெல்லாம்- வருவனவாகியசகலமும்— ஒருங்குசெய்து- ஒற்றுமைசெய்து— பின்னுதொழில்- பின்னுநின்றசெயலினது— இடர்மேவாது- துன்பமடையாமல்— உருவமிலா- வடிவமில்லாத— அ கந்தையை- அகங்காரத்தை— நீபிரியவென்றான்-ஸ்ரீராமா நீநீங்கக்கடவதென்றுசொன்னார்— (எ-று) [இ-உ-க-ம்] தன்னைத்தவிரவற்பமும்வேறின்றென்கின்றஸ்வானுடைவதிஷ்டியினாலகம்பாவத்தைக்கெ டுத்துத்தன்மயமாய்விளங்குவாயெனபதாம். - - - - - - - - - - ⁕

விரதகுஜயகதைமுற்றிற்று. ஆ-கதை சம்ச்சுக் கவிதை (௩௮௧௯)



# இட்சுவாகுகதை.



(அ-கை) முற்கதையின்மாகற்றத்த்வமுதலியமூன்றினாலுஞ்சமாதிநிஷ்டையின்நிச்சகசநிஷ்டையினா ற்சர்வம்பிரமமயமென்பனதவிளக்கியிவ்வனுபவந்திரமாம்பொருட்டிக்ஷுவாகுகதையை நிரூபிக்கிறார் ⁕

(க) (அ-கை) சுமனதினாலக்கணம்விசாரித்தல் (கவி) தருமமெல்லாமுணர்முனியேசாற்றுமகங்கா ரப்பெயரை, மருவுமனந்தன்வடிவிருக்கமாய்ந்தாலந்தவுண்மைக்குப், பெருகுகுறியேதுரையென்வெ ம்பெருமான்கேட்பமுனியுரைப்பா, னுருவமிருக்கமனமிறந்தவுண்மைக்குள்ளகுறிகேளாய் (இ-ள்) தருமமெல்லாம்- தனமங்களனைத்தையும்— உணர்முனியே- அறியாநின்றவசிட்டமுனியே— சாற்று ம்- சொல்லப்பட்ட— அகங்காரப்பெயரை- அகங்காரமென்னுநாமத்தை—மருவுமனம்- பொருந்தா நின்றமனமானது—தன்வடிவிருக்க- தன(திதாற்த்த)ஸ்வரூபமிருக்க— மாய்ந்தால்- (கற்பனாவடிவ)மி றக்கின்— அந்தவுண்மைக்கு- அங்குள்ளதத்துவத்துக்கு— பெருகுகுறியேது- பெரிதானவடையாள மியாது— உரையென- சொல்லுவாயென்று—எம்பெருமான்கேட்ப- எம்பெருமானாகியஸ்ரீராமன்கே ட்க— முனியுரைப்பான்- வசிட்டமுனிசொல்லுவார்—உருவமிருக்க மனமிறந்த-வடிவமிருக்கமனநசித் த—உண்மைக்குள்ளகுறகேளாய்- தத்துவத்துக்குள்ளவடையாளங்கேட்பாய் (எ-று)[இ-ம]விடயசம் பந்தநீங்கிப்பிரமசமபந்தமாகச்சஞ்சரிக்குமன துக்கப்போதுண்டானகுறிகள்யாதென்விசாரித்ததாம் ⁕

(உ) (அ-கை.) அநுபவிமனதினாலக்கணங்கூறல். (கவி) அழுந்துவசத்திலிருப்போனைபம்புயத்தி னீர்போல, வெழுந்தலோபமோகமுதலெக்குற்றமும்வன்புறநலியா, முழுத்துமுதிதைமுதற்குணங்க ண்முகத்திலழகாய்ச்சிறிதகலா, விழுநதுபாவமெல்லாம்போமிகுவாதனைக்கட்டறுமெல்ல (இ-ள்) அழு ந்துவசத்தில்- திடமுள்ளவாத்மவசத்தில்— இருப்போனை- இருப்பவனை— அம்புயத்தினீர்போல- கமலபத்திரோதகம்போல— எழுந்த- உண்டான— லோபமோகமுதல்- ஆசைமயக்கமுதலிய— எக் குற்றமும்- எந்தகுற்றங்களும்—வன்புறநலியா- வருத்தமாட்டாது—முழுதுதும்- எல்லாமான—முதி தைமுதற்குணங்கள்-முதிதைமுதலாகியசற்குணங்கள்—முகத்திலழகாய்ச்சிறிதகலா-வதனத்திற்சுந்தர

மாகவற்பமு நீங்காது— பாவமெல்லாம்விழுந்துபோம். பாவங்களனைத்துங்கெடும்— மிகுவாதனைக்கட்
டு. மிகுந்தவாசனையினதுபந்தமானது— மெல்லவறும். மிருதுவாகக்கெடும்—(எ-று) [இ-ம்.]ஆத்மா
விற்சுகிக்குமனைதமோசமுதலியகுற்றங்களனுசாமன்மயித்திரியாதிகுணங்கள்விளங்குமென்பதாம். ※

(௩) (அ-கை.) இ-து (கவி) வேகந்தேயுமுலோபகுணமெலியுங்காமவினையடங்கு, மோகம்போ
யெங்கொளித்திடுமோமுடுகிக்கிளராதைம்பொறிகள், சோகந்தாவியடராதுசுகமுமேவிட்டெழமாட்
டா, தாகந்தீரக்குளிர்ந்துள்ளேசமந்தோன்றிடுமாலெவ்விடத்தும் (இ-ள்.) வேகந்தேயும்- கோபமா
னதழியும்— உலோபகுணமெலியும்- ஆசையுள்ளகுணமுமிளைக்கும்— காமவினையடங்கும்- காமவி
காரத்தின்குணங்கெடும்— மோகம்போய்- மயக்கமானதுபோய்— எங்கொளித்திடுமோ- எவ்விடத்
திலொளிக்குமோ — ஐம்பொறிகள்- பஞ்சேந்திரியங்களும்— முடுகிக்கிளராது- வலிமையாகப்ரகாசி
யாது— சோகந்தாவியடராது- துன்பமானதெழுந்துவருத்தாது— சுகமுமேவிட்டெழமாட்டா- இ
ன்பமுமதிகரித்துண்டாகமாட்டாது— தாகந்திர- துன்பநீங்க— உட்குளிர்ந்து- அகமகிழ்ந்து— எ
வ்விடத்தும்- எந்தவிடத்திலும்— சமந்தோன்றிடும்- சமத்துவந்தோற்றும்— (எ-று) [இ-ம்]
இராகத்வேடமுதலியகுணங்களிறந்துசமதிஷ்டியாய்விளங்குமென்பதாம். - - - - - - ※

(௪) (அ-கை.) இ-து (கவி) துன்பமின்பமேலாமுகத்திற்றோன்றுமெலினுந்தோன்றிடுக, வன்
பிலவைநெஞ்சினைநலியாமனமேயிறக்கில்வானோரு,மன்பினயப்பர்நலனுண்டாமங்கேசமமாமதியுதிக்
கு, மென்புகுளிருஞ்சாந்தியெழிலெய்துந்தடைதீர்பெருமையுறும் (இ-ள்) துன்பவின்பமெலாம்-
துக்கசுக(முதலிய)வனைத்தும்— முகத்திற்றோன்றுமெனினும்- வதனத்திற்றோற்றுமானாலும்—தோ
ன்றிடுக- தோற்றக்கடவது— வன்பிலவை- வலியின்றியவச்சுகதுக்கங்கள்— நெஞ்சினைநலியா- மன
தைவருத்தாது— மனமேயிறக்கில்- மனமாத்திரநசித்தால்— வானோரும்- தேவர்க்களும்— அன்பின
யப்பர்- (அவனை) யன்பினாற்சினேகிப்பார்கள்— நலனுண்டாம்- ஆநந்தமுண்டாகும— அங்கு- அ
வ்விடத்தில்— சமமாமதியுதிக்கும்- சமத்துவமாகியவறிவுண்டாகும்— என்புகுளிரும்- அஸ்திகு
ளிருகின்ற— சாந்தியெழிலெய்தும்- சாந்தமானவழகுண்டாகும்— தடைதீர்பெருமையுறும்- அளவ
ற்றமாட்சிமைபொருந்தும்—(எ-று)[இ-ம்]சுகதுக்கமின்றிச்சாந்தமானதேசசாய்விளங்குமென்பதாம்

(௫) (அ-கை ) இ-து (கவி) பணிதலொளிர்தனொய்ம்மையுறும்பழுதிலமலவடிவுண்டாம், பிணி
யில்பெரியோர்குடும்பமயற்பெரிதாய்ப்புதுமைத்தானாலுந், தணிவில்பாவாபாவத்தாற்றள்ளுற்றாலுமி
ன்பமிடர், கணிதமெனினுஞ்செயமாட்டாகருணைத்தடங்கட்கருங்காரே. (இ-ள் ) பணிதல்- (யாவரு
ம்)வணங்குதலும்— ஒளிர்தல்- விளங்குதலும்—நொய்ம்மையுறும்- சொச்சமும்பொருந்திய—பழு
திலமலவடிவுண்டாம்- குற்றமற்றநின்மலஸ்வரூபமுமுண்டாகும்— பிணியில்பெரியோர்- துன்பமற்ற
சத்துக்களை— குடும்பமயல்- சம்சாரப்ரமையானது—பெரிதாய்ப்புதுமைத்தானாலும்- மகத்தானவதி
சயமானாலும்— தணிவில்பாவாபாவத்தால்- அடங்காதவுற்பத்திநாசத்தினால்— தள்ளுற்றாலும்- அலைக்க
ப்பட்டாலும்—இன்பமிடர்கணிதமெனினும்-சுகதுக்கங்கணூறுகோடியானாலும்— கருணைத்தடங்கண்
கருங்காரே -கிருபையுள்ளவிசாலமானகண்ணையுடையவிராமா— செயமாட்டா- (ஒன்றுஞ்)செய்யமா
ட்டாது— (எ-று ) [இ-ம் ] நின்மலமாயாதுவரினுமதனாற்சுகதுக்கமடையாதென்பதாம். - - ※

(௬) (அ-கை )சுத்தமனதினிலக்கணஞ்சொல்லித்தன்னையறியாதவனையிகழ்ந்துவறிபவர்கள் விசார
விலக்கணஞ்சொல்லுதல். (கவி) புந்திப்பார்வைக்கெட்டுவதாய்ப் புகலாபத்தெல்லாமிறந்த, விந்தப்
பொருளைமோகத்தாலெய்தாதவர்சீசியிழந்தோர், தொந்தஞ்சிற்காலப்பற்றாந் றேன்றுதுயராமணிக
ள்செறி, பந்தப்பிறவிக்கடல்கடக்கும்பாண்மைநயந்தோர்நெறிகேளாய் (இ-ள் ) புந்திப்பார்வைக்கெ
ட்டுவதாய்- ஞானதிஷ்டிக்ககப்படுவதாகி— புகல்- சொல்லப்பட்ட— ஆபத்தெல்லாமிறந்த- ஆபத்
துக்களனைத்துமரித்த— இந்தப்பொருளை- இப்பரவஸ்துவை— மோகத்தால்- ஆசையினால்— எய்தா
தவர்- அடையாதவர்கள்— சீசியிழிந்தோர்- சைசைகிழப்பட்டவர்களேயாம்— தொந்தம்- தொந்த
மாகிய—சிற்காலப்பற்றாந்றேன்றுதுயராம்-சிலகாலப்பற்றினாற்றோற்றுந்துன்பமென்கின்ற—மணி
கள்செறிபந்தம்-இரத்தினங்கணிறைந்தபந்தமென்னும்— பிறவிக்கடல்கடக்கும் பாண்மைநயந்தோ
ர்-பவசாகரந்தாண்டுங்குணம்விரும்பினவர்களது—நெறிகேளாய்-கிரமத்தைக்கேட்பாய்—(எ-று.) ※

(௭) (அ-கை.) இ-து (கவி) ஊனூர்பிறவிகடல்கடப்போர்க்குரிய விளைப்பாறுதலெய்த. நானூரி
ந்தச்சகமெங்ஙனுடும்பிரமனூராகு, மானுவிடயபோகத்தாலாவதென்னேவென்னுமதி, தானும்பரமவு
பாயமெனச்சாற்றுங்கண்டாய்சற்குணனே (இ-ள் ; ஊனூர்பிறவிகடல்- மாமிசநிறைந்த பவசமுத்திர
த்தை— கடப்போர்க்குரிய- தாண்டுபவர்களுக்குரித்தாயிருக்கின்ற— இளைப்பாறுதலெய்த- விஸ்ராந்
தியையடைய— நானூர்- யானூர்—இந்தச்சகமெங்ஙன்- இவ்வுலகமானதெப்படிப்பட்டது— நாடும்
பாமனூராகும்- தேடும்பரமமெவனும்— ஆனுவிடயபோகத்தால்- நீங்காதவிடயபோகத்தினால்— ஆ
வதென்னே- உண்டாவதென்ன — என்னுமதிதான் -என்கின்றவிசாரஞானமே—அம்பரமவுபாயமெ
ன- ஆகியமேலானவுபாயமென்று— சற்குணனே- சற்குணத்தையுடையஸ்ரீராமா — சாற்றுங்கண்டா
ய்- (வேதங்கள்)சொல்லும்— (எ-று ) [இ-உ-க-ம் ] ஆத்மாயாதுசகம்யாதுநீங்கியபிரமம்யாதென
விசாரித்தலேமேலானவிசாரயுத்தியென்பதாம். - - - - - - - - - - - - - ※

(௮) (அ-கை ) இங்ஙனம்விசாரித்தவிட்சுவாகுகதையைச்சொல்லத்தொடங்கல். (கவி) ஏற்றமுன
துகுலமுதல்வனிக்குவாகுவெனுமன்ன, னாற்றலுயர்விடைவுற்றவடைவுகேளாயருள்வேந்தன், றேற்
றமுடையதன்புவனத்தொல்லைநெறியினடத்திநோ, ஞாற்றவுடையவுளத்தாலேயொருவன்றனேயிரு
நதுணர்வான். (இ-ள் ) ஏற்றம்- மேலான— உனதுகுலமுதல்வன்- உனதுகுலத்துக்கு முதன்மையா
கிய— இக்குவாகுவெனும்- இட்சுவாகுவென்கின்ற—மன்னன்- அரசனானவன் — ஆற்றலுயர்விடு- ஞா

ணமென்றுமேல-னமோட்சத்தை— அடைவுற்ற- அடைந்த— அடைவுகேளாய்- கிரமத்தைக்கேட்டாய்— அருள்வேந்தன்- கிருபையுள்ளவரசன்— தோற்றமுடைய- தோற்றத்தையுடைய— தன்புவனம்- தனதுபூமியை— தொல்லைநெறியின்- பழமையானமார்க்கத்தில்— நடத்திடுநாள்- நடாத்துகின்றகாலத்தில்— ஊற்றமுடையவுளத்தால்- மேலானமனதினால்— ஒருவன்றானே- தனியனாகவே— இருந்துணர்வான்- இருந்துசிந்திப்பான்— (எ-று) - - - - - - - - - - - - ☼

(௯) (அ-கை) தனித்திருந்துசகத்காரணமியாதெனவிசாரித்தல். (கவி) சனாசாவின்பதுன்பங்களர்மோகங்கண்மயக்கங்கள், வளாயா நிலையாய்க்காண்பனவு மட்டிலாதசகத்துக்குப் புரைதீர்மூலமே தென்றுபுரிந்து நினைந்தான்பூபால, னுரைசாருலகின்மூலத்தைபுன்னுனின்றுமுணர்ந்திலனால். (இ-ள்) சனாசாவு- மூப்பிறப்பையும்— இன்பதுன்பங்கள்- சுகதுக்கங்களும்— களர்மோகங்கள்- வாடுகின்றபிரமைகளும்— மயக்கங்கள்- மயக்கங்களும்— வளாயா- அளவிடாத— நிலையாய்க்காண்பனவும்- நிலையாகக்காணப்பட்டனவும்— மட்டில்லாதசகத்துக்கு- அளவில்லாதவுலகத்துக்கு— புரைதீர்மூலமே தென்று- குற்றமற்றகாரணமெதுவென்று— பூபாலன்- பூபதியானவன்— புரிந்து நினைத்தான்- விரும்பிச்சிந்தித்தான்— உரைசார்- வசனநிறைந்த— உலகின்மூலத்தை- சகத்காரணத்தை— உன்னுனின்றும்- சிந்தித்தும்— உணர்ந்திலன்- அறிந்திலன்— (எ-று) [இ-உ-க-ம்] சகத்தினனித்தியத்தைப்பார்த்ததற்குக்காரணமான நித்தியத்தைவிசாரித்துந்தெரிந்திலனென்பதாம். - - - - - - - - - ☼

(௰) (அ-கை) பிரமனைவணங்கித்துதித்தல். (கவி) அயனுட்டினும்வந்தடைவுற்றவாதிமனுவாம்பகவனைக்கண், டியலாற்பூசித்தருட்செல்வாயின்று நீயிங்கெளிதெய்தி, முயல்வாலளித்த நின்னருளான் மோகந்தீர்ந்து நிலைநிற்கும், பயனாலென்னையருளென்றுபரவியரசனுரைசெய்வான். (இ-ள்) அயனுட்டினும்- சத்தியலோகத்தினின்றும்— வந்தடைவுற்ற- வந்துபொருந்திய— ஆதிமனுவாம்பகவனைக்கண்டு- முதன்மனுவாகியபகவானைத்தரிசித்து— இயலாற்பூசித்து- கிரமத்தினலாராதித்து— அருட்செல்வா- கிருபாநிதியே— இன்று- இப்போது— நீயிங்கெளிதெய்தி- நீயிவ்விடத்திலெளிதாகவந்து— முயல்வாலளித்த நின்னருளால்- முயற்சியினலருள்செய்தவுமதுகிருபையினால்— மோகந்தீர்ந்து நிலைநிற்கும்பயனால்- மயக்கநீங்கி நிலையாயிருக்கும்ப்ரயோசனத்தினால்— என்னையருளென்றுபரவி- எனதுல்லக்ஷபத்தையனுக்கிரகிப்பாயென்றுவணங்கி— அரசனுரைசெய்வான்- மன்னன்சொல்லுவான் (எ-று)

(௰௧) (அ-கை) இப்பவமோகநீங்கும்பொருட்டிச்சகத்தையாறுவிதமாகப்பிரித்துவினாவினனெனல் (கவி) எங்குநின்றுவந்துளதிச்சிருட்டியிதற்கெப்படியுருவ, மங்குமுலகமெம்மட்டுமற்றுருடையதெதுகால, மிங்கிதெதனாலெனவுணர்த்தியேறிக்குறைந்தவிப்பிறவிப், பொங்குமயக்கைவலையகலும் புட்போனீங்கும்வகைபுல்வாய். (இ-ள்) இச்சிருட்டி- இந்தச்சகசிருட்டியானது— எங்குநின்றுவந்துளது- எவ்விடத்திலிருந்துதித்தது— இதற்கெப்படியுருவம்- இச்சகத்தினுருவெப்படிப்பட்டது— மங்குமுலகமெம்மட்டு- கெடாநின்றசகமெவ்வளவும்— மற்றுருடையது- ஆதாரமுடையது— எதுகாலம்- எக்காலத்தில்— இங்கிதெதனாலென- இதென்னகாரணத்தினாலுண்டானதென்று— உணர்த்தி- அறிவித்து— எறிக்குறைந்த- உயர்ந்துதாழ்ந்த— இப்பிறவி- இச்சநநத்தின்— பொங்குமயக்கை- மிகுந்தமயக்கத்தை— வலையகலும்புட்போல்- வலையினின்றுநீங்கும்பட்சியைப்போல— நீங்கும்வகைபுகல்வாய்- நீங்கும்விதத்தைச்சொல்லுவா யென்றிட்சுவாகுகேட்டார்— (எ-று) இதற்கெப்படியுருவமென்றதுஞ் சத்தா, அசத்தா, சதசத்தாவெனவும், ஆருடையதென்றது சீவனுடையதாவீசனுடையதாவெனவும்விசாரித்ததெனக்கொள்க. [இ-உ-க-ம்] மாயாசகமுண்டானவிடமுமதன்வடிவமுமதன்முடிவுமஃதையுடையவனுமஃதுதித்தகாலமுங்காரணமும்விசாரித்தானென்பதாம் - - - - - ☼

(௰௨) (அ-கை) உ-ச-சகத்காரணமுமதனுருவமுமுரைத்தல். (கவி) என்றலோடுமறப்புதிதாமெண்ணில்காலத்தோடே நீ, துன்றுவிவேகவிசாலத்தாற்சொன்னவினாவே விதிப்பொருளைப், பொன்றுவிக்குமென்றுமனுப்புகல்வான்சிறிதாக்காணுமிவை, யொன்றுமில்லைச்சந்தற்பவூர்போன்மருப்பூமியிற்சலம்போல் (இ-ள்) என்றலோடும்- இப்படியென்றரசன்சொல்லவும் அறப்புதிதாம்- மிகவுமாச்சரியமாம்— எண்ணில்காலத்தோடு- அளவில்லாதகாலத்தோடும்— நீதுன்று- நீநெருங்கின— விவேகவிசாலத்தால்- விவேகமிகுதியினால்— சொன்னவினாவே- கேட்டசங்கையே— விதிப்பொருளை- (மித்தையாகச்) சொல்லியமாயாவஸ்துவை— பொன்றுவிக்குமென்று- கெடுப்பிக்குமென்று— மனுப்புகல்வான்- மனுவானவர்சொல்லுவார் — சிறிதாக்காணுமிவை- அற்பமாகப்பார்க்கின்ற விச்சகங்கள்— கந்தற்பவூர்போல்- கந்தர்வநகரம்போலவும்— மருப்பூமியிற்சலம்போல்- அளர்ப்பூமியிற்றோன்றுங்கானற்சலம்போலவும்— ஒன்றுமில்லை- எவ்வளவுமில்லை— (எ-று) - - - - - - - - - - - ☼

(௰௩) (அ-கை) இ-து. (கவி) கிஞ்சில்கரணங்களுக்கெட்டாக்கிளர்வானிலுஞ்சற்றூய்முடிவி, லெஞ்சலிலதாமறிவின்றியிருந்தமெதன்றுமான்மாவாம், விஞ்சுமதந்தப்பெருங்கண்ணாடியிலேநேயமவிரிவிடய, பஞ்சபூதசிருட்டியெலாம் பத்திபாய்ந்துவிளங்கிடுமால் (இ-ள்) கிஞ்சில- அற்பமும்— கரணங்களுக்கெட்டா- இந்திரியங்களுக்கெட்டாததாகியும்— கிளர்- விளங்காநின்ற— வானிலுஞ்சற்றூய்- ஆகாயத்திலுஞ்சூட்சுமமாகியும்— முடிவில்- (வே)தாந்தத்தில்— எஞ்சலிலதாம்- குறைவில்லாததாகியும்— அறிவின்றி- அறிவில்லாமல்— என்றும்- எப்போதும்— இருந்தது- இருந்ததே— ஆன்மாவாம்- ஆத்மஸ்வரூபமாகும்— விஞ்சும்- மேலான— அதந்தப்பெருங்கண்ணாடியில்- அதந்தப்பெரியதற்பணத்தில்— நேயம்- திரிப்பயமாகிய— விரிவிடய- விரிந்தவிடயமான— பஞ்சபூதசிருட்டியெலாம்- பஞ்சபூதசிருட்டிகளனைத்தும்— பத்திபாய்ந்துவிளங்கிடும்- ப்ரதிபலித்தொளிரும்— (எ-று) [இ-உ-க-ம்] ஆத்மாவினிடத்திற்சகமேதோற்றமாமஃதி ஞானருக்கானற்சலம்போலத்தோற்றமற்றகாரமமெனப்பதாம் ☼

(௰௪) (அ-கை) ௩-ச-சகத்தினளவுரைத்தல் (கவி) பிரமத்தினவாவியெவியருவாய்ப்பிறந்துபிற

ங்குஞ்சத்திகடாம், விரவிப்பிரமாண்டத்தினதுமேனியாகிநின்றசில, வுரவுபலபூதத்திரளினுருவமாகிநி
ன்றசில, சுரர்பொற்பதியாய்நின்றசிலதோன்றுசகத்தினிலையிதுவே (இ-ள்.) பிரமத்தினவாய்-பிரமசம்
பந்தமாயும்— ஒளியுருவாய்- ப்ரகாசரூபமாயும்— பிறந்துபிறங்கும்- உண்டாகிவிளங்கிய— சத்திக
டாம்விரவி- புரணசத்திகள்சேர்ந்து— பிரமாண்டத்தினது- பிரமாண்டத்தினுடைய— மேனியாகி-
வடிவமாகி— சிலநின்ற- சிலசத்திகளிருந்தன— உரவுபலபூதத்திரளின்- உரமானபலசீவக்கூட்டங்களி
ன்—உருவமாகிசில்நின்ற-வடிவமாய்சிலசத்திகளிருந்தன—சுரர்பொற்பதியாய்-தேவலோகமாய்—சில
நின்ற- சிலசத்திகளிருந்தன—தோன்றுசகத்தினிலையிதுவே- தோற்றுகின்றசகத்தினுண்மையிதுதான்
(எ-று) [இ-ம்] பாஞ்சபூதபௌதிகமாகத்தோற்றியசிற்சத்தியினளவேசகத்தினளவாமென்பதாம் *

(௯௫) (அ-கை) ௬-௫-௪-௪- உத்தரங்கூறல் (கவி) பந்தமில்லைவீடில்லைப்படர்தீர்பிரமமேயுள
தா, மந்தமயிக்கமில்லையிரண்டில்லையறிவேவளர்ந்தெழுந்த, சிந்துதரங்கப்பங்கத்தாற்றிசழுகின்றநீர்
போல,வந்தமில்லாவறிவுருவேவிளங்குமயலொன்றிலதாகும் (இ-ள்) பந்தமில்லை- பெத்தமுமில்லை—
வீடில்லை- முத்தியுமில்லை— படர்தீர்பிரமமேயுளதாம்- துன்பமில்லாதபிரமமேயுள்ளதாகும்—அத்தவ
யிக்கமில்லை-அவ்வொருமையுமில்லை—இரண்டில்லை-இருமையுமில்லை—அறிவே-ஞானமே—வளர்ந்தெ
ழுந்த- வளர்ந்தெழுந்தது—சிந்துதரங்கம்-சமுத்திரத்தலையினது— பங்கத்தால்- வேறுபாட்டினால்—
திசழுகின்றநீர்போல- விளங்குகின்றசலத்தைப்போல— அந்தமில்லா- முடிவில்லாத— அறிவுருவே-
ஞானஸ்வரூபமே— விளங்கும்- ப்ரகாசிக்கும்— அயலொன்றிலதாகும்- வேறொன்றுமில்லையாம்—
(எ-று) [இ-ம்] சின்மாத்திரமேயுள்ளதென்றுமநுபவமில்லாதவனையுடையதென்றுமிவ்வநுபவமில்
லாதபோதுதித்ததென்றுமிவ்வநுபவம், நவநவமாய்விளங்குநிமித்தமுண்டானதென்றுமறிந்திஃதுசி
ன்மாத்திரமாயிருக்கின்றதென்றறிந்தயலென்னுங்கற்பனையைநீக்கவேண்டுமென்பதாம். - - *

(௯௬) (அ-கை.) இவ்வாறுசங்கைக்குமுத்தரஞ்சொல்லிமேலாத்மாநுபவமுண்டாகும்பொருட்
டாத்மசங்கற்பமேசீவனாயிற்றெனல் (கவி) பந்தமுத்திநினைவுகளைப்பயிலாதோட்டியுன்வசமாய், மு
ந்துபிறவிப்பயமெல்லாமுற்றுமொழித்துநிலைநிற்பா, யந்தநீசங்கற்பநினைவடைந்தாற்சின்மாத்திரவ
றிவு, வத்துசீவத்துவமடைந்தவாரியலையாவதுபோல (இ-ள்) பந்தமுத்தி- பந்தம்வீடென்கின்ற—நி
னைவுகளை-எண்ணங்களை—பயிலாதோட்டி-கூடாமற்றுரத்தி—உன்வசமாய்-உனதுவசமாகி— முந்து
பிறவி-முன்ஜனனத்தின்— பயமெல்லாம்- அச்சங்களனைத்தையும்— முற்றுமொழித்து- முழுதுநீக்
கி— நிலைநிற்பாய்- நிலையாயிருப்பாய்—அந்தநீ-அப்படிப்பட்டநீ—சங்கற்பநினைவடைந்தால்-சங்கற்
பமுள்ளமனதைச்சேர்ந்தால்—சின்மாத்திரவறிவு-சின்மாத்திரஞானமானது— வாரியலையாவதுபோல-
சலமலையாவதுபோல— வத்துசீவத்துவமடைந்த-உண்டாகிச்சீவத்தன்மையையடைந்தது—(எ-று.)*

(௯௭) (அ-கை) சுகதுக்கஞ்சங்கற்பத்துக்கேயன்றியாத்மாவுக்கின்றெனல் (கவி) ஆதிகாலத்தெழு
ந்தபவத்தனையசீவருழல்கின்றா, ரோதுமின்பதுன்பமயக்குளத்துக்கொழியவுனக்கில்லை, மீதுதெரியாவி
ராகுமதிமேவித்தெரிதல்போலவநு, பூதியளவாமுயிர்காணும்பொருளாய்க்காணப்படுமன்றே (இ-ள்)
ஆதிகாலத்தெழுந்தபவத்து- முதற்காலத்திலுண்டானசநநத்தில்— அனையசீவருழல்கின்றார்- அந்தச்சீ
வர்கள்சுழலுகின்றார்கள்— ஓதும்- சொல்லப்பட்ட— இன்பதுன்பமயக்கு- சுகத்துக்கங்களின்பிரமை
யானது— உளத்துக்கொழிய- மனத்துக்கேயல்லாமல்—உனக்கில்லை-ஆத்மாவுக்கில்லை— மீதுதெரியா
விராகு- மேலேதெரியாதவிராகுவானவன்—மதிமேவித்தெரிதல்போல-சந்திரனையடைந்துகாணப்ப
டுதல்போல—அநுபூதியளவாமுயிர்- அநுபூதிமாத்திரமானவாத்மாவானது— காணும்பொருளாய்-
திரிசியமானதில்—காணப்படும்- தோற்றப்படும்— (எ-று) - - - - - - - - - - - - - - - - *

(௯௮) (அ-கை.) ஆத்மாவையுமநாத்மாவையுமறிகின்றவிவேகமுணர்த்தல் (கவி) கலைகளாலுங்
குருவாலுங்காண்டற்கரியபரன்றானே, தலைமையானசாத்திகஞ்சேர்தன்புத்தியினாற்றன்னாலே, நிலையி
ல்வெளியாநெறிபோவார்நெறிசேர்காட்சிகளிற்புந்திச், செலவுபற்றில்லாததுபோற்றெவ்வாங்கரணங்
களைக்காண்பாய். (இ-ள்) கலைகளாலும்- (ஞான) சாஸ்திரங்களினாலும்— குருவாலும்- ஆசாரியராலு
ம்— காண்டற்கரியபரந்தானே-பார்ப்பதற்கரியபிரமமானது—தலைமையான- முதன்மையாகிய—சா
த்திகஞ்சேர்- சத்துவஞ்சேர்ந்த— தன்புந்தியினால்- தனதறிவினாலும்— தன்னால்- தன்னாலும்— நிலை
யின்வெளியாம்- நிலையில்வெளிப்படும்— நெறிபோவார்- மார்க்கத்திற்செல்லுபவர்கள்— நெறிசே
ர்காட்சிகளில்- மார்க்கத்திற்சேரா நின்றதிரிசியங்களில்—புந்திசெலவு-புத்திசென்று(பார்ப்பதில்)—
பற்றில்லாததுபோல்- பற்றற்றிருப்பதுபோல— தெவ்வாம்- பகையாகிய— கரணங்களை- இந்திரிய
ங்களை— காண்பாய்- பார்ப்பாய்— (எ-று) - - - - - - - - - - - - - - *

(௯௯) (அ-கை.) அநாத்மாவைநீக்கியாத்மாவாயிருப்பாயெனல். (கவி) இனையகரணங்களைப்பற்ற
லிகழ்தலிரண்டுமியல்பல்ல, வினைசெயுடலமுதற்பொருள்கண்மேவுமியல்பின்மேவிடுக, வனையபொரு
ள்கள்புந்தியினாலகலநீக்கியதிசிதம். புனையுட்கரணத்தினனாயெப்போதும்பரமமயமாவாய் (இ-ள்)
இனையகரணங்களை- இப்படிப்பட்டவிந்திரியங்களை— பற்றல்- விரும்புதலும்— இகழ்தல்- வெறுத்
தலும்— இரண்டுமியல்பல்ல- இரண்டுமொழுங்கல்ல— வினைசெய்- கன்மத்தினாலுண்டாக்கப்பட்ட—
உடல்முதற்பொருள்கள்- தேகமுதலியவஸ்துக்கள்— மேவுமியல்பின்மேவிடுக- வரத்தக்கபாவமாய்
வரக்கடவது— அனையபொருள்கள்- அப்படிப்பட்டவஸ்துக்களை— புந்தியினாலகலநீக்கி- அறிவினால்
விலங்கும்படிதள்ளி— அதிசிதம்புனை- மிகுந்தகுளிர்ச்சியைத்தரித்த— உட்கரணத்தினனாய்- அந்தக்
கரணத்தையுடையவனாய்— எப்போதும்- எக்காலமும்— பரமமயமாவாய்- பிரமமயமாவாய் (எ-று)

(௱) (அ-கை) பந்தமுமதனிவிர்த்தியுங்கூறல். (கவி) உடலென்னும்புந்திபிறப்புற்றகட்டா
மொருக்காலு, மிடர்தீர்வீடுவிருப்புறுவோர்க்கியல்பன்றுகுமிப்புந்தி, திடமாங்கிஞ்சின்மாத்திரமுமில்

லாச்சின்மாத்திரவடிவன், றடவானிலுநானணுவென்னுஞ்சமமாம்புந்திபிறப்பறுக்கும். (இ-ள்.) உடீ
ஞனென்னும்புந்தி- தேகத்தையானென்கின்றபுத்தியானது— பிறப்புற்றகட்டாம்- டவத்தைபடைந்
தபந்தமாகும்— ஒருக்காலும்- ஒருபோதும்—இடர்தீர்வீடு- துன்பமில்லாதநிருவாணத்தை— விருப்
புறுவோர்க்கு- இச்சிப்பவர்களாகிய(முமுட்சுக்களுக்கு)—இயல்பன்றாகும்- உரியதல்லவான—இப்புந்
தி- இம்மதியானது—கிஞ்சின்மாத்திரமுமில்லா- அற்பமுமில்லாத— திடமாம்- திரமாகிய— சின்மா
த்திரவடிவன்- சின்மாத்திரவடிவமுள்ளவன்— தடவானிலும்-விசாலம்பொருந்தியவாகாயத்திலும்— நா
னணுவென்னும்சமமாம்புந்தி- யான்சூட்சுமமென்கின்றசமமாகியபுத்தியானது—பிறப்பறுக்கும்-ப
வத்தைக்கெடுக்கும்(எ-று)[இ-ரு-க-ம்] சங்கற்பமேபந்தமுமதன்விடுதியேமுத்தியுமாமென்பதாம்.

(உச) (அ-கை) ஆத்மவியாபகங்கூறல். (கவி)தெளியுநீரிலுட்புறம்புசெறியும்வெயில்போற்பொ
ருளனைத்தி, லொளிகொளான்மாநின்றிடுமாலுருவமெல்லாமுட்புகுந்து, வெளிசெய்பணிகடோறும்
பொன்னின்விசித்திரம்போல்விளங்கிடுமா, லளியவஃதல்லாவுருவாமான்மாவுடையசகமாகி (இ-ள்)
தெளியுநீரில்- தெளிந்தசலத்தில்— உட்புறம்பு- உள்ளிலும்புறம்பிலும்— செறியும்வெயில்போல்-
நெருங்கியசூரியகிரணத்தைப்போல— பொருளனைத்தில்- வஸ்துக்களெல்லாவற்றிலும்— ஒளிகொளா
ன்மா- ப்ரகாசமுள்ளவாத்மாவானது— நின்றிடும்- நிற்கும்—உருவமெல்லாம்- வடிவங்களனைத்தின்—
உட்புகுந்து- அகத்திற்ப்ரவேசித்து— வெளிசெய்- வெளியாகச்செய்கின்ற— பணிகடோறும்- ஆப
ரணங்கடோறும்— பொன்னின்விசித்திரம்போல்- சொன்னம்விளங்குமதிசயத்தைப்போல—விளங்கி
டும்- (ஆத்மாவானது) ரக்ஷிக்கும்—அளிய-கனிந்த—அஃதல்லாவுருவம்- அவ்வபின்னமாய்விளங்கா
தவடிவமானது—ஆன்மாவுடைய- ஆத்மசத்தையையுடைய—சகமாகி-உலகமாகத்தோற்றும்—(எ-று)

(உஉ) (அ-கை) இ-து (கவி) நாசவடைவைக்கனல்படரநடுக்கஞ்செய்புங்காலமெனு, மூசுகட
லிற்சகத்திரளாமுடுகுநதிகள்பல்லுயிராம், வீசுதரங்கத்தொடுபாய்ந்துநிறையாதந்தவேலையைபு, மாச
மனஞ்செய்யகத்தியனுமான்மாவென்றுவகத்துணர்வாய் (இ-ள்) நாசம்- நாசமென்கின்ற—வடவை
க்கனல்படர- வடவாமுகாக்கினிபடர்ந்துவர— நடுக்கஞ்செய்யும்- பயத்தைச்செய்யும்— காலமெ
னும்- காலமென்கின்ற— மூசுகடலில்- நெருங்கியசமுத்திரத்தில்— சகத்திரளாம்- சகக்கூட்டங்களாகி
ய— முடுகுநதிகள்- வேகமுள்ளவாறுகள்— பல்லுயிராம்- பலசீவர்களாகிய—வீசுதரங்கத்தொடு- மோ
தாநின்றவலைகளுடன்— பாய்ந்துநிறையாது- சேர்ந்துநிரம்பாமலிருக்கின்ற— அந்தவேலையைபு-
அக்கடலையும்— ஆசமனஞ்செய்- ஆசமனஞ்செய்த— அகத்தியனுமான்மாவென்று- கும்பமுனியாகிய
வாத்மாவென்று— அகத்துணர்வாய்- மனதிலறிந்துகொள்ளுவாய்.—(எ-று)[இ-உ-க-ம்] ஆத்மாவான
துசகலவஸ்துக்களுள்ளிலும்புறம்பிலுமிடையின்றிக்காலாதீதமானபூரணமாய்விளங்குமென்பதாம். ※

(உரு) (அ-கை) ஆத்மதிருஷ்டியைக்கூறல் (கவி) தானலாதாய்முன்சொன்னசகத்தின்றிரளாயுட
லமுத, லானபொருளின்சாலத்தையான்மாவாலேயறத்தள்ளி ஞானசற்பாவந்தன்னைநனிமேற்கொண்
டுமறைந்தோனு, யீனமில்லாமதிவேந்தேயிச்சையானபடிநிற்பாய் (இ-ள்) தானலாதாய்- அநாத்மா
வாய்— முன்சொன்ன- முன்சொல்லிய— சகத்தின்றிரளாய்- உலகத்தினதுகூட்டமாய்— உடலமுத
லானபொருளின்- சரீரமுதலாகியவஸ்துக்களின்— சாலத்தை- கூட்டத்தை—ஆன்மாவால்- ஆத்மாவி
னுல்— அறத்தள்ளி- மிகவுநீக்கி—ஞானசற்பாவந்தன்னை- ஞானசற்பாவத்தை—நனிமேற்கொண்டு-
மிகவுமேற்கொண்டு— மறைந்தோனுய்- அடக்கமுடையவனுய்— ஈனமில்லா- குறைவில்லாத— மதி
வேந்தே- அறிவையுடையவரசனே— இச்சையானபடிநிற்பாய்- இச்சாப்ரகாரமிருப்பாய்—(எ-று)
[இ-ம்]அநாத்மாவையாத்மாவினுற்கெடுத்ததுவாயிருந்திச்சையின்படிசஞ்சரிப்பாயென்பதாம். - ※

(உச)(அ-கை)அநாத்மநாசத்தையாத்மநாசமாகநினைத்தறியாதுவருந்துதல்(கவி)தனங்களுடேது
யின்மகவைத்தாய்தான்மறந்துமிகத்தேடி, மனங்கன்றுதல்போற்சாமரணமருவாதம்மைபறியாமற்,
செனங்கள்சலித்துக்கெட்டேனுன்செறியுநாதரிலாதவனு,னனங்கொள்காயம்போமளவிலழிந்தேனுவா
வென்றழுவார். (இ-ள்) தனங்களூடு- கொங்கையினிடத்தில்— துயின்மகவை- நித்திரைசெய்கின்ற
குழந்தையை— தாய்தான்மறந்து- மாதாவானவள்மறந்து— மிகத்தேடி- மிகவுந்தேடி—மனங்கன்
றுதல்போல்- மனநைகின்றதுபோல— சாமரணமருவா- மூப்பிறப்புப்பொருந்தாத— தம்மைய
றியாமல்- ஆத்மாவையுணராமல்—செனங்கள்சலித்து- சனனங்களாலைவசலனமுற்று—நான்கெட்டே
ன்-யான்கெட்டேனென்றும் — நான்செறியுநாதரிலாதவன்- யானெருங்கியநாதரில்லாதவனென்று
ம்— அனங்கொள்காயம்- அன்னமயமாகியசரீரமானது— போமளவில்- நசிக்கின்றகாலத்தில்— அழி
ந்தேன்- நானழிந்தேனென்றும்—ஆவாவென்றழுவார்- அந்தோவந்தோவென்றழுவார்கள்—(எ-று)

(உடு) (அ-கை) சிதாநந்தமாயிருந்தரசுசெய்வாயெனல் (கவி) வாரியசைந்தவசைவில்பலவடி
வாமதுபோற்சங்கற்ப, நேரினுலேசிற்பிரமநெடிதுவிரியுஞ்சங்கற்ப, பாரகளங்கமறவிட்டுப்படர்ந்த
வறிவையான்மாவிற், றிரநிறுத்திச்சுத்தேகத்திறங்களெல்லாந்தீர்ந்தோனுய் (இ-ள்)வாரி-சலமானது—
அசைந்தவசைவில்- சலித்தசலனத்தினுல்— பலவடிவாமதுபோல்- (அலைமுதலிய) நாநாவிதவுருவங்க
ளானதுபோல— சங்கற்பநேரினுல்- சங்கற்பத்தின்மிகுதியினுல்— சிற்பரமம்- சிற்பிரமமானது—
நெடிதுவிரியும்- மிகவும்வியாபிக்கும்—சங்கற்பம- சங்கற்பமென்னும்— பாரகளங்கமறவிட்டு- பெ
ரிதானகளங்கத்தைமிகவுமவிட்டு— படர்ந்தவறிவை- விரிந்தசித்(தத்)தை—ஆன்மாவில்- ஆத்மாவினிட
த்தில்— திரநிறுத்தி- திர்ப்பாகவிருத்தி— சுநதேகத்திறங்களெல்லாம- ஐயத்தினதுகுணங்களனைத்தை
யும— தீர்ந்தோனுய்- நீங்கினவனுய்—(எ-று) - - - - - - - - - - - - ※

(உசு) (அ-கை.) இ-து (கவி) அலைவிலலையாதுயர்பரமவான்மாப்போலநிலைநின்று, நிலைகொள்
சுகியாயிவ்வரசுநெடிதுபுரப்பாய்திருபதியே, தலைமையான்மாதன்னிடத்தேதன்னைதானவசைவுகளா

ந், றொலைவிலாதவிளையாட்டைத்தொடர்பிற்செய்யும்பாலனைப்போல். (இ-ள்) அலைவில்- அசைவிலு ம்— அலையாது- அசைவில்லாமல்— உயர்பரமவான்மாப்போல- மேலானபரமாத்மாவைப்போல— நிலைநின்று- நிலையாகவிருந்து— நிலைகொள்சுயேயாய்- நித்தியத்துவத்தைபுடையவாநந்தியாய்— இவ் வரசு- இந்தநாட்டை— நிருபதியே- அரசனே— நெடிதுபுரப்பாய்- வெகுகாலமிரட்சிப்பாய்— த லைமையான்மா- சேடமானவாத்மாவானது— தன்னிடத்து- தன்னிடத்தில்— தன்னதானவசைவுகளா ல்- தன்துசங்கற்பசத்திகளினால்— தொலைவிலாதவிளையாட்டை- அளவற்றலீலையை— பாலனைப்போ ல்- குழந்தைகளைப்போல— தொடர்பிற்செய்யும்- தொடர்பாகச்செய்யும்— (எ-று) [இ-உ-க-ம்] சைதன்யசங்கற்பத்தைச்சாரைத்து நித்தியாநந்தனுயிருந்துபூமிபாலனஞ்செயவாயென்பதாம் - - ※

(உஎ) (அ-கை) ஆத்மசத்தியினுற்பத்திநாசஞ்சொல்லுதல் (கவி) அழிக்குந்தன்சத்தியினாற்பின் னழித்துத்தன்பாலமர்ந்திடுமோ, விழிக்கும்பந்தமுறுஞ்சத்தியிதற்குத்தன்பாற்றுனேயெழும், பழிக்கு ம்பந்தமெப்படியோபற்றற்றகலுமப்படியே, யொழிக்குஞ்சத்திதானே வந்துதயமாகு மிவனுக்கே. (இ-ள்) அழிக்கும்- சங்கரிக்கின்ற— தன்சத்தியினால்- தனதுசத்தியினால்— பின்னழித்து- பின்சங்கரி த்து— தன்பாலமர்ந்திடும்- தன்னிடத்திற்பொருந்தும்— இழிக்கும்- இழிவுசெய்யும்— பந்தமுறுஞ் சத்தி- பந்தத்தையடைகின்றசத்தியானது— இதற்கு- இந்தவாத்மாவுக்கு— தன்பாற்றுனேயெழும்- தன்னிடத்திற்றுனேயுண்டாகும்— பழிக்கும்பந்தமெப்படியோ- நிந்திக்கின்றபந்தசத்திமெங்ஙனமு தித்ததோ— அப்படியேபற்றற்றகலும்- அங்ஙன(மது)பற்றில்லாமனீங்கும்— ஒழிக்குஞ்சத்தி- சங்கார சத்தியானது— இவனுக்குத்தானேவந்துதயமாகும்- இவ்வாத்மாவுக்குத்தானேவந்துண்டாகும் (எ-று)

(உஅ) (அ-கை) பிரமத்திற்பிரபஞ்சந்தோற்றுதலைக்கூறுதல். (கவி) மதியோடிரவிகதிர்பாயமணிகளிற்சேரொளிகளைப்போன், முதிருமாங்கள்கனியிலையைமுதலாயினபோலருவிகளிற், பிதிருந்து ளிகள்போற்சாலப்பிறங்கும் பிரமத்திடைதோன்றுங், கதிகொள்புந்திமுதலாகக் கற்பிதஞ்சேர்ச்சக மே (இ-ள்) மதியோடிரவி- சந்திரசூரியருடைய— கதிர்பாய- கிரணங்கள்சேர— மணிகளிற்சேர்- இரத்தினங்களிற்சேர்கின்ற— ஒளிகளைப்போல்- ப்ரகாசங்களைப்போலவும்— முதிருமாங்கள்- முதி ர்ந்தவிருட்சங்கள்— கனியிலையைமுதலாயினபோல்- பழம்பத்திரங்கள் முதலானவையுடையனபோ லவும்— அருவிகளிற்பிதிருந்துளிகள்போல்- மலையருவிகளிற்சிதறுந்துளிகள்போலவும்— சாலப்பிற ங்கும்பிரமத்திடை- மிகவும்விளங்கும்பிரமத்தில்— கதிகொள்புந்திமுதலாக- சலனத்தையுடையபுத்தி முதலாக— கற்பிதஞ்சேர்ச்சகம்- கற்பிதமானவிவ்வுலகமானது— தோன்றும்- உண்டாகும்— (எ-று)

(உகூ) (அ-கை) ஆத்மாவினிடத்தில்லாமையாகத்தோற்றின சகமஃதையே மறைக்குமெனல். (கவி) அதுதானறியார்க்கிடர்நல்கியதுவேயதுவல்லாததுபோற், றிதமாய்நிற்குமிம்மாயைச்சித்திரந்தா னற்புதமே, பொதுவாயங்கமத்தனையும்புணர்ந்து பிறிவற்றிருக்கவுந்தா, னிதமாயுயிரையுயிர்காணுதி ருக்கமயக்குமியாரையுமே (இ-ள்) அதுதானறியார்க்கு- அவ்வாத்மாவையுணராதவர்களுக்கு— இடர்ந ல்கி- துன்பத்தைக்கொடுத்து— அதுவே- அச்சகமே— அதுவல்லாததுபோல்- அக்கற்பிதமாகாதது போல— திதமாய்நிற்கும்- நிலைபாயிருக்கும்— இம்மாயை- இந்தமாயையினது— சித்திரந்தான்- வி சித்திரமானது— அற்புதமே- அதிசயமேயாம்— பொதுவாய்- சாதாரணமாய்— அங்கமத்தனையும்- அவயவங்களியாவையும்— புணர்ந்து- கலந்து— பிறிவற்றிருக்கவும்- பிரிவில்லாமலிருக்கவும்— இத மாயுயிரை- உரிமையாகவாத்மாவை— உயிர்காணுதிருக்க- ஆத்மாவானதுகாணுமலிருக்கும்படியாக— இயாரையும்- யாவரையும்— மயக்கும்- பிரமைசெய்யும்— (எ-று) - - - - - - - - ※

(௩௰) (அ-கை) பிரமகவசமுரைத்தல் (கவி) பரமவிண்ணிற்சகமெல்லாமென்றுபாவித்தாசைய றிற், பிரமகவசனின்பமுளபெரியோனுகுநானென்னும், பொருளைநீக்கினினைவின்மைவடிவானினைவாற் பொருளனைத்தி, னுருவமில்லைநிராலம்பமுணர்வுசாந்தமெனநினைவாய் (இ-ள்) பரமவிண்ணில்- பர மாகாயத்தில்— சகமெல்லாமென்று- உலகங்களனைத்துமிருக்கின்றனவென்று— பாவித்து- பாவனை செய்து— ஆசையறில்- இச்சைநீங்கினால்— பிரமகவசன்.. பிரமத்தையேகவசமாகத்தரித்தவனான— இ ன்பமுளபெரியோனுகும்- பேராநந்தத்தையுடையசீவன்முத்தனாகும்— நானென்னும்பொருளை- யா னென்கின்றவகங்காரத்தை— நீக்கி- கெடுத்து— நினைவின்மைவடிவாம்- அபாவரூபமான— நினைவா ல்- பாவனையினால்— பொருளனைத்தும்- வஸ்துக்கள்யாவும்— உருவமில்லை- வடிவமில்லாததாகவும்— நிராலம்பம்- பற்றுக்கோடில்லாததாகவும்— உணர்வு- சித்தாகவும்— சாந்தமென- சாந்தமாகவுமிரு க்குமென்று— நினைவாய்- பாவிப்பாய்— (எ-று) [இ-ச-க-ம்] சிற்ப்ரகாசமேசகதென்றறிதல் பேதிக்கப்படாதஞானகவசமாமென்பதாம். - - - - - - - - - - - ※

(௩௧) (அ-கை) மனோபேதத்தைக்கெடுத்தல். (கவி) இதுவேநன்றிதன்றெண்ணுமிதுவேவித்தா மிடொழுங்குக், கதுதானசமமாமங்கியில்வெந்ததிறந்தாலிடருக்கவசரமென், பொதுவாநலந்தீங்கெ னும்பேதமபாவமென்னும்பொருவாளால், விதமாம்புருடவருத்தத்தான்மெல்லமனதில்வெட்டுதியா ல் (இ-ள்) இதுவேநன்று-இதும்வநல்லதென்றும்— ஈதன்று- இதுநல்லதல்லவென்றும— என்னு மிதுவே- நினைக்கின்றவிப்பேதபாவனையே— இடொழுங்குக்கு- துக்கபரம்பரைக்கு— வித்தாம- வித்தையாகும— அதுதான்- அந்தவித்தானது— சமமாமங்கியில்- சமபாவனையானவக்கினியில்— வெந்த ழிந்தால்- எரிந்தொழிந்தால்— இடருக்கு- துன்பத்துக்கு— அவசரமென்- இடமேது— பொது வாம்- சாதாரணமான— நலந்தீங்கெனுமம்பதம்- நன்மைதீமையென்னும்பேதத்தை— அபாவமெ ன்னும்- அபாவமென்கின்ற— பொருவாளால்- வெட்டுகின்றகத்தியினால்— விதமாம்புருடவருத்தத் தால்- நாநாவிதமாகியபுருடப்ரயேதத்தினால்— மெல்ல- மிருதுவாக— மனதில்வெட்டுதி- மன தீற்றுப்பாய்— (எ-று) [இ-ம] மனதின்கண்ணுள்ளபேததுனபங்களையறிவின்கண்ணுள்ள வபேத

சுகத்தாற்கெடுக்கவேண்டுமென்பதாம் - - - - - - - - - - - - - - - *

(௫௨) (அ-கை) கன்மத்யாகஞ்செய்து விவேகத்தாற்பிரமபதத்தைப் பெற்றிருப்பாயெனல். (கவி) நினைவான்முடிக்குங்கருமமெனுநீண்டபெரியவன்காடு, தனைநீநினைவின்மையினாலேதடிந்துப ரமபதமேவி, வினைதீருனதுவிவேகத்தைமேவியென்றுநிலைநிற்பாய்.புனைதாரிக்குவாகுவெனும்புகழா னிறைந்தபூபதியே (இ-ள்) நினைவான்முடிக்கும்-எண்ணத்தினானிறைவேற்றப்பட்ட—கருமமெனும்-கன்மமென்கின்ற—நீண்ட-நீண்டிருக்கின்ற—பெரியவன்காடுதனை-பெரியகொடியவனத்தை—புனைதாரிச்சுவாகுவெனும்-அலங்கரிக்குமாலையுடையவிட்சுவாகுவென்கின்ற—புகழானிறைந்தபூபதியே-கீர்த்தியானிறைந்தவரசனே—நீநினைவின்மையினால்-நீயபாவனையினால்—தடிந்து-வெட்டி—பரமபதமேவி-பரமபதத்தையடைந்து—வினைதீர்-கன்மநீங்கிய—உனதுவிவேகத்தைமேவி-உன்னுடையவிவேகத்தைப்பொருந்தி—என்றும்-எப்பொழுதும்—நிலைநிற்பாய்-நிலையாயிருப்பாய்—(எ-று) *

(௫௩) (அ-கை,) துக்கநிவிர்த்தியாய்த்தடையற்றவாநந்தமடைதல். (கவி) உலகின்பரப்பையுள்ளாக்கியுன்னுநினைவுக்கப்பாலாய்க், கலகமடவார்பொருளென்னுங்காதனழுவிநானென்னுங் குலவுமிருள்போய்விவேகநிலைகூடுமவனேபராநந்த, மிலகவடைந்தோனெடுங்காலமிவனேதுன்பமில்லாதோன். (இ-ள்) உலகின்பரப்பை-சகத்தினதுவிரிவை—உள்ளாக்கி-தனக்குள்ளடக்கி—உன்னுநினைவுக்கு-நினைக்கின்றபேதநினைவுக்கு—அப்பாலாய்-அதீதமாய்—கலகமடவார்-கலக்கத்தைவிளைக்கின்றபெண்களும்—பொருளென்னும்-பொன்னுமென்கின்ற—காதனழுவி-ஆசைவிட்டு—நானென்னும்-யானென்கின்ற—குலவுமிருள்போய்-குலவாநின்றவஞ்ஞானவிருணீங்கி—விவேகநிலை-விவேகநிச்சயத்தை—கூடுமவனே-சேராநின்றவவனே—பராநந்தமிலக-பிரமாநந்தமானதுப்ரகாசிக்க—அடைந்தோன்-பெற்றவனும்—நெடுங்காலம்-அநேககாலம்—இவனேதுன்பமில்லாதோன்-இவனேதுக்கமில்லாதவனும் (எ-று) [இ-உ-க-ம்] பாவனைகன்மங்களையபாவனையாற்கெடுத்துச்சகலமுந்தனதுவியாபகத்திற்கரைத்துப்பிரமாநந்தத்திற்சுகிப்பவனேதுன்பமற்றவனுவனென்பதாம் - - - - - *

(௫௪) (அ-கை. ஆத்மாவைத்தரிசிப்பித்தல்தையடைதற்குண்மைநெறியானஞானபூமியைச்சொல்லத்தொடங்கிமுதற்பூமியானசுபேச்சையைக்கூறுதல் (கவி) சாந்தனுகிச்சமநிலையாய்ச்சாலநொய்தாயறிவுருவை, வேந்தனேசந்ததநினைவாயென்றுமனுமீண்டுரைசெய்வா, னாய்ந்தநூலானல்லோராலறிவைவளர்க்கவேண்டுமுத, லேய்ந்தயோகத்துக்குமுதற்பூமியிதுயோகிக்கில்லை (இ-ள்) சாந்தனுகி-உபசாந்தனுகியும்—சமநிலையாய்-சமநிலையாகியும்—சாலநொய்தாய்-மிகவுஞ்சொச்சமாகியுமிருந்து—அறிவுருவை-ஞானஸ்வரூபத்தை—வேந்தனே-அரசனே—சந்ததநினைவாயென்று-எப்பொழுதுந்தியானிப்பாயென்று—மனுமீண்டுரைசெய்வான்-மனுவானவர்திரும்பவுஞ்சொல்லுவார்—ஆய்ந்தநூலானல்லோரால்-ஆராய்ந்தறிந்தஞானசாஸ்திரங்களினாலுஞ்சத்துக்களினாலும்—அறிவைமுதல்வளர்க்கவேண்டும்-ஞானத்தைமுன்புவளரச்செய்யவேண்டும்—ஏய்ந்தயோகத்துக்கிதுமுதற்பூமி-பொருந்தியஞானத்துக்கிச்சுபேச்சையேமுதற்பூமியாகும்—யோகிக்கில்லை-கன்மயோகிகளுக்கில்லை—(எ-று.)

(௫௫) (அ-கை) விசாரணைதனுமானசிசத்துவாபத்தியசம்சத்தியென்னுமின்னான்கு பூமியையுஞ்சொல்லுதல் (கவி) அயர்வில்விசாரமிரண்டாகுமசங்கபாவமூன்றாகும்,பயிலுநாலாம்விலாபினியேபடர்வாதனையைப்பற்றறுக்கு, மயர்வில்சுத்தநல்லறிவின்மயவாநந்தவடிவைந்தாந், துயில்சாக்கிரம்பாதிகளில்லாத்தொடர்சீவன்முத்தியுமிதுவே (இ-ள்) அயர்வில்விசாரம்-தளர்வற்றவாத்மவிசாரணையே—இரண்டாகும்-இரண்டாம்பூமியாகும்—அசங்கபாவம்-அசங்கபாவனையே—மூன்றாகும்-மூன்றாவதுபூமியாகும்—பயிலுநாலாம்விலாபினியே-சொல்லப்பட்டநான்காம்பூமியானவிலாபினியே—படர்வாதனையை-வளருகின்றவாசனையை—பற்றறுக்கும்-பற்றில்லாமற்கெடுக்கும்—மயர்வில்சுத்தம்-மயக்கமில்லாதபரிசுத்தமாகிய—நல்லறிவின்மயவாநந்தவடிவு-நல்லஞானமயமானவாநந்தஸ்வரூபமே—ஐந்தாம்-ஐந்தாம்பூமியாம்—துயில்-நித்திரையும்—சாக்கிரம்பாதிகளில்லா-விழிப்புப்பாதிகளில்லாத—இதுவே-இதுதானே—தொடர்சீவன்முத்தியும்-தொடராநின்றசீவன்முத்தியும்—(எ-று)

(௫௬) (அ-கை.) பதார்த்தாபாவனை,துரியமெனுமிவ்விரண்டுபூமியையுங்கூறல் (கவி) அறிவிலாமைவடிவாகியகலாநந்தமொன்றுமுஞ், செறியும்வடிவாய்ச்சுழுத்தியைப்போற்றிகழுமாறாமுயர்பூமி,பிறிவில்சமமாயறநொய்தாய்ப்பெரிதுநன்றாய்ச்சாந்தமதாய், வெறியதுரியங்கேவலமாம்வீடேயேழாமியன்பூமி (இ-ள்.) அறிவிலாமைவடிவாகி-அறிதலில்லாமையேஸ்வரூபமாகி—அகலாநந்தமொன்றுமும்-பூரணமானவோராநந்தத்தினாலும்—செறியும்வடிவாய்-நிறைந்தவடிவமாகி—சுழுத்தியைப்போல்-சுழுத்தியவஸ்தையைப்போல—திகழும்-விளங்குகின்ற—உயராறும்பூமி-மேலானவாறும்பூமியாம்—பிறிவில்சமமாய்-பிரிவற்றசமமாகியும்—அறநொய்தாய்-மிகவுஞ்சொச்சமாகியும்—பெரிதுநன்றாய்-மிகவுநல்லதாகியும்—சாந்தமதாய்-உபசாந்தமாகியும்—வெறியதுரியம்-சுத்ததுரியமாகியும்—கேவலமாம்வீடே-கைவல்யமாகிய மொக்ஷமே—ஏழாம்வியன்பூமி-ஏழாவதானபெருமைபொருந்தியபூமியாம்—(எ-று) [இ-௩-க-ம்] ஞானசத்தபூமியினருத்தத்தையப்பியாசிக்குங்கிரமமறிவித்ததாம் - *

(௫௭)(அ-கை) ஞானபூமிகாஸ்வரூபமானபிரமபுருடனுக்கதையைந்தவத்தையாகச்சொல்லத்தொடங்கிமுதற்பூமிமூன்றையுஞ்சாக்கிரவவத்தையெனல் (கவி) மன்னுவிடயம்விடுதலினால்வாழுமிவ்வேழாம்பூமி, தன்னைநிருவாணத்துருவாய்ச்சான்றதுரியாதீதபத, மென்னவுணர்த்தாரிலர்வேறேயிவ்வேழுயத்தலைதகளின்முன்னஞ்சொன்னவவத்தைதபொருமூன்றுந்தொடர்சாக்கிரமாயககருதுவதாம(இ-ள்) மன்னுவிடயம்-நெருங்கியவிடயங்கள்—விடுதலினால்-நீங்குதலினால்—வாழும்-(பேராநந்தத்தில்) வாழும்—இவ்வேழாமபூமிதன்னை-இந்தவேழாமபூமியை—நிருவாணத்துருவாய்-மோட்சஸ்வரூபமாய்—சான்றதுரியாதீதபதமென்ன-சித்தானதுரியாதீதபதமென்று—சிலருணர்த்தார்-சிலர்சொன

னூர்கள்—வேறு- வேறாக—இவ்வேழவத்தைகளில்- இந்தவேழுபூமிகளில்—முன்னர்ச்சொன்ன- முதற்கண்சொல்லிய—அவத்தை- அவத்தைகளான—ஒரூமூன்றும்- மூன்றுபூமியும்— தொடர்சாக்கிரமாய்- தொடராநின்றசாக்கிரவவத்தையாக— கருதுவதாம்- நினைப்பதாகும்— (எ-று) - - - - ※

(ருஅ) (அ-கை) நான்காம்பூமி சொற்பனமைந்தாம்பூமி சுழுத்தியாறும்பூமிதுரியமெனக்கூறுதல். (கவி) சகங்கள்கனவிற்றோற்றுவாந்தன்மைநாலாவதுசனவா, நிகழாநந்தமொன்றாலெநெருங்குவடிவமைந்தென்று, புகன்றவவத்தைசுழுத்தியதாம்போதமின்மைவடிவாகித், திகழ்ந்தவாறுமவத்தையினைச்சிறந்ததுரியமெனலாகும் (இ-ள்.)சகங்கள்- உலகங்களானவை—கனவிற்றோற்றுவாம்-சொற்பனத்தைப்போலத்தோற்றுவனவாகிய—தன்மை- குணமுடைய—,நாலாவதுசனவாம்- நான்காம்பூமியேசொற்பனவவத்தையாம் —நிகழ்-ப்ரகாசியாநின்ற— ஆநந்தமொன்றாலும்- ஒராநந்தத்தினலும்—நெருங்குவடிவம்- நிறைந்தவுருவமானதை— ஐந்தென்றுபுகன்றவவத்தை-ஐந்தென்றுசொல்லியபூமியே—சுழுத்தியதாம்-சுழுத்தியவவத்தையாகும்— போதமின்மைவடிவாகி-அறிதலில்லாத(வாநந்தமே)ஸ்வரூபமாய்—திகழ்ந்தவாறுமவத்தையினை- விளங்காநின்றவாறும்பூமியை—சிறந்ததுரியம்- சிறப்புள்ளதுரியவவத்தை—எனலாகும்- என்றுசொல்லப்படும்—(எ-று) - - - - - - - - - - - - ※

(ருகூ) (அ-கை) ஏழாம்பூமிதுரியாதீதமெனல் (கவி) தரியாமனவாக்கெட்டரிதாய்த்தனதேசுன்மைவடிவான, துரியாதீதப்பதவவத்தைத்தூயவேழாமுயர்பூமி, பிரியாதுள்ளேவசமானபிரத்தியாகாரத்தாலே, தெரியாதாகிக்காண்கின்றதிரள்களனைத்தும்போமாகில் (இ-ள்) தரியாமனவாக்கு- சலனமானமனதும்வாக்கும்— எட்டரிதாய்- எட்டுதற்கரிதாகியும்— தனதேசு- தனதுப்ரகாசமாகியும்—உண்மைவடிவாள- சத்துருவமாகியுமிருக்கின்ற— துரியாதீதப்பதவவத்தை- துரியாதீதப்பதமானவவத்தையே—தூயவேழாமுயர்பூமி- பரிசுத்தம்பொருந்தியமேலானவேழாவதுபூமியாகும்— பிரியாது-நீங்காமல்— உள்வசமான- அகத்தின்வசமாகிய— பிரத்தியாகாரத்தால்- சித்தநிரோதனத்தினால்—தெரியாதாகி- தெரியாததாய்—காண்கின்றதிரள்களனைத்தும்- பார்க்கப்பட்டதிரிப்ஸ்யக்கூட்டங்களியாவும்—போமாகில்- நீங்குமானல்— (எ-று) [இ-ரு-க-ம்] முன்மூன்றுபூமியற்பியாசத்திற்சகமுள்ளதுபோலத்தோற்றுதலினற்சாக்கிரமென்றும்நான்காம்பூமியித் சகம்ஸ்புரணருபமாகத்தோற்றுதலாற்சொற்பனமென்று, மைந்தாம்பூமியிற்சகஞ்சுகருபமாய்த்தோற்றுதலிற்சுழுத்தியென்றும் ஆறும்பூமியிற்சகமறிதலிறந்துவிளங்குதலிற்றுரியமென்றும், ஏழாம்பூமியிற்சகமகோசரமானசாக்ஷாத்காரமாய்விளங்குதலிற்றுரியாதீதமென்றுமிதுவேயாத்மாற்தமென்றறிவித்ததாம் - - - - - - - - - - - ※

(சுo) (அ-கை) ஞானபூமியப்பியாசத்தினற்சத்யோமுத்தனுவனெனல் (கவி) அந்தமகாசத்தையினலேயவனேமுத்தனையமில்லை, வந்தபோகசுகதுக்கவகையாற்றாக்காதறநிறைந்த, புந்தியுள்ளனுயான்மாவிற்பொருந்தமகிழ்ந்துநிற்குமெனி,வித்தமனிதனிலேதானேயிங்கேதோன்றுமுயர்முத்தி (இ-ள்) அந்த- அப்படிப்பட்ட—மகாசத்தையினல்- மகாசத்தையினல்—அவனேமுத்தன்- அவனேசீவன்முத்தனுவன்— ஐயமில்லை- சந்தேகமில்லை— வந்தபோகம்- வந்திருக்கின்றபோகங்கள்— சுகதுக்கவகையால்- இன்பதுன்பவிதங்களினல்— தாக்காது-தாக்காமல்—அறநிறைந்த-மிகவுநிறைந்திருக்கின்ற—புந்தியுள்ளனுய்- அறிவையுடையவனுய்—ஆன்மாவிற்பொருந்தும்- ஆத்மாவிற்கலந்து— மகிழ்ந்துநிற்குமெனல்-மகிழ்ச்சியுற்றிருக்குமாயின்—இந்தமனிதனிலேதான்- இப்புருடனிச்சயத்திற்கு— உயர்முத்தி- மேலானமோக்ஷமானது—இங்கேதோன்றும்- இவ்விடத்திற்றோற்றும்—(எ-று) - - - ※

(சுக) (அ-கை) துரியாதீதவனுபவியெங்ஙனமிருக்கினுஞ்சுகியேயன்றிதுன்புறனெனல் (கவி) பொங்குதொழின்மேவினன்சாந்தன்புகல்விட்டுறைவோன்சந்யாசி, யங்கமுள்ளோன்சரீரமிலோனெனினுமவனேமுனியாகு,மெங்குமிறவேனுயிர்வாழேனிலனுமுளனுமலனிவனே.தங்குனன்கிஞ்சிலுமிலனென்றுன்னித்தீரன்றளர்வனுகான் (இ-ள்) பொங்குதொழில்-மிகுந்தசெயலை—மேவினன்-அடைந்தவன்— சாந்தன்- தொழிலற்றவன்— புகல்விட்டுறைவோன்- சொல்லப்பட்டகிரகஸ்தன்— சந்யாசி- துறவி— அங்கமுள்ளோன்- சரீரமுள்ளவன்— சரீரமிலோன்- தேகமில்லாதவன்— எனினும்- என்றுசொல்லப் பட்டாலும்— அவனேமுனியாகும்- அவனேசீவன்முத்தனுகும்— எங்கும்- எவ்விடத்திலும்— இறவேனுயிர்வாழேன்- மரிக்கேன்பிழைக்கேன்— இலனுமுளனுமலன்- இல்லாதவனுமுண்டானவனுமல்லாதவன்—இவன்-இவனென்பதும்— தங்குநான்- தங்காநின்றநானென்பதும்—கிஞ்சிலுமிலன்- அற்பமுமில்லாதவன்— என்றுன்னி- என்றுசிந்தித்து— தீரன்- தீரனுனவன்— தளர்வனுகான்- சோர்வையடையான்—(எ-று) - - - - - - - - - - - - - - - - - - - ※

(சுஉ) (அ-கை.) இ-து (கவி) ஒன்றிலனுகேனுன்சனைபற்றுள்ளமமதையகங்கார, மென்றவொன்றுமிலனென்றேயெண்ணித்தீரனிடரனுகான், றுன்றுகுணமூன்றிலன்சனைசாவிலனன்சுத்தன்றூய்வறிஞனின்றசாந்தன்சமரசனெனென்றுநினைத்தோன்றுயரனுகான் (இ-ள்)நான்- யான்—ஒன்றிலனுகேன்- ஒன்றிலுநெருங்கேன்—சனை- நனையும்— பற்று- ஆசையும்—உள்ளம்- மனதும்—மமதை- மமதையும்—அகங்காரம்- அகங்காரமும்—என்ற- என்றுசொல்லப்பட்ட— ஒன்றுமிலனென்று- ஒன்றுமில்லாதவனென்று—எண்ணி- நினைந்து—தீரன்- தீரனுனவன்—இடரனுகான்- துன்பமடையான்—துன்றுகுணமூன்றிலன்- நெருங்கியமூன்றுகுணமில்லாதவன்—சனைசாவிலன்- மூப்பிறப்பில்லாதவன்— நான்சுத்தன்- யான்பரிசுத்தன்—தூயவறிஞன்- (நான்) பரிசுத்தஞானி—நன்றசாந்தன்- (நா)னிலையானவுபசாந்தன்—நான்சமரசன- யான்சமரசன்—என்று- இப்படியென்று—நினைத்தோன்- சிந்தித்தவன்—துயரனுகான- துன்பத்தையடையான்— (எ-று) - - - ※

(சுரு) (அ-கை) இ-து. (கவி) திரணநுனிகள்விசும்பிரவிதேவருரகர்நரரிடத்தில், விரிபுமறிவேநானென்றுவிளங்குந்தீரன்மெலிவனுகான், புரிபுங்குறுக்குமேல்கீழுளபோதப்பெருமைபுலாவியவெது

ன், நரிதினநந்தவிசாரஞ்செய்ததனையறிந்தோனழிவில்லோன் (இ-ள்) திரணநுனிகள்- துரும்புகளினுனிகளிடத்திலும்— விசும்பு- ஆகாயத்தினிடத்திலும்— இரவி- சூரியனிடத்திலும்— தேவர்- அமரர்களிடத்திலும்— உரகர்- நரகரிடத்திலும்— நாரிடத்தில்- மனிதரிடத்திலும்— விரிபுமதிவே- வியாபித்திருக்கின்றஞானமே— நானென்றுவிளங்கும்- யானென்றுப்ரகாசிக்கும்— திரன்- திரனானவன்— மெலிவணுகான்- இளப்பையடையான்— புரியுங்குறுக்கும்- சொல்லப்பட்டசுருக்கும்— மேல்கீழ்- மேலுங்கீழும்— என்போதப்பெருமை- எனதுசித்துவிலாசமானது— உலாவியதென்று- வியாபித்திருக்கின்றதென்று— அரிதின்- அரியதாய்— அநந்தவிசாரஞ்செய்து- அளவற்றவிசாரணைபண்ணி— இதனையறிந்தோன்- இந்தநிலையைபுணர்ந்தவன்— அழிவில்லோன்- நாசமில்லாதவன்— (எ-று)[இ-சு-க-ம்] சராசரங்களாய் ப்ரகாசிக்கின்றசைதன்யமேநானென்கிறஞானதிஷ்டியுடையவன்யாதினுங்கூடியுங்கூடாதவனாய்த்துரியாதீதவடிவமாய்ப்ரகாசிப்பானென்பதாம். - - - - - - - - - - - - ✻

(சச) (அ-கை.)சுகதுக்கநிவிர்த்தியின்பொருட்டஃதினொருமையைக்கூறல். (கவி) திரவாசனையோடெப்பொருள்களனுபவிக்கச்சேர்ந்தளவோ, தூருசிலதுவேசுகஞ்செய்யுஞ் சுகமேதளிக்குமதுவினாவில்,வெருவுகாலத்தானசிக்குமதனாற்றன்பம்விளை பொருட்டாம்,பெரியசுகதுக்கங்களுக்குப்பிரிவற்றிருக்கைப்பிரசித்தம். (இ-ள்) திரவாசனையோடு- திரமானவாசனையுடன்— எப்பொருள்களனுபவிக்கச்சேர்ந்தளவோ- யாதொருவஸ்துவனுபவிக்கப்படுதோ— தூருசிலதுவேசுகஞ்செய்யும்- சீக்கிரமாகவதுவேசுகத்தைக்கொடுக்கும்— சுகமேதளிக்கும்- யாதொருவஸ்துசுகத்தின்பொருட்டாகுதோ— அதுவினாவில்- அப்பொருள்சீக்கிரத்தின்— வெருவுகாலத்தானசிக்குமதனால்- பயங்கரமானகாலத்தினாசிக்கின்றபடியினால்— துன்பம்விளைபொருட்டாம்- துக்கமுண்டாகுநிமித்தமாம்—பெரியசுகதுக்கங்களுக்கு- மகத்தானசுகதுக்கங்களுக்கு—பிரிவற்றிருக்கைப்பிரசித்தம்- நீங்காதிருத்தல்பிரசித்தமாம் (எ-று)

(சரு) (அ-கை) இ-து. (கவி) நிருவாசனையினானுநேர்வாசனையினானாலும், பொருள்தானடையினதனாலேயின்பதுன்பம்பொருந்தாவாம், வரும்போதிரண்டுமொன்றாகவந்துவிளங்குஞ்சுகதுக்க,மருகாநின்றநாசத்திலவைகளிரண்டுமடங்கிடுமால். (இ-ள்) நிருவாசனையினாலும்- வாசனையிறந்தாயினும்—நேர்வாசனையினாலும்- தேய்ந்தவாசனையினாயினும்— பொருள்தானடையில்-(விடய)வஸ்துவையடைந்தால்—அதனாலின்பதுன்பம்பொருந்தாவாம்- அதனாற்சுகதுக்கமுண்டாகாது—சுகதுக்கம்- இன்பதுன்பங்கள்— வரும்போது- உதிக்கும்போது—இரண்டுமொன்றாகவந்து- இரண்டுமொருமித்துண்டாய்—விளங்கும்- ஸ்திதியடையும்—அருகாநின்றநாசத்தில்- குறைந்துகெடுமேபோதில்— அவைகளிரண்டுமடங்கிடும்- அச்சுகதுக்கங்களிரண்டுமொன்றாய்நசிக்கும்—(எ-று)[இ-உக-ம்]வாசனையின்றிச்செய்யுங்கன்மங்களிலுண்டாகாதசுகதுக்கங்களுக்குபட்சியின்சிறகைப்போலப்பிரிவில்லையென்பதாம். ✻

(சசா) (அ-கை.) வாசனையிறந்துசெய்யுங்கன்மங்கன்மமன்றெனல். (கவி) புந்திதணிந்தவாசனையாற்புரிகாரியமீண்டங்குரியா, வெந்தவிதையினுடல்காரணமுதலவெவ்வேறாய்விரிந்து, நந்துகருமகாரணங்களாட்டுமொருவன்செய்வோன்றான், முந்துபுசிப்போன்றானெனவனேமுன்வந்தடைவனவ்விடத்தே (இ-ள்)புந்தி- மனமானது— தணிந்தவாசனையால்- சீரணித்தவாசனையினால்—புரிகாரியம்- செய்யப்பட்டகன்மமானது— வெந்தவிதையின்- வறுபட்டவித்தைப்போல— மீண்டங்குரியா- திரும்ப(சுகதுக்கங்களா)புண்டாகாது—உடல்காரணமுதல- தேகேந்திரியங்கண்முதலிய— வெவ்வேறாய்விரிந்து- வேறுவேறாகவிரிந்து— காரணங்களைந்துகருமதாட்டும்- காரணங்களினாற்றிடமான(பேத)கன்மங்களுண்டாகும்— அவ்விட்டதுசெய்வோன்றான்- ஆங்(கக்காரணங்களுள்)சமைப்பவனாகவும்— முந்துபுசிப்போன்றான்- முன்புசிப்பவனாகவும்—எவனொருவன்- யாரொருவன்—முன்வந்தடைவன்- எதிரிடுவன்(எ-று)[இ-ம்]சாந்தமானவாசனையாற்பவகன்மநீங்குவதன்றியுமசம்பாவமுமுண்டாகாவென்பதாம்

(சஎ) (அ-கை) சீவன்முத்தன்கன்மநிவர்த்தியைக்கூறல். (கவி) பாவிப்பனயாவையினுமுளம்பற்றாதுயர்ந்தோன்றாரகையின், றேவிற்குளிர்ந்துநிறைந்தொளிர்வன் செய்யகதிரோன்றன்கதிரின், பூவிற்றொழிவினலைந்துழலும்பொத்தவுடலாமிலவுதனை, மேவுதொழிற்பஞ்சோடிப்போஞானக்காற்றால்வகைந்தொருபால் (இ-ள்.) பாவிப்பனயாவையினும்- பாவிக்கப்பட்டனவாகியவஸ்துக்களைத்தினும்— உளம்பற்றாது- மனம்பற்றாமல்— உயர்ந்தோன்- (அறிவி)லுயர்ந்தவன்— தாரகையின்றேவின்- சந்திரனைப்போல— குளிர்ந்து- (அகத்திற்) சீதளமாய்— செய்யகதிரோன்றன்கதிரின்- சிவந்தசூரியகிரணத்தைப்போல— நிறைந்தொளிர்வன்- பூரணமாகப்ரகாசிப்பன்— பூவிற்றொழிவினலைந்துழலும்- உலகவிபகாரங்களில்வருந்திச்சுழலாநின்ற—பொத்தவுடலாமிலவுதனை- நவத்துவாரமுள்ளதேகமென்னுமிலவமாத்திரில்— மேவுதொழிற்பஞ்சு- பொருந்திய(சஞ்சிதாகாமியமென்னும்)வினைப்பஞ்சானது— ஞானக்காற்றால்- அறிவென்னுஞ்(சண்ட)மாருதத்தினால்— வகைந்தொருபாலோடிப்போம்- வேகமாயொருபக்கத்திற்பறந்துபோம்—(எ-று) - - - - - - - - - - - - - - - - ✻

(சஅ) (அ-கை) ஞானமற்பமாயுதிக்கினுமகண்டமாய்வளருமெனல். (கவி) எண்ணமெல்லாம்பழகாமலாலேயிறக்கும்பிறப்போர்க்குக், கண்ணதானவிஞ்ஞானக்கலைதானொருகாற்றோன்றிடினும்,பண்ணுநல்லகழனிதனிற்பயின்றவித்துபலிப்பதுபோற், றண்ணமானவன்பாலேமிகவுமவளருஞ்சிறப்பாக. (இ-ள்.) பிறப்போர்க்கு- சனிக்கின்றசீவர்களுக்கு—எண்ணமெல்லாம்- மதிக்கின்றசகலஞானமனைத்தும்— பழகாமலால்- அடிக்கடியப்பியாசிக்காததினால்— இறக்கும்- மரிக்கும்— கண்ணதான- நேத்திரமாகிய— விஞ்ஞானம்- ஞானமுள்ள— கலைதான்- கல்வியானது—ஒருகாற்றோன்றிடினும்- ஒருபோதுண்டானாலும்— பண்ணும்- உழவுசெய்திருக்கின்ற— நல்லகழனிதனில்- நல்லவயலில்—பயின்றவித்துபலிப்பதுபோல்- கோத்தவிதையானதுபலங்கொடுப்பதுபோல— திண்ணமானவன்பால்- திடமுடையவனிடத்தில்—சிறப்பாக- மேன்மையாக—மிகவும்வளரும்- மிகவும்விருத்தியடையும்—(எ-று) ✻

(௪௯) (அ-கை.) ஆத்மசத்தையேசகத்தாகவிளங்குதெனல். (கவி) முழுதுவடிவமாயொன்று மாண்மாமுழுதுசத்தியினுங், செழுமுநதியிலுவரிகளிற்கிலாலம்போனின்றொளிரு, மொழிவினினைவின் பரப்பிலதாயொன்றுஞ்சற்பாவந்தன்னிற், றழுவுகூறு மாத்திரமா யுணர்வாய்ச் சகலசகங்களையும். (இ-ள்) முழுதுவடிவமாய்- எல்லாருபங்களாயும்— ஒன்றுமாண்மா- ஏகமாயுமிருக்கின்றவாத்மாவானது—செழுமுநதியில்- நிறைந்தவாற்றிலும்—உவரிகளில்- சமுத்திரங்களிலுமுள்ள—கிலாலம்போல்- நீரைப்போல— முழுதுசத்தியினும்- சகலசத்திகளிடத்திலும்— நின்றொளிரும்- இருந்துப்ரகாசிக்கும்— ஒழிவினினைவின்- நீங்காதவெண்ணத்தினது— பரப்பிலதாய்- சமுகமில்லாததாய்—ஒன்றும்- ஏகமாயிருக்கின்ற— சற்பாவந்தன்னில்- சற்பாவத்தில்— சகலசகங்களையும்- எல்லாவுலகங்களையும்— தழுவுகூறுமாத்திரமாய்- தழுவாநின்றபங்கினளவாக—உணர்வாய்- அறிவாய்— (எ-று) [இ-௩௧-ம்] கன்மநிவிற்தியுஞானவிருத்தியுஞ்சகத்தபின்னத்துவத்தையுமறிவித்ததாம். - - - - ※

(௫௰)(அ-கை) ஆத்மாவுக்கிச்சையுண்டாதலுமழிதலுங்கூறல் (கவி) என்றுமனுமீண்டுரைசெய்வானிசைந்தபுலன்போகத்தாசை, நின்றதெம்மட்டம்மட்டு நிகழ்சீவப்பேர்பெறுமான்மா, வொன்றுமவிவேகத்தாலவ்வாசையுண்டாந்தன்னாலே, யன்று நிருபாவிவேகத்தாலந்தவாசையழிவெய்தும் (இ-ள்) என்று- இப்படியென்றுசொல்லி— மனுமீண்டுரைசெய்வான்- மனுத்திரும்பவுஞ்சொல்லுவார்— இசைந்தபுலன்- இசைந்தவிடயமான— போகத்தாசை- போகவிச்சையில்— நின்றதெம்மட்டு- இருந்ததெந்தமட்டோ— அம்மட்டும்- அந்தமட்டும்— ஆன்மா- ஆத்மாவானது— நிகழ்சீவப்பேர்பெறும்- விளங்காநின்றசீவனென்னுநாமத்தையடையும்— ஒன்றுமவிவேகத்தால்- பொருந்தாநின்றவவிவேகத்தினால்—அவ்வாசையுண்டாம்- அந்தவிடயவிச்சையுண்டாகும்— நிருபா- அரசனே— தன்னாலேயன்று- தானேயுண்டாகமாட்டாது— விவேகத்தால்- விவேகத்தினால்— அந்தவாசையழிவெய்தும்- அவ்விச்சையானதுநாசமடையும்— (எ-று) - - - - - - - - - - - - - - - - - - - ※

(௫௧) (அ-கை.) ஆத்மாவுக்கிச்சையேபந்தமதன்விடுதியேமுத்தியெனல் (கவி) காதலென்றுபோமன்றுகலந்தசீவத்திறம்விட்டுத், தீதிலாதபரப்பிரமத்திறத்தையான்மாசேர்ந்திடுமாற், கேதமாகமேனின்றுங்கிழேயெய்துங்கிழ்நின்று.மேதமில்லாமேலேசென்றெய்துநெடுநாளிவ்வான்மா. (இ-ள்) காதலென்றுபோம்- இச்சையெப்பொழுதுநீங்குமோ— அன்று- அப்போது—கலந்தசீவத்திறம்விட்டு- கூடியசீவத்தன்மையைநீங்கி— தீதிலாத- குற்றமற்ற— பரப்பிரமத்திறத்தை- மேலானபிரமத்தின்றன்மையை—ஆன்மா- ஆத்மாவானது—சேர்ந்திடும்- அடையும்—இவ்வான்மா- இந்தவாத்மாவானது— நெடுநாள்- வெகுகாலம்— கேதமாக- துன்பமாக— மேனின்றுங்கிழேயெய்தும்- சுவர்க்கத்திலிருந்துநரகத்துக்குவரும்— கீழ்நின்றும்- நரகத்திருந்தும்—ஏதமில்லாமேலேசென்றெய்தும்- குற்றமற்றசுவர்க்கத்திற்செல்லும்— (எ-று) [இ-உ-கம்] இச்சாத்பாகம்வரவேண்டுமென்றறிவித்ததாம் - ※

(௫௨) (அ-கை) அசம்பாவமுள்ளவனிழிவுகூறுதல் (கவி) கனமார்பிறவிப்பெரும்பூட்டைக்கருத்தாங்கயிற்றிற்கடமாசே, லெனதீதிதற்குநானென்றேயிறுகும்பிராந்திவிவகார,நனிமோகத்திற்செறிபவர்யாரந்தநவைசேர்வஞ்சகரோ, தனிவேன்மன்னுகீழ்நின்றுங்கீழேசரிக்கத்தக்கவரோ. (இ-ள்) கனமார்- கூட்டமாயுள்ள—பிறவிப்பெரும்பூட்டை- பவமென்னும்பெரியவேற்றத்தினது— கருத்தாங்கயிற்றின்- சிந்தனையென்னுங்கயிற்றின்—கடமாசேல்- கடமாகாதே—ஈதெனது- இதென்னுடையது— இதற்குநானென்று- இதற்குநானேகருத்தாவென்று— இறுகும்பிராந்திவிவகாரம்- உறுதிப்படுத்துந்தொழிலாகிய—நனிமோகத்தில்- மிகுந்தமயக்கத்தில்—செறிபவர்யார்- நெருங்குபவர்களியாவர்— அந்தநவைசேர்- அக்குற்றத்தையடைந்திருக்கின்ற— வஞ்சகரோ- வஞ்சகரானவர்களே— தனிவேன்மன்னு- ஒப்பற்றவேலாயுதத்தையுடையவரசனே— கீழ்நின்றும்- கீழேயிருந்தும்— கீழேசரிக்கத்தக்கவர்- கீழேபோகத்தக்கவர்கள்— (எ-று) [இ-ம்.] அசம்பாவத்திற்கட்டுப்பட்டுமயங்குபவர்களேகீழுக்குங்கீழானசநநத்தையடைவார்களென்பதாம். - - - - - - - - - - - - - ※

(௫௩) (அ-கை) அசம்பாவமற்றவர்களினுயர்வுகூறல் (கவி) இதற்குநானீதெனக்கவன்மற்றிவனானென்றிடுமோக, விதத்தையுயர்புத்தியினாலேவிட்டோர்மேற்குமேற்செல்வோர், திதத்தவொளிகூரான்மாவைச்சிறிதுந்தாழாதுறப்பற்றி, யுதித்தசகத்தைத்தற்புரணவுருவமாகநோக்குதியால் (இ-ள்) இதற்குநான்- இதற்குநானுடையவனென்றும்— ஈதெனக்கு- இதெனக்குள்ளதென்றும்— அவன்- அவனென்றும்—இவன்- இவனெனறும்—நானென்றிடும்- நானென்றுஞ்சொல்லப்பட்ட— மோகவிதத்தை- மயக்கமானநானாவிதத்தை—உயர்புத்தியினால்- மேலானவறிவினால்—விட்டோர்- நீக்கினவர்கள்— மேற்குமேற்செல்வோர்- மேலுக்குமேலான (முத்தியிற்) செல்பவர்கள்— திதத்தவொளிகூர்- திரமானதனதுசுப்ரகாசமிகுந்த—ஆன்மாவை- ஆத்மஸ்வரூபத்தை—சிறிதுந்தாழாது- எவ்வளவுந்தவக்கப்படாமல்— உறப்பற்றி- பொருந்தும்படிபிடித்து— உதித்தசகத்தை- உண்டாகியவுலகத்தை—தற்புரணவுருவமாக- தனதுபூரணஸ்வரூபமாக—நோக்குதி- பார்க்கக்கடவாய்— (எ-று.)[இ-ம்] அசம்பாவத்தையறிவினாற்கெடுத்தவர்களேமேலுக்குமேலானமுத்தியையடைவரென்பதாம் - - ※

(௫௪) (அ-கை) சித்துருவமத்துவிதமாகவிளங்குமெனல் (கவி) என்றிப்படிதன்சித்துருவமிரண்டற்றுள்ளேதனித்தோன்று,மன்றிப்பவமபோய்ப்பரமேசனுகலாகுமயன்சிவன்மால், வென்றிக்குலிசத்தவனமுதலோர்செய்தவெல்லாமெய்ம்மையினு, லொன்றச்செறிசித்துருவுடைநான்செய்கின்றேனென்றுணர்வுறுவாய். (இ-ள்) என்று- எப்போது— இப்படி- இத்தப்ரகாரம்— தன்சித்துருவம்- தனதுஞானஸ்வரூபமானது— இரண்டற்று- தொய்தமின்றி— உள்தனித்தோன்றும்- அகத்திலொன்றுயுதிக்குமோ— அன்று- அப்போது— இப்பவமபோய்- இச்சநநநீங்கி— பரமேசனுகலாகும்- பரமேசுவரனுகலாம்— அயன- பிரமாவும்— சிவன்- உருத்திரனும்— மால்- விட்டுணுவும்— வென்றி-

வெற்றியுள்ள— குலிசத்தவன்முதலோர்- வச்சிராயுதத்தைபுடையவிந்திரனுமிவர்களாதியானவர்கள்—
செய்தவெல்லாம்- செய்யும்(பஞ்சகிருத்தியமுதலிய)வெவைவயும்— மெய்ம்மையினலொன்றி- தத்து
வத்திற்கலந்து— செறிசித்துருவுடைநான்- நிறைந்தஞானஸ்வரூபத்தைபுடையநானே— செய்கின்
றேனென்று- இயற்றுகிறேனென்று— உணர்வுறுவாய்- அறிவாய்—(எ-று.) [இ-ம்] சிவன்முதலி
யோரநுபவமும்மிதுவேயெனத்தெரிவித்ததாம். - - - - - - - - - - - - - - - ✻

(௫௫) (அ-கை.) ஞானதிஷ்டியின்பெருமையுரைத்தல் (சவி) யாதியாதெப்பொழுதெதிர்ந்தத
வற்றிலென்னேசொலப்பட்ட, தோதுமவையெல்லாந்தடைதீருணர்வின்விலாசமேநன்றாந், நீதிலறி
வுமாத்திரமாந்திறனுய்க்காலச்செயம்பண்ணி, கோதின்மனத்தோடிருப்பவன்சேர் குறைவில்சுகத்தொ
டேதுநிகரோ (இ-ள்) யாதியாது- எந்தவெந்த(தரிசனங்கள்)—எப்பொழுதெதிர்ந்தது- எப்போது
நேரிடுதோ— அவற்றில்- அத்தரிசனங்களில்— என்னேசொலப்பட்ட- எது(தத்துவமாகச்)சொல்லப்
பட்டதோ— ஓதுமவையெல்லாம்- சொல்லப்பட்டவவையனைத்தும்— தடைதீருணர்வின்- தடைய
ற்றஞானத்தினது—நன்றும்விலாசமே- இனிதானலீலையேயாம்— நீதிலறிவுமாத்திரமாந்திறனுய்- கு
ற்றமற்றசின்மாத்திரமானகுணத்தைபுடையவனுய்—காலச்செயம்பண்ணி- காலனைச்செயஞ்செய்து—
கோதின்மனத்தோடிருப்பவன்- குற்றமற்றமனதுடனிருப்பவன்— சேர்- அடையாநின்ற— குறை
வில்சுகத்தோடு- பூரணநந்தத்துடன்— எதுநிகர்- யாதொப்பாகும்—(எ-று.) [இ-ம்] எதிரிட்டசக
லவஸ்துவுஞ்சைதனயவிலாசமென்றறிந்தபூரணமனதுள்ளவன்சுகத்துக்கிணையாதென்பதாம். - - ✻

(௫௬) (அ-கை) செகத்தினிலக்கணஞ்சொல்லிச்சித்துருவமானமுத்தியைக்கூறல். (கவி) இல்லதன்
றுண்டல்லவறிவில்லாவுருவிலறிவுருவ, மல்லவான்மவுருவமலவயலன்றுலகமெனநினைவாய்ச், சொல்லு
மிந்தச்சுருபமுறத்தொடர்ந்தபகுதிபோயிறக்கும், புல்லுதேசங்காலமலப்புறத்தோர்நிலையன்றுயர்மு
த்தி (இ-ள்) உலகம்- சசமானது—இல்லதன்று- இல்லாததுமல்ல— உண்டல்ல- உண்டானதுமல்ல—
அறிவில்லாவுருவில்- அசித்துருவமுமல்ல— அறிவுருவமல்ல- சித்துருவமும்மல்ல— ஆன்மவுருவமல- ஆ
த்மஸ்வரூபமுமல்ல— அயலன்று- அநாத்மஸ்வரூபமுமல்ல— என நினைவாய்- என்று நினைப்பாய்—
சொல்லும்- சொல்லப்பட்ட— இந்தச்சுருபமுற- இச்சுருபத்தையடைய— தொடர்ந்தபகுதிபோயி
றக்கும்- (பழமையாய்த்)தொடர்ந்தமாயையானதிறக்கும்— உயர்முத்தி- மேலானமோக்ஷமானது—
புல்லுதேசங்காலமல- பொருந்தாநின்றதேசமுங்காலமுமல்லவாம்— புறத்தோர்நிலையன்று- புறம்
பானவொருஸ்திதியுமல்ல—(எ-று) [இ-ம்] இச்சகமற்தக்கிரியைகளைச்செய்வதனுலில்லதும், கற்பிதமா
கையாலுள்ளதும், விகாரமுளளவாதலாலறிவும், ப்ரகாசிக்கின்றபடியாலறியாமையும், பேதமாகத்தோ
ற்றுகின்றபடியாலாத்மரூபமும், ஆத்மாவைத்தவிரவில்லாதபடியாலயலுமல்லவெனக்கூறினதாம் ✻

(௫௭) (அ-கை.) சிவன்முத்தனிலக்கணங்கூறத்தொடங்கிசாத்திர வாசனைமுதலியயாவுநீங்கிச்சம
திருஷ்டியிற்சுகிப்பானெனல் (கவி) அகங்காரத்தினகமென்னுமோகமழிந்தாற்பாவனையா, மிகும்பே
ர்பெற்றபகுதியந்தம்விடாமொருவனேயவனுந், தொகுஞ்சாத்திரத்தின்பொருணினைவிற்றுவளுநாநா
விதவின்பம, புகுங்காவியவேட்கையுமனைத்துவிகற்பத்துயரும்பொருந்தாமல் (இ-ள்) அகங்காரத்தி
ன்- அசங்காரத்தினது— அகமென்னும்- நானென்கின்ற— மோகமழிந்தால்- மயக்கமானதுகெட்
டால்— பாவனையாம்- பாவனையென்கின்ற— மிகும்பேர்பெற்ற- மிகுந்தநாமத்தையடைந்த— பகு
தியந்தம்- மாயையின்முடிவு— விடாம்- மோக்ஷமாகும்—தொகும்- தொகுத்துச்சொல்லாநின்ற—
சாத்திரத்தின்- சாத்திரங்களினது— பொருணினைவில்- அருத்தபாவனையில்— துவளுநாநாவிதவின்
பம்- துவளாநின்றபலவிதமானசுகங்களில்— புகுங்காவியவேட்கையும்- ப்ரவெசிக்குங்காவியவிச்சை
யுமாகிய—அனைத்துவிகற்பத்துயரும்- எல்லாவேறுபாட்டின்றுன்பங்களும்—பொருந்தாமல்- அடை
யாமலிருக்கின்ற— ஒருவனேயவனும்- ஒருவனே(முத்தியைப்பெற்ற)வனுகும்— (எ-று) - - - ✻

(௫௮) (அ-கை )இ-து (கவி) அன்னுன்சமமாமழிவில்லாவான்மாவாய்நின்றின்பமுறு, மென்னுகி
னுமொன்றுடிப்பவனுமென்னுகினுமொன்றுண்பவனு, யுன்னுமெங்காகினுமொருபாலுறங்குவோனு
யாங்கவனே, பொன்னூர்பூமிமுழுதாளும்பூபாலனைப்போற்பொலிவுறுமால். (இ-ள்) அன்னுன்- அவ
ன்— அழிவில்லா- நாசமற்ற— சமமாம்- சமமாகிய— ஆன்மாவாய்நின்று- ஆத்மாவாகவிருந்து—இ
ன்பமுறும்- ஆநந்தத்தையடைவான்— என்னுகினுமொன்று- ஏதாகிலுமொன்றை— உடுப்பவனுய்-
தரிப்பவனுகியும்— என்னுகினுமொன்று- ஏதாகிலுமொன்றை—உண்பவனுய்- புசிப்பவனுகியும்—உ
ன்னுது- நனையாமல்— எங்காகினும்- எவ்விடத்திலாகிலும்— ஒருபால்- ஓரிடத்தில்— உறங்குவோனு
ய்- அறிதுயிற்செய்கின்றவனுயுமிருக்கின்ற— அவனே- அவன்றன்— பொன்னூர்பூமி- அழகியபூவுலகத்
தை— முழுதாளும்பூபாலனைப்போல்- சக்கரவர்த்தியைப்போல— பொலிவுறும்- ப்ரகாசிப்பன்—
(எ-று) [இ-உ-க-ம்] அஃம்பாவமுதலானபேதநீங்கிச்சமதிருஷ்டியிற்சகலகிரியையுஞ்செய்பவனே
யெதிரற்றசுகிடாய்விளங்குவனென்பதாம். - - - - - - - - - - - - - - - ✻

(௫௯) (அ-கை) கன்மத்யாகங்கூறல். (கவி) வருணுசிரமவாசாரவழிநூனடத்துநடைநீங்கி, யரு
காவலகின்றலையகன்றேயருட்கூடகன்றகேசரிபோ, னருபாவுரைகட்கெட்டரியோனேடிப்பிறக்குநிலை
நீத்தோ, மரூஉசோலையைச்சேர்ந்தவன்மழைபோயொளித்தநாளில்விண்டலம்போல் (இ-ள்) அரு
ங்கூடகன்ற- அரிய(விருட்புக்கூண்டியினின்று) நீங்கிய— கேசரிபோல்- சிங்கத்தைப்போல— நூன
டத்தும்- (கன்ம)சாஸ்திரங்கணடத்துகின்ற—வருணுசிரம்வாசாரவழி- வன்னச்சிரமதருமநெறியின்—
நடைநீங்கி- நடையைவிட்டு— அருகாவலகின்றலையகன்று- நசிக்கின்றசகத்தின்கணைநீங்கி—நருபா- அ
ரசனே— உரைகட்கெட்டரியோன- வசனங்களுக்கெட்டுதற்கரியவன்— நேடிப்பிறக்குநிலைநீத்தோ
ன்- (தனனைத்)தேடிப்பிறவியைநீக்கினவன்— மழைபோயொளித்தநாளில்- மேகமறைந்தசமர்க்கு

லத்திலுள்ள— விண்டலம்போல்- ஆகாயத்தைப்போல— ஒருசோபையைச்சேர்ந்தவன்- ஒப்பற்றசா
ந்தியையடைந்தவன்— (எ-று) [இ-ம்] வருணாச்சிரமதருமமுதலியவைகளையநுபவமாய்நீக்கினவனே
யொப்பற்றஞானப்ரகாசமாய்விளங்குவானென்பதாம். - - - - - - - - - - - - - - - *

(௬௰) (அ-கை) கருமபலம்விட்டவனிலக்கணங்கூறல். (கவி) தெளிவுசெம்பீரங்கள்கிரிசேர்ந்தபெ
ரியசுனைபோல்வன், களிகொள்பரமசுகச்சுவையாநந்தன்பாற்றானேகலங்காமல், லெளிதுசுகிப்பன்கருமப
லமெல்லாம்விட்டோனழிவின்றியொளிருநிறைவோன், ருவினைவேறொன்றுந்தாக்கானொன்றணுகான்
(இ-ள்) தெளிவு- தெளிவும்— செம்பீரங்கள்- ஆழமுமுள்ள— கிரிசேர்ந்த- மலையைச்சேர்ந்த— பெ
ரியசுனைபோல்வன்- பெரியகுளத்துக்கொப்பானவன்— களிகொள்- களிப்பையுடைய— பரமசுகச்சு
வையாம்- பிரமாநந்தவிரசமாகிய— தன்பாற்றானே- தன்னிடத்திற்றானே— கலங்காமல்- கலக்கமு
றாமல்— எளிதுசுகிப்பன்- எளிதாகரமிப்பவன்— கருமபலமெல்லாம்விட்டோன்- கன்மபலங்களனை
த்தையுநீக்கினவன்— அழிவின்றியொளிரும்- நசியாமற்ப்ரகாசிக்கின்ற— நிறைவோன்- பூரணனானவ
ன்— இருவினைவேறொன்றும்- இருவினைமுதலியவிகற்பங்களொன்றும்— தாக்கான்- தாக்கப்படாதவ
ன்— ஒன்றணுகான்- ஒன்றுஞ்சேராதவன்— (எ-று) [இ-ம்] பலாபேக்ஷையின்றிக்கருமஞ்செய்ப
வனேபரமசுகத்திற்சுகிப்பவனென்பதாம். - - - - - - - - - - - - - - - *

(௬௧) (அ-கை) அனைத்தும்பற்றியும்பற்றாதிருக்கின்றவிலக்கணங்கூறல் (கவி) பத்திபாய்ந்துட்
பற்றாதபளிங்குபோலக்கருமபலம், பத்திபாய்ந்துட்பற்றாதோன்பலநீண்மனிதருடனுறைந்தும், பத்
தியாலற்சித்தாலும்பகையாலுடலையரிந்தாலும், பத்திபாச்சலுற்றதுபோற்பயிலுமகிழ்வுதுயரறியான்.
(இ-ள்) பத்திபாய்ந்து- (பஞ்சவன்னங்கள்) பிரதிபலித்தும்— உட்பற்றாதபளிங்குபோல- உட்பிடிப்
பில்லாதபடிகமணியைப்போல— கருமபலம்- கன்மபலமானது— பத்திபாய்ந்து- ப்ரதிபலித்தும்—
உட்பற்றாதோன்- அகத்திற்பற்றாதவன்— பலநீண்மனிதருடனுறைந்தும்- அநேகமாகவிரிந்தநரர்க
ளுடன்கூடியும்— பத்தியாலற்சித்தாலும்- பத்தியினாலாராதனைசெய்தாலும்— பகையால்- விரோதத்தி
னால்— உடலையரிந்தாலும்- சரீரத்தையறுத்தாலும்— பத்திபாச்சலுற்றதுபோல்-ப்ரதிபலனத்தையடை
ந்ததுபோல— பயிலும்- சொல்லப்பட்ட— மகிழ்வுதுயரறியான்- சுகதுக்கங்களையறியமாட்டான்—
(எ-று) [இ-ம்] பலனையுத்தேசியாமற்செய்யுங்கருமத்தாற்சுகதுக்கத்தையடையானென்பதாம். - *

(௬௨) (அ-கை) சற்கருமஞ்செய்துஞ்செய்யாதவனெனல் (கவி) துதிகள்கடவுளோமங்கடொட
ர்பூச்சியன்பூசைகளில்லோன், விதிசெய்நீதியாசாரமேவப்படுவோன்மேவாதோ, னெதிருந்தன்னாலு
லகோர்களிறையும்வெருவாவகையிருப்போ, னுதிதமானவுலகத்திலொன்றால்வெருவாதுறைகிற்போன்.
(இ-ள்) துதிகள்- தோத்திரங்களும்— கடவுளோமங்கள்- தேவயாகங்களும்— தொடர்பூச்சியன்- தொட
ர்பாகப்பூசிக்கப்படுவோனும்— பூசைகள்- பூசைகளும்— இல்லோன்- இல்லாதவன்— விதிசெய்- (வேத)
விதிப்படிசெய்கின்ற— நீதியாசாரம்- நீதிநடையை— மேவப்படுவோன்மேவாதோன்- பொருந்தியும்
பொருந்தப்படாதவன்— எதிருந்தன்னால்- எதிரிடப்பட்டதன்னால்— உலகோர்கள்- சகத்திலுள்ளவ
ர்கள்— இறையும்வெருவாவகையிருப்போன்- எவ்வளவுமச்சப்படாதவண்ணமிருப்பவன்— உதிதமான
வுலகத்திலொன்றால்- உண்டானசகத்திலுள்ளவொன்றினாலும்— வெருவாதுறைகிற்போன்- பயப்படா
மல்வாசஞ்செய்பவன்— (எ-று) [இ-ம்] சீவன்முத்தனுக்கியல்பானநடையைக்கூறினதாம். - - - *

(௬௩) (அ-கை) சீவன்முத்தன்சரித்திரஞ்சொல்லியவனெங்ஙனமரிக்கினுமுத்தியேயடைவானெ
னல் (கவி) பற்றுமுனிவுபயஞ்சுகங்கள்பயிலாமெனினும்பயின்றிடினுஞ், சொற்றவெவர்க்கும்பிரமே
யத்தொடராமெனினுந்தன்பாலர், பெற்றபிரமேயத்துறினும்பெரியமனத்தோன்காசியிற்சாவுற்றபொ
ழுதுநாய்க்கெரிப்போருழைசாவுற்றினுமுறும்பதங்கள், (இ-ள்) பெரியமனத்தோன்- பூரணமனதுடை
யவன்— பற்றும்- ஆசையும்- முனிவு- கோபமும்— பயம்- அச்சமும்— சுகங்கள்- சந்தோடங்களு
மானவிவைகளில்— பயிலாமெனினும்- கூடாதவனானாலும்— பயின்றிடினும்- கூடினவனானாலும்—
சொற்றவெவர்க்கும்- முன்சொல்லப்பட்டயாவருக்குமுள்ள— பிரமேயத்தொடராமெனினும்- பிர
மேயத்தொடராதவனானாலும் — தன்பாலர்பெற்றபிரமேயத்துறினும்- நற்குழந்தைகளடைந்தபிரமே
யத்தையடைந்தவனானாலும்— காசியிற்சாவுற்றபொழுதும்- காசியிலிறந்தபொழுதும்— நாய்க்கெரிப்
போருழைசாவுற்றினும்- புலையர்வீட்டிலிறந்தாலும்— பதங்களுறும்- பரமபதத்தைப்பொருந்துவன—

(௬௪) (அ-கை) அகம்பாவமாலபந்தநீங்கியறிவாய்விளங்கினவனையாவருமாராதிக்கத்தக்கதெனல்.
(கவி) ஞானமடைந்தபொழுதிவனல்விடுற்றோன்மனமிறந்தோ, னீனமானவகம்பாவப்பிராந்தியன்
றோவிடர்பந்த, மானவிடாவதுமடமையந்தகாரங்கெடலன்றோ, மானமிருந்தவிவனைத்தின்மனிதர்பூ
சைசெயவேண்டும். (இ-ள்) ஞானமடைந்தபொழுதில்- சைதன்யத்தைப் பெற்றமாத்திரத்தில்—
இவனல்விடுற்றோன்- இவனல்லமோக்ஷத்தையடைந்தவன்— மனமிறந்தோன்- மனோநாசமானவ
ன்— இடர்பந்தம்- துன்பமுள்ளபந்தமாவது— ஈனமான்- இழிவாகிய— அகம்பாவப்பிராந்தியன்
றோ- அகங்காரமயக்கமல்லவா— ஆனவிடாவது- ஆகியமோக்ஷமாவது— மடமையந்தகாரங்கெ
டலன்றோ- அஞ்ஞானாந்தகாரங்கெடுவதல்லவா (வென்றறிந்த)— மானமிருந்தவிவனைத்தின்- மாட்சி
மையிலுயர்ந்தவிவ(வறிஞன்)வரின்— மனிதர்பூசைசெயவேண்டும்- புருடராராதிக்கவேண்டும் (எ-று)

(௬௫) (அ-கை) அவன்முமுட்சுக்களாராதிக்கத்தக்கவனெனல் (கவி) போற்றவணங்கப்பூசிக்கப்புக
ழவருந்திப்போய்க்காண, மாற்றவரியோனவனவன்வன்பிறவியறுப்போர்நகனவர்தஞ், சாற்றுமகத்தா
ற்றினத்தத்தாற்றவத்தாற்றானத்தாற்கிட்டா ஆற்றவறிவாற்பிறவியறுத்துயர்நதோன்பத்திதருமபயனே
(இ-ள்) வளபிறவியறுப்போர்க்கு- கொடியசநநங்களைக்கெடுப்பவர்களுக்கு— அவன்- அச்சீவன்முத்
தன்— அனவரதம்- சதாகாலம்— போற்ற- துதிக்கவும்— வணங்க- வணங்கவும்— பூசிக்க- ஆராதிக்

கவும்—புகழ- புகழவும்— வருந்திப்போய்க்காண- பிரார்த்தித்துப்போய்த்தரிசிக்கவும்— அர்நவரி யோன்- மிகவுமுரியவன்—எவன்-யாவன்—ஊற்றவறிவால்-சலனமில்லாதஞானத்தினுல்—பிறவிபறுத்துயர்ந்தோன்- பவத்தைநீக்கிமோக்ஷிக்கப்பட்டவனே—பத்தி-(அவனுக்குச்செய்யு)மன்பு—தரும்பயன்- கொடுக்கும்ப்ரயோசனமானது—சாற்றுமகத்தால்-சொல்லப்பட்டயாகங்களினுலும்—தீர்த்தத்தால்-நதிகளினுலும்—தவத்தாற்றானத்தாகிட்டா-தவங்களினுலுந்தானங்களினுலும்பெலியாது(எ-று) [இ-௩-௧-ம்]முத்திவிருப்பமுள்ளவர்களிச்சீவன்முத்தனைப்பூசித்ததையடையவேண்டுமென்பதாம் - ※

(௯௯) (அ-கை) பிரமனுபதேசித்தெழுந்தருளுதல் (கவி) பரிந்திவ்வாறுசற்பித்துப்பகவன்மனுவாம்பேர்விரிஞ்சன்,புரிந்துதனதுபொன்மனைபோய்ப்புக்கானிக்குவாகுவெனும், விரிந்தபுசழ்மன்னனுமந்தவழியேபற்றிநிலைநின்றான், வரிந்தகழற்காவிராமவெனவசிட்டமுனிவனருள்செய்தான்(இ-ள்) பரிந்திவ்வாறு-அன்புற்றிந்தவண்ணம்— சற்பித்துப்புரிந்து- போதித்து— பகவன்- பகவானான— மனுவாம்பேர்விரிஞ்சன்-மனுவென்னுநாமத்தையுடையபிரமாவானவர்— தனதுபொன்மனை- தனதுகனக(மயமானசத்தியலோகத்துலுள்ள)வாண்மனையில்—போய்ப்புக்கான்-போய்ச்சேர்ந்தார்— கழல்வரிந்தகாவிராம- வீரகண்டாமணியை வரிந்திருக்கின்றபாதத்தையுடையஸ்ரீராமா— இக்குவாகுவெனும்- இட்சுவாகுவென்கின்ற— விரிந்தபுசழ்மன்னனும்-மிகுந்தகீர்த்தியையுடையவரசனும்— அந்தவழியேபற்றி-அந்தத்திருஷ்டியையேபிடித்து— நிலைநின்றானென-(தனதாத்ம)நிச்சயத்திலிருந்தானென்று— வசிட்டமுனிவனருள்செய்தான்-வசிட்டமுனியானவர்சொன்னார்— (எ-று) [இ-ம்] பிரமவுபதேசத்தாலிட்சுவாகுவுஞ்சீவன்முத்திப்பதத்தையடைந்தனனென்பதாம் - - - - - - - - - - - ※

இட்சுவாகுகதை முற்றிற்று ஆ கதை சுக க்குக் கவிதை (௯௯௱௯௨)



# மானுவேடன்கதை.

(அ-கை) முற்சதையிற் றனதுவிசாரத்தாலடையர்கூடாமலாசிரியர்முகவிசாரத்தாலகம்பாவநீங்கிச்சர்வம்பிரமமயமென்னுமனுபவம்விளைந்ததைவிளக்கிமேற்றுரியானுபவத்தைவிளக்கும்பொருட்டுமிருகவியாதன்கதையை நிரூபிக்கிறார் - - - - - - - - - - - - - - ※

(௧) (அ-கை) அணிமாதிமுதலியசித்திகளில்லாதசீவன்முத்தருக்கற்புதமியாதெனவினவுதல் (கவி) வே, இந்தவாறிருக்கிற்சீவன்முத்தனுயினியதான, புந்திசேர்வனுக்கேதுபுதுமையாமதிசயந்தா, னந்தமில்பரத்தைக்கண்டோர்க்கதிகனேயென்றுகேட்ட, சுந்தரவிராமற்கந்தத்தொன்மறைவசிட்டன்சொல்வான் (இ-ள்)இந்தவாறிருக்கில்-இவ்வண்ணமிருந்தால்—சீவன்முத்தனுய்-சீவன்முத்தனுகி—இனியதான- இனிமையாயிருக்கின்ற— புந்திசேர்வனுக்கு- அறிவையுடையவிவனுக்குள்— புதுமையாமதிசயந்தான்- புதுமையானவியப்பானது— அந்தமில்- முடிவற்ற— பரத்தைக்கண்டோர்க்கு- பிரமத்தைதரிசித்தவர்களுக்கு— அதிகனே- அதிதனுகியவசிட்டமுனியே— ஏதுவென்றுகேட்ட- யாதென்றுகேட்ட— சுந்தரவிராமற்கு- அழகுள்ளவிராமனுக்கு— அந்தத்தொன்மறைவசிட்டன்சொல்வான- அப்பழமையானவேதத்தையுடையவசிட்டமுனிசொல்லுவார்— (எ-று) - - - - - - - - - - - ※

(௨) (அ-கை) ஆத்மாநந்தத்திலதிசயிப்பவனணிமாதிசித்திகளிலதிசயிக்கானெனல் (கவி) ஒப்பறுஞானபுந்தியொன்றிலேயதிசயிக்குந், தப்பறநிறைந்துசாந்தனுயவன்றன்பானிற்குஞ், செப்புமந்திரங்களேனன்புதந்திரஞ்சித்தியானோர்,கைப்படுவிண்போக்காதிகருமத்திற்புதுமையென்னே (இ-ள்) ஒப்பறுஞானபுந்தி- சமானமில்லாதஞானவானுடைய புத்தியானது—ஒன்றில்- ஒன்றான(வாத்மாவி)னிடத்தில— அதிசயிக்கும்- வியப்பையடையும்— தப்பறநிறைந்து- குற்றமில்லாமற்பூரணமாய்— சாந்தனுய்- உபசாந்தமுடையவனுய்— அவன்- அச்சீவன்முத்தன்—தன்பானிற்கும்- ஆத்மாவினிடத்திருப்பான்— செப்புமந்திரங்கள்- சொல்லப்பட்டமந்திரங்களும்— நோன்பு- தவங்களும்— தந்திரம்- உபாயங்களும்— சித்தியானோர்- சித்தித்தவர்களுக்கு—கைப்படும்- கைவசமாகின்ற— விண்போக்காதி- ஆகாயகமனமுதலிய— கருமத்திற்புதுமையென்னே- கன்மத்திலதிசயமென்ன— (எ-று) [இ-௨-௧-ம்] சிவபாவநீங்கிச் சிவமாவதற்கேதுவல்லாத வாகாயகமனமுதலிய வைபறவைத்தொழிலுக்கொப்பெனவதிசயிக்கானென்பதாம் - - - - - - - - - ※

(௩) (அ-கை.) சித்திமுத்தியினிலக்கணங்கூறல் (கவி) உலகாய்விரிந்தவிவராலுமொழுங்கால்விரிந்தவருத்தத்தாற், பலமாமணிமாதியும்பண்ணப்படுமாதலினுற்றனையறிந்தோர்க், கிலதாமிவர்க்கோர்விசேடமுளவிழிந்தமூடப்புந்திகள்போ, லலனுருவனெங்கணுமாசையறலாலிவனெஞ் சமலமாதாம். (இ-ள்) உலகாய்விரிந்த- சகமாகப்பரவிய— இவராலும்- இவர்களாலும—ஒழுங்கால்விரிந்த- முறைமையாகவிரிந்த— வருத்தத்தால்- ப்ரயாசையினுலும்—பலமாம்- பயனுயிருக்கின்ற— அணிமாதியும்- அணிமாமுதலிய (வஷ்டசித்திகளும்)—பண்ணப்படும்- செய்யப்படும— ஆதலினுல்- ஆகையால்—தனையறிந்தோர்க்கிலதாம- ஆத்மஞானிகளுக்கிச்சித்தியில்லையாம— இவர்க்கு- இந்தஞானிகளுக்கு— ஓர்விசேடமுள- ஒருவிசேடமுண்டாயிருக்கின்றது— இழிந்தமூடப்புந்திகள்போல்- இழிவுள்ளமூடமதிகளைப்போல— அலனுருவன்- அல்லாதவனுவன—எங்கணும- எவ்விடத்திலும— ஆசையறலால்-இச்சையற்றதினுல்— இவனெஞ்சு- இவனதுமனம— அமலமதாம்- நின்மலமாகும்—(எ-று) [இ-ம.]

மானசகிதத்தாலடைப்புமனிமாதிகித்திக்குமாயாசகிதத்தாலடையுமுத்திமிசவும்விசேடமாமென்பதாம்.

(ச) (அ-கை.) சீவன்முத்தரிலக்கணங்கூறல் (கவி) குறிதீர்வடிவாய்ப்பிறப்பிறப்பிற்கொடுநீள்காலமயக்கறலாற், பிரியாவின்பத்தறிஞனுக்குப் பேசுங்குறியிவ்வளவன்றே, வெறிகூராசைசினமோகம்விதனமுலோபமாபத்து, சிறிதாநிபுணநாளுமெனச்செப்பிவசிட்டன்மீண்டுரைப்பான் (இ-ள்) குறிதீர்வடிவாய்- (வருணாச்சிரமக்) குறிகளில்லாதவுருவமாய்— பிறப்பிறப்பில்- சநநமரணத்தில்— நீள்காலங்கொடு- அநேககாலங்கொண்டிருந்த— மயக்கறலால்- பிரமையானதுநீங்குதலினால்— பிரியாவின்பத்தறிஞனுக்கு- பின்னமற்றசுகபோதனுக்கு— பேசுங்குறி- சொல்லப்பட்டவடையாளமானது— இவ்வளவன்றே- இம்மட்டல்லவா— வெறிகூராசை- வாசனைமிகுந்தவிச்சையும்— சினம்- கோபமும்— விதனம்- துக்கமும்— உலோபம்- உலோபமும்— ஆபத்து- ஆபத்துமாகியவிவைகள்— நிபுணநாளும்- நிபுணமாகத்தினங்கடோறும்— சிறிதாமெனச்செப்பி- அற்பமாகத்தேய்ந்துபோகுமென்றுசொல்லி— வசிட்டன்மீண்டுரைப்பான்- வசிட்டமுனிதிரும்பவுஞ்சொல்லுவார்— (எ-று) [இ-ம்] காமக்குரோதாதியசகலகன்மங்களுமிறந்திருப்பதேயடையாளமாமென்பதாம் - - - - - - ※

(ரு) (அ-கை) சிற்ப்ரகாசமாய்விளங்கியசீவேஸ்வராளுக்குக்காரணமின்றெனல் (கவி) மறையோனொருவன்றன்னுடையமகிமைகடந்துசூத்திரனாய், முறைதீர்வதுபோற்சிவனெனமுளைத்தானீசன் சிருட்டிதொறு, நிறைநீடுயிர்களளவின்றிநிகழுமூலச்சித்தசைவாற், றுறைதோறவைதான் றோன்றிடுமாற்றொடர்காரணமிங்கிலதாகும் (இ-ள்) மறையோனொருவன்- ஒருபிராமணன்— தன்னுடையமகிமைகடந்து- தனதுபெருமையைவிட்டு— சூத்திரனாய்- சூத்திரனாகி— முறைதீர்வதுபோல்- மாபுநீங்குவதுபோல— ஈசன்- ஈசனானவன்— சீவனெனமுளைத்தான்- சீவனென்றுசொல்லும்படியுண்டாயினான்— சிருட்டிதொறும்- சிருஷ்டிகடோறும்— நிறைநீடுயிர்கள்- நிறைந்திருக்கின்ற நீண்டபிராணிகளானவை— அளவின்றிநிகழும்- மட்டில்லாமற்ப்ரகாசிக்கும்— மூலச்சித்தசைவால்- காரணமானவறிவின்சலனத்தினால்— துறைதோறு- வழிகடோறும்— அவைதான்றோன்றிடும்- அச்சீவர்களுண்டாகும்— தொடர்காரணம்- தொடராநின்றகாரணமானது— இங்கிலதாகும்- இவ்விடத்தில்லையாம் (எ-று)

(சு) (அ-கை) சீவர்கள்பிறத்தற்குக்காரணமுரைத்தல் (கவி) ஈசனிடைநின்றுற்பவமாயெழுந்தவுயிர்கடாஞ்செய்த, விசுகருமங்களினுமேலமேன்மேற்பிறவிகளைமேவுந், தேசமுடையாய்காரியகாரணத்தின்செய்தியிதுவாகு, மேசுபிறவிகருமமெனுமிரண்டினுக்குமிப்படியே (இ-ள்) ஈசனிடைநின்று- ஈஸ்வரனிடத்திலிருந்து— உற்பவமாய்- உண்டாகி— எழுந்தவுயிர்கள்- வளர்ந்தசீவர்கள்— தாஞ்செய்த- தாங்கள்செய்த— விசுகருமங்களினால்- விசாநின்றகன்மங்களினால்— மேன்மேல்- மேலுமேலும்— பிறவிகளைமேவும்- சநநங்களைப்பொருந்தும்— தேசமுடையாய்- தேசத்தையுடையஸ்ரீராமா— காரியகாரணத்தின்செய்தி- காரியகாரணத்தினொழுங்கு— இதுவாகும்- இதுவேயாகும்— ஏசு- பழிக்கத்தக்க— பிறவிகருமமெனும்- பவமுங்கருமமுமென்கின்ற— இரண்டினுக்குமிப்படியே- இரண்டிற்குமிந்தப்ரகாரமே— (எ-று) [இ-உ-க-ம்] சீவர்களுதித்தற்குக்காரணமின்றாயினுஞ்செனித்துமரித்தலுக்குக்கன்மசன்மமேயொன்றுக்கொன்றுகாரணமாயிற்றென்பதாம் - - - - - - - - ※

(எ). (அ-கை.) அகாரணமாயுண்டானசீவர்களுக்குப்பின்வந்தகாரணங்களைக்கூறுதல். (கவி) பரமமதனில்காரணத்தாற்பரந்தவுயிரெல்லாமுண்டா, விரவுமதற்பின்பவர்க்கெல்லாமிகத்தாஞ்செய்தகருமங்க, ளுரியசுகதுக்கங்கடமக்குறுகாரணமாந்தனையறியாப், பிரமைதனிற்சேர்சங்கற்பப்பேசுங்கருமங்களின்மூலம் (இ-ள்) பரமமதனில்- பிரமபதத்திலிருந்து— அகாரணத்தால்- நிஷ்காரணமாய்— பரந்தவுயிரெல்லாமுண்டாம்- விரிந்தசீவர்களனைவருமுதிக்கும்— விரவுமதற்பின்பு- உண்டானதன்பின்பு— அவர்க்கெல்லாம்- அவ்வுயிர்களனைவர்க்கும்— மிகத்தாஞ்செய்த- மிகவுந்தாங்கள்செய்த— கருமங்கள்- கன்மங்களானவை— உரியசுகதுக்கங்கடமக்கு- உரிமையானசுகதுக்கங்களுக்கு— உறுகாரணமாம்- பொருந்துகின்றகாரணமாகும்— தனையறியா- ஆத்மாவையறியாத— பிரமைதனில்- மயக்கத்தில்— சேர்சங்கற்பம்- உண்டானசங்கற்பமானது— பேசுங்கருமங்களின்மூலம்- சொல்லப்பட்டகன்மங்களினதுகாரணமாகும்— (எ-று) [இ-ம்] பிரமப்ரதிபாமாத்திரமாயுண்டாயிருக்கின்றசீவர்கடாஞ்செய்யுஞ்சங்கற்பத்திற்கருமமுங்கருமத்திற்சுகதுக்கங்களுமுண்டாமென்பதாம். - - - ※

(அ) (அ-கை.) சங்கற்பத்தைக்கெடுக்கவேண்டுமெனல். (கவி) பந்தநிதானஞ்சங்கற்பமன்றோவதுநீபற்றறுப்பாய், முந்துசங்கற்பந்தவிர்ந்தான்முத்தியதுவாமதுதன்னைப், புந்தியதனாற்பரிசயிப்பாய்ப்பொருளும்பொருள்கொள்பவனுமுறின், மைந்தமெள்ளவெப்போதுமறவாதொழிப்பாய்சங்கற்பம் (இ-ள்) பந்தநிதானம்- பந்தத்துக்காதிகாரணமானது— சங்கற்பமன்றோ- சங்கற்பமல்லவா— அதுநீபற்றறுப்பாய்- அதைநீபற்றில்லாமற்கெடுப்பாய்— முந்துசங்கற்பந்தவிர்ந்தால்- முதன்மையானசங்கற்பமொழிந்தால்— முத்தியதுவாம்- மோக்ஷமதுவேயாகும்— அதுதன்னை- அச்சங்கற்பநாசத்தை— புந்தியதனால்- அறிவினால்— பரிசயிப்பாய்- பழக்கஞ்செய்வாய்— பொருளும்- விடயமும்— பொருள்கொள்பவனும்- விடயத்தைக்கிரகிப்பவனும்— உறில்- வந்தால்— மைந்த- குழந்தாய்— மெள்ள- மெதுவாக— எப்போதும்- எக்காலமும்- சங்கற்பம்- சங்கற்பத்தை— மறவாதொழிப்பாய- மறவாமற்கெடுப்பாய்— (எ-று) [இ-ம்] பந்தத்துக்குக்காரணமானசங்கற்பத்தையெப்போதுங்கெடுக்கவேண்டுமென்பதாம். - - - - - - - - - - - - - - - - - - - - - ※

(கூ) (அ-கை) இச்சாத்யாகமேமுத்தியெனக்கூறுதல் (கவி) கொள்ளும்பொருளாகவும்வேண்டா கொள்வோன் வடிவாகவும்வேண்டா, வெள்ளுங்கருத்தெல்லாநீக்கியெதுஞ்சடித்ததுவாவாய், நள்ளும்பொருளொன்றினையிந்தநாடும்பொறிகளுறவிலக்க, தெள்ளும்பற்றுள்ளதுபந்தஞ்சிறக்குமபற்றில்லதுமுத்தி (இ-ள்) கொள்ளும்- கிரகிக்கப்படுகின்ற— பொருளாகவும்வேண்டா- விடயமாகவும்வே

ண்டாம்— சொல்வோன் - கிரிகிப்பவனுகியனூதாவின்— வடிவாகவும்வேண்டா - உருவமாகவும்வேண்டாம் - என்றும் - நித்திக்கின்ற— கருத்தெல்லாநீங்கி - சங்கற்பங்களனைத்தையுங்கெடுத்து— எதுசேடித்தது— எதுமிஞ்சினதோ— அதுவாவாய் - அதுவேயாவாய்— நன்றும்பொருளொன்றினை - விரும்பப்பட்டவொருவிடயார்த்தத்தை— இந்தநாடும்பொறிகளுநில் - இந்நாடாநின்றபஞ்சேந்திரியங்களையுமானால்— ஆங்குதெள்ளும்பற்றுள்ளதுபந்தம் - அவ்விடத்திற்றெள்ளாநின்றவாசையையுடையதேபந்தமாகும்—சிறக்ம்மபற்றில்லது சிறக்காநின்றபற்றில்லாததே—முத்தி - மோக்ஷமாம்—(எ-று.)

(௰) (அ-கை) இச்சையற்றமுங்கூடாதெனல் (கவி) அற்பமுனக்கொன்றினிதாகிலதனுற்பிறப்பிலகப்பட்டாய், பொற்பவுனக்கொன்றினுமினிமைபூணுதென்னிற்பிறப்பகன்றாய், நிற்பநடப்பப்பொருட்டிரளினினக்குத் திரணமுதலாகத், தற்பமுறுபொன்முடிவாகச் சற்றுமினிமையுறவேண்டாம். (இ-ள்) அற்பம் - அற்பமாவது— உனக்கொன்றினிதாகில் - உனக்கொரு(வஸ்)துவினிட்டமானால்—அதனுற்பிறப்பிலகப்பட்டாய் - அவ்விச்சையாற்பவத்திலகப்பட்டாய்—பொற்ப - அழகையுடையஸ்ரீராமா— உனக்கொன்றினும் - உனக்கொருவஸ்துவிலும்— இனிமைபூணுதென்னில் - இன்பமடையாதென்றால்— பிறப்பகன்றாய் - பவத்தைநீங்கினாய்— நிற்பநடப்ப - சராசரமாகிய— பொருட்டிரளின் - வஸ்துகூட்டங்களில்— நினக்கு - உனக்கு— திரணமுதலாக - துரும்புமுதலாக—தற்பமுறுபொனமுடிவாக - மேலானசனகமந்தமானவஸ்துக்களில்—சற்றுமினிமையுறவேண்டாம் - கொஞ்சமும்விருப்புறவேண்டாம் (எ-று)[இ-உ-க-ம்]முற்றும்பற்றறுத்ததேமுத்தியாதலாலொன்றையுமிச்சிக்கவேண்டாமென்பதாம்.

(௰௧) (அ-கை) பற்றறச்செய்யுங்கன்மமசம்பாவமாகாவெனல் (கவி) பற்றிலாதென்னுண்ணுதியென்பண்ணுநின்றாயெதைவிடுதி, யுற்றசெய்வோன்புசிப்போனன்றுபசாந்தியனிமதிமான்போன், மற்றுநல்லோர்சென்றபொருட்கிரங்கார்வருவமதித்தெண்ணார், முற்றுநிகழ்காலப்பொருளைமுறையாலெய்திக்கைக்கொள்வார் (இ-ள்) பற்றிலாது - ஆசையில்லாமல்— என்னுண்ணுதி - எதைப்புசிக்கின்றாய்— என்பண்ணுநின்றாய் - எதைச்செய்கின்றாய்— எதைவிடுதி - எதைவிடுகின்றாய்— உற்றசெய்வோன் - பொருந்தினகருத்தாவும்— புசிப்போன் - போக்தாவும்— அன்று - அல்ல— நீ - நீயே— உபசாந்தியன் - உபசாந்தத்தையுடையவன்— மதிமான்போன் - மனமிறந்தவனுகும்— மற்றுநல்லோர்.. பின்னுஞ்சத்துக்கள்— சென்றபொருட்கிரங்கார் - போனபொருளுக்கிரங்கமாட்டார்கள்— வருவமதித்தெண்ணார் - வருவனவாகியபொருளைமதித்துநினையார்கள்—முற்றும் - முழுதும்— நிகழ்காலப்பொருளை - வர்த்தமானகாலத்துப்பொருளை— முறையாலெய்தி - ஒழுங்காகவடைந்து—கைக்கொள்வார் - கைவசப்படுத்துவார்கள்— (எ-று) - - - - - - - - - - - - - - *

(௰௨) (அ-கை) மனதைமனதினாற்கெடுக்கவேண்டுமெனல் (கவி) மதமாமோகமையன்முதன்மனத்திற்பிணித்தகயிறுகளாந், திதமாமனத்தைமனத்தாலேசேதித்திடலாமறவோரா, விதமாநெடுங்கூர்விவேகத்தாலிரும்பாலிரும்பையறுப்பதுபோல், விதமாமனதைமனத்தாலேவிப்பாய்பிறவிமயக்கறவே (இ-ள்) மதம் - செருக்கும்—மாமோகம் - மகாமோகமும்—மையல் - இச்சையும்— முதல் - முதலானவைகள்— மனத்திற்பிணித்த - மனத்திற்கட்டிய— கயிறுகளாம் - பாசங்களேயாம்— திதமாமனத்தை - திரமாகியமனதை— மனத்தால் - விவேகமனத்தினுல்— அறிவோரால் - அறிஞர்களால்— சேதித்திடலாம் - கெடுத்துவிடலாம்—இதமாம் - உரிமையான— நெடுங்கூர்விவேகத்தால் - நீண்டமகாவிவேகத்தினுலும்— இரும்பாலிரும்பையறுப்பதுபோல் - அய(வர)த்தினலயத்தைக்கெடுப்பதுபோல— விதமாமனத்தை - நாநாவிதமானமனதை—மனத்தாற்பிறவிமயக்கறவிப்பாய் - ஒருப்பட்டமனதினுற்சுறுநமயக்கந்திரக்கெடுப்பாய்—(எ-று) [இ-உ-க-ம்] மனமிறந்தசம்பாவநீங்குமுபாயமறிவித்ததாம்.

(௰௩) (அ-கை) சிவனுக்குள்ளமூன்றுவடிவமுணர்த்தல் (கவி) அழுக்கையழுக்காற்கழுவுவர்கொலம்பையம்பாற்றடைசெய்வர், வழுக்குநஞ்சையெதிர்நஞ்சான்மாற்றுகிற்பர்மதியுடையோ,ரொழுக்கமுறுமூன்றுளசிவர்க்குபயந்தூலசூக்கமென, விழுக்கமாமொன்றுயர்பரமாமிதுசேர்ந்தந்தவிரண்டொழிப்பாய் (இ-ள்) மதியுடையோர் - அறிவுள்ளவர்கள்— அழுக்கை - (துகிலின்) களங்கத்தை— அழுக்காற்கழுவுவர் - (உவர்மண்முதலியகளங்கத்தினுற்) கழுவுவார்கள்— கொல் - கொலைசெய்கின்ற— அம்பை - (அஸ்திரமா)ஸ்திரத்தை— அம்பாற்றடைசெய்வர் - (வரு)ஸ்திரத்தினுற்றடுப்பார்கள்— வழுக்குநஞ்சை - (நின்றும்)வழுவாகியவிடத்தை—எதிர்நஞ்சால் - அவிழ்தமாகியவிடத்தினுல்—மாற்றுகிற்பர் - நீக்குவார்கள்(போல)— ஒழுக்கமுறுசிவர்க்கு - உயர்வுள்ளசிவனுக்கு— மூன்றுள - மூன்றுவடிவமுண்டு— உபயம் - இரண்டு— தூலசூக்கமெனவிழுக்கமாம் - தூலமென்றுஞ்சூக்குமமென்றுமிழிவுள்ளதாம்— ஒன்றுயர்பரமாம் - ஒன்றுமேலானபிரமமாம்—இதுசேர்ந்து - இப்பிரமத்தைபடைந்து— அந்தவிரண்டொழிப்பாய் - அத்தூலசூக்குமமானவிரண்டையுநீக்குவாய்— (எ-று) - - - - - - - - - *

(௰௪) (அ-கை) அவைகளிற்றூலஞ்சூக்குமமெனனுமிரண்டுவடிவினிலக்கணங்கூற (கவி) மேகமனையாய்கைகால்கண்டேவுமிந்தவுடலுறுமே, போகமுண்ணச்சிவனுக்குப்பொருந்துந்தூலவுருவாகும், பாகமருவுசங்கற்பமயமாய்ப்பவபாவனைபண்ணுஞ், சோகமணுஞ்சிவனுக்குருவாஞ்சூக்கவாதிவாகியமே. (இ-ள்) மேகமனையாய் - முகிலுக்கொப்பானஸ்ரீராமா— கைகால்கண்டேவு - கரசரணநேத்திரமும்மேவிய— இந்தவுடலுறுமே - இச்சரீரமே— போகமுண்ண - போகத்தையனுபவிக்க— சிவனுக்கு - புமானுக்கு— பொருந்து - பொருந்திய— தூலவுருவாகும் - தூலசரீரமாகும்— பாகமருவு - பிரிவுள்ள— சங்கற்பமயமாய் - சங்கற்பாகாரமாய்— பவபாவனைபண்ணும் - சம்சாரபாவனையைச்செய்கின்ற— சோகமணும் - துன்பமுள்ளமனமானது— சிவனுக்கு - ஆத்மாவுக்கு— சூக்கவாதிவாகியம் - சூட்சுமமானவாதிவாகிய— உருவாம் - வடிவமாய்—(எ-று.) - - - - - - - - - - - - - - *

(௰௫) (அ-கை) மூன்றாவதாகியவடிவினிலக்கணங்கூறல். (கவி) மெய்யாய்மூலமீறின்றிவிகற்

யமறுசின்மாத்திரமே, மொய்பார்சீவன்பாவடிவாமூன்றுருவதுமுண்டகம்போற், கையாய்சுத்ததுரிய பதங்கண்டாயிதுவேயிதிலமுந்தி, மைபார்முதற்சொல் வடிவிரண்டு மாற்றியவைநா னெனவேண்டா. (இ-ள்) மெய்யாய்- தத்துவமாய்—மூலமீறின்றி. ஆதியந்தமில்லாமல்—விகற்பமறுசின்மாத்திரமே- வேறுபாடில்லாதஞானமாத்திரமே— மொய்யார்சீவன்- நிறைந்தசீவசமுகத்துக்கு— மூன்றுருவது- மூன்றுவதான— பரவடிவாம்- பிரமஸ்வரூபமாம்—முண்டகம்போல்- தாமரைமலரைப்போல—கையாய்- கரங்களையுடையஸ்ரீராமா— சுத்ததுரியபதம்- பரிசுத்தமானதுரியபதமானது— இதுவேகண்டாய்- இதுவேயாம்— இதிலமுந்தி- இத்துரியபதத்தின்மூழ்கி— மையார்- களங்கமுள்ள— முதற்சொல்வடிவிரண்டும்— முன்சொன்னவிரண்டுவடிவங்களையும்— மாற்றி- கெடுத்து— அவை- அவ்விரண்டையும்— நானெனவேண்டாம்- நானென்றுசொல்லவேண்டாம்— (எ-று) [இ-கூ-க-ம்] ஆத்மாவுக்குப்போகநிமித்தமுண்டானதூலதேகத்தையும்பவபாவனைசெய்கின்றசங்கற்பமாகியசூக்குமதேகத்தையுந்தள்ளியாதிமத்யாந்தறகிதசின்மாத்திரமானதுரியமேதனதுபரவடிவமாகத்தியானித்தவித்தாமயமானகாரணதேகத்தைக்கெடுக்கவேண்டுமென்பதாம் - - - - - - - - - - - - - - ※

(௬௬) (அ-கை) துரியவிலக்கணமியாதெனவினவுதல். (கவி) என்னுமுனியையிராமனும்பார்த்தெந்தாய்நனவுகனுச்சுழுத்தி, துன்னுமதுவாயினமூன்றிற்றோன்றுமதுவாந்துரியத்தை, புன்னிவிசேடமுறவுரைப்பாயுயர்ந்தமுனிநாயகவென்ன, மன்னுமமுதமழைபோலும்வாக்கால்வசிட்டமுனியருள்வான் (இ-ள்) என்னுமுனியை- இப்படியென்றுசொல்லியவசிட்டமுனியை— இராமனும்பார்த்து- ஸ்ரீராகவனுநோக்கி—எந்தாய்- எனதுபிதாவே—நனவுகனுச்சுழுத்தி- சாக்கிரசொப்பனசுழுத்திகள்—துன்னுமதுவாயினமூன்றில்- நெருங்கியவவ்வவத்தைகளாயிருக்கின்றமூன்றில்— தோன்றும்- தோற்றுகின்ற— அதுவாந்துரியத்தையுன்னி- அப்பிரமமாயிருக்குந் துரியபதத்தைநினைந்து— விசேடமுற- விசேடம்பொருந்த— உயர்ந்தமுனிநாயக- மேலானமுனிசிரேட்டரே— உரைப்பாயென்ன- சொல்லுவாயென்றிராமன்கேட்க— மன்னுமமுதமழைபோலும்- நிறைந்தவமுதவருடத்தைப்போலும்— வாக்கால்- வசனத்தினால்— வசிட்டமுனியருள்வான்- வசிட்டமுனிசொல்லுவார்— (எ-று) ※

(௬௭) (அ-கை) துரியவிலக்கணங்கூறல் (கவி) அகமென்பதுமென்னுதநுவுமுளதுமிலதுமறவிட்டு, நிகழுஞ்சமமாய்ப்பற்றறத்தன்னிலைக்கேநிற்றற்றுரியமதாந், தருதன்னிலையாய்ச்சமமாகிச்சகத்தின்றொழிற்குச்சான்றாகி, புகலசீவன்முத்தியுமாகிப்பொருகற்பனைதீர்நிலைதுரியம் (இ-ள்) அகமென்பதும்- நானென்பதும்— என்னுதநுவும்- நானென்னுதநுவும— உளதுமிலதும்- உள்ளதுமில்லாததுமாகியவிவைகளை— அறவிட்டு- ஒருங்கேநீக்கி—நிகழுஞ்சமமாய்- விளங்குகின்றசமத்துவமாய்— பற்றற- இச்சையறும்படி— தன்னிலைக்கேநிற்றல்- ஆத்மநிச்சயத்திலிருத்தல்— துரியமதாம்- துரியமாகும்- தருதன்னிலையாய்- மேலானவாத்மநிச்சயமாகியும— சமமாகி- சமமாகியும்— சகத்தின்றொழிற்கு- உலகத்தினதுகிரியைகளுக்கு— சான்றாகி- சாட்சியாகியும்— புகல்சீவன்முத்தியுமாகி- சொல்லப்பட்டசீவன்முத்தியாகியுமிருக்கின்ற— பொருகற்பனைதீர்- பொருதுகின்றசகற்பனைகணீங்கிய— நிலைதுரியம்- நிலையேதுரியபதமாம்— (எ-று) [இ-ம்] ஆசமூன்றுமவத்தைமூன்றுமபிமானமூன்றுமாகியவொன்பதுடன்கூடிவெளிமுகமாயிருந்துவிடயசுகஞ்சுகிக்குமபோது சீவசிதாபாசனென்றுமிவைகளைக்கற்பனையென்றறிந்திவைகளிற்செல்லாமற்றனித்திருக்கும்போதுசீவனென்றுந் தனதானந்தத்தையனுபவிக்கும்பொருட்டகமுகத்திற் சென்றவைத்திற்குஞ்சாக்ஷியாய்நிற்குமபோது கூடஸ்தனென்றுமிங்ஙனம்விளங்குவதுசீவதுரியமென்று மிங்ஙனமண்டங்களின்விளங்குதலீசுவரதுரியமென்றும் மண்டபிண்டங்களிலிங்ஙனம்பூரணமாகவிளங்குதல், பிரமதுரியமென்றுமிவைகளோடுங் கூடியுங்கூடாமற்றற்பிரகாசமாயாதுயாதெப்படி யெப்படியோவதுவதப்படி யப்படியாய்விளங்குங்குருதுரியமென்பதைச்சுருக்கியகம்பாவநீங்கிச்சமதிருஷ்டியாற்சர்வசாக்ஷியாயிருத்தலேதுரியமெனக்கூறினதாம்.

(௬௮) (அ-கை) இ-து. (கவி) இதுதானனவுகனவல்லவிடர்சங்கற்பமிலாமையினாற், பொதுவாஞ்சுழுத்திதானன்றுபோதமின்மைதீர்தலினாற், சதுராவித்தச்சகநன்றுநதனதுநிலைக்கேசமித்திறக்கு, முதுஞானிகட்கிங்கிதுதுரியமூடர்க்குலகந்திரநிலையாம் (இ-ள்) இடர்சங்கற்பம்- துன்பமாகியசங்கற்பமானது— இலாமையினால்- இல்லாததினால்— இதுதானனவுகனவல்ல- இதுசாக்கிரமுஞ்சொற்பனமுமல்ல— போதமின்மைதீர்தலினால்- சாட்சியமில்லாதபடியினால்— பொதுவாஞ்சுழுத்திதானன்று- சாதாரணமானசுழுத்தியுமல்ல— சதுரா- சதுரானஸ்ரீராமா— இந்தச்சகம்- இவ்வுலகமானது—நன்றும்- நன்மையாகிய— தனதுநிலைக்கு- ஆத்மாவினிடத்தில்—சமித்திறக்கும்- சீரணித்துக்கெடும்— முதுஞானிகட்கு- முதிர்ந்தஞானிகளுக்கு— இங்கிதுதுரியம்- இவ்விடத்திலிதுவேதுரியமாகும்—மூடர்க்கு- மூடர்களுக்கு— உலகம்- சகமானது— திரநிலையாம்- திடநிலையாகும்—(எ-று). [இ-ம்] இத்துரியமவத்தாத்திரயமனவெளதிகமுமதற்குக்காரணமானபஞ்சபூதமுமமன்றென்பதாம் - - ※

(௬௯) (அ-கை) இத்துரியமடையுமிலக்கணங்கூறியிஃதடைந்தவரிலக்கணங்கூறத்தொடங்கல். (கவி) யானுமென்னமற்சமத்தானெய்திச்சித்தமொருங்காலு, மானுவினைசெய்யாதபடியாக்கிற்றுரியநிலைநிற்கு, ஞானீதனுங்கிழவோனென்னுஞானதனிமேய, மேனுடைந்ததொருகதைகேட்பாய் மேதைகளின்மிக்கோய் (இ-ள்) யானுமென்னமற்- நானெனனென்றநினைவானதற்றால்— சமத்தானெய்தி- சமத்துவத்தையடைந்து— சித்தம்- மனதை —ஒருங்காலும- ஒருபோதும— ஆனுவினை- நீங்காதவிதாதிலை— செய்யாதபடியாகில்- செய்யாதவிதஞ்செய்தால்— துரியநிலைநிற்கும- துரியநிலையுண்டாயிருக்கும— ஞானீதனுங்கிழவோன்- ஞானத்தனுகியதலைவன்— என்னும்- நீயானும்— ஞானதனிமேவமேனுடைந்தது- ஞானமிகுமபொருதற்காலத்திலடைந்ததாகிய— ஒருகதை- ஒருகதையை—மேதைகளின்மிக்கோய்- அறிவின்மிகுந்தஸ்ரீராமா— கேட்பாய்- கேட்கக்கடவாய் (எ-று).

(௨௰) (அ-கை) துரியதிருஷ்டியுள்ளவர்க்கு விடயதிருஷ்டியையின்றுவதல். (கவி) பெரியவடவியொன்றிடையோர் பெரியமுனிவன்மகாமவுனம், புரியுநிலையோனவன்றனையோர்பொருவில்வேடன்வந்தணுகி, யெரியுமென்கைக்கணைபட்டோடிங்கோர்நவ்வியோடியதாற், றெரியவஃதெங்கென்றதெனச் செப்புமுனிவவெனக்கேட்டான் (இ-ள்) பெரியவடவியொன்றிடை - மகத்தானவோராரணியத்தில் — ஓர்பெரியமுனிவன் - ஒருமகாதபசியானவர் — மகாமவுனம் - மகாமவுனத்தை — புரியுநிலையோன் - விரும்புகின்றநிலையையுடையவன் — அவன்றனை - அந்தமுனிவனை — ஓர்பொருவில் - ஒருபுத்தஞ்செய்கின்றவில்லையையுடைய — வேடனணுகிவந்து - வேடனானவனெருங்கிவந்து — எரியுமென்கைக்கணைபட்டோடு - எரியாநின்றவென்கையம்பானதுபட்டுவருந்தி — இங்கோர்நவ்வியோடியது - இவ்விடத்தோருமானோடிவந்தது — அஃது - அந்தமான் — எங்ககன்றதென - எவ்விடத்திற்போயிற்றென்று — முனிவ - தபசியே — தெரியச்செப்புமெனக்கேட்டான் - தெரியச்சொல்லுமென்றுகேட்டான் (எ-று)*

(௨௧) (அ-கை) விடயத்தைவினவத்துரியத்தைக்கூறுதல் (கவி) கேட்டகிராதன்றனையந்தக்கேடின்முனிபார்த்தினியோனே, காட்டிலுறைவோர்சமநிலைமைக்கண்ணுமுனிவர்கணநாங்க ணாட்டுவிவகாரம்புரியுநவையாங்காரமாகிலனுங் கூட்டுபொறியின்றொழிலெல்லாநசொள்ளுமனஞ்செய்குவதன்றே. (இ-ள்) கேட்டகிராதன்றனை - இப்படியென்றுகேட்டவேடனை — அந்தக்கேடில்முனிபார்த்து - அக்களங்கமற்றதபசியானவர்பார்த்து — இனியோனே - நற்குணமுள்ளவனே — காட்டிலுறைவோர் - கானகத்தில்வசிப்பவர்கள் — சமநிலைமைகண்ணும் - சமநிலையான திருஷ்டியையுடையவர்களாயிருக்கின்ற — நாங்கள் - யாங்கள் — முனிவர்கணம் - தவசிகள்கூட்டம் — நாட்டுவிவகாரம்புரியும் - சகத்தின்றொழிலைச்செய்கின்ற — நவையாங்காரநாமாகிலம் - குற்றமுள்ளவகங்காரம்யாங்களாகமாட்டோம் — கூட்டுபொறியின் - (விடயத்திற்)சேர்க்காநின்றவிந்திரியங்களினது — தொழிலெல்லாம் - விவகாரங்களனைத்தையும் — சொள்ளும் - கிரியாநின்ற — மனஞ்செய்குவதன்றோ - மனஞ்செய்வதல்லவா (எ-று)

(௨௨) (அ-கை) துரியதிருஷ்டியில்விடயதிருஷ்டியின்றாமெனல் (கவி) அதனுலகங்காரத்துருவாமந்தமனநிச்சயமாகத், திதமாய்நழுவிநெடுநாளாஞ்செறிசாக்கிரசொற்பனசுழுத்தி, பதமாமவையொன்றையுமறியேன்பரமதுரியநிலையானேன், விதமாய்காணப்படுபொருள்கள்விமலதுரியத்திலதென்றான். (இ-ள்) அதனுலகங்காரத்துருவாம் - அதனுலகங்காரவடிவமாகிய — அந்தமனம் - அந்தமனமானது — நிச்சயமாக - மெய்யாக — திதமாய்நழுவி - திரமாய்விடுபட்டு — நெடுநாளாய் - வெகுகாலமாயிற்று — செறிசாக்கிரம் - நெருங்கியநனவும் — சொப்பனம் - கனவும் — சுழுத்திபதமாம் - சுழுத்தியவத்தையுமாகிய — அவையொன்றையுமறியேன் - அவைகளொன்றுந்தெரியாது — பரமதுரியநிலையானேன் - மேலானதுரியநிலையாயினன் — விதமாய் - நாநாவிதமாகவிருக்கின்ற — காணப்படுபொருள்கள் - திரிபஞ்சங்கள் — விமலதுரியத்திலதென்றான் - நின்மலதுரியத்தில்லையென்றுசொன்னார் (எ-று) [இ-ச-க-ம்] அசம்பாவநீங்கிச்சமதிருஷ்டியிலிருப்பவர்களுக்குத்துரியமன்றிவிடயந்தோற்றாவென்பதாம்

(௨௩) (அ-கை) திருஷ்டாந்தஞ்சொல்லித்துரியத்தைத்தவிரவேறின்றெனல் (கவி) தீதின்முனிவருரைபொருள்களறியாவேடனுங்ககன்றான், ஆதலாற்கேடுரியத்துக்கயலோர்நிலையுமுளதன்று. வேதமான்விகற்பமெலாமிறந்தவறிவேதுரியமதா, மீதலாதிங்கயலொன்றுமில்லைக்கண்டாயிராகவனே (இ-ள்) தீதின்முனிவர் - குற்றமற்றதபசையுடையவர் — உரைபொருள்கள் - சொல்லப்பட்டவருத்தங்களை — தெரியாவேடன் - அறியாதவேடனானவன் — ஆங்ககன்றான் - அவ்விடம்விட்டுநீங்கினன் — ஆதலாற்கேள் - ஆதலினாற்கேட்பாய் — துரியத்துக்கு - துரியபதத்துக்கு — அயலோர்நிலையுமுளதன்று - வேறாகவொருநிலையுமுள்ளதல்ல — ஏதமான - குற்றம்பொருந்திய — விகற்பமெலாமிறந்தவறிவே - வேற்றுமைகளனைத்துநீங்கியஞானமே — துரியமதாம் - துரியமாகும் — ஈதலாது - இதையல்லாமல் — இங்கு - இவ்விடத்தில் — இராகவனே - ஸ்ரீராமா — அயலொன்றுமில்லைகண்டாய் - வேறொன்றுமில்லை (எ-று)

(௨௪) (அ-கை) அவத்தாத்ரயவிலக்ஷணமேதுரியமெனல் (கவி) கண்டநனவுகோரமதாங்கனவுசாந்தமெனப்பெயராங், கொண்டசுழுத்திமூடமதாங்கூறுமிம்மூன்றவத்தைகளும், விண்டமனத்தின்வடிவாகுமவிளம்புமிம்மூன்றையும்விட்டாற், றண்டுமனம்போமனமிறந்தாற்சத்தாயொன்றாஞ்சமநிலையாம் (இ-ள்) கண்டநனவு - கண்டிருக்கப்பட்டசாக்கிரம் — கோரமதாம் - கோரவிருத்தியாகும் — கனவு - சொப்பனம் — சாந்தமெனப்பெயராம் - சாந்தவிருத்தியென்றுநாமமுள்ளதாம் — கொண்டசுழுத்தி - கொண்டிருக்கப்பட்டசுழுத்தியே — மூடமதாம் - மூடவிருத்தியாகும் — கூறும் - சொல்லப்பட்ட — இம்மூன்றவத்தைகளும் - இந்தமூன்றவத்தைகளும் — விண்டமனத்தின்வடிவாகும் - பகுத்தமனத்தின் உருவமாகும் — விளம்புமிம்மூன்றையும்விட்டால் - சொல்லப்பட்டவிம்மூன்றவத்தைகளையுநீக்கினால் — தண்டுமனம்போம் - தட்டப்பட்டமனதுநீங்கும் — மனமிறந்தால் - மனதுநசித்தால் — சத்தாய் - சத்தாகி — ஒன்றாம் - அத்துவிதமான — சமநிலையாம் - சமநிலையுள்ளதாகும் — (எ-று)*

(௨௫) (அ-கை) துரியபதத்திற்சுகிப்பாரெனல் (கவி) அந்தநிலையேயோகிகடாமறிந்திச்சாதித்தடைகின்றார், வெந்ததுயர்செய்சங்கற்பவிகற்பமில்லாத்துரியத்தே, மைந்தநிலையாமுயர்ந்தோர்வாய்மகத்தாயுயர்ந்தமுனிவராய்ப், பந்தமிலராய்ப்பேதமறும்பழையோர்விடாதிப் பதத்துறைவார். (இ-ள்) அந்தநிலையே - அந்நிச்சயத்தையே — யோகிகடாம் - ஞானவான்கள் — அறிந்து - அறிந்து — சாதித்தடைகின்றார் - அநுபவித்தடைகின்றார்கள் — மகத்தாய் - மகத்துக்களாகியும் — உயர்ந்தமுனிவராய் - மேன்மைபொருந்திய விருஷிகளாகியும் — பந்தமிலராய் - பந்தமில்லாதவர்களாகியுமிருக்கின்ற — பேதமறும்பழையோர் - அபேதத்தையுடையபழமையான சீவன்முத்தர்கள் — விடாது - நீங்காமல் — இப்பதத்துறைவார் - இந்தத்துரியபதத்தில் வசிப்பார்களோ — வெந்ததுயர்செய் - வேகின்றதுன்பத்தைச்செய்யும் — சங்கற்பவிகற்பமில்லா - சங்கற்பவிகற்பங்களிறந்த — துரியத்து - அத்துரியபதத்தில் — மை

ர்த- குழந்தாம்— நிலையாய்- நிரமாயிருந்து— இடர்தீர்வாய்- துன்பத்திலின்று நீங்கக்கடவாய்— (எ-று) [இ-ரு-க-ம்.] இங்ஙனங்கூறியதுரியத்திற்சுகிக்கிலதுவே துரியாதீதமான விதேகமுத்தியைக் கொடுக்குமென்பதாம். ※ மானுவேடன்கதைமுற்றிற்று. ஆ கதை சஉ க்குக் கவிதை (தகஅஎ)

# நிருவாணப்பிரகரணம்.

(அ-கை) முற்கதையிற்ப்ரத்யேகாத்மஸ்வருபமான துரியானுபவிக்கிவாகியத்திற் நிரிபியதிருஷ்டியின் நிதிருக்குஸ்வரூபமாய்விளங்குவதையறிவித்து இத்துரியமேசர்வம்பிரமமயமென்னுந் துரியாதீதமாய்விளங்குவதையறிவிக்குநிமித்தமிந்தஞானசாஸ்திரார்த்தம்ஞானபூமிகாசாரமானபடியாலஃதின் ஸ்வரூபத்தைவிரித்துப்பதினொன்குகதையின்சாரமான நிருவாணப்ரகரணத்தை நிரூபிக்கிறார். - - - ※

(க) (அ-கை) சர்வம்பிரமமயமாய்விளங்குதேயன்றிவேறின்றெனல் (கவி) எனைத்துஞான நன்னூலினியம்புமறுதியாதென்னி, லனைத்துங்கனவுகாண்பதுவேயன்றேவவிஞ்சையிங்கில்லை, வினைத்தின்கவலைசெய்கின்றவெய்யமாயைதானில்லை, தினைத்துன்பமுமற்றுபசாந்தத்திறமாமிதுவே திகழ்பிரமம் (இ-ள்) எனைத்துஞானநன்னூலின்- சமஸ்தவாத்மஞானசாஸ்திரங்களில்— இயம்பும்- சொல்லப்பட்ட— அறுதியாதென்னில்- நிச்சயமெதுவென்றால்— அனைத்தும்- எல்லாவற்றையும்— கனவுகாண்பதுவேயன்றோ- சொற்பனமாகப்பார்ப்பதல்லவா— இங்கு- இவ்விடத்தில்— அவிஞ்சையில்லை- அவித்தையுமில்லை— வினைத்தின்- தொழிலினது— கவலைசெய்கின்ற- துன்பங்களைச்செய்கின்ற— வெய்யமாயைதானில்லை- கொடியமாயையுமில்லை— தினைத்துன்பமுமற்று- தினையளவுதுன்பமுமில்லாமலிறந்து— உபசாந்தத்திறமாம்- உபசாந்தத்தன்மையாகிய— இதுவே திகழ்பிரமம்- இதுவேவிளங்காநின்றபிரமஸ்வரூபமாம் (எ-று) [இ-ம்] சகலவேதாந்தசம்மதமான நிச்சயம்மாயைமுதலியயாவுங்கனவைப்போலக்கண்டகற்றியாவுந்தனதுஸ்வானுபூதிசாக்ஷாத்காரமாகவிளங்குதென்றறிவதென்பதாம் - - ※

(உ) (அ-கை) இப்பிரமத்தையேமதாந்தரங்களினுமபேதங்களாகநிச்சயிக்கப்பட்டிருக்குதெனல் (கவி) சாந்தமாகிச்சிதம்பரமாய்ச்சமமாய்நொய்தாயான்மாவா, யேந்துசத்தியளவிலதாயிடும்பேர்பிரமமெனுமிதற்கே, சேர்ந்தபலநிச்சயம்பண்ணிச்சிலர்பாழெனபர்பரமேசன், வாய்ந்தவுருவமென்பர்சிலர்மாவிஞ்ஞானமென்பர்சிலர் (இ-ள்) சாந்தமாகி- உபசாந்தமாகியும்— சிதம்பரமாய்- சிதாகாசமாகியும்— சமமாய்- சமமாகியும்— நொய்தாய்- சொச்சமாகியும்— ஆன்மாவாய்- ஆத்மாவாகியும்— ஏந்துசத்தி- தரிக்கப்பட்டசத்திகள்— அளவிலதாய்- அநந்தமாகியும்— பிரமமெனும- பிரமமென்னும்— இடும்பேர்- தரிக்கின்றநாமமுடையதாயுமிருக்கின்ற— இதற்கே- இந்தப்பிரமத்துக்கே— சேர்ந்தபலநிச்சயம்பண்ணி- சார்ந்திருக்கின்றவநேகநிச்சயங்களைச்செய்து— சிலர்பாழெனபர்- சிலர்மதஸ்தர்சூனியமென்றுசொல்லுவார்கள்— சிலர்- சிலமதஸ்த்தர்— பரமேசன்- பரமேஸ்வரனுடைய— வாய்ந்தவுருவமென்பர்- பொருந்தியவடிவமென்றுசொல்லுவார்கள்— சிலர்- சிலமதஸ்தர்— மாவிஞ்ஞானமென்பர்- மகாவிஞ்ஞானமாகப்ரகாசிக்குமென்றுசொல்லுவார்கள்— (எ-று) [இ-ம] ஸ்வானுபூதியையேசூனியமுதலியவஸ்துவாகநிச்சயிக்கப்பட்டிருக்குமென்பதாம் - - - - - - - - - - ※

(௩) (அ-கை) வஸ்துநிச்சயங்கூறியஃதாய்விளங்குமுபாயமுங்கூறல் (கவி) எல்லாநீக்கிமௌனமவுனத்திருப்பாய்நிருவாணத்தினனாய்ப், பொல்லாமனமபோய்ச்சித்தமபோய்ப்புத்திபோய்த்தானென்பதுபோய்ச், சொல்லாவூமைகுருடுசெவிடொத்துத்தூயவான்மாவி, னில்லாயுள்ளேமுகமாகிநித்தநொய்தாய்நிறைமதியாய் (இ-ள்) எல்லாநீக்கி- சகலத்தையுமொழித்து— மௌனமவுனத்திருப்பாய்- மகாமவுனத்தினிற்கக்கடவாய்— நிருவாணத்தினனாய்- மோக்ஷத்தையுடையவனாய்— பொல்லாமனம்போய்- பொல்லாங்கைச்செய்யுமனதுநீங்கி— சித்தம்போய்- சித்தநீங்கி— புத்திபோய்- புத்திநீங்கி— தானென்பதுபோய்- நானென்பதுநீங்கி— சொல்லாவூமை- பேசாதவூமையனுக்கும்— குருடு- அந்தகனுக்கும்— செவிடு- செவிடனுக்கும்— ஒத்து- ஒப்பாகி— தூயவான்மாவில்- பரிசுத்தமாகியவான்மாவில்— உள்ளேமுகமாகி- அகமுகத்தையுடையவனாய்— நித்தம்- எக்காலமும்— நொய்தாய்- சொச்சமாகியும்— நிறைமதியாய்- பூரணஞானத்தையுடையவனாயும்— நில்லாய்- நிற்கக்கடவாய்— (எ-று.) [இ-ம்] மகாமவுனத்தாலாத்மாவிற்சுகித்திருப்பாயென்பதாம், - - - - - - - - - - ※

(௪) (அ-கை) சித்தத்யாகவுபாயங்கூறல். (கவி) நனவிற்சுழுத்திநிலைமேவிநன்றாயெல்லாமுள்ளகற்றி, தனதிச்சையில்வந்ததுபுறத்தேசமைப்பாய்சித்தமுண்டாகைக், கனதுக்கமதாஞ்சித்தமறிற்கனத்தசுகமாஞ்சித்தத்தை, யுனதுட்படுத்தியுணர்வின்மையாலேயொழிப்பாயுணர்வுருவாய் (இ-ள்) நனவிற்சுழுத்தி- சாக்கிரசுழுத்தியினது— நிலைமேவி- தன்மையையடைந்து— நன்றாய்- நன்றாக— எல்லாமுள்ளகற்றி- சகலத்தையுமுள்ளேதள்ளி— தனதிச்சையில்- தனதிச்சாப்ரகாரம்— வந்தது- வந்ததை— புறத்தேசமைப்பாய்- வெளியிற்செய்வாய்— சித்தமுண்டாகை- மனமுண்டாதல்— கனதுக்கமதாம்- மிகுந்ததுன்பமாகும்— சித்தமறில்- மனமிறந்தால்— கனத்தசுகமாம- பேரானந்தமாம்— சித்தத்தை- மனதை— உனதுட்படுத்தி- உனதுவசமாக்கி— உணர்வின்மையால்- அசம்வேதனத்தினால்— உணர்வுருவாய்- ஞானஸ்வரூபமாய்— ஒழிப்பாய்- நீக்குவாய்— (எ-று.) - - - - - - - - ※

(௫) (அ-கை) சுகதுக்கசமத்துவமாயிருப்பாயெனல். (கவி) சோகதன்மைதீமைகளைச்சூழ்வுந்தி ருந்துஞ்சமமாகிப். பாசமின்றிக்கற்போலப் படிந்துநிற்பாய்பலபிறவி, மோகமகலுமவ்வளவுமுயலு ந்தனதுமுயற்சியினு, னாசமனையாய்சுகதுக்கநடுவுள்ளதுநீநாடலையாய் (இ-ள்) சோகம்- துன்பமாயி ருக்கின்ற— நன்மைதீமைகளை- இதாகிதங்களை— சூழ்வுற்றிருந்தும்- சூழ்ந்திருந்தும்— சமமாகி- சமத்துவமாகி— பாசமின்றி- பிரிவில்லாமல்— கற்போல- கல்லைப்போல— படிந்துநிற்பாய்- பொருந்தியிருப்பாய்— பலபிறவி- அநந்தசநநங்களினது— மோகமகலும்- மயக்கநீங்குகின்ற— அவ்வளவும்- அதுபரியந்தம்— முயலும்- முயற்சிக்கின்ற —தனதுமுயற்சியினுல்- தனதெத்தனத்தினுல்—நாசமனையாய்- மலக்கொப்பாகியஸ்ரீராமா —சுகதுக்கம்- இன்பதுன்பம் —நடுவுள்ளதும்- சுகாசுகமும் — நீநாடலையாய்- நீநாடாதே—(எ-று) - - - - - - - - - - - - - - ※

(௬) (அ-கை) இவ்வநுசந்தானத்தான்முத்தியுண்டாமெனல் (கவி) இந்தவளவாந்தன்முயற்சி யிடர்தீர்முடிவில்பதமளிக்குஞ், சிந்துகலைகணிறைமதிபோற்சீதவமுதேயுண்ணிறைய, வந்தவறிவன்சுக மடைவனகிலவுலகின்பொருட்சார, முந்தவறிந்துசெயற்செய்யாதவனுமுத்தியெய்திடுமே (இ-ள்) இந்தவளவாம்- இவ்வளவாகிய— தன்முயற்சி- தனதுமுயற்சியானது— இடர்தீர்- துன்பமில்லாத— முடிவில்பதமளிக்கும்- முடிவற்றபிரமபதத்தைக்கொடுக்கும்— சிந்துகலைகணிறை- சிதறுநின்றவமு துகலைகணிறைந்த— மதிபோல்- சந்திரனைப்போல— சீதவமுதேயுண்ணிறைய- குளிர்ந்தவமுதமான துள்ளத்தின்கண்ணிறைய— அந்தவறிவன்சுகமடைவன்- அவ்வறிவையுடையவன்சுகத்தையடைவான்— அகிலவுலகின்பொருட்சாரம்- சகங்களினதுவஸ்துசத்தைதயை— முந்தவறிந்து- முன்னேதெரிந்து— செயற்செய்யாதவனும்- தொழிலைச் (செய்துஞ்) செய்யாதவனும்— முத்தியெய்திடும்- மோக்ஷத்தை யுடையவன்— (எ-று) [இ-ரு-க-ம்] பிரமாத்பியாசத்தாற்பிரமாபரோக்ஷமுண்டாமென்பதாம் ※

(௭) (அ-கை) அபரோக்ஷஞானுபவத்தைப்பெறுதற்குமுக்கியகாரணமானஞானபூமியினைற்பியா சமுமஃதைபடைந்தவர்களிலக்கணமுமியாதென்றவினுவினமுதல்வினுவுக்குத்தாங்கூறத்தொடங்கிப்ர விர்த்தனிவிர்த்தனென விருவருண்டெனல் (கவி) யோகபூமியெழுக்குமுறுசெய்தொழில்களெவ்வண் ணமாகவிந்தப்பூமிகளையடைந்தயோகிக்கெதுகுறிகண், மோகமில்லாயுரையென்னமுனிவனிராமற்கு ரைசெய்வான், போகவசஞ்செல்பவன்மீண்டோனென்றுபுருடர்ருவகையாம் (இ-ள்) யோகபூமியே ழுக்கும்- ஞானபூமியேழுக்கும்— உறுசெய்தொழில்கள்- பொருந்தச்செய்யுமப்பியாசங்கள்— எவ் வண்ணம்- எப்படியாகும்— ஆகவிந்தப்பூமிகளை- ஆகியவிந்தஞானபூமிகளை— அடைந்தயோகிக்கு- அடைந்தஞானிகளுக்கு- எதுகுறிகள்- என்னவடையாளங்கள்— மோகமில்லா- மயக்கமற்றவனே—உ ரையென்ன- சொல்லுவாயென்றுகேட்க— முனிவன்- வசிட்டமுனியானவர்— இராமற்குரைசெய்வா ன்- ஸ்ரீராகவற்குச்சொல்லுவார்— போகவசஞ்செல்பவன்- போகவசத்திற்செல்லுபவனென்றும்— மீ ண்டோனென்று- திரும்பினவனென்றும்—புருடர்ருவகையாம்- ஆத்மாக்களிரண்டுவிதமாம்(எ-று)

(௮) (அ-கை) ப்ரவிர்த்திநிலக்கணங்கூறல் (கவி) சுவர்க்கமுத்திகளைவிரும்பித்தொடருமவர்த ங்குறிகேளாயுவக்குமவீடேபெவ்வளவிற்றுலகநடையேயுயர்ந்ததெனு, நிவக்குமறுதியாற்செய்வோ னெடும்போகத்திற்செல்பவனு, மெவர்க்குமவிவேகமுறுபிறவியெய்தற்கரியவியல்பினதே (இ-ள்)சு வர்க்கமுத்திகளைவிரும்பி- போகமோக்ஷங்களைப்பிச்சித்து— தொடருமவர்தம்- தொடராநின்றவவர்க ளுடைய— குறிகேளாய்- அடையாளங்களைக்கேட்பாய்— உவக்குமவீடு- மகிழாநின்றமோக்ஷமான து— எவ்வளவிற்று- எவ்வளவாகும்— உலகநடையே- சகத்தினெழுங்கே— உயர்ந்ததெனு- மேலா னதாமென்ற— நிவக்குமறுதியால்- ஓங்கியநிச்சயத்தினுல்— செய்வோன்- செய்பவன்—நெடும்போ கத்தில்- பெரிதானபோகத்தில்— செல்பவனும்- செல்லும் (பிறவிற்த) னும்— எவர்க்கும்- யாவர்க்கு ம்— விவேகமுறுபிறவி- விவேகமடைந்திருக்கின்றசநநமானது— எய்தற்கரிய- அடைதற்கரிய— இ யல்பினது- தன்மையையுடையது—(எ-று) - - - - - - - - ※

(௯) (அ-கை) நிவிர்த்திநிலக்கணங்கூறல் (கவி) எறியுங்கடலினகத்துளைபிலாமைக்கழுத்துப்புகு வதுபோற், பொறிவெம்பிறவியநேகத்தாற்புருடன்விவேகியெனப்பிறந்து, முறியும்பிறவிப்பயனில் திமமோகமமையுஞ்செய்தொழிலாற், செறிவுதென்னேயிவற்றுலேதினங்களெல்லாஞ்சென்றிடுமால். (இ-ள்) எறியுங்கடலின்- அலைகள்வீசுமாக்கரிற்(கிடக்கும்)— நுகத்துளையில்- நுகத்தடியின்(துவாரத் தினுள்)— ஆமைகழுத்துப்புகுவதுபோல்- கூர்மததின்கண்டநுழைவதுபோல— வெம்பொறி- கொடியவிந்திரியங்களையுடைய— பிறவியநேகத்தால்- அநந்தஞ்சநநத்தில்— புருடன்- ஓர்புருடனு னவன்— விவேகியெனப்பிறந்து- விவேகியாகச்செனித்து— முறியும்பிறவி- கெடாநின்றசநநமா னது— பயனிலது- ப்ரயோசனமில்லாதது —இம்மோகமமையும்- இந்தமயக்கம்போதும்— செய்தொ ழிலால்- செய்யப்பட்டகன்மங்களினுல்— செறிவதென்- அடையும்ப்ரயோசனமென்ன— இவற்றுல்- இக்கன்மங்களினுல்— தினங்களெல்லாம்- நாள்களனைத்தும்—சென்றிடும்- (வீணுகப்)போகும்(எ-று)

(௰) (அ-கை) இ-து (கவி) தொழிலின்மிகுதியற்றுயர்ந்துதுயர்தீரஃதேதென்றுள்ளே, யறிவி னுறுதியுள்ளோரேயடங்கத்திரும்புமவனுகும், கறிவினமயல்போய்ப்பவக்கடலைக்கடப்பதெவ்வாறெ னவுன்னு, மொழிவில்விசாரத்தால்விரத்தியுள்ளேயுதவனுள்வேண்டா (இ-ள்) தொழிலினமிகுதியற்று- கன்மத்தினதமிகுதிகெட்டு— உயர்ந்து- மேலாகி— துயர்தீர்- துன்பநீக்கும்— அஃதேதென்று- அந்தப்பதமேதுவென்று— உள்ளறிவிலுறுதியுள்ளோனே- மனதிலுறுதியுற்றநிச்சயமுள்ளவனே— அ டங்க- முழுதும (விட்டு)— திரும்புமவனுகும்- திரும்பு (நிவர்த்த) னுகும்— கறிவின்மயல்போய்- ர்வகமயகக்நீங்கி— பவக்கடலை- சநநசமுத்திரத்தை—கடப்பதெவ்வாறெனவுன்னும்- தாண்டுவதெ ப்படியென்றுநினைக்கின்ற— ஒழிவில்விசாரத்தால்- தவிராதவிசாரணையினுல்— நாள்வேண்டா- தினம

வேண்டாமல்— விரத்திபுள்ளேயுறுவன்- துறவுமுறுத்தங்களிலுலகத்திற்பொருந்துவன்—(எ-று)[இ-ச-க-ம்] சுவர்க்காதிபோகங்களைக்குறித்துக்காமியகருமங்களைச்செய்பவன் ப்ரவிர்த்தனென்றுநிட்காமபுண்ணியபலத்திஞலதிவாஞுகப்பவக்கடலைக்கடக்கநிராசைபிறந்தவனிவிர்த்தனென்றுங் கூறியநாம் ❋

(௰௧) (அ-கை) நிராசையாற்சஞ்சரிக்குநிலையையுரைத்தல் (கவி) உதாரமானதொழில்களிலேமுயன்றுநாளுமுண்மகிழ்வன், சதாவுநின்றகிராமியமாங்கருமச்சழக்கிற்குச்சரிப்பன், விதானகருமங்களைச்செய்வன்விளம்பான்செய்தகருமங்கள், பதாதியுலகோர்வெருவாதபடிமெத்தெனற்தொழில்புரிவன். (இ-ள்)உதாரமானதொழில்களில்- மேலாகியகாரியங்களில்— முயன்று- முயற்சித்து— நாளுமுண்மகிழ்வன்- தினந்தோறுமகத்தின்கண் ணுநந்தத்தையடைவான்—சதாவுநின்றகிராமியமாம்- செல்லாநின்றதுச்சமாகிய— கருமச்சழக்கில்- குற்றமுள்ளகன்மங்களில்— குச்சரிப்பன்- அருவருப்பன்— விதானகருமங்களைச்செய்வன்- உபாயமாகப்புண்ணியகன்மங்களைச்செய்வான்— செய்தகருமங்கள்- தான்செய்தகன்மங்களை— விளம்பான்- (டம்பநியித்தஞ்)சொல்லான்—பதாதியுலகோர்- உலகத்திலுள்ளசனங்கள்— வெருவாதபடி- பயப்படாதப்ரகாரம்— மெத்தென்ற- மிருதுவாயிருக்கின்ற— தொழில்புரிவன்- சன்மத்தைச்செய்வான்—(எ-று) - - - - - - - - - - - - - - ❋

(௰௨) (அ-கை) நிவிர்த்தனேஞானபூமியின்முதற்பூமியையடைந்தவனெனல்! (கவி) தீயவினைக்கஞ்சுவனென்றுஞ்செறியும்போகவேட்கையுறு, னேயநயமாய்மெத்தென்றுநிபுணமாகியிடம்பொழுதுக், கேயவுரைகளுரைசெய்வானிவ்வாறுனவிவன்றனே, யாயபொழுதுமுதற்பூமியானவொன்றையடைந்தவனே (இ-ள்) தீயவினைக்கஞ்சுவன்- கொடியதொழிலுக்குப் பயப்படுவான்— என்றும்- எப்போதும்—செறியும்- நெருங்கிய—போகவெட்கையுறான்- போகத்திலாசையைப்பொருந்தான்—நேயநயமாய்- அன்புள்ளவுபசாரமாய்— மெத்தென்று- மிருதுவாய்— நிபுணமாகி- சாமர்த்தியமாய்— இடம்பொழுதுக்கு- தேசகாலங்களுக்கு— எயவுரைகள்- பொருந்தினவசனங்களை— உரைசெய்வான்- வசனிப்பான்— இவ்வாறுன- இப்படியாயிருக்கின்ற—இவன்றனே- இந்த(நிவிர்த்)தனே—ஆயபொழுது-(இப்படி)யானபோது—முதற்பூமியான- முதற்பூமியென்னுஞ்சுபேச்சையாகிய— ஒன்றையடைந்தவன்- ஒன்றையடைந்தவன்—(எ-று) - - - - - - - - - - - - - - ❋

(௰௩) (அ-கை) இவனேமுதற்பூமியினிலக்கணத்தைவிசாரித்தறிந்தவனெனல் (கவி) ஒக்கமூன்றுகரணத்தாலுயர்நல்லோரைப் பின்செல்வன், மிக்கநன்னூலெங்கணும் போய்விரும்பிக்கொணர்ந்துபரிசயிப்பன், ஒருக்கசநரமறுப்பதற்குத் துணிந்திவ்விசாரம்படைத்தவனே, தக்கபூமியறிந்தோனுந்தகுமாரியனுமற்றவனே (இ-ள்) ஒக்கமூன்றுகரணத்தால்- ஒன்றுபட்டத்திரிகரணங்களினுல்— உயர்நல்லோரை- மேலானசத்துக்களை— பின்செல்வன்- அநுசரிப்பான்— மிக்கநன்னூல்- மேலானஞானசாத்திரங்களை— எங்கணும்போய்- எவ்விடத்திலாவதுபோய்— விரும்பிக்கொணர்ந்து- விருப்புற்றுக்கொண்டுவந்து— பரிசயிப்பன்- அப்பியாசஞ்செய்வன்— தொக்கசநரம்- கூடியிருக்கின்றசம்சாரத்தை— அறுப்பதற்கு- கெடுப்பதற்கு— துணிந்து- நிச்சயித்து— இவ்விசாரம்படைத்தவனே- இந்தவிசாரணையைப்பெற்றவனே— தக்கபூமியறிந்தோனும்- மேலானமுதற்பூமியையறிந்தவனுகும்— மற்றவன்- (இந்நிலையன்றிச்சன்மார்க்கத்திலுள்)ளவன்— தகுமாரியனும்- தகுந்தமேலானவனும்—(எ-று)[இ-௩-க-ம்]வைதீகவிருத்தியின்மகிழ்ச்சியும் லவ்கீகவிருத்தியினிந்தையும் பிரமார்ப்பணமாகப்புண்ணியகன்மங்களைச்செய்தலும்பாவத்துக்குப்பயப்படுதலும்போகமபக்கம்விடுதலுஞ்சால்நிரவிசாரமுஞ்சாதுக்கள் சங்கமுமுத்திவிருப்பமுமுள்ளநிவிர்த்தனேமுதற்பூமியையடைந்தவனென்பதாம்

(௰௪) (அ-கை) இரண்டாம்பூமியானவிசாரணையையடைந்தபோதுள்ளவிலக்கணங்கூறல் (கவி) இருளில்விசாரமெனுநாமத்திரண்டாம்பூமியெய்தினனுஞ், சுருதிமிருதிநல்லொழுக்கந் தொடர்தாரணைநத்தியானங்கண், மருவுகருமங்களைக்கேட்பான்மாசில்விருத்திப் பொருணிகழ்த்தும், பெருகுபுகழ்சேர்பண்டிதரிற்பெரியோர்தம்மையினிதடைந்து (இ-ள்) இருளில்- அறியாமையில்லாத— விசாரமெனுநாமத்து-விசாரணையென்கின்றபெயரையுடைய—இரண்டாம்பூமி- இரண்டாவதுபூமியை—எய்தினனும்- அடைந்தவனுகும்—சுருதி- வேதங்களில்— மிருதி- தருமநூல்களையும்— நல்லொழுக்கம்- நல்லநடைகளையும்— தொடர்தாரணை- தொடராநின்றதாரணையையும்— நத்தியானங்கள்- நல்லதியானங்களையும்— மருவுகருமங்களை- பொருந்தாநின்ற(சற்)கிருத்தியங்களையும்— கேட்பான்- கேட்கும்பொருட்டு— மாசில்- களங்கமற்ற— விருத்திப்பொருணிகழ்த்தும்- வாக்கியார்த்தங்களைப்ரகாசஞ்செய்யும்— பெருகுபுகழ்சேர்-மிகுந்தகீர்த்தியையுடைய—பண்டிதரில்- பண்டிதருக்குள்— பெரியோர்தம்மை- மேலானசத்துக்களை— இனிதடைந்து- இனிமையாகச்சேர்ந்து— (எ-று). ❋

(௰௫) (அ-கை) இ-து (கவி) செறியும்பதார்த்தப்பிரிவறிந்து செய்யுந்தவிருங்காரியங்களறிவன்செல்வமானமனைக்கதிபன்மனையையறிவதுபோன், மறியுமதமாச்சரியமபிமானமுலோபமோகமெலாம், வெறிதுபுறத்தெய்தினுஞ்சிறிதாய்விடுவன்பாம்புதோல்விடல்போல் (இ-ள்) செறியும்பதார்த்தப்பிரிவறிந்து- நிறைந்த(நித்தியாநித்திய)வஸ்துவின்விபாகத்தைத்தெரிந்து— செய்யும்- செய்கின்றகாரியங்களையும்— தவிருங்காரியங்கள்- செய்யாதகாரியங்களையும்— செல்வமானமனைக்கதிபன்- செல்வனுகியவீட்டுக்குநாயகனுனவன்—மனையையறிவதுபோல்- கிரககிருத்தியங்களையறிவதுபோல்— அறிவன்- அறிவான்—மறியுமதம்- அறிகின்றசெருக்கும்— மாச்சரியம்- பொருமையும்— அபிமானம்- அகங்காரமும்— உலோபம்- ஆசையும்— மோகமெலாம்- மயக்கமுமாகிய வனைத்தையும்— வெறிதுபுறத்தெய்தினும்- அறிவின்மையின்வசமாகவந்தாலும்— பாம்புதோல்விடல்போல்- சர்ப்பமானதுசருமத்தைவிடுவதுபோல— சிறிதாய்விடுவன்- அற்பமாகநீக்குவன்— (எ-று) - - - - - - ❋

(௰௬) (அ-கை) இ-து (கவி) மதியிவ்வாறுள்ளவனூலால் வணைக்குருவா ஊல்லோரா, லதிகங்கு

ய்யப்பொருளனைத்தினையறியறிவனதற்பின்னர், முதிர்பத்தின்மையெனப்பெயரா முத்தமற்றைப்பூமிதனைப், புதிதாமலரின்மெல்லணைபோற்பொருந்திநிற்பன்பொலிந்தவனே (இ-ள்) மதி- அறிவை— யிவ்வாறுள்ளவன் - இவ்வண்ணமுடையவன்—நூலால்- ஞானசாஸ்திரங்களினாலும்— வணங்குருநவாம்- வணங்கத்தக்கவாசாரியராலும்— நல்லோரால்- சத்துக்களாலும்— அதிகம- அதிதமான—முய்யப்பொருளனைத்தின்- இரகசியமானசர்வார்த்தங்களினைது— அறுதியறிவன்- நிச்சயத்தையுணர்பவனும்— அதற்பின்னர்- அதன்பின்பு— பொலிந்தவன்- விளங்கினவன்—முதிர்பத்தின்மையென்- முதிர்த்தபத்தின்மையென்றுசொல்கின்ற— பெயராம்- நாமத்தையுடையதான— முத்தமற்றைப்பூமிதனை- மேலாகிய(விந்த) மூன்றாம்பூமியை— புதிதாம்- நூதனமாகிய—மலரின்மெல்லணைபோல்- புட்பங்களாற்செய்தமிருதுவானவமளி (யிலடைந்திருப்பது) போல— பொருந்திநிற்பன்- சேர்ந்திருப்பான்— (எ-று) [இ-ங-ச-ம்] இங்ஙனங்கூறியகுணங்களனைத்தோடுங்கூடியாசிரியருபதேசவாக்கியார்த்தங்களினாலும்வேதாந்தமகாவாக்கியார்த்தங்களினாலுமாத்மஸ்வரூப நிச்சயமுண்டாவதேயிரண்டாம்பூமியையடைந்தவனிலக்கணமென்பதாம் - - - - - - - - - - - - - - - - *

(௰௭) (அ-கை) மூன்றாம்பூமியானதனுமானநிலையையடைந்தபோதுள்ளவிலக்கணங்கூறல். (கவி) உள்ளபடியேநூற்பொருளி னொழுக்கத்திரமாய்க்கைக்கொண்டு, தன்னின்முனிவரிடந்தோறுந்தளர்வொன்றில்லாமெய்ஞ்ஞானந், தெள்ளுகதையினொழுங்குகளாற்றீர்க்கவானாளதுகழிப்பன்,பள்ளிகொளவுமிருப்பதற்குப்படர்ந்தபாறையிடமாவன் (இ-ள்) உள்ளபடியே- உள்ளப்ரகாரமே— நூற்பொருளின்- சாஸ்திரார்த்தங்களின்— ஒழுக்கம்- ஆசாரத்தை— திரமாய்க்கைக்கொண்டு- நிலையாகக்கைவசமாக்கி— தன்னில்- நீங்காத(பெருமையினையுடைய)— முனிவரிடந்தோறும்- தபசிகளிடங்களெல்லாம்—தளர்வொன்றில்லா- ஒருவாட்டமுமில்லாத—மெய்ஞ்ஞானம்- தத்துவஞானத்தை—தெள்ளுகதையின்- தெளிவாகச் (சொல்கின்ற)கதைகளைக்(கேட்கும்)—ஒழுங்குகளால்- மார்க்கங்களினால்— தீர்க்கவாணாளதுகழிப்பன்- நெடியவாயுளைத் தள்ளுவான்— பள்ளிகொளவும்- சயனஞ்செய்வதற்கும்—இருப்பதற்கு- வாசஞ்செய்வதற்கும்— படர்ந்தபாறை- விசாலமுள்ளபாறைக்கல்லையே— இடமவன் -ஸ்தானமாகக்கொள்வன்— (எ-று) - - - - - - - - - - - - - - - - - *

(௰௮) (அ-கை) இ-து (கவி) பாயுமனமாறியநலத்தாற்பற்றுவின்பஞ்சமமாகித், தோயுமடவிகளிலுலவித்தொக்ககாலஞ்செல்விடுவ, னாயுநன்னூற்பரிசயத்தாலறங்கள்செயலான்மானிடருக், கேயுமிந்தப்பொருளைக்கமிலங்குமுள்ளபடியாக (இ-ள்) பாயுமனம்- தாவாநின்றமனமானது— ஆறியநலத்தால்- அடங்கியிருக்கின்றதன்மையினால்— பற்றுவின்பம்- ஆசியாதசுகத்தினால்— சமமாகி- சமத்துவமாய்— தோயுமடவிகளிலுலவி- பொருந்திய கானகங்களிற்சஞ்சரித்து— தொக்ககாலம்-நெருங்கியகாலங்களை— செல்விடுவன்- செலுத்துவன்—ஆயுநன்னூற்பரிசயத்தால்- ஆராய்கின்றஞானசாஸ்திரவப்பியாசத்தினாலும்— அறங்கள்செயலால்- புண்ணியகன்மங்களைச்செய்தலினாலும்—மானிடருக்கு- மனிதருக்கு— ஏயுமிந்தப்பொருளைக்கம்- பொருந்தியவிவ்வஸ்துதிருஷ்டியானது—உள்ளபடியாகவிலங்கும்- உள்ளவண்ணம்ப்ரகாசிக்கும்— (எ-று) [இ-உ-க-ம்] முன்விசாரணையானிச்சயித்தவாத்மஸ்வரூபத்தைப் பரிசிலனஞ்செய்தகத்துறவோடுமனத்தேப்த்து சாந்தியுற்றிருப்பதேமூன்றாம்பூமியைப்படைந்தவனிலக்கணமென்பதாம். - - - - - - - - *

(௰௯) (அ-கை) மூன்றாம்பூமியானபற்றின்மையைநான்குவிதமாகப்பகுத்துக்கூறல் (கவி) உற்றமூன்றாம்பூமியைச்சேர்ந்துணர்ந்தோன்றனேயனுபவிக்கும், பற்றிலாமையிருவகையாம்பகுத்துநாமிப்பகுதாசெயக்கேள், முற்றுசாமானியமொன்றுமுதிர்ந்தசேட்டமொன்றாகு, மற்றிவ்விரண்டுமோரொன்றிலிரண்டுவகையாமனுகுலத்தோய் (இ-ள்) உற்ற- பொருந்திய— மூன்றாம்பூமியைச்சேர்ந்து- மூன்றாம்பூமியையடைந்து— உணர்ந்தோன்றனே- அறிந்தவனே— அனுபவிக்கும்- அனுபவிக்கின்ற— பற்றிலாமை- பற்றில்லாமையானது— இருவகையாம். இரண்டுவிதமாகும்—நாமிங்கு-பாமிப்பிடத்தில்— பகுத்துநாசெயக்கேள்- பிரித்துச்சொல்லக்கேட்பாய்—முற்றுசாமானியமொன்று- முதிர்ந்தசாமானியமென்பதொன்று—முதிர்ந்தசேட்டமொன்றாகும்- முற்றினசிரேட்டமென்பதொன்றாகும்— மற்றிவ்விரண்டும்- இந்தவிரண்டும்— ஓரொன்றில்- ஒவ்வொன்றில்— மனுகுலத்தோய்- மனுகுலத்தையுடையஸ்ரீராமா— இரண்டுவகையாம்- இரண்டுவிதமாம்— (எ-று) [இ-ம்] சாமானியப்பற்றின்மைசேட்டப்பற்றின்மையென்பதோவ்வொன்றிரண்டாகநான்காமென்பதாம் - - - - *

(௨௰) (அ-கை) சாமானியப்பற்றின்மையினிலக்கணங்கூறல். (கவி) பொருள்கடனிற்செய்பவனல்லேன்புசிப்போனல்லேனெனத்தெளிவோனுங்,குருவுமல்லவெனவப்பற்றிற்குணமாஞ்சாமானியவிரத்தி, பருகுதுன்படமின்பமெலாம்பண்டைவினையால்வருமன்றேயருள்செய்கடவுள்வசந்தானுமமைப்போருதல்லனக்கெங்கே (இ-ள்) பொருள்கடனில்- வஸ்துக்களிடத்தில்—செய்பவனல்லேன்- நான்கர்த்தாவுமல்ல— புசிப்போனல்லேன்- நான்போக்தாவுமல்ல—தெளிவோனும்- தெளிபவனுமேபெரிடனும்— குருவும்- (தெரிவிக்கின்ற)வாசிரியரும்—அல்லேனென- நானல்லேனென்று(சொல்வ)—பற்றிற்குணமாம்- சங்கமற்றகுணமே—சாமானியவிரத்தி- சாமானியவசங்கமாம்—பருகுதுன்படமின்பமெலாம்- புசிக்கப்பட்ட துக்கசுகங்களனைத்தும்— பண்டைவினையால்வரும்- பழையநயதியாலுண்டாகும்—அன்றே- அப்பொழுதே— அருள்செய்- கிருபைசெய்யாநின்ற—கடவுள்வசந்தானும்- ஈச்வராதீனமாம்— அமைப்போருதல்- சருத்தாவாகுவது— எனக்கெங்கு- எனக்கேது— (எ-று) [இ-ம] ஒன்றுநாமல்லவென்னுமபற்றின்மையேசாமானியப்பற்றின்மையென்பதாம். - - - - - - - *

(௨௧) (அ-கை.) சாமானியத்திற்சாமானியப்பற்றின்மையினிலக்கணங்கூறல். (கவி) கொல்வதானபெருநோயாங்கொடியபோகப்பாசமெல்லாஞ், செல்வமெல்லாமாபத்துக்கிடமாஞ்சேற்றல்பிறப்பத

ந்கா, மொலியதானநற்புத்திக்குள்ளகவலைநெடுநோயாஞ், சொல்வருாலமேலாங்காலன்றொலைக்கமு
யலும்விடாதென்றே. (இ-ள்.) கொடிய- பொல்லாத— போகப்பரப்பெல்லாம்- போகயிதுதிகளி
யாவும்— சொல்வதான- கொல்லுவதாகிய— பெருநோயாம்- பெருவியாதியாகும்— செல்வமெல்லா
ம்-சம்பத்துக்களனைத்தும்— ஆபத்துக்கிடமாம்- ஆபத்துக்கிஸ்தானமாகும்—செற்றல்-இறத்தல்—பிற
ப்பதற்காம்-செனிப்பதற்கேயாகும்—ஒல்வதானநற்புத்திக்கு-குழைதலாகியநல்லபுத்திக்கு—உள்ளக
வலை-உண்டானதுன்பமே—நெடுநோயாம்-நீண்டவியாதியாம்— சொல்வருாலமேலாங்காலன்றொலை
க்க-கூறுஞ்சகங்களனைத்தையுமிபமன்கெடுக்க—விடாதுமுயலும்-விடாமன்முயற்கிப்பன்—(எ-று)*

(உஉ) (அ-கை.) இ-து (கவி) பண்டமனைத்தின்பற்றற்றபசர்பாவனையுள்ளுறவுண்டாங், கொண்
டவுயர்வாக்கியப்பொருளைக்குறிப்பாலழுந்துமனத்தோர்க்குக், கண்டவிதுசாமானிய மாங்கவர்பற்றில்
லாவிந்நெறியா, லண்டுபெரியோர்கூட்டரவாலறிவிலாதோர்நீக்கத்தால். (இ-ள்) பண்டமனைத்தின்-வ
ஸ்துக்களிலெல்லாம்— பற்றற்ற- இச்சையற்ற—பசர்பாவனை- சொல்லப்பட்டபாவனையானது— உள்
ளுறவுண்டாம்- உள்ளத்தின்கண்பொருந்தவுண்டாகும்— கொண்டவுயர்வாக்கியப் பொருளை- கிரிகித்
தமகாவாக்கியார்த்தத்தை—குறிப்பாலழுத்தும்- உரிமையாகவழுந்துகின்ற—மனத்தோர்க்கு- மனதை
யுடையவர்களுக்கு— கண்டவிதுசாமானியமாம்- காணப்பெற்றவிதுவேசாமானியபற்றின்மையாம்—
கவர்பற்றில்லா- கிரிகிக்கின்றவாசையில்லாத— இந்நெறியால்- இவ்வழியினாலும்— அண்டுபெரியோ
ர்கூட்டரவால்- அடையத்தக்கசத்துக்களினதுசங்கத்தினாலும்— அறிவிலாதோர்நீக்கத்தால்- மூடர்களு
டையநிவிர்த்தியினாலும்— (எ-று.) [இ-உ-க-ம்.] கருமத்தினாலுமீசுவரனாலும் வருகின்றசுகதுக்கங்களி
னமக்குவிருப்புவெறுப்பென்னவென்றவைகளிற்பற்றற்றவனாய்முன்விசாரித்த வேதாந்தமகாவாக்கியா
ர்த்தநிச்சயத்தழுந்துவதேசாமானியத்திற்சாமானியப்பற்றின்மையென்பதாம் - - - - - - - *

(உ௩) (அ-கை) செட்டப்பற்றின்மையினிலக்கணங்கூறல் (கவி) தானுமுணர்வினுட்டெளிவா
ற்றக்கபுருடவருத்தத்தா, லானநன்னூற்பரிசயத்தா லங்கைநெல்லிதோன்றுதல்போ, லூனூர்பிறவிப்
பெருங்கடலினுயர்காரணமாம்பெரியகனை, தேனூரலங்கன்மணிமார்பாதெளியக்காண்கின்றனதிடமா
ய் (இ-ள்) தானுமுணர்வின்- சுயஞ்சைதன்யத்தை— உட்டெளிவால்- அகத்திற்றெளிந்ததெளிவினு
ம்—தக்கபுருடவருத்தத்தால்- மேலாகியபுருடப்பிரயத்தினத்தினாலும்—ஆனநன்னூல்- நீங்காதஞான
சாஸ்திரத்தின்— பரிசயத்தால்- அப்பியாசத்தினாலும்— அங்கைநெல்லி- கரதலாமலகம்— தோன்றுத
ல்போல்- தோற்றப்படுவதுபோல— ஊனூர்பிறவிப்பெருங்கடலில்-மாமிசநிறைந்த சரநமென்னும்
மகோததியினுடைய—உயர்காரணமாம்பெரியகனை- மேலானகாரணமாயிருக்கின்றமகாதீரமானது—
தேனூரலங்கல்-மதுக்கணிறைந்தபுட்பமாலையும்—மணி- இரத்தின(மாலையும்விளங்குகின்ற) —மார்பா-
மார்பையுடையஸ்ரீராமா— திடமாய்-உறுதியாக— தெளியக்காண்கின்றன- ஸ்பஷ்டமாய்ப்பார்க்கின்றன

(உ௪) (அ-கை) இ-து (கவி) செய்வானானன்றீசன்றான்செய்வானலதென்பழயினைதா, னிவ்வா
றானசொற்பொருளினெண்ண மெல்லாநிச்சயமாய்க், கவ்வாதநிதூரத்தகற்றிக்கலந்தசாந்தமோனநி
லை, பெய்வான்கருணைமுகிலேமுன்பேசுசெட்டப்பற்றின்மை (இ-ள்) நான்- யான்— செய்வானன்
று- கருத்தாவல்ல— ஈசன்றான்செய்வான்- ஈசனேகருத்தா— அலது- அல்லாமல்— என்பழவினைதா
ன்- என்னூழே (கருத்தா) வென்கின்ற—இவ்வாறான- இவ்வண்ணமாகிய —சொற்பொருளின- வசனா
ர்த்தங்களின்— எண்ணமெல்லாம்-சங்கற்பங்களனைத்தும்— நிச்சயமாய்-உண்மையாக— கவ்வாதநிதூர
த்தகற்றி-பற்றாமல்வெகுதூரத்திற்றள்ளி—கலந்தசாந்தம்-சேர்ந்தசாந்தமாகிய—மோனநிலை-மௌ
னநிச்சயம்—பெய்-(அருளைப்)பொழிகின்ற—வான்கருணைமுகிலே-மேலானகிருபாமேகமே—முன்
பேசுசெட்டப்பற்றின்மை- முன்சொல்லியசெட்டப்பற்றின்மை—(எ-று) [இ-உ-க-ம்]முன்னாத்ம
நிச்சயத்திலழுந்தினபடியேயஃதையநுபவமாய்த்தரிசிதந்செட்டப்பற்றின்மையென்பதாம் *

(உ௫) (அ-கை) செட்டத்திற்செட்டப்பற்றின்மையினிலக்கணங்கூறல் (கவி) அகத்திற்புறத்தி
ன்மேல்கீழிலாசைகளிலாகாயத்திற், சகத்திற்பொருளிற்பொருளல்லாதவற்றிற்சடத்திற்றனியறிவிற், ப
குத்துக்கருதாதுபசாந்தம்பயின்றுநினைவற்றொளியற்று, மிகுந்துப்பிறப்பற்றடிமுடிவின் மேன்மை
செட்டப்பற்றின்மை (இ-ள்) அகத்திற்புறத்தில்- உள்ளிலும்புறம்பிலும்— மேல்கீழில்- மேலிலுங்
கீழிலும்— ஆசைகளில்- திசைகளிலும்— ஆகாயத்தில்- விண்ணிலும்— சகத்தில்- உலகத்திலுமுள்ள—
பொருளில்- வஸ்துக்களிலும்— பொருளல்லாதவற்றில்- வஸ்துக்களல்லாதவற்றிலும்— சடத்திற்றனி
யறிவில்- சடசித்துக்களிலும்—பகுத்துக்கருதாது- பிரித்துநினையாமல்— உபசாந்தம்பயின்று- உபசா
ந்தத்திற்கூடி- நினைவற்று- எண்ணமிறந்து— ஒளியற்று- பிரகாசமிறந்து— மிகுந்தபிறப்பற்று- அ
ளவற்றசநநமழிந்து— அடிமுடிவில்- ஆதியந்தமில்லாததே— மேன்மை- மேலாகிய— செட்டப்ப
ற்றின்மை- செட்டப்பற்றின்மையாம்—(எ-று) [இ-ம்] உபசாந்தகிருஷ்டியுள்ளவனாய்முன்றரிசன
மானவாத்மாவின்மனங்கரைந்திருப்பதேசெட்டத்திற்செட்டப்பற்றின்மையென்பதாம். - .. *

(உ௬) (அ-கை) செட்டப்பற்றின்மையேமூன்றாம்பூமியின்பயனாமெனல் (கவி) மகிழ்வாம்வா
சமதுரமுடன்வருநற்றொழிலாத்தளிர்மேவித், தகவாமனத்தானன்சேர்ந்துதடையாமுள்ளூநிறைந்த
றுவா, மிகுமோர்கமலமடைந்துட்சேர்விவேகசிவபான்மலர்ந்து, பசர்மூன்றாயிப்பூமிதனைப்பலமா
யப்பளிக்குமபற்றின்மை (இ-ள்) மகிழ்வாம- களிப்பாகிய—வாசமதுரமுடன்வரும்- வாசனையுத்தித்
திப்போடுமவராநனைர— நற்றொழிலாம- சற்கிருத்தியமான— தளிர்மேவி- துளிரையடைந்து— த
கவாமனத்தாள்- தெளிவுள்ளமனமென்னுந்தண்டினது— நன்சேர்ந்து- முனையையடைந்து—தடை
யாமுள்ளூநிலைந்து—விகசிக்காமாகின்றமுட்கநிறைந்திருக்கின்ற—அறிவாம்- ஞானமாகிய—மிகுமோ
கமலம்- மேலானவொப்பற்றதாமரையரும்பானது— அடைந்துட்சேர்- பொருந்தவுள்ளத்தின்கண்

சார்ந்திருக்கின்ற—விவேகவிரவியால்- விவேகமென்னுஞ்சூரியனுல்— மலர்த்து- விகசிதமாய்— பகர்
மூன்ருமிப்பூமிதனை - சொல்லப்பட்டவித்தனுமாநசியென்கின்றமூன்ரும்பூமியை—பற்றின்மை-சே
ட்டப்பற்றின்மையானது— பலமாப்பலிக்கும்- ப்ரயோசனமாகக்கொடுக்கும்— (எ-று) - - ✻

(உஎ) (அ-கை) முதற்பூமியின்விசேடந்தோன்றக்கூறுதல் (கவி) மோசமில்லாதவர்செறிவான்
முதுநல்லறத்தின்சமுகத்தாற், காகதாலியம்போலக்கருத்திலுதிக்குமுதலான, யோகபூமியுதித்தலுமே
யுள்ளேயமுதமுளையொப்பா, மேகவிவேகநீர்பாச்சியிதுகாத்தளிக்கப்படுமுயன்றே (இ-ள்) மோகமி
ல்லாதவர்-மபக்கமற்றசத்துக்களது—செறிவால்- சங்கத்தினலும்—முதுநல்லறத்தின்-முதிர்ந்தநிட்கா
மதருமத்தின்—சமுகத்தால்- சங்கத்தினலும்— காசதாலியம்போல- காகதாலியஞாயத்தைப்போல—
முதலானயோகபூமி- (சுபேட்சையென்னு) முதன்மையாகியஞானபூமியானது—கருத்திலுதிக்கும்-மே
லதிலுண்டாகும்— உள்ளமுதமுளையொப்பாம்- அகத்திலமுதாங்குரத்துக்கிணையாக— உதித்தலும்-
உதயமாவும்—ஏகவிவேகம்- ஒன்ருனவிவேகமாகிய—நீர்ப்பாச்சி- சலத்தைப்பாச்சி—முயன்று-முய
ற்சிசெய்து— இதுகாத்தளிக்கப்படும்-இதைக்காத்திரட்சிக்கப்படும்— (எ-று) - - - - - - ✻

(உஅ) (அ-கை) இ-து(கவி) விடுதியாலெதழைக்குமிது விசாரத்தாலவ்விடுதிதனை, வடுவிலுழவர்
நென்முளைபோல்வருந்திவளர்க்கநாடோறு, மொடிவின்மறுபூமிக்கிந்தவொன்றேசநபூமியென,மு
டிவில்வெளியாமதி விரண்டாமூன்ரும்பூமிதனைப்பெறலாம் (இ-ள்) விடுதியால்-பற்றின்மையினல்—
இதுதழைக்கும்- இந்த(முதற்பூமியானது)வளரும்—விசாரத்தால்- விசாரணையினல்— அவ்விடுதிதனை-
அப்பற்றின்மையை—வடுவில்- களங்கமற்ற—உழவர்நென்முளைபோல்-பள்ளர்க(டங்கள்பூமியி)னெல்
முளையை(வளர்ப்பது)போல—நாடோறும்- தினந்தோறும்— வருந்திவளர்க்க- வருத்தப்பட்டுவளா
ச்செய்ய— ஒடிவில்- கெடுதலில்லாத— மறுபூமிக்கு-அடுத்தபூமிகளுக்கு—இந்தவொன்றே-இம்(முத
ற்பூமியான)தொன்றுமே— சநநபூமியென- உண்டாகும்பூமியாக— முடிவில்- அந்தத்தில்— வெளி
யாம்- வெளிப்படும்— அதில்- அதினின்றும்—இரண்டாம்- இரண்டாம் (பூமியாகியவிசாரணையையு
ம்)— மூன்ரும்பூமிதனை- (தனுமானசியாகிய)மூன்ரும்பூமியையும்— பெறலாம்- அடையலாகும்—
(எ-று) [இ-உ-க-ம்)சாதுசங்கநிஷ்காமதபம்வித்தாகவுண்டானசு பேச்சையென்னுமாத்மாங்குரத்தை
விவேகவிசாரமான சலத்தைப்பூரித்துமுயற்சியாற்காக்கின்பற்றின்மையான தனுமானசிபிருந்றழைக்
குமாதலினம்முதற்பூமியேகாரணமாமென்பதாம் - - - - - - - - - - - - ✻

(உகூ) (அ-கை)ஞானபூமியின்லக்கணஞ்சேட்டவிராமன்மூடர்முதலியோர்க்கிம்மூன்றுபூமியுண்
டாதலுமிதிலிறந்தவன்கதியுமியாதெனவினுவுதல் (கவி) சேட்டமெனச்சொல்பற்றின்மைசேர்ந்தான்
மூன்ரும்பூமியதா, மீட்டுபுருடன்சங்கற்பவெண்ணமொன்றுமில்லெனக், கேட்டகுமரனுரைசெய்
வான்கிழாங்குலத் தோனுணர்வில்லோன், பூட்டுதொழிலோன் பொல்லாதோன் புகன்றயோகமில்லா
தோன் (இ-ள்)சேட்டமெனச்சொல்- சேட்டமென்றுசொல்லுகின்ற— பற்றின்மைசேர்ந்தால்-பற்
றின்மையையடைந்தால்—மூன்ரும்பூமியதாம்-(அதுவே)மூன்ரும்பூமியாகும்— ஈட்டுபுருடன்- இ
தைசம்பாதிக்கின்றபுருடன்— சங்கற்பவெண்ணமொன்றும- ஒருசங்கற்பநினைவும்— இல்லென்ன-இ
ல்லாதவனென்று(வசிட்டமுனி)சொல்ல—சேட்டகுமரனுரைசெய்வான்- கேள்விபுற்றஸ்ரீராமனுனவ
ர்சொல்லுவார்— கிழாங்குலத்தோன்- இழிவானகுலத்தையுடையவனும்— உணர்வில்லோன்- அறிவி
ல்லாதவனும்— பூட்டுதொழிலோன்- பந்தத்தொழிலையுடையவனும்— பொல்லாதோன்- பொல்லா
தவனும்— புகன்றயோகமில்லாதோன்- சொல்லப்பட்டஞானமில்லாதவனும்— (எ-று) - - ✻

(௩௰) (அ-கை) இ-து (கவி) அவனுக்கெங்ஙனேயுண்டாமறைந்தநன்மையிதுநிற்க, விவணமுய
ர்பூமியிலொன்றையிரண்டைமூன்ரும்வேறொன்றைக், கவர்வுற்றடைந்தோனுயிர்மாய்ந்தாற்கலந்து
மேவுங்கதியேது,தவநிற்பெரியோயுரையென்ன சான்றவசிட்டனுரைசெய்வான் (இ-ள்) அவனுக்கு-
அக்குணமுள்ளவர்களுக்கு— அறைந்தநன்மை- சொல்லப்பட்டமுத்தியானது— எங்ஙனேயுண்டா
ம்- எப்படியுண்டாகும்— இதுநிற்க- இதுவிருக்க— இவணம்- இந்தப்ரசாரம்—உயர்பூமியில்- மே
லானஞானபூமிகளில்— ஒன்றை- முதற்பூமியையாவது— இரண்டை- இரண்டாம்பூமியையாவது—
மூன்ரும்வேறொன்றை-மற்றமூன்ரும்பூமியையாவது—கவர்வுற்றடைந்தோன்-வருத்தப்பட்டடை
ந்தவனது— உயிர்மாய்ந்தால்- சீவன்பிரிந்தால்— கலந்துமேவும்- சேர்ந்தடைகின்ற—கதியேது-கதி
யென்ன— தவநிற்பெரியோய்- குற்றமற்றமகானே—உரைபென்ன- சொல்லுமென்றுகேட்க— சா
ன்ற- அறிஞனுகிய— வசிட்டனுரைசெய்வான்- வசிட்டமுனிசொல்லுவார்— (எ-று) [இ-உ-க-ம்]
இராமன்வினுவுக்குத்தரஞ்சொல்லத்தொடங்கினதாம் - - - - - - - - - - ✻

(௩௧) (அ-கை) முதல்வினுவினுக்கிரண்டுவிதமாகவுத்தாங்கூறல் (கவி) மூடனுகிப்பலகுற்றமூழ்
மவனுக்கநேகமென, நீடுபிறப்பாமுதற் பூமிநேருமட்டும்பிறப்பகலா, நாடுமிதுவன்றியிற்காகதாலிய
ம்பொனல்லநெறி, கூடுமெனினுமதனுலேகுறைவின்ராசையதுபிறக்கும் (இ-ள்) மூடனுகி- மூடனு
ய்— பலகுற்றம்- அநேகம்பிழைகள்— மூழ்மவனுக்கு- சூழுகின்றவனுக்கு— அநேகமென- பல
விதமாகச்சொல்லப்பட்ட— நீடுபிறப்பாம- அநேகசநநமுண்டாகும்— முதற்பூமி- முதன்மையான
பூமியானது— நேருமட்டும்- கிடைக்கின்றபரியந்தம்— பிறப்பகலா- சநநநீங்காது— நாடுமிதுவன்
றியில்- தேடுகின்றவிதுவல்லாமல்— காகதாலியம்பொல்- காகதாலியஞானத்தைப்போல— நல்லநெ
றிகூடுமெனினும்- சன்மார்க்கங்கூடினுலும்— அதனுல்- அதனுல்— குறைவின்ராசையது- குறைவில்
லாதநிராசையானது— பிறக்கும்- உண்டாகும்— (எ-று) - - - - - - - - - ✻

(௩௨) (அ-கை) இ-து. (கவி) அன்றநல்லோர்கூட்டரவாலடுத்தவிராகமதுபிறக்கு, மொன்றுநி
ராசையுறும்போதேயோகபூமியுறற்றப்பா, துன்றுமதனுற்பிறப்பகலுந்தொகுநூற்பொருளின்சுருக்க

யிதா, நின்றயோகபூமியுடனிதனமடைந்தோர்நெறிகேளாய் (இ-ள்) அன்றி- அல்லாமல்— நல்லோர்கூட்டரவால்- சாதுக்கள்சங்கத்தினுல்— அடுத்தவிராகமது- சேர்ந்தநிராசையானது— பிறக்கும்- உண்டாகும்— ஒன்றுநிராசை- பொருந்தாநின்றநிராசையானது— உறுபோதே- அடைந்தபொழுதே— யோகபூமி- ஞானபூமியானது— உறல்தப்பா- அடைதல்தப்பாது— துன்றுமதனுல்- நிறைந்தவந்த (ஞானபூமியி) னுல்— பிறப்பகலும்- சநநநீங்கும்—தொகுநூற்பொருளின் -தொகுத்தசால்திராந்தத்தின்—சுருக்கமிதாம்- முடிவிதுவாகும்—நின்றயோகபூமியுடன்-(இவ)னிருந்தஞானபூமியோடும்— நிதனமடைந்தோர்- மரணமடைந்தவர்களின்— நெறிகேளாய்- மார்க்கத்தைக்கேட்பாய்— (எ-று) [இ-உ-க-ம்] முதற்பூமிகிடையாத மூடனுக்குப் பவநீங்காதென்று மவனுக்குத்தெய்வீகமாய்ச்சற்கிருத்தியமுண்டாயதனுனிராசையுண்டாயதனுற்சாதுசங்கமுண்டாயதனுன் விராகம்பெறினதனுவிப்பூமிதவருமல்வருமதனுற்பவநீங்குமென்பதுசால்திராந்தசங்கிறகமென்றுத்தெரிவித்ததாம். ※

(௩௩) (அ-கை) இரண்டாம்வினுவுக்குத்தரங்கூறல் (கவி) யோகபூமியம்சம்விடாதுறலாற்பழயதீவினைபோ, மாகவிமானமதற்பின்புவந்துகொடுபோய்வானவர்வாழ் நாகமுதலாமுயர்பதியின்மேருவின்சூழ்பொழின்முழையிற், போகமடவாரொடுங்கூடிப்புணர்ந்துசிந்தைகளிகூர்வன். (இ-ள்) யோகபூமி- ஞானபூமி(மூன்றின்)— அம்சம்விடாதுறலால்- அம்மிசம்விடாமலடைதலினுல்— பழயதீவினைபோம்- முன்னுள்ளதீவினைகெடும்—அதற்பின்பு- அதன்பின்பு—மாகவிமானம்வந்து— தெய்வவிமானத்தைக்கொண்டுவந்து—கொடுபோய்- (இவனைக்)கொண்டுபோய்— வானவர்வாழ்- தேவர்கள்வாழாநின்ற—நாகமுதலாம்-தெய்வலோகமுதலாகிய—உயர்பதியின்- மேலானவிடங்களிலும்— நன்மேருவின்சூழ்பொழின்முழையில்- நல்லமேருவிலுஞ்சூழ்ந்தசோலைகளிலுங்குகைகளிலும்—போகமடவாரொடும்- போகமாதர்களுடன்— கூடிப்புணர்ந்துசிந்தைகளிகூர்வன்- சேர்ந்துமனங்களிப்பன் (எ-று)

(௩௪) (அ-கை) இ-து. (கவி) அருந்துபோகமாய்தலினுலளவில்பண்டையிருவினையும், பொருந்தமாயுமப்போதுபுவியிற்பிறப்பர்யோகிகடாந், திருந்துசெல்வங்குணஞ்சுத்தஞ் சிறந்தநல்லோர்மனைப்பிறந்து, வருந்திமுன்னம்பழகுதலால்வழுவாயோகநெறிநிற்பர் (இ-ள்) அருந்துபோகமாய்தலினுல்- புசிக்கப்பட்டபோகநசிப்பதினுல்— அளவில்- அளவில்லாத—பண்டையிருவினையும்-பழயவிரண்டுவினைகளும்— பொருந்தமாயும்- ஒருங்கேகெடும்— அப்போது- அப்பொழுதே—யோகிகளாய்- ஞானிகளாய்— புவியிற்பிறப்பர்- பூமியிற்செனிப்பார்கள்— திருந்துசெல்வம்- திருத்தமானசம்பத்தும்— குணம்- சற்குணமும்—சுத்தம்- பரிசுத்தமும்— சிறந்த- சிறப்புற்றிருக்கின்ற— நல்லோர்- சத்துக்களினது—மனைப்பிறந்து-வீட்டிற்செனித்து—முன்னம்வருந்தி- முன்புவருத்தப்பட்டு— பழகுதலால்- அப்பியாசஞ்செய்தலினுல்— வழுவாயோகநெறிநிற்பர்- தவருமன்ஞானமார்க்கத்திலிருப்பார்— (எ-று) [இ-உ-க-ம்] முன்மூன்றுபூமியினப்பியாசத்திலுள்ளெங்ஙனமரித்தான்மீளவுமுதித்தவ்விட்டகுறையானவ்வண்ணநின்றபியாசித்துமுத்தியையடைவனென்பதாம். - - - - ※

(௩௫) (அ-கை) ஞானபூமியேழையுமஞ்சவத்தையாகச் சொல்லதொடங்கி யிம்மூன்றுபூமியப்பியாசத்திற்சகஞ்சாமானியமாகத்தோற்றுமாதலாற்சாக்கிரவவத்தையெனவும்வதையடைந்தவனிலக்கணமுங்கூறுதல் (கவி) விதமாஞ்சகத்தைச் சாக்கிரத்தின்மிசைப்போதந் திப்புந்தியினுற், பொதுவாய்நோக்குமதனுலிப்பூமிமூன்றுஞ்சாக்கிரமா, மேதுவேதனிக்கேவலமியோகிக் காரியப்பேர்பெறுதிறமாமிதனுலிவனேயுய்ந்தவனென்றேத்தந்தோன்றுமறிவிலர்க்கும் (இ-ள்) விதமாஞ்சகத்தை- நாநாவிதமாயுள்ளவுலகத்தை— சாக்கிரத்தில்- நனவில்— மிசைப்போதந்தி- மிசவுமறிவில்லாத— புந்தியினுல்-புத்தியினுல்— பொதுவாய்நோக்குமதனுல்- சாதாரணமாகப்பார்க்கின்றவதனுல்— இப்பூமிமூன்றும்- இந்தமூன்றுபூமியும்— சாக்கிரமாம்- நனவேயாகும்— அதுவே- அந்தப்பூமியே— தனிக்கேவலம்-தனித்தகேவலமாகிய— யோகிக்கு- ஞானிக்கு -- ஆரியப்பேர்பெறும்- ஆசாரியனென்றநாமமுண்டாகும்— திறமாமிதனுல் -காரணமானவித்த(வாசாரியநாமத்தி)னுல்—இவனுய்ந்தவனென்று- இவன்மோக்ஷமடைந்தவனென்று— அறிவிலர்க்கும்- அஞ்ஞானிகளுக்கும்— ஏத்தத்தோன்றும்- (மோக்ஷவிச்சையுண்டாகி)த்தோத்திரஞ்செய்யத்தோற்றும்— (எ-று) - - - - - - - - - - ※

(௩௬) (அ-கை) இ-து (கவி) செயலினுரியமிகச்செய்வோன் செய்யத்தகாதசெய்யாதோ, னியல்பினெழுக்கந்தனினிற்போனியாவனவனேயாரியனு, முயலுமொழுக்கநூற்சித்தமுந்துநிலைமைவிவாரம், புபவினிறத்தோயுள்ளபடிபொருந்துமவனேயாரியனும் (இ-ள்) செயலினுரிய- செய்வதற்குரித்தான(தொழிலை)— மிகச்செய்வோன்- மிகவுஞ்செய்பவன்— செய்யத்தகாத- செய்யத்தகாத(காரியங்களை)—செய்யாதோன்-செய்யாதவன்—இயல்பினெழுக்கந்தனில்- இயல்பினையுடையமார்க்கத்தில்— நிற்போனியாவன்- இருப்பவனெவனே— அவனேயாரியனும்- அவனேயுயர்ந்தோனுகும்—முயலுமொழுக்கம்-முயற்சிக்கின்றவாசாரத்திலும்— நூற்சித்தம்- சால்திரவபிப்ராயத்திலும்—முந்து-முதன்மையான —நிலைமைவிவகாரம்- நிச்சயவிவகாரத்திலும்— புபவினிறத்தோய- மேகவண்ணனுனஸ்ரீராமா— உள்ளபடி- உள்ளப்ரகாரம்—பொருந்துமவனேயாரியனும்- அமையுமவனேயுயர்ந்தவனுகும் (எ-று) ※

(௩௭) (அ-கை) மூன்றுபூமியினுதிக்கும்பயனைக்கூறுதல் (கவி) முதலாமியோகபூமியிலேமுளைக்குமிரண்டாவதின்மலருந், தனையுமூன்றுவதிற்பலிக்குந்தனியாரியனுர்திறமியோகி, யிதனிலிறந்தாலெடுங்காலமிருந்துசுத்தசங்கநீபத, திரவுபோகங்களைபருந்தியோகியாய்மீண்டுற்பவிப்பான் (இ-ள்) முதலாமியோகபூமியில்- முதலானஞானபூமியில்— முளைக்கும்- உண்டாகும்— இரண்டாவதின்மலரும்- இரண்டாம்பூமியில்விகசிதமாகும்—தனைதமூன்றுவதில்-நெருங்கியமூன்றும்பூமியில்—தனியாரியனும- ஒப்பற்றவாசிரியனுன— திறம்பலிக்கும்- தன்மைபலிக்கும்— இயோகி -ஞானியானவன்—இதனிலிறந்தால்- இந்த(ப்பூமிகளினிற்கும்போதின்)மரித்தால்—நெடுங்காலமிருந்து- அநேககாலஞ்(சுவர்

க்கத்தி) யிருந்து— சுத்தசங்கற்பத்து- சுத்தசங்கற்பத்தினல்— உதவுபோகங்களைபருந்தி- கொடாதின்றபோகங்களைப்புசித்து— யோகியாய்மீண்டுநீபவிப்பன்- ஞானியாய் திரும்பச்செனிப்பன் (எ-று)

(௩௮) (அ-கை) மூன்றுபூமியினப்பியாசத்தாலஞ்ஞானநீங்கிஞானமுதிக்குமெனல் (கவி) மூன்றுபூமிப்பரிசயத்தான்மூடத்தன்மையிறந்தழிபே, யான்றஞானதயமுண்டாயாதியர்தமறவிர்ந்து, பூன்றமதியிலுதயம்போற்பொலியுமனத்திற்போதமுற, வூன்றுயோகத்துடன்சேர்ந்தவுள்ளமுடைய யோகிக்கே. (இ-ள்) மூன்றுபூமிப்பரிசயத்தால்- மூன்றுபூமியினப்பியாசத்தினல்— மூடத்தன்மையிறந்துழி- அறிவின்மையான திறந்தமாத்திரத்தில்— ஆன்றஞானதயமுண்டாய்-மாகுமையானஞானமுதித்து— ஆதியந்தமறவிர்ந்து- ஆதியந்தமில்லாமல்வியாபகமாய்— பூன்றமதியிலுதயம்போல்- பூர்ணசந்திரோதயம்போல— மனத்தில்-மனதில்— போதமுற- ஞானமடைய— வூன்றுயோகத்துடன்- திரமாகியஞானத்தோடும்— சேர்ந்தவுள்ளமுடைய- சேர்ந்தமனதையுடைய— யோகிக்கு- ஞானிகளுக்கு—பொலியும்-விளங்கும்— (எ-று) [இ-ச-க-ம்] இம்மூன்றுபூமியினவத்தையுமதையடைந்தவன்றிறமுமதனுன்ஞானமுதிப்பதுங் கூறியதாம் - - - - - - - - - - - ※

(௩௯) (அ-கை) நான்காவதானசத்துவாபத்திசொற்பனவத்தையெனல் (கவி) சமமதாகச்சொற்பனம்போற்சகத்திலனைத்துநோக்கிடுவ, ரமரநாலாம்பூமிதனையடைந்தோர்முதற்பூமிகண்மூன்றுங், குமரனேசாக்கிரமாகுங்கூறுநாலாவதுகனவாம், விமலசித்தஞ்சாற்காலமேகசாலம்போலிறக்கும் (இ-ள்) நாலாம்பூமிதனை -நான்காவதுபூமியை— அடைந்தோர்- அடைந்தவர்கள்— சமமதாக- சமத்துவமாக— சொற்பனம்போல்- கனவைப்போல— சகத்திலனைத்தும்- உலகத்தின்கண்சகலத்தையும்—அமரநோக்கிடுவர்- அமரப்பார்ப்பார்கள்— முதற்பூமிகண்மூன்றும்- முதன்மையானமூன்றுபூமிகளும்— குமரனே- ஸ்ரீராமா— சாக்கிரமாகும்- சாக்கிரவவத்தையாம்— கூறுநாலாவதுகனவாம்- சொல்லப்பட்டநான்காம்பூமியானது சொற்பனவவத்தையாகும்— விமலசித்தம்- நின்மலமனமானது— சாற்காலம்- சாற்காலத்திலுண்டான— மேகசாலம்போல்- முகிற்கூட்டங்களைப்போல— இறக்கும்- நசிக்கும்— (எ-று) [இ-ம்] முன்மூன்றுபூமியினப்பியாசத்தினுன்ஞானமுதயமாயதனுற்சகஞ்சொற்பனம்போலத்தோற்றுதலினிப்பூமிசொற்பனவவத்தையென்பதாம் - - - - - - - - - - - ※

(௪௰) (அ-கை) ஐந்தாவதானவசம்சத்திசுழுத்தியவத்தையெனல் (கவி) சிறக்குஞ்சற்பாவந்தானேசேடமாகநின்றிடுவர், பறக்குஞ்சித்தமிறத்தலினூற்படர்ந்தவிகற்பமெலாந்தோன்று, வுறக்குஞ்சுழுத்திப்பதமென்னவுரைக்குமைந்தாம்பூமியிற்போய், திறக்கும்விசேடமனைத்துமறநிற்பனொன்றுநிலைமட்டில் (இ-ள்) சிறக்குஞ்சற்பாவந்தான்- விசேடமானசற்பாவமே— சேடமாகநின்றிடுவர்- மஞ்சினதென்றிருப்பார்கள்— பறக்குஞ்சித்தம்- வேகமுள்ளமனமானது—இறத்தலினல்- மரித்ததினல்— படர்ந்தவிகற்பமெலாந்தோன்று- விரிந்தவிகற்பங்களனைத்துமுண்டாகாது—உறக்கும்- நித்திரைசெய்யும்— சுழுத்திப்பதமென்ன- சுழுத்தியவத்தையென்று—உரைக்கும்- சொல்லப்பட்ட—ஐந்தாம்பூமியிற்போய-ஐந்தாம்பூமியிற்சென்று— திறக்கும்-குணமான— விசேடமனைத்துமற- விசேடங்களெல்லாங்கெடும்படி— ஒன்றுநிலைமட்டில்- அத்துவிதநிச்சயமாத்திரத்தில்— நிற்பன்- யிருப்பன் (எ-று) ※

(௪௧) (அ-கை) இ-து (கவி) இருமையென்னுமிருள்போயுள்ளொளியாநின்றபேருணர்வோனருமையானசுழுத்திநிலையாகிநிற்பனனவரதம், பொருவிலுண்ணேக்குடனிற்பன்புறத்திற்றெழிலிற்புரிந்தேயு, மொருமையுபசாந்தத்தாலேயுறக்கமிருத்தோன்போற்றெரிவன (இ-ள்) இருமையென்னுமிருள்போய்- துவிதமென்கின்றவந்தகாரமானதுநீங்கி— உள்ளொளியாநின்ற- உள்ளத்தின்கண்பிரகாசிக்கின்ற— பேருணர்வோன்- பூரணஞானமுடையவன்— அருமையானசுழுத்திநிலையாகி- அருமையாகியசுழுத்திநிலையையுடையவனுய்— அனவரதநிற்பன்- எப்பொழுதுமிருப்பன்— பொருவில்-ஒப்பில்லாத— உண்ணேக்குடனிற்பன்- அந்தர்முகத்திலிருப்பன்—புறத்தில்-பெகுற்முகத்தில்—தொழிலிற்புரிந்தேயும்- கிரியைகளைச்செய்தாலும்—ஒருமையுபசாந்தத்தால்-ஏகமானவுபசாந்தத்தினல்— உறக்கமிருத்தோன்போல்- நித்திரையதிகரித்தவனைப்போல— தெரிவன்- காணப்படுவன்—(எ-று) [இ-உ-ச-ம்] முன்பூமியிலுதித்தஞானத்தினுன்மனேநாசமாய்ச் சுழுத்தியவத்தையைப்போலச்சுகமாகச்சகந்தோற்றுதலிற்சுழுத்திய வத்தையென்பதாம் - - - - - - - - - - - ※

(௪௨) (அ-கை.) ஆறும்பூமியானபதார்த்தாபாவனை துரியாவத்தையெனல் (கவி) அழுந்துதுரியமெனுநாமத்தாறும்பூமியடைந்தொழுங்கி, னெழுந்தபலவாதனையிலனுயிப்பூமியிலேபரிசயிப்ப, னுழைந்துநானென்பதுமென்னுததுவுமுளதுமில்லாதுங், கழிந்துவெறுந்தனிலனுகாணுன்றுமையொருமைகளை. (இ-ள்) அழுந்துதுரியமெனும்- அழுத்தமான துரியமென்கின்ற— நாமத்து- பெயரையுடைய— ஆறும்பூமி- ஆறுவதுபூமியை— ஒழுங்கினடைந்து- கிரமமாகச்சேர்ந்து— எழுந்த- உண்டாகிய— பலவாதனையிலனுய்- நாநாவிதவாசனையில்லாதவனுய்—இப்பூமியில்- இவ்வாறும்பூமியில்— பரிசயிப்பன்- அப்பியாசஞ்செய்வன்— நுழைந்து- புகுந்து—நானென்பதும்- யானென்பதும்— என்னுததுவும்- நானென்பதல்லததும்— உளதுமில்லாததும்- உள்ளதுமில்லாதுமாகியவிவைகள்— கழிந்து- நீங்கி— வெறிது- கேவலமாய்— தனிலனும்- மனமில்லாதவனுய்— இருமையொருமைகளை- பேதாபேதங்களை— காணுன- பாரான்—(எ-று) - - - - - - - - - - ※

(௪௩) (அ-கை) இ-து (கவி) செறியுமுடிச்சுமையமுமபோய்ச்சீவன்முத்தசுபாவத்தால், வெறிதுவிடன்றியும்வனிவிளைந்தோவியத்தின்விளக்கொப்பான், பிறிவில்விண்ணில்வெறுங்குடம்போற்பிறிதுபுறனுட்குனியமா, யெற்புங்கடலின்றைகடம்போலெங்கும்புறநூண்ணிறைந்திருப்பன (இ-ள்) செறியுமுடிச்சும்- நெருங்கியவகங்காரக்கிரந்தியும்— ஐயமும்போய்- சந்தேகமுநீங்கி— சீவன்முத்தசுபாவத்தால்- சீவன்முத்தத்தன்மையினுல்— வெறிதுவிடன்றியும்- கேவலமானதிருவாணமல்லாதவனு

